# சேந்தன் திவாகரம்

## (திவாகரர்)



~

# பிங்கலம்

## (பிங்கல முனிவர்)



~

# சூடாமணி

## (மண்டல புருடர்)



~


வெளியிடுவோர்

**சாந்தி சாதனா**

125, சேமியர்ஸ் சாலை

சென்னை – 600 028

# முன்னுரை

ஒரு மொழியின் செழிப்பை அதனுடைய சொல் வளம், பொருள் வளம், இலக்கிய வளம், இலக்கண வளம் முதலியவற்றைக் கொண்டு மதிப்பீடு செய்வர். பாரதியாரும்,

**'சென்றிடுவீர் எட்டுத் திக்கும்**
**கலைச் செல்வங்கள் யாவும் கொணர்ந்து இங்குச் சேர்ப்பீர்'**

என்றும்

**'பிறநாட்டு நல்லறிஞர் சாத்திரங்கள்**
**தமிழ் மொழியில் பெயர்த்தல் வேண்டும்'**

என்றும் கூறியுள்ளார். நூல் வகை பற்றித் தொல்காப்பியர் கூறும் பொழுது,

**'தொகுத்தல் விரித்தல் தொகை விரி மொழி பெயர்த்து**
**அதர்ப்பட யாத்தலொடு அனைமரபினவே'**

என்று வகுத்துள்ளார்.

தனித் தமிழ் நூல்களான சங்க இலக்கியங்களிலேயே பிறமொழிச் சொற்கள் சிலவும், பிறமொழிக் கருத்துக்கள், வரலாற்று நிகழ்ச்சிகள் சிலவும் ஆங்காங்கே காணப்படுகின்றன. பிற சமயத்தாக்கமும் சொல் வளத்தையும் பொருள் வளத்தையும் இலக்கிய இலக்கண வளத்தையும் பெருக்கின. ஆரியரும் சமண சமயமும் பௌத்த சமயமும் தமிழகத்தில் பெரிதும் கலந்திருந்தன என்பது மறுக்க முடியாத உண்மை.

மொழி வளம் பெருகப் பெருகப் பொருள் காணும் முறையும் கடினமாகிக் கொண்டு வந்துளது. அதனால் வடமொழியில் 'அமர கோசம்' என்னும் நிகண்டினை முதலில் மனனம் செய்த பின்னரே, இலக்கிய இலக்கணங்களைக் கற்கும் மரபு இருந்து வந்தது. அதனை ஒட்டித் தமிழிலும் நிகண்டுகள் தோன்றத் தொடங்கின.

நிகண்டுகளில் பிறமொழிச் சொற்களும் தமிழ்ச் சொற்களுடன் எதுகை மோனை அமைப்பில் அமைக்கப்பட்டு மனனம் செய்வதற்கு எளிதாகச் செய்யப்பட்டன.

இவற்றுள் கி.பி. 8ஆம் நூற்றாண்டில் தோன்றிய **திவாகரமே** இன்று கிடைக்கும் நிகண்டுகளுள் பழமையானதாகும். இதனை வரலாற்று ஆராய்ச்சியாளர் கி.பி. 9ஆம் நூற்றாண்டினைச் சார்ந்தது என்றே பெரிதும் தீர்மானிக்கின்றனர். திவாகரர் சமண முனிவர் என்றும் சைவப் பெரியார் என்றும் இரு வேறு கூற்றுக்கள் உள்ளன. கி.பி. 1839இல் தாண்டவராய முதலியார் அவர்களே பழைய ஏட்டுச் சுவடிகளிலிருந்து முதல் பத்துத் தொகுதிகளைக் கொண்ட திவாகர நிகண்டினைப் பதிப்பித்தார். அடுத்த ஆண்டில் (கி.பி. 1840இல்) எஞ்சிய இரண்டு தொகுதிகளுடன் சேர்த்து அவரைப் பின்பற்றி இராமசாமிப்பிள்ளை பதிப்பித்தார்.

அதன் பின்னர் பலர் திவாகரத்தை முழுமையாகவும் சில சில பிரிவுகளை மட்டும் பதிப்பித்து வந்துள்ளனர். அண்மையில் சென்னைப் பல்கலைக்கழகம் இரண்டு தொகுதிகளாக வெளியிட்டுள்ளது. திவாகரரை ஆதரித்த வள்ளல் சேந்தன் பெயரையும் சேர்த்து இந்நூல் 'சேந்தன் திவாகரம்' என்றும் பெயர் பெற்றுள்ளது. கி.பி 1839, 1840இல் வெளிவந்த தாண்டவராயப் பிள்ளை அவர்களின் பதிப்பையே இத் **திவாகரப் பதிப்பு** ஆதாரமாகக் கொண்டுள்ளது.

திவாகரத்தில் பல்வேறு பதிப்புகள் பல்வேறு முறைகளைப் பின்பற்றியுள்ளதால் நூற்பாக்கள் மற்றும் சொற்களின் எண்ணிக்கையைத் திட்டவட்டமாகக் குறிப்பிடவில்லை. ஆயினும், இப்பதிப்பில் 2903 நூற்பாக்களில் 8708 சொற்கள் இடம் பெற்றுள்ளன.

**திவாகரத்தை** அடுத்துத் தோன்றியது **பிங்கலம்**. இது பிங்கலந்தை எனவும், பிங்கலந்தை நிகண்டு எனவும் வழங்கப் பெறும். இதன் ஆசிரியர் பிங்கல முனிவர். இந்நூல் செய்தோனால் பெயர் பெற்றது. இதன் சிறப்புப் பாயிரத்தில் 'திவாகரன் பயந்த பிங்கல முனிவன்' என்று வருவது கொண்டு, இவர் சேந்தன் திவாகரம் இயற்றிய திவாகரரின் மைந்தர் என்கின்றனர். வேறு சிலர் வேறொரு திவாகரர்

இருந்தார். அவர் மைந்தரே இவர் என்றும் கூறுகின்றனர். இதுபற்றித் துணிந்து கூறத் தக்க ஆதாரங்கள் இல. நன்னூலை இயற்றிய பவணந்தி முனிவர் தம் நூற்பாவில் 'பிங்கலம் முதலா நல்லோர் உரிச்சொல்லின் நயந்தனர் கொளலே' என்று குறிப்பிடுவது கொண்டு, இந்நூல் நன்னூலுக்கு முந்தியது எனக் கொள்ளலாம். இந்நூலின் காலம் கி.பி. 8ஆம் நூற்றூண்டு என்று சிலரும், 10ஆம் நூற்றூண்டு என்று வேறு சிலரும் கருதுகின்றனர். திவாகரம் போலவே நூற்பா நடையின் இயன்று, 4121 நூற்பாக்களில் 10826 சொற்கள் கொண்டு விளங்குகிறது. திவாகரம் ஒவ்வொரு பாகுபாட்டையும் 'தொகுதி' என்று கூறுவதை இந்நூல் 'வகை' என்று கூறுகிறது. இந்நூல் பத்தே வகைகளைக் கொண்டுள்ளது. இந்நூலில் வரும் சொற்களில் பலவும் வடமொழிச் சொற்களும், திசைச் சொற்களும், கிளைமொழிச் சொற்களும் ஆகும். எனவே, இது சொல்லாராய்ச்சிக்குப் பெரிதும் பயனுடையதாகும்.

**சூடாமணி** நிகண்டின் ஆசிரியர் மண்டல புருடர். இம்மூன்றுள்ளும் இதுவே மிகுதியாகப் போற்றப் பெற்று வந்துள்ளது. இந்நூல் பன்னிரண்டு பிரிவுகளையுடையது. விருத்தப்பாவால் அமைந்துள்ளமை மனப்பாடம் செய்தற்கு ஏற்றதாக உள்ளது. அதிக பதிப்புக்களைக் கொண்டது.

பிங்கலம், சூடாமணி இரண்டுமே எதுகை வரிசையில் சொற்களை வகைப்படுத்தியுள்ளமை அகராதிக்கு முன்னோடி எனக் கொள்ளலாம். 1196 விருத்தப்பாக்களில் 9995 சொற்களைக் கொண்டுள்ள சூடாமணி நிகண்டு சிறப்பானதாகும். யாழ்ப்பாணம் ஆறுமுக நாவலர் இதனைப் பதிப்பித்துள்ளார்.

அமரர் மர்ரே எஸ். இராஜம் அவர்கள் வரலாற்று முறைத் தமிழிலக்கியப் பேரகராதி வெளியிடக் கருதி ஒவ்வொரு நூலிலிருந்தும் சொற்களைத் தனித்தனியே எழுதி வைத்து, திறமை வாய்ந்த ஆசிரியக் குழுவினர் தீர்மானித்த வரலாற்றுப் பொருளை வரலாற்று முறையில் வகைப்படுத்திக் கையெழுத்துப் பிரதிகளை ஆயத்தம் செய்து வைத்துள்ளார்.

தமிழ்ப் பணி தொடர்ந்து நடைபெற அவர் நிறுவிய 'சாந்தி சாதனா' நிறுவனம் 'வரலாற்று முறைத் தமிழிலக்கியப் பேரகராதி' வெளியிடத் தொடங்கியது. அதற்கு முன்னோடியான, மிகத் தொன்மையதான திவாகரம், அடுத்துத் தோன்றிய பிங்கலம், பின்னர் வந்த சூடாமணி ஆகிய மூன்று நிகண்டுகளிலும் வரும் சொல்லடைவுகளை அகர வரிசைப்படுத்தி, முதலில் திவாகரத்தில் வரும் பொருளையும் இடத்தையும் குறித்து, அதன் பின்னர், பொருள் மாறுபடும் இடங்களில் அவ்வப் பொருளையும் அந்த நிகண்டின் பெயரையும் இடத்தையும் சுட்டிக் காட்டி, ஒவ்வொரு சொல்லும் ஒவ்வொரு நிகண்டிலும் எத்துணை முறை வந்துள்ளன என்று பிறைக் குறியில் குறித்தும் 'திவாகரம் - பிங்கலம் - சூடாமணி அகராதி அட்டவணை'யை (Concordance of three Nigandus) வெளியிட்டுள்ளது. இதன் பின்னர் 'வரலாற்று முறைத் தமிழிலக்கியப் பேரகராதி'யிலும் இந் நிகண்டுகள் மேற்கோள்களாகக் காட்டப்பட்டுள்ளன. இம்மேற் கோள்களைக் காண விழையும் கற்போருக்கு எளிதாக இருக்கும் பொருட்டும், இப்போது கிடைத்தற்கு அரியனவாயுள்ள, பழைய நூல்களின் அருமை பெருமையை உணர்ந்து பிற்காலத்தாருக்கும் பயன்பட வேண்டும் என்ற நோக்கத்திலும் அமரர் மர்ரே S. இராஜம் அவர்கள் நிறுவிய 'சாந்தி சாதனா' முன்னரே சந்தி பிரித்து ஏட்டுப் பிரதியாகத் தயாரித்து வைத்துள்ள இம்மூன்று நிகண்டுகளையும் ஒரு சேரப் பதிப்பித்து வெளியிடுவதில் பெருமை கொள்கிறது. ஒவ்வொரு நிகண்டின் சொல்லடைவு அகராதி தனித்தனியே இறுதியில் சேர்க்கப்பட்டுள்ளது இதன் சிறப்பு அம்சமாகும்.

இவை தமிழ் வளர்ச்சிக்கும், தமிழ் ஆராய்ச்சிக்கும் பெரிதும் பயன்படும் என இந்நிறுவனம் கருதுகிறது.

தலைப்புகள் கொடுத்தும் சந்தி சொற்பிரித்தும்,நிறுத்துக் குறிகள் இட்டும் அழகிய முறையில் இந் நூலின் கையெழுத்துப் பிரதியை ஆயத்தப்படுத்தித் தந்த திரு. இராகவன் அவர்களுக்கும், அச்சாகுங்கால் பிழைதிருத்தம் செய்த திரு.அ.சு. இராமமூர்த்தி, திரு.வை. பரமார்த்தலிங்கம், திருமதி க. ஸ்ரீ வித்யா, திருமதி சு. லக்ஷ்மி மற்றும் திருமதி கமலா நாதமுனி ஆகியவருக்கும் இந் நிறுவனத்தின் சார்பில் நன்றி உரித்தாகுக.

**சாந்தி சாதனா**

*125/64, சேமியர்ஸ் சாலை,*

*சென்னை - 600 028.*

# பொருளடக்கம்

# சேந்தன் திவாகரம்

## 1. தெய்வப் பெயர்த் தொகுதி

### காப்பு

தந்தி முகத்து எந்தை சதங்கைப் பதம் போற்றி,
சிந்தை விளக்கு - ஆம் திவாகரத்துள் - வந்த
தொகுதி ஒரு பன்னிரண்டும், சோராமல், நேரே
பகுதி உற, - மனமே! - பற்று.

### சிவன்

சங்கரன், இறையோன், காம தகனன்,
கங்காதரனே, கறைமிடற்றண்ணல்,
கூற்றை உதைத்தோன், குன்ற வில்லி,
ஏற்று வாகனன், திரியம்பகன், சோதி,
நக்கன், சடையோன், நாரி பாகன்,
முக்கட் பகவன், பசுபதி, பரமன்,
கொன்றை சூடி, (கொலை) மழு ஆளி,
ஈமத்து ஆடி, பிஞ்ஞகன், பித்தன்,
ஆனை உரித்தோன், அரன், சிவன், உருத்திரன்,
கால காலன், கபால மூர்த்தி,
நீல கண்டன், நீறு அணி கடவுள்,
அரவாபரணன், (ஆர்) அழல் ஆடி,
பிறை (அது) சூடி, பெருமான், உமாபதி,
அழல் (அது) ஏந்தி, அமலன், ஆனந்தன்,
பரசு பாணி, சுடலை ஆடி,
மான் இடம் ஏந்தி, மறை முதல், யோகி,
புலித்தோல் உடையோன், புரம் மூன்று எரித்தோன்,
பிஞக பாணி, பேயோடு ஆடி,
பூத நாதன், (புணர்) கங்காளன்,
ஞான மூர்த்தி, ஈசன், அஜுதி,
ஐம்முகன், பகவன், ஆதி, பாண்டரங்கன்,
அந்தி வண்ணன், ஆல் அமர் கடவுள்,
நந்தி, நம்பன், நாதன், தற்பரன்,
கண்ணுதல் மூர்த்தி, கைலை ஆளி (என்று
எண்ணிய நாமம் இன்னவும் பலவே).

*(62 பெயர்கள்)* 1

### திருமால்

மாயோன், மாதவன், நாரணன், கேசவன்,
சீதரன், திருமகள் - பூமி கொழுநன்,
விண்டு, (விறல்) அரி, திரிவிக்கிரமன்,
உந்தி பூத்தோன், உவணம் உயர்த்தோன்,
வாமனன், கண்ணன், கோவிந்தன், அச்சுதன்,
(ஆழ்) கடல் துயின்றோன், அரவணைச் செல்வன்,
சக்கராயுதனே, சங்கம் ஏந்தி,
(கருங்) கடல் வண்ணன், கமலக் கண்ணன்,
சார்ங்க பாணி, (தகு) பஞ்சாயுதன்,
உலகம் உண்டோன், உலகினை அளந்தோன்,
நாரசிங்கன், ஆதி, வராகன்,
பதுமநாபன், மதுசூதனனொடு
தாமோதரனே, (தகு) பீதாம்பரன்,
காவற் கடவுள், முராரி, முகுந்தன்,
பெருமான், பிரமன் தந்தை (என்று இவை முதல்)
திருமாற்கு (அனந்தம் சிறந்த தொல் பெயரே).

*(38 பெயர்கள்)* 2

### பிரமன்

உந்தியில் உதித்தோன், (ஒளி) மலர் மிசையோன்,
அன்ன ஊர்தி, அன்னம் உயர்த்தோன்,
நான்முகன், மால் மகன், (நலம் கேழ்) எண் கணன்,
வானவர் முதல்வன், மண் பொதுத் தந்தை,
இறைவன், குரவன், மறையோன், விரிஞ்சன்,
அந்தணன், ஞானன், அயன், வரன், திசை முகன்,
பிதாமகன், விதாதா, கமல யோனி,
வேதா, போதன், விதி, பரமேட்டி,
இரணிய கருப்பன், படைப்போன் - இவை முதல்
அரண் இயல் பிரமற்கு (அனந்தம் பெயரே).

*(27 பெயர்கள்)* 3

### இந்திரன்

புரந்தரன், புனிதன், பொன் நகர்க்கு இறைவன்,
வாசவன், அமரர் கோன், மால், முகில் ஊர்தி,
வேள்வி நாயகன், விண் முழுது ஆளி,
ஆயிரங் கண்ணன், அயிராணி கேள்வன்,
மருத்துவன், மகவான், வலாரி, விருத்திராரி,
வெள்ளை வாரணன், இமையவர் வேந்தன்,
பாக சாதனன், ஆகண்டலனே,
வச்சிர பாணி, சதக்கிருது - என்று இவை
எச்சம் இல் இந்திரற்கு (இயன்ற தொல் பெயரே).

*(21 பெயர்கள்)* 4

### கணபதி

ஒற்றைக் கொம்பன், விநாயகன், ஐங்கரன்,
(வெற்றி) யானை முகவன், கணபதி,
பாசாங்குச தரன், ஆகு வாகனனே. *(6 பெயர்கள்)* 5

### முருகன்

முருகன், சூர்ப் பகை, செட்டி, குமரன்,
அறுமீன் காதலன், சேவலங் கொடியோன்,
கார்த்திகேயன், கடம்பன், சுவாமி,
வேலுடைக் கடவுள், மேலவர்க்கு இறைவன்,
வரை பக எறிந்தோன், வள்ளி மணாளன்,
அரன் மகன், குறிஞ்சி மன், சரவணத்து உதித்தோன்,
அறுமுகன், விசாகன், குகன், சேய், செவ்வேள்,
தேவர் சேனாபதி, மயில் ஆளி, சேந்தன்,
கந்தன், காங்கேயன், வேள் (எனச் செப்புவர்).

*(26 பெயர்கள்)* 6

### காமன்

வேனில் ஆளி, வேள், மதன், அனங்கன்,
மாரன், பூ வாளி, மன்மதன், கந்தர்ப்பன்,
பஞ்ச பாணன், கருப்பு வில்லி,
இரதி காந்தன், மகரம் உயர்த்தோன்,
திருமால் புதல்வன், வசந்தன் - என்று இவை
வரு மால் காமற்கு (இயன்ற வண் பெயரே).
*(14 பெயர்கள்)* 7

### வைரவன்

வைரவன், காரி, வடுகக் கடவுள். *(2 பெயர்கள்)* 8

### ஐயன்

கோழிக் கொடியோன், சாதவாகனன்,
காரி, சாத்தன், (கடல் நிற) ஐயன். *(4 பெயர்கள்)* 9

### வைச்சிரவண்ணன் பெயர்

மந்திரி, குபேரன், நிதிக் கோன், இயக்கன்,
பிங்கலன், அரற்கு (ப் பிரியா)த் தோழன்,
வடதிசைத் தலைவன், இயக்கர் வேந்தன்,
அளகை ஆளி, ஆய் முற்காவலன்,
புட்பக ஊர்தி, தனதன், மரகதன் (என
வைப்ப நாமம்) வைச்சிரவணற்கே.
*(13 பெயர்கள்)* 10

### அருகன் பெயர்

அநகன், அசலன், அதி குணன், அபயன்,
அமைவன், அறிவன், அதிசயன், அமலன்,
பூரணன், புங்கவன், (புணர்) முக் குடையோன்,
அசோகுடைச் செல்வன், அண்ணல், தத்துவன்,
ஆதியங் கடவுள், அற ஆழி அந்தணன்,
அரியணைச் செல்வன், அருள் ஆழி வேந்தன்,
பண்ணவன், பகவன், எண் குணன், மாசேனன்,
விண்ணவன், தேவன், விறலோன், (விளங்கு ஒளிப்)
பொன் எயில் நாதன், பூமிசை நடந்தோன்,
முனைவன், வீரன், முதல்வன், புனிதன்,
காமற் காய்ந்தோன், கமல ஊர்தி,
சிநேந்திரன், திகம்பரன், சாந்தன், புண்ணியன்,
மூர்த்தி, ஆசான், முழுது ஒருங்கு உணர்ந்தோன்,
வரதன், சினன், வரன் - என்று இவை முதலா
அருகற்கு (இன்னும் அனந்தம் பெயரே).
*(43 பெயர்கள்)* 11

### புத்தன் பெயர்

அண்ணல், வாமன், அருங் கலை நாயகன்,
புண்ணிய முதல்வன், ஆதி, புங்கவன்,
பாரின் மிசையோன், சாந்தன், புனிதன்,
பகவன், சைனன், அறவன், மூர்த்தி,
போதி வேந்தன், சினன், வரன், புத்தன்,
ஏக தேவன், முக் குற்றம் கடிந்தோன்,
அருள் நெறி சுரக்கும் செல்வன், அனந்த-
லோசனன், (வளர்ந்த) பூமிசை நடந்தோன்,
அகளங்கன், முத்தன், புண்ணிய மூர்த்தி,
(பஞ்சதாரை விட்டு அவனர்க்கு ஊட்டிய
எஞ்சல் இல்) பெருமாற்கு (இன்னவும் பலவே).
*(25 பெயர்கள்)* 12

### நமன் பெயர்

அந்தகன், தருமன், தென் திசை முதல்வன்,
சண்டன், மறலி, கூற்று, சமன், ஞமன்,
செங் கோற் கடவுள், இயமன் (என்று இவை
தங்கிய) நமன் (மேல் தரும் பெயராகும்).
*(10 பெயர்கள்)* 13

### காலன் பெயர்

சண்டனும், மறலியும், கூற்றும், சமனும் (என்று
இந்த வகைப் பேர்) காலற்கும் (ஆகும்).
*(4 பெயர்கள்)* 14

### உமையவள் பெயர்

காமக் கோட்டி, அம்பிகை, கௌரி,
ஆரியை, சத்தி, அயிராணி, பார்வதி,
இமய வல்லி, உமையவள் (பேரே).
*(8 பெயர்கள்)* 15

### கங்கையின் பெயர்

பகீரதி, சானவி, வரநதி, சுர நதி,
திரிபதகை, மந்தாகினி (இவை) கங்கை.
*(6 பெயர்கள்)* 16

### காடுகாள் பெயர்

காடுகாள், மோடி, காரி தாய், கொற்றி,
மாரி, சூரி, வடுகி, மூதணங்கே.
*(7 பெயர்கள்)* 17

### திருமகள் பெயர்

பொறி, மா, ஆக்கம், செல்வி, பொன், பூமகள்,
செய்யாள், இந்திரை, திருமகள் பெயரே
கமலை, பதுமை, விமலை, கோகனகை,
(அனையவும் அவள் பெயர் ஆகும் என்ப).
*(12 பெயர்கள்)* 18

### வாக்கின் செல்வியின் பெயர்

பாரதி, வாணி, பனுவலாட்டி,
வெண் தாமரையாள், வெள்ளை மேனியாள்,
நான்முகன் கிழத்தி, நா மகள், கலை மகள்,
உலக மாதா, (ஊர்) பூர வாகனி,
ஞான மூர்த்தி, (நல்) பா மடந்தை,
சாவித்திரியே, காயத்திரி (என)
வாக்கின் செல்வியை (நோக்கிய பெயரே).
*(14 பெயர்கள்)* 19

### சேட்டையின் பெயர்

முகடி, தௌவை, கலதி, மூதேவி,
காக்கைக் கொடியாள், கழுதை வாகனி,
கேட்டை, கெடல் அணங்கு, சேட்டை (பெயரே).
*(8 பெயர்கள்)* 20

### இந்திராணியின் பெயர்

சுந்தரி, சசியே, அயிராணி, புலோமசை,
இந்திரன் தேவிக்கு (எய்தும் பெயரே).
(4 பெயர்கள்) 21

### காளியின் பெயர்

சூலி, எண் தோளி, தாருக விநாசனி,
மாதரி, வீரி, கௌரி, முக் கண்ணி,
பைரவி, குமாரி, சாமுண்டி, சண்டிகை,
யோகினி, வேதாளி, யாமளை, (மா) காளி.
(14 பெயர்கள்) 22

### பகவதியின் பெயர்

கொற்றவை, ஐயை, கார்த்திகை, கௌரி,
துர்க்கை, சூலி, மகிடற் காய்ந்தாள்,
நீலி, எண் தோளி, விந்தை, சய மகள்,
(இருங்) கலை ஊர்தி, (எழில்) அரி ஏறி,
மேதித் தலைமிசை விசயை, அந்தரி,
மாலுக்கு இளையாள், சக்கராயுதியே,
பாலைக் கிழத்தி, (பண்) அம்பணத்தி,
நாராயணியே, கன்னி, குமரி,
(சீர் சால்) பகவதி (சிறந்த தொல் பெயரே).
(22 பெயர்கள்) 23

### இடாகினி பெயர்

வஞ்சனி, மாயவள், வலவை, இடாகினி.
(3 பெயர்கள்) 24

### யோகினியின் பெயர்

சன்மினி, சூர்மகள், யோகினி (ஆகும்).
(2 பெயர்கள்) 25

### அமரர் மாதர் பெயர்

அரம்பையர், அரமகளிர், அமரர் மாதர்.
(2 பெயர்கள்) 26

### தெய்வப் பெண் பொதுப் பெயர்

அணங்கும், சூரும், தெய்வப் பெண் பொதுப்பெயர்.
(2 பெயர்கள்) 27

### தேவர்கள் பொதுப் பெயர்

வானவர், இமையவர், விண்ணவர், கடவுளர்,
அமரர், சுரர், புலவர், அண்டர், புத்தேளிர்,
ஐயர், உம்பர், தேவர்கள் பொதுப் பெயர்
பண்ணவர், பகவர், தீர்த்தர், பட்டாரகர்,
புங்கவர் (எனவும் கடவுளர் பொதுப் பெயர்).
(16 பெயர்கள்) 28

### அசுரர் பெயர்

தானவர், அவுணர், தகுவர், தைத்தியர் (என்று)
(இனைய நான்கும்) நிசாசரரும் அசுரர்.
(5 பெயர்கள்) 29

### மாவலியின் பெயர்

வைரோசனனே, மாவலி (அவுணன்).(1 பெயர்) 30

### அரக்கர்

அரக்கர், இராக்கதர், நிசாசரர், நிருதர் (என்று)
(உரைத்த நான்கும் ஒன்றன் பால;)
சாலகடங்கடரும், பிசிதாசனரும்,
யாதுதானவரும் (அவ் இனத்தவரே).
(6 பெயர்கள்) 31

### வித்தியாதரர் பெயர்

விஞ்சையர், கேசரர், வித்தியாதரர்.
(2 பெயர்கள்) 32

### கந்திருவர் பெயர்

தந்திரர், கின்னரர், வீணை வல்லவர்.
கந்திருவர் (பெயர் எனக் கருதல் வேண்டும்).
(3 பெயர்கள்) 33

### பூத கணத்தின் பெயர்

சாதகம், கிருத்திமம், குறள், கூளி, பாரிடம்,
பூத கணம் (எனப் புகன்றனர் புலவர்).
(5 பெயர்கள்) 34

### பேயின் பெயர்

கழுது, சோகு, கடி, கணம், மண்ணை,
அலகை, கூளி, பிசாசு, வேதாளம்,
பிரேதகம், சாவோடு, (இணங்கு) குணபாசி (என்று
இனைய ஈர் - ஆறும் பேய் (எனல் வேண்டும்).
(12 பெயர்கள்) 35

### ஆகாசத்தின் பெயர்

அந்தரம், ஆசினி, அம்பரம், மங்குல்,
அண்டம், வானம், ககனம், மீ, வெளி,
விண், நாகம், மாகம், விசும்பு, தலை, உம்பர்,
இடம், குடில் (என்று ஆங்கு இவை பதினேழும்
அடங்கல் இல்) ஆகாயப் (பெயர் ஆகும்).
(17 பெயர்கள்) 36

### காற்றின் பெயர்

வாதம், கூதிர், வங்கூழ், கால், வளி,
ஊதை, அனிலம், கோதை, நீழல்,
உலவை, மாருதம், மருத்து, பவனம்,
வாடை, ஒலியே, கூதை, உயிர்ப்பே,
வேற்றலம், கொண்டல், கோடை - (என்று இருபதும்)
காற்றின் (பெயர் எனக் கருதல் வேண்டும்).
(20 பெயர்கள்) 37

### பனிக் காற்றின் பெயர்

கூதிரும், ஊதையும் (குளிர்) பனிக் காற்றே.
(2 பெயர்கள்) 38

### வட காற்றின் பெயர்

வாடை, வடந்தை, வடகாற்று (ஆகும்).
(2 பெயர்கள்) 39

### மேல் காற்றின் பெயர்

கோடை, மேல் காற்று. (1 பெயர்) 40

### கீழ் காற்றின் பெயர்

கொண்டல், கீழ் காற்று. (1 பெயர்) 41

### தென்றலின் பெயர்

மந்தாநிலமே, மலயக் காலே,
தென் கால், வசந்தன், தென்றல் (என்று இசைப்பர்).
(4 பெயர்கள்) 42

### சுழன்று எழு காற்றின் பெயர்

சூறை, சாரிகை, சுழன்று எழு காற்றே.
(2 பெயர்கள்) 43

### நெருப்பின் பெயர்

அழல், அங்காரகன், அங்கி, கனலி,
எரி, தழல், தபனன், பாவகன், தீ, அனல்,
(செஞ்) சுடர்ப் பகவன், ஞெகிழி, உதாசனன்,
உதவகன், தனஞ்சயன், வசு, எழு நா, அரி,
தென் கீழ்த் திசையோன், வன்னி, தேயு என்று
இன்னவை பிறவும் நெருப்பின் (பெயரே).
(21 பெயர்கள்) 44

### வடவாமுகாக்கினியின் பெயர்

உத்தர மடங்கல், ஊழித் தீ (என
வைத்த) கடை அனல், வடவாமுகமே.
(3 பெயர்கள்) 45

### விளக்கின் பெயர்

தீபமும், சுடரும், விளக்கு (எனச் செப்புவர்).
(2 பெயர்கள்) 46

### அனற் பொறியின் பெயர்

புலிங்கம், அனற் பொறி. (1 பெயர்) 47

### அனல் திரளின் பெயர்

உற்கம், அனல் திரள். (1 பெயர்) 48

### காட்டு எரியின் பெயர்

தாவம், காட்டு எரி. (1 பெயர்) 49

### தீக் கடை கோலின் பெயர்

அரணி, ஞெலிகோல், தீக் கடை கோலே.
(2 பெயர்கள்) 50

### தீக் கடவுளின் பெயர்

பாவகன், (அத்) தீக் கடவுள் பெயரே .
(1 பெயர்) 51

### நீரின் பெயர்

அறலும், புனலும், அப்பும், பாணியும்,
உதகமும், கமலமும், அமுதமும், கவந்தமும்,
பயமும், சலிலமும், அயமும், அளகமும்,
புவனமும், வனமும், கோவும், கீலாலமும்,
காண்டமும், தோயமும், நாரமும், நீரே.
(19 பெயர்கள்) 52

### வெள்ள நீரின் பெயர்

நீத்தம், பிரளயம், வாரி, வெள்ள நீர்.
(3 பெயர்கள்) 53

### புனற்கு அரசன் பெயர்

(மற்று அப்) புனற்கு அரசன், வருணன் (ஆகும்).
(1 பெயர்) 54

### அருக்கன் பெயர்

வெய்யோன், இருள் வலி, பதங்கன், சூரியன்,
சுடரவன், தரணி, உதயன், ஆதவன்,
எல்லே, மார்த்தாண்டன், தினகரன், பனிப் பகை,
பரிதி, செங்கதிர், அலரி, பானு,
வெஞ் சுடர்க் கிரணன், பகலவன், வேந்தன்,
ஆயிரம் கதிரோன், அழலவன், திவாகரன்,
இரவி, பாற்கரன், என்றூழ், அருணன்,
ஆதித்தன், கனலி, ஞாயிறு, விரிச்சிகன்,
சான்றோன், அரியே, தபனன், (என்று இனையவும்
ஆன்ற) அருக்கற்கு (அனந்தம் பெயரே).
(33 பெயர்கள்) 55

### சந்திரன் பெயர்

அம்புலி, திங்கள், குபேரன், அருச்சிகன்,
நிசாசரன், இமகரன், ஆலோன், களங்கன்,
தண் சுடர்க் கலையோன், இராக் கதிர், தானவன்,
(வியோமத்து) உடுபதி, அமுத கிரணன்,
இந்து, சோமன், பிறை, மதி, சசி, விது, (என
வந்தன பிறவும்) நிலவும், சந்திரன்.
(20 பெயர்கள்) 56

### செவ்வாயின் பெயர்

அங்காரகன், குசன், ஆரல், வக்கிரன்,
மங்கலன், அறிவன், செந் தீ வண்ணன்,
பூ மகன், நில மகன், குருதி, சேய், செவ்வாய்
(நாமம் என்று நவின்றனர் புலவர்).
(11 பெயர்கள்) 57

### புதன் பெயர்

அருணன், தூதுவன், அனுவழி, மேதை,
மதிமகன், பாகன், மாலவன், கணக்கன்,
புந்தி, புலவன், பண்டிதன், சௌமியன்,
சிந்தை கூரியோன், அறிவன், புதன் (என
வந்த நாமம் மற்று அவற்கு ஆகும்).
(14 பெயர்கள்) 58

**வியாழத்தின் பெயர்**

மந்திரி, ஆசான், பீதகன், சுரகுரு,
அந்தணன், அரசன், ஆண்டளப்பான், பிரகற்பதி,
(சுந்தரப்) பொன், குரு, மறையோன், வியாழம்.
*(11 பெயர்கள்)* 59

**சுக்கிரன் பெயர்**

பளிங்கு, பார்க்கவன், புகர், புயல், மழைக் கோள்,
(விளங்கு) திங்கள், பிரசுரன், சல்லியன்,
ஒள்ளியோன், சுங்கன், அசுர மந்திரி, (என)
வெள்ளி, சிதன், பிருகு, சுக்கிரன் (பெயரே).
*(14 பெயர்கள்)* 60

**சனியின் பெயர்**

மந்தன், காரி, கரியோன், முடவன்,
அந்தன், நீலன், கதிர் மகன், கீழ் மகன்,
பங்கு, மேற்கோள், சௌரி, முது மகன்,
சந்தில் சாவகன், சனியின் (பெயரே).
*(13 பெயர்கள்)* 61

**இராகுவின் பெயர்**

இராகுக் (கோள்), கரும் பாம்பு. *(1 பெயர்)* 62

**கேதுவின் பெயர்**

கேதுக் (கோள்), செம் பாம்பு. *(1 பெயர்)* 63

**அனந்தன் பெயர்**

அனந்தன் (பெயரே), சேடன் (ஆகும்).
*(1 பெயர்)* 64

**மேட இராசியின் பெயர்**

வருடை, உதள், தகர், மறி, மை, கொறி என
விரியும் ஆட்டின் பேர் மேட இராசி.
*(6 பெயர்கள்)* 65

**இடப இராசியின் பெயர்**

பாறல், புல்லம், பாண்டில், பசு, மூரி
ஏறு, (முதல் வந்தன) இடப இராசி.
*(6 பெயர்கள்)* 66

**மிதுனத்தின் பெயர்**

பாடவை, ஆடவை, இரட்டை, சவை மகள்,
(மேவும்) யாழ்ப் (பல் பெயர்), தண்டே, மிதுனம்.
*(6 பெயர்கள்)* 67

**கர்க்கடகத்தின் பெயர்**

அலவன், நள்ளி, குளிர், ஞெண்டு, (ஆர்) மதி,
களவன், (என்று இவை), கர்க்கடகப் (பெயரே).
*(6 பெயர்கள்)* 68

**சிங்கத்தின் பெயர்**

அரி, மா, புலி, ஐயானனம், யாளி,
(தெரியின் புலி சீயப் பல் பெயர்) சிங்கம்.
*(5 பெயர்கள்)* 69

**கன்னியின் பெயர்**

பெண்மைப் பெயரே, கன்னிக்கும் (ஆகும்).
*(2 பெயர்கள்)* 70

**துலாத்தின் பெயர்**

நிறையே, கட்டளை, வாணிகன், நிறுப்பான்,
துலையே, கோல், (எனத்) துலாப் (பெயர் பெறுமே.)
*(6 பெயர்கள்)* 71

**விருச்சிகத்தின் பெயர்**

தெறுக்கால், பறப்பன், தேளே, விருச்சிகம்,
நலம் (என் பெயரும் தேளின் மேற்றே).
*(4 பெயர்கள்)* 72

**தனுவின் பெயர்**

சாபம், காண்டீவம், தனுவின் (பெயரே).
*(2 பெயர்கள்)* 73

**மகரத்தின் பெயர்**

மானே, கலை, சுறு, மகரப் (பெயரே).
*(3 பெயர்கள்)* 74

**கும்பத்தின் பெயர்**

குடமே, சாடி, (பெயரே) கும்பம். *(2 பெயர்கள்)* 75

**மீனத்தின் பெயர்**

மீனம், மீனின் பல பெயர் (பெறுமே). 76

**அச்சுவினியின் பெயர்**

இரலை, ஐப்பசி, யாழ், ஏறு, தலை நாள்,
புரவி, மருத்துவ நாள், அச்சுவினி (என்ப).
*(7 பெயர்கள்)* 77

**பரணி நாளின் பெயர்**

காடு, கிழவோன், பூதம், அடுப்பே,
தாழி, (பெருஞ்) சோறு, தருமன் நாள், போதம் (எனப்
பாகு பட்டது) பரணி நாள் (பெயரே).
*(8 பெயர்கள்)* 78

**கார்த்திகையின் பெயர்**

அங்கி, ஆரல், அளக்கர், அளகு, இறுல்,
(பொங்கிய) நாடன், நாவிதன், வாணன்,
(தங்கு ஒளி) அறுமீன், தழல் நாள், கார்த்திகை.
*(10 பெயர்கள்)* 79

**உரோகிணியின் பெயர்**

பண்டி, பார், சகடு, சாகாடு, வையம்
(ஒண் திறல்) உருள், தேர், அயன் நாள், உரோகிணி .
*(8 பெயர்கள்)* 80

**மிருகசீரிடத்தின் பெயர்**

மாழ்கு, பேராளன், மான் தலை, இந்திரன்,
மார்கழி, நரிப்புறம், மதிநாள், மும் மீன்,
பாலை, வெய்யோன், மிருகசீரிடப் (பெயர்).
*(10 பெயர்கள்)* 81

**திருவாதிரையின் பெயர்**

மூதிரை, செங்கை, யாழ், ஈசர் தினம், (என)
ஆதிரை (தன் பெயராகும் என்ப). (4 பெயர்கள்) 82

**புனர்பூசத்தின் பெயர்**

அதிதிநாள், மூங்கில், கரும்பு, ஆவணம், பாலே,
புனிதம், பிண்டி, புனர்தம், புனர்பூசம்.
(8 பெயர்கள்) 83

**பூச நாளின் பெயர்**

கொடிறு, காற்குளம், சுரர் குரு நாள், வண்டு,
(புணர்வதாகும்) பூசநாள் (பெயரே).
(4 பெயர்கள்) 84

**ஆயிலியத்தின் பெயர்**

அரவின் நாள், கௌவை, ஆயிலியப் (பேர்).
(2 பெயர்கள்) 85

**மகத்தின் பெயர்**

வேட்டுவன், கொடு நுகம், எழுவாய் எழும் சனி,
வாய்க்கால், பிதிர் நாள், மாசி, மகம் (ஆகும்).
(6 பெயர்கள்) 86

**பூரத்தின் பெயர்**

இடை (அது) எழும் சனி, எலியே, துர்க்கை,
பகவதி நாள், நாவிதன், கணையே, பூரம்.
(6 பெயர்கள்) 87

**உத்தரத்தின் பெயர்**

பங்குனி, கடை (அது) எழும் சனி, பாற்குனி,
மான் ஏறு, கதிர் நாள், உத்தரம் (ஆகும்).
(5 பெயர்கள்) 88

**அத்தத்தின் பெயர்**

கைம் மீன், காமரம், களிறு, கௌத்துவம்,
நவ்வி, கன்னி, ஐவிரல், அத்தம். (7 பெயர்கள்) 89

**சித்திரை நாளின் பெயர்**

நெய்வான், மீன், சுவை, பயற்றெறுடு, நேர்வான்,
(செவ்விதின்) துவட்டா நாள், சித்திரை (என்ப).
(6 பெயர்கள்) 90

**சோதி நாளின் பெயர்**

விளக்கே, வீழ்க்கை, வெறு நுகம், மரக்கால்,
(துளக்கம் இல்) அனில நாள், சோதி (நாள் ஆகும்).
(5 பெயர்கள்) 91

**விசாக நாளின் பெயர்**

முறமே, முற்றில், வைகாசி, அனில நாள்,
(பெறுமே) சுளகு, விசாக (நாள் பெயரே).
(5 பெயர்கள்) 92

**அனுடத்தின் பெயர்**

பனை, தேள், பெண்ணை, புல், தாளி, போந்தை,
மித்திர நாள், (இவை) அனுடப் (பெயரே).
(7 பெயர்கள்) 93

**கேட்டையின் பெயர்**

(துளங்கு ஒளி) வல்லாரை, வேதி, எரி, தழல்,
(கிளந்த) இந்திரன் நாள், (பின்றுக்) கேட்டை.
(5 பெயர்கள்) 94

**மூலத்தின் பெயர்**

கொக்கே, தேட்கடை, குருகு, வில், அன்றில்,
(முற்றும்) ஆனி, அசுர நாள், மூலம்.
(7 பெயர்கள்) 95

**பூராடத்தின் பெயர்**

உடை குளம், முற் குளம், நீர் நாள், பூராடம்.
(3 பெயர்கள்) 96

**உத்தராட நாளின் பெயர்**

ஆடி, ஆனி, கடைக் குளம், விச்சுவ நாள்,
(நாடில்) உத்தராட (நாள் ஆகும்மே).
(4 பெயர்கள்) 97

**திருவோணத்தின் பெயர்**

(நலத் தகு) வயிரம், நள்ளே, சிரவணம்,
உலக்கை, சோனை, மாயோன் நாள், ஓணம்.
(6 பெயர்கள்) 98

**அவிட்டத்தின் பெயர்**

ஆவணி, காக்கை, பறவை, புள், வசுநாள்,
(மேவிய) அவிட்ட (மீனின் பெயரே).
(5 பெயர்கள்) 99

**சதய நாளின் பெயர்**

குன்று, போரே, சுண்டன், (பெருஞ்) செக்கு,
(தங்கு) வருணன் நாள், சதய (நாள் ஆகும்).
(5 பெயர்கள்) 100

**பூரட்டாதியின் பெயர்**

புரட்டாதி, முற் கொழுங் கோல், பூரட்டாதி,
(உரைப்பர்) நாழியும் (அந் நாளுடனே).
(3 பெயர்கள்) 101

**உத்தரட்டாதியின் பெயர்**

முரசு, பிற்கொழுங் கோல், மன்னன், இம் மூன்றினோடு
(உரை செய்) அறிவன் நாள், உத்தரட்டாதி.
(4 பெயர்கள்) 102

**இரேவதியின் பெயர்**

தொழுவே, நாவாய், தோணி, சூலம்,
பஃறி, புருட நாள், கடை மீன், இரேவதி.
(7 பெயர்கள்) 103

**அருந்ததியின் பெயர்**

அருந்ததி சாலி, வடமீன் (ஆகும்).
*(2 பெயர்கள்) 104*

**வான் மீன் பெயர்**

உடு, தாராகணம், ஒளி, வான் மீனே.
*(3 பெயர்கள்) 105*

**கால நுட்பத்தின் பெயர்**

துடியும், கலேயும், (தொடர்) கால நுட்பம்.
*(2 பெயர்கள்) 106*

**நாழிகையின் பெயர்**

கன்னலும், இருத்தையும், கடிகையும், பதமும்,
(சொன்ன) விகலேயும், நாழிகைத் (தொல் பெயர்).
*(5 பெயர்கள்) 107*

**பொழுதின் பெயர்**

வேலேயும், அமையமும், காலேயும், பதமும்,
ஏல்வையும், காலமும், பொழுது (எனப்படுமே).
*(6 பெயர்கள்) 108*

**முன்னே நாளின் பெயர்**

நென்னலும், நெருநலும், முன்னே நாள் (ஆகும்).
*(2 பெயர்கள்) 109*

**பின்னே நாளின் பெயர்**

பிற்றையும், பின்றையும், பின்னே நாள் (ஆகும்).
*(2 பெயர்கள்) 110*

**உச்சியின் பெயர்**

நண்பகல், உச்சி. *(1 பெயர்) 111*

**சந்தியின் பெயர்**

அந்தி, சந்தி. *(1 பெயர்) 112*

**சாமத்தின் பெயர்**

யாமம், சாமம். *(1 பெயர்) 113*

**பகலின் பெயர்**

எல்லே, பகலாம். *(1 பெயர்) 114*

**வெயிலின் பெயர்**

என்றூழ், ஆதபம், வெயில் (எனப்படுமே).
*(2 பெயர்கள்) 115*

**சந்திரிகையின் பெயர்**

நிலவு, சந்திரிகை (ஆகும் என்ப).*(1 பெயர்) 116*

**இரவின் பெயர்**

எல்லியும், கங்குலும், யாமமும், மாலேயும்,
அல்லும், மங்குலும், இரசனியும், அல்கலும்,
யாமினியும், நிசியும், எல்லும், இரவே.
*(11 பெயர்கள்) 117*

**இருளின் பெயர்**

நிசியே, நத்தம், நீலம் (அதனெடு),
திமிரமும், தமமும், இருள் (ஆகும்).
*(5 பெயர்கள்) 118*

**நாளின் பெயர்**

பகலும், வைகலும், திவசமும், தினமும்,
ஆனியமும், திவாவும், நாள் (ஆகும்மே).
*(6 பெயர்கள்) 119*

**அருணேதயத்தின் பெயர்**

வைகறை, விடியல், புலரி அருணேதயம்.
*(3 பெயர்கள்) 120*

**திதியின் பெயர்**

திதியே, பக்கம். *(1 பெயர்) 121*

**மாதத்தின் பெயர்**

மதியே, திங்கள், மாதம் (ஆகும்). *(2 பெயர்கள்) 122*

**முதல் பக்கத்தின் பெயர்**

பக்கம் முதலது, நந்தை (ஆகும்). *(1 பெயர்) 123*

**இரண்டாம் பக்கத்தின் பெயர்**

பத்திரை (என்பது), இரண்டாம் பக்கம்.
*(1 பெயர்) 124*

**மூன்றும் பக்கத்தின் பெயர்**

மூன்றே, சயை பக்கம். *(1 பெயர்) 125*

**நான்காம் பக்கத்தின் பெயர்**

நான்கே, இரித்தை. *(1 பெயர்) 126*

**ஐந்தாம் பக்கத்தின் பெயர்**

ஐந்தாம் பக்கம், பூரணே (ஆகும்). *(1 பெயர்) 127*

**பாதி நாளின் பெயர்**

அரை நாளும், பானுளும், அத்த நாளும், பாதி நாள் .
*(3 பெயர்கள்) 128*

**மாத்திரையின் பெயர்**

கணமே, மாத்திரை . *(1 பெயர்) 129*

**நிகழ் காலத்தின் பெயர்**

வேலே (என்பது), நிகழும் காலம். *(1 பெயர்) 130*

**வெப்பத்தின் பெயர்**

உருப்பம், வெப்பம் (ஆகும் என்ப). *(1 பெயர்) 131*

**கோடையின் பெயர்**

வேனில், கோடை (மிசைப் பேராகும்).
*(1 பெயர்) 132*

**சிறு பொழுதின் பெயர்**

ஒல்லை, சிறு வரை, சிறு பொழுது (ஆகும்).
*(2 பெயர்கள்)* *133*

**அறு வகைப் பருவமாவன**

காரே, கூதிர், முன் பனி, பின் பனி,
(சீர்) இள வேனில், முது வேனில் (என்று ஆங்கு)
இரு மூன்று வகைப் பருவம்; (அவை தாம்
ஆவணி முதலா இரண்டு இரண்டாக
மேவின திங்கள் எண்ணினர் கொளலே).
*(6 பெயர்கள்)* *134*

**பனியின் பெயர்**

இமமும், துகினமும், மஞ்சும், நீகாரமும்,
(பனியின் பெயர் எனப் பகரப்படுமே).
*(4 பெயர்கள்)* *135*

**கார் காலத்தின் பெயர்**

கார், (எனும் காலப் பெயர்), சரற் காலம்.
*(1 பெயர்)* *136*

**கூதிர்க் காலத்துக்கும் பனிக் காலத்துக்கும் பெயர்**

கூதிர்க் காலமும் (குளிர்) பனிக் காலமும்
(ஆகும் என்ப), சிசிர நாளே. *(1 பெயர்)* *137*

**பருவத்தின் பெயர்**

ஆனியமும், இருதுவும், பருவம் (ஆகும்).
*(2 பெயர்கள்)* *138*

**காலமாவன**

பருவமும், யாண்டும், காலம் (ஆகும்).
*(2 பெயர்கள்)* *139*

**உகத்தின் பெயர்**

ஊழியும், உறையுளும், உகம் (ஆகும்மே).
*(2 பெயர்கள்)* *140*

**உக முடிவின் பெயர்**

ஊழியும், மடங்கலும், உக முடிவு (ஆகும்).
*(2 பெயர்கள்)* *141*

**நான் முகன் வாழ்நாளின் பெயர்**

நான் முகன் வாழ் நாள், கற்பம் (ஆகும்).
*(1 பெயர்)* *142*

**வாழ்நாளின் பெயர்**

ஆயுள், ஆயுகம், வாழ்நாள் (என்ப).
*(2 பெயர்கள்)* *143*

**மேலின் பெயர்**

மேக்கு, வலம், மீ, உம்பர், மேல் (ஆகும்).
*(4 பெயர்கள்)* *.144*

**கீழின் பெயர்**

கிழக்கு, கீழே. *(1 பெயர்)* *145*

**வருடத்தின் பெயர்**

துவலை, பெயலை, துளியே, மாரி,
உறை, பெயல், ஆலி, உதகம், சிதறி,
தூவல், சீகரம், தூறல், வருடம். *(12 பெயர்கள்)* *146*

**மேகத்தின் பெயர்**

மேகம் சீதம், விசும்பு, வான், விண், முகில்,
கொண்மூ, மஞ்சு, கொண்டல், மை, மழை,
எழிலி, கார், குயின், கந்தரம், விண்டு,
மங்குல், மால், செல், கனமும் (வரையார்).
*(19 பெயர்கள்)* *147*

**இடியேற்றின் பெயர்**

உருமும், செல்லும், அசனியும், உருமேறும்,
இடியும், வான் ஏறும், இடியேற்றின் (பெயரே).
*(6 பெயர்கள்)* *148*

**மழை பெய்து விடுதலின் பெயர்**

தலையல் (என்பது), மழை பெய்து விடுதல்.
*(1 பெயர்)* *149*

**விடாது சொரிதலின் பெயர்**

சோனையும், பனித்தலும், விடாது சொரிதல்.
*(2 பெயர்கள்)* *150*

**பெரு மழையின் பெயர்**

ஆசாரம் (என்பது), பெரு மழை (ஆகும்).
*(1 பெயர்)* *151*

**துளியின் பெயர்**

தளி, பெயல், ஆலி, உறை, துளி (ஆகும்).
*(4 பெயர்கள்)* *152*

**ஆலங்கட்டியின் பெயர்**

ஆலி, ஆலங்கட்டி (ஆகும்). *(1 பெயர்)* *153*

**துவலையின் பெயர்**

சீகரம், பிதிரே, சிதர், அரி, சிகரம்,
தூவல், (என்று இவை), துவலை (ஆகும்).
*(6 பெயர்கள்)* *154*

**மின்னின் பெயர்**

தடித்து, தடி, மின். *(2 பெயர்கள்)* *155*

**இடியின் பெயர்**

இடிப் (பெயர்), இகுளே. *(1 பெயர்)* *156*

**பரிவேடத்தின் பெயர்**

ஊர்கோள், வட்டம், பரிவேடப் (பெயரே).
*(2 பெயர்கள்)* *157*

### இந்திர வில்லின் பெயர்

வானவில், இந்திர வில் (என அறைவர்).
(1 பெயர்) 158

### காமன் காண்டீவத்தின் பெயர்

காமன் காண்டீவம், கருப்பு வில் (ஆகும்).
(1 பெயர்) 159

### திவாகர வரலாறு

வட நூற்கு அரசன், தென் தமிழ்க் கவிஞன்,
கவி அரங்கேற்றும் உபய கவிப் புலவன்,
செறி குணத்து அம்பல் - கிழவோன், சேந்தன்,
அறிவு கரியாகத் தெரி சொல் திவாகரத்து

முதலாவது
தெய்வப் பெயர்த் தொகுதி முற்றிற்று.

## 2. மக்கள் பெயர்த் தொகுதி

### அருந் தவர் பெயர்

துறவோர், ஐயர், மாதவர், முனிவர்,
அறவோர், நீத்தோர், அறிஞர், உயர்ந்தோர்,
தாபதர், மெய்யர், தவத்தர், தபோதனர்,
முனிவர், இருடிகள், படிவர், பண்ணவர்,
யோகிகள், கடிந்தோர், பெரியோர், உறுவர், -(என்று
ஆகிய) அந்தணர், அருந்தவர் (பேரே).
(21 பெயர்கள்) 1

### சைவ தவப் பாலோர் பெயர்

மா விரதியரும், காளாமுகரும்,
பாசுபதரும், சைவ தவப்பாலோர்.
(3 பெயர்கள்) 2

### நாராயண சமயத்தோர் பெயர்

நாராயண சமயத்தோர் பாகவதரே. (1 பெயர்) 3

### சமணர் பெயர்

சாவகர், அருகர், சமணர் (ஆகும்);
ஆசீவகரும், (அத் தவத்தோரே). (3 பெயர்கள்) 4

### புத்தர் பெயர்

புத்தர், சாக்கியர், தேரர், பௌத்தர்,
(வைத்த) சீவகரும் (அத் தவத்தோரே).
(4 பெயர்கள்) 5

### சமண முனிவர் பெயர்

சாரணர், சமண முனிவர் (ஆகும்). (1 பெயர்) 6

### சடை முடியோர் பெயர்

தாபதர், சடைமுடியோர். (1 பெயர்) 7

### பார்ப்பார் பெயர்

ஐயர், வேதியர், இரு பிறப்பாளர்,
மெய்யர், மிக்கவர், மறையோர், பூசுரர்,
அந்தணர், நூலோர், அறு தொழிலாளர்,
செந் தீ வளர்ப்போர், உயர்ந்தோர், ஆய்ந்தோர்,
ஆதி வருணர், வேத பாரகர்,
விப்பிரர், தொழு குலத்தோர், வேள்வியாளர்,
முப் புரி நூலோர், முனிவர் (என்று இவை
தப்பு இல்) பார்ப்பார் (தம் பெயர் ஆகும்).
(20 பெயர்கள்) 8

### நூல் உரைப்போர் பெயர்

கணக்காயர், நூல் உரைப்போர். (1 பெயர்) 9

### கலை வல்லோர் பெயர்

கவிஞர், கலை வல்லோர். (1 பெயர்) 10

### அறிவுடையோர் பெயர்

சான்றோர், மிக்கோர், நல்லவர், மேலவர்,
ஆய்ந்தோர், உயர்ந்தோர், ஆரியர், உலகு, (என
ஆய்ந்த) ஆன்றோர், அறிவுடையோரே.
(9 பெயர்கள்) 11

### புலவர் பெயர்

கவிஞர், கலைஞர், கற்றவர், மேதையர்,
சவையே, சங்கம், முதுவோர், மூத்தோர்,
அவையே, அறிஞர், புதரே, புலவர்.
(11 பெயர்கள்) 12

### மிக வல்லோர் பெயர்

விபுதர், நிபுணர், குசலர், மிக வல்லோர்.
(3 பெயர்கள்) 13

### மூத்தோன் பெயர்

அடிகள், அத்தன், ஐயன், ஆசான்,
குரவன், சாமி, கோமான், பெருமான்,
உரவோன், ஈசன், இறைவன், தலைவன்,
(விரவு) பதி, நாதன், மூத்தோன் (பெயரே).
(14 பெயர்கள்) 14

### பெருமையில் சிறந்தோன் பெயர்

அண்ணலும், குரிசிலும், ஏந்தலும், தோன்றலும்,
செம்மலும், பெருமையில் சிறந்தோன் (பெயரே).
(5 பெயர்கள்) 15

### எப்பொருட்கும் இறைவன் பெயர்

நாதன், நாயகன், அதிபன், காந்தன்,
பதி, கோன், ஈசன், செம்மல், இறையே,
தலைவன், மன்னவன், பிரானே, கொழுநன்,
அரசன், ஆதி (எனப் பதினைந்தும்
உரைசெய்) எப்பொருட்கும் இறைவன் (மேற்றே).
(15 பெயர்கள்) 16

**உயர்ந்தோர் பெயர்**

உலகம் (என்பது), உயர்ந்தோர் (மாட்டே).
(1 பெயர்) 17

**திரண்டோர் பெயர்**

சங்கமும், குழுவும், கூட்டமும், கணமும்,
(தங்கிய) தொகுதியும், சவையும், அவையும்,
(இங்கு இவை) திரண்டோர் (யாவர்க்கும் உரிய).
(7 பெயர்கள்) 18

**அரசன் பெயர்**

புரவலன், கொற்றவன், பெருமான், காவலன்,
அரையன், ஏந்தல், கோவே, குரிசில்,
தலைவன், மன்னவன், வேந்தன், முதல்வன்,
நிருபன், பூபாலன், நரபதி, பார்த்திவன்,
இறைவன், அண்ணல் (எனப் பதினெட்டும்)
அரசன் (தொல் பெயர் ஆகும் என்ப).
(18 பெயர்கள்) 19

**குரு குலத்து அரசர் பெயர்**

பரதர், கௌரவர், குரு குலத்து அரசர்.
(2 பெயர்கள்) 20

**கோச் சேரன் பெயர்**

பூழியன், உதியன், கொங்கன், பொறையன்,
வானவன், குட்டுவன், வான வரம்பன்,
வில்லவன், குட நாடன், வஞ்சி வேந்தன்,
கொல்லிச் சிலம்பன், கோதை, கேரளன்,
போந்தின் கண்ணிக் கோன், பொருநைத் துறைவன்,
சேரலன், மலயமான், கோச் சேரன் (பெயரே).
(17 பெயர்கள்) 21

**கோச் சோழன் பெயர்**

சென்னி, வளவன், கிள்ளி, செம்பியன்,
பொன்னித் துறைவன், புலிக் கொடிப் புரவலன்,
நேரியன், ஆர்த் தார்க் கோன், நேர் இறை, அபயன்,
நேரி வெற்பன், கோழி வேந்தன்,
சூரியன், புனல் நாடன், கோச் சோழன் (பெயரே).
(14 பெயர்கள்) 22

**கோப் பாண்டியன் பெயர்**

செழியன், தமிழ் நாடன், கூடற் கோ, தென்னவன்,
வழுதி, மீனவன், பஞ்சவன், மாறன்,
கௌரியன், வேம்பின் கண்ணிக் கோ, கைதவன்,
பொதியப் பொருப்பன், (புனல்) வையைத் துறைவன்,
குமரிச் சேர்ப்பன், கோப் பாண்டியனே.
(14 பெயர்கள்) 23

**சளுக்கு வேந்தர் பெயர்**

வேள் புல அரசர், சளுக்கு வேந்தர். (1 பெயர்) 24

**குறு நில வேந்தர் பெயர்**

வேளிரும், புரோசரும், குறு நில வேந்தர்
ஆட்டரும், குறும்பரும் (ஆகும் என்ப).
(4 பெயர்கள்) 25

**மந்திரிக் கிழவர் பெயர்**

முதுவர், குரவர், மூத்தோர், முன்னோர்,
உழையோர், சூழ்வோர், நூல் வல்லோரே,
அமைச்சர், தேர்ச்சித் துணைவர் (என்று ஆங்கு
இசைத்த) மந்திரிக் கிழவர்க்கு (எய்தும்).
(9 பெயர்கள்) 26

**நட்பாளர் பெயர்**

இனப் (பெயர் தன்) நட்பாளர்க்கு (எய்தும்).
(1 பெயர்) 27

**மந்திரித் தந்திரிக்குப் பெயர்**

ஏனாதி, காவிதி, ஆமாத்தியர், (எனும் பெயர்
ஆறு) மந்திரித் தந்திரிக்கு (எய்தும்).
(3 பெயர்கள்) 28

**கருமத் தலைவர் பெயர்**

வள்ளுவன், சாக்கை (எனும் பெயர் மன்னர்க்கு
உள்படு) கருமத் தலைவர்க்கு (ஒன்றும்).
(2 பெயர்கள்) 29

**போர்த் தலைவர் பெயர்**

(பெரும்) போர்த் தலைவர், பொருநர் (எனப்படுப).
(1 பெயர்) 30

**பரிவாரத்தின் பெயர்**

பரியாளம் (என்பது), பரிவாரம் (ஆகும்).
(1 பெயர்) 31

**செட்டிகள் பெயர்**

இப்பர், பரதர், வைச்சியர், கவிப்பர்,
எட்டியர், இளங் கோக்கள், ஏர்த் தொழிலர், பசுக் காவலர்,
(ஒப்பு இல்) நாய்கர், வினைஞர், வணிகர் (என்று
அத் தகு) சிரேட்டிகள், செட்டிகள் (பெயரே).
(12 பெயர்கள்) 32

**காராளர் பெயர்**

வினைஞர், சூத்திரர், பின்னவர், சதுர்த்தர்,
வளமையர், வேளாளர், மண் மகள் புதல்வர்,
வார்த்தைத் தொழிலோர், (வண்) களமர், உழவர்,
(சீர்த்த) ஏரின் வாழ்நர், காராளர். (11 பெயர்கள்) 33

**மிலேச்சர் பெயர்**

மிலேச்சர், ஆரியர். (1 பெயர்) 34

**சோனகர் பெயர்**

யவனர், சோனகர். (1 பெயர்) 35

**மருத்துவர் பெயர்**

ஆயுள் வேதியர், (மா) மருத்து நூலோர்,
மா மாத்திரரே, பிடகர், மருத்துவர். (4 பெயர்கள்) 36

**கைக்கோளர் பெயர்**

தந்துவாயர், காருகர், கைக்கோளர்.
(2 பெயர்கள்) 37

**குயவர் பெயர்**

கும்பகாரர், குலாலர், வேட்கோவர் (என்று
இங்கு இவை) குயவர், மட் பகைஞர் (என்ப).
(4 பெயர்கள்) 38

**உப்பு அமைப்போர் பெயர்**

உமணர், அளவர், உப்பு அமைப்போரே.
(2 பெயர்கள்) 39

**சித்திரகாரர் பெயர்**

ஓவியர், சித்திரகாரர் (ஆகும்). (1 பெயர்) 40

**கண்ணுளர் பெயர்**

கம்மியர், யவனர், கொல்லர், தபதியர்,
அக்க சாலையர், சிற்பியர், (அதனொடு)
வித்தகர், வித்தியர், புனைவர், அறிவர், (என்று
அத் தகு) கண்ணுளர் (பெயர் என அறைவர்).
(10 பெயர்கள்) 41

**தச்சர் பெயர்**

தபதியர், மர வினையர், தச்சர் (ஆகும்).
(2 பெயர்கள்) 42

**கன்னார் பெயர்**

கன்னுவர், கஞ்சகாரர், கன்னார். (2 பெயர்கள்) 43

**தட்டார் பெயர்**

செங் கொல்லர், தட்டார், பொன் வினை செய்வோர்.
(2 பெயர்கள்) 44

**வண்ணார் பெயர்**

ஏகாலியர், தூசர், ஈரம் கோலியர்,
காழியர், வண்ணார் (ஆகக் கருதுவர்).
(4 பெயர்கள்) 45

**உறைகாரர் பெயர்**

காரோடர், உறைகாரர். (1 பெயர்) 46

**ஊன் விலைஞர் பெயர்**

சூனர், ஊன் விலைஞர். (1 பெயர்) 47

**தோல் வினைஞர் பெயர்**

பறம்பர், தோல் வினைஞர். (1 பெயர்) 48

**நாவிதர் பெயர்**

பெருமஞ்சிகரே, மயிர் வினைஞர், நாவிதர்.
(2 பெயர்கள்) 49

**செக்கார் பெயர்**

சக்கிரி, நந்திகள், செக்கார் (ஆகும்).
(2 பெயர்கள்) 50

**கள் விலைஞர் பெயர்**

பழையர், துவசர், படுவர், கள் விலைஞர்.
(3 பெயர்கள்) 51

**சண்டாளர் பெயர்**

குணுங்கர், வங்கர், கவுண்டர், கனகதர்,
இழிஞர், கொலைஞர், புலைஞர், (என்று ஆங்கு
இசையும் பெயர்) சண்டாளர்க்கு (எய்தும்).
(7 பெயர்கள்) 52

**பாணர் பெயர்**

சென்னியர், வைரியர், சூதர், மாகதர்,
இன்னிசைகாரர், மதங்கர், பாணர். (6 பெயர்கள்) 53

**பாடற் கீழ் மக்கள் பெயர்**

பண்டரும், ஓவரும், பாடற் கீழ் மக்கள்.
(2 பெயர்கள்) 54

**தமிழ்க் கூத்தர் பெயர்**

வாயிலோர், தமிழ்க் கூத்தர். (1 பெயர்) 55

**கழைக் கூத்தர் பெயர்**

வேழம்பர், கழைக் கூத்தர். (1 பெயர்) 56

**தோற் கருவி இசைப்போர் பெயர்**

இயவர், தோற் கருவி இசைக்கும் மாக்கள்.
(1 பெயர்) 57

**நரப்புக் கருவி கொளற்கு உரியோர் பெயர்**

குயிலுவர், நரப்புக் கருவி கொளற்கு உரியோர்.
(1 பெயர்) 58

**தொழில் செய்வோர் பெயர்**

தொழுவர், கம்மியர், தொழில் செய்வோரே.
(2 பெயர்கள்) 59

**புதியோர் பெயர்**

அதிதியர், வம்பலர், புதியோர் (ஆகும்).
(2 பெயர்கள்) 60

**மீகாமன் பெயர்**

நீகான், மரக் கலன், மீகாமன் (ஆகும்).
(2 பெயர்கள்) 61

**அயலோர் பெயர்**

நொதுமலர், வம்பலர், அயலோர் (ஆகும்).
(2 பெயர்கள்) 62

**வழிச் செல்வோர் பெயர்**

பதிகர், (என்ப) வழிச் செல்வோரே.(1 பெயர்) 63

**அடிமையின் பெயர்**

ஆளும், தொழும்பும், அடிமை (ஆகும்).
(2 பெயர்கள்) 64

**மடையர் பெயர்**

வாலுவர், கூவியர், மடையர் (ஆகும்).
(2 பெயர்கள்) 65

**ஏவல் செய்வோர் பெயர்**

சிலதர், சிலதியர், சேடர், சேடியர்,
பரிசனம், உழையோர், ஏவல் செயற்பாலோர்.
(6 பெயர்கள்) 66

**தூதர் பெயர்**

வினை உரைப்பாரும், வழி உரைப்பாரும்,
(அனைய) பண்பு உரைப்பாரும், தூதர்.
(3 பெயர்கள்) 67

**ஒற்றர் பெயர்**

சாரணர், உசாவே, ஒற்று (எனச் சாற்றுவர்).
(2 பெயர்கள்) 68

**வெறியாட்டாளன் பெயர்**

வேலன், முருகன், வெறியாட்டாளன்,
தேவராளன், படிமத்தோனே. (4 பெயர்கள்) 69

**செவிடர் பெயர்**

செவிடர், வதிரர். (1 பெயர்) 70

**முடவன் பெயர்**

முடவன், பங்கு. (1 பெயர்) 71

**அலியின் பெயர்**

பேடர், பேடியர், பெண்டகர், பெண்டர் (என்று)
(ஆகிய நான்கும்) அலிப் (பெயர் ஆகும்).
(4 பெயர்கள்) 72

**ஊமையின் பெயர்**

மூகையும், மூங்கையும், ஊமை (ஆகும்).
(2 பெயர்கள்) 73

**குருடர் பெயர்**

ஆதர், அந்தர், அந்தகர், குருடர். (3 பெயர்கள்) 74

**கூனின் பெயர்**

கூனே, கோணல் (ஆம் எனக் கூறுவர்).
(1 பெயர்) 75

**குறளின் பெயர்**

சிந்தே, குஞ்சம், குறளே, வாமனம்.
(3 பெயர்கள்) 76

**கீழ் மக்கள் பெயர்**

கயவர், கனிட்டர், பூரியர், நீசர்,
சுமடர், பேதையர், தீயோர், மூடர்,
புல்லார், தேரார், கலர், பொறி அற்றார்,
சீத்தையர், சிறுமையர், கையர், கண்டகர்,
மூர்க்கர், தீம்பர், மூகர், முசுண்டர் (என்று
ஆக்கிய பெயர்) கீழ் மக்கட்கு (ஆகும்).
(20 பெயர்கள்) 77

**அறிவிலான் பெயர்**

முழு மகன், சிதடன், இழுதை, மூடன்,
மண்ணை, மடன், பேதை, குதலை, அஞ்ஞை,
அஞரே, ஆதன், ஏழை, அறிவிலான்.
(12 பெயர்கள்) 78

**தரித்திரர் பெயர்**

ஆதுலர், வறியோர், இல்லோர், எளியர்,
உறு கணாளர், நல் கூர்ந்தோர், தரித்திரர்.
(6 பெயர்கள்) 79

**துயர் உறுவோர் பெயர்**

ஆர்த்தர், துயர் உறுவோர். (1 பெயர்) 80

**திருடர் பெயர்**

கரவடர், சோரர், கள்வர், பட்டிகள்,
தேனர், புரையோர், திருடர் (ஆகும்).
(6 பெயர்கள்) 81

**உரியோர் பெயர்**

கிழவர், உரியோர். (1 பெயர்) 82

**மூதுணர்ந்தோர் பெயர்**

முதுவர், மூதுணர்ந்தோர். (1 பெயர்) 83

**வல்லாளன் பெயர்**

வயவன், மீளி, வல்லாளன்னே. (2 பெயர்கள்) 84

**திறலோன் பெயர்**

விறலோன், விடலை, திறலோன் (பெயரே).
(2 பெயர்கள்) 85

**நகர்ப் பதி வாழ்நர் பெயர்**

நகர்ப் பதி வாழ்நர் சதுரர், நாகரிகர்.
(2 பெயர்கள்) 86

**தூர்த்தர் பெயர்**

விடரே, காமுகர், மிகு போகம் விழையுநர்,
படிற்றொழுக்கர், காமத்துப் பாலோர், தூர்த்தர்.
(5 பெயர்கள்) 87

**கட்டிளமையோன் பெயர்**

குமரன், காளை, மழவன், சேடன்,
முருகன், கட்டிளமையோன் (என மொழிப).
(5 பெயர்கள்) 88

**ஏவுவான் பெயர்**

வியவன், ஏவுவான். *(1 பெயர்)* 89

**புகழாளன் பெயர்**

இயவுள், புகழாளன். *(1 பெயர்)* 90

**கரியோன் பெயர்**

கள்வன் (என் கிளவி), கரியோன் (என்ப).
*(1 பெயர்)* 91

**கொண்டோற் பிழைத்துப் பெறும் புதல்வன் பெயர்**

கொண்டோற் பிழைத்துப் பெறும் புதல்வன்,
குண்டகன்.
*(1 பெயர்)* 92

**கைம்மையிற் பெறும் புதல்வன் பெயர்**

(கோளில்) கைம்மையிற் பெறும் புதல்வன்,
கோளகன்.
*(1 பெயர்)* 93

**கன்னியிற் பெறும் புதல்வன் பெயர்**

கன்னியிற் பெறும் புதல்வன், கானீனன் (ஆகும்).
*(1 பெயர்)* 94

**குலம் உள்ளோர் பெயர்**

குலீனர் (என்ப), குலம் உள்ளோரே. *(1 பெயர்)* 95

**வல்லோன் பெயர்**

வலவை, வல்லுநன், வல்லோன் (பெயரே).
*(2 பெயர்கள்)* 96

**வல்லுநர் அல்லோர் பெயர்**

வல்லார், மாட்டாதார், வல்லுநர் அல்லோர்.
*(2 பெயர்கள்)* 97

**கூவ நூலோர் பெயர்**

உல்லியர், கூவ நூல் உரை உணர்வோர்.
*(1 பெயர்)* 98

**கவிகள் பெயர்**

நாவலர், கற்றோர், பாவலர், கவிகள்.
*(3 பெயர்கள்)* 99

**கடிகை மாக்கள் பெயர்**

மங்கலப் பாடகர், எட்டர், கடிகை மாக்கள்.
*(2 பெயர்கள்)* 100

**கூத்தர் பெயர்**

கோடியர், பொருநர், நாடகியர், நிருத்தர்,
கண்ணுளர், வயிரியர், வினைஞர், நடர் (என்று
எண்ணிய பெயர்கள்) கூத்தர்க்கு (எய்தும்).
*(8 பெயர்கள்)* 101

**புகழ்வோர் பெயர்**

மாகதர், வந்தியர், சூதர், வேதாளியர்,
பூகதர், பப்புவர், புகழ்வோர் (பெயரே).
*(6 பெயர்கள்)* 102

**தேர்ப் பாகர் பெயர்**

சூதரும், வலவரும், தேர்த் தொழில் பாகர்.
*(2 பெயர்கள்)* 103

**யானைப் பாகர் பெயர்**

ஆதோரணர், வாதுவர், யானைப் பாகர்.
*(2 பெயர்கள்)* 104

**குதிரை வடிப்போர் பெயர்**

வாதுவர், பரிமா வடிப்போரும் (ஆகும்).
*(1 பெயர்)* 105

**இரப்போர் பெயர்**

இரவலர், இரவோர், பரிசிலாளர்,
யாசகர், (என்று இவை) இரப்போர் (பெயரே).
*(4 பெயர்கள்)* 106

**வரையாது கொடுப்போர் பெயர்**

வரையாது கொடுப்போர், வள்ளியோர் (ஆகும்).
*(1 பெயர்)* 107

**தானைத் தலைவர் பெயர்**

மானவர், வீரர், மறவர், பொருநர்,
(ஆன) கலியர், மண்டர், மள்ளர்,
(ஏனை) வாள் உழவர், ஏருளர், கூளியர்,
தானைத் தறுகண்ணாளர் (தம் பெயரே).
*(10 பெயர்கள்)* 108

**பகைஞர் பெயர்**

தரியலர், தெவ்வர், மேவலர், செறுநர்,
கருதலர், சேரலர், இரிஞர், ஒன்னார்,
ஒல்லார், அரிகள், நள்ளார், அமரார்,
ஒட்டார், புல்லார், நேரார், நிகரார்,
ஒட்டலர், நேரலர், இகலோர், எதிர்ந்தோர்,
விட்டவர், மாற்றலர், முனைந்தோர், (என்று ஆங்கு
ஒட்டிய பிறவும்) பகைஞர் (என்று உரைப்பர்).
*(23 பெயர்கள்)* 109

**மேவினர் பெயர்**

ஒல்லுநர், துன்னுநர், ஒட்டுநர், ஒன்றுநர்,
நள்ளுநர், தொடர்ந்தோர், மேவினர் (நாமம்).
*(6 பெயர்கள்)* 110

**உறவின் பெயர்**

ஒக்கல், சுற்றம், உறவு, கிளை, கேள்,
நட்பு, மேவினர், சார்ந்தவர், உற்றோர்,

பந்தம், கூளி, கடும்பு, குடும்பம்,
(நந்) தமர், சிறந்தோர், நட்டோர், பரிசனம்,
(அந்தம் இல்) உறவு (என்று அறைந்தனர் புலவர்).
(17 பெயர்கள்) 111

**ஆண் பாலின் பெயர்**

ஆடவர், மைந்தர், காளை, குமரர்,
ஆடூஉ, மாந்தர், மகன், புமான், மஞ்ஞன்,
(கூடிய) ஆண் பெயர் (ஆகக் கூறுவர்).
(9 பெயர்கள்) 112

**பெண் பாலின் பெயர்**

பேதை, அங்கனை, வனிதை, இளம் பிடி,
மாது, மடவாள், மகடூஉ, மங்கை,
மடந்தை, காரிகை, மானினி, வஞ்சனி,
மாயோள், ஆட்டி, பாவை, தெரிவை,
தையல், அரிவை, பெதும்பை, பிணா, மகள்,
(நையும் நுண் இடை) நாரி (என்று ஆங்கு
இருபதும் இரண்டும்) பெண்பாற்கு (எய்தும்).
(22 பெயர்கள்) 113

**எழு வகைப் பருவப் பெண்பால் ஆவன**

பேதை, பெதும்பை, மங்கை, மடந்தை,
அரிவை, தெரிவை, பேர் இளம் பெண் (என)
எழு வகைப் பருவப் பெண்பாற்கு (எய்தும்).
(7 பெயர்கள்) 114

**தலைவி பெயர்**

கோமாள், பெருமாட்டி, குரத்தி, ஐயை,
ஆசாள், சாமி, இறைமை யாட்டி,
அடிகள், அத்தை, தலைவி (பெயரே).
(9 பெயர்கள்) 115

**அருந் தவப் பெண் பெயர்**

பைம்மையும், கௌந்தியும், அருந் தவப் பெண்
(பெயர்).
(2 பெயர்கள்) 116

**கலன் கழி மகளிர் பெயர்**

கைம்மையும், கைனியும், கலன் கழி மகளிர்.
(2 பெயர்கள்) 117

**மலடிப் பெயர்**

மைம்மை, வந்தி, மலடிப் (பெயரே).
(2 பெயர்கள்) 118

**பொதுப் பெண் பெயர்**

பரத்தையும், கணிகையும், சூளையும், பொதுப்பெண்.
(3 பெயர்கள்) 119

**நாடகக் கணிகை பெயர்**

நடியே, கூத்தி, நாடகக் கணிகை.(2 பெயர்கள்) 120

**பாண் மகள் பெயர்**

பாடினி, விறலி, பாட்டி, மதங்கி,
பாடல் மகடூஉ, பாண்மகள் (ஆகும்).
(5 பெயர்கள்) 121

**ஆடூஉ மகடூஉப் பல பெயர்**

அணியில் பண்பில் உவமையொடு அடுத்தன
வரைவு இல் ஆடூஉ மகடூஉப் பல பெயர்
வரலாற்று முறைமையின் வந்தன கொளலே. 122

**உடன் நிகழ்வான் பெயர்**

எமி, உடன் நிகழ்வான். (1 பெயர்) 123

**தனியின் பெயர்**

தமி, தனி (ஆகும்). (1 பெயர்) 124

**குறிஞ்சி நில மக்கள்**

குறவர், கானவர், குன்றவர், புனவர்,
இறவுளர், குறிஞ்சி நில மக்கள் (பெயரே).
(5 பெயர்கள்) 125

**குறிஞ்சி நிலப் பெண்கள் பெயர்**

கொடிச்சியர், குறத்தியர், குறிஞ்சி நிலப் பெண்
(பெயர்).
(2 பெயர்கள்) 126

**குறிஞ்சிக்கு இறைவன் பெயர்**

கானக நாடன், பொருப்பன், பொருநன்,
(ஆன) மலையன், வெற்பன், சிலம்பன்,
(சிறந்த) நண்பன், (என்று இவை முதலாக்)
குறிஞ்சிக்கு இறைவன் (பெயர் எனக் கூறுவர்).
(7 பெயர்கள்) 127

**பாலை நில மக்கள் பெயர்**

மறவர், எயினர், பாலை நில மக்கள்.
(2 பெயர்கள்) 128

**பாலை நிலப் பெண்கள் பெயர்**

மறத்தியர், எயிற்றியர், வன் கட் பிணாக்கள்,
(அனைத்தும்) அந் நிலத்து அரிவையர் (பெயரே).
(3 பெயர்கள்) 129

**பாலைக்கு இறைவன் பெயர்**

மீளியும், காளையும், விடலையும், (என்று இவை)
பாலைக்கு இறைவன் (பெயர் எனக் கூறுவர்).
(3 பெயர்கள்) 130

**பாலை நில மக்கட்கும் அந் நிலத் தலைவர்க்கும் பொதுப்பெயர்**

கொலைஞர், எயினர், வனசரர், சவரர்,
சிலவர், கானவர், மாகுலவர், கிராதர்,
புளினர், மறவர், வேடர், (என்று ஆங்கு)
அனையவர் பொதுப் பெயர் (ஆதல் வேண்டும்).
(11 பெயர்கள்) 131

### முல்லை நில மக்கள் பெயர்

முல்லையாளர், கோவலர், இடையர்,
(சொல்லிய) வண்டர், பொதுவர், ஆன் வல்லோர்,
குடவர், பாலர், தொறுவர், கோவிந்தர்,
அண்டர், கோபாலர், ஆயர், அமுதர்,
(ஒன்றிய) முல்லை நிலத்தவர் (பெயரே).
*(14 பெயர்கள்)* *132*

### முல்லை நில மகளிர் பெயர்

ஆய்ச்சியர், தொறுத்தியர், பொதுவியர், குடத்தியர்,
(வாய்த்த) இடைச்சியர், முல்லை நில மகளிர்.
*(5 பெயர்கள்)* *133*

### முல்லை நிலத் தலைமகன் பெயர்

அண்ணல், தோன்றல், குறும் பொறை நாடன்,
கானக நாடகன், முல்லை நிலத் தலைமகன்.
*(4 பெயர்கள்)* *134*

### நெய்தல் நில மக்களின் பெயர்

பரதவர், நுளையர், கடலர், வலையர்,
சலவர், திமிலர், நெய்தல் நில மாக்கள்.
*(6 பெயர்கள்)* *135*

### நெய்தல் நிலப் பெண் பெயர்

நுளைச்சியர், பரத்தியர், (நுரைக்) கடற் பிணுக்கள்.
*(3 பெயர்கள்)* *136*

### நெய்தல் நிலத்து உப்பு அமைப்போர் பெயர்

அளவர், (அந் நிலத்து) உப்பு அமைப்போரே.
*(1 பெயர்)* *137*

### நெய்தல் தலைமகன் பெயர்

கொண்கன், துறைவன், மெல்லன், புலம்பன்,
(தண்) கடற் சேர்ப்பன், நெய்தல் தலைமகன்.
*(5 பெயர்கள்)* *138*

### மருத நில மக்கள் பெயர்

களமர், தொழுவர், மள்ளர், கம்பளர்,
வினைஞர், உழவர், கடைஞர், கிளைஞர், (என்று
அனைய்வை) கழனிக் கடைத்தவர் (பெய்ரே).
*(8 பெயர்கள்)* *139*

### மருத நிலப் பெண் பெயர்

உழத்தியர், கடைச்சியர், ஆற்றுக்காலாட்டியர்,
(அடுத்த) கழனிக் கடைத்த மகளிர்.
*(3 பெயர்கள்)* *140*

### மருத நிலத் தலைவன் பெயர்

ஊரன், மகிழ்நன், கிழவன், (என்று இவை
சாலி) மருதத் தலைவன் (பெயரே).
*(3 பெயர்கள்)* *141*

### மருத நிலத் தலைவி பெயர்

மனைவி, கிழத்தி, இல்லாள், இல் (என்று
அனையவை) மருதத் தலைவிக்கு (ஆகும்).
*(4 பெயர்கள்)* *142*

### முல்லைத் தலைவி பெயர்

(அனையவை) முல்லைத் தலைவிக்கும் (ஆகும்).
*(4 பெயர்கள்)* *143*

### முன் தோன்றலின் பெயர்

முன்னை, முன் இளவல், முன் தோன்றல் (ஆகும்).
*(2 பெயர்கள்)* *144*

### பின் தோன்றலின் பெயர்

பின்னை, பின் இளவல், பின் தோன்றல் (ஆகும்).
*(2 பெயர்கள்)* *145*

### சேட்டையின் பெயர்

தௌவை, முன் பிறந்தாள், சேட்டை (ஆகும்).
*(2 பெயர்கள்)* *146*

### தங்கையின் பெயர்

தங்கை, பின்னை, எங்கை (ஆகும்). *(2 பெயர்கள்) 147*

### வழித் தோன்றலின் பெயர்

மருமான், பிறங்கடை, உம்பல், வழித் தோன்றல்.
*(3 பெயர்கள்)* *148*

### இளைம் பிள்ளைகள் பெயர்

குழவியும், மகவும், குட்டனும், பிள்ளையும்,
மழவும், சேயும், இளைமைக்கு (வகுத்தனர்).
*(6 பெயர்கள்)* *149*

### பிள்ளைப் பன்மையின் பெயர்

மகாரும், சிருரும், அவர் பன்மை வழக்கே.
*(2 பெயர்கள்)* *150*

### தோழன் பெயர்

நண்பன், பாங்கன், எலுவன், கிளைஞன்,
(தங்கிய)கேள்வன், தோழன் (பெயரே).
*(5 பெயர்கள்)* *151*

### தோழன் முன்னிலையின் பெயர்

ஏடா (என்பது), தோழன் முன்னிலைப் பெயர்.
*(1 பெயர்)* *152*

### பாங்கியின் பெயர்

ஓரை, பொய்தல், இகுளை, ஆயம்,
தோழி,சேடி,இணங்கி, பாங்கி.*(7 பெயர்கள்)* *153*

### தோழி முன்னிலையின் பெயர்

எல்லாவும், ஏடியும், தோழி முன்னிலைப் பெயர்.
*(2 பெயர்கள்)* *154*

**காதலன் என்னும் பெயர்**

கணவனும், தோழனும், புதல்வனும், காதலன்.
*(3 பெயர்கள்)* *155*

**காதலி என்னும் பெயர்**

மனைவியும், தோழியும்,புதல்வியும், காதலி.
*(3 பெயர்கள்)* *156*

**துணைவன் என்னும் பெயர்**

தோழனும், கணவனும், துணைவன் (என்று ஆகும்).
*(2 பெயர்கள்)* *157*

**படையின் பெயர்**

தாரே, தண்டம், அனீகம், வருதினி,
தானை, பதாதி, பதாகினி, யூகம்,
வானி, அதிகம்,பாடி, பகுதி,
சேனை, நிதானம், (திரள்) படை (என்ப).
*(14 பெயர்கள்)* *158*

**கொடிப் படையின் பெயர்**

தார், நிரை, ஆக்கம், தூசி, கொடிப் படை.
*(4 பெயர்கள்)* *159*

**கடைக் கூழையின் பெயர்**

கூழை, சூழ்தல், கடைக் கூழை (ஆகும்).
*(2 பெயர்கள்)* *160*

**படை வகுப்பின் பெயர்**

உண்டையும், கையும், ஒட்டும், யூகமும்,
(வந்த) அணியும், படைக்கை (வகுத்தனர்).
*(5 பெயர்கள்)* *161*

**மானிடர் பொதுப் பெயர்**

மக்கள், மண்ணவர், மனிதர், நரர், (என்று
ஒத்த) மாக்கள், மானிடர் பொதுப் பெயர்.
*(5 பெயர்கள்)* *162*

**மக்கள் ஆண் பொதுப் பெயர்**

மாந்தர், மைந்தர், மக்கள் ஆண் பொதுப் பெயர்.
*(2 பெயர்கள்)* *163*

**மக்கள் பரப்பின் பெயர்**

மன்பதை, பைஞ்ஞீல், மக்கள் பரப்பே.
*(2 பெயர்கள்)* *164*

**மக்கள் கூட்டத்தின் பெயர்**

ஒரையும், பண்ணையும், ஆயமும், குழுவும்,
(கூறுப மாதோ) மக்கள் கூட்டம்.*(4 பெயர்கள்)* *165*

**உடலின் பெயர்**

சட்டகம், மெய்யே, தாவரம், பூட்சி,
அங்கம்,காயம், புதை, உறுப்பு, யாக்கை,
ஆதாரம், தேகம், உருவம், படிவம் (என்று
ஓதினர் நூலோர்) உடலின் (பெயரே).
*(13 பெயர்கள்)* *166*

**பிணத்தின் பெயர்**

அழனே, குணபம்,களேபரம்,சவம்,
பிணம் (என வைத்துப் பேசினர் புலவர்).
*(4 பெயர்கள்)* *167*

**உடல் குறையின் பெயர்**

யூபம்,கவந்தம்,மட்டை, உடல் குறை.
*(3 பெயர்கள்)* *168*

**பாதத்தின் பெயர்**

சரண், பதம், கால், அடி, கழல், தாள், பாதம்.
*(6 பெயர்கள்)* *169*

**கரட்டின் பெயர்**

பரடே, (கால் அடி மிசைத் திரள்) கரடே.
*(1 பெயர்)* *170*

**கணைக்காலின் பெயர்**

சங்கம், கணைக் கால். *(1 பெயர்)* *171*

**முழந்தாளின் பெயர்**

சானு, முழந்தாள். *(1 பெயர்)* *172*

**தொடைப் பற்றின் பெயர்**

வாமம், ஊரு, கவான், தொடைப் பற்றே.
*(3 பெயர்கள்)* *173*

**குறங்கின் பெயர்**

ஊருவும், கவானும், சோகமும், குறங்கே.
*(3 பெயர்கள்)* *174*

**அல்குலின் பெயர்**

கடிதடம், நிதம்பம், (வடிவு அகல்) அல்குல்.
*(2 பெயர்கள்)* *175*

**இடையின் பெயர்**

நுசுப்பு, மருங்குல், (நுண்) இடை (ஆகும்).
*(2 பெயர்கள்)* *176*

**மருங்குல் பக்கத்தின் பெயர்**

ஒக்கலை, மருங்குல் பக்கம் (ஆகும்).*(1 பெயர்)* *177*

**வயிற்றின் பெயர்**

குக்கி, துத்தம், உதரம், சடரம், (என்று
ஒத்த) மடி, வயின், அகடு (ஒன்றிய) வயிறே.
*(7 பெயர்கள்)* *178*

**ஆண் குறியின் பெயர்**

இலிங்கமும், கோசமும், ஆண் குறி (ஆகும்).
*(2 பெயர்கள்)* *179*

### பெண் குறியின் பெயர்

யோனியும், பகமும், பெண் குறி (ஆகும்).
*(2 பெயர்கள்)* 180

### கொப்பூழின் பெயர்

உந்தி, போகில், இலஞ்சி, இதலை,
(வந்த) நாபி, கொப்பூழ் (ஆகும்). *(5 பெயர்கள்)* 181

### மார்பின் பெயர்

அகலம், மருமம், நிறம், உரம், ஆகம், மார்பே.
*(5 பெயர்கள்)* 182

### முலையின் பெயர்

கொங்கை, சுவர்க்கம், குயம், தனம், நகிலம்,
(தங்கிய) குருக்கண், அம்மம், பயோதரம்,
(இங்கு இவை மாதர்) முலை (என விளம்புவர்).
*(8 பெயர்கள்)* 183

### முலைக் கண்ணின் பெயர்

சூசுகம், சிலீமுகம், முலைக் கண் (சொல்லும்).
*(2 பெயர்கள்)* 184

### தேமலின் பெயர்

சுணங்கு, தேமல், பொறி, உத்தி, திதலை,
(நுணங்கு) திதனி, வசந்திகை, துத்தி.
*(7 பெயர்கள்)* 185

### கைத்தலத்தின் பெயர்

அத்தம், பாணி, கரம், தோள், கைத்தலம்.
*(4 பெயர்கள்)* 186

### அகங்கையின் பெயர்

அங்கை, குடங்கை, அகங்கை (ஆகும்).
*(2 பெயர்கள்)* 187

### விரலின் பெயர்

அங்குலி, விரல் (ஆம்). *(1 பெயர்)* 188

### நகத்தின் பெயர்

உகிர், நகம் (ஆகும்). *(1 பெயர்)* 189

### தோளின் பெயர்

புயமும், மொய்ம்பும், வாகுவும், தோளே.
*(3 பெயர்கள்)* 190

### முதுகின் பெயர்

வெரிநும், வெந்நும், புறனும், முதுகே.
*(3 பெயர்கள்)* 191

### தோள் மேலின் பெயர்

சுவலும், செகிலும், நிகலமும், தோள் மேல்.
*(3 பெயர்கள்)* 192

### கழுத்தின் பெயர்

கண்டமும், கிரீவமும், களனும், மிடறும்,
கந்தரம், (ஐந்தும்) கழுத்து (எனக் கழறுவர்).
*(5 பெயர்கள்)* 193

### பிடரின் பெயர்

கயிலே, சிறுபுறம், எருத்தம், சுவல், பிடர்.
*(4 பெயர்கள்)* 194

### பிறகின் பெயர்

பிறமும், பிறக்கும், அபரமும், பிறகே.
*(3 பெயர்கள்)* 195

### முகத்தின் பெயர்

வதனம், ஆனனம், வத்திரம், முகமே.
*(3 பெயர்கள்)* 196

### உதட்டின் பெயர்

அதரம், பாலிகை, இதழே, ஓட்டம்,
முத்தம், உதடு (என மொழிந்தனர் புலவர்).
*(5 பெயர்கள்)* 197

### பல்லின் பெயர்

தந்தமும், எயிறும், தட்டமும், பல் (ஆம்).
*(3 பெயர்கள்)* 198

### எயிற்றின் பெயர்

முறுவலும், நகையும், மூரலும், எயிறு (ஆம்).
*(3 பெயர்கள்)* 199

### நகுதலின் பெயர்

நகுதற்கும் அவையே நாமம் (ஆகும்).
*(3 பெயர்கள்)* 200

### அண்ணத்தின் பெயர்

அணரி, அண்ணம். *(1 பெயர்)* 201

### கீழ்வாய்ப் புறத்தின் பெயர்

அணல், கீழ்வாய்ப்புறம். *(1 பெயர்)* 202

### உள் நாவின் பெயர்

அண்ணம், உள்நா (ஆகலும் உரித்தே).
*(1 பெயர்)* 203

### நாவின் பெயர்

தாலம், தாலு, நா (எனச் சாற்றுவர்).
*(2 பெயர்கள்)* 204

### மூக்கின் பெயர்

துண்டமும், நாசியும், கிராணமும், மூக்கே.
*(3 பெயர்கள்)* 205

**கதுப்பின் பெயர்**

கபோலம், கவுள், அனு, கொடிறு, கதுப்பே.
*(4 பெயர்கள்)* *206*

**கண்ணின் பெயர்**

நாட்டம், நயனம், நேத்திரம், விலோசனம்,
நோக்கம், தாரை, அம்பகம், பார்வை,
அக்கம், விழி, கோ, கண் (ஆகும்மே).
*(11 பெயர்கள்)* *207*

**நெற்றியின் பெயர்**

மத்தகம், இலாடம், முண்டகம், நுதல், குளம்,
நெற்றி, பாலம் (என நிகழ்த்தினரே).
*(6 பெயர்கள்)* *208*

**புருவத்தின் பெயர்**

புரூரம், பிருகுடி, நுதலே, புருவம்.
*(3 பெயர்கள்)* *209*

**காதின் பெயர்**

கன்னமும், செவியும், காதின் (பெயரே).
*(2 பெயர்கள்)* *210*

**தலையின் பெயர்**

சிரமே, சென்னி, உச்சி, முடி, நவிரம்,
கம்மே, உவ்வி, சேகரம், தலை (ஆம்).
*(8 பெயர்கள்)* *211*

**ஆண் மயிரின் பெயர்**

குஞ்சி, நவிர், உளை, குடுமி, தொங்கல்,
பங்கி, பித்தை, ஓரி, சிகை, (என்று
இங்கு இவை எல்லாம்) ஆண் மயிர் (என்ப).
*(9 பெயர்கள்)* *212*

**பெண் மயிரின் பெயர்**

கோதை, நெடுமை, கூந்தல், ஐம்பால்,
ஓதி, கூழை, பரிசாரம், கதுப்பு,
கேசம், அளகம், குழல், குரல், சுரியல்,
(பேசின்) மராட்டம், பெண் மயிர் (என்ப.)
*(14 பெயர்கள்)* *213*

**மைந்தர் மயிரின் பெயர்**

கதுப்பே, கேசம், சுரியல், மைந்தர்
மயிர்க்கும் (ஒரு வழி வருதற்கும் உரிய).
*(3 பெயர்கள்)* *214*

**பிற மயிரின் பெயர்**

ஓரி, பங்கி, உளையே, உரோமம்,
கேசம், மராட்டம், பிற மயிர் (ஆகும்).
*(6 பெயர்கள்)* *215*

**மயிர்ப் பரப்பின் பெயர்**

சிரோந்தம், உரோமம், (செறி) மயிர்ப் பரப்பே.
*(2 பெயர்கள்)* *216*

**மயிர்க் குழற்சியின் பெயர்**

கொந்தளம், அளகம், விலோதம், மயிர்க் குழற்சி.
*(3 பெயர்கள்)* *217*

**மயிர் முடியின் பெயர்**

பின்னகம், பந்தம், முடி, முச்சி, கொண்டை,
(மன்னு) சிகழிகை, குழல், சுடிகை, மௌலி,
(இன்னவை) மயிர் முடி (ஆகும் என்ப).
*(9 பெயர்கள்)* *218*

**சடையின் பெயர்**

பின்னல், சடிலம், கோடீரம், வேணி,
(மன்னும் மயிர்ச்) சடை (என வகுத்தனரே).
*(4 பெயர்கள்)* *219*

**உறுப்பின் பெயர்**

அவயவம், காத்திரம், அங்கம், உறுப்பே,
சினை (என்று உரைத்தலும் ஒருவழிச் சிவணும்).
*(4 பெயர்கள்)* *220*

**சந்தின் பெயர்**

கந்தும், கொளுத்தும், கழுத்தும், சந்து (ஆம்).
*(3 பெயர்கள்)* *221*

**இறையின் பெயர்**

(மெய்த் தகும்) இறையே, பிறங்கு (எனப் படுமே).
*(1 பெயர்)* *222*

**உடல் தழும்பின் பெயர்**

செதுகை, அங்கிதம், (செறி) உடல் தழும்பே.
*(2 பெயர்கள்)* *223*

**கழலையின் பெயர்**

அரலை, கழலை (ஆகும் என்ப). *(1 பெயர்)* *224*

**நரம்பின் பெயர்**

நாடியும், சிரையும், நரம்பின் (நாமம்).
*(2 பெயர்கள்)* *225*

**எலும்பின் பெயர்**

என்பு, அத்தி, அங்கம், எலும்பு (ஆகும்மே).
*(3 பெயர்கள்)* *226*

**தலை ஓட்டின் பெயர்**

(வெண்) தலை ஓடே, கபாலம் (ஆகும்).
*(1 பெயர்)* *227*

**கழி உடல் முழு எலும்பின் பெயர்**

கழி உடல் முழு என்பு, கங்காளம் (ஆகும்).
*(1 பெயர்)* *228*

**குடுமியின் பெயர்**

சிமையம், சிகை, சிமிலி, சிக்கம், குடுமி.
*(4 பெயர்கள்)* *229*

**உச்சியின் பெயர்**

நவிரம், சுடிகை, சூழி, உச்சி (நாமம்).
(3 பெயர்கள்) 230

**இந்திரியத்தின் பெயர்**

கரணம், பொறி, வாயில், கந்தம், இந்திரியம்.
(4 பெயர்கள்) 231

**சுவை ஒளி ஊறு ஓசை நாற்றம் அறியும் கருவிகள்**

கருவி நா, கண், மெய், செவி, மூக்கே.
(5 பெயர்கள்) 232

**சீவன் பெயர்**

சீவன் உயிர், ஆதன், சேதனன், புற்கலன்,
அணு, பசு, இயமானன், ஆன்மா.
(8 பெயர்கள்) 233

**திவாகர வரலாறு**

கற்ற நாவினன், கேட்ட செவியினன்,
முற்ற உணர்ந்த மூதறிவாளன்,
நாகரிக நாட்டத்து ஆரியன், அருவந்தை
தேரும் காட்சிச் சேந்தன் திவாகரத்து

**இரண்டாவது**
**மக்கள் பெயர்த் தொகுதி முற்றிற்று.**

## 3. விலங்கின் பெயர்த் தொகுதி

**சிங்கத்தின் பெயர்**

ஆளி, மடங்கல், அரி, கண்டீரவம்,
கேசரி, மிருக பதி, வயப் போத்து,
சீயம், வயப் புலி, பஞ்சானனம், வய மா,
(மேவிய) சிங்கம் (என விளம்பினரே).
(11 பெயர்கள்) 1

**புலியின் பெயர்**

கொடு வரி, உழுவை, குய வரி, வேங்கை,
வல்லியம், வய மா, சார்த்தூலம், வியாக்கிரம்,
புல்லு, புண்டரீகம், வய வரி, (என்று இவை
பல் பொறிப்) புலியின் (பெயர் எனப் பகர்வர்).
(11 பெயர்கள்) 2

**யானை யாளிப் பெயர்**

அறுகு, பூட்கை, யாளி, (எனவே
பெறுமே) யானை யாளி (பெயரே).(3 பெயர்கள்) 3

**யானையின் பெயர்**

தும்பி, கடிவை, புகர் முகம், தோல், கரி,
உம்பல், வய மா, பகடு, நால்வாய்,
கரிணி, குஞ்சரம், கயமே, களபம்,
மருண் மா, தந்தி, மாதங்கம், ஒருத்தல்,
களிறு, சிந்துரம், கறை அடி, எறும்பி,
வழுவை, வாரணம், வேழம், வல் விலங்கு,
நாகம், மத கயம், அத்தி, இபம், கும்பி,
போதகம், உவாவே, தூங்கல், மாதிரம்,
(மறம் மலி) கைம் மா, ஆம்பல், கோட்டு மா,
(பிறவும்) புழைக்கையோடு, யானை (ப்பெயரே).
(38 பெயர்கள்) 4

**களிற்றியானையின் பெயர்**

மத கரி, தந்தி, (வன்) களிற்றியானை.
(2 பெயர்கள்) 5

**பெண் யானையின் பெயர்**

கரேணு, பிடி, பெண் யானை (ப் பெயரே).
(2 பெயர்கள்) 6

**யானைக் கன்றின் பெயர்**

போதகம், துடியடி, கயமுனி, கன்று (ஆம்).
(3 பெயர்கள்) 7

**பிறந்த நிலப் பெயரை அடுத்து**
**யானை பெறும் பெயர்**

கிரி சரம், வன சரம், நதி சரம், (அடுத்துப்
பெறுமே) யானை பிறந்த நிலப் பெயர்.
(3 பெயர்கள்) 8

**குதிரையின் பெயர்**

துரகதம், துரங்கம், வாசி, பாய் மா,
குரகதம், கிள்ளை, கந்தருவம், கற்கி,
மண்டிலம், துரகம், மாவே, இவுளி,
(ஒண் திறல்) உன்னி, உத்தரி, கோணம்,
குந்தம், கொய்யுளை, கொக்கு, பரி, அயம்,
அச்சுவம், வய மா, புரவி, அரியோடு,
(இத்திறம்) அத்திரி, குதிரையின் (இயற் பெயர்). 9

கன வட்டம், பாடலம், கோரம், கந்துகம்,
(எனவும் பண்பு அடுத்து எண்ணவும் படுமே).
(29 பெயர்கள்) 10

**பாண்டியன் குதிரைப் பெயர்**

(அவற்றுள்) கனவட்டம், (என்பது) வழுதி ஊர் மா.
(1 பெயர்) 11

**சேரன் குதிரைப் பெயர்**

பாடலம் (என்பது), சேரன் ஊர் மா. (1 பெயர்) 12

**சோழன் குதிரைப் பெயர்**

கோரம் (என்பது), சோழன் ஊர் மா. (1 பெயர்) 13

**குறுநில மன்னர் குதிரையின் பெயர்**

கந்துகம், குறு நில மன்னர் ஊர் மா. (1 பெயர்) 14

**குதிரைக் குளம்பின் பெயர்**

குரமே, அவற்றின் குளம்பு (ஆகும்மே).
(1 பெயர்) 15

### குதிரை மார்க்கத்தின் பெயர்

மாதிகம், அவற்றின் மார்க்கம் (ஆகும்.)
(1 பெயர்) 16

### பசுவின் பொதுப் பெயர்

ஆவும், பெற்றமும், பசுவும், ஆனும்,
கோவும், குடஞ் சுட்டும், (சாதிப் பொதுப் பெயர்.)
(5 பெயர்கள்) 17

### பெண் பசுவின் பெயர்

சுரபி, தேனு, சுரை, கபிலே, சேதா,
குரமே, கோமளம், பெண்பால் (மேன).
(7 பெயர்கள்) 18

### ஆண் பசுவின் பெயர்

பாறல், புல்லம், பாண்டில், பசு, மூரி,
ஏறு, பூணி, இருலே, பெற்றம்,
எருது, சே, விடை, இடபம் (என்று இவை
கருதின்) போத்தின் பெயர் (எனக் கருதுவர்).
(13 பெயர்கள்) 19

### எருமை எனும் பெயர்

எருமைச் சாதி இரு பாற்கும் உரித்தே. 20

### எருமைப் பொதுப் பெயர்

மேதி, காரான், மகிடம், கவரி, (என்று
ஓதிய நான்கும்) எருமை (ப் பெயரே).
(4 பெயர்கள்) 21

### எருமை ஆணின் பெயர்

பகடும், கடாவும், (அவற்றின்) போத்து (ஆம்).
(2 பெயர்கள்) 22

### மலட்டு எருமையின் பெயர்

மைம்மை (என்பது), மலட்டின் (கிளவி).
(1 பெயர்) 23

### காட்டு ஆவின் பெயர்

ஆமா, கவயம், காட்டு ஆ (ஆகும்).
(2 பெயர்கள்) 24

### ஆட்டின் பொதுப் பெயர்

மறி, உதள், மோத்தை, மேழகம், வருடை,
கொறியே, தகர், கடா,கொச்சை, மேடம்,
துருவை, செம்மறி, பள்ளை, வெள்ளை,
புருவை, வற்காலி, மை, ஆடு (எனப் புகல்வர்).
(17 பெயர்கள்) 25

### துருவாட்டின் பெயர்

துருவை, கொறி, மை, துருவாடு (ஆகும்).
(3 பெயர்கள்) 26

### வெள்ளாட்டின் பெயர்

வெள்ளை, வற்காலி, மை, கொச்சை, வெள்ளாடே.
(4 பெயர்கள்) 27

### துருவாட்டு ஏற்றின் பெயர்

ஏழகம், தகரே, மேழகம், கடா (என
ஆகும்) துருவாட்டு ஏற்றின் (பெயரே).
(4 பெயர்கள்) 28

### வெள்ளாட்டு ஏற்றின் பெயர்

உதளே, செச்சை, மோத்தை, வெள்ளாட்டின்
(நிகர் இல்) ஏறு (என நிகழ்த்தவும்படுமே).
(3 பெயர்கள்) 29

### துருவாடாவது

துருவை, செம்மறியாடு (எனச் சொல்லுவர்).
(1 பெயர்) 30

### ஆட்டுக் குட்டியின் பெயர்

குட்டன், சோரன், மணங்கு, மறி, பறழ்,
குட்டிப் (பெயர் எனக் கூறினர் புலவர்).
(5 பெயர்கள்) 31

### வரையாட்டின் பெயர்

வருடை, சரபம், வரையாடு (ஆகும்).
(2 பெயர்கள்) 32

### கவரி மாவின் பெயர்

மானமா, பட்டம், எகினம், அன்னம்,
(ஊனம் இல்) கவரிமா (என உரைப்பர்).
(4 பெயர்கள்) 33

### கழுதையின் பெயர்

கத்தபம், கோகு, வேசரி, கழுதை,
அத்திரி, கரம், வாலேபமும் (ஆகும்).
(6 பெயர்கள்) 34

### பன்றியின் பெயர்

இருளி, கனலி, ஏனம், சூகரம்,
கருமா, மோழல், வல்லுளி, கேழல்,
(வன் திறல்) வராகம், எறுழி, கோலம்,
(ஒன்றிய) களிறு, (இவை) பன்றி (ஆகும்).
(12 பெயர்கள்) 35

### மருட்டுப் பன்றியின் பெயர்

கிருட்டி, போத்து, கோலம், கிரி, கிடி,
மருட்டுப் பன்றிக்கு (மாட்சிப் பெயரே).
(5 பெயர்கள்) 36

### முட் பன்றியின் பெயர்

எய்யே, முள் மா, சல்லியம், முட் பன்றி.
(3 பெயர்கள்) 37

**மானின் பெயர்**

சாரங்கம், நவ்வி, மறி, பிணை, அரிணம்,
உழை, (எனச் சொல்லிய ஆறும்) மானின் (பெயர்).
(6 பெயர்கள்) 38

**மான் ஏற்றின் பெயர்**

இரலையும், கலையும், அவற்றின் ஏறு (ஆம்).
(2 பெயர்கள்) 39

**புல்வாயின் பெயர்**

இரலை, புல்வாய் (ஆகலும் உரித்தே).(1 பெயர்) 40

**பூனையின் பெயர்**

விலாளம், பவனம், வெருகு, விடருகம்,
பூசை, பாக்கன், மார்ச்சாலம், பூனை.
(7 பெயர்கள்) 41

**ஆண் பூனையின் பெயர்**

விலாளமும், கடுவனும், வெருகும், ஆண் (பெயர்).
(3 பெயர்கள்) 42

**கரடியின் பெயர்**

உளியம், எண்கு, பல்லம், கரடி,
குடாவடி (என்றும் கூறவும் படுமே).
(4 பெயர்கள்) 43

**நரியின் பெயர்**

இகலன், சம்பு, கோமாயு, நரியே.(3 பெயர்கள்) 44

**ஓரியின் பெயர்**

இகலன், ஓரி (என்றும் ஆகும்). (1 பெயர்) 45

**கீரியின் பெயர்**

நகுலம், காத்திரம், தீர்வை, கீரி. (3 பெயர்கள்) 46

**முயலின் பெயர்**

சசம், முயல் (என்று சாற்றப்படுமே).(1 பெயர்) 47

**கத்தூரியின் பெயர்**

மறுவி, நாவி, மான்மதம், துருக்கம்,
நரந்தம், நானம், மறி, கத்தூரி. (7 பெயர்கள்) 48

**குரங்கின் பெயர்**

அரியே, கோகிலம், கடுவன், கோடரம்,
கவியே, யூகம், மந்தி, மர்க்கடம்,
நிரந்தரம், வானரம், (என்று இவை பத்தும்)
குரங்கின் (பெயர் எனக் கூறல் வேண்டும்).
(10 பெயர்கள்) 49

**பெண் குரங்கின் பெயர்**

மந்தி, யூகம், (மற்று) அதன் பெண் (பெயர்).
(2 பெயர்கள்) 50

**கருங்குரங்கின் பெயர்**

காருகம், யூகம், கருங் குரங்கின் (பெயர்).
(2 பெயர்கள்) 51

**முசுவின் பெயர்**

ஓரியும், கலையும், கடுவனும், முசுவே.
(3 பெயர்கள்) 52

**நாயின் பெயர்**

எகினன், சூரன், முடுவல், சுணங்கன்,
ஞமலி, குக்கல், ஞாளி, சுவா, நாய்.
(8 பெயர்கள்) 53

**பெண் நாயின் பெயர்**

முடுவல், பெண் நாய் (ஆகலும் உரித்தே).
(1 பெயர்) 54

**உடும்பின் பெயர்**

உடும்பே, முசலிகை, கோதா (ஆகும்).
(2 பெயர்கள்) 55

**அணிலின் பெயர்**

வெளிலே, அணில் (ஆம் என விளம்பினரே).
(1 பெயர்) 56

**ஓந்தியின் பெயர்**

எழில், தண்டு, கோம்பி, ஓந்தி (என்று இசைப்பர்).
(3 பெயர்கள்) 57

**பச்சோந்தியின் பெயர்**

பச்சோந்தி, காம ரூபிப் (பெயரே). (1 பெயர்) 58

**மூஞ்சூறின் பெயர்**

சுண்டன், சூறன், சுசுந்தரி, மூஞ்சூறு.
(3 பெயர்கள்) 59

**எலியின் பெயர்**

சிகரி, எலி, இரும்பன். (2 பெயர்கள்) 60

**காரெலியின் பெயர்**

கருப்பை, காரெலி. (1 பெயர்) 61

**பெருச்சாளியின் பெயர்**

ஆகு, மூடிகம், (ஆம்) பெருச்சாளி.
(2 பெயர்கள்) 62

**ஒருசார் விலங்கு ஏற்றின் பெயர்**

களிறும், மாவும், ஒருத்தலும், ஏறும்,
போத்தும், பகடும், கலையும், உம்பலும்,
கடுவனும், சேவலும், தகரும், ஏட்டையும்,
ஒருசார் விலங்கின் ஏற்றிற்கு (உரிய).
(12 பெயர்கள்) 63

**மேல் சொல்லியவற்றுள் களிறு என்னும் பெயர்**

*(அவற்றுள்)*
*வேழமும், கேழலும், (விதந்து) களிறு (என்ப).*
*(2 பெயர்கள்) 64*

**மா என்னும் பெயர்**

*குதிரையும், யானையும், பன்றியும், மாவே.*
*(3 பெயர்கள்) 65*

**ஒருத்தல் என்னும் பெயர்**

*புலி, உழை, புல்வாய், மரையே, எருமை,*
*கவரி, யானை, பன்றி, கரடி,*
*(உரிய ஆகும்) ஒருத்தல் (பெயர்க் கொடை).*
*(9 பெயர்கள்) 66*

**ஏறு எனும் பெயர்**

*கவரி, பன்றி, மரை, உழை, புல்வாய்,*
*எருமை, பெற்றம், சுறவு, ஏறு (எனப்படுமே).*
*(8 பெயர்கள்) 67*

**போத்து எனும் பெயர்**

*புலியே, மரையே, புல்வாய், பெற்றம்,*
*எருமை, (என்று இவற்று ஏற்றைப்) போத்தே. 68*

*பூனையும், நீர் வாழ் சாதியும், போத்தே. 69*

*குதிரை (ஆணும்), போத்து (எனப்படுமே).*
*(8 பெயர்கள்) 70*

**பகடு எனும் பெயர்**

*யானை, பெற்றம், எருமை (ஏற்றைத்*
*தானே) பகடு (என்று உரைக்கத் தகுமே).*
*(3 பெயர்கள்) 71*

**கலை எனும் பெயர்**

*மானே, முசுவே, கலை (யொடு வருமே).*
*(2 பெயர்கள்) 72*

**உம்பல் எனும் பெயர்**

*யானையும், யாட்டின் ஏற்றையும், உம்பல்.*
*(2 பெயர்கள்) 73*

**கடுவன் எனும் பெயர்**

*குரங்கும், வெருகும், கடுவன் (என்ப).*
*(2 பெயர்கள்) 74*

**சேவல் எனும் பெயர்**

*கோழியும், அன்னமும், சேவல் (ஆகும்).*
*(2 பெயர்கள்) 75*

**தகர் எனும் பெயர்**

*சுறவு, களிறு, ஆளி, துருவாட்டு ஏற்றை,*
*தகர் (எனும் நாமம் தக்கது என்ப).(4 பெயர்கள்) 76*

**ஏட்டை எனும் பெயர்**

*எருமைப் பகடும், வெருகின் ஏற்றையும்,*
*(வருப) ஏட்டை (என வகுத்தனரே). (2 பெயர்கள்) 77*

**சே எனும் பெயர்**

*எருமை, புல்வாய் ஏற்றை, சேவும்,*
*துருவாடு ஏறும், வெருகும், போத்து*
*ஒருசார் விலங்கின் ஏற்றிற்கு (உரிய).*
*(5 பெயர்கள்) 78*

**ஒருசார் விலங்கின் பெண் பெயர்**

*பெட்டையும், பிணையும், பிணவும், ஆனும்,*
*நாகும், மூடும், கடமையும், பாட்டியும்,*
*மந்தியும், ஒருசார் விலங்கின் பெண் (பெயர்).*
*(9 பெயர்கள்) 79*

**அவற்றுள் பெட்டை எனும் பெயர்**

*(அவற்றுள்),*
*ஒட்டகம், குதிரை, கழுதை, மரை, (இவை)*
*பெட்டை (என்னும் பெயர்க் கொடை பெறுமே).*
*(4 பெயர்கள்) 80*

**பிணை எனும் பெயர்**

*புலி, உழை, புல்வாய், கவரி, (என்று இவை)*
*பிணை (எனும் பெயரில் பேசப்படுமே).*
*(4 பெயர்கள்) 81*

**பிணா எனும் பெயர்**

*பன்றி, புல்வாய், நாய், (என மூன்றும்)*
*(பின்றுக் காட்சிப்) பிணவொடு (வருமே).*
*(3 பெயர்கள்) 82*

**ஆன் எனும் பெயர்**

*எருமையும், பசுவும், மரையும், (என்ன*
*வருபவை மூன்றும்) ஆன் (எனப்படுமே).*
*(3 பெயர்கள்) 83*

**நாகு எனும் பெயர்**

*மரையும், பெற்றமும், எருமையும், நாகே. 84*

*(நீர் வாழ் சாதியுள்) நந்தும் நாகே. (4 பெயர்கள்) 85*

**மூடு எனும் பெயரும் கடமை எனும் பெயரும்**

*மூடும், கடமையும், ஆடு (அல பெறு).*
*(2 பெயர்கள்) 86*

**பாட்டி எனும் பெயர்**

*பாட்டி (என்ப), பன்றியும், நாயும். (2 பெயர்கள்) 87*

**மந்தி எனும் பெயர்**

*குரங்கும், ஊகமும், முசுவும், (என்று இவை*
*வருங்கால் பெண் பெயர்) மந்தி (என்று ஆகும்).*
*(3 பெயர்கள்) 88*

**பிணை எனும் பெயர்**

ஆனை, குதிரை, ஒட்டகம், கழுதை,
(ஆன) பிணை (என்று அறைதற்கும் உரிய).
*(4 பெயர்கள்)* 89

**பாட்டி எனும் பெயர்**

நரியின் பாட்டி நடைபெற்று இயலும்
ஒருசார் விலங்கின் பெண் (பெயர்க்கு உரைப்பர்).
*(1 பெயர்)* 90

**பெண் எனும் பெயர்**

பெண்பால் எவையும், பெண் (எனப்படுமே).
*(1 பெயர்)* 91

**பிணா எனும் பெயர்**

பெண்பால் எவையும், பிணா (என்ப ஒருசார்).
*(1 பெயர்)* 92

**ஆண் எனும் பெயர்**

ஆண்பால் எவையும், ஆண் (எனப்படுமே).
*(1 பெயர்)* 93

**போதகம் எனும் பெயர்**

அரிமா, யானை, புலியே, (அனைய
இனைய ஏற்றைப்) போதகம் (என்ப).
*(3 பெயர்கள்)* 94

**விலங்கின் பிள்ளை பெறும் பெயர்**

குருளையும், குட்டியும், பறழும், பார்ப்பும்,
பிள்ளையும், மறியும், கன்றும், குழவியும்,
(பெறுமே) விலங்கின் பிள்ளைப் (பெயரே).
*(8 பெயர்கள்)* 95

**குருளை - பறழ் என்னும் பெயர்**

(அவற்றுள்),
புலியே, பன்றி, முயல், நாய், நரியே,
குருளை, பறழ் (எனக் கூறினர் புலவர்).
*(6 பெயர்கள்)* 96

**பிள்ளை என்னும் பெயர்**

பிள்ளைப் (பெயரே), நாய் (அன்றிப் பெறுமே).
*(1 பெயர்)* 97

**மறி எனும் பெயர்**

ஆடு, மான், குதிரை, அழுங்கு, மறி (என்ப).
*(4 பெயர்கள்)* 98

**குழவி, மகவு, குட்டி, பிள்ளை, பறழ், பார்ப்பு, என்னும் பெயர்கள்**

குழவியும், மகவும், குட்டியும், பிள்ளையும்,
பறழும், பார்ப்பும் (பகரப்படுமே)
குரங்கு, முதலாயின கோடு வாழ் விலங்கே.
*(6 பெயர்கள்)* 99

**கன்று எனும் பெயர்**

கடமையும், யானையும், குதிரையும், கழுதையும்,
மரையும், எருமையும், மானும், ஒட்டகமும்,
கவரியும், கராமும், கன்று (எனப்படுமே).
*(10 பெயர்கள்)* 100

**குழவி எனும் பெயர்**

யானையும், கடமையும், எருமையும், மரையும்,
மானும், குழவிப் (பெயரோடு அடையும்).
*(5 பெயர்கள்)* 101

**பறழ் - குட்டி - என்னும் பெயர்**

வெருகே, மூங்கா, அணில், இம் மூன்றும்
பறழே, குட்டிப் (பால ஆகும்). *(3 பெயர்கள்)* 102

**குருளை - கன்று - குழவி - எனும் பெயர்கள்**

குருளையும், கன்றும், ஆனின் (கொளலும்)
குழவியும், குருளையும், முசுவின் (பெறலும்,)
(ஒரு சார் விலங்கின் பிள்ளைப் பெயரே).
*(5 பெயர்கள்)* 103

**பிள்ளை - பார்ப்பு - எனும் பெயர்கள், ஏற்றை எனும் பெயர்**

பிள்ளையும், பார்ப்பும், தவழ் சாதி (பெறுமே)
நந்தின் ஏற்றையும், அரவின் குருளையும்
(வந்துழி ஒருசார்) வழங்குதற்கு (உரிய). 104

**விலங்கின் பொதுப் பெயர்**

மாவும், மானும், விலங்கின் பொதுப் பெயர்.
*(2 பெயர்கள்)* 105

**காலியினம் - அல்லது - பசுக் கூட்டத்தின் பெயர்**

காலி இனம், நிரை, தொறுவும் (ஆகும்).
*(2 பெயர்கள்)* 106

**விலங்கின் கூட்டத்தின் பெயர்**

கணமும், சாலமும், வியூகமும், குலமும்,
விருந்தமும், கூட்டம் எனப் பெயர் பெறுமே
(வந்துழி பெறுதற்கு உரிய என்ப).
*(5 பெயர்கள்)* 107

**வால் உறுப்பின் பெயர்**

வாலதி, தோகை, கூலம், இலாங்கூலம்,
வால் உறுப்பாக (மதித்தனர் புலவர்).
*(4 பெயர்கள்)* 108

**வால் கீழ் இடத்தின் பெயர்**

வெருகம் (என்பது), வால் கீழ் இடம் (ஆம்).
*(1 பெயர்)* 109

**யானைச் செவியின் பெயர்**

யானைச் செவியே, கன்ன தாலம். *(1 பெயர்)* *110*

**யானை முதுகின் பெயர்**

மஞ்சு, முதுகு (என வகுத்தனர் புலவர்).
*(1 பெயர்)* *111*

**யானை வாலின் பெயர்**

வால், தால வட்டம் (ஆகும் என்ப). *(1 பெயர்)* *112*

**யானை மதத்தின் பெயர்**

கடமும், தானமும், மதம் (ஆகும்மே).
*(2 பெயர்கள்)* *113*

**மதம் பாய் கவுள் சுவட்டின் பெயர்**

கரடம், மதம் பாய் கவுள் சுவடு (ஆகும்).
*(1 பெயர்)* *114*

**மும் மதம் ஆவன**

கன்ன மதம், கோச மதம், கைம் மதம், மூவகையே.
*(3 பெயர்கள்)* *115*

**(யானைத்) தாளின் பெயர்**

காத்திரம், அங்கிதம், தாள் (ஆகும்மே).
*(2 பெயர்கள்)* *116*

**குதிரை வாயினும் யானைக் கையினும்
உமிழ் நீரின் பெயர்**

இவுளி வாயினும், யானைக் கையினும்,
உமிழ் நீர் விலாழி (என்று உரைக்கத் தகுமே).
*(1 பெயர்)* *117*

**எருத்தின் முரிப்பின் பெயர்**

இமிலே, ஏற்றின் (திரள்) முரிப்பு (ஆகும்).
*(1 பெயர்)* *118*

**பசு - முலை மேல் திரள் சுரப்பு வடிவின் பெயர்**

செருத்தல், முலை மேல் திரள் சுரப்பு வடிவே.
*(1 பெயர்)* *119*

**பசு முலையின் பெயர்**

சுரை, (என் பெயரே) முலையிற்கு (ஆகும்).
*(1 பெயர்)* *120*

**கொம்பின் பெயர்**

கோடும், மருப்பும், உலவையும், கொம்பே.
*(3 பெயர்கள்)* *121*

**தோலின் பெயர்**

வடகம், கிருத்திமம், சருமம், துவக்கு,
பச்சை, புறணி, உரி, போர்வை, அதள்,
(ஒத்த) துருத்தியொடு, (பத்தும்) தோலே.
*(10 பெயர்கள்)* *122*

**ஊனின் பெயர்**

தசை, தடி, விடக்கு, தூ, வள்ளூரம்,
பிசிதம், புலால், புண், புலவும், ஊனே.
*(9 பெயர்கள்)* *123*

**ஆவின் இறைச்சியின் பெயர்**

ஆவின் இறைச்சி, வள்ளூரம் (ஆகும்).
*(1 பெயர்)* *124*

**உதிரத்தின் பெயர்**

எருவை, செந்நீர், இரத்தம், புண் நீர்,
குருதி, சோரி, நெய்த்தோர், சுடுவன்,
கறை, சோணிதம், (என ஈர் ஐங் கிளவியும்)
உதிரம் (என்ப உணர்ந்திசினோரே).
*(10 பெயர்கள்)* *125*

**நிணத்தின் பெயர்**

நெய்யும், இழுதும், விழுக்கும், நிணப் பெயர்.
*(3 பெயர்கள்)* *126*

**முடையின் பெயர்**

பூதி, ஊழ்த்தல், தசை, புலவு, முடையே.
*(4 பெயர்கள்)* *127*

**சூலின் பெயர்**

பீளும், சினையும், கருவும், சூலே. *(3 பெயர்கள்)* *128*

**பாம்பின் பெயர்**

அரவே, நாகம், அங்கதம், புயங்கம்,
உரகம், மராளம், அரி, அகி, போகி,
பன்னகம், கட்செவி, பணி, வியாளம், பாம்பே.
*(13 பெயர்கள்)* *129*

**பெரும் பாம்பின் பெயர்**

பாந்தள், மாசுணம், பெரும் பாம்பு (ஆகும்).
*(2 பெயர்கள்)* *130*

**பாம்பின் படத்தின் பெயர்**

பையும், பணமும், பாம்பின் படமே.
*(2 பெயர்கள்)* *131*

**பாம்பின் படப் பொறியின் பெயர்**

உத்தியும், துத்தியும், உரக படப் பொறி.
*(2 பெயர்கள்)* *132*

**நஞ்சின் பெயர்**

கடுவே, ஆலம், காள கூடம், விடம்,
காளம், கரளம், காரி, நஞ்சே. *(7 பெயர்கள்)* *133*

**கருடன் பெயர்**

வைனதேயன், உவணன், பன்னக வைரி,
கலுழன், புள் அரசு, கருடன் (ஆகும்).
*(5 பெயர்கள்)* *134*

**கழுகின் பெயர்**

எருவையும், உவணப் புள்ளும், கழுகே.
(2 பெயர்கள்) 135

**சரபத்தின் பெயர்**

சிம்புள், வாருண்டகம், சம்பரம், துரோணம்,
(எண் கால்) சரபத்தின் (பெயர் ஆகும்மே).
(4 பெயர்கள்) 136

**பருந்தின் பெயர்**

பாறும், சேனமும், கங்கமும், பருந்தே.
(3 பெயர்கள்) 137

**சாதகப் புள்ளின் பெயர்**

வானம் பாடி, சாதகப் புள்ளே. (1 பெயர்) 138

**கேகயப் புள்ளின் பெயர்**

அசுண மாவே, கேகயப் புள்ளே. (1 பெயர்) 139

**குயிலின் பெயர்**

கோகிலம், களகண்டம், பிகம், குயில்.
(3 பெயர்கள்) 140

**செம்போத்தின் பெயர்**

குக்கில், செம்போத்து, சகோரமும், (அதற்கே).
(2 பெயர்கள்) 141

**கோழியின் பெயர்**

குக்குடம், சேவல், வாரணம், கோழி.
(3 பெயர்கள்) 142

**கூகையின் பெயர்**

கூகை, குடிஞை, குராலே, கோட்டான்.
(3 பெயர்கள்) 143

**மயிலின் பெயர்**

கேகயம், சிகண்டி, சிகியே, மயூரம்,
தோகை, மேகாரம், மஞ்ஞை, பிணி முகம்,
(ஆயின எல்லாம்) மயில் (என அறைவர்).
(8 பெயர்கள்) 144

**மயில் பீலியின் பெயர்**

தொங்கலும், கலாபமும், இறகும், கூழையும்,
இங்கு இவை மயிலின் பீலி (என்ப;
தங்கிய ஒருவழிக்) கூந்தல், (எனத் தகும்).
(5 பெயர்கள்) 145

**இறகின் அடி முள்ளின் பெயர்**

முருந்தே, இறகின் முதல் முள் (ஆகும்).
(1 பெயர்) 146

**மயில் சிகையின் பெயர்**

அனந்த மயூரம், விரி சிகை (ஆகும்).(1 பெயர்) 147

**காக்கையின் பெயர்**

காரி, வாயசம், கொடி, கரும் பிள்ளை,
(தேரின் நான்கும்) காக்கை (ஆகும்).
(4 பெயர்கள்) 148

**வலியன் பெயர்**

வலியன், பாரத்துவாசன், வயவன்.
(2 பெயர்கள்) 149

**கரிக் குருவியின் பெயர்**

கஞ்சனம், வலியன், கயவாய், கரிக் குரீஇ.
(3 பெயர்கள்) 150

**கிளியின் பெயர்**

வன்னி, தத்தை, சுகம், அரி, சுவாகதம்,
கிள்ளை, அவந்திகை, கீரம், கிளியே.
(8 பெயர்கள்) 151

**கருங் கிளியின் பெயர்**

கீரம், கிள்ளை, கருங் கிளி (ஆகும்).
(2 பெயர்கள்) 152

**புறாவின் பெயர்**

தூதுணமும், களரவமும், பாராவதமும்,
(சீர் கால்) கபோதமும், புறவு (எனப்படுமே).
(4 பெயர்கள்) 153

**மாடப் புறவின் பெயர்**

காளபதமே, மாடப் புறவு (ஆம்). (1 பெயர்) 154

**கரும் புறவின் பெயர்**

கபோதம், பாராவதம், கரும் புறவு (ஆகும்).
(2 பெயர்கள்) 155

**கவுதாரியின் பெயர்**

இதலே, பூழான், சிவல், கவுதாரி. (3 பெயர்கள்) 156

**அன்றிலின் பெயர்**

கிரவுஞ்சம், அன்றில். (1 பெயர்) 157

**ஊர்க் குருவியின் பெயர்**

சகடம், ஊர்க்குருவி. (1 பெயர்) 158

**சிவலின் பெயர்**

இதலே, பகண்டை, சிவல் (ஆகும்மே).
(2 பெயர்கள்) 159

**பகண்டையின் பெயர்**

சில்லை, பகண்டை (ஆம் எனச் செப்புவர்).
(1 பெயர்) 160

**நாகணவாய்ப் புள்ளின் பெயர்**

பூவை, சாரிகை, நாகணவாய்ப் புள். (2 பெயர்கள்) 161

**காடையின் பெயர்**

குறும்பூழ், காடையின் (பெயர் எனக் கூறுவர்).
(1 பெயர்) 162

**மீன் எறி சிறு பறவையின் பெயர்**

சிரலே, சிச்சிலி, மீன் எறி சிறு பறவை.
(2 பெயர்கள்) 163

**பறவைப் பொதுப் பெயர்**

புள்ளு, போகில், சகுனம், பிணிமுகம்,
(ஒள்ளிய) பறவைக்கு எல்லாம் பொதுப் பெயர்
பதங்கமும், ககமும், விகங்கமும் (ஆகும்).
(7 பெயர்கள்) 164

**அன்னத்தின் பெயர்**

ஓதிமம், அஞ்சம், எகினம், அன்னம்
(நீதியின்) உன்னமும் (அவ் இனப் பறவை).
(4 பெயர்கள்) 165

**அன்னச் சிறகின் பெயர்**

தூவி, அன்னச் சிறகு (எனச் சொல்லுவர்).
(1 பெயர்) 166

**சக்கரவாகத்தின் பெயர்**

நேமிப் புள்ளும், சகோரமும், (என்று இவை
ஆகும்) சக்கரவாகப் (பெயரே). (2 பெயர்கள்) 167

**பெருங் குருகின் பெயர்**

யானை உண் குருகு, பெருங் குருகு (ஆகும்).
(1 பெயர்) 168

**கொய்யடி நாரையின் பெயர்**

குருகு, வண்டானம், கொய்யடி நாரை.
(2 பெயர்கள்) 169

**பெரு நாரையின் பெயர்**

பெரு நாரை போதா, பிதாவும் (ஆகும்).
(2 பெயர்கள்) 170

**வெண் நாரையின் பெயர்**

வெண் நாரை, சாரசம். (1 பெயர்) 171

**கரு நாரையின் பெயர்**

கரு நாரை, சிகரி. (1 பெயர்) 172

**நிலாமுகியின் பெயர்**

சகோரம், பேராந்தை, (தண்) நிலாமுகியே.
(2 பெயர்கள்) 173

**நீர்க் காக்கையின் பெயர்**

கரண்டம், நீர்க் காக்கை. (1 பெயர்) 174

**சம்பங் கோழியின் பெயர்**

கம்புள், சம்பங் கோழி. (1 பெயர்) 175

**கொக்கின் பெயர்**

குரண்டமும், பகமும், கொக்கின் (பெயரே).
(2 பெயர்கள்) 176

**வண்டின் பெயர்**

அளியே, கேசரம், அறு பதம், கழுதொடு,
வரியே, சுரும்பு, கீதம், சூதம்,
அரி, மா, பிரமரம், அராபதம், வரிக்கடை,
பிரசம், தும்பி, மதுகரம், மிஞிறு,
(விரவிய) தேனீ, வண்டு (எனப்படுமே).
(18 பெயர்கள்) 177

**ஆண் வண்டின் பெயர்**

சுரும்பு, அவற்று ஆண் (எனச் சொல்லவும் படுமே)
மதுகரம், தும்பி, (ஆகவும் வைப்பர்).
(3 பெயர்கள்) 178

**இந்திர கோபத்தின் பெயர்**

ஈயல், மூதா, இந்திரகோபம். (2 பெயர்கள்) 179

**விட்டில் பறவையின் பெயர்**

பதங்கமும், சலபமும், விட்டில் பறவை.
(2 பெயர்கள்) 180

**சிள் வீட்டின் பெயர்**

சிதடி, நெடி, சில்லிகை, சிள் வீடு (ஆகும்).
(3 பெயர்கள்) 181

**நுளம்பின் பெயர்**

அஞுலமும், ஞுலவலும், நொள்ளலும், நுளம்பே.
(3 பெயர்கள்) 182

**கொசுகின் பெயர்**

மசகம், கொசுகு (என வகுத்தனர் புலவர்).
(1 பெயர்) 183

**துருஞ்சிலின் பெயர்**

துருஞ்சில், ஆலாலம். (1 பெயர்) 184

**வாவலின் பெயர்**

அஞ்சலிகை, வாவல். (1 பெயர்) 185

**சேவல் எனும் பெயர்**

மயில் ஒழித்து எல்லாப் பறவையின் ஆண் பெயர்
பயிலும் சேவல் (எனும் மொழிப் பால). 186

**போத்து எனும் பெயர்**

மயிலே, எழாலொடு, போத்து எனப்படுமே.
(2 பெயர்கள்) 187

**புள்ளின் பெண் பெயர்**

பெட்டை, பெடை, பேடை, புள்ளின் பெண் (பெயர்)
(3 பெயர்கள்) 188

**அளகு எனும் பெயர்**

கோழி, கூகை, பெண் (பெயர் அல்லன
ஆயுங் காலே) அளகு என அறையார். 189

**பார்ப்பு - பிள்ளை - எனும் பெயர்**

பார்ப்பும், பிள்ளையும், பறப்பவற்று இளமை.
(2 பெயர்கள்) 190

**பறவை முட்டையின் பெயர்**

அண்டமும், சினையும், அவற்றின் முட்டை.
(2 பெயர்கள்) 191

**வாய் அலகின் பெயர்**

துண்டமும், மூக்கும், வாய் அலகு (ஆகும்).
(2 பெயர்கள்) 192

**இறகின் பெயர்**

பறையும், தூவியும், சிறையும், பிச்சமும்,
இறகின் பெயர்; குரல், கூழை, (என்று இவை
அருகி ஒருவழி ஆகு இடன் உடைய).
(6 பெயர்கள்) 193

**புள் ஒலிக் கூட்டத்தின் பெயர்**

துழனி, புள் ஒலிக் கூட்டம் (ஆகும்). (1 பெயர்) 194

**புள் ஈட்டத்தின் பெயர்**

தொழுதி, புள் ஈட்டம். (1 பெயர்) 195

**முதலையின் பெயர்**

கிஞ்சுமாரமும், இடங்கரும், கராமும்,
(இங்கு இவை) வன் மீனும், முதலை (ஆகும்).
(4 பெயர்கள்) 196

**ஆண் முதலையின் பெயர்**

கராம், அவற்று ஆண் (எனக் கருதல் வேண்டும்).
(1 பெயர்) 197

**சுறு மீனின் பெயர்**

மகரம், சுறு மீன் (ஆக வைப்பர்). (1 பெயர்) 198

**இருல் மீனின் பெயர்**

இறவே, இருல் மீன். (1 பெயர்) 199

**கெளிற்று மீனின் பெயர்**

கெடிறு, கெளிற்று மீன். (1 பெயர்) 200

**மீன் பொதுப் பெயர்**

மயிலே, மீனம், மற்சம், மீன் பொதுப் (பெயர்).
(3 பெயர்கள்) 201

**பெரு மீனின் பெயர்**

யானை மீன், திமி, பெரு மீன் (ஆகும்).
(2 பெயர்கள்) 202

**யானை மீனை விழுங்கும் மீனின் பெயர்**

யானையை விழுங்கும் மீன், திமிங்கிலம் (என்ப).
(1 பெயர்) 203

**திமிங்கிலத்தை விழுங்கும் மீனின் பெயர்**

அம் மீனை விழுங்கும் மீன், திமிங்கிலகிலமே.
(1 பெயர்) 204

**மலங்கின் பெயர்**

(ஏனை) மலங்கு, நூறை (என்று ஆகும்).
(1 பெயர்) 205

**சங்கின் பெயர்**

நந்து, பணிலம், வளை, நாகு, சுரிமுகம்,
கம்பு, கோடு, சங்கு (எனப்படுமே).
(7 பெயர்கள்) 206

**சிறந்த சங்கின் பெயர்**

சங்கில் சிறந்தது (சாதி) வலம்புரி,
(பொங்கிய) கொக்கரை, (என்றும் புகல்வர்).
(2 பெயர்கள்) 207

**வலம்புரியில் சிறந்த சங்கின் பெயர்**

(அங்கு) அதில் சிறந்தது, சலஞ்சலம் (என்ப).
(1 பெயர்) 208

**சலஞ்சலத்தில் சிறந்த சங்கின் பெயர்**

அதிலும் சிறந்தது பாஞ்ச சன்னியம். (1 பெயர்) 209

**நத்தையின் பெயர்**

கரு நந்து, நாகு, சுரிமுகம், கூன், நத்தை.
(4 பெயர்கள்) 210

**கிளிஞ்சிலின் பெயர்**

இறல், எருந்து, ஏரல், கிளிஞ்சில் (என்ப).
(3 பெயர்கள்) 211

**சிப்பியின் பெயர்**

இப்பி, சுத்தி, சிப்பி (ஆகும்). (2 பெயர்கள்) 212

**பல்லியின் பெயர்**

புள்ளி, கெளளி, கோகிலம், பல்லி.
(3 பெயர்கள்) 213

**தவளையின் பெயர்**

அரி, மரை, நீகம், தேரை, மண்டூகம்,
(வருபவை ஐந்தும்) தவளைப் (பெயரே).
(5 பெயர்கள்) 214

**ஆமையின் பெயர்**

கச்சபம், கூர்மம், கமடம், ஆமை. (3 பெயர்கள்) 215

**பெண் ஆமையின் பெயர்**

துளி, பெண் ஆமை. (1 பெயர்) 216

**அட்டையின் பெயர்**

சளுகம், அட்டை. (1 பெயர்) 217

**ஞெண்டின் பெயர்**

அலவன், நள்ளி, குளிர், ஞெண்டு, ஆர்மதி,
களவன், (என்று இவை) கர்க்கடகப் (பெயரே).
(6 பெயர்கள்) 218

**ஆண் ஞெண்டின் பெயர்**

அலவன், ஆண் (என்று அறைதற்கும் உரித்தே).
(1 பெயர்) 219

**உளுவின் பெயர்**

உளு, உசு (ஆகும்). (1 பெயர்) 220

**எறும்பின் பெயர்**

உறவி, எறும்பே. (1 பெயர்) 221

**தேளின் பெயர்**

தெறுக்கால், பறப்பன், தேளே, விருச்சிகம்,
அலம், (என் பெயரும் தேளின் மேற்றே).
(4 பெயர்கள்) 222

**சிலந்தியின் பெயர்**

சிலம்பியும், உலூதையும், சிலந்தி (என்று ஆகும்).
(2 பெயர்கள்) 223

**நாகர வண்டின் பெயர்**

நாகர வண்டின் (நாமம்), நொள்ளை. (1 பெயர்) 224

**கறையான் பெயர்**

சிதலே, ஆழல், செல்லே, கறையான். (3 பெயர்கள்) 225

**புழுவின் பெயர்**

கிருமியும், கீடமும், புழுவின் (பெயரே).
(2 பெயர்கள்) 226

**கோல் தேனின் பெயர்**

கோல் தேன், பிரசம். (1 பெயர்) 227

**தேன் கூட்டின் பெயர்**

இறுல், தேன் கூடே. (1 பெயர்) 228

**கோற் புழுவின் பெயர்**

கோற் புழு, உலண்டு, கீடமும் (ஆகும்).
(2 பெயர்கள்) 229

காதல் ஈகையில் போதிப் பெருந் தவன்
தெவ் அடு கால வை வேல் எழிலி
அவ்வை பாடிய அம்பல் கிழவன்
தேன் தார்ச் சேந்தன் தெரி சொல் திவாகரத்து

**மூன்றுவது**
**விலங்கின் பெயர்த் தொகுதி முற்றிற்று.**

## 4. மரப் பெயர்த் தொகுதி

**தருவின் வருக்கமாவன**

சந்தானம், தேவதாரம், (தருக்) கற்பகம்,
மந்தாரம், பாரிசாதம், அவற்றின் வருக்கம்.
(5 பெயர்கள்) 1

**சந்தனத்தின் பெயர்**

சாந்தம், மலயம், சந்திர திலகம்,
(ஏய்ந்த) ஆரம், சந்து, (இவை) சந்தனம்.
(5 பெயர்கள்) 2

**அகிலின் பெயர்**

அகருவும், பூழிலும், அகில் (என அறைவர்);
(பகரின்) காக துண்டமும் (ஆகும்).
(3 பெயர்கள்) 3

**ஆச்சா மரத்தின் பெயர்**

சாலம், மராமரம், ஆவே, ஆச்சா. (3 பெயர்கள்) 4

**மகிழ் மரத்தின் பெயர்**

வகுளம், இலஞ்சி, மகிழ் மரம் (என்ப).
(2 பெயர்கள்) 5

**தேக்கின் பெயர்**

சாதி, தேக்கே. (1 பெயர்) 6

**சண்பகத்தின் பெயர்**

சம்பகம், சண்பகம். (1 பெயர்) 7

**ஆலின் பெயர்**

பூதவம், கான் மரம், வட மரம், தொன் மரம்,
(ஓதிய) பழு மரம், கோளி, ஆலே.
(6 பெயர்கள்) 8

**அரசின் பெயர்**

கணவம், பணையே, மராமரம், போதி,
அச்சுவத்தம், பிப்பிலம், அரசே. (6 பெயர்கள்) 9

**அசோகின் பெயர்**

பிண்டி, செயலை, காகோளி, அசோகு.
(3 பெயர்கள்) 10

**இரத்தியின் பெயர்**

இரத்தி, இறலி. (1 பெயர்) 11

**மருதின் பெயர்**

அருச்சுனம், மருதே. (1 பெயர்) 12

**கொன்றையின் பெயர்**

இதழி, கடுக்கை, ஆரக்குவதம், கொன்றை.
(3 பெயர்கள்) 13

**குராவின் பெயர்**

கோட்டம், குடிலம், குரா (எனக் கூறுவர்).
(2 பெயர்கள்) 14

**நாவலின் பெயர்**

சம்பு, நாவல். (1 பெயர்) 15

**வேம்பின் பெயர்**

நிம்பம், வேம்பே. (1 பெயர்) 16

**அத்தியின் பெயர்**

அத, உதும்பரம், அத்தி (ஆகும்).(2 பெயர்கள்) 17

**புளி மாவின் பெயர்**

ஆம்பிரம், சூதம், மாழை, புளிமா.
(3 பெயர்கள்) 18

**தேமாவின் பெயர்**

சூதம், சேதாரம், ஆம்பிரம், கொக்கு,
(தீது இல் மரத்து இவை) தேமா (ஆகும்).
(4 பெயர்கள்) 19

**இருப்பையின் பெயர்**

மதூகம், இருப்பை (என வகுத்தனரே).
(1 பெயர்) 20

**செருந்தியின் பெயர்**

பஞ்சரம், செங்கோடு, செருந்தி (ஆகும்).
(2 பெயர்கள்) 21

**கோங்கின் பெயர்**

துருமோற்பலம், கன்னிகாரம், கோங்கே.
(2 பெயர்கள்) 22

**பச்சிலை மரத்தின் பெயர்**

பசும் பிடி, தமாலம், பச்சிலை (ஆகும்).
(2 பெயர்கள்) 23

**வன்னியின் பெயர்**

கலிகம், சமியே, குலிசம், வன்னி.(3 பெயர்கள்) 24

**கருங்காலியின் பெயர்**

கதிரம், கருங்காலி. (1 பெயர்) 25

**எட்டியின் பெயர்**

காஞ்சிரை, எட்டி. (1 பெயர்) 26

**செங் கருங்காலியின் பெயர்**

சிறுமாரோடம், செங்கருங்காலி. (1 பெயர்) 27

**புன்னையின் பெயர்**

புன்னை, புன்னுகம். (1 பெயர்) 28

**சுரபுன்னையின் பெயர்**

வழை, சுர புன்னை. (1 பெயர்) 29

**புன முருங்கையின் பெயர்**

புன்கு, (என் கிளவி) புன முருங்கைப் (பெயர்).
(1 பெயர்) 30

**ஆத்தியின் பெயர்**

ஆரே, தாதகி, ஆத்தி (ஆகும்). (2 பெயர்கள்) 31

**மஞ்சாடி மரத்தின் பெயர்**

திலகம், மஞ்சாடி. (1 பெயர்) 32

**இலவ மரத்தின் பெயர்**

இலவம், பொங்கர். (1 பெயர்) 33

**நெல்லியின் பெயர்**

ஆமலகம், நெல்லி. (1 பெயர்) 34

**கடு மரத்தின் பெயர்**

அரிதகி, கடுமரம். (1 பெயர்) 35

**புளியின் பெயர்**

சிந்தம், சிந்துரம், (சிறந்த) ஆம்பிரம்,
(வந்த) திந்திருணி, எகினம், புளியே.
(5 பெயர்கள்) 36

**குருந்தின் பெயர்**

குருந்து, குந்தம். (1 பெயர்) 37

**வெட் பாலையின் பெயர்**

குடசம், வெட் பாலை. (1 பெயர்) 38

**குமிழின் பெயர்**

கூம்பல், கடம்பல், குமிழ் (எனக் கூறுவர்).
(2 பெயர்கள்) 39

**குடைவேலின் பெயர்**

உடை, குடைவேலே. (1 பெயர்) 40

**பாதிரி மரத்தின் பெயர்**

பாடலம், பாதிரி. (1 பெயர்) 41

**முருக்கின் பெயர்**

கவிரே, கிஞ்சுகம், முருக்கு (எனக் கருதுவர்).
(2 பெயர்கள்) 42

**தேற்றின் பெயர்**

இல்லம், தேறு (ஆம்). (1 பெயர்) 43

**விளாவின் பெயர்**

வெள்ளில், விளா (ஆம்). (1 பெயர்) 44

**வில்வத்தின் பெயர்**

கூவிளம், வில்வம், மாலூரம், கூவிளை.
*(3 பெயர்கள்)* 45

**வேங்கையின் பெயர்**

திமிசும், திமிலும், கணியும், வேங்கை.
*(3 பெயர்கள்)* 46

**கடம்பின் பெயர்**

கதம்பம், விசாலம், நீபம், கடம்பே.
*(3 பெயர்கள்)* 47

**வெண் கடம்பின் பெயர்**

மரா, வெண் கடம்பின் (பெயர் ஆகும்மே).
*(1 பெயர்)* 48

**பலாவின் பெயர்**

பனசம், வருக்கை, பலா (எனப் பகர்வர்).
*(2 பெயர்கள்)* 49

**ஈரப் பலாவின் பெயர்**

ஆசினி, ஈரப் பலா (ஆகும்மே). *(1 பெயர்)* 50

**அழிஞ்சிலின் பெயர்**

அழிஞ்சில், சேமரம், அங்கோலம் (ஆகும்).
*(2 பெயர்கள்)* 51

**மாதுளையின் பெயர்**

மாதுளம், கழுமுள், மாதுளை (ஆகும்).
*(2 பெயர்கள்)* 52

**தாது மாதுளையின் பெயர்**

தாடிமம், தாது மாதுளை (என்ப). *(1 பெயர்)* 53

**எலுமிச்சையின் பெயர்**

சம்பீரம், முருகு, எலுமிச்சை (ஆகும்).
*(2 பெயர்கள்)* 54

**நாரத்தையின் பெயர்**

நரந்தம், நாரத்தை (ஆகும் என்ப). *(1 பெயர்)* 55

**குருக்கத்தியின் பெயர்**

குருகே, மாதவி, குருக்கத்தி (ஆகும்).
*(2 பெயர்கள்)* 56

**அகத்தியின் பெயர்**

அச்சம், கரீரம், முனியே, அகத்தி. *(3 பெயர்கள்)* 57

**எருக்கின் பெயர்**

அருக்கம், எருக்கே. *(1 பெயர்)* 58

**களாவின் பெயர்**

கள, களாவே. *(1 பெயர்)* 59

**இலந்தையின் பெயர்**

இரத்தி, வதரி, இலந்தை (ஆகும்).
*(2 பெயர்கள்)* 60

**காயாவின் பெயர்**

காசை, பூவை, காயா (ஆகும்). *(2 பெயர்கள்)* 61

**ஞாழலின் பெயர்**

நறவம், சுள்ளி, நாகம், ஞாழல். *(3 பெயர்கள்)* 62

**புன்கின் பெயர்**

நத்தமாலம், புன்கு (என நவில்வர்). *(1 பெயர்)* 63

**குங்கும மரத்தின் பெயர்**

மரவம், துருக்கம், குங்குமம் (ஆகும்).
*(2 பெயர்கள்)* 64

**சதுரக் கள்ளியின் பெயர்**

வச்சிராங்கம், கண்டீர்வத்தொடு,
வச்சிரம், சதுரக் கள்ளிக்கு (வைப்பர்).
*(3 பெயர்கள்)* 65

**அனிச்சத்தின் பெயர்**

நறவம், சுள்ளி, அருப்பலம், அனிச்சம்.
*(3 பெயர்கள்)* 66

**தணக்கின் பெயர்**

நுணவு, தணக்கே. *(1 பெயர்)* 67

**ஓடையின் பெயர்**

உலவை, ஓடை. *(1 பெயர்)* 68

**ஒடுவின் பெயர்**

ஒடுவே, உடுப்பை. *(1 பெயர்)* 69

**உழிஞ்சிலின் பெயர்**

உன்னம், உழிஞ்சில். *(1 பெயர்)* 70

**சே மரத்தின் பெயர்**

எகினம், சே மரம், ஆண் மரம் (என்ப).
*(2 பெயர்கள்)* 71

**கமுகின் பெயர்**

கந்தி, பூகம், பூக்கம், கமுகே. *(3 பெயர்கள்)* 72

**பனையின் பெயர்**

பெண்ணை, தாலம், புல், தாளி, போந்தை, (என்று
எண்ணிய நாமம்) பனை (என இசைப்பர்).
*(5 பெயர்கள்)* 73

**இளம் பனையின் பெயர்**

போந்தை, இளம்பனை (ஆகவும் புகல்வர்).
*(1 பெயர்)* 74

**தெங்கின் பெயர்**

நாளிகேரம், தெங்கு, தாழை (என நவில்வர்).
(2 பெயர்கள்) 75

**மூங்கிலின் பெயர்**

காம்பு, திகிரி, கண், வேழம், சந்தி,
தூம்பு, முளே, வெதிர், விண்டு, வேரல்,
முந்தூழ், தட்டை, கீசகம், வேய், பணே,
அம்பு, வரை, வேணு, கழை, அமை, ஓங்கல்,
பாதிரி, கிளே, அரி, பாண்டில், (உள்பட
வருபவை) மூங்கில் (என வகுத்தனரே).
(25 பெயர்கள்) 76

**கரும்பின் பெயர்**

கழை, வேழம், இக்கு, கன்னல், கரும்பே.
(4 பெயர்கள்) 77

**தாழையின் பெயர்**

கண்டல், கேதகை, மடி, கைதை, முடங்கல்,
(வண்டு அமர்) தாழை (என வகுத்தனரே).
(5 பெயர்கள்) 78

**வாழையின் பெயர்**

கதலியும், அரம்பையும், வாழை (ஆகும்).
(2 பெயர்கள்) 79

**பூவாது காய்க்கும் மரத்தின் பெயர்**

கோளி, பூவாது காய்க்கும் (குளிர்) மரம். (1 பெயர்) 80

**வண்டு உணு மலர் மரமாவன**

சண்பகமும், வேங்கையும், வண்டு உணு மலர்
மரம். (2 பெயர்கள்) 81

**மரப் பொதுப் பெயர்**

பாதவம், தாரு, தருவே, தாவரம்,
(ஓதிய) மூலம், மரப் பொதுப் பெயரே.
(5 பெயர்கள்) 82

**மரச் செறிவின் பெயர்**

பொதும்பர், மரச் செறிவு. (1 பெயர்) 83

**மரப் பொதும்பின் பெயர்**

கோடரம், பொதும்பே. (1 பெயர்) 84

**நந்தன வனத்தின் பெயர்**

(தேம்) பொழில், மரக் கா, தோட்டம், துடவை,
உய்யானம், சோலே, வனம், உத்தியானம்,
தண்டலே, கானம், அடவி, (பதினொன்றும்)
(ஈண்டிய) நந்தன வனம் (என இசைப்பர்).
(11 பெயர்கள்) 85

**காட்டின் பெயர்**

கடம், வியல், பழுவம், கட்சி, குறும்பொறை,
கடறு, காந்தாரம், அடவி, கான், வனம்,
ககனம், காண்டம், கட்டம், முளரி,
சுரம், அத்தம், ஆரணியம், கானம், களரி,
சீரணி, பொச்சை, விடர், தில்லம், காடே.
(23 பெயர்கள்) 86

**இலே உதிர்ந்த முது காட்டின் பெயர்**

முதை, இலே உதிர்வு (பிறங்கிய) முது காடே.
(1 பெயர்) 87

**கரிகாட்டின் பெயர்**

பொச்சையும், சுரமும், பொதி, கரிகாடே.
(3 பெயர்கள்) 88

**காவற் காட்டின் பெயர்**

அரண், இளே, காவற் காடு (என அறைவர்).
(2 பெயர்கள்) 89

ஒரு மரம் ஒரு பெயர் உரைக்கும் கிளவி
வரைவு இல என்மனர் வள்ளியோரே. 90

**தூற்றின் பெயர்**

இறும்பே, (மிடை) தூறு. (1 பெயர்) 91

**இண்டையின் பெயர்**

இண்டை, ஈங்கை. (1 பெயர்) 92

**முள்ளுடை மூலத்தின் பெயர்**

முண்டகம், முள் உடை மூலம் (என்ப).
(1 பெயர்) 93

**முள்ளின் பெயர்**

கண்டகம், கடுவே, முள் (எனக் கருதுவர்).
(2 பெயர்) 94

**மரக் காழின் பெயர்**

ஆசினி, கரியே, அரியே, வைரம்,
சேகே, மரத்தின் காழ் (எனச் செப்புவர்).
(5 பெயர்கள்) 95

**பிரம்பின் பெயர்**

வேத்திரம், சாதி, சூரல், பிரம்பே.(3 பெயர்கள்) 96

**ஆண் மரத்தின் பெயர்**

அகக் காழ், வன் மரம், ஆண் மரம் (ஆகும்).
(அவை) கருங்காலி முதலாய் உள்ளன.
(2 பெயர்கள்) 97

**பெண் மரத்தின் பெயர்**

புறக் காழ், வன் புல், பெண் மரம் (ஆகும்).
(2 பெயர்கள்)
(அவைதாம், தெரிக்கின்) பனே, கமுகு, தெங்கு,
மூங்கில்.
(4 பெயர்கள்) 98

**அலி மரத்தின் பெயர்**

முருக்கு நார் பால் மரம் முதலாயின
வெளிறு, அலி மரம் (எனும் விகற்பம் பெறுமே).
(1 பெயர்) 99

**சிறு தூற்றின் பெயர்**

அறலே, பதுக்கை, சிறு தூறு (ஆகும்).
(2 பெயர்கள்) 100

**மருந்து எனும் பெயர்**

புல்லும், மரனும், புதலும், பூடும்,
வல்லியும், (பெயர்க் கொடை) மருந்து (எனப்படுமே).
(5 பெயர்கள்) 101

**அத்திர சத்திரம் தைத்த புண் மாற்றும் மருந்தின் பெயர்**

தைத்த அத்திரம் சத்திரம் தணிக்கும்
(மெய்த்த நன்) மருந்தே சல்லிய கரணி.
(1 பெயர்) 102

**துணிபட்ட உறுப்பினைப் பொருத்தும் மருந்தின் பெயர்**

துண்டம் ஆன உறுப்புத் துணியினைச்
சந்து செய் மருந்தே சந்தான கரணி. (1 பெயர்) 103

**விரணம் தழும்புகளை நீக்கும் மருந்தின் பெயர்**

விரணமும், தழும்பும் நீக்கி மெய்யினைத்
தகைமை செய் மருந்தே சமனியகரணி.
(1 பெயர்) 104

**உயிர் தரும் மருந்தின் பெயர்**

உயிர் தரும் மருந்தே மிருத சஞ்சீவினி.
(1 பெயர்) 105

**மரம் முதல் இளமையின் பெயர்**

பிள்ளை, குழவி, கன்று, போத்து, (எனக்
கொள்ப) மரம் முதல் இளமைப் பெயர்க் (கொடை).
(4 பெயர்கள்) 106

நெல்லும், புல்லும், நேரார் (ஆண்டே). 107

**மரக் கொம்பின் பெயர்**

பொங்கர், காம்பு, சாகை, உறுப்பு,
கோடு, பிறக்கம், சினை, பணை, உலவை,
கோடரம், விடபம், தரு, மரக் கொம்பே.
(12 பெயர்கள்) 108

**தழையின் பெயர்**

உலவை, தழையே. (1 பெயர்) 109

**இளங் கொம்பின் பெயர்**

வளார், இளங் கொம்பே. (1 பெயர்) 110

**இலையின் பெயர்**

பத்திரம், ஓலை, பாசடை, தண்ணடை,
சாகம், தமாலம், தழை, பாசிலை, அடை,
(பேசிய) பன்னம், இலை (எனப்படுமே).
(10 பெயர்கள்) 111

**தளிரின் பெயர்**

வல்லரி, குழை, முறி, மஞ்சரி, கிசலயம்,
பல்லவம், அலங்கல், கிளை, தளிர் (ஆகும்).
(8 பெயர்கள்) 112

**தளிர்த்தலின் பெயர்**

இலிர்த்தலும், சிலிர்த்தலும், குழைத்தலும், தளிர்த்தல்.
(3 பெயர்கள்) 113

**அடி வெண் குருந்தின் பெயர்**

முருந்தே, முதலில் செறி வெண் குருத்தே.
(1 பெயர்) 114

**கொத்தின் பெயர்**

தொத்தும், இணரும், துணரும், மஞ்சரியும்,
கொத்தின் (தொடர்ச்சியைக் கூறும் கிளவி).
(4 பெயர்கள்) 115

**பசுங் காயின் பெயர்**

பசுங் காய், திவிளி. (1 பெயர்) 116

**பழத்தின் பெயர்**

பலம், கனி, பழமே. (2 பெயர்கள்) 117

**பரலின் உட்படு குருத்தின் பெயர்**

பயினே, பரலின் உட்படு குருத்தே. (1 பெயர்) 118

**வெட்டுக் குருத்தின் பெயர்**

பிசினே, ஆனி, வெட்டுக் குருத்தே.
(2 பெயர்கள்) 119

**நந்தியாவர்த்தத்தின் பெயர்**

வலம்புரி, நந்தியாவர்த்தம் (ஆகும்). (1 பெயர்) 120

**கஞ்சாவின் பெயர்**

கஞ்சம், குல்லை, கஞ்சா (ஆகும்). (2 பெயர்கள்) 121

**நொச்சியின் பெயர்**

சிந்துவாரம், நிர்க்குண்டி, நொச்சி.
(2 பெயர்கள்) 122

**காந்தளின் பெயர்**

காந்துகம், தோன்றி, பற்றை, கோடல், (என்று
ஆய்ந்த நான்கும்) காந்தள் (ஆகும்).
(4 பெயர்கள்) 123

**செங் காந்தளின் பெயர்**

காந்தள், தோன்றி, பற்றை, செங்காந்தள்.
(3 பெயர்கள்) 124

**கோடை என்னும் பெயர்**

வெண் காந்தள், செங் காந்தள், (என்று இரு விகற்பமும்
கொண்டே வழங்கும்) கோடைப் (பெயரே).
(2 பெயர்கள்) 125

**ஊமத்தையின் பெயர்**

உன்மத்தம், மத்தம், ஊமத்தைப் (பெயரே).
(2 பெயர்கள்) 126

**ஆமணக்கின் பெயர்**

ஏரண்டம், ஆமணக்கு. (1 பெயர்) 127

**குறிஞ்சியின் பெயர்**

கோரண்டம், குறிஞ்சி. (1 பெயர்) 128

**அலரியின் பெயர்**

கரவீரம், அலரி, கணவீரமும் (ஆம்).
(2 பெயர்கள்) 129

**வெட்சியின் பெயர்**

செச்சை, சிந்தூரம், வெட்சி (ஆகும்).
(2 பெயர்கள்) 130

**சிறு பூளையின் பெயர்**

உழிஞை, சிறு பூளை (என உரைத்தனரே).
(1 பெயர்) 131

**பருத்தியின் பெயர்**

பரியே, பன்னல், கார்ப்பாசம், பருத்தி.
(3 பெயர்கள்) 132

**திப்பிலியின் பெயர்**

திப்பிலி, காமன், சிறு மூலகமே.(2 பெயர்கள்) 133

**துளசியின் பெயர்**

துளசி, குல்லை, துளபம், வனம், துழாய்.
(4 பெயர்கள்) 134

**மிளகின் பெயர்**

மரீசி, கறி, (இவை) மிளகு (என வைப்பர்).
(2 பெயர்கள்) 135

**மஞ்சளின் பெயர்**

மஞ்சள், அரிசனம். (1 பெயர்) 136

**கருணையின் பெயர்**

கந்தம், கருணை. (1 பெயர்) 137

**சிறு கிழங்கின் பெயர்**

சுரசம், சிறு கிழங்கு (ஆகும் என்ப).(1 பெயர்) 138

**வாசம் தரு பல பண்டத்தின் பெயர்**

தகரம், தக்கோலம், கோட்டம், சாதிக்காய்,
இலவங்கம், மாஞ்சி, கச்சோலம், ஏலம், (எனப்
பகரும்) வாசம் தரு பண்டப் பெயரே.
(8 பெயர்கள்) 139

**வெட்டி வேரின் பெயர்**

மூல கந்தம், பீதகத்தொடு,
வேரி, இரு வேலி, வெட்டிவேர் (என்ப).
(4 பெயர்கள்) 140

**இலாமிச்சையின் பெயர்**

வேர், வாசம், இலாமிச்சை மேல் (ஆகும்).
(2 பெயர்கள்) 141

**கடுகின் பெயர்**

கடிப் பகை, ஐயவி, கடுகின் (பெயரே).
(2 பெயர்கள்) 142

**கொத்து மலியின் பெயர்**

உருளரிசி, கொத்துமலி (என உரைப்பர்).
(1 பெயர்) 143

**கழங்கு - அல்லது - கழற்காயின் பெயர்**

கழங்கே, மூழல். (1 பெயர்) 144

**கழங்கின் கொடியின் பெயர்**

கொடி, கழல், (ஆகும்). (1 பெயர்) 145

**கிலுகிலுப்பையின் பெயர்**

பகன்றை, கிலுகிலுப்பை. (1 பெயர்) 146

**சேம்பின் பெயர்**

சகுடம், சேம்பே. (1 பெயர்) 147

**சிறு கீரையின் பெயர்**

சில்லி, சாகினி, சிறு கீரைப் (பெயரே).
(2 பெயர்கள்) 148

**கொத்தான் பெயர்**

நந்தை, கொத்தான், நரந்தையும், (ஆகும்).
(2 பெயர்கள்) 149

**பாற் சொற்றியின் பெயர்**

பாயசம், பாற் சொற்றி, பனசமும் (ஆகும்).
(2 பெயர்கள்) 150

**குன்றியின் பெயர்**

குருவிந்தம், குஞ்சம், குன்றிப் (பெயரே).
(2 பெயர்கள்) 151

**கொளிஞ்சியின் பெயர்**

கோளி, கொளிஞ்சி. (1 பெயர்) 152

**நாயுரீஇயின் பெயர்**

கரமஞ்சரி, நாயுரீஇ (என்ப).
(1 பெயர்) 153

**இஞ்சியின் பெயர்**

இஞ்சி, நறுமருப்பு, அல்லம் (என்ப).
(2 பெயர்கள்) 154

**கற்றுழையின் பெயர்**

குமரி, கற்றுழை (ஆகக் கூறுவர்).
(1 பெயர்) 155

**வழுதலையின் பெயர்**

வங்கம், பிருகதி, வழுதுணை, வழுதலை.
(3 பெயர்கள்) 156

**மலைச் சாரல் விளை நெல்லின் பெயர்**

ஐவனம், மலைச் சாரல் விளை நெல் (ஆகும்).
(1 பெயர்) 157

**குள நெல்லின் பெயர்**

நீவாரம், குளநெல். (1 பெயர்) 158

**செய்ந் நெல்லின் பெயர்**

சாலி, செய்ந் நெல்லே. (1 பெயர்) 159

**செந்நெல்லின் பெயர்**

செந்நெல், விரீகி, செஞ்சாலி, (ஆகும்).
(2 பெயர்கள்) 160

**(நெற்) போரின் பெயர்**

சும்மை, குவால், போர். (2 பெயர்கள்) 161

**அரிசியின் பெயர்**

அரியே, தண்டுலம், அரிசி (ஆகும்).
(2 பெயர்கள்) 162

**வேய் அரிசியின் பெயர்**

இயவை, தோரை, (எனும்) வேய் அரிசி.
(2 பெயர்கள்) 163

**சோளத்தின் பெயர்**

சொன்னலும், இறுங்கும், சோளம் (ஆகும்).
(2 பெயர்கள்) 164

**கருந் தினையின் பெயர்**

இறடி, கருந்தினை. (1 பெயர்) 165

**செந் தினையின் பெயர்**

ஏனல், செந் தினை. (1 பெயர்) 166

**உழுந்தின் பெயர்**

மாடம், உழுந்தே. (1 பெயர்) 167

**துவரையின் பெயர்**

ஆடகம், துவரை. (1 பெயர்) 168

**காராமணியின் பெயர்**

கூலம், இதை, காராமணிக் (கூற்றும்).
(2 பெயர்கள்) 169

**கடலையின் பெயர்**

மஞ்சூரம், கடலை. (1 பெயர்) 170

**பயற்றின் பெயர்**

முற்கம், பயறே. (1 பெயர்) 171

**கம்பின் பெயர்**

கவலை, புல், செந்தினை, கம்பு (ஆகும்மே).
(3 பெயர்கள்) 172

**கோதுமையின் பெயர்**

கோதி, கோதுமை. (1 பெயர்) 173

**கொள்ளின் பெயர்**

குலுத்தம், காணம், கொள் (ஆகும்மே).
(2 பெயர்கள்) 174

**வரகின் பெயர்**

வரகு, கோத்திரவம். (1 பெயர்) 175

**அவரை, துவரை முதலியவற்றின் பெயர்**

முதிரை, அவரை துவரை முதலாயின.
(1 பெயர்) 176

**விதையின் பெயர்**

பரல், காழ், வீசம், வித்து, விதையாம்.
(4 பெயர்கள்) 177

**எள்ளின் பெயர்**

எண்ணும், திலமும், எள் என இசைப்பர்.
(2 பெயர்கள்) 178

**எள் இளங் காயின் பெயர்**

கவ்வை, எள் இளங்காய் (ஆகும்மே). (1 பெயர்) 179

**கதிரின் பெயர்**

குரல், கதிர் (ஆகும்). (1 பெயர்) 180

**பதரின் பெயர்**

பதடி, பதரே. (1 பெயர்) 181

**தினைத் தாளின் பெயர்**

இருவியும், அருவியும், தினைத் தாள் (ஆகும்).
(2 பெயர்கள்) 182

**வைக்கோலின் பெயர்**

வையே, பலாலம், வைக்கோல் (ஆகும்). 183

**மற்றும் வைக்கோலின் பெயர்**

வழுதும் (ஒரோ வழி வையும் பெறுமே).
(3 பெயர்கள்) 184

**தூற்று நெற் கூட்டின் பெயர்**

பொங்கழி, தூற்று நெற் கூடு (ஆகும்).
(1 பெயர்) 185

**பயிரின் பெயர்**

பயிரே, பசும் புல், பைங் கூழ் (ஆகும்).
(2 பெயர்கள்) 186

**புல் பிறப்பின் பெயர்**

புதல், புல், (என வரு) புல் பிறப்பு (ஆகும்).
(2 பெயர்கள்) 187

**பச்சறுகின் பெயர்**

பதமும், தூர்வையும், பச்சறுகு (ஆகும்).
(2 பெயர்கள்) 188

**இளம் புல்லின் பெயர்**

சட்டம், இளம் புல்.
(1 பெயர்) 189

**தெங்கின் நார்ப் பாளையின் பெயர்**

நாரி, நெய்யரி, தெங்கின் நார்ப் பாளை.
(2 பெயர்கள்) 190

**கிழங்கின் பெயர்**

மூலம், கந்தம், கிழங்கு (என மொழிப).
(2 பெயர்கள்) 191

**கோற் கொடியின் பெயர்**

இலதை, (எனும் பெயர்) கோற் கொடிக்கு (எய்தும்).
(1 பெயர்) 192

**கொடிப் பிறப்பின் பெயர்**

கோற் கொடி, மென் கொடி, கொடியின் பிறப்பே.
(2 பெயர்கள்) 193

**கற்பகம் சேர் கொடி**

கற்பகம் சேர் கொடி, காம வல்லி.
(1 பெயர்) 194

**கொடியின் பெயர்**

வல்லியும், நூழிலும், வள்ளியும், கொடியே.
(3 பெயர்) 195

**மல்லிகையின் பெயர்**

மல்லிகை, மௌவல். (1 பெயர்) 196

**இருவாட்சியின் பெயர்**

மயிலை, இருவாட்சி. (1 பெயர்) 197

**முல்லையின் பெயர்**

மௌவலும், தளவமும், கற்பும், முல்லை.
(3 பெயர்கள்) 198

**சிறு சண்பகத்தின் பெயர்**

பித்திகை, சாதி, கரு முகை, (மூன்றும்
ஒத்த) சிறு சண்பகம் (ஆகும்மே). (3 பெயர்கள்) 199

**மௌவலின் பெயர்**

மாலதி, மௌவல் (ஆகும் என்ப). (1 பெயர்) 200

**மாலதி என்னும் பெயர்**

மாலதி, சிறு சண்பகமும் (ஆகும்). (1 பெயர்) 201

**மருக் கொழுந்தின் பெயர்**

தமனகம், மருக்கொழுந்து. (1 பெயர்) 202

**கூதாளியின் பெயர்**

துடி, கூதாளம், கூதாளி (என்ப). (2 பெயர்கள்) 203

**கொவ்வையின் பெயர்**

விம்பமும், தொண்டையும், கொவ்வைப் (பெயரே).
(2 பெயர்கள்) 204

**வள்ளையின் பெயர்**

வள்ளை, நாளிகம். (1 பெயர்) 205

**காக்கணத்தின் பெயர்**

கன்னி, கிகிணி, கருவிளை, காக்கணம்.
(3 பெயர்கள்) 206

**முந்திரிகையின் பெயர்**

மதுரசம், கோத்தனிகை, முந்திரிகை (ஆகும்).
(2 பெயர்கள்) 207

**மலைப் பச்சையின் பெயர்**

குளவி, மலைப் பச்சை. (1 பெயர்) 208

**இசங்கின் பெயர்**

குண்டலி, முத்தாபலம், இசங்கு (எனக் கூறுவர்).
(2 பெயர்கள்) 209

**வேரின் பெயர்**

சடை, தூர், சிவை, வேர். (3 பெயர்கள்) 210

**அடம்பின் பெயர்**

அடம்பு, சோபாலிகை. (1 பெயர்) 211

**விரி தூற்றின் பெயர்**

அதிரல், விரி தூறு. (1 பெயர்) 212

**பீர்க்கின் பெயர்**

பீரம், பீர்க்கு. (1 பெயர்) 213

**பெரும் பீர்க்கின் பெயர்**

பெரும் பீர்க்கு, படலிகை. (1 பெயர்) 214

**பாகலின் பெயர்**

கூலம், பாகல். (1 பெயர்) 215

**சிவேதையின் பெயர்**

சிவேதை, பகன்றை. (1 பெயர்) 216

**சீந்திலின் பெயர்**

அமுதவல்லி, சீந்தில். (1 பெயர்) 217

**காஞ் சொறியின் பெயர்**

கண்டூரம், காஞ்சொறி. (1 பெயர்) 218

**தாளியின் பெயர்**

பஞ்சிகம், தாளி. (1 பெயர்) 219

**நறையாலின் பெயர்**

பகன்றை, நறையால் (என்னவும் பகர்வர்).
(1 பெயர்) 220

**வெற்றிலையின் பெயர்**

நாக வல்லி, தாம்பூலம், வெற்றிலை.
(2 பெயர்கள்) 221

**பிரண்டையின் பெயர்**

வச்சிர வல்லி, பிரண்டை (ஆகும்).
(1 பெயர்) 222

**அவுரியின் பெயர்**

நீலி, அவுரி. (1 பெயர்) 223

**குறிஞ்சியின் பெயர்**

குறிஞ்சி, சகசரி. (1 பெயர்) 224

**தும்பையின் பெயர்**

துரோணம், தும்பை (ஆகச் சொல்லுவர்).
(1 பெயர்) 225

**தருப்பையின் பெயர்**

குசையே, தருப்பை (என்னக் கூறுவர்).
(1 பெயர்) 226

**பஞ்சாய்க் கோரையின் பெயர்**

எருவை, பஞ்சாய்க் கோரை (என்ப).
(1 பெயர்) 227

**வாட் கோரையின் பெயர்**

செருந்தி, வாட்கோரை. (1 பெயர்) 228

**நாணலின் பெயர்**

காசை, நாணல். (1 பெயர்) 229

**விழற் புல்லின் பெயர்**

விரணம், விழற் புல். (1 பெயர்) 230

**சுரையின் பெயர்**

புற்கொடி, (மென் பூச்) சுரை (எனப் புகல்வர்).
(1 பெயர்) 231

**நீர் முள்ளியின் பெயர்**

நீர் முள்ளி, முண்டகம் (ஆகும் என்ப).
(1 பெயர்) 232

**பாசியின் பெயர்**

நாரம், செவிரம், பதிகம், சைவலம்,
பாசி (என்று பகரப்படுமே). (4 பெயர்கள்) 233

**நீர்க் குளிரியின் பெயர்**

கல்காரம், நீர்க் குளிரி (என்ப). (1 பெயர்) 234

**தாமரையின் பெயர்**

புண்டரீகம், பதுமம், நளினம், சரோருகம்,
முண்டகம், அம்போருகம், அரவிந்தம்,
பங்கயம், அம்புயம், வாரிசம், சலசம்,
கஞ்சம், வனசம், கோகனதம், கமலம்,
முளரி, நீரோருகம், திருமால் கொப்பூழ்,
திருமலர், இண்டை, சத பத்திரி, (என)
வருபவை தாமரை (வண் பெயர் ஆகும்).
(21 பெயர்கள்) 235

**தாமரைக் காயின் பெயர்**

வராடகம், தாமரைக் காய் (என வகுப்பர்).
(1 பெயர்) 236

**தாமரைச் சுருளின் பெயர்**

சுருள் விசி, வளயம். (2 பெயர்கள்) 237

**குவளைப் பொதுப் பெயர்**

உற்பலம், குவலயம், கழுநீர், குவளை.
(3 பெயர்கள்) 238

**கருங் குவளையின் பெயர்**

நீலோற்பலம், இந்தீவரம், குவலயம்,
நீலம், பானல், காவி, கருங்குவளை,
கல்லாரமும், (எனக் கழறல் ஆகும்).
(7 பெயர்கள்) 239

**செங் குவளையின் பெயர்**

செங்குவளை, அரத்தம், உற்பலம், செங்கழுநீர்.
(3 பெயர்கள்) 240

**குவலயம் எனும் பெயர்**

குவலயம், நெய்தல் ஆகவும் கூறுவர்.
(1 பெயர்) 241

#### செவ்வாம்பலின் பெயர்

கைரவம், செவ்வல்லி, செவ்வாம்பல் (ஆகும்).
(2 பெயர்கள்) 242

#### குமுதம் என்னும் பெயர்

வெள்ளாம்பல்,சேதாம்பல், (என்று இரு விகற்பமும்,
கொள்ப மன்னே) குமுதப் (பெயர்க் கொடை).
(2 பெயர்கள்) 243

#### குமுதத்தின் பெயர்

ஆம்பலும், நெய்தலும், அல்லியும், குமுதம்.
(3 பெயர்கள்) 244

#### அக விதழின் பெயர்

அல்லி, அகவிதழ். (1 பெயர்) 245

#### புற விதழின் பெயர்

புல்லி, புறவிதழ். (1 பெயர்) 246

#### பூவினுள் கொட்டையின் பெயர்

பொகுட்டே, கன்னிகை, பூவினுள் கொட்டை.
(2 பெயர்கள்) 247

#### பூவின் வகையாவன

கோட்டுப் பூ, கொடிப் பூ, நீர்ப் பூ, நிலப் பூ,
(தோற்றம் உடைய) பூவின் தொடர்பே,
(4 பெயர்கள்) 248

#### மொட்டின் பெயர்

முகை, நனை, கலிகை, முகிழ், சினை, கோரகம்,
நகை,கன்னிகை,போகில்,அரும்பு,மொட்டே.
(10 பெயர்கள்) 249

#### பூவின் பெயர்

அலர், தார், அலரி, போது, வீ, துணர்,
மலரோடு, இணர், (இவை மலர்ந்த) பூவே.
(8 பெயர்கள்) 250

#### பூங் கொத்தின் பெயர்

துணரே, மஞ்சரி, வல்லரி, தொத்தோடு,
இணரே, குலை, (இவை) பூங் கொத்து (என்ப).
(6 பெயர்கள்) 251

#### வெற்றிப் பூவின் பெயர்

(நல் இசை அம்பல் செல்வச் சேந்தனில்
வரைவு இல் கல்வியில், படையில், கொடையில்,
வெல்லுநர் அணி) வாகை, வெற்றிப் பூவே.
(1 பெயர்) 252

#### பழம்பூவின் பெயர்

செம்மல், பழம் பூ (ஆகச் செப்புவர்).
(1 பெயர்) 253

#### மலர்த் தாதின் பெயர்

மகரந்தம், கேசரம், கொங்கு, மலர்த் தாதே.
(3 பெயர்கள்) 254

#### பூ இதழின் பெயர்

ஏடும், தோடும், பூவின் இதழே. (2 பெயர்கள்) 255

#### மாலையின் பெயர்

தொடையல், வாசிகை, சிகழிகை, கோதை,
படலை, அலங்கல், கத்திகை, பிணையல்,
அணியல், சுருக்கை, தொடலை, தாமம்,
தொங்கல், தெரியல், கண்ணி, தார், சூட்டு,
மஞ்சரி, ஒலியல், இலம்பகம், மாலை.
(20 பெயர்கள்) 256

#### பின்னிய மாலையின் பெயர்

பிணையல், பின்னிய மாலைப் பெயரே.
(1 பெயர்) 257

#### நுதல் அணி மாலையின் பெயர்

சூட்டு, உடன் இலம்பகம், நுதல் அணி மாலை.
(2 பெயர்கள்) 258

#### வாசிகையின் பெயர்

மாலை, சிகழிகை, வாசிகை, தொடையல்
(ஆகும் என்ப அறிந்திசினோரே).(3 பெயர்கள்) 259

நாடே பிறர் நாட்டிற்கு உவமை; ஆறே
காலம் அறிந்து உதவும் காவிரி தானே;
ஆடவர் திலகன், அம்பல் மன்னன்,
நீடு இசைத் தலைவன், அருவந்தைச் சேந்தன்
ஆய்ந்த திவாகரத்து அரும் பொருள் விளக்கும்

**நான்காவது**
**மரப் பெயர்த் தொகுதி முற்றிற்று.**

## 5. இடப் பெயர்த் தொகுதி

#### மோக்கத்தின் பெயர்

அமுதம், கேவலம், அபவருக்கம், வீடு,
சிவம், கைவல்லியம், சித்தி, மீளாக் கதி,
பரகதியோடு, முத்தி, பஞ்சம கதி,
நிர்வாணம், மோக்கம் (என நிகழ்த்தினரே).
(12 பெயர்கள்) 1

#### தெய்வ லோகத்தின் பெயர்

தானம், துறக்கம், பொன்னுலகு, உம்பர்,
வானகம், அமருலகு, உயர்நிலை, புத்தேள்
(வியன்) உலகு, விசும்பு, விண்ணுலகு, நாகம்,
பவனம், மா சுவர்க்கம், தெய்வ லோகப் (பெயரே).
(13 பெயர்கள்) 2

### நாக லோகத்தின் பெயர்

பவனம், நாக லோகப் (பாலது ஆம்). (1 பெயர்) 3

### விஞ்சையர் உலகத்தின் பெயர்

சேணியும், சேடியும், விஞ்சயர் சேர்விடம்.
(2 பெயர்கள்) 4

### திசையின் பெயர்

மாதிரம், ஆசை, வம்பல், திசைப் (பெயர்). 5

### மற்றும் திசையின் பெயர்

கருபம், மிசை, புலம், தேம், திக்கு, அரிதம்,
விசும்பும், உலகும், கோ, காட்டையும் (ஆம்).
(13 பெயர்கள்) 6

### கீழ்த் திசையின் பெயர்

குணக்கே, பூருவம், இந்திரி, பிராசி,
கிழக்கு, கீழ்த் திசை (கிளக்குங்காலே).
(5 பெயர்கள்) 7

### தெற்கின் பெயர்

அவாசி, தக்கணம், யாமியம், தெக்கு,
சிவேதை, மற்று இவை தெற்கு (எனல் ஆகும்).
(5 பெயர்கள்) 8

### மேற்கின் பெயர்

மேக்கு, பச்சிமம், குடக்கு, (இவை) மேற்கே. 9

### மற்றும் மேற்கின் பெயர்

வாருணம், பிரத்தியக்கும் (அதுவே).
(5 பெயர்கள்) 10

### வடக்கின் பெயர்

உதக்கே, உதீசி, உத்தரம், என்ன
வடக்கின் (பெயர் இவை வைக்குங்காலே).
(3 பெயர்கள்) 11

### பூமியின் பெயர்

அவனி, காசினி, மேதினி, அளக்கர்,
தரணி, தாரணி, தராதலம், குவலயம்,
புடவி, பூதலம், தரை, படி, ஞாலம்,
வையம், அகிலம், கு, மண், புவி, பார்,
நாடு, உலகு, புவனி, பாரி, யுகம், நேமி,
அகலிடம், பொறை, அரண், மண்டிலம், பூ, திணை,
தலம், பொழில், பிருதிவி, வேலா வலயம்,
நிலம், சகம், தாலம், பூமி (என நிகழ்த்தினர்).
(38 பெயர்கள்) 12

### நரகின் பெயர்

நிரயம், துருக்கம், பாதாளம், கும்பி,
அள்ளல், அளறே, அருஞ் சிறை, இருள் நிலம்,
எரியும், திமிரமும், இரௌரவம், (என்று இவை)
நரகின் (பெயர் என நவிலப்படுமே).
(11 பெயர்கள்) 13

### உலகின் பொதுப் பெயர்

புவனம், நாடு, பொழில், தலம், புடவி,
பவனம், உலகின் பொதுப் பெயர்ப் பால.
(6 பெயர்கள்) 14

### நாட்டின் பெயர்

பைதிரம், மண்டிலம், பாண்டில், தேயம்,
தண்ணடை, சனபதம், அகலுள், சும்மை,
கண்டம், ஏணி, உலகு, (என்று இவை) நாடே.
(11 பெயர்கள்) 15

### மலையின் பெயர்

விலங்கல், அடுக்கல், வெற்பு, பருப்பதம்,
சிலம்பு, நாகம், குறும் பொறை, சிகரம்,
வேதண்டம், வேரம், கிரி, திகிரி, சையம்,
தரணி, பூதரம், ஓங்கல், பிறங்கல்,
குவடு, குன்று, ஓதி, பறம்பு, வரை, விண்டு,
போதி, கோ, சிலை, இறும்பு, தடம், மாதிரம்,
பொச்சை, நவிர், கல்லகம், பொருப்பு, நகம், அசலம்,
சாரல், சிலோச்சயம், சைலம், மலை (என்ப).
(38 பெயர்கள்) 16

### மேருவின் பெயர்

பொன் மலை, மேரு. (1 பெயர்) 17

### வெள்ளி மலையின் பெயர்

வெண்மலை, வேதண்டம், விசயார்த்தம், வெள்ளி மலை.
(3 பெயர்கள்) 18

### பொதிய மலையின் பெயர்

பொதிய மலை, மலயம். (1 பெயர்) 19

### கொல்லி மலையின் பெயர்

வல்லியம் பொருப்பே, கொல்லி மலை (ஆகும்).
(1 பெயர்) 20

### குன்றின் பெயர்

இறும்பு, பொச்சை, குவடு, பதலை,
பிறங்கல், பொற்றை, குறும்பொறை, குன்றே.
(7 பெயர்கள்) 21

### மலை உச்சியின் பெயர்

கோடு, கொடுமுடி, குவடு, சிகரம்,
சிமையம், ஐந்தும் மலையின் உச்சி. (5 பெயர்கள்) 22

### மலைப் பக்கத்தின் பெயர்

வாரமும், தடமும், சாரலும், மலைப் பக்கம்.
(3 பெயர்கள்) 23

### பாறையின் பெயர்

அறையே, பாறை. (1 பெயர்) 24

**துறு கல்லின் பெயர்**

பொறையே, துறுகல். (1 பெயர்) 25

**மலை முழையின் பெயர்**

முடுக்கர், கந்தரம், மலை முழை (என்ப).
(2 பெயர்கள்) 26

**கீழ் அறையின் பெயர்**

பிலமே, கீழ் அறை. (1 பெயர்) 27

**குகையின் பெயர்**

நிகுஞ்சம், குகை (ஆம்). (1 பெயர்) 28

**கற் புழையின் பெயர்**

கண்டறை, கற் புழை. 29

**மற்றும் கற்புழையின் பெயர்**

கற்பாழி, காண்டையும், (கருதுவர் அதற்கே).
(3 பெயர்) 30

**கல்லின் பெயர்**

சிலையே, கல்லே. (1 பெயர்) 31

**திரள் கல்லின் பெயர்**

உலமே, திரள் கல். (1 பெயர்) 32

**நுழை வாயிலின் பெயர்**

நூழையும், சுருங்கையும், நுழை வாயில் (ஆகும்).
(2 பெயர்கள்) 33

**மலைப் பிளப்பின் பெயர்**

விடர், மலைப் பிளப்பு (என விளம்பினர் புலவர்).
(1 பெயர்) 34

**வெடிப்பின் பெயர்**

விடரும், கமரும், வெடிப்பின் (பெயரே).
(2 பெயர்கள்) 35

**திடரின் பெயர்**

திட்டை, திட்ரே. (1 பெயர்) 36

**சிறு திட்டையின் பெயர்**

பதுக்கை, சிறு திட்டை. (1 பெயர்) 37

**பரல் அடுத்து உயர் நிலத்தின் பெயர்**

பரல் அடுத்து உயர் நிலம், முரம்பு (எனப்படுமே).
(1 பெயர்) 38

**மேட்டின் பெயர்**

திட்டை, திடறு, சுவல், வல்லை, வன் பால்,
மெட்டு, திடர், படர், குப்பை, குவால், குவை,
(ஒட்டிய பதினொன்றும்) மேடு (என உரைப்பர்).
(11 பெயர்கள்) 39

**பாதாளத்தின் பெயர்**

அரம், பிலம், பாதலம், பாதாளப் (பெயரே).
(3 பெயர்கள்) 40

**கடலின் பெயர்**

அத்தி, பௌவம், அளக்கர், ஆர்கலி,
ஆழி, பெருநீர், அம்பரம், முந்நீர்,
உப்பு, வீரை, சக்கரம், சாகரம்,
வேலை, வெள்ளம், மகராலயம், நேமி,
சலநிதி, வாரி, சலதி, அலையே,
பாராவாரம், உததி, சமுத்திரம்,
பரவை, உவர், நரலை, புணரி, வாரிதி,
வேலாவலயம், கார்கோள், ஓதம்,
வாருணம், சிந்து, வாரம், அம்புராசி,
(கார்மலி) உவரி, கடல் (எனக் கருதுவர்).
(36 பெயர்கள்) 41

**கடல் திரையின் பெயர்**

ஓதமும், புணரியும், கடல் திரை (ஆகும்).
(2 பெயர்கள்) 42

**புனல் திரைப் பொதுப் பெயர்**

சீகரம், தரங்கம், அறல், கல்லோலம்,
அலை, புனல் திரைக்கு (வரும்) பொதுப் பெயரே.
(5 பெயர்கள்) 43

**கடற் கரையின் பெயர்**

வேலையும், பாராவாரமும், கடற் கரை.
(2 பெயர்கள்) 44

**புனற் கரைப் பொதுப் பெயர்**

தீரம், பாரம், வரை, அணை, கோடு,
கூலம், வாரம், புனற் கரைப் பொதுப் பெயர்.
(7 பெயர்கள்) 45

**செய் கரையின் பெயர்**

குலையும், சேதுவும், குரம்பும், செய் கரை.
(3 பெயர்கள்) 46

**மலைச் சாரல் வரும் யாற்றின் பெயர்**

அருவி, மலைச் சாரல் வரும் யாறு (ஆகும்).
(1 பெயர்) 47

**முல்லைக் கான் யாற்றின் பெயர்**

கலுழியும், உயவையும், முல்லைக் கான் யாறு.
(2 பெயர்கள்) 48

**ஆற்றின் பொதுப் பெயர்**

உந்தி, நதி, துறை, வருபுனல், குடிஞை,
சிந்துவோடு, ஒலியல், ஆறு (எனச் செப்புவர்).
(7 பெயர்கள்) 49

### கழியின் பெயர்

கானல், முரம்பு, காயல், முகம், கழி.
(4 பெயர்கள்) 50

### கழிமுகத்தின் பெயர்

அதோமுகம், புகாரோடு, அழிவு இல் கூடல்,
கழிமுகம் (என்று கருதல் வேண்டும்).
(3 பெயர்கள்) 51

### உப்பளத்தின் பெயர்

உப்பளம், காயல், உவளகம், அளக்கர்.
(3 பெயர்கள்) 52

### காவிரி நதியின் பெயர்

பொன்னி, காவிரி. (1 பெயர்) 53

### பொருநை நதியின் பெயர்

பொருநை, தண் பொருந்தம். (1 பெயர்) 54

### கன்னி நதியின் பெயர்

குமரி, கன்னி (ஆகக் கூறுவர்). (1 பெயர்) 55

### வையை நதியின் பெயர்

வேகவதியே, வையை (ஆகும்). (1 பெயர்) 56

### ஆன் பொருந்த நதியின் பெயர்

ஆனி, வானி, ஆன் பொருந்தம் (ஆகும்).
(2 பெயர்கள்) 57

### கௌதமை நதியின் பெயர்

கோதை, கௌதமை (ஆகக் கூறுவர்).(1 பெயர்) 58

### கோதாவிரி நதியின் பெயர்

விருத்த கங்கை, விமலை, கோதாவிரி.
(2 பெயர்கள்) 59

### பால் யாற்றின் பெயர்

பாலி, கீர நதி, பால் யாறு (ஆகும்).
(2 பெயர்கள்) 60

### வாவியின் பெயர்

அலந்தை, பண்ணை, கோட்டகம், கிடங்கோடு,
இலஞ்சி, தாங்கல், சுனை, ஏல்வை, ஓடை,
வட்டம், தடாகம், மடு, குளம், வலயம்,
குட்டம், குண்டம், பட்டம், சூழி,
பொய்கை, கேணி, ஆவி, தடம், படுகர்,
ஏரி, கயம், பயம், உவளகம், வாவி.
(27 பெயர்கள்) 61

### எந்திர வாவியின் பெயர்

இலவந்திகையே, எந்திர வாவி. (1 பெயர்) 62

### ஆற்றிடைக் குறையின் பெயர்

இலங்கையும், துருத்தியும், (என வரும் பெயரோடு)
அரங்கமும், ஆற்றிடைக் குறை (என அறைவர்).
(3 பெயர்கள்) 63

### ஊர் உணும் நீரின் பெயர்

ஊர் உணும் பொது நீர், ஊருணி (ஆகும்).
(1 பெயர்) 64

### கிணற்றின் பெயர்

கூவலும், அசும்பும், கூபமும், குழியும்,
பூவலும், கேணியும், துரவும், கிணறே.
(7 பெயர்கள்) 65

### ஊறலின் பெயர்

அஃகும், உறவியும், அசும்பும், ஊறல்.
(3 பெயர்கள்) 66

### நீர்க் குமிழியின் பெயர்

புற்புதம், மொக்குள், பௌவம், நீர்க் குமிழி.
(3 பெயர்கள்) 67

### நுரையின் பெயர்

நுரையே, பேனம் (ஆகும் என்ப). (1 பெயர்) 68

### ஆழத்தின் பெயர்

அழுந்தும், குண்டும், கயமும், ஆழம்.
(3 பெயர்கள்) 69

### நிறை புனலின் பெயர்

வழாறும், பிராறும், வாரியும், நிறை புனல்.
(3 பெயர்கள்) 70

### நீந்து புனலின் பெயர்

அகாதம், (என்பது) நீந்து புனல் (ஆகும்).
(1 பெயர்) 71

### கொழுந்து நீரோட்டத்தின் பெயர்

கோலம், என்பது கொழுந்து நீரோட்டம்.
(1 பெயர்) 72

### தெளி நீரின் பெயர்

சற்சலம், (என்பது) தெளி நீர் (ஆகும்).
(1 பெயர்) 73

### கலங்கல் புனலின் பெயர்

விலங்கல், கலுழி, கலங்கல் புனலே.
(2 பெயர்கள்) 74

### சேற்றின் பெயர்

அள்ளல், அசறேடு, அளக்கர், அளறு,
கொள்ளம், அளறு, குழம்பு, காலாழ்,
தொள்ளி, பங்கம், பூழி, குழை, சேறே. 75

**மற்றும் சேற்றின் பெயர்**

தொய்யில், தொளியே, செதும்பு, சேதகம்,
செய்யல், (என்று இவை சேறு எனத் தகுமே).
(17 பெயர்கள்) 76

**வழுக்கு நிலத்தின் பெயர்**

அருப்பம், அசடம், அழுவம், வழுக்கு நிலம்.
(3 பெயர்கள்) 77

**பொல்லா நிலத்தின் பெயர்**

அசும்பும், அயசும், அசுபாகம், (தன்னுடன்)
அங்கணமும், சகதியும், பொல்லா நிலமே.
(5 பெயர்கள்) 78

**வெண் மணலின் பெயர்**

வாலுகம், வெண் மணல். (1 பெயர்) 79

**மணற் குன்றின் பெயர்**

புளினம், மணற் குன்றே. (1 பெயர்) 80

**நுண் மணலின் பெயர்**

அதர், அயிர், நுண் மணல். (2 பெயர்கள்) 81

**புழுதியின் பெயர்**

பொடி, பூழ்தி, புழுதி (ஆகும் என்ப).
(2 பெயர்கள்) 82

**அலை கொழித்த கரு நுண் மணலின் பெயர்**

அறலே, அலை நுண் கரு மணல் (ஆகும்).
(1 பெயர்) 83

**குறிஞ்சி என்பது**

மலைச் சார்பு, குறிஞ்சி நிலம். (1 பெயர்) 84

**நெய்தல் என்பது**

கடல் சார்பு, நெய்தல் நிலம். (1 பெயர்) 85

**முல்லை என்பது**

காடு சார் நிலம், முல்லை. (1 பெயர்) 86

**மருதம் என்பது**

நாடு சார் நிலம், மருதம். (1 பெயர்) 87

**பாலை என்பது**

நீர் இன்றி வேனில் தெறு நிலம், பாலை.
(1 பெயர்) 88

**மருத நிலத்தின் பெயர்**

அகணி, பணை, பண்ணை, பழனம், கழனி,
பானல், கம்பலை, படுகர், வயல், மருதம்.
(9 பெயர்கள்) 89

**முல்லை நிலத்தின் பெயர்**

புறவம், புறம்பணை, முல்லை நிலப் (பெயர்).
(2 பெயர்கள்) 90

**குறிஞ்சி நிலத்தின் பெயர்**

(அறைவர்) குறிஞ்சிக்கும் அப் பெயர் (தானே).
(2 பெயர்கள்) 91

**வன் பால் எனும் பெயர்**

வன் பால் குறிஞ்சியும், பாலையும் (ஆகும்).
(2 பெயர்கள்) 92

**மென் பால் எனும் பெயர்**

மென் பால் (என்பது), மருதம் (மேற்றே).
(1 பெயர்) 93

**சமப் பால் எனும் பெயர்**

முல்லையும், நெய்தலும் (மொழி) சமப் பாலே.
(2 பெயர்கள்) 94

**கரு நிலம் என்பது**

மலையின் நீரில் வனத்தில் வந்த (மற்று)
இனைய மிகுதி (சொல்) கரு நிலப் (பெயரே). 95

**துருக்கத்தின் பெயர்**

அழுவம், துருக்கம் (ஆகும் என்ப). (1 பெயர்) 96

**ஊரின் பெயர்**

பாக்கம், பட்டினம், பதி, நகர், சும்மை,
பூக்கம், சேரி, புரம், முட்டம், பூண்டி,
அகரம், குடியே, குறிச்சி, கோசரம்,
அகலுள், நொச்சி, இருக்கை, வேலி,
குப்பம், பாடி, குறும்பு, பாழி,
சிறுகுடி, தண்ணடை, உறையுள், எயிலொடு,
வாழ்க்கை, (உட்படுத்து இருபத்தேழும்
நாடில்) ஊர் (என நவின்றிசினோரே).
(27 பெயர்கள்) 97

**நீரும் வயலும் சூழ்ந்த ஊரின் பெயர்**

சுரந்த நீரும் வயலும் சூழ்ந்த ஊர்
கிராமம் (ஆகக் கிளக்கப்படுமே). (1 பெயர்) 98

**ஐஞ்ஞூறு குடி நிறைந்த ஊரின் பெயர்**

குடி ஐஞ்ஞூறு குறைவு அற நிறைந்தது
பெருங் கிராமம் (எனப் பேசப்படுமே).
(1 பெயர்) 99

**மலை சூழ்ந்த ஊரின் பெயர்**

கிரி பல சூழ அடுத்த ஊர், கேடகம். (1 பெயர்) 100

**மலையும் ஆறும் சூழ்ந்த ஊரின் பெயர்**

மலையும் ஆறும் அடுத்த ஊர், கர்வடம்.
(1 பெயர்) 101

**பல பண்டம் பகரும் கடற் கரை ஊரின் பெயர்**

பண்டம் பல கொடு பகரும் கடற் கரை
(மன்னும்) பதியே, பட்டினம் (ஆகும்).
(1 பெயர்) 102

**சிற்றூரின் பெயர்**

பட்டும், நொச்சியும், பள்ளியும், சிற்றூர்.
(3 பெயர்கள்) 103

**குறிஞ்சி நிலத்து ஊரின் பெயர்**

குறிச்சி, சீறூர், குறிஞ்சி நிலத்து ஊர்.
(2 பெயர்கள்) 104

**முல்லை நிலத்து ஊரின் பெயர்**

பாடி, முல்லைப் பதி. (1 பெயர்) 105

**நெய்தல் நிலத்து ஊரின் பெயர்**

பட்டினம், நெய்தல் பதி. (1 பெயர்) 106

**பாலை நிலத்து ஊரின் பெயர்**

முனையிடம், குறும்பு, (முது) பாலை நிலத்து ஊர்.
(2 பெயர்கள்) 107

**மருத நிலத்து ஊரின் பெயர்**

பூக்கம், குடிக்காடு, பூரியம், உறையுள்,
பாக்கம், அருப்பம், அகலுள், பதியே,
கோட்டம், வசதி, தாவளம், நியமம்,
வாழ்க்கை, தண்ணடை, மருத நிலத்து ஊர்ப் (பெயர்).
(14 பெயர்கள்) 108

**நகரப் பதியின் பெயர்**

பாடியும், புரமும், நகரப் பதியே.
(2 பெயர்கள்) 109

**சூழ் கழி இருக்கையின் பெயர்**

சூழ் கழி இருக்கை, கோணமுகமே.(1 பெயர்) 110

**மருங்கில் ஊர் சூழ் பெரும் பதியின் பெயர்**

மருங்கில் ஊர் சூழ் பெரும் பதி, மடப்பம்.
(1 பெயர்) 111

**கொடுங் குறும்பர் அரண் இருக்கையின் பெயர்**

கொடுங் குறும்பர் அரண் இருக்கை, குறும்பு
(என்று ஆகும்).
(1 பெயர்) 112

**முனை மேல் சென்றோர் உறைபதியின் பெயர்**

பாசறை, முனை மேல் சென்றோர் உறை பதி.
(1 பெயர்) 113

**உறையூரின் பெயர்**

கோழி, உறையூர். (1 பெயர்) 114

**மதுரையின் பெயர்**

கூடல், மதுரை. (1 பெயர்) 115

**சிதம்பரத்தின் பெயர்.**

மன்றம், சிதம்பரம். (1 பெயர்) 116

**திருவாரூரின் பெயர்**

கமலை, திருவாரூர். (1 பெயர்) 117

**கருவூரின் பெயர்**

கருவூர், வஞ்சி. (1 பெயர்) 118

**காவரிப் பூம்பட்டினத்தின் பெயர்**

காகந்தி, புகார், காவிரிப் பூம்பட்டினம்.
(2 பெயர்கள்) 119

**அவந்தியின் பெயர்**

உஞ்சை, அவந்தி. (1 பெயர்) 120

**காசியின் பெயர்**

காசி, வாரணசி. (1 பெயர்) 121

**காஞ்சியின் பெயர்**

கச்சி, காஞ்சி. (1 பெயர்) 122

**மிதிலையின் பெயர்**

விதேகை, (என்பது) மிதிலை (ஆகும்).
(1 பெயர்) 123

**அயோத்தியின் பெயர்**

விநிதை, சாகேதம், கோசலை, அயோத்தி.
(3 பெயர்கள்) 124

**புரி எனும் பெயர்**

புரி (என் கிளவி), புரம் (என்று ஆகும்).
(1 பெயர்) 125

**பாடி எனும் பெயர்**

பாடி (என்பது), சேரி (ஆகும்).
(1 பெயர்) 126

**கடாரத்தின் பெயர்**

காழகம், கடாரம் (ஆகக் கருதுவர்).
(1 பெயர்) 127

**சிங்களத்தின் பெயர்**

சிங்களம், ஈழம், (ஆகச் செப்புவர்).
(1 பெயர்) 128

**நெல்லும் புல்லும் நிறைந்த மலையூரின் பெயர்**

நெல்லும் புல்லும் நிறைந்த (மத்தகம்
புல்லும்) மலையூர், சம்வாகம் (ஆகும்).
(1 பெயர்) 129

**அரித்துவாரத்தின் பெயர்**

அரித்துவாரம், மாயாபுரி (ஆம்). (1 பெயர்) 130

**கடையின் பெயர்**

கூலம், அங்காடி, கடை (ஆகக் கூறுவர்). 131

**மற்றும் கடையின் பெயர்**

ஆவணம், நியமம் (ஆகலும் உரித்தே).
(4 பெயர்கள்) 132

**தெருவின் பெயர்**

ஆவணம், வீதி, ஞெள்ளல்,மறுகு,
கோசம், நியமம், மார்க்கம், தெருவே. 133

**மற்றும் தெருவின் பெயர்**

சிறகு, (என ஒரு வழிச் செப்பவும் படுமே).
(8 பெயர்கள்) 134

**நெடுந் தெருவின் பெயர்**

மன்றம், மார்க்கம், நியமம், நெடுந் தெருவே.
(3 பெயர்கள்) 135

**குறுந் தெருவின் பெயர்**

குறுந் தெரு, மறுகே. (1 பெயர்) 136

**குதிரை வையாளி வீதியின் பெயர்**

செண்டு வெளி, வையாளி வீதி,
புரவி வட்டம், திரு முற்றம் (ஆகும்).
(3 பெயர்கள்) 137

**வேந்தர் வீதியின் பெயர்**

பூரியம், வேந்தர் வீதி (ஆகும்). (1 பெயர்) 138

**முடுக்குத் தெருவின் பெயர்**

கோணம், முடுக்குத் தெரு (ஆகும்மே).
(1 பெயர்) 139

**முச் சந்தியின் பெயர்**

அந்தி, முச்சந்தி. (1 பெயர்) 140

**சந்தியின் பெயர்**

அந்தி, கவலை, வரியே, சந்தி. (3 பெயர்கள்) 141

**நாற் சந்தியின் பெயர்**

(முந்தையோர்) சதுக்கம், நாற் சந்தி (என்ப).
(1 பெயர்) 142

**சிரேணியின் பெயர்**

சேடியும், வாடையும், சிரேணி (ஆகும்). 143

**மற்றும் சிரேணியின் பெயர்**

ஆலிடம், (எனவும் அறையப்படுமே).
(3 பெயர்கள்) 144

**அக்க சாலையர் வீதியின் பெயர்**

ஆவேசனம், அக்க சாலையர் வீதி. (1 பெயர்) 145

**வேடர் வீதியின் பெயர்**

பக்கணம், வேடர் வீதி (ஆகும்). (1 பெயர்) 146

**சந்தின் பெயர்**

சந்து, சதுக்கம். (1 பெயர்) 147

**கோயிலின் பெயர்**

சினகரம், சேதிமம், தேவர் ஆலயம்,
நிலயம், பாழி, பள்ளி, நிகேதனம்,
மந்திரம், ஆலயம், தேவ குலம், கோட்டம்,
நகர், தளி, வானவர் உறையுள், கோயில்.
(14 பெயர்கள்) 148

**அறச் சாலையின் பெயர்**

சத்திரம், சாலை, அறச் சாலை (ஆகும்).
(2 பெயர்கள்) 149

**ஓதும் பள்ளியின் பெயர்**

அறப்புறம், ஓதும் பள்ளி (ஆகும்).
(1 பெயர்) 150

**ஓம மண்டபத்தின் பெயர்**

சமித்தம், ஓம மண்டபம் (சாரும்). (1 பெயர்) 151

**மன்னர் இல்லின் பெயர்**

சாலை, மாளிகை, பவனம், கோயில்,
குலமும், மன்னர் இல் (ஆகக் கூறுவர்).
(5 பெயர்கள்) 152

**மன்னன் தேவி இருக்கையின் பெயர்**

கந்தவாரமும், உவளகமும், அந்தப்
புரமும், தேவியர் மனை (ஆகும் என்ப).
(3 பெயர்கள்) 153

**வீட்டின் பெயர்**

மாடம், மனை, உறையுள், புக்கில், பதி, வசதி,
இடமே, பாத்தி, அகம், வயின், இல்லம்,
இடவகை, சேர்வு, வீடு (என்று இசைப்பர்).
(13 பெயர்கள்) 154

**சிற்றிலின் பெயர்**

கூரை, குரம்பை, குடில், சிற்றில் (ஆகும்).
(3 பெயர்கள்) 155

**பண்ட சாலையின் பெயர்**

புனை கலன் இருக்கை, பண்ட சாலை. (1 பெயர்) 156

**வீட்டு இறப்பின் பெயர்**

வளவி, இறையே, வீட்டு இறப்பு (ஆகும்).
(2 பெயர்கள்) 157

**தாழ்வாரத்தின் பெயர்**

சோபானம், தாழ்வாரம் (ஆகும்). *(1 பெயர்)* *158*

**முகட்டின் பெயர்**

விடங்கம், முகடே. *(1 பெயர்)* *159*

**வேயுளின் பெயர்**

வேயுள், வேய்தல். *(1 பெயர்)* *160*

**பலகணியின் பெயர்**

சாலகம், சாளரம், நூழை, சாலேகம்,
வாதாயனம், பலகணி (எனப்படுமே).
*(5 பெயர்கள்)* *161*

**மடைப் பள்ளியின் பெயர்**

அட்டில், அடுக்களை, மடைப் பள்ளி (ஆகும்).
*(2 பெயர்கள்)* *162*

**கல்வியூரி - அன்றிக் கல்வி பயில் இடத்தின் பெயர்**

கல்வியூரி, கல்லூரி (ஆகும்). *(1 பெயர்)* *163*

**சுவர்த் தலத்தின் பெயர்**

பித்திகை, சுவர்த்தலம். *(1 பெயர்)* *164*

**பீடத்தின் பெயர்**

பீடிகை, பீடம். *(1 பெயர்)* *165*

**சலதாரையின் பெயர்**

அங்கணம், தூம்பு வாய், சலதாரை (ஆகும்).
*(2 பெயர்கள்)* *166*

**முற்றத்தின் பெயர்**

முன்றில், அங்கணம், முற்றம் (ஆகும்).
*(2 பெயர்கள்)* *167*

**நிலா முற்றத்தின் பெயர்**

அரமியம், நிலா முற்றம் (ஆகும் என்ப).
*(1 பெயர்)* *168*

**திண்ணையின் பெயர்**

திட்டை, மண்ணீடு, தெற்றி, வேதிகை,
திண்ணை (ஆகும் என்மனூர் புலவர்).
*(4 பெயர்கள்)* *169*

**கல் படுத்த பூமியின் பெயர்**

கல் படுத்த பூமி, குட்டிமம் (ஆகும்).
*(1 பெயர்)* *170*

**சித்திர கூடத்தின் பெயர்**

தெற்றி அம்பலம், சித்திர கூடம். *(1 பெயர்)* *171*

**அம்பலத்தின் பெயர்**

பொதியிலும், மன்றமும், பொதுவும், அம்பலம்.
*(3 பெயர்கள்)* *172*

**கழகம் எனும் பெயர்**

செல்லல் தீர்க்கும் பல் புகழ்ச் சேந்தனில்
வல்லுநர், நாவலர் வாய்ந்த இடமும்,
மல்லும், சூதும், படையும், (மற்றும்)
கல்வி பயில் களமும், கழகம் (ஆகும்).
*(5 பெயர்கள்)* *173*

**அரசிருக்கையின் பெயர்**

அரசிருக்கைப் பெயர் அத்தாணி, வேத்தவை.
*(2 பெயர்கள்)* *174*

**அரங்கம் எனும் பெயர்**

போரின் இடமும், வட்டு ஆடு இடமும்,
ஆடல் இடமும், அவையும், அரங்கம்.
*(4 பெயர்கள்)* *175*

**ஒரு சிறை அல்லது ஒதுக்கிடத்தின் பெயர்**

ஒரு சிறை, துச்சில். *(1 பெயர்)* *176*

**ஏகாந்தத்தின் பெயர்**

ஒருவந்தம், ஏகாந்தம், கொட்டில், வேறு இடம்.
*(3 பெயர்கள்)* *177*

**கற் படையின் பெயர்**

சுருங்கை, கற்படை (ஆகும் என்ப).
*(1 பெயர்)* *178*

**உறைவிடத்தின் பெயர்**

ஆகரம், பிறப்பிடம், உறைவிடம் (ஆகும்).
*(2 பெயர்கள்)* *179*

**அடுப்பின் பெயர்**

குமுதம், சுல்லி, காமரம், அடுப்பு,
முத்தானம், (எனவும் மொழியப்படுமே).
*(4 பெயர்கள்)* *180*

**கூட்டின் பெயர்**

குடம்பை, பஞ்சரம், கட்சி, கூடு (ஆகும்).
*(3 பெயர்கள்)* *181*

**பண்ணும் கூட்டின் பெயர்**

குலாயனம், பஞ்சரம், பண்ணும் கூடே.
*(2 பெயர்கள்)* *182*

**குதிரைப் பந்தியின் பெயர்**

மந்திரம், சாலே, குதிரைப் பந்தி. *(2 பெயர்கள்)* *183*

**யானை சேர்விடத்தின் பெயர்**

(நீடிய) வாரியும், சேவகமும், தண்டமும்,
கூடமும், ஒளியும், யானை சேர்விடம்.
*(5 பெயர்கள்)* *184*

**யானை செல் வழியின் பெயர்**

தண்டம், யானை செல் வழி (என்ப). *(1 பெயர்)* *185*

### யானை துயில் இடத்தின் பெயர்

சேவகம், யானை துயில் இடம் (ஆகும்).
(1 பெயர்) 186

### மக்கள் கிடப்பிடத்தின் பெயர்

கட்சி, அமளி, சேக்கை, உறையுள்,
சட்டகம், சேர்விடம், பள்ளி, சயனம்,
பட்டம், பாழி, ப்பாயல், அரி, துயில் இடம்,
(ஒட்டிய) உயர்திணைக் கிடப்பிடம் (ஆகும்).
(13 பெயர்கள்) 187

### விலங்கு துயில் இடத்தின் பெயர்

பட்டம், போத்து, பண்ணை, சேக்கை,
விலங்கு துயிலும் இடம் (ஆகும்மே).
(4 பெயர்கள்) 188

### வேள்விக் குண்டத்தின் பெயர்

வேதியும், நித்தமும், வேள்விக் குண்டம்.
(2 பெயர்கள்) 189

### முனிவர் வாசத்தின் பெயர்

தாபதம், பாழி, கரண்டை, பள்ளி,
முனிவர் வாசம் (என மொழியப்படுமே).
(4 பெயர்கள்) 190

### மட் கலம் சுடும் இடத்தின் பெயர்

சுள்ளையும், சூளையும், மட் கலம் சுடும் இடம்.
(2 பெயர்கள்) 191

### சுடு காட்டின் பெயர்

சுடு காடு, ஈமம், மயானம், சுடலை,
சுடு நிலம், புறங் காடு, இடு காடு, முது காடு,
வனம், எரி வனம், பிதிர் வனம், பிணக் காடே.
(11 பெயர்கள்) 192

### பொரு களத்தின் பெயர்

களரி, பறந்தலை, செம்புலம், படு களம்,
பொரு களம், களம் (எனப் புகன்றனர் புலவர்).
(5 பெயர்கள்) 193

### வழுக்கு நிலத்தின் பெயர்

அருப்பம், ஆரிடம், அளுர், இழுக்கு, வழுக்கு நிலம்.
(4 பெயர்கள்) 194

### தொழுவத்தின் பெயர்

தொழுவம், ஆவேலி, தோழம், ஆனிலையே.
(3 பெயர்கள்) 195

### மதிலின் பெயர்

இஞ்சி, நொச்சி, எயில், சுற்று, புரிசை,
பந்தம், வரைப்பு, காப்பு, அரண், காவல்,
ஆரல், ஓதை, பிராகாரம், வேலி,
(சீர்) சாலம், வேணகை, மதில் (எனச் செப்புவர்).
196

### மற்றும் மதிலின் பெயர்

வன் சிறை, உவளகம் (ஆதலும் வரையார்).
(18 பெயர்கள்) 197

### மதிலுள் உயர் மேடையின் பெயர்

பரிகம், அகப்பா, பதணம், (மூன்றும்
உரிய) மதிலுள் உயர் மேடைக்கே.
(3 பெயர்கள்) 198

### மதில் சுற்றின் பெயர்

தொடையும், தகைப்பும், வாரியும், சுற்றே.
(3 பெயர்கள்) 199

### மதில் உறுப்பின் பெயர்

பதப்பாடு, எந்திரம், கோசம், தோணி,
விதப்பு, ஞாயில், நாஞ்சில், மதில் உறுப்பே.
(7 பெயர்கள்) 200

### அகழின் பெயர்

அகழி, கிடங்கு, அகப்பா, பரிகம், அகழே.
(4 பெயர்கள்) 201

### குதிரின் பெயர்

புகல், குதிர் (ஆகும்.) (1 பெயர்) 202

### வாயிலின் பெயர்

தோட்டி, துவாரம், வாரி, கடை, வாயில்.
(4 பெயர்கள்) 203

### கோபுரம் அல்லது கோபுர நிலையின் பெயர்

சிகரி, கோபுரம். (1 பெயர்) 204

### பெரு வாயிலின் பெயர்

கோபுரம், (என்பது) பெரு வாயில் (ஆகும்).
(1 பெயர்) 205

### கோபுர வாயிலில் புகும் புழையின் பெயர்

புதவு, வாயில் புகு பெரும் புழையே.(1 பெயர்) 206

### கோபுர வாயில் திண்ணையின் பெயர்

அளிந்தம், அவ்வழி சார் திண்ணை (ஆகும்).
(1 பெயர்) 207

### கோபுர வாயில் படிச் சுருளின் பெயர்

அத்தினகம், வாயில் படிச் சுருள் (ஆகும்).
(1 பெயர்) 208

### வயலின் பெயர்

விளையுளும், பண்ணையும், செய்யும், கழனியும்,
தடியும், பாத்தியும், செறுவும், வயலே.
(7 பெயர்கள்) 209

**சிறு வயலின் பெயர்**

குண்டில், பாத்தி, சிறு செய் (ஆகும்). (2 பெயர்கள்) 210

**புனத்தின் பெயர்**

குறிஞ்சி நிலச் சார்பும், கொல்லேயும், புனமே.
(2 பெயர்கள்) 211

**தினைப் புனத்தின் பெயர்**

ஏனலும், வளாகமும், தினைப் புனம் (என்ப).
(2 பெயர்கள்) 212

**பழங் கொல்லேயின் பெயர்**

முதைப் புனம், பழங் கொல்லே. (1 பெயர்) 213

**புதுக் கொல்லேயின் பெயர்**

இதைப் புனம், புதுக் கொல்லே. (1 பெயர்) 214

**தோட்டத்தின் பெயர்**

தோட்டம், துடவை, படப்பை, (இம் மூன்றும்)
தோட்டப் (பெயர் எனச் சொல்லினர் புலவர்).
(3 பெயர்கள்) 215

**உழவின் பெயர்**

துடவை, தொய்யில், உழவின் (பெயரே).
(2 பெயர்கள்) 216

**உழுதொழில் வளேப்பின் பெயர்**

தொடுப்பே, உழுவோர் தொழில் வளேப்பு (ஆகும்).
(1 பெயர்) 217

**புது வரம்பின் பெயர்**

மரிசி, புது வரம்பு. (1 பெயர்) 218

**புற்றின் பெயர்**

வன்மீகம், புற்று. (1 பெயர்) 219

**வரம்பு அருகின் பெயர்**

கங்கு, வரம்பு அருகே. (1 பெயர்) 220

**பள்ளத்தின் பெயர்**

உவளகம், பயம்பே, அவல், குழி, தாழ்வே,
இழிவு, கிழக்கு, படுகர், பள்ளம். (8 பெயர்கள்) 221

**புற்றஞ் சோற்றின் பெயர்**

குரும்பி, புற்றஞ் சோறே. (1 பெயர்) 222

**முது நிலத்தின் பெயர்**

களரி, கரம்பே, பெரும்பாழ், முது நிலம்.
(3 பெயர்கள்) 223

**வழியின் பெயர்**

சரி, நெறி, ஒழுக்கம், தாரை, ஆறு,
வதி, அதர், மார்க்கம், இயவை, நடவை,
பதவை, செப்பம், அயனம், இடவை,
வாரி, வட்டை, வரி, வயவை, வகுந்து,
செலவு, சிறு பதம், வழிக் (கிளவி ஆகும்).
(21 பெயர்) 224

**அரு நெறியின் பெயர்**

அத்தம், கடம், கடறு, தூம்பு, சுரம், அரு நெறி.
(5 பெயர்கள்) 225

**கவர்த்த நெறியின் பெயர்**

கவலே, கவர்த்த நெறி (எனக் கருதுவர்).
(1 பெயர்) 226

**சிறு வழியின் பெயர்**

விடங்கர், சிறு வழி (ஆகும் என்ப).(1 பெயர்) 227

**பெரு வழியின் பெயர்**

பாதை, பெருவழி. (1 பெயர்) 228

**இழிந்து ஏறப்படு வழியின் பெயர்**

படுகர், மடு, இழிந்து ஏறப்படு நெறி.
(2 பெயர்கள்) 229

**கல் படியின் பெயர்**

ஆரோகணம், சோபானம், கல் படி.
(2 பெயர்கள்) 230

**நீள் வழியின் பெயர்**

அளக்கர், நீள் வழியே. (1 பெயர்) 231

**இடத்தின் பெயர்**

வாய், புலம், பாங்கர், வயின், களம், வைப்பு,
தேயம், வழி, உழி, திணேயே, மருங்கு,
பால், நிலம், தலமே, வளாகம், பட்டி,
சூழல், தானம், இடப் (பெயர் தொடர்பே). 232

**மற்றும் இடப் பொதுப் பெயர்**

கண், கால், புறம், அகம், உள், உழை, கீழ், மேல்,
பின், சார், அயல், புடை, தேவகை, (எனுஅ)
முன், இடை, கடை, தலே, வலம், இடம், (எனுஅ
அன்ன பிறவும்) அதன் பால (என்மனுர்).
(37 பெயர்கள்) 233

**பக்கத்தின் பெயர்**

மாடு, சிறை, உழி, மருங்கு, ஞாங்கர், முன்,
பால், புடை, பாங்கர், பக்கம் (ஆகும்).
(9 பெயர்கள்) 234

**நடுவின் பெயர்**

நனந்தலே, நாப்பண், மத்திமம், நள்ளு,
(வயங்கு) இடை, ஒத்தல், நாவோடு, அணவு,
(நலம் திகழ்) கூழையும், நடு (என்று ஆகும்).
(9 பெயர்கள்) 235

### உயர்ச்சியின் பெயர்

உம்பர், மீப்புலம், வலமே, ஒக்கம்,
துங்கம், உவணம், பருமம், உந்தி,
மேடு, மோடு, தூக்கு, மேக்கு,
நிவப்பு, (இவை) உயர்ச்சி (ஆக நிகழ்த்துவர்).
(13 பெயர்கள்) 236

### ஞாங்கர் என்னும் பெயர்

ஞாங்கர், முன்னும், மேலும், (ஆகும்).
(2 பெயர்கள்) 237

### முன்னரின் பெயர்

முதலும், தலைத்தாளும், முன்னர் (ஆகும்).
(2 பெயர்கள்) 238

### இம்பர் எனும் பெயர்

இம்பர், இவணே. (1 பெயர்) 239

### உம்பர் எனும் பெயர்

உம்பர், உவணே. (1 பெயர்) 240

### ஆண்டு என்னும் பெயர்

ஆண்டு, அவ்விடம். (1 பெயர்) 241

### ஈண்டு எனும் பெயர்

ஈண்டு, இவ்விடம். (1 பெயர்) 242

### கூப்பிடு தூரத்தின் பெயர்

எல்லை, குரோசம், கூப்பிடு தூரம்.
(2 பெயர்கள்) 243

### கோழிப் பறவை அளவின் பெயர்

கிரவுஞ்சம், கோழிப் பறவை அளவு (ஆகும்).
(1 பெயர்) 244

### யோசனை தூரத்தின் பெயர்

புகை, யோசனை (ஆம்). (1 பெயர்) 245

### காதத்தின் பெயர்

காவதம், காதம் (ஆகக் கருதுவர்). (1 பெயர்) 246

ஒருவற்கு ஒருவன் ஆகி உதவியும்
பரிசில் மாக்கள் பற்பலர் ஆயினும்
தான் ஒருவன்னே தரணி மானவன்,
செந்தமிழ்ச் சேந்தன் தெரிந்த திவாகரத்து

ஐந்தாவது
இடப் பெயர்த் தொகுதி முற்றிற்று.

## 6. பல் பொருள் பெயர்த் தொகுதி

### பொன்னின் பெயர்

ஆடகம், மாசை, ஈழம், ஏமம்,
மாடு, காணம், கனகம், தமனியம்,
வெறுக்கை, சொன்னம், பொருளோடு, அரியே,
ஈகை, நிதியே, கருந் தனம், காஞ்சனம்,
பீதகம், மாடை, தொடுக்கம், அருத்தம்,
சாமீகரம், பூரி, சந்திரம், மாழை,
நிதானம், தேசிகம், செந்தாது, வித்தம்,
திரவியம், வேங்கை, சாம்பூனதம், உறை,
சாதரூபம், உடல், பண்டம், இரணியம்,
பொலம், (என்று இன்னவை) பொன் (எனப்படுமே).
(37பெயர்கள்) 1

### ஐவகை உலோகம் ஆவன

பொன்னும், வெள்ளியும், செம்பும், இரும்பும்,
(அன்ன) ஈயமும், ஐவகை உலோகம்.
(5 பெயர்கள்) 2

### எழு வகை உலோகம் ஆவன

தராவொடு, கஞ்சம், (தானும் கூட்டி)
எழு வகை உலோகம் (என்னவும்படுமே).
(7 பெயர்கள்) 3

### நவ மணி - கடவுள் மணியின் பெயர்

நவ மணி, கடவுள் மணி என்று இவற்றின்
(நிகழ் பெயர்) நிதியும், நிதானமும், (என்ப).
(2 பெயர்கள்) 4

### பொற் காசின் பெயர்

காணம், பொற் காசு. (1 பெயர்) 5

### மணிப் பொதுப் பெயர்

மனவும், காசும், மணியின் பொதுப் பெயர்.
(2 பெயர்கள்) 6

### அகன் மணிப் பொதுப் பெயர்

அரதனம், சலாகை, அகன் மணிக்கு ஆகும்.
(2 பெயர்கள்) 7

### மாணிக்கத்தின் பெயர்

மா மணி, பதுமராகம், மாணிக்கம்.
(2 பெயர்கள்) 8

### முத்தின் பெயர்

நித்திலம், தரளம், ஆரம், முத்தே.(3 பெயர்கள்) 9

### தரளம் என்பது

தரளம், திரட்சி (ஆகவும் சாற்றுவர்.)
(1 பெயர்) 10

**பவளத்தின் பெயர்**

வித்துருமம், துகிர், துப்பே, அரத்தம்,
(ஒத்த) பிரவாளம், துவர், (இவை) பவளம்.
*(6 பெயர்கள்)* 11

**மரகதத்தின் பெயர்**

அரி, பச்சை, மரகதம், மரதகமும் (ஆகும்.)
*(3 பெயர்கள்)* 12

**வச்சிர மணியின் பெயர்**

வச்சிரம், வயிரம். *(1 பெயர்)* 13

**வைடூரியத்தின் பெயர்**

வாலவாயம், வைடூரியமே. *(1 பெயர்)* 14

**நீல மணியின் பெயர்**

மணி, நீல மணியே. *(1 பெயர்)* 15

**சங்க நிதியின் பெயர்**

(செங்கை நிதி அம்பல் சேந்தன் செங் கையில்)
சங்கின் வடிவினது, சங்க நிதியே. 16

**பதும நிதி என்பது**

(தே மலர் அலங்கல் சேந்தன் செங்கையில்)
தாமரை வடிவினது, பதும நிதியே. 17

**பதினன்கு வகையின் பெயர்**

பதினல் வகையும், நிதியம் (எனப்படும்).
*(1 பெயர்)* 18

**பண்டாரகத்தின் பெயர்**

கோசம், தண்டம், பண்டாரம் (ஆகும்).
*(2 பெயர்கள்)* 19

**வெள்ளியின் பெயர்**

இரசதம், தாரம்,களதௌதம், வெள்ளி.
*(3 பெயர்கள்)* 20

**வெண்கலத்தின் பெயர்**

கஞ்சம், வெண்கலம் (ஆகக் கருதுவர்).
*(1 பெயர்)* 21

**பித்தளேயின் பெயர்**

மாயாபுரி, ஆரகூடம், பித்தளே. *(2 பெயர்கள்)* 22

**செம்பின் பெயர்**

சீருணம், தாம்பிரம், சுற்பம், செம்பே.
*(3 பெயர்கள்)* 23

**இரும்பின் பெயர்**

கருந் தாதும், அயமும், இரும்பு (எனக்கருதுவர்).
*(2 பெயர்கள்)* 24

**எஃகின் பெயர்**

சத்தி, எஃகே. *(1 பெயர்)* 25

**ஈயத்தின் பெயர்**

வங்கமும், சீருஉம், ஈயம் (ஆகும்).
*(2 பெயர்கள்)* 26

**காரீயத்தின் பெயர்**

நாகம், காரீயம் (ஆகக் கருதுவர்). *(1 பெயர்)* 27

**தராவின் பெயர்**

மதுகம், தரா (என வைக்கப்படுமே).*(1 பெயர்)* 28

**இரும்பு உள் வாங்கும் காந்தமணியின் பெயர்**

(வலித்து) இரும்பு உள்ளே வாங்கும் காந்தம்
(சொலத் தகும்) சலாகை, சும்பகம் (என்ப).
*(2 பெயர்கள்)* 29

**சந்திரன் ஒளியில் தண்ணீர் காலும் மணியின் பெயர்**

சந்திரன் ஒளியில் தண்ணீர் கால் மணி,
சந்திர காந்தம் (எனப் பெயர் சாரும்).
*(1 பெயர்)* 30

**சூரியன் ஒளியில் தீக் காலும் மணியின் பெயர்**

சூரியன் ஒளியில் தீக் கால் சலாகை,
சூரிய காந்தம் (எனப் பெயர் சொல்லும்).
*(1 பெயர்)* 31

**பளிங்கின் பெயர்**

படிகம், பளிங்கு, பருக்கை, காழ் (ஆகும்).
*(3 பெயர்கள்)* 32

**சங்கு மணியின் பெயர்**

அக்கு, சங்கு மணி (ஆகும் என்ப). *(1 பெயர்)* 33

**பலகறையின் பெயர்**

வட்டி, கவடி, பலகறை, சோகி,
வெள்வரி, அலகு, (என விளம்பவும் படுமே).
*(5 பெயர்கள்)* 34

**பல பண்டத்தின் பெயர்**

பண்ணியம், கூலம், வளமே, பண்டம்,
பண்ணிகாரம், பல பண்டப் (பெயரே).
*(5 பெயர்கள்)* 35

**அரும் பண்டத்தின் பெயர்**

அரும் பண்டப் பெயர், தாரம் (என்று ஆகும்).
*(1 பெயர்)* 36

**கருப்பூரத்தின் பெயர்**

கருப்பூரம், பாளிதம். *(1 பெயர்)* 37

**கத்தூரியின் பெயர்**

கத்தூரி, மான்மதம். *(1 பெயர்)* *38*

**நால்வகைச் சாந்தின் பெயர்**

பீதம், காலேகம், வட்டிகை, புலி (என)
நால் வகைச் சாந்தின் நாமம் (ஆகும்).
*(4 பெயர்கள்)* *39*

**சாந்தின் பொதுப் பெயர்**

கலவைச் சேறும், காலேக வண்ணமும்,
தளம், விரை, களபமும், சாந்தின் பொதுப் பெயர்.
*(5 பெயர்கள்)* *40*

**செஞ்சாந்தின் பெயர்**

குங்குமம், செஞ் சாந்து. *(1 பெயர்)* *41*

**பூசுவனவற்றின் பெயர்**

அங்கராகம், பூசுவன. *(1 பெயர்)* *42*

**மயிர்ச் சாந்தின் பெயர்**

தகரம், ஏலம், காசறை, மயிர்ச் சாந்தே.
*(3 பெயர்கள்)* *43*

**செறி குழம்பு அல்லது சந்தனக் குழம்பின் பெயர்**

தேய்வையும், செச்சையும், செறி குழம்பு (ஆகும்).
*(2 பெயர்கள்)* *44*

**அப்புதலின் பெயர்**

கொட்டலும், சதுர்த்தலும், அப்புதல் (ஆகும்).
*(2 பெயர்கள்)* *45*

**பூசுதலின் பெயர்**

புலர்த்தலும், வரித்தலும், பூசல் (ஆகும்).
*(2 பெயர்கள்)* *46*

**மகளிர் ஆகத்து எழுது கோலத்தின் பெயர்**

எழுது கோலான் மகளிர் ஆகத்துத்
தொழில் பெற வரிப்பது, தொய்யில் (ஆகும்).
*(1 பெயர்)* *47*

**திலகத்தின் பெயர்**

சுடிகையும், திலதமும், சுட்டியும், திலகம்.
*(3 பெயர்கள்)* *48*

**நுதல் புனை குறியின் பெயர்**

புண்டரம், திலகம், நுதல் புனை குறியே.
*(2 பெயர்கள்)* *49*

**சிந்தூரத்தின் பெயர்**

சேலேகம், சிந்தூரம். *(1 பெயர்)* *50*

**சாதிலிங்கத்தின் பெயர்**

இங்குலிகம், சாதி லிங்கம். *(1 பெயர்)* *51*

**குங்கிலியத்தின் பெயர்**

குங்குலுவும், குக்குலுவும், குங்கிலியம் (ஆகும்).
*(2 பெயர்கள்)* *52*

**பெருங் காயத்தின் பெயர்**

இங்கு, பெருங்காயம் (என்று இசைத்தனரே).
*(1 பெயர்)* *53*

**அரக்கின் பெயர்**

அரத்தமும், துப்பும், அரக்கின் (பெயரே).
*(2 பெயர்கள்)* *54*

**சுக்கின் பெயர்**

சுண்டி, சுக்கு. *(1 பெயர்)* *55*

**ஏலத்தின் பெயர்**

துடியே, ஏலம். *(1 பெயர்)* *56*

**அதிமதுரத்தின் பெயர்**

அதிங்கம், அட்டி, அதிமதுரம் (ஆகும்).
*(2 பெயர்கள்)* *57*

**சாமரையின் பெயர்**

சாமரை, கவரி, சவரி, சீகரம். *(3 பெயர்கள்)* *58*

**அச்சுதம் என்பது**

அறுகு, வெள்ளரிசி கூட்டியது, அச்சுதம்
*(1 பெயர்)* *59*

**பிரப்பு என்பது**

கொள்கலம் ஒன்றில் குறுணியாகப்
பல் உணவு பெய்து பாரிப்பது, பிரப்பே.
*(1 பெயர்)* *60*

**விறகின் பெயர்**

இந்தனம், காட்டம், துவர், (இவை) விறகே.
*(3 பெயர்கள்)* *61*

**ஓம விறகின் பெயர்**

சமிதை, ஓம விறகு (எனச் சாற்றுவர்).
*(1 பெயர்)* *62*

**நெருப்பு உறு விறகின் பெயர்**

ஞெகிழி, கொள்ளி, நெருப்பு உறு விறகு (ஆம்).
*(2 பெயர்கள்)* *63*

**கடைக் கொள்ளியின் பெயர்**

முளரி, அலாதம், உற்கம், கடைக் கொள்ளி.
*(3 பெயர்கள்)* *64*

**கரியின் பெயர்**

கந்துளும், இருந்தையும், கரி (எனக் கூறுவர்).
*(2 பெயர்கள்)* *65*

**சாம்பரின் பெயர்**

அடலே, வெண் பலி, சாம்பர் (ஆகும்).
(2 பெயர்கள்) 66

**திருநீற்றின் பெயர்**

காப்பும், பொடியும், பற்பமும், விபூதியும்,
திருநீறு (அதனைச் செப்பும் கிளவி).
(4 பெயர்கள்) 67

**சாணியின் பெயர்**

சாணி, புண்ணிய சாந்தம் எனப்படும்.
(1 பெயர்) 68

**சுடு சுண்ணச் சாந்தின் பெயர்**

சுதையும், களபமும், சுடு சுண்ணச் சாந்தே.
(2 பெயர்கள்) 69

**புகையின் பெயர்**

தூமமும், அரியும், தூபமும், புகையே.
(3 பெயர்கள்) 70

**மணப் புகையின் பெயர்**

குரூஉப்புகை, நறை படு கொழும் புகை (ஆகும்).
(1 பெயர்) 71

**பனி நீரின் பெயர்**

இம சலம், சீத நீர், பனி நீர்க்கு (எய்தும்).
(2 பெயர்கள்) 72

**பொடியின் பெயர்**

பிதிர், சிதர், பராகம், (தகர்) சின்ன பின்னம்,
துகளும், நீறும், சுண்ணமும், தாதும்,
பொடியின் பெயரே, புழுதியும் (ஆகும்).
(9 பெயர்கள்) 73

**காவிக் கல்லின் பெயர்**

காவிக் கல், செங்கல், கைரிகம், தாது.
(3 பெயர்கள்) 74

**கழிப்புறு குறு மலத்தின் பெயர்**

கழிப்பு உறு குறு மலம், காட்டம் (எனப்படும்).
(1 பெயர்) 75

**இலவின் பஞ்சின் பெயர்**

இலவின் பஞ்சின் பெயர், பூளை (ஆகும்).
(1 பெயர்) 76

**பருத்திப் பஞ்சின் பெயர்**

கார்ப்பாசம், பரி, பன்னல், பருத்தி. (3 பெயர்கள்) 77

**பஞ்சியின் நுனியின் பெயர்**

துய்யே, பஞ்சில் தொடர் நுனி (ஆகும்).
(1 பெயர்) 78

**சோற்றின் பெயர்**

புன்கம், மிதவை, பொம்மல், போனகம்,
அன்னம், ஓதனம், அயினி, அடிசில்,
பாளிதம், பொருகு, மிசை, பதம், பால், புகா,
அமலே, உணவு, துப்பு, அசனம், கவளம்,
சொன்றி, நிமிரல், மடை, கூழ், புழுக்கல்,
(ஒன்றிய) மூரல், சோறு என உரைப்பர்.
(25 பெயர்கள்) 79

**பொதி சோற்றின் பெயர்**

பொதி சோறு, ஆற்றுணு, தோட்கோப்பு (ஆகும்.)
(2 பெயர்கள்) 80

**உண் தொழிலின் பெயர்**

உண்டி, பதம், வல்சி, உணு, மிசைதல், பக்கித்தல்,
அயின்றல், நுங்கல், விழுங்கல், துய்த்தல்,
மேய்தல், அயிறல், நுகர்தல், அருந்தல்,
உண்டல், தின்றல், பருகுதல், (என்று இவை)
பண்பின் தொழிலைப் பகரும் கிளவி.
(17 பெயர்கள்) 81

**கூழ் எனும் பெயர்**

கூழ் (எனும் பெயர்) எப் பொருளிற்கும் ஆகும். 82

**அடிசில் என்பது**

அடப்படுவது, அடிசில். 83

**புழுங்கல் என்பது**

புழுக்குவது, புழுங்கல். 84

**தெய்வ உணவின் பெயர்**

அமிழ்தும், அவியும், தெய்வ உணவே. 85

**மற்றும் தெய்வ உணவின் பெயர்**

பலியும், சருவும், (அப் பெயர்ப் பால).
(4 பெயர்கள்) 86

**பொரிக் கறியின் பெயர்**

கருனை, (பதன் அமைத்துப்) பொரிக்கும் சிற்றுணவு.
(1 பெயர்) 87

**பிட்டின் பெயர்**

ஆவி, வெந்தை, பிட்டு. (2 பெயர்கள்) 88

**உக்காரியின் பெயர்**

அஂகுல்லி, உக்காரி. (1 பெயர்) 89

**மோதகத்தின் பெயர்**

மோதகம், இலட்டுகம். (1 பெயர்) 90

**பில்லடையின் பெயர்**

பில்லடை, சஂகுல்லி. (1 பெயர்) 91

**அப்ப வர்க்கத்தின் பெயர்**

பூரிகம், நொலேயல், கஞ்சம், தோசை,
(பேத வகைப் பெயர்) அப்பம் (ஆகும்).
*(4 பெயர்கள்)* *92*

**தினை மாவின் பெயர்**

நுவணையும், இடியும், தினை (நுண்) பிண்டி.
*(2 பெயர்கள்)* *93*

**சிற்றுண்டி எனும் பெயர்**

அப்பம், பிட்டோடு, அஃகுல்லி, இடி, (எனச்
செப்பிய எல்லாம்) சிற்றுண்டி (ஆகும்).
*(4 பெயர்கள்)* *94*

**வறையலின் பெயர்**

வறையல், ஓச்சை. *(1 பெயர்)* *95*

**பிண்ணாக்கின் பெயர்**

மலாவகம், பிண்ணாக்கே. *(1 பெயர்)* *96*

**புளிங் கறியின் பெயர்**

துவையே, கூட்டு அமைத்து அடும் தொடர் பிறவும்
(பருகுவன அவையே) புளிங் கறி (ஆகும்).
*(2 பெயர்கள்)* *97*

**கறியின் பெயர்**

கறி, நீடாணம். *(1 பெயர்)* *98*

**குழம்பின் பெயர்**

பாகே, குழம்பு. *(1 பெயர்)* *99*

**கஞ்சியின் பெயர்**

கஞ்சி, காடி, மோழ்ம். *(2 பெயர்கள்)* *100*

**தயிரின் பெயர்**

ததியும், அளையும், தயிர் (என மொழிப).
*(2 பெயர்கள்)* *101*

**பாலின் பெயர்**

பயமும், கீரமும், அமுதமும், பாலே.
*(3 பெயர்கள்)* *102*

**நெய்யின் பெயர்**

இழுதும், கிருதமும், துப்பும், நெய்யே. *103*

**மற்றும் நெய்யின் பெயர்**

ஆச்சியம், (என்றும் அதன் பெயர் ஆகும்).
*(4 பெயர்கள்)* *104*

**மோரின் பெயர்**

முசரே, தக்கிரம், மோர் (என்று ஆகும்).
*(2 பெயர்கள்)* *105*

**வெண்ணெய்யின் பெயர்**

ஐயங்கவீநம், நவநீதம், வெண்ணெய்.
*(2 பெயர்கள்)* *106*

**தேனின் பெயர்**

பிரசமும், மதுவும், தேன் (எனப் பேசுவர்).
*(2 பெயர்கள்)* *107*

**சருக்கரையின் பெயர்**

கட்டியும், விசயமும், குளமும், கன்னலும்,
(ஒட்டிய) பாகும், அக்காரமும், சருக்கரை.
*(6 பெயர்கள்)* *108*

**கண்ட சருக்கரையின் பெயர்**

கண்டம், பாளிதம், கண்ட சருக்கரை. *109*

**மற்றும் கண்ட சருக்கரையின் பெயர்**

உண்டை, அயிர், புல்ல கண்டம் (ஒரு விகற்பம்).
*(5 பெயர்கள்)* *110*

**கள்ளின் பெயர்**

இக்கு, நனை, தேன், முருகு, தோப்பி,
நறவு, பிரசம், தணியல், சுரை, படு,
வேரி, மட்டு, தேறல், சாறு,
பானம், வடி, பிழி, மது, வழி, தொண்டி,
(ஆன) அரிட்டமும், சாதியும், கள் ஆம். *111*

**மற்றும் கள்ளின் பெயர்**

(அருகிக்) கௌவையும், விளம்பியும் (ஆகும்). *112*

**மற்றும் கள்ளின் பெயர்**

பாலி, சுமாலி, ஆலி, மருட்டம்,
மாலி, முண்டகம், சாலி, மாரி,
பாடலி, மௌலி, சிக்கர், ஞாளி,
பாணி, குந்தி, மதுகரம், சுவிகை,
ஆசவம், ஆம்பல், அம்பி, அம்பதை,
மேதை, கஞ்சா, விகுணி, சுலோகி,
(பேத வகை) கள் (பெயர் என அறைவர்).
*(48 பெயர்கள்)* *113*

**பானம் என்பது**

பானம், பருகுவன எவற்றிற்கும் (பெயரே). *114*

**அமிழ்தின் பெயரே**

அமிழ்தின் பெயரே, மருந்து (எனல் ஆகும்).
*(1 பெயர்)* *115*

**நஞ்சின் பெயர்**

ஆலம், காரி, கடு,விடம், நஞ்சே. *(4 பெயர்கள்)* *116*

**உண்பனவற்றின் பெயர்**

துற்றி, உண்பன. *(1 பெயர்)* *117*

**தின்பனவற்றின் பெயர்**

*திற்றி, தின்பன. (1 பெயர்) 118*

**இலைநுகர் விலங்கின் உணவின் பெயர்**

*இலை நுகர் விலங்கின் உணவு, குளகு (என்ப).*
*(1 பெயர்) 119*

**பறவை உணவிற்கும் ஒரு சார்**
**விலங்கின் உணவிற்கும் பெயர்.**

*பறவைக்கும், ஒரு சார் விலங்கிற்கும் உணவு*
*இரையும், உண்டியும் (எனப் பெயர் பெறுமே).*
*(2 பெயர்கள்) 120*

**ஒழி பொருளின் பெயர்**

*மிச்சில், எச்சில், உச்சிட்டம், ஒழி பொருள்.*
*(3 பெயர்கள்) 121*

**துணைக் காரணத்தின் பெயர்**

*துப்பே, சாதனம், துணைக் காரணம் (ஆம்). 122*

**மற்றும் துணைக் காரணத்தின் பெயர்**

*(ஒக்கும் அதற்கே) உபகரணப் (பெயரே).*
*(3 பெயர்கள்) 123*

**இரண்டின் பெயர்**

*உபயமும், உகளமும், (ஓர்) இரண்டு (ஆகும்).*
*(2 பெயர்கள்) 124*

**பேய்த்தேரின் பெயர்**

*வெண்டேர், கானல், பேய்த் தேர் (ஆகும்).*
*(2 பெயர்கள்) 125*

**சல்லியின் பெயர்**

*துணை, அறை, தூக்கம், சல்லி (ஆகும்).*
*(3 பெயர்கள்) 126*

**அலகு எனும் பெயர்**

*மகிழின் பரலும், நெல்லின் மணியும்,*
*அனையவை அலகு (எனும் பெயர் ஆகும்).*
*(2 பெயர்கள்) 127*

**நிரையின் பெயர்**

*ஒளியும், பந்தியும், ஒழுங்கும், நிரை ஆகும்.*
*(3 பெயர்கள்) 128*

வரு நற் கங்கை வட திசைப் பெருமையும்,
தென் திசைச் சிறுமையும் நீக்கிய குறுமுனி
குண்டிகைப் பழம் புனல் காவிரிப் பெரும் பதி
அம்பற்கு அதிபதி சேந்தன் திவாகரத்து

**ஆறுவது**
**பல் பொருள் பெயர்த் தொகுதி முற்றிற்று**

# 7. செயற்கை வடிவப் பெயர்த் தொகுதி

**செயற்கை வடிவாவன**

*(எண்ணிய) எழு வகை உலோகத்தின், மரத்தின்,*
*மண்ணின், தோலின், நூலின், (மற்றும்)*
*திண்மை செய் வடிவே, செயற்கை வடிவு (ஆகும்).1*

**சூலப் படையின் பெயர்**

*கழுமுள், மூவிலைவேல், முத்தலை, கழு, சத்தி,*
*(வருபவை) சூலப் படை (என வழங்கும்).*
*(5 பெயர்கள்) 2*

**மழுவின் பெயர்**

*பரசு, கணிச்சி, நவியம், தண்ணம்,*
*பாலம், என்று ஐந்தும் மழுவின் (பெயரே).*
*(5 பெயர்கள்) 3*

**சக்கரத்தின் பெயர்**

*திகிரி, நேமி, ஆழி, வளை, எஃகம்,*
*சுதரிசனம், பரிதி, சக்கரத்து (உறு பெயர்).*
*(7 பெயர்கள்) 4*

**வில்லின் பெயர்**

*சிலை, தனு, வேணு, கார்முகம், சாபம்,*
*முனியே, சார்ங்கம், சராசனம், பினுகம்,*
*கோதண்டம், தவர், கொடு மரம், துரோணம்,*
*(வார்) வில் (என்ப மதி நூல் புலவர்).*
*(13 பெயர்கள்) 5*

**சிவன் வில்லின் பெயர்**

*பிநாகம், பிஞ்ஞகன் (பெருஞ்) சிலைப் (பெயரே).*
*(1 பெயர்) 6*

**மாயோன் வில்லின் பெயர்**

*சார்ங்கம், மாயோன் தனுவின் (பெயரே).*
*(1 பெயர்) 7*

**அம்பின் பெயர்**

*பகழி, வாளி, வண்டு, பாணம்,*
*நிகழ் சரம், பத்திரி, சிலீமுகம், பல்லம்,*
*புங்கம், கணை, குதை, கங்க பத்திரம்,*
*அத்திரம், தோணி, கோல், விசிகம், அம்பே.*
*(16 பெயர்கள்) 8*

**அம்புத் தலையின் பெயர்**

*உடு, அம்புத் தலை. (1 பெயர்) 9*

**மொட்டம்பின் பெயர்**

*உதண், மொட்டம்பே. (1 பெயர்) 10*

**அம்பின் குதையின் பெயர்**

*புங்கம், அம்பின் குதை. (1 பெயர்) 11*

**அம்புக் கட்டின் பெயர்**

புதை, அம்புக் கட்டே. *(1 பெயர்)* *12*

**வேலின் பெயர்**

சத்தி, எஃகம், உடம்பிடி, குந்தம்,
விட்டேறு, அரணம், ஞாங்கர், அயில், வேல்
*(8 பெயர்கள்)* *13*

**கை வேலின் பெயர்**

கப்பணம், தோமரம், கைவேல் (விகற்பம்).
*(2 பெயர்கள்)* *14*

**வச்சிரப் படையின் பெயர்**

சம்பம், வயிரப் படை, குலிசம், வச்சிரம்.
*(3 பெயர்கள்)* *15*

**வாளின் பெயர்**

நாந்தகம், கட்கம், நவிர், ஏதி, கண்டகம்,
(ஏய்ந்த) வேணு, வஞ்சம், நாட்டம்,
கடுத் தலை, உவணி, கரவாளம், கோணமோடு,
(அடுத்தன) வசியே, வாள் (என அறைவர்).
*(13 பெயர்கள்)* *16*

**ஈர் வாளின் பெயர்**

வேதினம், கரபத்திரம், (இவை) ஈர்வாள்.
*(2 பெயர்கள்)* *17*

**உடை வாளின் பெயர்**

சுரிகை, உடை வாள். *(1 பெயர்)* *18*

**கழுக்கடையின் பெயர்**

கழுமுள், கழுக்கடை. *(1 பெயர்)* *19*

**அரிவாளின் பெயர்**

குயமும், புள்ளமும், கொடு வாளும், அரிவாள்.
*(3 பெயர்கள்)* *20*

**பிண்டிவாலத்தின் பெயர்**

பீலித் தண்டு, எஃகம், பிண்டிவாலம்.
*(2 பெயர்கள்)* *21*

**கணையப் படைக் கலத்தின் பெயர்**

பரிகமும், எழுவும், கணையப் படைக் கலம்.
*(2 பெயர்கள்)* *22*

**தண்டாயுதத்தின் பெயர்**

கதை, தடி, தண்டு (ஆம்). *(2 பெயர்கள்)* *23*

**இருப்பு உலக்கையின் பெயர்**

முசலம், இருப்பு உலக்கை. *(1 பெயர்)* *24*

**மட்டிப் படைக்கலத்தின் பெயர்**

முற்கரம், காத்திரம், கூர்த்திகை, முசுண்டி,
பட்டம், சங்கு, மட்டிப் படைக்கலம்.
*(6 பெயர்கள்)* *25*

**உளிக்கும் தறிகைக்கும் பெயர்**

உளிக் கருவி, தறிகைக் கருவி என்று இசைப்பன
கணிச்சிப் (பெயரின் வழங்கும் கருவி).
*(1 பெயர்)* *26*

**இலை மூக்கு அரி கத்தியின் பெயர்**

குளிர், இலை மூக்கு அரி கத்தி (ஆகும்).
*(1 பெயர்)* *27*

**நாராசத்தின் பெயர்**

சலாகை, நாராசம். *(1 பெயர்)* *28*

**இருப்பு முள்ளின் பெயர்**

தாறு, இருப்பு முள்ளே. *(1 பெயர்)* *29*

**கவணின் பெயர்**

தழல், தட்டை, கவணை, கல் எறி கவணே.
*(3 பெயர்கள்)* *30*

**ஆயுதப் பொதுவின் பெயர்**

படைக்கலம், தானை, கடுமுள், சுதனம்,
படையே, துப்பு, கழுமுள், ஏதியோடு,
(அடல் வெங்) கருவி, ஆயுதப் பொதுப் பெயர்.
*(9 பெயர்கள்)* *31*

**ஆயுதக் கூர்மையின் பெயர்**

வள், அயில், நுதி, நுனை, வை, ஆர், நிசிதம்,
வசி, வயிரம், பூ, அவற்றின் கூர்மை.
*(10 பெயர்கள்)* *32*

**நுனியின் பெயர்**

நுதியும், நுனையும், நுனி ஆகும்மே.
*(2 பெயர்கள்)* *33*

**படை உறையின் பெயர்**

தடறும், கருவிப் புட்டிலும், படை உறை.
*(2 பெயர்கள்)* *34*

**அம்புக் கூட்டின் பெயர்**

ஆவமும், தூணியும், ஆவ நாழியும்,
அம்பு பெய் கூடு என்று (அறையல்வேண்டும்).
*(3 பெயர்கள்)* *35*

**கவசத்தின் பெயர்**

அரணம், சாலிகை, ஆசு, பரணம்,
கவசம், கண்டம், மெய்யுறை, தம்பம்,
கசையே, சுரிகை, மெய் புகு கருவி, *36*

**மற்றும் கவசத்தின் பெயர்**

பாரமும், பரமும் (அப் பெயர்ப் பால).
*(12 பெயர்கள்)* *37*

**தலைக் கருவியின் பெயர்**

சீசகம், சிரகம், தலைக் கருவி (ஆகும்).
*(2 பெயர்கள்)* 38

**பலகையின் பெயர்**

சேடகம், வட்டம், தோலே, வேதிகை,
கேடகம், பலகை (ஆம் எனக் கிளப்பர்).
*(5 பெயர்கள்)* 39

**மாவட்டணத்தின் பெயர்**

தட்டியம், பலகை, தட்டு, மாவட்டணம்.
*(3 பெயர்கள்)* 40

**தோல் பலகையின் பெயர்**

தோல் பரம், தோல் பலகை, தோலும் (ஆகும்).
*(2 பெயர்கள்)* 41

**கைக் கட்டியின் பெயர்**

கைப்புடை, கோதை, கைக் கட்டி (ஆகும்).
*(2 பெயர்கள்)* 42

**பக்கறையின் பெயர்**

சுவடு, பக்கறை (என்னச் சொல்லுவர்).
*(1 பெயர்)* 43

**குதிரைக் கலணையின் பெயர்**

பல்லணம், பருமம், படை, பரம், கருவி,
(சொல்லற்கு உரிய) பண், கலணைத் (தொடர்பே).
*(6 பெயர்கள்)* 44

**குதிரை வாய்க் கருவியின் பெயர்**

கலினமும், கறுழும், குதிரை வாய்க் கருவி.
*(2 பெயர்கள்)* 45

**குசைக் கயிற்றின் பெயர்**

வற்கம், குசைக் கயிறு. *(1 பெயர்)* 46

**குதிரைச் சம்மட்டியின் பெயர்**

மத்திகை, சம்மட்டி. *(1 பெயர்)* 47

**கழுத்திடு கயிற்றின் பெயர்**

கவடும், புரோசையும், கழுத்திடு கயிறே.
*(2 பெயர்கள்)* 48

**தளையின் பெயர்**

நிகளமும், விலங்கும், தொடரும், தளையே.
*(3 பெயர்கள்)* 49

**வலி பற்று இரும்பின் பெயர்**

பறளை, கற்பொறி, அள்ளு, வலி பற்று இரும்பே.
*(3 பெயர்கள்)* 50

**பாத கிங்கிணியின் பெயர்**

பரிபுரம், நூபுரம், பரியகம், (என்ன
வருபவை) பாத கிங்கிணி (மணியே).
*(3 பெயர்கள்)* 51

**சிலம்பின் பெயர்**

பரிபுரம், அரவம், (பைம் பொன்) ஞெகிழி,
(அரி பெய்) சிலம்பு (என்று அறையல் வேண்டும்).
*(3 பெயர்கள்)* 52

**அரக்கு உடைச் சிலம்பின் பெயர்**

அரதனம், ஞெகிழி, அரக்கு உடைச் சிலம்பு அணி.
*(2 பெயர்கள்)* 53

**கால் அணி மணி வடத்தின் பெயர்**

பாத சாலம், கால் அணி மணி வடம். *(1 பெயர்)* 54

**பாடகத்தின் பெயர்**

பாத கடகம், பாடகம் (ஆகும்). *(1 பெயர்)* 55

**ஆடவர் கால் அணி வடத்தின் பெயர்**

(கெழு தகை அம்பல் கிழவோன் சேந்தனில்
விழைவுறு) தியாகத்து வீரத்து வீக்கிய
கழலே, ஆடவர் கால்மிசை அணி வடம்.
*(1 பெயர்)* 56

**மேகலை முதலியவை வகையாவன**

மேகலை, காஞ்சி, கலாபம், பருமம்,
விரிசிகை, ஏழும், (ஓர்) எட்டும், ஈர் எட்டும்,
மூ வாறும், நால் எட்டும் (முறைக் கோவை மணியே).
*(5 பெயர்கள்)* 57

**அரைப் பட்டிகையின் பெயர்**

மஞேவே, கலை, அரைப் பட்டிகை (ஆகும்).
*(2 பெயர்கள்)* 58

**அரை நாணின் பெயர்**

இரதனம், அரை நாண். *(1 பெயர்)* 59

**சதங்கையின் பெயர்**

சதங்கை, கிங்கிணியே. *(1 பெயர்)* 60

**பதக்கத்தின் பெயர்**

பதக்கம், கண்டிகை, ஆரம், (எனப் பகர்வர்).
*(2 பெயர்கள்)* 61

**முலை அணி வடத்தின் பெயர்**

ஆரம், பதக்கம், கண்டிகை, மாலை,
கோவை, காசு, காழ், தாமம், (என்று இவை)
மாதர் முலை மேல் அணி வடம் (ஆகும்).
*(8 பெயர்கள்)* 62

**பூண் கடைப் புணர்வின் பெயர்**

கடையும், கயிலும், பூண் கடைப் புணர்வே. 63

**மற்றும் பூண் கடைப் புணர்வின் பெயர்**

மடையும் (அதற்கு வகுக்கப்படுமே).
*(3 பெயர்கள்)* *64*

**ஆபரணத் தொங்கலின் பெயர்**

தொங்கலும், உத்தியும், அவற்றின் தூக்கம்.
*(2 பெயர்கள்)* *65*

**துடக்கு வடிவின் பெயர்**

மதலிகை, தூக்கம், துடக்கு வடிவே. *(2 பெயர்கள்)* *66*

**தோள் அணியின் பெயர்**

அங்கதம், கேயூரம், தோள் அணி (ஆகும்).
*(2 பெயர்கள்)* *67*

**கங்கணத்தின் பெயர்**

கடகமும், தொடியும், கங்கணம் (ஆகும்).
*(2 பெயர்கள்)* *68*

**கைவளையின் பெயர்**

சங்கும், தொடியும், சூடகமும், சரியும்,
கன்றும், குருகும், வண்டும், கை வளை.
*(7 பெயர்கள்)* *69*

**குண்டலத்தின் பெயர்**

குழையே, மிஞ்சிகை, காதணி, குண்டலம்.
*(3 பெயர்கள்)* *70*

**காதணியின் பெயர்**

கடிப்பிணை, வல்லிகை, வேடகம், காதிற்கு
அணிப் (பெயர்), தோடும் (ஆகும் என்ப). *71*

**மற்றும் காதணியின் பெயர்**

கொட்டையும் (அதனைக் கூறும் கிளவி).
*(5 பெயர்கள்)* *72*

**நுதல் சுடிகையின் பெயர்**

சுட்டி, நுதல் சுடிகை. *(1 பெயர்)* *73*

**பட்டத்தின் பெயர்**

பட்டம், ஓடை. *(1 பெயர்)* *74*

**நுதல் அணியின் பெயர்**

புல்லகம், இலம்பகம், நுதல் மிசை அணி பூண்.
*(2 பெயர்கள்)* *75*

**சிர மாலையின் பெயர்**

கரோடிகை, சிர மாலைப் (பெயர் எனக் கருதுவர்).
*(1 பெயர்)* *76*

**மணி முடியின் பெயர்**

சுடிகை, மௌலி, முடியே, சேகரம்,
மகுடம், கிரீடம், மணி முடி (என்ப).
*(6 பெயர்கள்)* *77*

**பேர் அணிகலத்தின் பெயர்**

பெரும் பூண், மதாணி, பேர் அணிகலமே.
*(2 பெயர்கள்)* *78*

**ஆபரணப் பொதுப் பெயர்**

பொலம், கலன், நாண், இழை, பூண், அணி, மதாணி,
பொன்னினும் மணியினும் செய் ஆபரணம்.
*(7 பெயர்கள்)* *79*

**உண் கலத்தின் பெயர்**

தாலம், தட்டம், தளிகை, உண் கலம்.
*(2 பெயர்கள்)* *80*

**கிண்ணம் அல்லது சிறு வட்டிலின் பெயர்**

வள்ளம், கிண்ணம். *(1 பெயர்)* *81*

**முடி உறுப்பின் பெயர்**

தாமம், முகுடம், பதுமம், கோடகம்,
கிம்புரி, முடி உறுப்பு (ஐந்து எனக் கிளப்பர்.)
*(5 பெயர்கள்)* *82*

**தோட்டின் பெயர்**

தோடு, தாடங்கம். *(1 பெயர்)* *83*

**பிள்ளைக் கைவளையின் பெயர்**

பிடிகம் (என்பது), பிள்ளைக் கை வளை.
*(1 பெயர்)* *84*

**ஓசை செய் தளையின் பெயர்**

குடச்சூல், ஞெகிழம், ஓசை செய் தளை.
*(2 பெயர்கள்)* *85*

**செவி மலர்ப் பூவின் பெயர்**

கன்னுவதஞ்சம், செவி மலர்ப் பூவே.
*(1 பெயர்)* *86*

**சரிமணியின் பெயர்**

கலாபம், தோரை, சரி மணிப் பெயரே.
*(2 பெயர்கள்)* *87*

**மோதிரத்தின் பெயர்**

விரல் அணி, ஆழி, வீகம், இலச்சினை,
மோதிரம் (என்ன மொழியற்பால).
*(4 பெயர்கள்)* *88*

**வயிரச் சங்கிலியின் பெயர்**

சங்கிலி, வயிரச் சங்கிலி சாரும். *(1 பெயர்)* *89*

**பூணு நூலின் பெயர்**

உபவீதம், பூணு நூல். *(1 பெயர்)* *90*

**தெய்வ உத்தியின் பெயர்**

திரு, தெய்வ உத்தி. *(1 பெயர்)* *91*

**தலைக் கோலத்தின் பெயர்**

பிஞ்ஞகம், தலைக் கோலம். (1 பெயர்) 92

**தலைப் பாளையின் பெயர்**

தலைப்பாளை, தொய்யகம். (1 பெயர்) 93

**கல் அழுத்தும் குழி வட்டத்தின் பெயர்**

கல் அழுத்தும் குழி வட்டம், கேவணம்.
(1 பெயர்) 94

**பூணின் பெயர்**

கோளகை, தாங்கி, வயிரம், கிம்புரி,
பூணின் (பெயர் எனப் போற்றல் வேண்டும்).
(4 பெயர்கள்) 95

**வட்டிலின் பெயர்**

கோரம், வட்டில். (1 பெயர்) 96

**நாழிகை வட்டிலின் பெயர்**

கன்னல், நாழிகை வட்டில் ஆகும். (1 பெயர்) 97

**சட்டுவத்தின் பெயர்**

தவ்வி, சிலகம், தருவி, சட்டுவம்.
(3 பெயர்கள்) 98

**கண்ணாடியின் பெயர்**

ஆடி, படிமக்கலம், தருப்பணம், கஞ்சனம்,
ஆதரிசனம், முகுரம், கண்ணாடி (ஆகும்).
(6 பெயர்கள்) 99

**பெரு மணியின் பெயர்**

கண்டை, யானை மணி, பெரு மணித் (தொடர்பே).
(2 பெயர்கள்) 100

**கைம் மணியின் பெயர்**

பரந்த வட்டம், படலிகை, கைம் மணி.
(2 பெயர்கள்) 101

**சேகண்டியின் பெயர்**

எறி மணி, சேகண்டி ஆம் என உரைப்பர்.
(1 பெயர்) 102

**கலசப் பானையின் பெயர்**

கஞ்சனை, கலசப் பானை என்ப. (1 பெயர்) 103

**படிக்கத்தின் பெயர்**

படியகம், படிக்கம். (1 பெயர்) 104

**நெய்த் துடுப்பின் பெயர்**

சுருக்கு, சுருவம், நெய்த் துடுப்பு (ஆகும்).
(2 பெயர்கள்) 105

**தூப முட்டியின் பெயர்**

தூப முட்டி, இந்தளம், தடவு (எனச் சொல்ப).
(2 பெயர்கள்) 106

**தாளத்தின் பெயர்**

கிட்டி, பாண்டில், கஞ்சம், தாளம்.
(3 பெயர்கள்) 107

**தூப மணியின் பெயர்**

கைம்மணி, தூப மணி. (1 பெயர்) 108

**பூண் கொள்கலத்தின் பெயர்**

பீடிகை, துமானம், காண்டம், கண்டிகை,
கோடிகம், கடிப்பம், பூண் கொள் கலமே.
(6 பெயர்கள்) 109

**பரணியின் பெயர்**

கோயம், பரணி. (1 பெயர்) 110

**காளத்தின் பெயர்**

காகளம், காளம். (1 பெயர்) 111

**சிறு சின்னத்தின் பெயர்**

பீலி, சிறு சின்னம். (1 பெயர்) 112

**குறிஞ்சிப் பறையின் பெயர்**

தொண்டகம், முருகியம், துடி, (இவை மூன்றும்
வென்றி கொள்) குறிஞ்சிப் பறை (என விளம்புவர்).
(3 பெயர்கள்) 113

**பாலை நிலப் பறையின் பெயர்**

துடியே, பாலை (வேடர் தொல்) பறை.
(1 பெயர்) 114

**ஏறங் கோட் பறையின் பெயர்**

(முல்லையாளர்) ஏறங் கோட் பறை
(சொல்லிய) பம்பை, (ஆகலும் உரித்தே).
(1 பெயர்) 115

**மருத நிலப் பறையின் பெயர்**

கிணையே, மருதக் (கிளர்) பறை (ஆகும்).
(1 பெயர்) 116

**நெய்தற் பறையின் பெயர்**

சாபறை, நெய்தற் பறை (எனச் சாற்றுவர்).
(1 பெயர்) 117

**உவகைப் பறையின் பெயர்**

தூரியம், உவகைப் பறை (எனச் சொல்ப).
(1 பெயர்) 118

**சிறு பறையின் பெயர்**

ஆகுளி, சிறு பறை. (1 பெயர்) 119

**ஒரு கண் பறையின் பெயர்**

ஒரு கண் பறை, மொந்தை. (1 பெயர்) 120

**உடுக்கையின் பெயர்**

தண்ணுமை, உடுக்கை. (1 பெயர்) 121

**இடை சுருங்கு சிறு பறையின் பெயர்**

*துடி, இடை சுருங்கு (வடிவின்) சிறு பறை.*
*(1 பெயர்)* *122*

**மார்ச்சனையின் பெயர்**

*மண்ணை, மார்ச்சனை.* *(1 பெயர்)* *123*

**பரந்த வாய்ப் பறையின் பெயர்**

*பதலை, பரந்த வாய்ப் பறை (எனப் பகர்வர்).*
*(1 பெயர்)* *124*

**முழவத்தின் பெயர்**

*முழவம், குளிர் (என மொழியவும் படுமே).*
*(1 பெயர்)* *125*

**குட முழவின் பெயர்**

*மண்கணை, முழவம், குட முழவின் (பெயர்).*
*(2 பெயர்கள்)* *126*

**கடிப்பின் பெயர்**

*குணில், கடிப்பு (ஆகும்).* *(1 பெயர்)* *127*

**திமிலையின் பெயர்**

*சல்லரி, திமிலை.* *(1 பெயர்)* *128*

**பேரிகையின் பெயர்**

*சகண்டை, முழவம், பணையே, சகடம்,*
*துந்துபி, பேரிகைத் (தொகு பெயர் ஆகும்).*
*(5 பெயர்கள்)* *129*

**நிசாளத்தின் பெயர்**

*தண்ணுமை, நிசாளம்.* *(1 பெயர்)* *130*

**பன்றிப் பறையின் பெயர்**

*குடப் பறை, பன்றிப் பறை (எனக் கருதுவர்).*
*(1 பெயர்)* *131*

**கரடிப் பறையின் பெயர்**

*தட்டை, கரடிப் பறை (எனக் கூறுப).*
*(1 பெயர்)* *132*

**இடக்கையின் பெயர்**

*இடக்கை, ஆமந்திரிகை (எய்தும்).(1 பெயர்)* *133*

**படகத்தின் பெயர்**

*பணவம், திண்டிமம், ஆனகம், படகம்.*
*(3 பெயர்கள்)* *134*

**பல்வகைப் பறையின் பெயர்**

*சல்லரி, பம்பை, தடாரி, தக்கை,*
*பல்வகைப் பறையின் (பெயர்ப்பால ஆகும்).*
*(4 பெயர்கள்)* *135*

**வாச்சியப் பொதுவின் பெயர்**

*முரசு, தாளம், பீலி, முருகு, பொரு கோடணை,*
*முழவு, தூரியம், பணை, இயப் பொதுப் (பெயர்).*
*(8 பெயர்கள்)* *136*

**கொம்பின் பெயர்**

*வயிரே, இரலை, ஆம்பல், கோடு, (என்று*
*இனைய நான்கும்) கொம்பு (என இசைப்பர்).*
*(4 பெயர்கள்)* *137*

**யாழின் பெயர்**

*தந்திரி, வீணை, கின்னரம், விபஞ்சி,*
*கருவி, கோடவதி, அறுசரம், வல்லகி, (என*
*வருபவை ஓசை) யாழின் (பெயரே).*
*(8 பெயர்கள்)* *138*

**யாழ் முறுக்காணியின் பெயர்**

*மாடகம், முறுக்காணி.* *(1 பெயர்)* *139*

**யாழ் வலிக் கட்டின் பெயர்**

*திவவு, யாழ் வலிக் கட்டு.* *(1 பெயர்)* *140*

**யாழ் நரம்பின் பெயர்**

*கோலே, தந்திரி, குரல், யாழ் நரம்பே.*
*(3 பெயர்கள்)* *141*

**ஆதி யாழாவது**

*ஆயிரம் நரம்பிற்று, ஆதி யாழ் (ஆகும்).* *142*

**தேரின் பெயர்**

*கவரி, இயந்திரம், திகிரி, சயந்தனம்,*
*இரதம், வையம், கொடிஞ்சி, கூவிரி, தேர்.*
*(8 பெயர்கள்)* *143*

**தேர்க் காலின் பெயர்**

*உருளி, நேமி, பரிதி, உந்தி,*
*திகிரி, ஆழி, சில்லி, தேர்க்கால்.(7 பெயர்கள்)* *144*

**தேரின் அகத்தில் செறி கதிரின் பெயர்**

*ஆரே, உருளின் அகத்தில் செறி கதிர்.*
*(1 பெயர்)* *145*

**தேர் நடுவின் பெயர்**

*நாப்பணும், தட்டும், தேர் நடு (ஆகும்).*
*(2 பெயர்கள்)* *146*

**தேர்க் கொடிஞ்சியின் பெயர்**

*கூவிரம், கொடிஞ்சி.* *(1 பெயர்)* *147*

**தேர் மொட்டின் பெயர்**

*கூம்பு, தேர் மொட்டே.* *(1 பெயர்)* *148*

**பாண்டில் பூண்ட ஊர்தியின் பெயர்**

சிவிகை, பாண்டில் பூண்ட ஊர்தி,
சகடம், வையம் (எனப் பெயர் சாரும்).
(3 பெயர்கள்) 149

**பரி பூண்டு ஈர்க்கும் ஊர்தியின் பெயர்**

பாண்டில், கஞ்சிகை, வையம், (என்பன)
பரி பூண்டு ஈர்க்கும் ஊர்திப் (பால).
(3 பெயர்கள்) 150

**பண்டியின் பெயர்**

வையம், உருள், ஒழுகை, சாகாடு, சகடம்,
(எய்திய) சாடு, பண்டி (என்று இசைப்பர்).
(6 பெயர்கள்) 151

**பண்டியுள் இரும்பின் பெயர்**

இருசும், கந்தும், பண்டியுள் இரும்பாம்.
(2 பெயர்கள்) 152

**தேர்மேல் இடு பரப்பின் பெயர்**

பலகைப் பாவே, தட்டுப் பா (என
இலகு) தேரின் மேல் இடு பரப்பே.
(2 பெயர்கள்) 153

**தேர்மேல் மரச் சுற்றின் பெயர்**

கிடுகு, தேர் மேல் (புடை சூழ்) மரச் சுற்று.
(1 பெயர்) 154

**கலப்பையின் பெயர்**

நாஞ்சில், அலம், படை, கலனை, (என்ன
வாய்ந்த நான்கொடு) மேழியும், கலப்பை.
(5 பெயர்கள்) 155

**ஒன்றிற்கு அமைந்த பல் வகை உறுப்பின் பெயர்**

கலப்பையும், கலனையும், (என்ன வரும் பெயர்
உரைக்கில்) ஒன்றிற்கு அமைந்த பல் உறுப்பே.
(2 பெயர்கள்) 156

**கொழுவின் பெயர்**

கோளே, கொழு (ஆம்). (1 பெயர்) 157

**தூணின் பெயர்**

கந்து, எழு, வெளிலே, ஆளானம், தறி,
கம்பம், தம்பம், மதலை, பற்று, தூணே.
(9 பெயர்கள்) 158

**யானைத் தூணின் பெயர்**

ஆளானம், வெளில், யானை அணை தறி.
(2 பெயர்கள்) 159

**குறுந் தறியின் பெயர்**

போதிகை, குறுந் தறி. (1 பெயர்) 160

**வேள்வித் தூணின் பெயர்**

யூபம், வேள்வித் தூண். (1 பெயர்) 161

**கணைய மரத்தின் பெயர்**

எழுவே, கணைய மரம். (1 பெயர்) 162

**தொழு மரத்தின் பெயர்**

தொழுவே, தொழு மரம். (1 பெயர்) 163

**கதவின் பெயர்**

கவாடமும், புதவும், வாரியும், கதவே.
(3 பெயர்கள்) 164

**கதவில் செறி தாழின் பெயர்**

சீப்பு, காழ், கதவில் செறி தாழ் (ஆகும்).
(2 பெயர்கள்) 165

**யானைத் தோட்டியின் பெயர்**

அங்குசம், கோணம், யானைத் தோட்டி.
(2 பெயர்கள்) 166

**சுட்டுக் கோலின் பெயர்**

சுட்டுக் கோல், உலையாணிக் கோல் (எனச் சொல்ப).
(1 பெயர்) 167

**சம்மட்டியின் பெயர்**

கூடம், சம்மட்டி. (1 பெயர்) 168

**உரலின் பெயர்**

உலூகலம், கறை, (இவை இரண்டும்) உரலே.
(2 பெயர்கள்) 169

**உலக்கையின் பெயர்**

முசலமும், தடியும், உலக்கை (ஆகும்).
(2 பெயர்கள்) 170

**அஞ்சனக் கோலின் பெயர்**

கோல், அஞ்சனக் கோல். (1 பெயர்) 171

**எழுது கோலின் பெயர்**

துகிலிகை, எழுது கோல். (1 பெயர்) 172

**ஊசியின் பெயர்**

ஊசி, சூசி. (1 பெயர்) 173

**ஊசித் துளையின் பெயர்**

பாசம், ஊசித் துளை. (1 பெயர்) 174

**ஓலை தீட்டும் படையின் பெயர்**

ஊசி, கண்டம், ஆணி, ஓலை தீட்டும் படை.
(3 பெயர்கள்) 175

**சங்கிலியின் பெயர்**

சங்கிலி தொடர், துவக்கு, இடங்கணி (சாலும்).
(3 பெயர்கள்) 176

**உறியின் பெயர்**

சிமிலி, சிக்கம், சிதர், தூக்கு, உறியே. (4 பெயர்கள்) 177

**ஊஞ்சலின் பெயர்**

ஊசல், விண்டாண்டு, ஊஞ்சல் (ஆகும்).
(2 பெயர்கள்) 178

**கட்டிலின் பெயர்**

மஞ்சம், பாரி, அரி, பரியங்கம்,
(இங்கு இவை) கட்டில் (என மொழிந்தனரே).
(4 பெயர்கள்) 179

**விசியின் பெயர்**

விசி, அரி (ஆகும்). (1 பெயர்) 180

**தவத்தோர் பீடத்தின் பெயர்**

விட்டரம், பீடிகை, தவத்தோர் பீடம்.
(2 பெயர்கள்) 181

**சிங்காசனத்தின் பெயர்**

பத்திராசனம், சிங்காதனம் (பகரும்).(1 பெயர்) 182

**அளவைக் காலின் பெயர்**

குளகம், அம்பணம், தூம்பு, கச்சம்,
அளவைக் கால் (என்று அறையல் வேண்டும்).
(4 பெயர்கள்) 183

**நாழியின் பெயர்**

குஞ்சம், நாழி. (1 பெயர்) 184

**கொத்தளிப் பாயின் பெயர்**

ஆரை, கொத்தளிப் பாய். (1 பெயர்) 185

**புற் பாயின் பெயர்**

சாப்பை, புற் பாய். (1 பெயர்) 186

**பிரப்பம் பாயின் பெயர்**

சாதிப் பாய், பிரப்பம் பாய் எனச் சாற்றுவர்.
(1 பெயர்) 187

**தோற் பாயின் பெயர்**

சருமம், தோற் பாய். (1 பெயர்) 188

**தடுக்கின் பெயர்**

தவிசு, தடுக்கே. (1 பெயர்) 189

**குழாயின் பெயர்**

தண்டு, குழாய் (ஆம்). (1 பெயர்) 190

**பூந் தட்டின் பெயர்**

பூந் தட்டு, கோடிகம். (1 பெயர்) 191

**பூப் பெட்டியின் பெயர்**

பூப் பெட்டி, மூழி வாய். (1 பெயர்) 192

**கிடுகின் பெயர்**

சட்டம், கிடுகே. (1 பெயர்) 193

**விளக்குத் தண்டின் பெயர்**

தம்பம், கௌசிகம், மத்திகை, விளக்குத்
தண்டின் (பெயர் எனச் சாற்றப் பெறுமே).
(3 பெயர்கள்) 194

**முறத்தின் பெயர்**

சின்னம், தட்டு, சேட்டை, முற்றில்,
(முன்னிய) முறம் (என மொழியற்பால).
(4 பெயர்கள்) 195

**புட்டிலின் பெயர்**

புட்டில், இறைவை. (1 பெயர்) 196

**கூடையின் பெயர்**

கூடை, வட்டிகை. (1 பெயர்) 197

**சுளகின் பெயர்**

சுளகே, சூர்ப்பம். (1 பெயர்) 198

**துடைப்பத்தின் பெயர்**

சோதினி, மாறு, துடைப்பம் ஆகும்.(2 பெயர்கள்) 199

**மூழையின் பெயர்**

மூழை, மூழி. (1 பெயர்) 200

**மத்தின் பெயர்**

மத்து, மத்தம். (1 பெயர்) 201

**தயிர் கடை தறியின் பெயர்**

வெளில், தயிர் கடை தறி. (1 பெயர்) 202

**பாவாற்றியின் பெயர்**

பாவாற்றி, குச்சு. (1 பெயர்) 203

**நூல் நாழியின் பெயர்**

நூல் நாழி, நாடா. (1 பெயர்) 204

**காராம்பியின் பெயர்**

காராம்பி, பூட்டை, கிழார், அம்பி, காம்பி.
(4 பெயர்கள்) 205

**இறை கூடையின் பெயர்**

இறை கூடை, பிழார், இடார் (ஆகும்மே).
(2 பெயர்கள்) 206

**நீர்ப் பத்தரின் பெயர்**

நீர்ப் பத்தர்க்கு, அம்பணம், தூம்பு (நேர்ப).
(2 பெயர்கள்) 207

**பரணின் பெயர்**

பணவை, இதணம், கழுது, பரணே. (3 பெயர்கள்) 208

**வையம்**

சிவிகையும், ஆன் ஏறும், சகடமும், தேரும்,
அவனியும், வையம் (எனப் பெயர்) ஆகும்.
(5 பெயர்கள்) 378

புலவி நீக்கிய கல்விச் செல்விக்கு
அமிழ்து சுவை ஈந்த அரும்பெறல் இன்பத்து
ஒரு பெருஞ் செல்வன் அருவந்தைச் சேந்தன்
பகர்வுற்ற திவாகரத்து,

**பதினொன்றாவது ஒரு சொல் பல் பொருள் பெயர்த் தொகுதி முற்றிற்று.**

## 12. பல் பொருள் கூட்டத்து ஒரு பெயர்த் தொகுதி

கூறியது கூறினும் குற்றம் இல்லை
வேறு ஒரு பொருளை விளக்குமாயின்,
முன்னர் எய்திய பதினொரு தொகுதியுள்ளும்,
வந்தனவால் ஒரு சொல் பல் பொருள் பெயர்த்
தொகுதியின் வந்த சொற்கள் என் எனில்,
ஆண்டுச் சிறப்பு வகைக்கு எய்தியவை
ஈண்டுப் பொது வகைக்கு எய்தவும்படுமே. 1

**ஒன்று**

ஒன்று (என்பதுவே) வீடுபேறு (ஆகும்). 2

**இருமை**

இருமை (என்பது) இம்மையும், மறுமையும். 3

**இருவினை**

இருவினை நல்வினை, தீவினை (ஆகும்). 4

**இருவகைத் தோற்றம்**

இருவகைத் தோற்றம் சர, அசரம் (என்ப). 5

**இருவகை அறம்**

இருவகை அறமே இல்லறம், துறவறம். 6

**இருவகைக் கந்தம்**

இருவகைக் கந்தம் நற்கந்தம், துர்க்கந்தம். 7

**இரு சுடர்**

இரு சுடர் சந்திர சூரியர் (ஆகும்). 8

**இரு மரபு**

இரு மரபு தாய் வழி, தந்தை வழியே. 9

**இரு வகைப் பொருள்**

இரு வகைப் பொருள் கல்விப் பொருள், செல்வப் பொருள். 10

**இருவகை இன்பம்**

இருவகை இன்பம் இல்லதும், உள்ளதும். 11

**இரு வகை வீடு**

இரு வகை வீடு பற்று வீடு, பொருள் வீடு. 12

**மும்மை**

மும்மை உம்மையும், இம்மையும், மறுமையும். 13

**முப் பொறி**

மனமும், வாக்கும், காயமும், முப் பொறி. 14

**முச் செய்கை**

படைத்தல், காத்தல், அழித்தல், முச் செய்கை. 15

**முக் குற்றம்**

முக் குற்றம் காமம், வெகுளி, மயக்கம். 16

**முக் காலம்**

இறந்த காலம், நிகழ் காலம், எதிர் காலம், (என
மொழிந்த) மூன்று காலம் (ஆகும்). 17

**மூவிடம்**

முன்னிலை, படர்க்கை, தன்மை, மூவிடம். 18

**மூவுலகு**

பூமி, ஆகாயம், சுவர்க்கம், (என்ப
தாம் ஒரு) மூன்று நிலம் (எனும் தகைய). 19

**மூ வகை மொழி**

பட்டாங்கு பேசல், பழித்தல், புகழ்தல், (என
முட்டு இன்று ஆகும்), மூவகை மொழியே. 20

**முச் சுடர்**

முச் சுடர் ஆதித்தன், சந்திரன், அங்கி. 21

**முத் தீ**

அந்தணர் முத் தீ காருக பத்தியம்,
தென் திசை அங்கி, ஆகவனீயம். 22

**முச் சீவ அனல்**

உதரம், விந்து, பூத அனல், (என
ஒரு) மூன்று (ஆகும்) சீவ அனலே. 23

**முக் குணம்**

முக் குணம் சாத்துவிதம், இராசதம், தாமதம். 24

**சாத்துவித குணம்**

சாத்துவிதம் ஞானம், தவம், உண்மை, நல் அருள்,
(ஆர்த்த மோனமோடு), ஐம்புலன் அடக்கல். 25

**இராசத குணம்**

தானம், தவமே, தருமம் பேணல்,
ஞானம், கல்வி, நலன் (இவை) தெரிதல்,
(ஈனம் இல்லா) இராசத குணமே. 26

**தாமத குணம்**

தாமதம் நிறை பேர் உண்டி, மடி, வஞ்சம்,
காமம், நீதிக் கேடு, உறக்கம், சலமே. 27

**மூவகைத் தானம்**

முதல், இடை, கடை என மூவகைத் தானம். 28

**மூவகைத் தியாகம்**

தியாகத்து இனமே மூ வகை (அதனோடு)
உத்தமம், மத்திமம், அதமம் (என்ன
முற்றியது ஆங்கு) மூ வகைத் தானம்;
வலியும், மெலியும், சமனும் (ஆகும்). 29

**உத்தம தானம்**

அறத்தின் ஆற்றிய அரும் பெரும் பொருளைப்
புறத் துறைக் குற்றம் மூன்று அறுத்த நல் தவர்க்குக்
கொள்க எனப் பணிந்து குறையிரந்து அவர் வயின்
உள்ளம் உவந்து ஈவது, உத்தம தானம். 30

**மத்திம தானம்**

ஆதுலர், அந்தகர், ஊமர், உறுப்பிலிகள்,
செவிடர்க்கு ஈவது, மத்திம தானம். 31

**கடைப்படு தானம்**

ஆர்வம், புகழே, அச்சம், கைம்மாறு,
காரணம், கண்ணோட்டம், கடப்பாடு, (என்று இவை
ஏழும்) கடைப்படு தான உதவி. 32

**திரி கடுகம்**

திரிகடுகம் சுக்கு, மிளகு, திப்பிலி. 33

**திரிபலை**

திரிபலையாவது கடு, நெல்லி, தான்றி. 34

**திரிபுரம்**

மும் மதில் பொன்னும், வெள்ளியும், இரும்பும்,
(அன்ன) சிவன் முன் அழித்த முப் புரமே. 35

**சூரியன் மூவகை விதி**

திருத் தகு மேடம், இடபம், மிதுனம். 36

**நானிலம்**

நானிலம் குறிஞ்சி, முல்லை, மருதம், நெய்தல். 37

**சதுரங்கம்**

சதுரங்கம் யானை, தேர், குதிரை, காலாள். 38

**நாற் கரணம்**

மனம், புத்தி, ஆங்காரம், சித்தம், நாற் கரணம். 39

**நாற் கதி**

நாற் கதி உம்பர், மக்கள், விலங்கு, நரகர். 40

**நால் வகை இழிச் சொல்**

பொய், குறளை, கடுஞ் சொல், பயனில் சொல் என
(இவ் வகை) நான்கும் இழித்த சொல்லே. 41

**நால் வகை வேதம்**

நால் வகை வேதம் இருக்கு, தைத்திரியம்,
சாம வேதம், அதர்வணம் (தானே). 42

**நால்வகை அரண்**

மலை அரண், காட்டு அரண், மதில் அரண், நீர் அரண்,
(நவை அறு சிறப்பின்) நால் வகை அரணே. 43

**நால் வகைக் கேள்வி**

அறம், பொருள், இன்பம், வீடு (என நான்கும்
திறம் தெரிந்து கேட்டல்) நால் வகைக் கேள்வி.
சொன்ன நான்கினும் ஒத்தே ஒழுகுதல்
ஐவகைக் கேள்வி (ஆம் என அறைவர்). 44

**நால் வகைப் புலமை**

கவியே, கமகன், வாதி, வாக்கி (என
இவை ஒரு நான்கே) புலமைக்கு இயல்பே. 45

**கவியின் வகை**

ஆசு, மதுரம், சித்திரம், வித்தாரம், (எனும்
பா வகை பாடுவோன்) கவி (எனப்படுமே). 46

**கமகன் வகை**

ஞாபகம், செம் பொருள், நடையின் எப் பொருளும்,
காசு இன்று உரைப்போன், கமகன் (ஆகும்). 47

**வாதி வகை**

ஏதுவும், மேற்கோளும் எடுத்துக் காட்டிப்
போதி னளவும் செய்து தன் சொல் நிறீஇ,
வாதில் பிறர் சொல் மறுப்போன், வாதி. 48

**வாக்கி வகை**

அறம், பொருள், இன்பம், வீடு (எனும் திறங்கள்)
கேட்க வேட்க இனியன கூறும்
மாற்றம் உடையோன், வாக்கி (ஆகும்). 49

**ஆசு கவி வகை**

கொடுத்த பொருளில் தொடுத்த இன்பத்தின்
அடுத்த பொழுதில் பாடுவது, ஆசு கவி. 50

**மதுர கவி வகை**

பொருளின் பொலிவும், சொல்லின் செல்வமும்,
தொடையும், தொடைக்கண் விகற்பமும், துதைந்து,
உருவகம் முதலாம் அலங்காரம் உட்கொண்டு,
ஓசை பொலிவுற்று, உணர்வோர் உளங்கட்கும்
மா கடல் அமிழ்தம் போல் பாடுதல், மதுர கவி. 51

**சித்திர கவி வகை**

மாலை மாற்றே, சக்கரம், சுழிகுளம்,
ஏக பாதம், எழு கூற்றிருக்கை,

காதை கரப்பே, கரந்துறைப் பாட்டே,
பாத மயக்கே, பாவின் புணர்ப்பே,
கூட சதுக்கம், கோ மூத்திரியே,
ஓர் இனத்து எழுத்தால் உயர்ந்த பாட்டே,
ஒற்றுப் பெயர்த்தல், ஒரு பொருட் பாட்டே,
சித்திரப் பாவே, விசித்திரப் பாவே,
விகற்ப நடையே, வினு வுத்தரமே,
சருப்பதோபத்திரம், சார்ந்த எழுத்தே,
வருக்கமும், மற்றும் வடநூற் கடலுள்
ஒருக்குடன் வைத்த உதாரணம் நோக்கி
விரித்து மறைத்தும் மிறைக் கவிப் பாட்டுத்
தெரித்துப் பாடுவது சித்திர கவியே.
(21 பெயர்கள்) 52

**வித்தார கவி வகை**

மும் மணிக் கோவையும், பன் மணி மாலையும்,
மறமும், கலி வெண் பாட்டும், மடலூர்ச்சியும்,
கிரீடையும், கூத்தும், பாசாண்டத் துறையும்,
விருத்த கவிதையும், (இயல் இசை நாடகத் தொடு
விரித்துப் பாடுவது) வித்தார கவியே.
(9 பெயர்கள்) 53

**நால் வகைப் புண்ணியத் தோற்றம்**

நால் வகைப் புண்ணியத் தோற்றம் தவத்துடன்,
(மேலாம்) ஒழுக்கம், தானம், கல்வி. 54

**நால் வகை நிலே**

சிலேயோர் நால்வகை நிலே பைசாசம்,
ஆலீடம், மண்டிலம், பிரத்யாலீடம். 55

**பைசாச நிலே வகை**

ஒரு கால் நிலே நின்று ஒரு கால் முடக்கும்,
பரியாயம் என்பது, பைசாச நிலேயே. 56

**ஆலீட நிலே வகை**

வலக் கால் மண்டலித்து இடக் கால் முந்துறும்
அதன் பெயர், ஆலீட நிலேயது (ஆகும்). 57

**மண்டில நிலே வகை**

இரு கால் மண்டலித்திடுதல், மண்டில நிலே. 58

**பிரத்யாலீட நிலே வகை**

வலக்கால் முந்துற்று இடக் கால் மண்டலிப்பின்,
பிரத்யாலீடம் (எனப் பெயர் பெறுமே). 59

**நான்கு உயிர்த் தோற்ற வகை**

(பை போல்) குடரில், முட்டையில், நிலத்தில்,
மெய்யக வியர்வையில், நான்கு உயிர்த் தோற்றம். 60

**ஐந் திணே வகை**

ஐந் திணே குறிஞ்சி, பாலே, முல்லே,
(வந்த) நெய்தல், மருதம் (ஆகும்). 61

**பஞ்ச வாச வகை**

தக்கோலம், ஏலம், இலவங்கம், சாதிக்காய்,
கர்ப்பூரம் (என்று இவை கமழ்) பஞ்ச வாசம். 62

**பஞ்சாங்க வகை**

திதியே, வாரம், நாள், யோகம், கரணம் (எனப்
பகரும் சோதிடப்) பஞ்சாங்கம் (ஆகும்). 63

**பஞ்ச மா சத்த வகை**

பஞ்ச மா சத்தம், தோல், துளே, நரம்பு,
கஞ்சனே, பாடல் (எனக் கழறினரே). 64

**மதனன் பஞ்ச பாண வகை**

மதனன் பஞ்ச பாணமாவன
முல்லே, அசோகு, முழு நீலம், சூதப் பூ,
(அல்லி) முளரியோடு ஐந்து (என மொழிப). 65

**பஞ்ச பாணச் செயல் வகை**

மதன் பஞ்ச பாணச் செயல் உன்மத்தம்,
தீரம், சந்தாபம், வசீகரணம், மோகனம். 66

**பஞ்ச சயன வகை**

மயிர்ச் சேணம், பஞ்சு மெத்தை, (வண் படாம்) தூவி,
(பயிற்றும் தண்) வீ, பாய், பஞ்ச சயனம். 67

**சயன வகை**

மலர்ச் சயனம், சல சயனம், தோல் சயனம், (மற்றும்
பழிப்பில்) பதினேந்தும் சயனம் (என்ப). 68

**பஞ்ச பாதக வகை**

பஞ்ச பாகதம் கொலே, களவு, கள் உண்டல்,
(எஞ்சல் இல்) குரு நிந்தை, பொய்யும் (என்ப). 69

**ஐம் பால் வகை**

ஒருவன், ஒருத்தி, பலர், ஒன்று, பல, (என
அறியக் கூறிய) பால் ஐந்து (ஆகும்). 70

**ஐம் பால் முடிவகை**

ஐம் பால் முடியே, கொண்டை, சுருள், குழல்,
(வம்பு ஆர்) பனிச்சை, வார் மயிர், முடியே. 71

**ஐந்து உண்டிவகை**

கடித்து, பருகி, விழுங்கி, நக்கி,
எடுத்துச் சுவைத்தல் (இவை ஐந்து) உண்டி. 72

**குதிரை நடைவகை**

மல்ல கதி, மயூர கதி, வானர கதியொடு,
(சொல்லிய) சச கதி, சர கதி (என்னப்
பல் இயல்) பரி மாவிற்கு ஐந் தொழில் நடையே. 73

**ஐவகை வினு**

அறியான் வினுவல், அறிவு ஒப்புக் காண்டல்,
ஐயம் அறுத்தல், அவன் அறிவு தான் கோடல்,
மெய் அவர்க்குக் காட்டலோடு ஐ வகை வினுவே. 74

#### ஈசன் ஐம் முக வகை

சத்தியோ சாதம், வாமம், அகோரம்,
தற்புருடம், ஈசானம் (என) ஈசர்க்கு ஐம் முகம். 75

#### பஞ்ச பூத வகை

மண்ணும், நீரும், கனலும், காற்றும்,
விண்ணும் பஞ்ச பூதம் (என்ப). 76

#### ஐம் பொறி

மெய், வாய், கண், மூக்கு, செவி ஐம் பொறியே. 77

#### ஐவகைத் தாயர்

பாராட்டும் தாய், ஊட்டும் தாய், முலைத் தாய்,
கைத் தாய், செவிலித் தாய் ஐந்து (எனக் கழறுவர்). 78

#### அந்தணர் அறு தொழில் வகை

ஓதல், ஓதுவித்தல், வேட்டல், வேட்பித்தல்,
ஈதல், ஏற்றல் (என்று) இரு மூ வகை.
(ஆதிக் காலத்து) அந்தணர் அறு தொழில். 79

#### அரசர் அறு தொழில் வகை

அரசர் அறு தொழில் ஓதல், வேட்டல்,
(புரை தீரப் பெரும்) பார்ப் புரத்தல், ஈதல்,
(கரை அறு) படைக்கலம் கற்றல், விசயம். 80

#### வணிகர் அறு தொழில் வகை

வணிகர் அறு தொழில் ஓதல், வேட்டல்,
ஈதல், உழவு, பசுக் காவல், வாணிகம். 81

#### வேளாளர் அறு தொழில் வகை

வேளாளர் அறு தொழில் உழவு, பசுக் காவல்,
(தெள்ளிதின்) வாணிபம், குயிலுவம், காருக வினை,
(ஒள்ளிய) இரு பிறப்பாளர்க்கு ஏவல் செயல். 82

#### குயிலுவத் தொழில் வகை

குயிலுவம் வாத்தியம் கொட்டுதல் (ஆகும்). 83

#### காருக வினை வகை

பருத்தி நூல் பட்டு நூல் அமைத்து ஆடை ஆக்கலும்,
சுமத்தலும், பிறவும், காருக வினைத் (தொழில்). 84

#### ஆறு அங்க வகை

ஆறு அங்கம் மந்திரம், வியாகரணம், நிகண்டு,
சந்தோபிசிதி, நிருத்தம், சோதிடம். 85

#### அறு சமய வகை

அறு சமயம் வைசேடிகம், நையாயிகம்,
(மறு இல்) மீமாஞ்சை, ஆருகதம், பௌத்தம்,
பிரதி லோகாயதம் (என்னும் பெற்றிய). 86

#### பாடாண்டத் துறை வகை

பாடாண்டத் துறையும் (இவற்றுள் பலவாம்,
பேசில்) தொண்ணூற்று அறு வகைப்படுமே. 87

#### ஆறு உட்பகை வகை

ஆறு உட் பகை, காமம், வெகுளி, உலோபம்,
(மாறு கொள்) மோகம், மதம், மாற்சரியம். 88

#### அறு வகைத் தானை

வேல் தானை, வாள் தானை, வில் தானை, (மேலோர்)
தேர்த் தானை, பரித் தானை, களிற்றுத் தானை, (என
ஆற்றல் சான்ற) அறுவகைத் தானை. 89

#### நல் நாட்டு அமைதி அறுவகை

செல்வம், விளைவு, பல் வளம், செங்கோன்மை,
(கொல்) குறும்பு இன்மை, கொடும் பிணி இன்மை
(இவ் வயின்) ஆறும் நல் நாட்டு அமைதி. 90

#### அறு சுவை வகை

அறு சுவை தித்தித்தல், புளித்தல், கைத்தல்,
(மறு அறு) துவர்த்தல், கூர்த்தல், காழ்த்தல். 91

#### அரசியல் அறு வகை

படையும், குடியும், கூழும், அமைச்சும்,
அரணும், நட்பும் அரசியல் ஆறே. 92

#### அறுவகை உலக நடை

அற நிலை அறமும், மற நிலை அறமும்,
அற நிலைப் பொருளும், மற நிலைப் பொருளும்,
அற நிலை இன்பமும், மற நிலை இன்பமும் (என)
ஆறு (வகைத்தே) உலகின் நடையே. 93

#### அற நிலை அறத்தின் வகை

வருணக் காப்பில் பிறழா நெறி நிலை
பெறுதல், பொருளால் பேணும் பெற்றி,
அற நிலை அறம் (என்று அறைந்தனர் புலவர்). 94

#### மற நிலை அறத்தின் வகை

ஆநிரை மீட்டல், (அரும்) பகை தெறுதல்,
(ஊனம் இல்) செஞ் சோற்று உதவிப் போர்வயின்
ஈனம் செய்தலும், மறநிலை அறமே. 95

#### அற நிலைப் பொருள் வகை

நெறிவழி நின்று நெறியால் உழந்து
பெறும் பொருள் என்ப, அறநிலைப் பொருளே. 96

#### மற நிலைப் பொருள் வகை

அமர் உழந்து கொண்டவும், அருந் திறை கொண்டவும்,
தவறு செய் தீயோர் தண்டப் பொருளும்,
கவர் சூது வென்றவும், மற நிலைப் பொருளே. 97

#### அற நிலை இன்ப வகை

ஒத்த குலமும், ஒத்த ஆயுளும்,
ஒத்த செல்வமும், ஒத்த நலனும்,
அத்தக உடையது, அறநிலை இன்பம். 98

### மறநிலே இன்ப வகை

ஏறு தழுவல், இலக்கம் எய்தல்,
(கூறு) பொருள் கொடுத்தல், வலிதில் கோடல்,
(மாறு படு நிலேய) மற நிலே இன்பம். 99

### கரும பூமி ஆறு வகை

உழவு, தொழிலே, வரைவு, வாணிகம்,
விச்சை, சிற்பம் (என்று இத் திறத்து) அறு தொழில்
(கற்ப நடையது) கரும பூமி. 100

### போக பூமியின் வகை

பதினறு ஆட்டைக் குமரனும், விதி வழிப்
பன்னீர் ஆட்டைக் குமரியும் ஆகி,
ஒத்த அன்பினும், ஒத்த நலத்தினும்,
கற்பக நல் மரம் நல் பயன் உதவ,
ஆகிய செய் தவத்தளவும் அவ் வழிப்
போகம் நுகர்வது, போக பூமி. 101

### போக பூமி அறுவகை

ஆதி அரி வஞ்சம், நல் அரி வஞ்சம்,
ஏமத வஞ்சம், இரண வஞ்சம்,
தேவ குருவம், உத்தர குருவம் (எனப்)
போக பூமி அறுவகைப்படுமே. 102

### அறுவகைச் சக்கரவர்த்திகள் வகை

அரிச்சந்திரன், நளன், முசுகுந்தன், புரூரவா,
சகரன், கார்த்தவீரியன் (என்ன)
அறுவகைச் சக்கரவர்த்திகளாகும். 103

### ஏழு தீவின் வகை

(முதலது) நாவலந் தீவு, இறலித் தீவே,
குசையின் தீவே, கிரவுஞ்சத் தீவே,
சான்மலித் தீவே, தெங்கின் தீவே,
புட்கரத் தீவே (எனும் ஓர்) ஏழும்
(ஏத்திய) பெருந் தீவு ஏழிற்கும் பெயரே;
ஏழ் பெருந் தீவிற்கும், ஏழ் பொழில் (எனப்படும்). 104

### ஏழு சமுத்திர வகை

உவரோடு, கரும்பு, மது, நெய், தயிர், பால், புனல்
(மா) கடல் ஏழ் (என வகுத்தனர் புலவர்). 105

### மேல் ஏழ் உலக வகை

உலகு ஏழ் பூலோகம், புவ லோகம்,
சுவ லோகம், மக லோகம், சன லோகம்
தவ லோகம், சத்திய லோகம். 106

### கீழ் ஏழ் உலக வகை

அதல, விதல, சுதல, நிதல,
தராதல, ரசாதல, மகா தலம் (என்னப்
பாதலம் ஓர் ஏழ் உலகு) எனப் பகர்வர்;
இரு வகை ஏழ், பதினல் உலகு என்ப. 107

### சத்த குல பருப்பத வகை

இமயம், மந்தரம், கைலே, வட விந்தம்,
நிடதம், ஏம கூடம், நீலகிரி (எனக்
குல வரை) ஏழும் (கூறும் என்ப). 108

### எழு மேக வகை

புட்கலம், மாவணி, புட்கல தரணி,
சலாநிதி, சல நிதி, சகல வருணி,
நீலி (என்ப) ஏழு முகிலின் (பெயர்). 109

### ஏழு மழை வகை

பொன்னும், பூவும், புனலும், செந்நெலும்,
மண்ணும், கலனும், சோரியும் அதன் பெயல். 110

### எழு நரக வகை

பெருங் களிற்று வட்டம், பெரு மணல் வட்டம்,
எரியின் வட்டம், புகையின் வட்டம்,
இருளின் வட்டம், பெருங் கீழ் வட்டம்,
அரி படை வட்டம் (என்று) எழு வகை நரகம். 111

### சத்த மாதர்கள் வகை

பிரமாணி, இந்திராணி, வைணவி, வராகி,
கௌமாரி, மாயேசுரி, மாகாளி எழுவர். 112

### எழு வகைத் தாது

இரதம், உதிரம், என்பு, தோல், தசை,
மூளே, சுக்கிலம் எழு வகைத் தாதே. 113

### செங்கோல் வேந்தன் எழு வகைப் பேறு

அறம், பொருள், இன்பம், அன்பு, மறுமை,
திறம்பாப் புகழ், மதி (என்று இவை) ஏழும்
பெறும் செங்கோலின் நெறிச் செல் வேந்தன். 114

### அட்ட மா நாக வகை

அட்ட மா நாகம் வாசுகி, அனந்தன்,
விட்ட பற்பன், மகாபற்பன், சங்க
பாலன், தக்கன், கார்க்கோடகனே,
ஏலு மாகுளிகன் (என்று) எண் வகை நாகம். 115

### அட்ட திக்குப் பாலகர் வகை

இந்திரன், அங்கி, யமன், நிருதி, வருணன்,
(வந்த) வாயு, குபேரன், ஈசானன்,
(என்ன) எண் திசை உலோக பாலகர். 116

### அட்ட திக்குப் பாலகர் சார் திசை வகை

கீழ்த் திசை முதலாச் சார்ச்சி உடைமையின்
அவ்வவர் பெயரொடும் அத் திசை மொழிப. 117

### சூரிய சந்திரர் சார் திசை

கீழ்த் திசை, அருக்கற்கு; வடதிசை சோமற்குச்
சார்ச்சியாகச் சாற்றினர் புலவர். 118

**அவ் எட்டினுள் நற் கண வகை, தீக் கண வகை**

நிலனும், நீரும், மதியும், இயமானனும்,
நலம் (மிகும்) முதல் வரில்; பிற நால், ஊனம். 141

**எண் வகை மெய்ப் பரிசம்**

ஒட்டுதல், பிடித்தல், தீண்டல், தடவுதல்,
கட்டுதல், வெட்டல், குத்தல், ஊன்றல் (என்று)
எட்டும் (தக்க) மெய்ப்பரிசம் (என்ப). 142

**எண் வகைக் கணிதம்**

சங்கலிதம், விபகலிதம், குணனம், பாகாரம்,
வர்க்கம், வர்க்க மூலம், கனமொடு,
கனமூலம் (என்னக் காட்டும்) எண் கணிதம். 143

**எண் வகை மணம்**

பிரமம், பிரசாபத்தியம், ஆரிடம்,
தெய்வம், காந்தருவம், ஆசுரம், இராக்கதம்,
பைசாசம் (என்னப் பகரும்) எண் மணமே. 144

**எண் வகை வெற்றி**

வெட்சி நிரைகவர்தல், மீட்டல், கரந்தையாம்,
வட்கார் மேல் செல்வது வஞ்சியாம், - உட்கார்
எதிர் ஊன்றல் காஞ்சி, எயில் காத்தல் நொச்சி,
அது வளைத்தல் ஆகும் உழிஞை.

**அதிரப் பொருவது தும்பை ஆகும்,**

போர்க் களத்து மிக்கார் செரு வென்றது வாகையாம்,
(அத்திணைத் தொழிலும், அத் திணைப் பூவும்,
அப் பெயர் பெறுவது அந் நிலத்து உரித்தே). 145

**எண் திசை யானை**

ஐராவதம், புண்டரிகம், வாமனம், குமுதம்,
அஞ்சனம், புட்பதந்தம், சார்வ பூமம்,
சுப்பிர தீபம் (என்னச் சொல்லும்)
எண் திசை யானைக்கு (இயலும்) பெயரே. 146

**நவ கண்டம்**

வடபால் விதேகம், தென்பால் விதேகம்,
கீழ்பால் விதேகம், மேல்பால் விதேகம்,
வடபால் இரேவதம், தென்பால் இரேவதம்,
வடபால் பரதம், தென்பால் பரதம்,
மத்திம கண்டம் (என்று இத்திறம் என்ப
நாவலந் தீவின்) நவ கண்டப் பெயரே. 147

**நவ புண்ணியம்**

எதிர்கொளல், பணிதல், இருக்கை, கால்நீர்,
புது மலர், தூபம், விளக்கே, புகழ்தல்,
அறு சுவை உண்டி அமைந்தோர்க்கு ஆற்றுதல்,
நவ புண்ணியத்தின் (நாமம் ஆகும்). 148

**நவ தாரணை**

நாம தாரணை, வச்சிர தாரணை,
மாயா தாரணை, சித்திர தாரணை,
செய்யுள் தாரணை, நிறைவு குறைவாகிய
எண் பொருள் தாரணை, சத்த தாரணை,
வத்து தாரணை, சதுரங்க தாரணை,
நவ தாரணையின் (நாமம் ஆகும்). 149

**நவ தாளம்**

அரி தாளம், மரும தாளம், சம தாளம், சய தாளம்,
சித்திர தாளம், துருவ தாளம்,
நிவிர்த்த தாளம், படிம தாளம்,
விட தாளம் (இவையே) நவ தாளம் (என்ப). 150

**நவ மணி**

வைரம், வைடூரியம், முத்து, மாணிக்கம்,
பவளம், கோமேதகம், இந்திர நீலம்,
மரகதம், புட்பராகம், நவ மணிப் (பெயரே). 151

**நாடக நவ ரசம்**

சிங்காரம், பெரு நகை, கருணை, வீரியம்,
அற்புதம், பயம், ரௌத்திரம், குற்சை, சாந்தம்,
(என்ன நாடகத்து இயலும்) நவரசம். 152

**பத்துத் திசை**

கிழக்கும், தெற்கும், மேற்கும், வடக்கும் (என
நடக்கும் என்ப நாற் பெருந் திசையும்)
அந்தராளம் திசை நாற் கோணம்,
கீழ், மேல் திசையொடு பத்து (எனக் கிளப்பர்). 153

**தசாங்கம்**

ஆறும், மலையும், யானையும், குதிரையும்,
நாடும், ஊரும், கொடியும், முரசும்,
தாரும், தேரும் தசாங்கம் எனப்படும்
தேரின் அதற்குச் சின்னமும் என்ப. 154

**அருச்சுனன் தச நாமம்**

பற்குனன், சுவேத வாகனன், பார்த்தன்,
சவ்வியசாசி, கிரீடி, தனஞ்சயன்,
விசயன், வீபற்சு, காண்டிவன், கிருட்டினன்,
அருச்சுனன் தச நாமங்கள் (ஆகும்). 155

**வேளாளர் பத்து வகைத் தொழில்**

ஆணைவழி நிற்றல், அழிந்தோரை நிறுத்தல்,
கைக் கடன் ஆற்றல், கசிவு அகத்து உண்மை,
ஒக்கல் போற்றல், ஓவா முயற்சி,
மன் இறை தருதல், ஒற்றுமை கோடல்,
விருந்து புறந்தருதல், திருந்திய ஒழுக்கம்,
வேளாண்மை மைந்தர்க்கு ஓர் ஈர் ஐந்தே. 156

**அரி தசாவதாரம்**

மீனே, ஆமை, வராகம், நரசிங்கம்,
வாமனன், பரசிராமன், இராமன்,
பலதேவன், வசுதேவன், (வரு) கற்கி (என்று
ஆகும்) ஈர் ஐந்தும் அரி அவதாரம். 157

### சிற்பத் தொழில் பத்து உறுப்பு

கல்லும், உலோகமும், செங்கலும், மரமும்,
மண்ணும், சுதையும், தந்தமும், வண்ணமும்,
கண்ட சருக்கரையும், மெழுகும் (என்று இவை
பத்தே சிற்பத் தொழிற்கு உறுப்பு ஆவன). 158

### ஏகாதச உருத்திரர்

மாதேவன், சிவன், உருத்திரன், சங்கரன்,
நீல லோகிதன், ஈசானன், விசயன்,
வீமதேவன், பவோற்பவன், காபாலி,
சௌமியன் ஏகாதச உருத்திரர் (ஆகும்). 159

### துவாதச ஆதித்தர்

வைகத்தன், விவச்சுதன், மார்த்தாண்டன், பாற்கரன்,
இரவி, உலோகப் பிரகாசன், உலோக சாட்சி,
திரிவிக்கிரமன், ஆதித்தன், சவித்திரன், துவட்டா,
பங்கிசமாலி (எனப்) பன்னிரண்டு ஆதித்தர். 160

### உயிர் வேதனை பன்னிரண்டு வகை

அனலும், சீதமும், வாதமும், பனியும்,
புனலும், ஆயுதமும், விடமும், விட மருந்தும்,
பசியும், நீர் வேட்கையும், பிணியும், முன்
வறுமையும்,
உயிரின் வேதனை ஓர் ஈர் ஆறே. 161

### பதினெண் பாடை

அங்கம், வங்கம், கலிங்கம், கௌசிகம்,
சிந்து, சோனகம், திரவிடம், சிங்களம்,
மகதம், கோசலம், மராடம், கொங்கணம்,
துளுவம், சாவகம், சீனம், காம்போசம்,
அருணம், பப்பரம் எனப் பதினெண் பாடை. 162

### தேவர் பதினெண் கண வகை

அமரர், சித்தர், அசுரர், தைத்தியர்,
கருடர், கின்னரர், கிம்புருடர், காந்தருவர்,
இயக்கர், விஞ்சையர், இராக்கதர், பூதர்,
பைசாசர், அந்தரர், முனிவர், உரகர்,
ஆகாய வாசியர், போக பூமியர் (எனப்)
பதினெண் கணத்தின் பகுதி (ஆகும்). 163

### அரசர்க்கு மூவகையிற் பதினெண் கிளை வகை

அமாத்தியர், புரோகிதர், சேனாபதியர்,
(தவாத் தொழில்) தூதர், சாரணர் (என்று இவை
அரசர்க்கு ஆகும்) ஐம் பெருங் குழுவும்,
காரணக் கிளைஞரும், கரும விதிகாரரும்,
கனகச் சுற்றமும், கடை காப்பாளரும்,
நகர மாக்களும், நளி படைத் தலைவரும்,
இவுளி மறவரும், யானை வீரரும்,
(அரசர்க்கு) எண் பெயர் ஆயம் (என்ப);
(அடுத்த) நட்பாளரும், அந்தணாளரும்,
மடைத் தொழிலாளரும், மருத்துவக் கலைஞரும்,
நிமித்தகாரரும், (நீள் நில) வேந்தர்க்கு
(உரைத்த) ஐம் பெயர் உறுதிச் சுற்றம்;
(உரைத்த முப்பாலும் உயர் குடை வேந்தர்க்குப்
பகுத்த) பதினெண் கிளைப்பாலோரே. 164

### யாக்கையிற் பதினெண் குற்றம்

பசியும், நீர் வேட்டலும், பயமும், வெகுளியும்,
உவகையும், வேண்டலும், நினைப்பும், உறக்கமும்,
நரையும், நோய் படுதலும், மரணமும், பிறப்பும்,
மதமும், இன்பமும், அதிசயமும், வியர்த்தலும்,
கேதமும், கையறவும் (ஆகும் என்ப
மாய) யாக்கைக்குப் பதினெண் குற்றம்;
இக் குற்றம் நீக்கியோர் வச்சிர யாக்கையோர். 165

### பதினெண் புராணம்

மச்சியம், கூர்மம், வராகம், வாமனம்,
பிரமம், வைணவம், பாகவதம், சைவம்,
இலிங்கம், பௌடிகம், நாரதீயம், காரூடம்,
பிரமகைவர்த்தம், மார்க்கண்டேயம், காந்தம்,
பிரமாண்டம், ஆக்கினேயம், பதுமம் (என்று இவை
பாற்படு) பதினெண் புராணம் (ஆகும்). 166

### உப புராணம் பதினெண் வகை

உசனம், கபிலம், காளி, சனற்குமாரம்,
சாம்பவம், சிவதன்மம், சௌரம், தூருவாசம்,
நந்தி, நாரசிங்கம், நாரதீயம்,
பராசரம், பார்க்கவம், ஆங்கிரம், மாரீசம்,
ஆனவம், வாசிட்டலிங்கம், வாருணம்,
(ஆம்) உப புராணம் அறு மூன்று (என்ப). 167

### தரும நூல் பதினெண் வகை

மனுவே, அத்திரி, விண்டு, வாசிட்டம்,
இயமம், ஆபத்தம்பம், இரேவதம், சுரலைவம்,
கோசம், அங்கிராமம், பராசரம், வியாசம்,
துவாத்தராம், கவுத்துவம், காத்திகேயம், திசாகரம்,
பிரகற்பதியே, மங்குலீயம் (என்னத்)
தரும நூல் பதினெட்டு (ஆகும் என்ப). 168

### பதினெண் யாக வகை

சோதிட்டோமம், அக்கினிட்டோமம்,
அத்தியக்கினிட்டோமம், வாசபேயம்,
அத்திராத்திரம், சோம யாகம், காடகம்,
சாதுர் மாசியம், சவித்திராமணியே,
புண்டரீகம், சிவகாமம், மயேந்திரம்,
அங்கிசசனே, இராசசூயம்,
அச்சுவமேதம், விச்சுவதித்து,
நரமேதம், பிரமமேதம் (என்னப்)
பதினெட்டு யாகப் (பல பெயராகும்). 169

### இருபத்தைந்து தத்துவம்

நிலம், நீர், நெருப்பு, காற்று, ஆகாயம், (என
அளவின் நின்ற) ஐம் பெரும் பூதமும்,
ஐந்து வாயிலும், அவற்றின் புலனும்,
கை, கால், குதம், வாய், மானுடக் குறி (எனக்)
கருமேந்திரியங்கள் ஐந்தும், (அவற்றொடு)
மனம், புத்தி, ஆங்காரம், சித்தம் நான்கும்
இயமானனோடு, இருபத்தைந்து தத்துவம். 170

### இருபத்தெட்டு அலங்காரம்

உருவகம், உவமை, வழி மடக்கு, நிலை மடக்கு,
(விரி சுடர்) விளக்கு, (என விரவி வருவனவும்),
வேற்றுமை நிலையே, வெளிப்படு நிலையே,
வார்த்தை, தன்மை, பிற பொருள் வைப்பு (எனப்
பால் படக் கிளந்த பகுதியின் வருவனவும்),
சிறப்பு மொழி, சிலேடை, மறுத்து மொழி நிலையே,
நோக்கே, உள் தொடர், தொகை மொழி, மிகை மொழி,
உடன் நிலைக் கூட்டம், உவமான வுருவகம்,
நுவலா நுவற்சி, தலைக் கட்டிய மொழி,
நிதரிசனம், பாராட்டு, ஒருங்கிய நிலையே,
ஐயம், உயர்வே, விரவு இயல், வாழ்த்து (என
எய்தக் கூறிய) எழு நான்கு அலங்காரம். 171

### முப்பத்திரண்டு அறம்

ஆதுலர் சாலை, ஓதுவார்க்கு உணவு, அறு
சமயத்தோர்க்கு உணவு, பசுவுக்கு வாயுறை,
சிறைச் சோறு, ஐயம், தின் பண்டம், மகச் சோறு,
மகப் பெறுவித்தல், மக வளர்த்தல், மகப் பால்,
அறவைப் பிணம் சுடுதல், அறவைத் தூரியம்,
வண்ணார், நாவிதர், வதுவை, பூணூல், நோய் மருந்து,
கண்ணாடி, காது ஓலை, கண் மருந்து, தலைக்கு எண்ணெய்,
பெண் போகம், சுண்ணம், பிறர் துயர் காத்தல்,
தண்ணீர்ப் பந்தர், மடம், தடாகம், கா,
ஆ உரிஞ்சு நடு தறி, ஏறு விடுத்தல்,
விலை உயிர் விடுத்துக் கொலை உயிர் மீட்டல்,
இச் செயல் முப்பத்திரண்டு அறம் என்ப. 172

### முப்பத்து முத் தேவர் வகை

ஆதித்தர் பன்னிருவர், அச்சுவினிகள் இருவர்,
ஈசர் பதினொருவர், எண்மர் வசுக்கள்,
(ஆக) முப்பத்து முத் தேவர் (என்ப). 173

### ஓர் அறி உயிர் வகை

ஒன்றே புலனது ஒன்றே உடைமையின்,
(மற்றைப்) புல்லும், மரனும், ஓர் அறிவே. 174

### ஈர் அறி உயிர் வகை

உற்று அறி புலனும், நாவும் உடைமையின்,
அட்டையும், நந்துவும் (போல்வது) ஈர் அறிவே. 175

### மூவறி உயிர்வகை

உற்று அறி புலனும் மூக்கும் உடைமையின்,
(முன் பெறு) சிதல், எறும்பு (இனைய) மூவறிவே. 176

### நான்கு அறி உயிர்வகை

உற்று அறி புலனும் மூக்கொடு, கண்ணும்,
(பெற்ற) வண்டும், ஞெண்டும் நால் அறிவே. 177

### ஐந்து அறி உயிர்வகை

உற்று அறி புலனும் மூக்கொடு, கண், செவி,
மக்களும், மாவும் ஐந்து அறிவினவே. 178

### ஆறு அறி உயிர்வகை

மனத்தோடு ஆறு அறிவினரே, மக்கள்;
ஒரு சார் விலங்கும் அது பெறற்கு உரிய. 179

### காவிய இயற்கை வகை

காவிய இயற்கை விரிக்கும் காலை,
ஆரியம் தமிழால் நேரிதின் அடக்கி,
உலகின் தோற்றமும், ஊழியின் இறுதியும்,
வகை சால் தொண்ணூற்று ஆறு வாதியரும்,
வேத நாவினர் வேதியர் ஒழுக்கமும்,
ஆதிக் காலத்து அரசர் செய்தியும்,
அவ்வவர் நாட்டால் அறியும் ஆற்றலும்,
ஆடியும் பாடியும் அறிவு வரக் கிளத்தல். 180

### ஆண்பால் பிள்ளைப் பாட்டின் வகை

திங்கள் இரண்டில் தெய்வக் காப்பும்,
ஐந்தாம் திங்களில் செங்கீரையும்,
ஏழாம் திங்களில் தாலப் பாட்டும்,
எட்டாம் திங்களில் இன் அமுது ஊட்டலும்,
ஒன்பதாம் திங்களில் சப்பாணியும்,
பத்தாம் திங்களில் முத்தம் கூறலும்,
ஆண்டு வரை அகவயின் ஈண்டு வருக என்றலும்,
ஈர் எண் திங்களின் அம்புலி காட்டலும்,
இரண்டாம் ஆண்டில் சிறு பறை கொட்டலும்,
மூன்றும் ஆண்டில் சிற்றில் சிதைத்தலும்,
நாலாம் ஆண்டில் சிறு தேர் உருட்டலும்,
வைத்த முந் நான்கு ஆண்டு எல்லை வரையில்
கச்சில் சுரிகை (காமுறப்) புனைதலும்
பெற்றி, ஆண்பால் பிள்ளைப் பாட்டே. 181

### பெண் பால் பிள்ளைப் பாட்டு வகை

ஆண்டு வரை அகவயின் முன் உரைத்தனவும்,
மூன்றும் ஆண்டில் குழ மண மொழிதலும்,
ஐந்தின் முதலா ஒன்பதின் காறும்
ஐங்கணைக் கிழவனை ஆர்வமொடு நோற்றலும்,
பனி நீர் தோய்தலும், பரவை ஆடலும்,
சிறு சோறு அடுதலும், சிற்றில் இழைத்தலும்,
ஊசல் ஆட்டும் (என்று இவை உள்ளிட்டுப்
பேசிய) பெண் பால் பிள்ளைப் பாட்டே. 182

### பேடியின் இலக்கண வகை

பேடியின் இலக்கணம் பேசும் காலை,
நச்சுப் பேசலும், நல்லுரை ஓதலும்,
அச்சு மாறி ஆண் பெண் ஆகியும்,
கைத் தலம் ஒன்றைக் கடுக வீசியும்,
மத்தகத்து ஒரு கை மாண்பு உற வைத்தலும்,
விலங்கி மிதித்தலும், விழி வேறு ஆகியும்,
துளங்கித் தூங்கிச் சுழன்று துணிந்தும்,
நக்கும், நாணியும், நடம் பல பயின்றும்,
பக்கம் பார்த்தும், பாங்கு திருத்தியும்,
காரணம் இன்றிக் கடி பல கொண்டும்,
வார் அணி கொங்கையை வலிய நலிந்தும்,

இரங்கியும், அழுதும், அயர்ந்து அருவருத்தும்,
குரங்கியும், கோடியும், கோதுகள் செய்தும்,
மருங்கில் பாணியை வைத்தும், வாங்கியும்,
இரங்கிப் பேசியும், எல்லேல் என்றும்,
(இன்னவை பலவும்) இயற்றுதல் இயல்பே. 183

**கரந்து உறை கோளின் வகை**

அரவுக் கோள் இரண்டும், பருதியும், சூரியனும்,
பரிவேடமும், தூமமும், இந்திர வில்லும்,
(பெருகு) வான் மீனும் கரந்து உறை கோளே. 184

**திருப் பொறி வகை**

சங்கு, சக்கரம், மதியம், அரிமா, விடபம்,
வேழம், ஆசனம், நிறை குடம், தோட்டி,
விளக்கு, முடி, கடல், சூலம், கொடியே,
தாமரை, (செயிர் தீர்) இரேகை, திருப்பொறி
(ஆகும் என்பர் அறிந்திசினோரே).
(17 பெயர்கள்) 185

**ஐம் புலத்து உயிர் இழக்கும் வகை**

யானை ஊற்றில், மீன் அது சுவையில்,
அசுணம் இசையில், அளி நாற்றத்தில்,
(ஏனைப்) பதங்கம் உருவம் கண்டு உயிர்
இழப்ப (ஆகும் என்மனார் புலவர்). 186

**அரன் ஊர்தி ஆயுத வகை**

அரனுடை ஊர்தி இடபம் ஆகும்;
பரசு, சூலம், பினாக வில், படையே. 187

**அரி ஊர்தி ஆயுத வகை**

அரியுடை ஊர்தி கருடன் (ஆகும்);
சக்கரம், சங்கு, தண்டு, வாள், சாரங்கம்,
(பலம் மிக்க) மாயோன் பஞ்சாயுதமே. 188

**பலதேவன் படை கொடி வகை**

பல தேவன் படை கலப்பை ஆகும்;
கொடி, பனை (ஆம் எனக் கூறினர் புலவர்). 189

**அயன் ஊர்தி படை கொடி வகை**

அயனுடை ஊர்தி அன்னப் புள்ளு,
படை பாசம், அங்குசம், கொடி வேதம் (என்ப). 190

**குமரன் ஊர்தி கொடி படை வகை**

குமரன் ஊர்தி மயிலும், யானையும்,
கொடியே, கோழி; படை, வேல் (ஆகும்). 191

**சாத்தாவின் ஊர்தி கொடி தாரவகை**

காரி ஊர்தி யானை (ஆகும்);
கோழி அவர்க்குக் கொடி (ஆகும்மே);
பூரணை, புட்கலை அவர் தாரம் (ஆகும்). 192

**காமன் கொடி படை வகை**

காமன் கொடி, சுறவு; கரும்பு வில்லு;
பூ அவன் வாளி பொரு படை (ஆகும்). 193

**இயமன் ஊர்தி ஆயுத வகை**

இயமனுடை ஊர்தி, எருமை ஏறு;
படை பாசம், தண்டும் (ஆகும்). 194

**காலன் ஆயுத வகை**

கூற்றின் படை, கொடுங் கணிச்சி (ஆகும்). 195

**குபேரன் ஊர்தி வகை**

குபேரன் ஊர்தி, புட்பக விமானமும்,
நர வாகனமும் (ஆம் என நவில்வர்). 196

**சூரியன் ஊர்தி வகை**

தனிக் கால் பொன் தேர், அருக்கன் ஊர்தி. 197

**சந்திரன் ஊர்தி வகை**

வெண் மதி ஊர்தி, விமானம் (ஆகும்). 198

**இந்திரன் ஊர்தி படை கொடி வகை**

இந்திரன் ஊர்தி, வெள்ளை வாரணம்;
படையே, வச்சிரம்; இடி, கொடி (ஆகும்). 199

**காளி ஊர்தி கொடி வகை**

காளி ஊர்தி, யாளி (ஆகும்);
பேய் (அது ஆகும்), அவள் பெருங் கொடியே. 200

**மூதேவி ஊர்தி கொடி வகை**

கழுதை ஊர்தியும், காக்கைக் கொடியும்,
(மொழியும் காலை) மூதேவிக்கு (ஆகும்). 201

**சேரன் கொடி, பாண்டியன் கொடி வகை**

சேரற்கு வில் கொடி, தென்னற்குக் கயல் கொடி. 202

**சோழன் கொடி வகை**

சோழற்குப் புலிக் கொடி (ஆகும் என்ப). 203

**வேள் புல அரசர் கொடி வகை**

கேழல், வேள் புல அரசர் கொடியே;
(அவ்வவர் பெயரும் கொடியும் படையும்
அவ்வவர் தம்மோடு அறிந்து உணர்ந்து கொளுமே).
204

**அரசுவாவின் குறி வகை**

கால் ஓர் நான்கும், தனிக் கையும், கோசமும்,
வால் உறுப்போடு ஏழும் மா நிலம் தோய்ந்து,
பாலும் சங்கும் போலும் கால் உகிரது;
காலினும் ஞான்ற ஒரு தனிக் கையினும்,
வாயினும் வாலினும் மருப்பினும் கோறல்
வல்லது; பதின்மூன்று முழச் சுற்று உடைத்தாகி,
ஏழு முழம் உயர்ந்து, ஒன்பது முழம் நீண்டது;
தீ உமிழ் சிறு கண்ணும் செம் புகரும் உடைத்தாய்
முன்பு உயர்ந்து பின் பணிந்தது ஆயின்
அவ் இயல் யானையை அரசுவா (என்ப). 205

### அநுலோமர் வகை

பார்ப்பார், அரசர், வணிகர், வேளாளர் (என)
நாற் குலத்து வரூஉம் தம் குல நடையின்,
உயர்ந்த ஆணினும் இழிந்த பெண்ணினும்
பிறந்த கூட்டத்தவர் அநுலோமர். *206*

### பிரதிலோமர் வகை

இழிந்த ஆணினும் உயர்ந்த பெண்ணினும்
பிறந்த கூட்டத்தவர், பிரதிலோமர். *207*

### அந்தராளர் வகை

அநுலோம நலத்து ஆணினும், அவ்வழிப்
பிரதிலோம குலப் பெண்ணினும் ஆகி
அடுத்த கூட்டத்தவர், அந்தராளர். *208*

### விராத்தியர் வகை

பிரதிலோம குலத்து ஆணினும், (பின்னின்)
அநுலோம குலப் பெண்ணினும் ஆகி,
வியந்தோர் கூட்டத்துப் பிறந்தோர், விராத்தியர். *209*

### பல்லக் கணக்கு வகை

இரு விரல் அகலத்து, அறு விரல் ஆழத்து, ஒரு
குழி நிறையப் பள்ளை ஆட்டு மயிர்த் தொகை
பற்றியது (ஆகும்), பல்லம் என் கணக்கே. *210*

### பதாதி வகை

ஒரு பெருங் களிறும், ஒரு பெருந் தேரும்,
புரவி நான்கும், படைஞர் ஐம்பதின்மரும்,
பதாதி (என்று பகரப்படுமே). *211*

### சேனுமுக வகை

பதாதி மும்மடி, சேனுமுகமே. *212*

### குமுத வகை

சேனு முகம் மும்மடி, (தான் ஆம்) குமுதம். *213*

### கண வகை

குமுதம் மும்மடி கொண்டது, கணமே. *214*

### வாகினி வகை

கணம் மும்மடியின் பெயர், வாகினியே. *215*

### பிரதனை வகை

வாகினி மும்மடி (ஆகும்), பிரதனை. *216*

### சமூக வகை

பிரதனை மும்மடி (ஆகும்), சமூகம். *217*

### அனீக வகை

சமூகம் மும்மடி, அனீகம் (ஆகும்). *218*

### அக்குரோணி வகை

அனீகம் ஐயிருமடி, அக்குரோணி. *219*

### ஒன்று பத்து

ஏகம், ஒன்றே; தசம், பத்து (ஆகும்). *220*

### நூற்றின் பெயர் - ஆயிரத்தின் பெயர்

நூறு சதமே; சகசிரம், ஆயிரம். *221*

### பதினுயிரத்தின் பெயர்

பதினுயிரம் பெயர் அயுதம் (ஆகும்). *222*

### நூறு ஆயிரத்தின் பெயர்

அயுதம் பத்தே, நியுதம் நூறு ஆயிரம். *223*

### பத்து நூறு ஆயிரத்தின் பெயர்

நியுதம் பத்தே பிரயுதம் ஆகி
இயலும் பத்து நூறு ஆயிரமே. *224*

### நூறு நூறு ஆயிரத்தின் பெயர்

பிரயுதம் பத்தே, கோடி (என்ப)
வரைந்த நூறு நூறு ஆயிரம் மன்னும். *225*

### அற்புதம்

கோடி பத்தே, அற்புதம் (ஆகும்). *226*

### சமுத்திர வகை

அற்புதம் பத்தே, சமுத்திரம் (ஆகும்). *227*

### அத்திய வகை

சமுத்திரம் பத்தே, அத்தியம் (ஆகும்). *228*

### மத்திய வகை

அத்தியம் பத்தே, மத்தியம் (ஆகும்). *229*

### பாரத வகை

மத்தியம் பத்தே, பாரதம் (ஆகும்). *230*

### மகா கும்பம்

நூறு கோடி, மகா கும்பம் (ஆகும்). *231*

### நிகர்வ வகை

மகா கும்பத்து நூறு ஆயிரம் கோடி, நிகர்வம். *232*

### மகா பற்பம்

நிகர்வ நூறு ஆயிரம் கோடி, மகாபற்பம். *233*

### பிரம கற்பம்

சங்கம் பாரதம் பத்தே, பிரம கற்பம். *234*
செம்பொற் கிடையான், அம்பல் சேந்தன்,
நன்னராளன், நலம் மிகு நாட்டத்தன்,
பன்னிய சிறப்பின் பன்னிரண்டாவது
பல் பொருள் கூட்டத்து ஒரு பெயர்த் தொகுதியொடு
பன்னிரு தொகுதியும் பண்பொடு முற்றின.

**பன்னிரண்டாவது
பல்பொருள் கூட்டத்து ஒரு பெயர்த் தொகுதி
முற்றிற்று.**

# நூற்பா தலைப்பு - அகராதி அட்டவணை

தொகுதி/நூற்பா எண்

★

# பொருளடக்கம்

# பிங்கலந்தை என்னும்
# பிங்கல நிகண்டு

தன் தோள் நான்கின் ஒன்று கைம் மிகூஉம்
களிறு வளர் பெருங் காடு ஆயினும்
ஒளி பெரிது சிறந்தன்று அளிய என் நெஞ்சே.

### சிறப்புப் பாயிரம்

இருங் கடல் உடுத்த இம் மா நிலம் விளங்க,
அரும் பொருள் தெரித்த அகன் தமிழ் வரைப்பின்
இயற் சொல் திரி சொல் திசைச் சொல் வட சொல் என்று
அனைத்தே செய்யுட்கு அணிகலன் ஆதலின்,
செந்தமிழ் நிலத்து வழக்கொடு சிவணி,
தம் பொருள் வழாமல் இசைக்கும் இயற் சொல்;
ஒரு பொருள் குறித்த வேறு சொல் ஆகியும்,
வேறு பொருள் குறித்த ஒரு சொல் ஆகியும்,
இரு பாற்று என்ப திரி சொல் கிளவி;
செந்தமிழ் சேர்ந்த திசைதொறும் திசைதொறும்
தம் குறிப்பினவே திசைச் சொல் கிளவி;
வட சொல் கிளவி வட எழுத்து ஒரீஇ
எழுத்தொடு புணர்ந்த சொல்தான் ஆகும்;
சிதைந்தன வரினும் இயைந்தன வரையார்;
அந் நால் சொல் திறம் அரில் தப முழுதும்
செங்கதிர் வரத்தால் திவாகரன் பயந்த
பிங்கல முனிவன் எனத் தன் பெயர் நிறீஇ,
உரிச் சொல் கிளவி விரிக்கும் காலை,
விருப்புடன் நிலைஇய வீறுசால் சிறப்பின்
வாஅன் வகையும், வானவர் வகையும்,
வானினும் மண்ணினும் வழங்கல் வழாஅ
ஈனம் இல் ஐயர் இயல்புளி வகையும்,
அவனி வகையும், ஆடவர் வகையும்,
அவர் திறத்து அமைந்த அனுபோக வகையும்,
அவயவத்து அடைத்த ஆனு இயல்பின்
பண்பின் செயலின் பகுதி வகையும்,
மாப் பெயர் வகையும், மரப் பெயர் வகையும்,
ஒரு சொல் பல் பொருள் ஓங்கிய வகையும், என்று
இருள் அற ஈர் ஐந்து ஆக்கி
மருள் அற வகுத்தனன் மதியினின் விரைந்தே.

## 1. வான் வகை

### சுவர்க்கத்தின் பெயர்

பொன்னுலகும், துறக்கமும், புத்தேள் உலகும்,
விண்ணுலகும், மேலை உலகும், விசும்பும்,
மன்னுலகும், நாகமும், கற்பமும், வானுலகும்
வியன் உலகும், தானமும், உவணையும், சுவவும்,
சுரர் இடமும், உயர் நிலையும், சுவர்க்கப் பெயரே.
*(16 பெயர்கள்)* 1

### மேல் ஏழ் உலகத்தின் பெயர்

பூ லோகம், புவ லோகம், சுவர்க்க லோகம்,
மா லோகம், தவ லோகம், பிரம லோகம்,
சிவ லோகம், (இத் திறத்த) மேல் ஏழ் உலகே.
*(7 பெயர்கள்)* 2

### மோக்கம்

கேவலம், கைவலம், கதி, சித்தி, மோக்கம். 3

### மற்றும் மோக்கம்

அமுதம், பரம், சிவம், முத்தியும் (ஆகும்).
*(8 பெயர்கள்)* 4

### ஆகாயம்

வேணி, விசும்பு, வெளி, உம்பர், இடம்,
வானம், கோ, விண், மண்டிலம், ஆசினி,
மீ, மாகம், கம், வியோமம், புட்கரம்,
வான், ககனம், நாகம், மங்குல், குண்டலம்,
அண்டம், உலகம், அம்பரம், குழை, குடில்,
அந்தரம், அகலம், ஆகாயப் (பெயரே).
*(27 பெயர்கள்)* 5

### வெளி

வெடி, வயல், வெள்ளிடை, விடியலும், வெளியே.
*(4 பெயர்கள்)* 6

### பகிரண்டம்

அண்டரண்டம், பகிரண்டம் (ஆகும்).
*(1 பெயர்)* 7

### அண்ட கோளகை

கூடம், கடாகம், அண்ட கோளகை.
*(2 பெயர்கள்)* 8

### அண்ட முகடு

மூதண்டம், அண்ட முகட்டின் (பெயரே).
*(1 பெயர்)* 9

### அண்டச் சுவர்

பித்திகை, அண்டச் சுவரின் (பெயரே).
*(1 பெயர்)* 10

### திக்கு

மாதிரம், திகை, திசை, வம்பல், விசும்பே,
ஆசை, புலமே, உலகு, கோ, காட்டை,
அரிதம், அம்பரம், ககுபம், (அனைத்தும்) திக்கே.
*(13 பெயர்கள்)* 11

### எண் திக்கு

கிழக்கு, தென் கிழக்கு, தெற்கு, தென் மேற்கு,
மேற்கு, வட மேற்கு, வடக்கு, வட கிழக்கு (என்று),
(ஆகத்) திக்கு எட்டு (ஆகும் என்ப).
(8 பெயர்கள்) 12

### கிழக்கு

குணக்கே, பூருவம், ஐந்திரம், பிராசி,
கிழக்கின் (பெயரே), கீழ்த் திசையும் (ஆகும்).
(5 பெயர்கள்) 13

### தெற்கு

அவாசி, தக்கணம், யாமினியம், தெக்கு,
சிவேதை, தென் (இவை), தெற்கு (எனல் ஆகும்).
(6 பெயர்கள்) 14

### மேற்கு

மேக்கு, பச்சிமம், குடக்கு, (இவை) மேற்கே. 15

### மற்றும் மேற்கு

வாருணம், பிரத்தியக்கும் (அதுவே).
(5 பெயர்கள்) 16

### வடக்கு

உதக்கே, உதீசி, உத்தரம், பிங்கலம்,
வடக்கின் (பெயரே), மதி திசையும் (ஆகும்).
(5 பெயர்கள்) 17

### திசை நாற் கோணம்

அந்தராளம், திசை நாற் கோணம் (ஆகும்).
(1 பெயர்) 18

### எண் திசைப் பாலர்

இந்திரன், அக்கினி, இயமன், நிருதி,
வருணன், வாயு, குபேரன், ஈசானன்,
(என்று ஆகும்) எண் திசைப் பாலர் (பெயரே).
(8 பெயர்கள்) 19

### எண் திசை யானை

ஐராவதம், புண்டரீகம், வாமனம், குமுதம்,
அஞ்சனம், புட்பதந்தம், சார்வபூமம்,
சுப்பிர தீபம், எண் திசை யானைப் (பெயரே).
(8 பெயர்கள்) 20

### அட்ட மா நாகம்

அனந்தன், வாசுகி, தக்கன், கார்க்கோடகன்,
பதுமன், மகா பதுமன், சங்க பாலன்,
குளிகன், அட்ட மா நாகப் (பெயரே).
(8 பெயர்கள்) 21

### எண் திசை யோனி

கொடி, புகை, சிங்கம், நாய், இடபம், கழுதை,
யானை, காகம், (இவை) எண் திசை யோனி.
(8 பெயர்கள்) 22

### காற்று

அனிலம், வங்கூழ், அரி, பவமானன்,
சமீரணன், மருத்து, சதாகதி, சலனன்,
வாடை, வளியே, மாருதம், வாயு,
கோதை, வாதம், கூதை, வேற்றலம்,
கால், ஒலி, பவனம், உயிர், கந்த வாகன்,
பிரபஞ்சனன், மா பலனே, பரிசனன்,
ஆசுகன், கந்தவகன், ஊதை, கால் இலி,
விண்டு, நீளா, வந்து, உலவை,
கொண்டல், கோடை, (என்று இவை) காற்றே. 23

### மற்றும் காற்று

நீலும், மாலும், நிழலியும், உயிர்ப்பும்,
கூதிரும், (என்றே கூறற் பாற்றே).
(39 பெயர்கள்) 24

### பனிக் காற்று

கூதிரும், ஊதையும், குளிர், பனிக் காற்றே.
(3 பெயர்கள்) 25

### வட காற்று

வாடை, வடந்தை, வட காற்று (ஆகும்).
(2 பெயர்கள்) 26

### மேல் காற்று

கோடை, மேல் காற்றே. (1 பெயர்) 27

### கீழ் காற்று

கொண்டல், கீழ் காற்றே. (1 பெயர்) 28

### தென்றல்

மந்தாநிலமே, மலயக் காலே,
தென் கால், வசந்தன், (தென் திசைத்) தென்றல்.
(4 பெயர்கள்) 29

### சுழல் காற்று

சூறை, வளியே, சுழன்று எழு காற்றே. 30

### மற்றும் சுழல் காற்று

சூறுவளி, சாரிகையும் (சொல்லும்).
(4 பெயர்கள்) 31

### தச வாயுவின் வகை

பிராணன், அபானன், உதானன், வியானன்,
சமானன், நாகன், கூர்மன், கிருகரன்,
தேவ தத்தன், தனஞ்சயன், (என்று)
வாயு ஈர் ஐந்து (ஆகும் இவைதாம்).
(10 பெயர்கள்) 32

### பிராணன் என்பது

இருதய மண்டலத்து இயங்கும், பிராணன். 33

### அபானன் என்பது

உச்சத் தலத்திடை நிற்பது, அபானன். 34

### உதானன் என்பது

நாபியின் நின்று அங்கு ஓவாதது, உதானன். 35

### வியானன் என்பது

வியானன், எங்கும் வியாபியா நிற்கும். 36

### சமானன் என்பது

கந்தரசக் குழியில் சந்திடைச் சமானன். 37

### நாகன் என்பது

முடக்கலும், நீட்டலும், கிளப்பதும், நாகன். 38

### கூர்மம் என்பது

உரோமம் புளகித்து இமைப்பது, கூர்மம். 39

### கிருகரன் என்பது

கிருகரன், (என்பது) முகத்திடைக் கெழுமித்
தும்மலும், சினமும், வெம்மையும் விளைக்கும். 40

### தேவதத்தன் என்பது

ஓட்டமும், இளைப்பும், வியர்ப்பும், தேவதத்தன். 41

### தனஞ்சயன் என்பது

(ஒல்கா அன்பின் நல்லவர் கேண்மையின்)
உயிர் உடல் விடினும், தான் உடல் விடாஅது,
ஒக்க நின்று அங்கு உடலினை வீக்கித்
தலை கிழித்து அகல்வது, தனஞ்சயன் (ஆகும்). 42

### சத்த மருத்துக்கள்

குணக்கும், தெற்கும், குடக்கும், வடக்கும்,
மேலும், கீழும், பல யோனி உயிரும்,
(ஆகும்) சத்த மருத்துப் (பெயரே).
(7 பெயர்கள்) 43

### நெருப்பு

அழல், உதாசனன், அங்கி, தேயு,
தழல், வசு, உதகவன், தனஞ்சயன், தழலி,
கனலி, எழு நா, அனலி, முளரி,
அனல், எரி, அழலி, கனல், அரி, கரு நெறி,
சுசி, ஒளி, தபனன், சுடர், சிகி, சோதி,
தூம கேது, வன்னி, சுவலன்,
பாவகன், சித்திர பானு, அங்காரகன்,
ஞெகிழி, தீ, ஆரல், நெருப்பின் (பெயரே).
(34 பெயர்கள்) 44

### வடவாக்கினி

வடவை, தீத்திரள், மடங்கல், ஊழித் தீ,
கடையனல், உத்தரம், வடவாக்கினிப் (பெயர்).
(6 பெயர்கள்) 45

### விளக்கு

சுடரும், தீபமும், ஒளியும், விளக்கே.
(3 பெயர்கள்) 46

### அனல் பொறி

புலிங்கம், பொறியனல். (1 பெயர்) 47

### அனல் திரள்

உற்கம், அனல் திரள். (1 பெயர்) 48

### காட்டு எரி

தாவம், காட்டு எரி, வரை அனலும் (ஆகும்).
(2 பெயர்கள்) 49

### தீக் கடை கோல்

அரணி, ஞெலி கோல், ஞெகிழி, தீக் கடை கோல்.
(3 பெயர்கள்) 50

### புகை

தூமமும், அரியும், தூபமும், ஆவியும்,
(ஆகும் பெயரே) புகை (4) (எனல் ஆகும்).
(4 பெயர்கள்) 51

### நறும் புகை

நறை, குய், வெடியே, நறும் புகை (ஆகும்).
(3 பெயர்கள்) 52

### அக்கினி தேவன்

சாத வேதா, மை வாகனனே, தீ பதி,
சித்திர பானு, தனஞ்சயன்,
தென் கீழ்த் திசையோன், தேயு, வாயு சகன்,
பாவகன், அக்கினிப் பண்ணவன் (பெயரே).
(9 பெயர்கள்) 53

### அக்கினி தேவன் பாரி

பாரி, சுவாகா தேவி (ஆகும்). (1 பெயர்) 54

### முத் தீ

காருக பத்தியம், ஆகவனீயம்,
தக்கணக்கினியம், (மிக்க) முத் தீயே.
(3 பெயர்கள்) 55

### பஞ்சாக்கினி

இராகம், வெகுளி, காமம், சடமே,
தீபனம், பஞ்சாக்கினியின் (பெயரே).
(5 பெயர்கள்) 56

### நீர்

ஆலமும், சலமும், அம்மும், அறலும்,
பாணியும், அப்பும், பயமும், உதகமும்,
வயமும், அயமும், வாரியும், விகடியும்,
புனலும், சலிலமும், புவனமும், அளகமும்,
சீவனமும், பானீயமும், சிந்தும், ஆம், குசமும்,
வருணமும், அம்பும், மழையும், கவந்தமும்,
கீலாலமும், மேகமும், அகிலமும், தடியும்,
நீரமும், தோயமும், வாரும், பதமும்,
காரும், மாரியும், கமலமும், பயசும்,

கயமும், சம்பரமும், கம்மும், புட்கரமும்,
சீதமும், வசியும், கோவும், காண்டமும்,
கனவிரதமும், சீவனீயமும், அலரும்,
நாரமும், அமுதமும், நீர் (எனல் ஆகும்).
*(50 பெயர்கள்)* 57

### மேகம்

மாரியும், மழையும், மஞ்சும், மாசும்,
காரும், புயலும், கனமும், கொண்டலும்,
வானும், தாராதரமும், மையும், சீதமும்,
சீவதமும், செல்லும், குயினும், சீமூதமும்,
எழிலியும், கொண்மூவும், விளைவும், முகிலும்,
விண்ணும், கந்தரமும், சலதரமும், விசும்பும்,
மங்குலும், இளையும், மாலும், அம்புதமும்,
விண்டுவும், (என்று இவை) மேகப் பெயரே). 58

### மற்றும் மேகம்

முதிரம், பயோதரம், கதம்பம், மெய்ப்பிரம்,
அப்பிரம், ஆயமும், (அப் பெயர்க்கு உரித்தே).
*(35 பெயர்கள்)* 59

### இடியேறு

வெடி, ஒலி, உருமு, கோ, விண்ணேறு, அசனி,
செல், இகுளி, இடியேறு, மடங்கலும், (ஆகும்).
*(9 பெயர்கள்)* 60

### மின்னல்

சம்பை, வித்துரு, சபலை, தடித்து,
சஞ்சலை, கனருசி, தடி, ஒளி, மின்னல்.
*(8 பெயர்கள்)* 61

### மழை

மாரி, வானம், வருடம், மழை (எனல்).
*(3 பெயர்கள்)* 62

### பெரு மழை

ஆசாரம், பெரு மழை (1) (ஆகும் என்ப).
*(1 பெயர்)* 63

### விடா மழை

சோனையும், பனித்தலும், விடாது சொரிதல்.
*(2 பெயர்கள்)* 64

### தலைப் பெய் மழை

தளி, உறை, ஆலி, தலையல், தலைப் பெயல். 65

### மற்றும் தலைப் பெய் மழை

தலைப் பெயல், சோதகமும். *(5 பெயர்கள்)* 66

### ஆலாங் கட்டி

ஆலி, கனோ பலம், ஆலாங் கட்டி. 67

### மற்றும் ஆலாங் கட்டி

கரகமும் (ஆகும் என்மனார் புலவர்). *(3 பெயர்)* 68

### மழைத் துவலை

சிதரம், பிதிரே, சீகரம், சிதரே,
தூவல், துமிதம், திவலையும், மழைத்
துவலையின் (பெயர் எனச் சொல்லல் ஆகும்).
*(7 பெயர்கள்)* 69

### மழை விடல்

தூறலும், தலையலும், சோதகமும், மழை விடல்.
*(3 பெயர்கள்)* 70

### ஏழு மேக வகை

சம் வர்த்தம், ஆவர்த்தம், புட்கலாவர்த்தம்,
சங்காரித்தம், துரோணம், காளமுகி,
நீல வருணம், ஏழ் மேகப் (பெயரே).
*(7 பெயர்கள்)* 71

### அவற்றுள் ஏழு மழை வகை

மணி, நீர், பொன், பூ, மண், கல், தீ, (என்று
எழு வகை மேகம் பொழி) மாரி ஏழே.
*(7 பெயர்கள்)* 72

### வருணன்

சலபதி, பாச தரன், நதி கேள்வன்,
(வரு) புனல் செல்வன், வருணன் (பெயரே).
*(4 பெயர்கள்)* 73

### வெள்ளம்

பிரளயம், நீத்தம், வாரி, வெள்ளம். 74

### மற்றும் வெள்ளம்

ஓதமும், பெருக்கும், (ஆகலும் உரித்தே).
*(5 பெயர்கள்)* 75

### பனி

இமமும், துகினமும், மஞ்சும், நீகாரமும்,
பனியின் (பெயர், ஏமந்தமும் (பகரும்).
*(5 பெயர்கள்)* 76

### நிறை புனல்

வழாறும், பிராறும், வாரியும், நிறை புனல்.
*(3 பெயர்கள்)* 77

### நீந்து புனல்

அகாதம், (என்பது) நீந்து புனலே. *(1 பெயர்)* 78

### தெளிந்த நீர்

சற்சலம், (என்பது) தெளிந்த நீரே. *(1பெயர்)* 79

### கலங்கல் நீர்

ஆவிலம், கலுழி, உடம்பை, கலங்கல் புனல்.
*(3 பெயர்கள்)* 80

### நீரோட்டம்

கோலம், (என்பது கொடு) நீரோட்டம். *(1 பெயர்)* 81

#### நீர்த் திரை

அறலும், தரங்கமும், அலேயும், கல்லோலமும்,
(புனலின்) திரைக்குப் (பொதுப் பெயர் ஆகும்). 82

#### மற்றும் நீர்த் திரை

சிகரம் (என்பதும் திரையின் பொதுவே).
(5 பெயர்கள்) 83

#### நீர்க் குமிழி

கொப்புள், மொக்குள், புற்புதம், குமிழி.
(3 பெயர்கள்) 84

#### ஆழ நீர்

அழுந்தும், குண்டும், கயமும், ஆழ நீர்.
(3 பெயர்கள்) 85

#### நீர்ச் சுழி

உந்தியும், சுரியலும், நீர்ச் சுழி (ஆகும்).
(2 பெயர்கள்) 86

#### நுரை

பேனமும், பேவும், நுரையின் (பெயரே).
(2 பெயர்கள்) 87

#### பரிவேடம்

ஊர்கோள், வட்டம், (ஒளி கொள்) மண்டிலம்,
பரிதி, விசயம், பரிவேடம் (ஆகும்).
(5 பெயர்கள்) 88

#### இந்திர வில்

வானவில், இந்திரவில் (என வைப்பர்).
(1 பெயர்) 89

#### காம காண்டம்

இரட்டை வில், காம காண்டம் (ஆகும்)
(1 பெயர்) 90

#### இருள்

அல்லு, திமிரம், கருளே, கருவரி,
கச்சளம், அந்தகாரம், துவாந்தம்,
நத்தம், தமமொடு, துணங்கறல், இருளே.
(10 பெயர்கள்) 91

#### பதினெண் கணம்

அமரர், சித்தர், அசுரர், தைத்தியர்,
கருடர், கின்னரர், நிருதர், கிம்புருடர்,
காந்தருவர், இயக்கர், விஞ்சையர், பூதர்,
பசாசர், அந்தரர், முனிவர், உரகர்,
ஆகாய வாசியர், போக பூமியர், (எனப்
பாகு பட்டன) பதினெண் கணமே.
(18 பெயர்கள்) 92

#### முதலாவது
#### வான்வகை முற்றிற்று

## 2. வானவர் வகை

#### கணபதி

ஏக தந்தன், இறை மகன், ஏரம்பன்,
ஆகுவாகனன், ஐங்கரன், முக் கணன்,
பார்ப்பதி புதல்வன், பாசாங்குச தரன்,
அத்தி முகத்தோன், அரி திரு மருகன்,
தந்திக் கடவுள், (தான) மும் மதன்,
கங்கை சுதன், விநாயகன், கணபதி (பெயரே).
(14 பெயர்கள்) 1

#### சிவன்

அரன், சிவன், அரூபி, அனந்தன், உருத்திரன்,
பரன், கறை மிடற்றோன், பார்ப்பதி கொழுநன்,
கால காலன், பசுபதி, கண்ணுதல்,
தாணு, எண் குணன், சங்கரன், நந்தி,
ஆதி, சசி தரன், ஐம்முகன், பிஞகி,
சோதி, சம்பு, சூலி, பிஞ்ஞகன்,
முக் கணன், விடையோன், முன்னவன், பிறப்பிலி,
நக்கன், சடையோன், நாயகன், சயம்பு,
காம நாசன், பிதா, கருணாலயன்,
தேவ தேவன், திரிபுராந்தகன்,
மான் இடம் ஏந்தி, பேயோடு ஆடி,
முத்தன், முதல்வன், சுத்தன், யோகி,
வேத முதல்வன், நாரி பாகன்,
ஆல் அமர் கடவுள், பவனே, அனாதி,
நீல கண்டன், நிருத்தன், பூதேசன்,
கங்காதரன், மழு ஆளி, கபாலி,
அங்கணன், கைலே ஆளி, கங்காளன்,
அக்கு அரவு ஆர்த்தோன், அழல் ஆடி, தற்பரன்,
நித்தன், நிமலன், நீறு அணி கடவுள்,
யானே உரித்தோன், அமலன், ஆனந்தன்,
வாம தேவன், மகேச்சுரன், சதாசிவன்,
திரியம்பகன், விமலன், சந்திர சேகரன்,
மால் அயற்கு அரியோன், நாதன், எண் தோளன்,
ஞான மூர்த்தி, நம்பன், பகவன்,
வாமன், கிரீசன், வரன், உமாபதி,
பூதபதி, புண்ணியன், புலித் தோல் உடையோன்,
மாதேவன், கொன்றை மாலேயன், பித்தன்,
ஈச்சுரன், நாசம் இல்லோன், இறைவன்,
பாசு பதன், குன்ற வில்லி, பாண்டரங்கன்,
ஈசன், பரமனும், (எம்) பிரான் (பெயரே). 2

#### மற்றும் சிவன்

அந்தி வண்ணன், காமாரி, புராரி,
அந்தகாரி, பர்க்கன் (என்று அனந்தம் ஈசன் பெயர்).
(100 பெயர்கள்) 3

#### சிவன் ஊர்தி, கொடி

ஊர்தியும், கொடியும் இடபம் (என்று உரைப்பர்).
(1 பெயர்) 4

### சிவன் படை

பரசும், சூலமும், பினுக வில்லும், படை.
(3 பெயர்கள்) 5

### சிவன் எண் குணம்

பவம் இன்மை, இற வின்மை, பற்று இன்மை, பெயர்
இன்மை, உவமை இன்மை, ஒரு வினை இன்மை,
குறைவில் அறிவு உடைமை, கோத்திரம் இன்மை,
(என்று இறைவனிடத்தில்) எண் குணம் (இவையே).
(8 பெயர்கள்) 6

### சிவன் ஐம்முகம்

ஈசானம், தற்புருடம், அகோரம், வாமம்,
சத்தியோசாதம், சங்கரன் ஐம் முகம்.
(5 பெயர்கள்) 7

### சிவன் இருப்பு முதலியவை

இருப்பது, கைலை; தரிப்பது, கங்கை;
முடிப்பது, கொன்றை; உடுப்பது, சருமம். 8

### சிவ பதம் நான்கு

தான் ஆள் உலகு இருத்தல், தன்பாடு இருத்தல்,
தான் ஆம் பதம் பெறல், தான் ஆகுதல், (என
நாலே) சிவன் (தன் நல் அருள்) பதமே.
(4 பெயர்கள்) 9

### சிவ பூசை இயல்பு

சரியை,கிரியை, யோகம், ஞானம், (என்று
இவை ஒரு நான்கும்) சிவ பூசை இயல்பே.
(4 பெயர்கள்) 10

### சிவாகம நூற் பயன்

தர்மம், அர்த்தம், காமம், மோக்கம், சிவாகமம்.
(4 பெயர்கள்) 11

### நந்தி

எருது, விடை, ஏறு, இடபம், புங்கவம்,
இறை வாகனம், சிவ கண முதல், நந்தி.
(7 பெயர்கள்) 12

### சிவன் அழித்த முப்புரம்

பொன்னினும், வெள்ளியினும், (புகல்)
இரும்பினும், (அன்ன) மும் மதில்
சிவன் அழித்த முப்புரமே.
(3 பெயர்கள்) 13

### உமை

ஆரியை, காமக் கோட்டி, அம்பிகை,
நாரி, சத்தி, நாயகி, கௌரி,
தேவி, சாம்பவி, தருமச் செல்வி,
மலை மகள், சங்கரி, மாதா, ஐயை,
பரையே, உருத்திரை, பார்ப்பதி, அந்தரி,
நீலி, கன்னி, நிமலி, குமரி,
வேத முதல்வி, விமலை, முக் கண்ணி,
அமலை, இமயவதி, அயிராணி,
சமய முதல்வி, தற்பரை, மனோன்மணி,
சிவை, உமை, அம்மை (திரு நாமம் என்ப). 14

### மற்றும் உமை

அரன் இடத்தவள், சகம் ஈன்றவள், பவானி,
(எமது) அன்னை, புண்ணிய முதல்வி (பெயரே).
(38 பெயர்கள்) 15

### கங்கை

வரநதி, சுரநதி, மந்தாகினி, உமை,
கர நதி, தச முக நதி, கங்கா நதி
சிர நதி, (சிவன் சடை சேர்) தெய்வ நதியே.
(7 பெயர்கள்) 16

### முப்பத்திரண்டு அறம்

ஆதுலர் சாலை, ஓதுவார்க்கு உணவு, அறு
சமயத்தோர்க்கு உண்டி, பசுவிற்கு வாயுறை,
சிறைச் சோறு, ஐயநடை, தின்பண்டம்,
அறவைச் சோறு, மகப் பெறுவித்தல்,
மகவு வளர்த்தல், மகப் பால் வார்த்தல்,*
அறவைப் பிணம் சுடுதல், அறவைத் தூரியம்,
சுண்ணம், நோய் மருந்து, வண்ணார், நாவிதர்,
கண்ணாடி, காது ஓலை, கண் மருந்து, தலைக்கு எண்ணெய்,
பெண் போகம், (மற்றும்) பிறர் துயர் காத்தல்,
தண்ணீர்ப் பந்தர், மடம், தடம், காவே,
ஆவுரிஞ்சு தறி, விலங்கிற்கு உணவோடு,
ஏறு விடுத்தல், விலை கொடுத்து உயிர் விடுத்தல்,
(தன் நிலை உயர்ந்த) கன்னிகா தானம்,
(இந்) (நான்கு எட்டும் இறைவி செய் தருமம்).
(32 பெயர்கள்) 17

### அறுமுகக் கடவுள்

குமரன், தெய்வ குஞ்சரி மணாளன்,
சிலம்பன், முருகன், சேயே, செவ்வேள்,
கடம்பன், சாமி, கார்த்திகேயன்,
சேந்தன், குறிஞ்சிக் கிழவன், செட்டி,
காங்கேயன், கௌரிமைந்தன், கந்தன்,
வேலன், வள்ளி கேள்வன், விசாகன்,
தாருகாரி, குகன், சரவணபவன்,
மயில் வாகனனே, வன்னிப் பூக் குமரன்,
ஆறு இரு கரத்தோன், அரி திரு மருகன்,
குழகன், கங்கை மைந்தன், குன்று எறிந்தோன்,
அறு மீன் காதலன், அசுரற் றடிந்தோன்,
சேவலங் கொடியோன், தேவ சேனாபதி,
பாவகி, ஆசான், கலை அறி புலவன்,
அரன் மகன், யானை முகவற்கு இளையோன்,
(இனைய) அறுமுகக் கடவுள் (பெயரே).
(37 பெயர்கள்) 18

### அறுமுகக் கடவுள் ஊர்தி

ஆடும், யானையும், மயிலும் ஊர்தி.
(3 பெயர்கள்) 19

### அறுமுகக் கடவுள் படை, கொடி

(அயில்) வேல் (அரும்)படை;
கொடி சேவல் (ஆகும்). *(1, 1 பெயர்கள்)* 20

### அறுமுகக் கடவுள் மாலே

நீபமும், செச்சையும் மாலே (ஆகும்).
*(2 பெயர்கள்)* 21

### வீரபத்திரன்

உக்கிரன், அழற்கண் வந்தோன், உமை மகன்,
முக் கணன், தக்கன் வேள்வி முனிந்தோன்,
ஏக வீரியன், சடாதரன், வில்லி,
ஈசன் மைந்தன், கணபதிக்கு இளேயோன்,
ஆயிர முகத்தோன், சிம்புள் ஆனேன்,
பத்திரை கேள்வன், வீரபத்திரன் (பெயர்).
*(13 பெயர்கள்)* 22

### வைரவன் பெயர்

கஞ்சுகன், மூ இலே வேலோன், காரி,
முத்தன், கேத்திர பாலன், நிருவாணி,
சித்தன், ஞாளி ஊர்தி, கபாலி,
வடுகன், (இன்னவை) வயிரவன் (பெயரே).
*(10 பெயர்கள்)* 23

### வைரவன் ஊர்தி, படை

வைரவன் ஊர்தி, ஞமலி; சூலம், படை.
*(1, 1 பெயர்கள்)* 24

### ஐயனுர்

சாத வாகனன், கோழிக் கொடியோன்,
சாத்தன், வெள்ளே யானே வாகனன்,
காரி, செண்டு ஆயுதன், கடல் நிற வண்ணன்,
பூரணே கேள்வன், புட்கலே மணுளன்,
ஆரியன், அறத்தைக் காப்போன், யோகி,
அரிகர புத்திரன், ஐயன் பெயரே.
*(13 பெயர்கள்)* 25

### ஐயனுர் ஊர்தி, கொடி

காரி ஊர்தி, காரிக் குதிரை;
கோழிக் கொடியும் (ஆகும் என்ப).
*(1, 1 பெயர்கள்)* 26

### மாகாளி

குமரி, சண்டிகை, குண்டலி, நீலி,
வலவை, பைரவி, கௌமாரி, மாதரி,
மாயை, வீரி, மதங்கி, யாமளே,
சூரி, வேதாளி, கங்காளி, யோகினி,
சூலி, சாமுண்டி, தாருகாரி,
ஆரியை, தேவி, வல்லணங்கு, ஐயை,
அலகைக் கொடியாள், மாலினி, முக்கண்ணி,
பதுமை, எண் தோளி, பத்திரி, ஆரணி,
யாளி ஊர்தி, மாகாளி (பெயரே).
*(31 பெயர்கள்)* 27

### மாகாளி ஊர்தி, கொடி, படை

ஊர்தி, சிங்கம்; (உயர்) கொடி, அலகை;
சூலம், படை (எனச் சொல்லப்படுமே).
*(1, 1, 1 பெயர்கள்)* 28

### இடாகினி

வஞ்சனி, மாயவள், வலவை, இடாகினி.
*(3 பெயர்கள்)* 29

### யோகினி

சன்மினி, சூர்மகள், யோகினிப் (பெயரே).
*(2 பெயர்கள்)* 30

### யோகினி ஊர்தி, கொடி

பேய், கொடி; வாகனம், ஓரி (ஆகும்).
*(1, 1 பெயர்கள்)* 31

### துர்க்கை

அந்தரி, மகிடற் காய்ந்தாள், ஐயை,
விந்தை, அம்பணத்தி, விசயை, எண் தோளி,
மாலுக்கு இளேயாள், பகவதி, சய மகள்,
பாலேக் கிழத்தி, வீரச் செல்வி,
கௌரி, காத்தியாயனி, சக்கராயுதி,
அமரி, குமரி, (அருங்) கலே ஊர்தி,
சமரி, கன்னி, சயை, வாள் படையாள்,
சூலி, ஆரியை, நீலி, சண்டிகை,
(வெற்றி) மேதித் தலேமிசை நின்ருள்,
கொற்றவை, நாராயணி, துர்க்கை (பெயரே).
*(29 பெயர்கள்)* 32

### துர்க்கையின் படை, வாகனம்

கை வாள், படை; வாகனம், கலே (ஆகும்).
*(1, 1 பெயர்கள்)* 33

### காடுகாள்

காடுகாள், மோடி, காரிதாய், கொற்றி,
மாரி, சூரி, வடுகி, மூதணங்கே.
*(7 பெயர்கள்)* 34

### சத்த மாதர்கள்

பிரமாணி, நாராயணி, மாயேசுரி,
கௌமாரி, வராகி, உருத்திராணி,
இந்திராணி, (என்று) எழு வகை மாதர்.
*(7 பெயர்கள்)* 35

### சத்த மாதர்கள் ஊர்தி

அன்னம், ஏறு, விடையே, அலகை,
மஞ்ஞை, களிறு, கலுழன், ஊர்தி.
*(7 பெயர்கள்)* 36

### சத்த மாதர்கள் படை

மறை, தண்டு, சூலம், பிஞகம், எஃகம்,
வச்சிரம், ஆழி, (வன்)படை (ஆகும்).
*(7 பெயர்கள்)* 37

**(விட்டுணு) நாராயணன்**

மாதவன், நெடியோன், மாயவன், சனார்த்தனன்,
சீதரன், பதும நாபன், திருமால்,
கொண்டல் வண்ணன், கோவிந்தன், முகுந்தன்,
விண்டு, வனமாலி, வாமன், வாமனன்,
திரிவிக்கிரமன், திருமறு மார்பன்,
கேசவன், வரதன், முராரி, அனந்தன்,
காவல் கடவுள், காகுத்தன், அச்சுதன்,
அரவணைச் செல்வன், அறிதுயில் அமர்ந்தோன்,
சக்கராயுதனே, சார்ங்க பாணி,
(தண்) கடல் வண்ணன், சலச விலோசனன்,
உலகினை அளந்தோன், உலகம் உண்டோன்,
படி முழுது இடந்தோன், அலகை முலை உண்டோன்,
தாமோதரனே, சௌரி, மது சூதனன்,
ஆதி, பீதாம்பரனே, வராகன்,
*திருமகள் பூமி கொழுநன், கண்ணன்,
உவண ஊர்தி, உவணம் உயர்த்தோன்,
பஞ்சாயுதன், பரந்தாமன், பகவன்,
பூவை வண்ணன், புணரியில் துயின்றோன்,
பிரமன் தந்தை, பின்னை கேள்வன்,
சங்கம் ஏந்தி, நாரசிங்கன்,
இருடிகேசன், தசஅவதாரன்,
குறளன், நெடுமால், வலவன், கரியோன்,
உந்தி பூத்தோன், நந்த கோபாலன்,
வாசுதேவன், துளப மௌலியன்,
அனந்த சயனன், வைகுந்த நாதன்,
ஆயிரம் பெயரோன், அரி, மால், (என்று இவை)
நாராயணன் (திருநாமம் ஆகும்.) 38

**மற்றும் விட்டுணு**

அருந்தமன், (என்பதும் ஆங்கு அவன் பெயரே).
(69 பெயர்கள்) 39

**நாராயணனின் (விட்டுணுவின்) ஊர்தி, கொடி**

ஊர்தி, கருடன்; (ஒண்) கொடியும், அதுவே.
(1, 1 பெயர்கள்) 40

**நாராயணனின் (விட்டுணுவின்) பஞ்சாயுதம்**

சக்கரம், தனு, வாள், தண்டு, சங்கம்,
(பற்றலர் மேல் விடும்) பஞ்சாயுதமே.
(5 பெயர்கள்) 41

**அவற்றுள் சக்கரம்**

சக்கரம், சுதரிசனம். (1 பெயர்) 42

**தனு**

தனுவே, சார்ங்கம். (1 பெயர்) 43

**வாள்**

(சய)வாள், நாந்தகம். (1 பெயர்) 44

**தண்டு**

தண்டு, கௌமோதகி. (1 பெயர்) 45

* திருமகள் கொழுநன், பூமி கொழுநன்

**சங்கு**

சங்கு, பாஞ்சசன்னியம் (ஆகும்). (1 பெயர்) 46

**அரியின் தசாவதாரம்**

மச்சம், கூர்மம், வராகம், நரசிங்கம்,
வாமனன், பரசுராமன், இராமன்,
பலபத்திரனே, கண்ணன், (வரு) கற்கி, (என்று
இவை ஒரு பத்தும்) அரி அவதாரம்.
(10 பெயர்கள்) 47

**அன்றியும் மூவைந்து அவதாரம்**

சனகன், சனந்தனன், சனாதன், சனற்குமாரன்,
நர நாராயணன், கபிலன், இடபன்,
நாரதன், அயக்கிரீவன், தத்தாத்திரேயன்,
மோகினி, வேள்வியின் பதியே, வியாதன்,
தன்வந்திரியே, பௌத்தன், (என்று ஆங்கு
இன்னம் மூ வைந்தும்) அரி அவதாரம்.
(15 பெயர்கள்) 48

வெற்றிக் கலப்பைப் படையோன் ஒழியப்
புத்தன் (என்று புகலப்படுமே). 49

**திருமகள்**

பொருளின் செல்வி, பொறி, அரிப் பிரியை,
மலர் மகள், இந்திரை, மாவே, இலக்குமி,
கமலை, ஆக்கம், பதுமை, சீதேவி,
தாக்கணங்கு, இளையாள், (தண்) கடல் பிறந்தாள்,
மால் திரு மார்பினள், (மா) மறைத் தலைவி,
செய்யாள், பூ மகள், திருமகள் (பெயரே).
(18 பெயர்கள்) 50

**பலபத்திரன்**

இரேவதி கொழுநன், குண்டலன், உரோகிணி
தனயன், நீலாம்பரன், அலாயுதன்,
அச்சுதன் முன்னோன், காம பாலன்,
அனந்தன், வெள்ளை, காளிந்தி மர்த்தனன்,
பனந்துசன், முசலி, கருந் துகில் உடையன்,
பலதேவன், பலபத்திரன் (பெயரே).
(14 பெயர்கள்) 51

**பலபத்திரன் படை, கொடி**

படையே, கலப்பை; கொடி, பனை (ஆகும்).
(1, 1 பெயர்கள்) 52

**காமன்**

மால் மகன், மதனன், மகரக் கொடியோன்,
வேனில் ஆளி, வில் வேள், வசந்தன்,
அங்கசன், அனங்கன், ஐங்கணைக் கிழவன்,
திங்கள் குடையோன், தென்றல் தேரோன்,
வனசன், வில்லி, மோகன், (மா) மலர்க் கணையோன்,
மதிசகன், இரதி காந்தன், மாரன்,
மனோபவன், மனோசன், மனோபு, மன்மதன்,
திருமகள் மைந்தன், சம்பர சூதனன்,
உருவிலி, கடல் முரசோன், கைதைச் சுரிகையன்,

கந்தர்ப்பன், சித்தசன், பூ வாளி, பூமன்,
கருப்பு வில்லி, காமன் (பெயரே).

(32 பெயர்கள்) 53

**காமன் ஊர்தி, கொடி**

வாகனம், தென்றல்; மகரம், கொடியே.

(1, 1 பெயர்கள்) 54

**காமன் வில், கணை**

கழையே, வில்லு; கணை, மலர் ஐந்தே.

(1, 1 பெயர்கள்) 55

**காமன் ஐங்கணை**

வனசம், சூதம், அசோகம், முல்லை,
குவளை, காமன் (கொலும்) ஐங்கணையே.

(5 பெயர்கள்) 56

**அவற்றின் செயல்**

உன்மத்தம், மதனம், மோகனம், சந்தாபம்,
வசீகரணம், (இவை) மதன் கணைச் செயலே.

(5 பெயர்கள்) 57

**அவற்றின் அவத்தை**

சுப்பிரயோகமும், விப்பிரயோகமும்,
சோகமும், மோகமும், மரணமும், (என்று இவை
ஆகும்) மலர்க்கணை ஐந்தின் அவத்தை.

(5 பெயர்கள்) 58

அவற்றுள், சுப்பிரயோகம், சொல்லா நினைவும். 59

விப்பிரயோகம், வெய்து உயிர்த்து இரங்கல். 60

சோகம், வெதுப்புத் துய்ப்பன தெவிட்டல். 61

மோகம், அழுங்கலும் மொழி பல பிதற்றலும். 62

மரணம்; அயர்ப்பும் மயக்கமும் ஆகும். 63

**பிரமன் பெயர்**

அந்தணன், மலரோன், அயன், நான் முகத்தோன்,
உந்தியில் வந்தோன், ஓதிம வாகனன்,
பாரதி கொழுநன், படைப்போன், பகவன்,
ஆரணன், இரணிய கருப்பன், விரிஞ்சன்,
வேதா, விதாதா, விதி, சதானந்தன்,
தாதா, பிதா மகன், சம்பு, மால் மகன்,
எண் கணன், கமல யோனி, பிரசாபதி,
வேதன், கம், இறை, சூதன், பரமேட்டி,
திசை முகன், வானவர் முதுவன், போதன்,
வரனே, குரவன், மண் பொதுத் தந்தை,
அனந்தன், ஞானன், அன்னம் உயர்த்தோன்,
இறைவன், மறையோன், பிரமன் பெயரே.

(39 பெயர்கள்) 64

**பிரமன் ஊர்தி, படை, கொடி**

அன்னம், ஊர்தி; (அரும்) படை, பாசம்,
(மன்னிய) கதை (படை); கொடி, மறை (ஆகும்).

(1, 2, 1 பெயர்கள்) 65

**நாமகளின் பெயர்**

பாரதி, துய்யாள், பனுவ லாட்டி,
வேத முதல்வி, பிராமி, விமலை,
வாணி, வெள்ளை நிறத்தினள், வாக்காள்,
நான்முகன் கிழத்தி, ஞானத்து இறைவி,
காயத்திரியே, சாவித்திரியே,
(நல்) பா மடந்தை, (நல்) நூல் மடந்தை,
உலக மாதா, நா மகள், இசை மகள்,
கலை மகள், வெண் தாமரை மகள், கண்ணுள்,
(தொலையா என்) உயிர்த் துணைவி (பெயரே).

(21 பெயர்கள்) 66

**நா மகள் ஊர்தி**

ஊர்தி, பூரம் (ஆகும் என்ப). (1 பெயர்) 67

**இந்திரன்**

அமராவதியோன், ஆயிரம் கண்ணன்,
சதமகன், கோபதி, போகி, சங்கிரந்தனன்,
பாக சாதனன், வச்சிரப் படையோன்,
மேக வாகனன், விண் முழுது ஆளி,
வாசவன், மகவான், வானவன், கௌசிகன்,
ஆகண்டலன், அயிராவதன், வலாரி,
புருகூதன், சக்கிரன், புரந்தரன், மருத்துவன்,
மருதக் கிழவன், வரை சிறகு அரிந்தோன்,
அரி, சசி வல்லவன், திருமலி சுவர்க்கன்,
வேள்வி நாயகன், புலவன், வேந்தன்,
புரோகிதன், சுனாசி, கரியவன், புனிதன்,
காண்டாவனன், மால், வெள்ளை வாரணன்,
தேவர் வேந்தன், பொன் நகர்ச் செல்வன்,
ஐந் தரு நாதன், இந்திரன் (பெயரே).

(39 பெயர்கள்) 68

**இந்திரன் தேவி**

சுந்தரி, சசி, அயிராணி, புலோமசை,
ஐந் தருச் செல்வி, இந்திரன் தேவி (பெயர்).

(5 பெயர்கள்) 69

**இந்திரன் மகன்**

சயந்தன், இந்திரன் தன் மகன் (ஆகும்).

(1 பெயர்) 70

**இந்திரன் நகர்**

(ஆங்கு) அவன் திருநகர், அமராவதியே.

(1 பெயர்) 71

**இந்திரன் யானை**

(ஓங்கிய) ஊர்தி, (வெள்ளை) அயிராவதம்.

(1 பெயர்) 72

**இந்திரன் குதிரை**

(மெச்சிய) பரிமா, உச்சைச் சிரவம்.
(1 பெயர்) 73

**இந்திரன் படை, கொடி**

வச்சிரம், படையே; (வண்) கொடி, இடி (ஆம்).
(1, 1 பெயர்கள்) 74

**இந்திரன் மண்டபம்**

மண்டபம், சயந்தம். (1 பெயர்) 75

**இந்திரன் மாளிகை**

மாளிகை, வசந்தம். (1 பெயர்) 76

**இந்திரன் பண்டாரம்**

பண்டாரப் (பெயர்), (பகரில்) சுதன்மம்.
(1 பெயர்) 77

**இந்திரன் நந்தனவனம்**

(அம் தண்) கற்பகச் சோலை, நந்தனவனம்.
(1 பெயர்) 78

**இந்திரன் சேமநிதி**

சேமம், நவநிதி. (1 பெயர்) 79

**இந்திரன் கோ**

கோ, காமதேனு. (1 பெயர்) 80

**இந்திரன் உணவு**

உணவு (அது), அமுதம். (1 பெயர்) 81

**இந்திரன் புனைவது**

புனைவது, கற்பக மலர். (1 பெயர்) 82

**இந்திரன் அணிவது**

அணிவது, சிந்தாமணி, சூளாமணி.
(2 பெயர்கள்) 83

**நாடகத்து அரம்பையர்**

மேனகை, அரம்பை, உருப்பசி, திலோத்தமை,
(ஆன நால்வரும்) நாடகத்து அரம்பையர் .
(4 பெயர்கள்) 84

**தேவர் (பொது)**

வானவர், அமுதர், வரர், புத்தேளிர்,
மேலவர், இமையவர், விண்ணவர், கடவுளர்,
அமரர், புங்கவர், ஐயர், இலேகர்,
விபுதர், தீர்த்தர், அசுரர்க்கு அமித்திரர்,
உயர் நிலையோர், சுரர், உம்பர், புலவர்,
அண்டர், முதல்வர், ஆதித்தர், சுவர்க்கர்,
பொன் உலகு உடையோர், தேவர் பொதுப்(பெயர்).
(24 பெயர்கள்) 85

**தேவர் முப்பத்து மூவர்**

ஆதித்தர் பன்னிருவர், அச்சுவினிகள் இருவர்,
ஈசர் பதினொருவர், எண்மர் வசுக்கள்,
(ஆக) முப்பத்து மூவர் (தம் பெயரே).
(33 பெயர்கள்) 86

**ஆதித்தர் பன்னிருவர்**

வைகத்தன், விவச்சுதன், வாசன், மார்த்தாண்டன்,
பாற்கரன், இரவி, உலோகப் பிரகாசன்,
உலோக சாட்சி, திரிவிக்கிரமன்,
ஆதித்தன், திவாகரன், அங்கிசமாலி,
(ஆகச்) சூரியர் (பன்னிரண்டு என்ப).
(12 பெயர்கள்) 87

**ஏகாதச ருத்திரர் (உருத்திரர் பதினொருவர்)**

மாதேவன், அரனே, உருத்திரன், சங்கரன்,
நீல லோகிதன், ஈசானன், விசயன்,
வீம தேவன், பவோற்பவன், கபாலி,
சௌமியன், ஏகாதச ருத்திரர் பெயர்.
(11 பெயர்கள்) 88

**அட்டவசுக்கள்**

தரன், துருவன், சோமன், ஆபச் சைவன்,
அனலன், அனிலன், பிரத்தியூசன்,
பிரபாசன், அட்ட வசுக்கள் (பெயரே).
(8 பெயர்கள்) 89

**அச்சுவினிகள் இருவர்**

அச்சுவினி தேவர், இருவர் (தம் பெயரே).
(2 பெயர்கள்) 90

**கடவுளர் (பொது)**

பண்ணவர், பகவர், தீர்த்தர், பட்டாரகர்,
புங்கவர், (என்பவும்) கடவுளர் பொதுப் (பெயர்).
(5 பெயர்கள்) 91

**தெய்வம்**

சூரே, அணங்கு, கடவுள், தெய்வதம்,
தேவு, புத்தேள், இயவுள், தெய்வம் (ஆகும்).
(7 பெயர்கள்) 92

**சுரர் மகளிர்**

அர மகளிர், சூரரமகளிர், அரம்பையர்,
சுரர் மகளிர் (ஆம் எனச் சொல்லப் பெறுமே).
(3 பெயர்கள்) 93

**தெய்வப் பெண்**

அணங்கு, சூர், வஞ்சனை, மாயவள், கன்னி,
(இணங்கிய) தெய்வப் பெண் (பெயர் ஆகும்).
(5 பெயர்கள்) 94

**மூதேவி**

கழுதை ஊர்தி, காக்கைக் கொடியாள்,
முகடி, தௌவை, கலதி, மூதேவி. 95

### மற்றும் மூதேவி

*சீர்கேடி, கேட்டை, கெடல் அணங்கு, ஏக*
*வேணி, சேட்டை, (என்ன விளம்புவர்).*
*(10 பெயர்கள்) 96*

### மூதேவி ஊர்தி, படை, கொடி

*வாகனம், கழுதை; வன்படை, துடைப்பம்;*
*காகம், கொடி (எனக் கழறல் வேண்டும்).*
*(1, 1, 1 பெயர்கள்) 97*

### தரும தேவதை

*மரகத வல்லி, பூக நிழலினள்,*
*பரம சுந்தரி, இயக்கி, பகவதி,*
*அருகனைத் தரித்தாள், அறத்தின் செல்வி,*
*தரும தேவதை, அம்பாலிகை (பெயரே).*
*(8 பெயர்கள்) 98*

### அருகன்

*புண்ணியன், எண் குணன், பொன் எயில் நாதன்,*
*பண்ணவன், பட்டாரகனே, முனைவன்,*
*அசோகு அமர் கடவுள், பகவன், முக்குடையோன்,*
*அற ஆழி வேந்தன், அரி அணைச் செல்வன்,*
*பூ மிசை நடந்தோன், வரதன், சினேந்திரன்,*
*(ஆன பிறவும்) அருகன் (பெயரே).*
*(14 பெயர்கள்) 99*

### அருகன் ஊர்தி, படை

*அருகன் ஊர்தி, அம்புயம், படையே.*
*(1 பெயர்) 100*

### அருகன் கொடி

*(நாடகக்) காட்சி, ஞானம், சீலம், கொடி.*
*(3 பெயர்கள்) 101*

### புத்தன்

*பார்மிசை நடந்தோன், பகவன், புங்கவன்,*
*தருமன், சாந்தன், முனைவன், வாமன்,*
*புனிதன், சினன், வரன், அறிவன், பிடகன்,*
*போதி வேந்தன், புத்தன் (பெயரே).*
*(13 பெயர்கள்) 102*

### குபேரன்

*இருநிதிக் கிழவன், இயக்கர் வேந்தன்,*
*வடதிசைத் தலைவன், நர வாகனனே,*
*அளகை ஆளி, அதி தனச் செல்வன்,*
*சீரகத் தாரோன், வைச்சிரவணனே,*
*அரனுடைத் தோழன், கின்னரர் பிரானே,*
*மரகதன், புட்பக ஊர்தி, பிங்கலன்,*
*மந்திரி, தனபதி, குபேரன் (தன் பெயர்).*
*(15 பெயர்கள்) 103*

### குபேரன் வாகனம்

*நர வாகனமும், புட்பகத் தேரும்,*
*அவன் வாகனம் (ஆம் அறியுங் காலே).*
*(2 பெயர்கள்) 104*

### இயமன்

*இயமன், அரி, அந்தகன், தென் திசைக் கிழவன்,*
*சமனே, சண்டன், சண்பன், தருமன்,*
*நமனே, மறலி, தண்ட தரனே,*
*சைமினி நகரோன், வைதரணி நதியோன்,*
*செங்கோல் கடவுள், நாசவன், நடுவன்,*
*(இங்கு இவை) யமன் (பெயர்), கூற்றும் (இசைக்கும்).*
*(17 பெயர்கள்) 105*

### இயமன் ஊர்தி, படை

*எருமை, ஊர்தி; (எறியும் ஒண்) படை,*
*தண்டு, பாசம் (தான் ஆகும்மே).*
*(1, 2 பெயர்கள்) 106*

### காலன்

*சண்டன், மறலி, கூற்று, சமனே,*
*(வந்த) மடங்கல், கால், மறலும் (இசைக்கும்).*
*(7 பெயர்கள்) 107*

### காலன் படை

*(துணிக்கும் வெம்)படை, கணிச்சி (ஆகும்).*
*(1 பெயர்) 108*

### அசுரர்

*தானவர், அவுணர், தயித்தியர், கண்டகர்,*
*மேனி கரப்போர், தகுவர், கார் வண்ணர்,*
*தேவர் பகைவர், திதி புதல்வர், அசுரர்.*
*(9 பெயர்கள்) 109*

### மாவலி

*வயிரோசனனே, மாவலி (அவுணன்).*
*(1 பெயர்) 110*

### நிருதர்

*நிசாசரர், சாலகடங்கடர், நிருதர். (2 பெயர்கள்) 111*

### அரக்கர்

*அரக்கர், இராக்கதர், யாது தானவர்,*
*நிசாசரர், பிசிதாசனர் (என நிகழ்த்துப).*
*(4 பெயர்கள்) 112*

### கந்தருவர்

*கந்தருவர், இயக்கர், யாழோர், காந்தருவர்,*
*தந்திரர், கின்னரர் (என்னச் சாற்றுவர்).*
*(5 பெயர்கள்) 113*

### வித்தியாதரர்

*விஞ்சையர், கேசரர், வித்தியாதரர் (பெயர்).*
*(2 பெயர்கள்) 114*

**வித்தியாதரர் இடம்**

சேணியும், விஞ்சைப் பதியும், சேடியும்,
யாணர் நகரும், வித்தியாதரர் இடம்.
*(4 பெயர்கள்)* *115*

**பூதம்**

சாதகம், பாரிடம், குறள், கூளி, சாரதம்,
மகோதரம், கிருத்திமம், கணம், பூதப் (பெயர்).
*(8 பெயர்கள்)* *116*

**பேய்**

கடி, வேதாளம், கழுது, கூளி,
வெறியே, அலகை, பிசாசு, மண்ணை,
மயலே, சோகு, மருளே, வியந்தரம்,
பிரேதம், அழனே, குணங்கு, குணபாசி,
பாசம், சாவு, சவமே, அள்ளை,
குணபமும், பிணமும், பேய் (பெயர் கூறும்).
*(22 பெயர்கள்)* *117*

**சூரியன்**

இரவி, இனன், மணி, என்றூழ், செஞ்சுடர்,
பரிதி, தேரோன், எல்லோன், பானு,
சண்டன், அருக்கன், தபனன், ஆதவன்,
அண்ட யோனி, ஆயிரம் கதிரோன்,
கனலி, திவாகரன், கனலோன், பாற்கரன்,
அனலி, ஒளியோன், அலரி, மார்த்தாண்டன்,
தினகரன், செங்கதிர், அரி, திமிராரி,
அருணன், சூரன், ஞாயிறு, சவிதா,
பகலே, பர்க்கன், வெயிலோன், ஆதித்தன்,
விரிச்சிகன், விரோசனன், விகர்த்தனன், மித்திரன்,
வெய்யோன், கதிரோன், வெஞ்சுடர், சோதி,
பகலவன், எல்லை, பதங்கன், ஆதபன்,
அழலவன், உதயன், இருள்வலி, பொழுது,
பகவன், சான்றோன், வேந்தன், தாபனன்,
தரணி, எல்லி, சாயா பதியே,
பகலோன், விண் மணி, பனிப் பகை, கதிரவன்,
சுடரோன், மாலி, சூரியன் (பெயரே).
*(64 பெயர்கள்)* *118*

**சூரிய மண்டிலம்**

விசயம், (என்பது) வெங்கதிர் மண்டிலம்.
*(1 பெயர்)* *119*

**சூரிய கிரணம்**

கரமே, தீவிரம், கோ, கிரணம் கதிர்.
*(4 பெயர்கள்)* *120*

**வெயில்**

கோடை, என்றூழ், எல், ஒளி, வெயில் (எனல்). *121*

**மற்றும் வெயில்**

ஆதவம் (என்பதும் அப் பெயர்க்கு உரித்தே).
*(5 பெயர்கள்)* *122*

**உதயம்**

விடியல், வைகறை, புலரி, உதயம்.
*(3 பெயர்கள்)* *123*

**கழிவு நாள்**

கழிவு நாளே, காலி, வைகல்.
*(2 பெயர்கள்)* *124*

**அந்தி**

சந்தி, மாலை, சாயம், (என்று இவை)
அந்தியின் பெயர்; கோதூளியும், (ஆகும்).
*(4 பெயர்கள்)* *125*

**நடுப் பகல்**

மத்தியானம், நண்பகல், நடுப் பகல். *126*

**மற்றும் நடுப் பகல்**

உச்சியும், உருமமும் (அப் பெயர்க்கு உரித்தே).
*(4 பெயர்கள்)* *127*

**சாமம்**

யாமம் (என்பது) சாமம் (ஆகும்)
*(1 பெயர்)* *128*

**பகல்**

எல்லு, திவசம், தினம், திவாவும், பகல்.
*(4 பெயர்கள்)* *129*

**அருக்கன் ஊர்தி**

தனிக் கால், பொன் தேர், அருக்கன் ஊர்தி.
*(2 பெயர்கள்)* *130*

**அருக்கன் தேர்ப் புரவி**

(ஓர்) ஏழ் புரவி உடையன அதற்கே.
*(1 பெயர்)* *131*

**அருக்கன் தேர்ப் பாகன்**

ஆதித்தன் பாகன், அருணன் (ஆகும்).
*(1 பெயர்)* *132*

**சந்திரன்**

இந்து, சசி, இமகிரணன், தண் சுடர்,
உடு பதி, தாரா பதியே, அம்புலி,
அமுத கதிரோன், சீதன், குரங்கி,
விது, நிலவு, அல்லோன், வேந்தன், தண்ணவன்,
கலையோன், மதியே, களங்கன், குபேரன்,
ஆலோன், பனிக் கதிர், குமுத சகாயன்,
அலவன், கலா நிதி, நிசா கரன், நிசா பதி,
இரவோன், இராக் கதிர், தானவன், சுதாகரன்,
உடு வேந்தன், பிறை, முயற் கூடு, பசுங் கதிர்,
சந்திரன், திங்கள், சோமன் (தன் பெயரே).
*(36 பெயர்கள்)* *133*

### நிலவு

*நிலவின் (பெயர்), சந்திரிகை (என்ப).*
*(1 பெயர்) 134*

### பிறை நிரம்பல்

*கலை, பிறை நிரம்பல் (கருதுங் காலே).*
*(1 பெயர்) 135*

### சந்திரன் ஊர்தி

*வெண் மதி ஊர்தி, விமானம் (ஆகும்).*
*(1 பெயர்) 136*

### இரவு

*யாமம், நத்தம், யாமினி, வகுஞ்சம்,*
*சாமம், கங்குல், நிசா, நிசி, திமிரம்,*
*எல்லியும், அல்லும், இரவின் (பெயரே).*
*(11 பெயர்கள்) 137*

### செவ்வாய்

*அழலவன், பௌமன், அங்காரகனே,*
*குருதி, வக்கிரன், குசனே, மங்கலன்,*
*ஆரல், உதிரன், அரத்தன், அறிவன்,*
*அழலே, உலோகிதன், செந் தீ வண்ணன்,*
*சேய், (இவை) செவ்வாய் (சிறந்த பெயரே).*
*(15 பெயர்கள்) 138*

### புதன்

*அருணன், கணக்கன், அறிஞன், சாமன்,*
*மதி மகன், மேதை, மால், தேர்ப் பாகன்,*
*புந்தி, தூதன், பச்சை, புதனே.*
*(11 பெயர்கள்) 139*

### வியாழன்

*ஆசான், மந்திரி, ஆண்டு அளப்பான், பொன்,*
*பீதகன், சுர குரு, பிரகற்பதி, சீவன்,*
*தேவ மந்திரி, சித்தன், சிகண்டிசன்,*
*(மேவிய) அந்தணன், அரசனும், வியாழன்.*
*(13 பெயர்கள்) 140*

### வெள்ளி

*தைத்திய மந்திரி, சல்லியன், சைத்தியன்,*
*மழைக் கோன், சுங்கன், கவி, புகர், பிரசுரன்,*
*பார்க்கவன், சுக்கிரன், ஒள்ளியோன், பளிங்கு,*
*காப்பியன், சிதனே, உசனன், வெள்ளியின் (பெயர்).*
*(15 பெயர்கள்) 141*

### சனி

*கதிர் மகன், நீலன், சாவகன், காரி,*
*முது மகன், மேற் கோள், மந்தன், முடவன்,*
*சௌரி, பங்கு, சந்தில், சனிப் (பெயர்).*
*(11 பெயர்கள்) 142*

### இராகு

*தமமே, கரும் பாம்பே, இராகு (ஆகும்).*
*(2 பெயர்கள்) 143*

### கேது

*செம் பாம்பே, சிகி, கொடி, கேது (ஆகும்).*
*(3 பெயர்கள்) 144*

### அனந்தன்

*அனந்தன், போகவதிக்கு இறை, சேடன்.*
*(2 பெயர்கள்) 145*

### வாரம்

*வாசரம், கிழமை, வாரம் ஆகும்.*
*(2 பெயர்கள்) 146*

### அச்சுவினி

*இரலை, ஐப்பசி, யாழ், ஏறு, தலை நாள்,*
*புரவி, மருத்துவ நாள், அச்சுவினி.*
*(7 பெயர்கள்) 147*

### பரணி

*காடு கிழவோள், பூதம், அடுப்பு,*
*தாழி, (பெருஞ்) சோறு, தருமன் நாள், முக்கூட்டு,*
*போதகம், பரணிப் (பெயர்), தாசியும் (ஆகும்).*
*(10 பெயர்கள்) 148*

### கார்த்திகை

*அறுமீன், அங்கி நாளே, அளக்கர்,*
*எரி நாள், அளகு, இறல், நாவிதன், வாணன்,*
*தழலே, ஆரல், கார்த்திகை (தன் பெயர்).*
*(10 பெயர்கள்) 149*

### உரோகிணி

*சகடு, விமானம், சதியே, ஊற்றல்,*
*அயன் நாள், வையம், உரோகிணி (ஆகும்).*
*(6 பெயர்கள்) 150*

### மிருக சீரிடம்

*மாழ்கு, மான் தலை, மார்கழி, நரிப்புறம்,*
*மதி நாள், மும் மீன், பாலை, வெய்யோன்,*
*மிருக சீரிடம், ஐந்தானமும் (விளம்பும்).*
*(9 பெயர்கள்) 151*

### திருவாதிரை

*அரன் நாள், செங்கை, மூதிரை, ஆதிரை.*
*(3 பெயர்கள்) 152*

### புனர் பூசம்

*அதிதி நாள், கழை, ஆவணம், எரியே,*
*புனர்தம், கரும்பு, (இவை) புனர் பூசம் (ஆகும்).*
*(6 பெயர்கள்) 153*

### பூசம்

*குரு நாள், காற் குளம், கொடிறு, வண்டு,*
*புணர்தை, (ஆகும்) பூச நாள் (பெயரே).*
*(5 பெயர்கள்) 154*

**ஆயிலியம்**

அரவின் நாள், கௌவை, ஆயில், ஆயிலியம்.
(3 பெயர்கள்) 155

**மகம்**

வேள்வி, கொடு நுகம், வேட்டுவன், வாய்க்கால்,
ஆதி எழுஞ் சனி, பிதிர் நாள், மாகம்,
மாசி, எழுவாய் எழுஞ்சனி, மகப் (பெயர்)
(9 பெயர்கள்) 156

**பூரம்**

இடையது எழுஞ் சனி, எலியே, துர்க்கை,
பகவதி நாள், கணை, நாவிதன், பூரம்.
(6 பெயர்கள்) 157

**உத்தரம்**

பங்குனி, கடையது எழுஞ் சனி, பாற்குனி,
மானேறு, கதிர் நாள், மாரி நாள், உத்தரம்.
(6 பெயர்கள்) 158

**அத்தம்**

கைம் மீன், கைனி, கனலி நாளே,
ஐம் மீன், காமரம், களிறு, (இவை) அத்தம்.
(6 பெயர்கள்) 159

**சித்திரை**

நெய் மீன், அறுவை, நேர்வான், பயறு,
நடு நாள், துவட்டா நாளே, தச்சன்,
(தெரியில் இன்னவை) சித்திரைப் (பெயரே).
(7 பெயர்கள்) 160

**சோதி**

விளக்கே, மரக்கால், வெறு நுகம், வீழ்க்கை,
துளக்கம், காற்றின் நாளே, சோதி.
(6 பெயர்கள்) 161

**விசாகம்**

அனில நாள், முற்றில், முறம், வைகாசி,
சுளகு, விசாகத் (தொல் பெயர் ஆகும்).
(5 பெயர்கள்) 162

**அனுடம்**

பனை, தேள், பெண்ணை, புல், தாளி, போந்தை,
(இனையவை) மித்திர நாளும், அனுடம்.
(7 பெயர்கள்) 163

**கேட்டை**

துளங்கு ஒளி, வல்லாரை, வேதி, எரி, அழல்,
(கிளந்த) இந்திரன் நாள், சேட்டையும், கேட்டை.
(7 பெயர்கள்) 164

**மூலம்**

கொக்கே, தேட் கடை, குருகு, வில், அன்றில்,
(முற்றும்) ஆனி, அசுர நாள், மூலம்.
(7 பெயர்கள்) 165

**பூராடம்**

உடை குளம், முற் குளம், மாரி, நீர் நாள்,
(புகலில்) பூராடம், நீரும் (புகலும்).
(5 பெயர்கள்) 166

**உத்திராடம்**

ஆடி, விச்சுவ நாளே, கடைக் குளம்,
(ஓதிய) ஆனியோடு, உத்திராடப் (பெயரே).
(4 பெயர்கள்) 167

**திருவோணம்**

சோனை, மாயோன் நாள், முக்கோல், சிரவணம்,
ஓணம் (என்ப), உலக்கையும் (ஆகும்).
(5 பெயர்கள்) 168

**அவிட்டம்**

காகப் புள்ளே, வசுக்கள் நாளே,
ஆவணி, பறவை, அவிட்டப் (பெயரே).
(4 பெயர்கள்) 169

**சதயம்**

குன்று, வருணன் நாள், (பெருஞ்) செக்கு,
சுண்டன், போர், (இவை) சதய நாளே.
(5 பெயர்கள்) 170

**பூரட்டாதி**

புரட்டாதி, முற்கொழுங் கோலே, நாழி,
(உரைப்பர்) பரத நாள், பூரட்டாதி.
(4 பெயர்கள்) 171

**உத்திரட்டாதி**

முரசு, பிற் கொழுங் கோல், மன்னன், நீபம்,
(உரை செயின்) அறிவன் நாள், உத்திரட்டாதி.
(5 பெயர்கள்) 172

**இரேவதி**

தொழுவே, நாவாய், தோணி, சூலம்,
பஃறி, புருட நாள், கடைமீன், இரேவதி.
(7 பெயர்கள்) 173

**அருந்ததி**

அருந்ததி, சாலி, வடமீன் (ஆகும்).
(2 பெயர்கள்) 174

**விடிமீன்**

விடி மீன் (பெயரே), வெடி (எனல் ஆகும்).
(1 பெயர்) 175

**வான் மீன்**

வான் மீன் (பெயரே), புச்சம், (எனல் ஆகும்).
(1 பெயர்) 176

### வான் மீனின் பொதுப் பெயர்

சிதமும், பம்மும், சுக்கையும், கணமும்,
உடுவும், தாரகையும், ஒளியும், வான் மீனே.
(7 பெயர்கள்) 177

### இராசி

மேடமும், இடபமும், மிதுனமும், கடகமும்,
சிங்கமும், கன்னியும், துலாமும், தேளும்,
தனுவும், மகரமும், கும்பமும், மீனமும்,
(என்னும் பெயர் இவை ஈர் ஆறுள்ளும்
ஒப்புடை) மிதுனம் ஒழித்து அல்லாதன
அப் பெயர்க்கு அப் பெயர் அனைத்தும் ஆகும்.
(12 பெயர்கள்) 178

### மிதுனம்

யாழே, பாடவை, இரட்டை, சவை மகள்,
விழவு, தண்டொடு, மிதுனம் (ஆமே).
(6 பெயர்கள்) 179

### இராசி (பொது)

இல்லும், ஓரையும், பவனமும், இராசி.
(3 பெயர்கள்) 180

### சூரிய சந்திரர்க்கு உரிய திசை

கீழ்த் திசை அருக்கற்கும், வட திசை சோமற்கும்,
(சார்ச்சியாகச் சாற்றினர் புலவர்). 181

### மூவகை வீதி

மேட வீதி, இடப வீதி,
மிதுன வீதி, (என ஒரு மூன்றே; அவை தாம்,)
இரு சுடர் முதலிய இயங்கும் நெறியே.
(3 பெயர்கள்) 182

### மேட வீதி

இடபம், சிங்கம், மிதுனம், கடகம்,
(இனைய நான்கும்) மேட வீதி.
(4 பெயர்கள்) 183

### இடப வீதி

மீனம், மேடம், கன்னி, துலாமும்,
(ஆன) இடப வீதிக்கு (அமைந்தன).
(4 பெயர்கள்) 184

### மிதுன வீதி

வில்லு, மகரம், குடமே, விருச்சிகம்,
(சொல்லிய) மிதுன வீதித் (துறையே.) 185

(இவற்றுள்), சொன்ன இராசி தொகுத்த மாதங்கள்,
(மன்னிய) கதிர் முதல் கோள் வரும் நெறியே.
(4 பெயர்கள்) 186

### காலம்

போழ்தும், கொன்னும், பொழுதும், செவ்வியும்,
ஏல்வையும், வேலையும், அமையமும், காலையும்,
காலும், பதமும், காலம் (ஆகும்).
(10 பெயர்கள்) 187

### கால நுட்பம்

கலையும், துடியும், கணமும், மாத்திரையும்,
நொடியும், பிதிரும், நுட்பமும், திட்பமும்,
நிமிடமும், கால நுட்பம் (ஆகும்).
(9 பெயர்கள்) 188

### கால விரைவு

கணமும், மாத்திரையும், கால விரைவே.
(2 பெயர்கள்) 189

### நாழிகை

கடிகை, விகலை, கன்னல், இருத்தை,
பதமே, நாழி, நாழிகை (ஆகும்).
(6 பெயர்கள்) 190

### நாள்

அல்கல், திவா, பகல், ஆனியம், திவசம்,
ஏல்வை, எல், வைகல், தினம், (இவை) நாளே.
(9 பெயர்கள்) 191

### முன்னை நாள்

நென்னலும், நெருனலும், முன்னை நாள் (ஆகும்).
(2 பெயர்கள்) 192

### பின்னை நாள்

பிற்றையும், பின்றையும், பின்னை நாள் (ஆகும்).
(2 பெயர்கள்) 193

### திதி

திதியே பக்கம். (1 பெயர்) 194

### மாதம்

மதியே, திங்கள், மாதம் (ஆகும்).
(2 பெயர்கள்) 195

### ஒரு கலை வரு மதி நாள்

ஒரு கலை வரு மதி நாள், சினீவாலி. (1 பெயர்) 196

### அமாவாசை

குகு, அமாவாசை. (1 பெயர்) 197

### முதல் பக்கம்

பக்கம் முதலது, நந்தை, (ஆகும்). (1 பெயர்) 198

### இரண்டாம் பக்கம்

பத்திரை (என்பது), இரண்டாம் பக்கம்.
(1 பெயர்) 199

### மூன்றாம் பக்கம்

மூன்றே, சயை (பக்கம்). (1 பெயர்) 200

**நான்காம் பக்கம்**

நான்கே, இருத்தை. (1 பெயர்) 201

**ஐந்தாம் பக்கம்**

ஐந்தாம், பூரணை (ஆகும்). (1 பெயர்) 202

**பூரணை**

அனுமதி, பவ்வம், பூரணை, இடை, உவா.
(4 பெயர்கள்) 203

**கார் காலம்**

நவம், கார் காலம். (1 பெயர்) 204

**கூதிர் காலம், கொடும் பனிக் காலம்**

கூதிர் காலமும், கொடும் பனிக் காலமும்
(இரண்டு காலமும்) சிசிரம் (ஆகும்). (1 பெயர்) 205

**இள வேனில்**

மாதவம், வசந்தம், மது, இளவேனில்.
(3 பெயர்கள்) 206

**கொடிய வேனில்**

கோடை, சமம், சுசி, கொடிய வேனில்.
(3 பெயர்கள்) 207

**பருவம்**

பருவமும் இருதுவும் (பகரில் ஒன்றே). 208

**அறுவகைப் பருவ காலம்**

காரே, கூதிர், முன் பனி, பின் பனி,
(சீர்) இள வேனில், முது வேனில் (என்று ஆங்கு)
இரு மூன்று வகைப் பருவம் தானே.
(6 பெயர்கள்) 209

(அவைதாம்) ஆவணி முதலா இரண்டு இரண்டாக
மேவிய திங்கள் எண்ணினர் கொளலே. 210

**அறு வகை இருது**

வசந்தம், கிரீடம், வருடம், சரமே,
ஏமந்தம், சிசிரம், (என) இருது ஆறு (ஆகும்).
(6 பெயர்கள்) 211

(அவை தாம்) சித்திரை முதலாச் (செல்) மாதம்
இரண்டா வைத்தன எண்ணிக் கொள்க என்ப. 212

**ஆண்டு**

ஆயனம், சமை, அயனம், தெய்வதம்,
வருடம், வற்சரம், ஆண்டின் (பெயரே).
(6 பெயர்கள்) 213

**வாழ்நாள்**

ஆயுகம், ஆயுள், வாழ் நாள் (என்ப).
(2 பெயர்கள்) 214

**உக முடிவு**

ஊழியும், மடங்கலும், உக முடிவு (ஆகும்).
(2 பெயர்கள்) 215

**நால் வகை உகம்**

கிரேதா, திரேதா, துவாபரம், கலி, (என
ஒரு நான்கு என்ப) உகத்தின் (பெயரே).
(4 பெயர்கள்) 216

**அமுது**

அமரியும், சுதையும், மருந்தும், அமுதே.
(3 பெயர்கள்) 217

**தெய்வ உணவு**

சருவும், பலியும், நிவேத்தியமும், அமுதும்,
அவியும், தெய்வ உணவு (ஆகும்மே).
(5 பெயர்கள்) 218

**ஆலகால விடம்**

காளகூடம், ஆலகால விடமே. (1 பெயர்) 219

**ஆன்மா**

பசு, உயிர், சீவன், புற்கலன், சேதனன்,
அணு, இயமானன், ஆதன், செந்து,
ஆவி, பூதன், உறவி, கூத்தன்,
(ஆன இன்னவை) ஆன்மா (ஆகும்).
(13 பெயர்கள்) 220

**இரண்டாவது**
**வானவர் வகை முற்றிற்று.**

## 3. ஐயர் வகை

**இருடிகள்**

முனிவர், மாதவர், இலிங்கிகள், முனைவர்,
படிவர், உறுவர், பண்ணவர், ஐயர்,
அறவோர், தபோதனர், அறிஞர், அந்தணர்,
துறவோர், கடிந்தோர், மோனியர், யோகியர்,
கோபம் காய்ந்தோர், நீத்தோர், மெய்யர்,
தாபதர், இருடிகள் (தம் பெயர் ஆகும்)
(20 பெயர்கள்) 1

**சத்த இருடிகள்**

அகத்தியன், புலத்தியன், அங்கிரா, கௌதமன்,
வசிட்டன், காசிபன், மார்க்கண்டேயன், (என்று
இசைத்த இவர்தாம்) ஏழ் இருடிகளே.
(7 பெயர்கள்) 2

**அகத்தியன்**

குறுமுனி, கும்ப யோனி, அகத்தியன்.
(2 பெயர்கள்) 3

**சைவ தவப்பாலோர்**

மா விரதியரும், காளாமுகரும்,
பாசுபதரும், சைவ தவப்பாலோர்.

*(3 பெயர்கள்)* 4

**நாராயண சமயத்தார்**

வைணவர், பாகவதர், நாராயண சமயத்தோர்.

*(2 பெயர்கள்)* 5

**சமணர்**

சாவகர், அருகர், சமணர், அமணர்.

*(3 பெயர்கள்)* 6

**சமண் தவத்தோர்**

ஆசீவகர், தாபதர், அத் தவத்தோரே.

*(2 பெயர்கள்)* 7

**புத்தர்**

புத்தர், சாக்கியர், தேரர், பௌத்தர்.

*(3 பெயர்கள்)* 8

**புத்த தவத்தோர்**

*(வைத்த)* சீவகர், அத் தவத்தோரே.

*(1 பெயர்)* 9

**சடை முடியோர்**

முனிவர், தாபதர், சடைமுடியோரே.

*(2 பெயர்கள்)* 10

**ஒருமை**

ஒருமை (என்பது), இறை உணர்வு (ஆகும்).

*(1 பெயர்)* 11

**ஒன்று**

ஒன்று (எனப்படுவது), வீடு பெறலே.

*(1 பெயர்)* 12

**இருமை**

இருமை (என்பது), இம்மையும், மறுமையும்.

*(2 பெயர்கள்)* 13

**இரு வினை**

இரு வினை, புண்ணியம், பாவம், (என்ப).

*(2 பெயர்கள்)* 14

**இருவகைத் தோற்றம்**

இருவகைத் தோற்றம், சரா சரம் (என்ப).

*(2 பெயர்கள்)* 15

**இரு சுடர்**

இரு சுடர், இரவி, மதியம் (ஆகும்).

*(2 பெயர்கள்)* 16

**இரு மரபு**

இரு மரபு, தாய் வழி, தந்தை வழி, (என்ப).

*(2 பெயர்கள்)* 17

**இரு வகைக் கந்தம்**

இருவகைக் கந்தம், நற் கந்தம், துர்க் கந்தம்.

*(2 பெயர்கள்)* 18

**இருவகை அறம்**

இல்லறம், துறவறம், இருவகை அறமே.

*(2 பெயர்கள்)* 19

**இருவகைப் பொருள்**

கல்வியும், செல்வமும், இருவகைப் பொருளே.

*(2 பெயர்கள்)* 20

**இருவகைக் கூத்து**

இருவகைக் கூத்து, மார்க்கம், தேசிகம்.

*(2 பெயர்கள்)* 21

**மும்மை**

மும்மை, உம்மையும், இம்மையும், மறுமையும்.

*(3 பெயர்கள்)* 22

**முப் பொறி**

மனமும், வாக்கும், காயமும், முப் பொறி.

*(3 பெயர்கள்)* 23

**முச் செயல்**

படைத்தலும், காத்தலும், அழித்தலும், முச் செயல்.

*(3 பெயர்கள்)* 24

**முக் காலம்**

இறந்த காலம், எதிர் காலம், நிகழ் காலம், (எனச்
சிறந்த) காலம் மூன்று (எனச் செப்புவர்).

*(3 பெயர்கள்)* 25

**மூவிடம்**

முன்னிலை, படர்க்கை, தன்மை, மூவிடம்.

*(3 பெயர்கள்)* 26

**முக் குற்றம்**

காமம், வெகுளி, மயக்கம், முக் குற்றம்.

*(3 பெயர்கள்)* 27

**மூவகை மொழி**

பட்டாங்கு பேசல், பழித்தல், புகழ்தல்,
(முட்டு இன்று ஆகும்) மூவகை மொழியே.

*(3 பெயர்கள்)* 28

**முக் குணம்**

சாத்துவிகம், இராசதம், தாமதம், முக்குணம்.

*(3 பெயர்கள்)* 29

**அவற்றுள் சாத்துவிக குணம்**

ஞானம், தவம், மேன்மை, (நல்) அருள், மோனம்,
வாய்மை, பொறை, புலன் அடக்கல், சாத்துவிகம்.
(8 பெயர்கள்) 30

**இராசத குணம்**

தானம், தவமே, தருமம், பேணல்,
ஞானம், கல்வி, நலன், இவை தெரிதல்,
(ஈனம் இல்லா) இராசத குணமே.
(8 பெயர்கள்) 31

**தாமத குணம்**

(நிறை) பேர் உண்டி, நீதிகேடு, உறக்கம்,
மறவி, பொய், சோம்பு, ஒழுக்கம் வழுவுதல்,
கொலையே, வஞ்சம், (இவை) தாமத குணம்.
(9 பெயர்கள்) 32

**மூவகைத் தானம்**

முதல், இடை, கடை, (என) மூவகைத் தானம்.
(3 பெயர்கள்) 33

**(அவற்றுள்) உத்தம தானம்**

அறத்தின் ஈட்டி, வரும் பொருள் புறத் துறைக்
குற்றம் மூன்றும் அறுத்த நல் தவர்க்குக்
கொள்கெனப் பணிந்து குறை இரந்து அவர்வயின்
உள்ளம் உவந்து ஈவது, உத்தம தானம். 34

**மத்திம தானம்**

ஆதுலர், அந்தகர், உறுப்பறைகள், ஆதர்,
மாதர்க்கு ஈவது, மத்திம தானம்.
(5 பெயர்கள்) 35

**கடைப்படு தானம்**

ஆர்வம், புகழே, அச்சம், கைம்மாறு,
காரணம், கண்ணோட்டம், கடப்பாடு, (என்று
இவை ஏழும்) கடைப்படு தானம் என்ப.
(7 பெயர்கள்) 36

**மூவகைப் பாவ புண்ணிய வழக்கம்**

செய்தல், செய்வித்தல், உடன்பாடு, (என்ஞ
வரு முறை) பாவ புண்ணிய வழக்கம்.
(3 பெயர்கள்) 37

**மூவுலகு**

பூமி, அந்தரம், சுவர்க்கம், (என்ன
வரு) மூன்று உலகின் (பெயர் என அறைவர்).
(3 பெயர்கள்) 38

**முச்சுடர்**

திங்கள், வெய்யோன், அக்கினி, (என்று இவை
மூன்றும் சுடர் (என மொழிகுவர் புலவர்).
(3 பெயர்கள்) 39

**திரிகடுகம்**

திரிகடுகம், சுக்கு, திப்பிலி, மிளகு.
(3 பெயர்கள்) 40

**திரிபலை**

திரிபலை, நெல்லி, கடுக்காய், தான்றி.
(3 பெயர்கள்) 41

**நாற் கதி**

தேவ கதி, மிருக கதி, மக்கள் கதியே,
(மேவு) நரக கதி (என நான்கே). (4 பெயர்கள்) 42

**நால்வகை வேதம்**

இருக்கு வேதம், எசுரு வேதம்,
சாம வேதம், அதர்வண வேதம், (என)
நால்வகை வேத (நாமம் ஆகும்).
(4 பெயர்கள்) 43

**நால்வகை இழிச்சொல்**

குறளை, கடுஞ் சொல், பயன் இல் சொல்லே,
மருள் கொள் சொல், (என) இழிச்சொல் நான்கே.
(4 பெயர்கள்) 44

**ஆடவர் நாற்குணம்**

அறிவு, நிறை, ஓர்ப்பு, கடைப்பிடி, (என்னத்
தகும் இவை) ஆடவர் நற்குணம் (நான்கே).
(4 பெயர்கள்) 45

**பெண்கள் நாற்குணம்**

நாணம், மடம், அச்சம், பயிர்ப்பு, (என்று இன்ன)
மாண் இழையவர்க்கு (வருங்) குணம் (நான்கே).
(4 பெயர்கள்) 46

**நால்வகைப் புண்ணியம்**

தானம், கல்வி, தவமே, ஒழுக்கம்,
நால்வகைப் புண்ணிய (நாமம் ஆகும்).
(4 பெயர்கள்) 47

**உயிர்த் தோற்றம் நால்வகை**

(குடல் போல்) பையினும், முட்டையினும்
(தோன்றியும்,) (மெய்க்கண்) வியர்வினும், (மிக்க)
நிலத்தினும், (ஒக்க) நால்வகை உயிர்த் தோற்றம்மே.
(4 பெயர்கள்) 48

**நால்வகைப் புலமை**

கவியே, கமகன், வாதி, வாக்கி, (என்று
இவை ஒரு) நான்கும் புலமைக்கு (இயல்பே).
(4 பெயர்கள்) 49

**அவற்றுள் கவியின் வகை**

ஆசு, மதுரம், சித்திரம், வித்தாரம் எனப்
பாவகை பாடுவோன், கவி (எனப்படுமே).
(1 பெயர்) 50

**கமகன் வகை**

ஞாபகம், செம் பொருள், நடையின் எப் பொருளும்
காசு இன்று உரைப்போன், கமகன் (ஆகும்).
(1 பெயர்) 51

**வாதி வகை**

ஏதுவும், மேற்கோளும், எடுத்துக் காட்டி,
தன் கோள் நிறீஇ, பிறர் கோள் மறுப்போன்,
மன்பதை மதித்த வாதி (ஆகும்). (1 பெயர்) 52

**வாக்கி வகை**

அறம், பொருள், இன்பம், வீடு எனும் திறங்கள்
கேட்க வேட்க இனியன கூறும் ஆற்றல்
உடையான், வாக்கி (ஆகும்). (1 பெயர்) 53

**ஆசு கவி வகை**

கொடுத்த பொருளில், தொடுத்த இனத்தில்,
அடுத்த பொழுதில் பாடுவது, ஆசுகவி. 54

**மதுர கவி வகை**

பொருளின் பொலிவும், சொல்லின் திறனும்,
தொடையும் தொடைக்கண் விகற்பமும் துதைந்து,
அங்கு உருவகம் முதலா அலங்காரங்களை
உட்கொண்டு ஓசை பொலிவு உடைத்து ஆகி,
உய்த்து உணர்வோர் தம் உள்ளங்கட்கு
மால் கடல் அமிழ்தம் போல் பாடுவது, மதுரகவி. 55

**சித்திர கவி வகை**

மாலைமாற்றே, சக்கரம், சுழிகுளம்,
ஏகபாதம், எழுகூற்றிருக்கை,
காதை கரப்பே, கரந்துறைப் பாட்டே,
தூசங்கொளலே, வாவன்ஞாற்றே,
பாத மயக்கே, பாவின் புணர்ப்பே,
கூட சதுக்கம், கோமூத்திரியே,
ஓர் எழுத்து இனத்தான் உயர்ந்த பாட்டே,
ஒற்றுப் பெயர்த்த ஒரு பொருள் பாட்டே,
சித்திரப் பாவே, விசித்திரப் பாவே,
விகற்ப நடையே, வினுவுத்தரமே,
சருப்பதோ பத்திரம், சார்ந்த எழுத்தே
வருக்கமும், (மற்றும் வடநூல் கடலுள்
ஒருக்குடன் வைத்த உதாரணம் நோக்கி,
விரித்து நிறைத்து) மிறைக் கவிப் பாட்டுத்
தெரித்துப் பாடுவது, சித்திர கவியே.
(21 பெயர்கள்) 56

**வித்தார கவி வகை**

மும் மணிக் கோவையும், பன் மணி மாலையும்,
மறமும், கலி வெண்பாவும், மடல் ஊர்ச்சியும்,
இயல் இசை நாடகம் இயன்ற பல் கவியும்,
கூத்தும், கிரீடையும், பாடாண்டத் துறையும்,
வகுத்த வகுப்பும், விருத்தக் கவிதையும்,
விரித்துப் பாடுவது, வித்தார கவியே.
(12 பெயர்கள்) 57

**நாற் பொருள்**

அறம், பொருள், இன்பம், வீடு,
எனப் பொருள் நான்கே. (4 பெயர்கள்) 58

**நால்வகைக் கேள்வி**

கற்றல், கேட்டல், அவ்வழி நிற்றல்,
ஒத்தல், நால்வகைக் கேள்வி (ஆகும்).
(4 பெயர்கள்) 59

**நால் நிலம்**

முல்லை, குறிஞ்சி, மருதம், நெய்தல், (எனச்
சொல்லிய முறையே) நால்வகை (ஆகும்).
(4 பெயர்கள்) 60

**நால்வகைச் சேனை**

யானை, தேர், பரி, காலாள், (என்று இவை)
நால்வகைத் தானை நாமம் ஆகும்).
(4 பெயர்கள்) 61

**நால்வகைப் பொன்**

சாத ரூபம், கிளிச்சிறை, ஆடகம்,
சாம்பூ நதம், (இவை) நால்வகைப் பொன்னே.
(4 பெயர்கள்) 62

**நால்வகைப் பூ**

கோட்டுப் பூ, கொடிப் பூ, நீர்ப் பூவோடு,
புதர்ப் பூ (என்று இவை) நால்வகைப் பூவே.
(4 பெயர்கள்) 63

**நால்வகைப் புசிப்பு**

உண்ப, தின்ப, நக்குவ, பருகுவ,
நால்வகைப் புசிப்பின் (நாமம் ஆகும்).
(4 பெயர்கள்) 64

**நால்வகை ஊறுபாடு**

குத்தல், வெட்டல், எய்தல், எறிதல்,
நால்வகை ஊறுபாடு (என நவில்வர்).
(4 பெயர்கள்) 65

**நால்வகை உபாயம்**

சாமம், பேதம், தானம், தண்டம், (என
நெறிபடும்) உபாயம் நான்கு (ஆகும்மே).
(4 பெயர்கள்) 66

**நால்வகை நிலை**

பைசாசம், ஆலீடம், மண்டிலம், பிரத்தி-
யாலீடம், நால்வகை நிலை (ஆகும்மே).
(4 பெயர்கள்) 67

**பஞ்ச பாதக வகை**

கொலையே, களவு, கள், குரு நிந்தை,
(பகரும்) பொய்யுடன், பஞ்ச பாதகமே.
(5 பெயர்கள்) 68

### ஐவகை வினு

அறியான் வினுவல், அறிவொப்புக் காண்டல்,
ஐயம் அறுத்தல், அவன் அறிவு தான் கோடல்,
மெய் அவற்குக் காட்டலோடு, ஐவகை வினுவே.
(5 பெயர்கள்) 69

### பஞ்சாங்க வகை

திதியே, வாரம், நாள், யோகம், கரணம், (எனப்
பகரும் சோதிடப்) பஞ்சாங்கம்மே.
(5 பெயர்கள்) 70

### பஞ்ச சயன வகை

மயிர்ச் சேணம், பஞ்சு மெத்தை, வண்படாம், தூவி,
(பயிற்றும் தண்) வீப் பாய், பஞ்ச சயனம்.
(5 பெயர்கள்) 71

### பஞ்ச வாச வகை

தக்கோலம், ஏலம், இலவங்கம், சாதிக்காய்,
கர்ப்பூரம், (என்று இவை கமழ்) பஞ்ச வாசம்.
(5 பெயர்கள்) 72

### பஞ்ச பூத வகை

நிலம், நீர், தேயு, வாயு, ஆகாயம், (என்று
இவை புலன் அறிந்தோர் ஏத்தும்) ஐம்பூதம்.
(5 பெயர்கள்) 73

### பஞ்ச புலன், பஞ்சேந்திரியங்கள்

சுவை, ஒளி, ஊறு, ஓசை, நாற்றம், அறியும்
கருவி நா, கண், மெய், செவி, மூக்கே.
(5 பெயர்கள்) 74

### இந்திரியம்

கரணம், பொறி, வாயில், கந்தம், இந்திரியம்.
(4 பெயர்கள்) 75

### ஐவகைக் குசல வித்தை

எண்ணல், எழுதல், இலே கிள்ளல், பூத் தொடுத்தல்,
பண் அமைந்த யாழினெடு, குசலம் ஐந்தே.
(5 பெயர்கள்) 76

### ஐவகை மெய்க் குற்றம்

கொட்டாவி, நெட்டை, குறுகுறுப்பு, கூன்கிடை,
நட்டு விழல் (ஐந்தும்), மெய்ந் நவைக் (குறியே).
(5 பெயர்கள்) 77

### ஐவகை விரை

கோட்டம், துருக்கம், தகரம், அகில், ஆரம்,
(ஒட்டிய ஐந்தும்) விரை (என உரைப்பர்).
(5 பெயர்கள்) 78

### ஐவகைத் தந்தையர்

அரசன், தலேவன், தந்தை, முன்னேன்,
குரவனேடு, (ஐவரும் குறிப்பினில்) தந்தை.
(5 பெயர்கள்) 79

### ஐம்பால் வகை

ஐம்பால் (என்பது), ஒருவன், ஒருத்தி,
பலர், ஒன்று, பல (எனப் பகுத்தனர் புலவர்).
(5 பெயர்கள்) 80

### ஐவகை உணவு

கடித்தல், நக்கல், பருகல், விழுங்கல்,
மெல்லல், (என்று இவை) ஐவகை உணவே.
(5 பெயர்கள்) 81

### பஞ்ச சத்த கருவி

தோல், தொளே, நரம்பு, கஞ்சம், பாடல்,
(பல் பேத) பஞ்ச சத்தம் (ஆகும்).
(5 பெயர்கள்) 82

### ஐவகை வேள்வி

கடவுள், பிரமம், பூதம், மானிடம்,
தென்புலத்தார் (என்று), ஐவகை வேள்வி.
(5 பெயர்கள்) 83

### ஐவகைத் தாயர்

ஈன்ற தாய், ஊட்டும் தாய், முலேத் தாய், கைத்தாய்,
செவிலித் தாய், (என) ஐவகைத் தாயர்.
(5 பெயர்கள்) 84

### கான்படு திரவியம் ஐந்து

அரக்கு, இருல், (இன்) தேன், (அணி) மயில் பீலி,
நாவி, கான்படு திரவியம் ஐந்தே.
(5 பெயர்கள்) 85

### கடல்படு திரவியம் ஐந்து

பவளம், முத்து, சங்கு, ஒக்கோலே,
உப்பு, கடல்படு திரவியம் ஐந்தே.
(5 பெயர்கள்) 86

### நாடுபடு திரவியம் ஐந்து

செந்நெல், செவ்விள நீர், சிறு பயறு,
கன்னல், கதலி, (எனப் பெயர் பெற்ற
ஐந்தும் நல்) நாட்டு அமைந்த திரவியம்.
(5 பெயர்கள்) 87

### நகர்படு திரவியம் ஐந்து

கண்ணுடி, பித்தன், கருங் குரங்கு, (காட்டு) ஆனே,
(மண் ஆளும்) வேந்தனேடு, ஐந்து திரவியம்.
(5 பெயர்கள்) 88

### மலேபடு திரவியம் ஐந்து

அகில், கறி, கோட்டமொடு, தக்கோலம்,
குங்குமம், ஐந்து மலேபடு திரவியம்.
(5 பெயர்கள்) 89

### ஆறு அங்கம்

மந்திரம், (சூத்திர) வியாகரணம், நிகண்டு,

சந்தோபிசிதம், நிருத்தம், சோதிடம்,
(என்றன வேதத்து) ஆறு அங்கம் (என்ப).
(6 பெயர்கள்) 90

**நல்நாட்டு அமைதி அறுவகை**

செல்வம், விளையுள், பல் வளம், செங்கோல்,
(கொல்) குறும்பு இன்மை, கொடும் பிணி இன்மை,
(என்று இவ்வகை ஆறும்) நல்நாட்டு அமைதி.
(6 பெயர்கள்) 91

**போக பூமி அறுவகை**

ஆதிஅரிவஞ்சம், நல் அரிவஞ்சம்,
ஏமத வஞ்சம், ஏம வஞ்சம்,
தேவ குருவம், உத்தர குருவம், (எனப்)
போக பூமி அறுவகைப் (படுமே).
(6 பெயர்கள்) 92

**உள் பகை ஆறு**

காமம், குரோதம், மோகம், உலோபம்,
மதம், மாச்சரியம், உள்பகை ஆறு (என்ப).
(6 பெயர்கள்) 93

**அறுவகைச் சுவை**

தித்தித்தல், கூர்த்தல், துவர்த்தல், கார்த்தல்,
கைத்தல், புளித்தலோடு, அறுவகைச் சுவையே.
(6 பெயர்கள்) 94

**அறுவகைப் புறச் சமயம்**

உலகாயதம், புத்தம், சமணம், மீமாஞ்சை,
பாஞ்ச ராத்திரம், பாட்டாசாரியம்,
(இவ் வகை) ஆறும் புறச் சமயம் (ஆகும்).
(6 பெயர்கள்) 95

**உள் சமயம் ஆறு**

வைரவம், வாமம், காளாமுகம், மாவிரதம்,
பாசுபதம், சைவம், (என்று) உள் சமயம் ஆறே.
(6 பெயர்கள்) 96

**பெரியோர் எழுவகைப் பெற்றி**

அறமும், பொருளும், இன்பமும், அன்பும்,
பொறுமையும், புகழும், மதிப்பும், (என்று இவை)
எழுவகைப் பெற்றி பெரியோர் (இயல்பே)
(7 பெயர்கள்) 97

**எழுவகைத் தாது**

இரதமும், உதிரமும், என்பும், தோலும்,
தசையும், மூளையும், சுக்கிலமும், (என்று இவை)
எழுவகைத் தாது (எனப் பெயர் பெறுமே).
(7 பெயர்கள்) 98

**எழுவகை நதி**

கங்கை, யமுனை, நருமதை, சரச்சுவதி,
(பொங்கு) காவிரி, குமரி, கோதாவரி, (என்று)
ஏழு (பெரு) வகை நதி (என உரைப்பர்).
(7 பெயர்கள்) 99

**எழுவகை நரகம்**

பெருங் களிற்று வட்டம், பெரு மணல் வட்டம்,
எரி பரல் வட்டம், அரி படை வட்டம்,
புகையின் வட்டம், பெருங் கீழ் வட்டம்,
இருளின் வட்டம், (என) எழுவகை நரகம்.
(7 பெயர்கள்) 100

**எழுவகைப் பிறப்பு**

தேவும், மாவும், தாபரமும், பறவையும்,
(மேவிய) மக்கள், ஊர்வ, நீரனவும்,
(பேசில்) எழுவகைப் பிறப்பு (என மொழிப).
(7 பெயர்கள்) 101

**எழுவகை யோனி பேத விரிவு**

அவற்றுள்,
தேவர், ஈரேழ்; மக்கள் ஒன்பான்;
தாபரம், இருபான்; ஊர்வன பன்னொன்று;
நீரன, விலங்கு, புள், நிரல் பப்பத்தாம்;
(ஆக) எண்பத்தினால் இலக்க பேதம்
மேவும் யோனி (ஆம் என்று உரைப்பர்). 102

**அவற்றுள் தன்னை அறிந்தவர் அறியாதவர்**

தன்னை அறிந்தவர், சாயுச்சியத்தர்,
பின்னையர், (மீண்டு) பிறப்போர் (என்ப). 103

**நாட்டு ஏழ் குற்றம்**

வெட்டில், கிளியே, நாவாய், ஏனம்,
தொட்டியர், கள்வர், (சோனைப்) பெரும் புயல்,
(நட்ட) நாட்டு ஏழ் குற்றம் (ஆகும்)
(7 பெயர்கள்) 104

**அட்ட மூர்த்த வகை**

பார், நீர், தேயு, வாயு, ஆகாயம்,
சூரியன், சந்திரன், இயமானன், (என்ன
ஆராய்ந்து உரைத்த) அட்ட மூர்த்தம்.
(8 பெயர்கள்) 105

**அட்ட மா சித்தி**

அணிமா, மகிமா, கரிமா, இலகிமா,
பிராத்தி, பிராகாமியம், ஈசத்துவம், வசித்துவம்,
(என்று ஓதற்கு அரிய) அட்ட மா சித்தி.
(8 பெயர்கள்) 106

**அட்டாங்க யோகம்**

இயமம், நியமம், ஆதனம், பிராணா
யாமம், பிரத்தியாகாரம், தாரணை,
தியானம், சமாதி, (என்று) அட்டாங்க யோகம்.
(8 பெயர்கள்) 107

### அவற்றுள் இயமம்

கொல்லா விரதம், மெய்ம்மை கூறல்,
கள்ளாமை, பிறர் பொருள் காதல் இன்மை,
(மெய்வகை) இந்தியம் அடக்கலும், இயமம்.
(5 பெயர்கள்) 108

### நியமம்

தவமே, சௌசம், தத்துவ நூல் ஓர்தல்,
மனம் உவந்து இருத்தல், தெய்வம் வழிபடல்,
(நினையுங் காலை) நியமம் (ஆகும்).
(5 பெயர்கள்) 109

### ஆதனம்

பத்திரம், கோமுகம், பங்கயம், கேசரி,
சுவத்திகம், சுகாதனம், (என்ப) ஆதனம்.
(6 பெயர்கள்) 110

### பிராணாயாமம்

இரேசக, பூரக, கும்பகம் ஏற்றி
வாயுவை அடக்கல், பிராணாயாமம். 111

### பிரத்தியாகாரம்

உரையாது உபாதியை நீக்கி, உபாதியைப்
பிரியாது உள் நோக்கல், பிரத்தியாகாரம். 112

### தாரணை

உற்று உயிர் பூதம் அணுதியில் ஒடுக்கி,
தற்பரம் நாடுதல், தாரணை (ஆகும்). 113

### தியானம்

அவமாம் புலத்தை அடக்கி, மனுதி
சிவயோகம் சேர்தல், தியானம் (ஆகும்.) 114

### சமாதி

இந்துவும், பானுவும், விந்துவும், நாதமும்,
சந்தியில் வைத்தல், சமாதி (ஆகும்.) 115

### எண்வகைக் காட்சி

அறம் ஐயப்படாமை, அவா ஒன்று இன்மை,
அறிவு உவர்ப்பு இன்மை, மூடம் அறுத்தல்,
அறப்பழி மறுத்தல், அழிந்தோரை நிறுத்தல்,
அறத்தை விளக்கல், அறு சமயத்தோர்க்கு அன்பு,
(இவற்று இயல் ஆகும்) எண் வகைக் காட்சி.
(8 பெயர்கள்) 116

### அருகன் எண் குணம்

அனந்த ஞானம், அனந்த தரிசனம்,
அனந்த வீரியம், அனந்த சுகமே,
நாமம் இன்மை, கோத்திரம் இன்மை,
ஆயு இன்மை, அழியா இயல்பு, (என்று
ஏயுந் தகையவாம்) அருகன் எண் குணமே.
(8 பெயர்கள்) 117

### எண் வகைக் குற்றம்

ஞானாவரணியம், தரிசனாவரணியம்,
வேதநீயம், மோகநீயம்,
ஆயு நாமம், கோத்திர நாமம்,
காய வந்தராயம், வாயு வந்தராயம், (என்று
ஏயும்) எண்வகைக் குற்றம் (என்ப).
(8 பெயர்கள்) 118

### அட்ட மங்கலம்

கவரி, நிறைகுடம், கண்ணாடி, தோட்டி,
முரசு, விளக்கு, பதாகை, இணைக் கயல்,
(அளவு இல் சிறப்பின்) அட்ட மங்கலமே.
(8 பெயர்கள்) 119

### சிறப்பு இல்லா எண் வகைப் பெயர் எச்சம்

(சிறப்பு இல்) சிதடும், உறுப்பு இல் பிண்டமும்,
கூனும், குறளும், ஊமையும், செவிடும்,
மாவும், மருளும், (என்ப மக்கட்கு
ஏயும்) சிறப்பு இலா எண் பெயர் எச்சம்.
(8 பெயர்கள்) 120

### அட்ட கிரி

இமயம், மந்தரம், கைலை, விந்தம்,
நிடதம், ஏமகூடம், நீலம், கந்தம், (என்று)
எண் வகை வெற்புக்கு (இயன்ற பெயரே).
(8 பெயர்கள்) 121

### அட்ட கணிதம்

சங்கலிதம், விபகலிதம், குணனம்,
பாகாரம், வர்க்கம், கன மூலம் எட்டே.*
(8 பெயர்கள்) 122

### அட்ட பரிசம்

தட்டல், பற்றல், தடவல், தீண்டல்,
குத்தல், வெட்டல், கட்டல், ஊன்றல்,
எட்டும் (உடம்பின்) பரிசம் (ஆகும்).
(8 பெயர்கள்) 123

### நவமணி

வைரம், முத்தம், மாணிக்கம், பவளம்,
மரகதம், கோமேதகம், வைடூரியம்,
நீலம், புருடராகம், (என்ன
நானிலம் புகழும்) நவமணிப் (பெயரே).
(9 பெயர்கள்) 124

### நவ புண்ணியம்

எதிர்கொளல், பணிதல், இருத்தல், கால் கழுவல்,
(விரை) மலர் தூவல், தூபம், விளக்கே,
அறுசுவை உண்டி அமைந்தோர்க்கு உதவுதல்,
புகழ்தல், நவ புண்ணியத்தின் (நாமம் ஆகும்.)
(9 பெயர்கள்) 125

---

* வர்க்க மூலம், கன மூலம்

### நவதாரணை

நாம தாரணை, வச்சிர தாரணை,
மாயா தாரணை, சித்திர தாரணை,
சத்த தாரணை, வத்துத் தாரணை,
சதுரங்க தாரணை, செய்யுள் தாரணை,
நிறைவு குறைவாகிய எண்பொருள் தாரணை,
நவ தாரணையின் (நாமம் ஆகும்).

*(9 பெயர்கள்) 126*

### நவ தாளம்

சம தாளம், அரும தாளம், அட தாளம்,
படிம தாளம், சய தாளம்மே,
மட்டிய தாளம், விட தாளம், நிவிர்த
தாளம், துருவ தாளம், (என்ன)
நவ தாளத்தின் (நாமம் ஆகும்).

*(9 பெயர்கள்) 127*

### நாடக நவ ரதம்

சிருங்காரம், வீரியம், பெரு நகை, கருணை,
இரௌத்திரம், குற்சை, சாந்தம், அற்புதம், பயம்,
(நாடகத்து இயலும்) நவ ரதம் (ஆகும்)

*(9 பெயர்கள்) 128*

### சிற்பத் தொழிலின் பத்து உறுப்பு

கல்லும், உலோகமும், செங்கல்லும், மரமும்,
மண்ணும், சுதையும், தந்தமும், வண்ணமும்,
கண்ட சருக்கரையும், மெழுகும், (என்று இவை)
பத்தே சிற்பத் தொழிற்கு உறுப்பு (ஆகும்).

*(10 பெயர்கள்) 129*

### உயிர் வேதனை பன்னிரண்டு

அனலும், சீதமும், வாதமும், அசனியும்,
புனலும், ஆயுதமும், விடமும், மருந்தும்,
பசியும், தாகமும், பிணியும், முனிவு அருமையும்,
உயிரின் வேதனை ஓர் ஈர் ஆறே.

*(12 பெயர்கள்) 130*

### பதினென் யாகங்கள்

சோதிட்டோமம், அங்கிட்டோமம்,
உத்தியம், சோடசீ, வாசபேயம்,
அத்திராத்திரம், சோம யாகம்,
சாதுர்மாசியம், பவுத்திர மேதம்,
மணி, புண்டரீகம், அங்கிசயனே,
இராசசூயம், அச்சுவமேதம்,
விச்சுவதித்து, பிரம மேதம்,
பிரணவ மேதம், பாசு பந்தம், (எனப்
பாற்படு) பதினெண் யாகம் (என்ப).

*(18 பெயர்கள்) 131*

### பதினெண் புராணங்கள்

மச்சம், கூர்மம், வராகம், வாமனம்,
பதுமம், வைணவம், பாகவதம், பிரமம்,
சைவம், இலிங்கம், பௌடியம், நாரதீயம்,
காரூடம், பிரம கைவர்த்தம், காந்தம்,
மார்க்கண்டேயம், ஆக்கினேயம், பிரமாண்டம்,
(பாற்படு) பதினெண் புராணம் (ஆகும்).

*(18 பெயர்கள்) 132*

### உபபுராணம் பதினெட்டு

நாரசிங்கம், சனற்குமாரம்,
நாரதீயம், சிவதன்மம், துருவாசம்,
நந்திகேச்சுரம், அவுசனம், காளிகம்,
வாருணம், சாம்பேசம், பராசரம், பார்க்கவம்,
காபிலம், மானவம், வாசிட்டலைங்கம்,
சவுரம், மாரீசம், மானவம், (என்னும்)
ஈர் ஒன்பான் உப புராணம் (என்ப).

*(18 பெயர்கள்) 133*

### தரும நூல் பதினெட்டு

மனுவே, அத்திரி, விண்டு, வாசிட்டம்,
யமம், ஆபத்தம்பம், யாஞ்ஞவற்கியம்,
பராசரம், ஆங்கீரசம், உசனம்மே,
காத்தியாயனம், சமவர்த்தம், வியாசம்,
பிரகற்பதி, சங்கலிதம், சாதான்மம்,
கௌதமம், தக்கம், ஈர் ஒன்பானும்
தரும நூலின் (பெயர் எனச் சாற்றுவர்).

*(18 பெயர்கள்) 134*

### யாக்கையின் பதினெண் குற்றம்

பசியும், நீர் வேட்டலும், பயமும், வெகுளியும்,
உவகையும், வேண்டலும், நினைப்பும், உறக்கமும்,
நரையும், நோய்படுதலும், மரணமும், பிறப்பும்,
மதமும், இன்பமும், அதிசயமும், வியர்த்தலும்,
கேதமும், கையறவும், (என்று இவை
மாய) யாக்கைக்குப் பதினெண் குற்றம்;
இக்குற்றம் நீக்கியோர், வச்சிர காயர்.

*(18 பெயர்கள்) 135*

**மூன்றுவது**
**ஐயர்வகை முற்றிற்று**

## 4. அவனி வகை

### மண்ணுலகு

அவனி, வையம், அகல் இடம், காசினி,
புவனி, புடவி, பூதலம், பூமி,
புவனம், படி, புவி, பொழிலே, பூவே,
சகம், மேதினி, தரை, தாலம், சாந்தை,
யுகம், பார், தரணி, உலோகம், தாரணி,
தலம், நீர்வரைப்பு, தராதலம், மகாதலம்,
நிலம், பிருதிவி, தரம், நிலையே, ஞாலம்,
அசலை, பூவலயம், அளக்கர், மண்டலம்,
பவனம், அகம், நடு, பாலம், விபுலம்,
கோத்திரை, குவலயம், குவ்வே, கோ, நேமி,

தாத்திரி, வேலாவலயம், தரித்திரி,
திணை, மகி, சக்கரம், பொறை, நகம், பாரி,
வசுந்தரை, வசுமதி, வசுதை, மண்ணுலகே. 1

**மற்றும் மண்ணுலகு**

பூதியம், அகிலம், புரையே, பாரம், (என்று
ஓதிய பிறவும் அப் பெயர்க்கு உரித்தே.)
*(62 பெயர்கள்)* 2

**நவ கண்டம்**

வடபால் விதேகம், தென்பால் விதேகம்,
கீழ்பால் விதேகம், மேல்பால் விதேகம்,
வடபால் இரேவதம், தென்பால் இரேவதம்,
வடபால் பரதம், தென்பால் பரதம்,
மத்திம கண்டம், (என்ன வருபவை
நல்பெரு நாவலந் தீவின்) நவ கண்டம்.
*(9 பெயர்கள்)* 3

**பூ வலயம்**

பூ கோளம், பூ கண்டம், பூ வலயம் (என்ப).
*(2 பெயர்கள்)* 4

**எழு தீவு**

(முதலது) நாவலந் தீவே, (உடையது)
இறலியின் தீவே, கிரவுஞ்சத் தீவே,
குசையின் தீவே, இலவந் தீவே,
தெங்கந் தீவே, புட்கரத் தீவு, (என்று
ஏத்திய) பெருந் தீவு (ஏழிற்கும் பெயரே).
*(7 பெயர்கள்)* 5

**ஏழ் பொழில்**

ஏழ் பெருந் தீவும், ஏழ் பொழில் (எனப்படுமே). 6

**கீழ் ஏழ் உலகு**

அதலம், விதலம், சுதலம், நிதலம்,
தராதலம், ரசாதலம், பாதல உலகம்,
(என்று இவை) கீழ் ஏழ் உலகு (எனப்படுமே).
*(7 பெயர்கள்)* 7

**நரகம்**

நிரயமும், பவர்க்கமும், கும்பியும், புலவும்,
ஊழ்த்தலும், அபரமும், அள்ளலும், அளறும்,
அதோகதி, பாவம், துவாந்தம், அருஞ் சிறை,
இருளும், (என்பது இவை) நரகப் (பெயர்).
*(13 பெயர்கள்)* 8

**எழு நரகங்கள்**

கூட சாலம், கும்பி பாகம்,
அள்ளல், அதோகதி, ஆர்வம், பூதி,
செந்து, (என்று) ஏழும் (தீ) நரகப் (பெயர்).
*(7 பெயர்கள்)* 9

**நாடு**

பைதிரம், மண்டிலம், பாடி, தேயம்,
தண்ணடை, நீவரம், கோட்டம், சனபதம்,
சும்மை, அகலுள், கண்டம், ஏணி, (என்று
இன்ன) இராச்சியம், உலகு, நாடு(என்ப)
*(14 பெயர்கள்)* 10

**உலகின் பொதுப் பெயர்**

புவனம், நாடு, பொழில், தலம், புடவி,
பவனம், இராச்சியம், உலகின் பொதுப் பெயர்.
*(7 பெயர்கள்)* 11

**காசி**

காசி, வாரணசி. *(1 பெயர்)* 12

**காஞ்சி**

கச்சி, காஞ்சி. *(1 பெயர்)* 13

**சிதம்பரம்**

மன்றம், சிதம்பரம். *(1 பெயர்)* 14

**திருவாரூர்**

கமலை, திருவாரூர். *(1 பெயர்)* 15

**உறையூர்**

கோழி, உறையூர். *(1 பெயர்)* 16

**மதுரை**

கூடல், மதுரை. *(1 பெயர்)* 17

**கருவூர்**

கருவூர், வஞ்சி. *(1 பெயர்)* 18

**கடாரம்**

காழகம், கடாரம். *(1 பெயர்)* 19

**சிங்களம்**

ஈழம், சிங்களம். *(1 பெயர்)* 20

**மிதிலை**

மிதிலை, விதேகை. *(1 பெயர்)* 21

**அவந்தி**

அவந்தி, உஞ்சை. *(1 பெயர்)* 22

**அரித்துவாரம்**

அரித்துவாரம், மாயாபுரியே. *(1 பெயர்)* 23

**காவிரிப்பூம் பட்டினம்**

காக நதி, புகார், காவிரிப்பூம் பட்டினம்.
*(2 பெயர்கள்)* 24

**புரம்**

புரி (என் கிளவி), புரம் (என்று ஆகும்).
(1 பெயர்) 25

**சேரி**

பாடி (என்பது), சேரி (ஆகும்).
(1 பெயர்) 26

**முனேமேல் சென்ருேர் உறைபதி**

பாசறை, முனேமேல் சென்ருேர் உறைபதி.
(1 பெயர்) 27

**ஊர்**

பூக்கம், கேடகம், பூரியம், பூண்டி,
பாக்கம், புரி, கெடி, பதி, நகர், சும்மை,
சேரி, மண்டிலம், சேர்வு, குப்பம்,
காடு, குடிக்காடு, வேலி, அகலுள்,
வைப்பு, கிராமம், வசதி, அருப்பம்,
ஆதரம், இல்லிடம், புகலிடம், புரமே,
பாழி, நத்தம், கோசரம், ஒக்கம்,
உறையுள், இருக்கை, ஊரின் பெயரே.
(32 பெயர்கள்) 28

**சிற்றூர்**

பேடும், குடியும், (பெருந்) தண்ணடையும்,
பட்டும், நொச்சியும், பள்ளியும், (என்று இவை)
சிற்றூர் தனக்குச் (சிறந்த பெயரே).
(6 பெயர்கள்) 29

**நிலம்**

மாவும், திணேயும், வேலியும், நிலம் (எனல்). 30

**மற்றும் நிலம்**

பூவும் (அப் பெயர் புகலப் பெறுமே).
(4 பெயர்கள்) 31

**வழி**

அதரும், அயனமும், ஆறும், அடைவும்,
பதவையும், வதியும், அத்தமும், மார்க்கமும்,
கடவையும், கிறியும், நடையும், போக்கும்,
இடவையும், தாரியும், தாரையும், இயவையும்,
தெருவும், ஒழுக்கமும், செப்பமும், சுரமும்,
சரியும், நெறியும், செலவும், தரங்கும்,
பட்டமும், வனமும், காலும், பதமும்,
வட்டையும், வகிரும், வாரியும், வழி (எனல்).
(31 பெயர்கள்) 32

**அரு நெறி**

அத்தமும், கடமும், சுரமும், அரு நெறி.
(3 பெயர்கள்) 33

**யானே செல் வழி**

தண்டம், யானே சென்ற வழியே. (1 பெயர்) 34

**இழிந்து ஏறும் வழி**

படுகர், (என்பது) இழிந்து ஏறும் வழி.
(1 பெயர்) 35

**சிறு வழி**

விடங்கர், சிறு வழி. (1 பெயர்) 36

**நீள் வழி**

நீள் வழி, அளக்கர். (1 பெயர்) 37

**கவர் வழி**

கவலே, கவர் வழியின் (கட்டுரையாம்).
(1 பெயர்) 38

**முது வரம்பு வழி**

மஞ்சில், முதிய வரம்பின் வழியே.
(1 பெயர்) 39

**புது வரம்பு வழி**

மரிசி, புதிய வரம்பின் வழியே.
(1 பெயர்) 40

**பள்ளம்**

ஞெள்ளல், தாழ்வு, படுகர், அவல், குழி,
பள்ளம், இழிவு, பயம்பு, தாழ் நிலமே.
(8 பெயர்கள்) 41

**மேடு**

உயர் நிலம், திடர், சுவல், ஓங்கல், திட்டை,
மிசையே, மோடு, மேடு (என்று ஆகும்).
(7 பெயர்கள்) 42

**சிறு திட்டை**

பாறை, மேடு, முரம்பு, பதுக்கை,
(ஆகும் உயர்) சிறு திட்டை (அதன் பெயர்).
(4 பெயர்கள்) 43

**குப்பை மேடு**

குப்பை மேடு, கரு, குவை (என்ப),
கொம்மை, திடர் (என்றும் கூறப்படுமே).
(4 பெயர்கள்) 44

**நடு**

நனந்தலே, நாப்பண், மத்தியம், நள்ளு,
ஒத்தல், நாவோடு, அணவு, (வயங்கு) இடை,
(நலம் திகழ்) கூழை, நடு (என்று ஆகும்).
(9 பெயர்கள்) 45

**ஐந்திணே**

குறிஞ்சி, பாலே, முல்லே, மருதம்,
நெய்தல், ஐந்திணேக்கு (எய்திய பெயரே).
(5 பெயர்கள்) 46

**அவற்றுள் குறிஞ்சி நிலம்**

புறணி, துருக்கம், புறவம், வன்பால்,
குறும் பொறை, புறம் பணை, குறிஞ்சி நிலப் (பெயர்).
*(6 பெயர்கள்)* 47

**மலை**

விலங்கல், சயிலம், விண்டு, வெற்பு,
சிலம்பு, சிமயம், சிகரி, சிலோச்சயம்,
பொருப்பு, பொங்கர், பொறை, கோ, பூதரம்,
பருப்பதம், பதலை, பறம்பு, பாதவம்,
அத்திரி, நகமே, அடுக்கல், நவிரம்,
குத்திரம், குவடு, கோத்திரம், குன்று,
தாணு, அசலம், சானு, மேரு,
ஓதி, வீரம், கிரி, காண்டம், ஓங்கல்,
பீலி, திகிரி, அரியே, பிறங்கல்,
மாதிரம், கல்லே, வரையே, பொகுட்டு,
தரணி, சிமிலம், சையம், பத்திரம்,
வேதண்டம், இரவி, மேதரம், சாரல்,
பொற்றை, நாகம், சிலை, போதியும், மலைப் (பெயர்).
*(54 பெயர்கள்)* 48

**சிறு மலை**

குன்று, பொற்றை, குவடு, குறும்பொறை,
(என்று இவை) சிறு மலை, இறும்பும் (ஆகும்).
*(5 பெயர்கள்)* 49

**மலைப் பக்கம்**

சாரல், சரி, கடம், தடமே, சானு,
வாரம், நிதம்பம், (இவை) மலைப் பக்கம்.
*(7 பெயர்கள்)* 50

**மலை முகடு**

குவடு, கோடு, கூடம், கொடுமுடி,
சிகரம், மலையம், சேண், முகடு (ஆகும்).
*(7 பெயர்கள்)* 51

**பாறை**

அறையே, பாறை. *(1 பெயர்)* 52

**துறுகல்**

பொறையே, துறுகல். *(1 பெயர்)* 53

**விடர்**

விடரே, கல்லளை, விடரின் பெயரே. *(2 பெயர்கள்)* 54

**கற் பாழி**

காண்டை, கற் பாழி. *(1 பெயர்)* 55

**கீழ் அறை**

பிலமே, கீழ் அறை. *(1 பெயர்)* 56

**மலை முழை**

முடுக்கர், கந்தரம், பிலம், குகை, குகரம்,
கற் புழை, நிகுஞ்சம், வங்கு, மலை முழையே.
*(8 பெயர்கள்)* 57

**பெருங் கல்**

கேளிதம், பெருங்கல். *(1 பெயர்)* 58

**சிறு கல்**

உபலம், சிறு கல். *(1 பெயர்)* 59

**திரண்ட கல்**

உலங்கும், குண்டும், உலமும், திரண்ட கல்.
*(3 பெயர்கள்)* 60

**ஏழு மலை**

கைலை, இமயம், மந்தரம், விந்தம், நிடதம்,
ஏமகூடம், நீலகிரி, ஏழ் மலை. *(7 பெயர்கள்)* 61

**இமய மலை**

பூதரம், ஆதி மலை, பொன் மலை, சிமயம்,
ஏமந்தாசலம், இமய மலைப் (பெயர்). 62

**மற்றும் இமய மலை**

மேருவும், புள்ளியும் (விளம்புவர் அதற்கே).
*(7 பெயர்கள்)* 63

**மக மேரு**

தேவர் ஆலயம், பெருமலை, வடமலை,
மூவா மலை, மந்தரம், பொன் மலை, மக மேரு.
*(6 பெயர்கள்)* 64

**கைலாய கிரி**

வெள்ளியங் கிரி, சயிலாதி, வேதண்டம்,
கண்ணுதல் மலை, நொடித்தான் மலை, கைலாயம்.
*(5 பெயர்கள்)* 65

**பொதிய மலை**

தென் மலை, மலையம், தென்றல் வரு மலை.
*(2 பெயர்கள்)* 66

**கொல்லி மலை**

வல்லியம் (பொருப்பே), கொல்லி மலை (ஆகும்)
*(1 பெயர்)* 67

**மலையரையன்**

மலையரையன், கிரிராசன், (இறை பாகத்து)
உமையாள் பெற்ற உரவோன், இமவான்.
*(3 பெயர்கள்)* 68

**மலை மேல் துருக்கம்**

அருப்பம், மலை மேல் துருக்கம் (ஆகும்).
*(1 பெயர்)* 69

**மலைச் சாரல் வீழ் புனல்**

அருவி, மலைச் சாரல் வீழ் புனல் (ஆகும்).
*(1 பெயர்)* 70

**அருவிப் புனல் வீழ் இடம்**

அருவிப் புனல் வீழ் இடம், தூவானம் (ஆகும்).
(1 பெயர்) 71

**மலைக் கணவாய்**

மலையின் கணவாய்ப் (பெயர்), பூழை (ஆகும்).
(1 பெயர்) 72

**தினைப் புனம்**

ஏனலும், வளாகமும், தினைப் புனம் (என்ப).
(2 பெயர்கள்) 73

**குறிஞ்சி நிலத்து ஊர்**

குறும் பொறை, சீறூர், சிறுகுடி, குறிஞ்சி ஊர்.
(3 பெயர்கள்) 74

**குறிஞ்சி நிலப் பறை**

தொண்டகம், முருகு இயம், துடி, அந் நிலப் பறை.
(3 பெயர்கள்) 75

**குறிஞ்சி நில மாக்கள்**

கானவர், குறவர், அந்நில மாக்கள்.
(2 பெயர்கள்) 76

**குறிஞ்சி நிலப் பெண்கள்**

குறத்தியர், கொடிச்சியர், மறத்தியர், பெண்டிர்.
(3 பெயர்கள்) 77

**குறிஞ்சி நிலத் தலைமகன்**

பொருநன், சிலம்பன், வெற்பன், தலைமகன்.
(3 பெயர்கள்) 78

**குறிஞ்சி நிலக் கடவுள்**

கந்தன், அந் நிலக் கடவுள் (ஆகும்). (1 பெயர்) 79

**பாலைத் திணை**

மறுபுலம், செம்புலம், வன் பால், பாலை.
(3 பெயர்கள்) 80

**நிலப் பிளப்பு**

விடரும், கமரும், விட்பும், நிலப் பிளப்பே.
(3 பெயர்கள்) 81

**பரல் அடுத்து உயர்நிலம்**

பரல் அடுத்து உயர் நிலம், முரம்பே, பதுக்கை.
(2 பெயர்கள்) 82

**பாலை நிலத்து ஊர்**

முனையிடம், குறும்பு, (முது) பாலை நிலத்து ஊர்.
(2 பெயர்கள்) 83

**பாலை நிலப் பறை**

(அந்) நிலப் பறை, துடி (ஆகும் என்ப).
(1 பெயர்) 84

**பாலை நில மாக்கள்**

மறவர், எயினர், சவரர், கிராதர்,
கானவர், குறவர், புளினர், வேடர்.
(7 பெயர்கள்) 85

**பாலை நிலப் பெண்கள்**

எயிற்றியர், பேதையர், மறத்தியர், பெண்டிர்.
(3 பெயர்கள்) 86

**பாலை நிலத் தலைமகன்**

விடலையும், காளையும், மீளியும், தலைமகன்.
(3 பெயர்கள்) 87

**பாலை நிலக் கடவுள்**

பாலைக் கடவுள், துர்க்கை (என்ப).
(1 பெயர்) 88

**முல்லைத் திணை**

புறவம், புறம்பணை, புறவணி, முல்லை.
(3 பெயர்கள்) 89

**காடு**

கானம், கடறு, கான், காந்தாரம்,
தாவம், புறவம், சங்கிரம், கட்சி,
அடவி, காண்டகம், விந்தம், கானகம்,
கவனம், குறும்பொறை, ஆரணியம், குப்பம்,
கோட்டை, அரணம், வல்லை, துருக்கம்,
உயவை, சுரம், கானனம், கடம், பழுவம், பொச்சை,
கண்டகம், தில்லம், களரி, முளரி,
ககனம், அத்தம், வனம், காடு (எனப் புகல்வர்).
(33 பெயர்கள்) 90

**காட்டுத் துருக்கம்**

அருப்பம், கோட்டை, வல்லை, ஆரணியம்,
அரணமும், துருக்கமும் (ஆகும் என்ப).
(5 பெயர்கள்) 91

**முல்லை நிலக் கான் யாறு**

கலுழி, உயவை, முல்லைக் கான் யாறு.
(2 பெயர்கள்) 92

**பழங் கொல்லை**

முதைப் புனம், பழங் கொல்லை. (1 பெயர்) 93

**புதுக் கொல்லை**

இதைப் புனம், புதுக் கொல்லை. (1 பெயர்) 94

**மற்றும் அந்நிலம் (முல்லை நிலம்)**

தில்லியம் (என்னச் சொல்லுப அந்நிலம்). 95

**முல்லை நிலத்து ஊர்**

அந்நிலத்து ஊர்ப் பெயர், பாடி (என்ப).
(1 பெயர்) 96

### முல்லை நிலப் பறை

அந் நிலப் பறை, ஏறு கோள், பம்பை
(2 பெயர்கள்) 97

### முல்லை நில மாக்கள்

இடையர், அண்டர், பொதுவர், கோபாலர்,
குடவர், அமுதர், கோவலர், ஆயர்,
தொறுவர், விந்தர், முல்லை நில மாக்கள்.
(10 பெயர்கள்) 98

### முல்லை நிலப் பெண்டிர்

இடைச்சியர், தொறுத்தியர், பொதுவியர், குடத்தியர்.
(4 பெயர்கள்) 99

### முல்லை நிலத் தலைவன்

கானக நாடன், குறும் பொறை நாடன்,
தோன்றல், அண்ணல், முல்லைத் தலைவன்.
(4 பெயர்கள்) 100

### முல்லைக் கடவுள்

திருமால், அந் நிலக் கடவுள் (பெயரே).
(1 பெயர்) 101

### மருதத் திணை

பழனமும், தொடுவும், பணையும், மென்பாலும்,
கழனியும், பண்ணையும், (இவை) மருதத் திணை.
(6 பெயர்கள்) 102

### யாறு

ஒலியல், உந்தி, புனல், ஓணம், குடினை,
சிந்து, தீர்த்திகை, தீபவதியே,
தடினி, ஆபதகை, யாறு (எனச் சாற்றுவர்).
(10 பெயர்கள்) 103

### யாற்றிடைக் குறை

இலங்கை, அரங்கம், துருத்தி, யாற்றிடைக் குறை.
(3 பெயர்கள்) 104

### வெண் மணல்

வாலுகம், வெண்மணல். (1 பெயர்) 105

### கரு மணல்

அறல், (நுண்) கருமணல். (1 பெயர்) 106

### நுண் மணல்

அதரும், அயிரும், எக்கரும், நுண்மணல்.
(3 பெயர்கள்) 107

### புழுதி

பொடிமண், புழுதி. (1 பெயர்) 108

### மணற் குன்று

புளினம், மணற் குன்றே. (1 பெயர்) 109

### ஊறல்

அஃகம், உறவியும், அசும்பும், ஊறல்.
(3 பெயர்கள்) 110

### கங்கை

வான் நதி, பகீரதி, மந்தாகினியே,
சானவி, வரநதி, சுரநதி, விமலை,
திரிபதகை, தெய்வ நதி, கங்கா நதி.
(9 பெயர்கள்) 111

### யமுனை

கதிரவன் புதல்வி, காளிந்தி, யமுனை.
(2 பெயர்கள்) 112

### சரச்சுவதி நதி

சோணை, சரச்சுவதி. (1 பெயர்) 113

### கௌதமை நதி

கௌதமை, கோதை. (1 பெயர்) 114

### நருமதை நதி

சோமன் புத்திரி, இரேவை, நருமதை.
(2 பெயர்கள்) 115

### காவிரி

பொன்னி, காவிரி. (1 பெயர்) 116

### பொருநை

பொருநை, தண் பொருந்தம். (1 பெயர்) 117

### கன்னி நதி

கன்னி, குமரி. (1 பெயர்) 118

### ஆன் பொருந்த நதி

ஆனி, வானி, ஆன் பொருநை,
சூத நதி, ஆன் பொருந்தம் (ஆகும்).
(4 பெயர்கள்) 119

### வைகை நதி

வேகவதி, வைகை. (1 பெயர்) 120

### கோதாவரி

விமலை, கோதாவரி. (1 பெயர்) 121

### மருத நிலத்து ஊர்

மடப்பம், தண்ணடை, மருத நிலத்து ஊர்.
(2 பெயர்கள்) 122

### மருத நிலப் பறை

அரி, கிணை, முரசம், பணை, மருதப் பறை.
(4 பெயர்கள்) 123

### வயல்

கழனியும், புலமும், கைதையும், தடியும்,

மருதமும், வரப்புளும், மாவும், செறுவும்,
பண்ணையும், பானலும், பழனமும், விளையுளும்,
பணையும், செய்யும், வயல் (ஆகும்மே).
(14 பெயர்கள்) 124

**சிறு செய்**

குண்டிலும், பாத்தியும், சிறு செய் (ஆகும்).
(2 பெயர்கள்) 125

**வரம்பு**

மரிசும், கோடும், கூலமும், வரம்பே.
(3 பெயர்கள்) 126

**வரம்பு அருகு**

கங்கும்,மரிசும், வரம்பு அருகு (ஆகும்).
(2 பெயர்கள்) 127

**செந் நெல் விளை நிலம்**

செந் நெல் தருவது, சாலேயம் (ஆகும்).
(1 பெயர்) 128

**அனைத்தும் உண்டாகும் நன்னிலம்**

நன்னிலம், உருவரை (நடைபெற்று இயலும்).
(1 பெயர்) 129

**பாழ் நிலம்**

கரம்பு, களரி, (பெரும்) பாழ் நிலமே.
(2 பெயர்கள்) 130

**விளையா நிலம்**

களரும், சவரும், விளையா நிலமே.
(2 பெயர்கள்) 131

**மருத நில மாக்கள்**

களமர், உழவர், கடைஞர், சிலதர்,
மள்ளர், மேழியர், மருத மாக்கள்.
(6 பெயர்கள்) 132

**மருத நிலப் பெண்கள்**

உழத்தியர், கடைசியர், அந்நிலப் பெண்டிர்.
(2 பெயர்கள்) 133

**மருத நிலத் தலைமகன்**

மகிழ்நன், ஊரன், கிழவன், தலைமகன்.
(3 பெயர்கள்) 134

**மருத நிலக் கடவுள்**

அந் நிலக் கடவுள், அமரர் பதியே.
(1 பெயர்) 135

**நெய்தல் திணை**

(அருங்) கடல், நெய்தல் நிலப் பெயர் (ஆகும்).
(1 பெயர்) 136

**கடல்**

அம்பரம், ஆர்கலி, அளக்கர், தோயம்,
அம்பு ராசி, மகராலயம், பரவை,
சலதி, பௌவம், மகோததி, சலநிதி,
வீரை, வேலாவலயம், நீர், வெள்ளம்,
வாரி, வேலை, வாருணம், புணரி,
சிந்து, முந்நீர், தொன்னீர், நரலை,
சக்கரம், உந்தி, சலராசி, உப்பு,
உததி, சாகரம், சமுத்திரம், நேமி,
நதிபதி, பாராவாரம், பயோததி,
வாரிதி, வாரணம், வலயம், அத்தி,
ஆழி, பெரு நீர், அலை, உவாவே,
உவரி, சிந்துவாரம், ஓதம்,
அரியே, குரவை, அழுவம், தெண்டிரை,
கார் கோள், (அனைத்தும்) கடலின் (பெயரே).
(50 பெயர்கள்) 137

**எழு கடல்**

உப்பு, தேன், இக்கு, (வெண்) தயிர், நெய், பால்,
அப்பு, கடல் ஏழ் (ஆகும் என்ப).
(7 பெயர்கள்) 138

**கழிமுகம்**

அதோமுகம், புகாரோடு, அழிவு, கூடல்,
கழிமுகம் (என்றனர்), காயலும், (ஆகும்). 139

**மற்றும் கழிமுகம்**

அருவியும், கயவும், கழிமுகம் (என்ப).
(7 பெயர்கள்) 140

**கடல் திரை**

ஓதம், புணரி, சீகரம், வேலை,
(ஆகும்) கடல் திரை, அலையும் (ஆகும்).
(5 பெயர்கள்) 141

**உவர் நீர்**

உறை, (என்று உரைப்பது) உவர் நீர் (ஆகும்).
(1 பெயர்) 142

**கடற் கரை**

வேலையும், பாராவாரமும், கடற் கரை.
(2 பெயர்கள்) 143

**தோணுமுகம்**

தோணுமுகமே, சூழ் கழி யிருக்கை.
(1 பெயர்) 144

**உப்பளம்**

அளமே, கானல், அளக்கர், உவளகம்,
கழிநிலம், உப்பளம், மரக்கால் (கருதுப).
(6 பெயர்கள்) 145

**முடி உறுப்பு ஐந்து**

கோடகம், கிம்புரி, முகுடம், தாமம்,
பதுமம், முடி உறுப்பு (இவை ஐந்து ஆகும்).
(5 பெயர்கள்) 68

**முடி மாலை**

பாடம், முடி மாலை, கோடி, கரோடி.
(3 பெயர்கள்) 69

**பதக்கம்**

கண்டிகை, மதாணி, ஆரமும், பதக்கம்.
(3 பெயர்கள்) 70

**தோள் அணி**

அங்கதம், கேயூரம், தோள் அணி (ஆகும்).
(2 பெயர்கள்) 71

**குண்டலம்**

குண்டலம், மஞ்சிகை, குழை (எனல் ஆகும்).
(2 பெயர்கள்) 72

**காதணி**

வல்லிகை, கொட்டை, கடிப்பம், காதணி.
(3 பெயர்கள்) 73

**குணுக்கு**

கடிப்பிணை, குணுக்கு (ஆம்). (1 பெயர்) 74

**தோடு**

தாடங்கம்,தோடே. (1 பெயர்) 75

**கங்கணம்**

வளையும், தொடியும், கடகமும், கங்கணம்.
(3 பெயர்கள்) 76

**கைவளை**

சரியும், தொடியும், சூடகமும், சங்கும்,
குருகும், வண்டும், கன்றும், கைவளை.
(7 பெயர்கள்) 77

**பிள்ளைக் கைவளை**

பிள்ளைக் கைவளை, பிடிகம் (ஆகும்).
(1 பெயர்) 78

**சுட்டி**

சுட்டி, சுடிகை. (1 பெயர்) 79

**பட்டம்**

பட்டம், ஓடை. (1 பெயர்) 80

**பாத கிண்கிணி**

பரிபுரம், நூபுரம், பாத கிண்கிணியே.
(2 பெயர்கள்) 81

**சதங்கை**

(பாத) சதங்கை, சிறு மணி, கிண்கிணி.
(2 பெயர்கள்) 82

**சிலம்பு**

அரி, தளை, ஞெகிழி, நூபுரம், சிலம்பே. 83

**மற்றும் சிலம்பு**

அரவமும் (சிலம்பின் அபிதானம்மே).
(5 பெயர்கள்) 84

**கால் சரி, கைச் சரி**

பரியகம், கால் சரி, கைச் சரியும் (ஆகும்).
(1 பெயர்) 85

**காலணி**

பாத சாலம், கால் அணி (ஆகும்). (1 பெயர்) 86

**பாடகம்**

பாத கடகம், பாடகம் (ஆகும்). (1 பெயர்) 87

**ஓசை செய் தளை**

ஞெகிழம், குடச்சூல், ஓசை செய் தளை.
(2 பெயர்கள்) 88

**ஆடவர் கொடை வீரத்தால் அணிவது**

ஆடவர் கொடையால், வீரத்தால், அணி
பாதத்து அணியே, கழல் (அணி என்ப).
(1 பெயர்) 89

**மாதர் இடை அணி**

காஞ்சி, மேகலை, கலாபம், பருமம்,
விரிசிகை, மாதர் இடை அணி (எனப்படும்).
அவற்றுள்,
காஞ்சி எண் கோவை, எழு கோவை மேகலை,
கலாபம் நானான்கு, பருமம் பதினெட்டு,
விரிசிகை எண் நான்கு, கோவை (என்ப).
(5 பெயர்கள்) 90

**சரி மணிக் கோவை**

கலாபம், தோரை, சரிமணிக் கோவை.
(2 பெயர்கள்) 91

**அரைப் பட்டிகை**

அத்தும், மணுவும், அரைப் பட்டிகையே.
(2 பெயர்கள்) 92

**அரை ஞாண்**

இரதனம், அரை ஞாண். (1 பெயர்) 93

**செவி மலர்ப் பூ**

கன்னுவ தஞ்சம், செவி மலர்ப் பூவே.
(1 பெயர்) 94

**ஆபரணத் தொங்கல்**

தொங்கல், உத்தி, மதலிகை, தூக்கம்.
(3 பெயர்கள்) 95

**மோதிரம்**

வீகம், ஆழி, இலச்சினை, மோதிரம்.
(3 பெயர்கள்) 96

**மணிவடம்**

சரமே, ஆரம், தாமம், மணிவடம்.
(3 பெயர்கள்) 97

**பூணு நூல்**

உபவீதம், பூணு நூல் (என மொழிப). (1 பெயர்) 98

**நுதல் அணி**

இலம்பகம், புல்லகம், சூட்டு, நுதல் அணி.
(3 பெயர்கள்) 99

**தெய்வ உத்தி**

திரு, தெய்வ உத்தி. (1 பெயர்) 100

**தலைக் கோலம்**

பங்குசம், பிஞ்ஞகம், (பயில்) தலைக் கோலம்.
(2 பெயர்கள்) 101

**தலைப் பாளை**

தொய்யகம் (என்பது), தலைப்பாளை (ஆகும்).
(1 பெயர்) 102

**கிம்புரி**

தாங்கி, கிம்புரி, கோளகை, பூணே.
(3 பெயர்கள்) 103

**பெருஞ் சூட்டு**

பெருஞ் சூட்டு (என்பது), சிவளிகை(ப் பெயரே).
(1 பெயர்) 104

**சரப்பணி**

சரப்பணி, வயிரச் சங்கிலி (ஆகும்). (1 பெயர்) 105

**பேரணி**

மதாணி, ஆரம், பெரும் பூண், பேரணி.
(3 பெயர்கள்) 106

**பூண் கடைப் புணர்வு**

கடையும், கயிலும், பூண் கடைப் புணர்வே.
(2 பெயர்கள்) 107

**மாதர் அணி வடம்**

ஆரம், கண்டிகை, தாமம், கோவை,
மாலை, இழை, மாதர் அணி வடப் பெயரே.
(6 பெயர்கள்) 108

## 3. இரத்தின வகை

**மாணிக்கம்**

மாமணி, செம்மணி, மாணிக்கம், பதும
ராகம் (என்பதும் அப்பெயர்க்கு உரித்தே).
(3 பெயர்கள்) 109

**வைடூரியம்**

வாலவாயம், வயிடூரியம் (எனல்) (1 பெயர்) 110

**வயிரம்**

வச்சிரம், வயிரம். (1 பெயர்) 111

**மரகதம்**

மரகதம், அரி(மணி), பச்சை (மணியே).
(2 பெயர்கள்) 112

**நீல மணி**

நீல மணிப் பெயர், மணி (என நிகழ்த்துப).
(1 பெயர்) 113

**பவளம்**

துப்பு, பிரவாளம், துவர், துகிர், பவளம். 114

**மற்றும் பவளம்**

வித்துருமம், அரத்தம் (என்னவும் விளம்புப).
(6 பெயர்கள்) 115

**முத்து**

நித்திலம், ஆரம், தரளமும், முத்தே.
(3 பெயர்கள்) 116

**கடவுள் மணி**

நிதியும், நிதானமும், கடவுள் மணிப் (பெயர்).
(2 பெயர்கள்) 117

**மணிப் பொதுப் பெயர்**

மனவும், காசும், மணியின் பொதுப் பெயர்.
(2 பெயர்கள்) 118

**ஐவகைத் தெய்வ மணி**

சிந்தா மணி, சூளா மணி, சிமந்தக
மணி, சூடா மணி, கௌத்துவ மணி, (என்று
இனையவை) தெய்வ மணி ஐந்து (என்ப).
(5 பெயர்கள்) 119

**சங்க நிதி**

சங்க நிதி, சங்கின் வடிவினது (ஆகும்.) 120

**பதும நிதி**

பதும நிதி, பதும வடிவினது (ஆகும்.) 121

**சந்திர காந்தம்**

சந்திரகாந்த (மணி,) நீர் கால்வது. 122

**சூரிய காந்தம்**

சூரிய காந்த (மணி), தீச் சுடர்வது. *123*

**இருப்புக் காந்தம்**

இருப்புக் காந்தம், சும்பகம் (என்ப).
(1 பெயர்) *124*

**பளிங்கு**

படிகம், பருக்கை, காழ், உபலம், பளிங்கே.
(4 பெயர்கள்) *125*

**வளை மணி**

மனவும், அக்கும், (வால்) வளை மணியே.
(2 பெயர்கள்) *126*

**செங்கல்**

தாது, செங்கல், காரிகமும் (ஆகும்).
(2 பெயர்கள்) *127*

**சிந்தூரம்**

திலகம் (என்பது), சிந்தூரம் (ஆமே).
(1 பெயர்) *128*

**சாதிலிங்கம்**

இங்குலிகம், சாதிலிங்கம், குலிகம்.
(2 பெயர்கள்) *129*

**அகன் மணிப் பொதுப் பெயர்**

அரதனம், சலாகை, அகன் மணி (ஆகும்)
(2 பெயர்கள்) *130*

### 4. உலோக வகை

**பொன்**

ஆடகம், வேங்கை, அரி, செந்தாது,
காணம், தேசிகம், காஞ்சனம், கர்ப்பூரம்,
காரம், தொடுக்கம், கனகம், சாமீகரம்,
ஈழம், சுவணம், இரணியம், ஏமம்,
ஆசை, செங்கொல், ஆக்கம், கோவம்,
பீதகம், மாழை, ஈகை, சாக்கு,
பந்தம், தமனியம், அத்தம், பூரி,
சந்திரம், வித்தம், நிதியே, வெறுக்கை,
(இந்த வகைப் பெயர் எல்லாம்) பொன்னே. *131*

**மற்றும் பொன்**

அனந்தமும், வசுவும், அருத்தமும், பொருளும்,
தனமும், பண்டமும், திரவியமும் (அதற்கே).
(39 பெயர்கள்) *132*

**வெள்ளி**

தாரம், இரசிதம், களதௌதம், வெள்ளி.
(3 பெயர்கள்) *133*

**செம்பு**

தாமிரம், எருவை, வடுவே, சுற்பம்,
உதும்பரம், சீருள், சீருணம், செம்பே.
(7 பெயர்கள்) *134*

**வெள்ளீயம்**

சீருளும், வங்கமும், வெள்ளீயம் (ஆகும்).
(2 பெயர்கள்) *135*

**காரீயம்**

நாகம், காரீயம். (1 பெயர்) *136*

**தரா**

மதுகம், தரா (ஆம்) (1 பெயர்) *137*

**துத்த நாகம்**

நாகம், துத்த நாகம். (1 பெயர்) *138*

**பித்தளை**

இரதி, மாயாபுரி, ஆரகூடம், பித்தளை.
(3 பெயர்கள்) *139*

**வெண்கலம்**

கஞ்சம், உறை, வெண்கலம் (ஆகும்மே).
(2 பெயர்கள்) *140*

**இரும்பு**

கருங்கொல், அகியம், கருந்தாது, அயிலும்,
இரும்பின் (பெயரே), அயமும் (என்ப).
(5 பெயர்கள்) *141*

**உலோகக் கட்டி**

மாழை, சுவணம், வங்காரம், தகணை,
ஆடகம், உலோகக் கட்டி (ஆகும்).
(5 பெயர்கள்) *142*

**பஞ்சலோகம்**

தமனியம், இரும்பு, தாமிரம், ஈயம்,
இரசிதம், பஞ்ச லோகம் (என்ப).
(5 பெயர்கள்) *143*

**நவலோகங்கள்**

இரதி, மதுகம், நாகம், கஞ்சம், (என்று
உரை செய் நாலுடன்) நவலோகம்மே.
(9 பெயர்கள்) *144*

**பண்டாரம்**

கோசம், தண்டம், பண்டாரம் (ஆகும்).
(2 பெயர்கள்) *145*

**பொற் கலன் இருக்கை**

பொற் கலன் இருக்கை, பொற் பண்டாரம்.
(1 பெயர்) *146*

**உண் கலம்**

தாலம், தட்டம், தளிகை, பாசனம், உண்கலம்.
(4 பெயர்கள்) 147

**வட்டில்**

கரகமும், கோரமும், வள்ளமும், சகடமும்,
சிகரமும், சாகையும், வட்டில் (பெயரே).
(6 பெயர்கள்) 148

**சிறு வட்டில்**

கிண்ணமும், வள்ளமும், சிறு வட்டில் (பெயரே). 149

**மற்றும் சிறு வட்டில்**

கிராணம் (என்பதும்), சிறு வட்டில் (பெயரே).
(3 பெயர்கள்) 150

**நாழிகை வட்டில்**

கன்னலும், கிண்ணமும், நாழிகை வட்டில்.
(2 பெயர்கள்) 151

**கண்ணுடி**

புளகம், அத்தம், ஆடி, படிமக் கலம்,
ஒளி வட்டம், கஞ்சனே, தருப்பணம், கண்ணுடி. 152

**மற்றும் கண்ணுடி**

ஆதரிசனம், உருவம் காட்டி, கஞ்சனமும் (ஆகும்).
(10 பெயர்கள்) 153

**படிக்கம்**

படியகம், படிக்கம். (1 பெயர்) 154

**கலசப் பானே**

கஞ்சனே, கலசப் பானே (ஆகும்). (1 பெயர்) 155

**துடுப்பு**

கசிதம், துடுப்பு. (1 பெயர்) 156

**நெய்த் துடுப்பு**

சுருவை, நெய்த் துடுப்பே. (1 பெயர்) 157

**சட்டுவம்**

தவ்வி, சிலகம், தறுவி, சட்டுவம்.
(3 பெயர்கள்) 158

**கைம் மணி**

படலிகை, வட்டம், (பகரில்) கைம் மணி.
(2 பெயர்கள்) 159

**பெரு மணி**

பெரு மணி, கண்டை (மணி), யானே மணி (என்ப).
(2 பெயர்கள்) 160

**எறி மணி**

எறி மணி, சேகண்டி. (1 பெயர்) 161

**தூப மணி**

தூப மணி, கைம் மணி. (1 பெயர்) 162

**தாளம்**

கிட்டி, சீர், பாண்டில், கஞ்சம், (கைத்) தாளம்.
(4 பெயர்கள்) 163

**கிண்கிணி மாலே**

குரலே, தார், (இவை) கிண்கிணி மாலே.
(2 பெயர்கள்) 164

**காளம்**

காகளம், காளம். (1 பெயர்) 165

**சிறு சின்னம்**

பீலி, சிறு சின்னம். (1 பெயர்) 166

**கொம்பு**

கோடும், இரலேயும், வயிரும், கொம்பே. 167

**மற்றும் கொம்பு**

ஆம்பலும் (ஆம் என்று அறையப்படுமே).
(4 பெயர்கள்) 168

**பரணி**

கோயே, பரணி. (1 பெயர்) 169

**கமண்டலம்**

குண்டிகை, காண்டகம், கரகம், கமண்டலம்.
(3 பெயர்கள்) 170

**கெண்டி**

கடிப்பம், கோடிகம், கெண்டி (ஆகும்).
(2 பெயர்கள்) 171

## 5. ஆடை வகை

**கூறை**

ஆடை, கோடி, சூடி, வட்டம்,
காடகம், புட்டம், கலிங்கம், காழகம்,
படம், தூசு, புடைவை, துகில், பரிவட்டம்,
ஆவரணம், தானே, உடை, ஆசாரம்,
அம்பரம், நீவி, அறுவை, உடுக்கை,
சம்படம், பட்டி, சாடி, சேலே,
மடியே, சீரை, வட்டுடை, கோசிகம்,
கலேயே, வாசனம், கூறை (எனக் கருதுவர்)
(31 பெயர்கள்) 172

**சிறு துகில்**

கந்தை, விரிபம், கண்டை, பிடியல்,
வேதகம், புங்கம், பங்கம், கத்தியம்,
தூரியம், சிற்றில், (இவை) சிறு துகில் (பெயர்).
(10 பெயர்கள்) 173

### நல் ஆடை

நாகம், பாரி, நல் ஆடைப் பெயரே.
(2 பெயர்கள்) 174

### பட்டு வருக்கம்

பாளிதம், கோசிகம், பட்டு வருக்கம். 175

### மற்றும் பட்டு வருக்கம்

காம்பும், நேத்திரமும், (கருதுவர் அதற்கே.)
(4 பெயர்கள்) 176

### பணித் தூசு

பாளி, பணித் தூசு, தேவாங்கு, (என்ப).
(2 பெயர்கள்) 177

### மயிர்ப் படாம்

மயிரகம், வயிரியம், மயிர்ப் படாம் (ஆமே).
(2 பெயர்கள்) 178

### அத்தவாளம்

வடகம், உல்லாசம், அத்தவாளம்.
(2 பெயர்கள்) 179

### சித்திரப் படாம்

புத்தகம், சித்திரப் படாம் (அது ஆகும்).
(1 பெயர்) 180

### உத்தரீயம்

உத்தராசங்கம், ஏகாசம், உத்தரீயம்.
(2 பெயர்கள்) 181

### கொய்சகம்

நீவி, கொய்சகம். (1 பெயர்) 182

### போர்வை

மீக்கோள், போர்வை. (1 பெயர்) 183

### உடுத்தல், இறுக்கல்

சுற்றல், உடுத்தல்; இறுக்கல், தற்றல்.
(1, 1 பெயர்கள்) 184

### முன் தானை

முன் தானை, தோகை. (1 பெயர்) 185

### முகபடாம்

முகபடாம், சூழி. (1 பெயர்) 186

### கம்பளிப் படாம்

கம்பலம், கம்பளம், கம்பளிப் படாமே.
(2 பெயர்கள்) 187

### செம்படாம்

சிம்புளி, செம்படாம். (2 பெயர்கள்) 188

### முலைக் கச்சு

வம்பு, வார், விசிகை, பட்டிகை, முலைக் கச்சே.
(4 பெயர்கள்) 189

### கச்சின் தலைப்பு

கஞ்சகம், சார்வாரம், கச்சின் தலையே.
(2 பெயர்கள்) 190

### மேல் கட்டி

விதானம், கம்பலம், படங்கு, வானி, மேல் கட்டி.
(4 பெயர்கள்) 191

### சட்டை

கஞ்சுகம், குப்பாயம், மெய்ப்பை, காஞ்சுகி,
அங்கி, வாரணம், சட்டை (ஆகும்).
(6 பெயர்கள்) 192

### இடு திரை

அவிடி, கஞ்சிகை, அவளிகை, காண்டம்,
எழினி, கண்டம், பாரம், கழனி,
படம், இடு திரை, (மெய்ப்) படாமும் (ஆகும்).
(10 பெயர்கள்) 193

### மெத்தை

தவிசும், அணையும், தளிமமும், மெத்தை. 194

### மற்றும் மெத்தை

காகுளி (என்பதும் கருதப் பெறுமே)
(4 பெயர்கள்) 195

### தலையணை

உபதானம் (என்பது), தலையணை (ஆகும்).
(1 பெயர்) 196

### பெருங் கொடி

படமே, வானி, பதாகை, கேதனம்,
துவசம், சத்தி, தோகை, துகிலே, படங்கு,
விலோதனம், படாகை, பெருங் கொடியே. 197

### மற்றும் கொடி

(கிளத்தப் பெறுமே) கேதுவும் (இதன் பெயர்).
(12 பெயர்கள்) 198

### வீதியில் கட்டிய கொடி

விடங்கம், வீதியில் கட்டிய கொடியே.
(1 பெயர்) 199

### தேரில் கட்டும் கொடி

தேரிடைத் திகழ் கொடி, கூவிரம் (ஆகும்).
(1 பெயர்) 200

### சிறு கொடி

கத்திகை, சிறு கொடி (கட்டுரை ஆகும்).
(1 பெயர்) 201

### மரவுரி

வற்கலை, இறைஞ்சி, சீரை, மரவுரி.
(3 பெயர்கள்) 202

### சும்மாடு

சுடுவு, சுமடு, சுமையடை, சும்மாடு.
(3 பெயர்கள்) 203

### துணி

சிதரே, சிதலை, சீரை, துணியே. (3 பெயர்கள்) 204

### பரிவட்டம்

வத்திரம், ஆசாரம், வாசம், பரிவட்டம்.
(3 பெயர்கள்) 205

## 6. பூச்சு வகை

### சாந்தின் பொதுப் பெயர்

கலவைச் சேறும், காலேக வண்ணமும்,
களபமும், விரையும், கலவையும், சாந்தே.
(5 பெயர்கள்) 206

### நால்வகைச் சாந்து

பீதம், கலவை, வட்டிகை, புலி, (என)
நால்வகைச் சாந்தின் (நாமம்) (ஆகும்).
(4 பெயர்கள்) 207

### கருப்பூரம்

பாளிதம், கருப்பூரம். (1 பெயர்) 208

### கத்தூரி

மான்மதம், கத்தூரி. (1 பெயர்) 209

### புழுகு

வாச நெய், புழுகே. (1 பெயர்) 210

### பூசுவன

அங்கராகம், பூசுவன (ஆகும்). (1 பெயர்) 211

### மயிர்ச் சாந்து

ஏலம், தகரம், காசறை, மயிர்ச் சாந்தே.
(3 பெயர்கள்) 212

### செஞ்சாந்து

செஞ்சாந்து (என்பது), செங் குங்குமமே. 213

### மற்றும் செஞ்சாந்து

தளம் (என்று உரைப்பதும் அதற்கே சாற்றும்).
(2 பெயர்கள்) 214

### வெண் சாந்து

தளம் (என்று உரைப்பது), வெண் சாந்து (ஆகும்).
(1 பெயர்) 215

### சந்தனம்

சந்து, சாந்தம், சந்தம், சந்தனம்.
(3 பெயர்கள்) 216

### கலவை

கலவை, களபப் (பெயரது ஆகும்). (1 பெயர்) 217

### பனி நீர்

கந்த சாரம், இம சலம், பனி நீரே.
(2 பெயர்கள்) 218

### செறி குழம்பு

தேய்வையும், செச்சையும், செறி குழம்பு (ஆகும்).
(2 பெயர்கள்) 219

### அப்புதல்

கொட்டல், அப்புதல். (1 பெயர்) 220

### பூசுதல்

புலர்த்தல், பூசுதல். (1 பெயர்) 221

### மகளிர் ஆகத்து எழுது கோலம்

மகளிர் கோலால் வனமுலை ஆகத்துத்
தொழில் பெற வரிப்பது, தொய்யில் (ஆகும்).
(1 பெயர்) 222

### நுதல் குறி

புண்டரம், திலகம், நுதல் (புனை) குறியே.
(2 பெயர்கள்) 223

### அச்சுதம்

அச்சுதம், அறுகு அரிசி கூட்டியது (ஆகும்).
(1 பெயர்) 224

## 7. சூட்டு வகை

### மாலை

சுக்கை, தொடையல், தொங்கல், கத்திகை,
அலங்கல், கண்ணி, தெரியல், தாரே,
அணியல், தாமம், ஒலியல், சூட்டு,
கோதை, மஞ்சரி, மாலையின் (கூற்றே).
(14 பெயர்கள்) 225

### நுதல் அணி மாலை

சூட்டே, இலம்பகம், நுதல் அணி மாலை.
(2 பெயர்கள்) 226

### கோத்த மலர்

கோத்த மலரே, மத்தக மாலை (1 பெயர்) 227

### பின்னிய மாலை

பிணையல், (என்பது) பின்னிய மாலை.
(2 பெயர்கள்) 228

### கோத்த மாலே

சிகழிகை, படலே, வாசிகை, தொடையல்.
(4 பெயர்கள்) 229

### வாகை மாலே

கல்வியில், கேள்வியில், கொடையில், படையில்,
வெல்லுநர் அணிவது வாகை (ஆகும்).
(4 பெயர்கள்) 230

## 8. இயல் வகை

### மூவகைத் தமிழ்

இயல் தமிழ், இசைத் தமிழ், நாடகத் தமிழ் (என
வகைப்படச் சாற்றினர் மதி உணர்ந்தோரே).
(3 பெயர்கள்) 231

### எண் வகைக் கணம்

(அறம் பொருள் இன்பம் வீடு என்று இவற்றின்
திறம்படச் செய்யுள் செப்புங் காலே)
நீரின் கணமும், நிலத்தின் கணமும்,
தேயுவின் கணமும், வாயுவின் கணமும்,
அந்தர கணமும், இயமான கணமும்,
சந்திர கணமும், சூரிய கணமும், (என்று)
எண்வகைக் கணமும் (இயம்பல் வேண்டும்).
(8 பெயர்கள்) 232

### அவற்றுள், நீரின் கண வகை

நேர் முதல் ஆகி நிரையிணே பின் வரின்,
நீரின் கணம் (எனச் சீர் பெயர் பெறுமே). 233

### நிலத்தின் கண வகை

நிரை மூன்று உறு சீர், நிலக் கணம் (ஆகும்). 234

### தேயுவின் கண வகை

நேர் நடு ஆகி நிரை இருபால் வரின்,
தேயுவின் கணம் ( எனச் செப்புவர் புலவர்). 235

### மாருத கண வகை

இறுதி நிரையாய் இணே நேர் முன்னர்
வருவது, மாருத கணம் (என வைப்பார்). 236

### அந்தர கண வகை

முந்து நிரை இணே வந்து நேர் பின் வரின்,
அந்தர கணம் (என்று அறையல் வேண்டும்). 237

### இயமானன் கண வகை

நேர் மூன்று ஆகில், (சீர்) இயமானன். 238

### மதியின் கண வகை

முதல் நிரை ஆகி இணே நேர் பின் வரின்,
மதியின் கணம் (என வகுத்தனர் புலவர்). 239

### எரி கதிர்க் கண வகை

நிரை நடு ஆகி நேர் இருபால் வரின்,
எரி கதிர்க் கணம் (என்று இயம்பினர் புலவர்). 240

### அவ் வெட்டினுள் நற்கண வகை

நிலனும், நீரும், மதியும், இயமானனும்,
நல மிக முன் வரின், நன் கணம் (ஆகும்). 241

### தீக் கண வகை

ஏனேய நான்கும் ஊனம் (அது ஆகும்). 242

### நன் கண, தீக் கண, வரலாற்று வகை

### (வெண்பா)

காய்ச்சீரின் முன் இரண்டும், கை கொள் கனிச்சீரின்
வாய்த்த சீர் பின் இரண்டும் வாங்கிக் கொள்—வாய்த்த
கனிச் சீரின் முன் இரண்டும் காய்ச்சீரின் பின்னும்
துணித்த கணம் எட்டினுக்கும் நூல். 243

### எழுத்துப் பொருத்த வகை

(சொல்லிய வகையால்) எழுத்துப் பொருத்தம்
வல்லெழுத்து அல்லது மெல்லெழுத்து ஆகா;
யா வகைச் செய்யுட்கும் இன்பமொடு புணர்ந்த
மூ வகைச் சீரே முதல் சீர் ஆகும். 244

### தானப் பொருத்த வகை

### (வெண்பா)

தன் எழுத்துப் பாலன், குமரன் இரண்டு ஆகும்,
மன்னவற்கு மூன்று ஆம் வகுக்குங்கால், —துன்னிய
நஞ்சு ஆர் விருத்தம் ஆம், நான்கு ஆகில்; ஐந்து ஆகில்
எஞ்சா மரணத்து இயல்பு.

### நல் தானம் தீத் தானம்

தலேவன் எழுத்தே முதலாய்ச் சாற்றின்
நலமிகும் மூன்றும், மற்று இரண்டும் ஊனம். 246

### நாள் பொருத்த வகை

### (வெண்பா)

தன் நாட்குப் பின் நாளும் நன்று ஆகும்; சம்பந்த
நல் நான்கும் ஆறும் நலம் பெருகும்;—பொன் அனேயாய்!
எட்டினேடு ஒன்பானும் இத்தனேயும் என்பரே
ஒட்டாரை ஒட்டுவிக்கும் நாள். 247

### இதுவும் அது

நீர்க் கணத்து நாள் சதயம்; (நீடு) இயமானன் கண நாள்
(பார்க்கில்) பரணி; படிக் கணத்துக்கு—(ஏற்கும்) நாள்
கேட்டை; மதியின் கண நாள், மகம்; (இங்குக்
கூட்டிய நாள் என்றே கூறு). 248

### இதுவும் அது

காற்றின் கண நாள் (கடுஞ்) சோதி; கார்த்திகையாம்
(ஏற்ற) எரிக்கணத்துக்கு; (எண்ணுங்கால்—தோற்று) இரவி

(பொங்கு) கண நாள் புனர் பூசம்; ஆகாயம்
(தங்கு) கண நாள், ஓணம் (தான்). 249

**நற் கணத்தின் பயன்**

நிலம், மதி, நீர், இயமானன் எனும் நான்கும்
பெருக்கம் செய்தலில், வாழ் நாள் பயத்தலில்,
தருக்கிய சீர்த்தி தன்னைத் தருதலில்,
மிகு திரு ஆக்கலில், வேந்தர்க்கும் பிறர்க்கும்
தகும் எனக் கழறினும், தகா; (மற்று) அச் சீர்க்கு
உரியவர் நாளொடும் பொருந்தாக் காலே. 250

**தீக் கணத்தின் பயன்**

அந்தரம், வாயு, (அளவு இல்) ஆதித்தன்,
(செங்)தழல் (என்னும்) தீக் கணம் சேரின்,
தேசம் போக்குதல், செல்வத்தைப் பிரித்தல்,
சூனியம் ஆக்கல், சூழ் நோய் உறுத்தல்,
ஊனம் பயக்கும் என்று உரைத்தனர் ஆய்ந்து
தெள்ளிதின் உணர்ந்த செந்தமிழ்க் கவிஞர். 251

**உண்டிப் பொருத்த வகை**

ஆதி அமுது எழுத்து ஆகிய அச் சீர்க்கு
ஓதிய தெய்வத்துக்கு உரிய நாளொடும்
பாடப் படூஉம் இயல்பு அன்றியும், இறைவன்
பிறந்த நாளினும் பெயர் நாள் தன்னினும்
இரண்டின் ஒன்றில் பொருந்தக் கூறிப்
பாதம் முதலே எடுப்பின் மற்று அவற்கு
ஏறு திரு ஆக்கும் என்மனுர் புலவர். 252

**புள் வகை**

**(வெண்பா)**

அகரமே, வல்லூறு (ஆம்); ஆந்தை, இகரம்;
உகரமே, காக்கை (என ஓதும்);—எகரமே
(வண்டானக்) கோழி; (வளை வாய்) மயில் (என்னக்
கொண்டார்), ஒகரக் (குறி.) 253

**கன்னல் வகை**

ஐவகை எழுத்தில் அகரம் உதிப்ப,
இகரம்தானே இன்புறும் என்ப;
உகரம் அரசு ஆம், எகரம் துயிலும்,
ஒகரம் தானே உயிர்ப்பு இன்று ஒடுங்கும். 254

அவ்வவர் பெயர் முதல் எழுத்து வந்து உதிப்ப,
அவ்வவர் பாடின் ஆக்கம் மிகுமே. 255

**பால் வகை**

எழுத்து (எனப்படுபவை) ஆண், பெண், அலியே.
(3 பெயர்கள்) 256

**அவற்றுள்–ஆண் எழுத்து**

உயிர் பன்னிரண்டும், ஆண் (எனப்படுமே). 257

**பெண் எழுத்து**

உயிர் மெய் எல்லாம், பெண் எழுத்து (என்ப). 258

**அலி எழுத்து**

ஒற்று எழுத்து எல்லாம், அலி (எனப்படுமே). 259

**அவ் வெழுத்துக்களுள் முதல் சீரின் முதல் எழுத்து இன்னது எனல்**

எழுத்தின் கிழத்தி நாமகள் ஆதலின்,
பெண் எழுத்து அல்லது முன் வைத்து உரையார். 260

**மங்கலச் சொல்**

திருவே, களிறே, தேர், பரி, கடலே,
பொலிவே, மணியே, பூ, புகழ், சீர் (எனல்,
வருத்தம் நீங்கிய) மங்கலச் சொல்லே.
(10 பெயர்கள்) 261

**வேதியர்க்கு உரிய பா வகை**

பிள்ளைப் பாட்டு வாயின், முன்னம்
வெள்ளைப் பாட்டு, வேதியர்க்கு உரித்தே. 262

**அரசர்க்கு உரிய பாவகை**

நேரிசை அகவலும், கொச்சகக் கலியும்,
(ஆராயுங்கால்) அரசர்க்கு உரித்தே. 263

**வணிகர்க்கு உரிய பாவகை**

வஞ்சியும், இன்னிசை வெள்ளையும் வணிகர்க்கு
(எஞ்சல் இல்லா இயல்பு உடைத்து ஆகும்). 264

**சூத்திரர்க்கு உரிய பா வகை**

நெடு வெண் பாட்டும், நேரிசை அகவலும்
(கடிய) சூத்திரர்க்குக் (கட்டுரைத்தனரே). 265

**காப்புக்கு உரிய கடவுள்**

காப்பு முதல் இசைக்கும் கடவுள்தானே
பூக் கமழ் தண் துழாய் புனைந்தவனும்; அவன்
காவல் கிழமையன் ஆதலானும்,
பூவின் கிழத்தியைப் பொருந்துதலானும்,
முடியும் கடகமும் மொய் பூந் தாரும்
குழையும் நூலும் குரு மணிப் பூணும்
அணியும் செம்மல் ஆதலானும்,
மன் உறு பிரமனைத் தருதலானும்,
முன்னுற மொழிதற்கு உரியன் ஆம் எனப்
பன்னி உரைத்தனர் பாவலர் தாமே. 266

**ஆண் பால் பிள்ளைப் பாட்டின் வகை**

பிள்ளைப் பாட்டுத் (தெள்ளிதின் கிளப்பின்)
திங்கள் இரண்டில் தெய்வம் காக்கென
இன் தமிழ்ப் புலவர் இயம்பிய காப்பும்,
ஐந்தாம் திங்களில் செங்கீரை ஆடலும்,
ஆறும் திங்களில் கூறுதல் கற்றலோடு,
ஏழாம் திங்களில் இன்னமுது ஊட்டலும்,
எட்டாம் திங்களில் (இயல்) தாலாட்டலும்,
ஒன்பதாம் திங்களில் (உயர்) சப்பாணியும்,
பத்தினோடு ஒன்றின் முத்தம் கூறலும்,

ஆண்டு வரையின் ஈண்டு வருகென்றலும்,
மதி ஈர் ஒன்பதின் மதியை அழைத்தலும்,
இரண்டாம் ஆண்டில் சிறு பறை கொட்டலும்,
மூன்றும் ஆண்டில் சிற்றில் சிதைத்தலும்,
நாலாம் ஆண்டில் சிறு தேர் உருட்டலும்,
பத்தில் பூண் அணி, பன்னீர் ஆண்டினில்
கச்சொடு சுரிகை காமுறப் புனைதல் என்று
இன்னவை பிறவும் ஆகும்; இவற்றுள்
முன்னர் மொழிந்த ஒழிந்தவற்றோடும்
பெற்ற ஆண்பால் பிள்ளைப் பாட்டாம்;
முன்னுறக் கிளந்த ஆண்டின் நாள் வரை
இசைத்த பாடல் இருபாற்கும் உரித்தே. 267

### பெண் பால் பிள்ளைப் பாட்டு வகை

பேணும் சிறப்பில் பெண் மகவு ஆயின்,
மூன்றும் ஆண்டில், குழ மணம் மொழிதலும்,
ஐந்தின் முதலா ஒன்பதின் காறும்
ஐங்கணைக் கிழவனை ஆர்வமொடு நோற்றலும்,
பனி நீர் தோய்தலும், பாவை ஆடலும்,
அம்மனை கழங்கு பந்து அடித்து ஆடலும்,
சிறு சோறு அடுதலும், சிற்றில் இழைத்தலும்,
ஊசல் ஆடலும், என்று இவை உள்ளிட்டுப்
பேசிய பெண்பால் பிள்ளைப் பாட்டே. 268

### கவி அரங்கேற்றிய பாட்டுடைத் தலைவன் செய்யும் வழிபாடு

உருவகம், உவமை, வழிநிலை, மடக்கே,
(விரிசுடர்) விளக்கு (என விரவி வருநவும்);
வேற்றுமை நிலையே, வெளிப்படு நிலையே,
நோக்கே, உட்கோள், தொகை மொழி, மிகை மொழி,
வார்த்தை, தன்மை, பிறர்கோள் வைப்பு (எனப்
பாற்படக் கிடந்த பகுதியின் வருநவும்);
சிறப்பு மொழி, சிலேடை, மறுத்து மொழி நிலையே,
உடனிலைக் கூட்டம், உவமான வுருவகம்,
நுவலா நுவற்சி, தலைக் கட்டிய மொழி,
நிதரிசனம், பாராட்டு, ஒருங்கு இயல் நிலையே,
ஐயம், உயர்வே, விரவு இயல், வாழ்த்து என
எய்தும் இருபத்து எட்டு அலங்காரத்தாலும்;
எழுத்து, சொல், பொருள், யாப்பு நெறியாலும்;
நவை அறச் செய்யுள் செய்யும் பாவலன்
அவையும், அரசும் அறியப் பாடுவோன்,
முத்தமிழ் வல்லோன், நாற் கவி பாடுவோன்,
உத்தம சாதியில் தப்பாது உயர்ந்தோன்,
உறுப்பில் குறையாது ஒழுக்கமொடு புணர்ந்தோன்,
முப்பது கழிந்து அங்கு எழுபதுக்கு உளவாம்
பெற்றியின் அமைந்த பிராயம் அது உடையோன்,
பாடும் கவிதை நாடுறக் கொள்ளின்,
தோரணம் நாட்டி, துகில் கொடி எடுத்து,
வார் முரசு இயம்ப, மறையோர் வாழ்த்த,
விழுத் தகு கோலத்து விரித்த பூங் கலிங்கத்துப்
பழிப்பு இல் பாலிகைப் பல் உணு முளையின்
விளக்கு நிறை குடத்து விதானப் பந்தரில்,
துளக்கம் இல் பல்வகைத் தூண் நிரைப் பொதியில்,
பல் கிளை நெருக்கில், பாவையர் பல்லாண்டின்
மல்கு வனப்பு அமைந்த வளமனை நாப்பண்,
வெண்துகில் உடுத்து வெண் பூச் சூடி,
தன் தவிசு இருத்தி, தான் அயல் இருந்து
மங்கலச் செய்யுள் மகிழ்ந்து கேட்டு,
பொன்னும் ஆடையும் பூணும் கடகமும்
இன்னவை பிறவும் கொடுத்து, ஏழ் அடி நிலம்
புரவலன் பின் சென்று ஒழிகென நிற்றல்
பூ அலர் நறுந்தார்ப் புரவலன் கடனே. 269

### பரிசில் பெறு வகை

பாட்டுடைத் தலைவன் பரிசில் கொடானேல்,
மீட்டு ஒரு பேரின் விரைந்து அதில் சேர்த்தி,
ஊரும் பேரும் ஒருங்கே பறித்து,
சீரும் தளையும் செவ்வதின் நாட்டின்,
இங்கு இவன் திரு இழந்து இடர்ப்பட, திருவும்
அங்கு அவற்கு ஆகும்; ஆகாது இவற்கே. 270

### மற்றும் பாவலன் பரிசு பெறுக்கால் செய்யும் வகை

பரிசில் ஈயாப் பாவிதன் பனுவலைத்
தெரிதர எழுதி, செம் பூச் சூடி,
தன் மனைப் புறத்தினும், சாமுண்டி முன்றிலும்,
பன்னகம் வாழும் பழம் பதி தன்னினும்,
மயானத்து இடத்தினும், மறுகு தன்னினும்,
தியானத்து இருந்து செந் தீக் கொளுத்த,
ஈர் அறு திங்களின் இறுதியாம் என்பது
ஆதிப் புலவன் அறைந்த மொழியே. 271

### இதுவும் அது

பரிசில் பெறுது பாடிய புலவன்
தெருமரல் உள்ளமொடு கலங்கித் தீங்கு உறில்,
பாட்டுடைத் தலைவன் அன்றி, பாட்டுக்
கேட்டு இனிது இருந்த கிளைஞரும் கெடுவர். 272

## 9. இசை வகை

### காமரப் பாட்டு

கானம், கொளையே, வரி, கந்தருவம்,
கீதம், இராகம், கேயம், பாணி,
நாதம், இசை, பண், காமரப் பாட்டே.
(11 பெயர்கள்) 273

### நால் வகைப் பண்

பாலை, குறிஞ்சி, மருதம், செவ்வழி, (என
நால் வகை யாழாம்) நாற் பெரும் பண்ணே.
(4 பெயர்கள்) 274

### பாலை யாழ்த் திறம்

அராகம், நேர் திறம், உறுப்பு, குறுங்கலி,
ஆசான் (ஐந்தும்) பாலை யாழ்த் திறனே.
(5 பெயர்கள்) 275

### குறிஞ்சி யாழ்த் திறன்

நைவளம், காந்தாரம், படுமலை, மருளொடு
அயிர்ப்பு, பஞ்சுரம், அரற்று, செந்திறம்,
(இவ்வகை எட்டும்) குறிஞ்சி யாழ்த் திறனே.
*(8 பெயர்கள்)* *276*

### மருத யாழ்த் திறன்

நவிர், வடுகு, வஞ்சி, செய் திறம் (நான்கும்)
மருத யாழ்க்கு வரும் திறன் ஆகும்.
*(4 பெயர்கள்)* *277*

### செவ்வழி யாழ்த் திறன்

நேர் திறம், பெயர் திறம், சாதாரி, முல்லை (என
நாலும்) செவ்வழி நல் யாழ்த் திறனே.
*(4 பெயர்கள்)* *278*

### பெரும் பண்ணின் வகை

(ஈர் இரு பண்ணும் எழு மூன்று திறனும்
ஆகின்றன இவை; இவற்றுள்) பாலை யாழ்,
செந்து, மண்டலி யாழ், பவுரி, மருத யாழ்,
தேவதாளி, நிருபதுங்க ராகம்,
நாகராகம், (இவற்றுள்) குறிஞ்சியாழ்,
ஆசாரி, சாய வேளர் கொல்லி,
கின்னராகம், செவ்வழி, மௌசாளி, சீராகம்,
சந்தி (இவை பதினாறும்) பெரும் பண்.
*(16 பெயர்கள்)* *279*

### பாலை யாழ்த் திறன் வகை

தக்கராகம், அந்தாளிபாடை,
அந்தி, மன்றல், நேர் திறம், வராடி,
பெரிய வராடி, சாயரி, பஞ்சமம்,
திராடம், அழுங்கு, தனுசி, சோமராகம்,
மேகராகம், துக்க ராகம்,
கொல்லி வராடி, காந்தாரம், சிகண்டி,
தேசாக்கிரி, சுருதி காந்தாரம், (இவை
இருபதும்) பாலை யாழ்த்திறம் (என்ப).
*(20 பெயர்கள்)* *280*

### குறிஞ்சி யாழ்த் திறன் வகை

நட்ட பாடை, அந்தாளி, மலகரி,
விபஞ்சி, காந்தாரம், செருந்தி, கௌடி,
உதய கிரி, பஞ்சுரம், பழம் பஞ்சுரம்,
மேகராகக் குறிஞ்சி, கேதாளி,
குறிஞ்சி, கௌவாணம், பாடை, சூர்துங்க ராகம்,
நாகம், மருள், பழந்தக்க ராகம்,
திவ்விய வராடி, முதிர்ந்த இந்தளம்,
அனுத்திர பஞ்சமம், தமிழ்க் குச்சரி, அருட்
புரி, நாராயணி, நட்ட ராகம்,
இராமக்கிரி, வியாழக் குறிஞ்சி,
பஞ்சமம், தக்கணாதி, சாவகக் குறிஞ்சி,
ஆனந்தை, (என இவை முப்பத்திரண்டும்)
குறிஞ்சி யாழ்த் திறமாகக் கூறுவர்.
*(32 பெயர்கள்)* *281*

### மருத யாழ்த் திறன் வகை

தக்கேசி, கொல்லி, ஆரிய குச்சரி,
நாக தொனி, சாதாளி, இந்தளம், தமிழ் வேளர்
கொல்லி, காந்தாரம், கூர்ந்த பஞ்சமம், பாக்கழி,
தந்தள பஞ்சமம், மாதுங்க ராகம்,
கௌசிகம், சீகாமரம், சாரல், சாங்கிமம்,
(என இவை பதினாறும்) மருத யாழ்த் திறனே.
*(16 பெயர்கள்)* *282*

### செவ்வழி யாழ்த் திறன் வகை

குறண்டி, ஆரிய வேளர் கொல்லி,
தனுக் காஞ்சி, இயந்தை, யாழ் பதங் காளி,
கொண்டைக் கிரி, சீவனி, யாமை, சாளர்,
பாணி, நாட்டம், தாணு, முல்லை,
சாதாரி, பைரவம், காஞ்சி, (என இவை
பதினாறும்) செவ்வழி யாழ்த் திறம் (என்ப).
*(16 பெயர்கள்)* *283*

### மற்றும் பெரும் பண்ணின் திறத்தின் பெயர்

தாரப் பண்திறம், பையுள் காஞ்சி,
படுமலை (இவை நூற்று மூன்று திறத்தன).
*(103 பெயர்கள்)* *284*

### நேர் திறம்

துக்கராகம், நேர் திறம் (ஆகும்). *(1 பெயர்)* *285*

### காந்தார பஞ்சமம்

உறழ்ப்பு, காந்தார பஞ்சமம் (ஆகும்).
*(1 பெயர்)* *286*

### சோமராகம்

குறுங்கலி, (என்பது) சோமராகம். *(1 பெயர்)* *287*

### காந்தாரம்

சாரல் திறம் (எனின் அது), காந்தாரம். *(1 பெயர்)* *288*

### நட்ட பாடை

நைவளம் (என்பது), நட்டபாடை. *(1 பெயர்)* *289*

### பழம் பஞ்சுரம்

பஞ்சுரம், பழம் பஞ்சுரம் (ஆகும்மே).
*(1 பெயர்)* *290*

### கவ்வாணம்

படு மலை, (என்பது பகரில்) கவ்வாணம்.
*(1 பெயர்)* *291*

### அனுத்திர பஞ்சமம்

அயிர்ப்பு, அனுத்திர பஞ்சமம் (ஆகும்).
*(1 பெயர்)* *292*

### குறிஞ்சி

அரற்று, குறிஞ்சி. *(1 பெயர்)* *293*

### செந்துருதி

செந்திறம், செந்துருதி. *(1 பெயர்)* *294*

### தக்கேசி

நவிர், தக்கேசி. *(1 பெயர்)* *295*

### வடுகு

இந்தளம், வடுகு (எனல்). *(1 பெயர்)* *296*

### பாக்கழி

வஞ்சி, பாக்கழி. *(1 பெயர்)* *297*

### சிகண்டி

செய் திறம், சிகண்டி. *(1 பெயர்)* *298*

### சாதாரி, நேர்திறம்

முல்லை, சாதாரி; புற நீர்மை, நேர்திறம்
(என ஆங்கு இசைப்பர் இசை வல்லுநரே).
*(1, 1 பெயர்கள்)* *299*

### நால்வகை யாழ்

பேரி யாழும், சகோட யாழும்,
மகர யாழும், செங்கோட்டு யாழும், (என
நால்வகை யாழின் (நாமம்) (ஆகும்).
*(4 பெயர்கள்)* *300*

### ஏழ் இசை

குரலே, துத்தம், கைக்கிளை, உழையே,
இளியே, விளரி, தாரம், (என்று இவை)
ஏழும் யாழின் இசை (கெழு நரம்பே).
*(7 பெயர்கள்)* *301*

### அவற்றுள் செம்பாலை வகை

குரல் குரல் ஆகில், செம்பாலை (என்ப). *302*

### படுமலைப் பாலை வகை

துத்தம் குரல் ஆகில், படுமலைப் பாலை. *303*

### செவ்வழிப் பாலை வகை

கைக்கிளை குரலேல், செவ்வழிப் பாலை. *304*

### அரும் பாலை வகை

உழை குரல் ஆகில், அரும் பாலை என்ப. *305*

### கொடிப் பாலை வகை

இளி குரல் ஆகில், கொடிப் பாலை (என்ப). *306*

### விளரிப் பாலை

விளரி குரல் ஆகின், விளரிப் பாலை. *307*

### மேற் செம்பாலையின் வகை

தாரம் குரலேல், மேற்செம் பாலை. *308*

### ஏழ் பாலைகளுள் இதனின் இது வலிது எனல்

(ஆயவை ஏழும் பாலை; அவற்றுள்)
செம்பாலைக்குப் படுமலைப் பாலை;
படுமலைப் பாலைக்குச் செவ்வழிப் பாலை;
செவ்வழிப் பாலைக்கு அரும் பாலை (ஆகும்;)
அரும் பாலைக்குக் கொடிப் பாலை (வலிதே;)
கொடிப் பாலைக்கு விளரிப் பாலை;
விளரிப் பாலைக்கு மேற் செம்பாலை
(வலிது என்று உரைத்தனர் வான் தமிழ்ப் புலவர்.) *309*

### ஏழ் இசை தம்மின் பிறக்கும் வகை

தாரத்துள் உழையும், உழையுள் குரலும்,
குரலுள் இளியும், இளியுள் துத்தமும்,
துத்தத்துள் விளரியும், விளரியுள் கைக்கிளையும்,
(தம்மில்) பிறக்கும் (தகுதிய என்ப). *310*

### இவற்றின் பிறப்பிடம்

குரல் (அது) மிடற்றில், துத்தம், நாவினில்
கைக்கிளை அண்ணத்தில், சிரத்தில் உழையே,
இளி நெற்றியினில், விளரி நெஞ்சினில்,
தாரம் நாசியில் (தம்) பிறப்பு (என்ப). *311*

### இவற்றின் மாத்திரைகள்

நான்கும் நாலும் மூன்றும் இரண்டும்
நான்கும் மூன்றும் இரண்டும் மாத்திரை
(குரல் முதலாகக் கூறும் என்ப). *312*

### ஏழ் இசை ஓசை

(வேண்டிய) வண்டும், (மாண் தகு) கிளியும்,
குதிரையும், யானையும், குயிலும், தேனுவும்,
ஆடும் (என்று இவை) ஏழ் இசை ஓசை.
*(7 பெயர்கள்)* *313*

### இவற்றின் எழுத்து

ஆ, ஈ, ஊ, ஏ, ஐ, ஓ, ஔ (என்று
ஏழும்) ஏழ் இசைக்கு (எய்தும்) அக்கரங்கள்.
*(7 பெயர்கள்)* *314*

### ஏழ் இசைக்கு உரிய மணங்கள்

மௌவல், முல்லை, (செவ் விணர்க்) கடம்பு,
வஞ்சி, நெய்தல், வனசம், புன்னை,
(எஞ்சல் இல்லா) ஏழ் இசை மணமே.
*(7 பெயர்கள்)* *315*

### இவைகளின் சுவை

பாலும், தேனும், கிழானும், நெய்யும்,
ஏலமும், வாழையும், மாதுளங் கனியும்,
(ஆகும்) ஏழ் இசைக்கு அமைந்த நன் சுவையே.
*(7 பெயர்கள்)* *316*

### இவைகளுக்கு இறைவர்

விசுவாமித்திரன், இயமன், அங்கி,
திங்கள், வெய்யோன், கௌதமன், காசிபன்,

(என்று இவர்) ஏழ் இசைக்கு இறைவர் (என்ப).
(7 பெயர்கள்) 317

**மந்த இசை**

மந்தரம், காகுளி, மந்த இசையே.
(2 பெயர்கள்) 318

**சமன் இசை**

மதுரம், துத்தம், மத்திமம், சமன் இசை.
(3 பெயர்கள்) 319

**வல் இசை**

தாரமும், உச்சமும், வல் இசை (ஆகும்).
(2 பெயர்கள்) 320

**இசை விகற்பம்**

ஏனே, (ஓர்) இசை விகற்பம் (என்ப).
(1 பெயர்) 321

**குரற்கு உரிய திறம்**

குரற்கு உரிய திறம், ஆசான் திறமே.
(1 பெயர்) 322

**இரு துறையின் வகை**

இரு துறை, செந்துறை, வெண் துறை (என்ப).
(2 பெயர்கள்) 323

**பண் என்பது**

நிறைந்த நரம்பு, (நிகழும்) பண் (எனல்).
(1 பெயர்) 324

**திறம் என்பது**

குறைந்த நரம்பு, திறம் (எனக் கொள்க).
(1 பெயர்) 325

**யாழ் எழும் இன்னிசை**

எழாலே, யாழ் எழும் இன்னிசை (என்ப).
(1 பெயர்) 326

**இசைக் குழல்**

வாரி, வங்கியம், (மற்று இவை) இசைக் குழல்.
(2 பெயர்கள்) 327

**வீணை**

வீணை, கின்னரம், தண்டும் (ஆகும்).
(2 பெயர்கள்) 328

**யாழ்**

தந்தி, வீணை, கின்னரம், கோட்டம்,
கோடவதி, விவஞ்சி, யாழ்ப் (பெயர்) (கூறும்). 329

**மற்றும் யாழ்**

(அறி) கலமும், கருவியும் (அப் பெயர்க்கு உரித்தே).
(8 பெயர்கள்) 330

**யாழ் வலிக் கட்டு**

வலிக் கட்டு, திவவே. (1 பெயர்) 331

**முறுக்கு ஆணி**

முறுக்கு ஆணி, மாடகம். (1 பெயர்) 332

**நரம்பு**

கோலே, தந்திரி, குரல், (இவை) நரம்பே.
(3 பெயர்கள்) 333

**ஆதி யாழ்**

ஆயிரம் நரம்பிற்று, ஆதி யாழ் (ஆகும்). 334

**உள்ளோசை**

முரல்வும், நரல்வும், தெளிரும், ஞெளிரும்,
விழைவும், நுணுக்கமும், உள்ளோசை (என்ப).
(6 பெயர்கள்) 335

**பல் இயம் தழுவு பாடல்**

சங்கீதம், பல் இயம் தழுவு பாடல்.
(1 பெயர்) 336

**ஆடற்கு ஏற்கும் பாட்டு**

செந்துறைப் பாட்டே, ஆடற்கு ஏற்பது.
(1 பெயர்) 337

**பாடற்கு ஏற்கும் பாட்டு**

வெண்துறைப் பாட்டே, பாடற்கு ஏற்பது.
(1 பெயர்) 338

**அக மார்க்கம்**

அருமையில் பாடல், அக மார்க்கம் (ஆகும்).
(1 பெயர்) 339

**யாழ் நரம்பு ஓசை**

கலித்தல், சும்மை, கம்பலை, அழுங்கல்,
சிலைத்தல், துவைத்தல், சிலம்பல், இரங்கல்,
இமிழ்தல், விம்மல், இரட்டல், ஏங்கல்,
கனைத்தல், தழங்கல், கறங்கல், அரற்றல்,
இசைத்தல், (என்று இவை) யாழ் நரம்பு ஓசை.
(17 பெயர்கள்) 340

**ஒலி**

ஓதை, நாதம், கம்பலை, சும்மை,
ஆகுலம், புலம்பல், கோடணை, அரவம்,
ஓசை, கர்ச்சனை, ஒலி (ஆகும்மே).
(10 பெயர்கள்) 341

**திரட்டோசை**

அலறல், கூப்பிடல், தெழித்தல், உரப்பல்,
பிளிறல், (என்று இவை) திரட்டோசை (ஆகும்).
(5 பெயர்கள்) 342

### 10-வது நாடக வகை

**கூத்து**

நடமே, நாடகம், நடனம், நட்டம்,
படிதம், மண்டிலம், தாண்டவம், பரதம்,
நிலையம், நிருத்தம், ஆடல், தூக்கு,
ஆலுதல், துணங்கை, அவிநயம், இலயம்,
பாணி, குரவை, கூத்து (எனப் பகர்வர்).
(18 பெயர்கள்) 343

**கூத்தின் விகற்பம்**

கரணம், உப்பிதம், மலைப்பு, புரியம்,
பிரமரி, வீரட்டானம், குனிப்பு,
உள்ளானம், கடகம், இலயம், (என்ப
ஒள்ளிய) கூத்தின் விகற்பம் (ஆகும்).
(10 பெயர்கள்) 344

**சிரமம் செய்தல்**

பருமித்தல், சிரமம் செய்தல் (என்ப).
(1 பெயர்) 345

**சிவன் ஆடல்**

பாண்டரங்கம், காபாலம், கொடுகொட்டி,
(ஆண்ட) சிவனது ஆடல் (ஆகும்).
(3 பெயர்கள்) 346

**பதினேர் உருத்திரர் ஆடல்**

கொட்டி, குரவை, குடம், குடை, வெறியே,
மல்லு, பேடு, பாவை, கடையம், பாண்டரங்கம்,
மரக்கால், ஈசர் பதினேர் ஆடல்.
(11 பெயர்கள்) 347

**மாயோன் ஆடல்**

அல்லியம், குடமாடல், மல்லே, மரக்கால்,
(அல் ஒளி) மாயோன் ஆடல் (ஆகும்).
(4 பெயர்கள்) 348

**திருமகள் ஆடல்**

பாவை, (என்பது) திருமகள் ஆடல்.
(1 பெயர்) 349

**முருகன் ஆடல்**

கொட்டியும், குடையும், குமரன் ஆடல்
(ஒட்டிய) துடியும் (உரித்து ஆகும்மே).
(3 பெயர்கள்) 350

**காமன் ஆடல்**

பேடு ஆடல், காமனது ஆடல் (ஆகும்).
(1 பெயர்) 351

**அயிராணி ஆடல்**

அயிராணி ஆடல் (பெயர்), கடையம் (ஆகும்).
(1 பெயர்) 352

**துர்க்கை ஆடல்**

துர்க்கை ஆடல், மரக்கால் (என்ப). (1 பெயர்) 353

**சத்த மாதர் ஆடல்**

எழு வகை நங்கைமார் ஆடலும், துடியே.
(1 பெயர்) 354

**கை கோத்து ஆடல்**

குரவைக் கூத்தே, கை கோத்து ஆடல். (1 பெயர்) 355

**முடக்கிய இருகை பழுப் புடை ஒற்றி ஆடல்**

முடக்கிய இரு கை பழுப் புடை ஒற்றித்
தொடக்கிய நடையது, துணங்கை (ஆகும்).
(1 பெயர்) 356

**வேலன் ஆடல்**

அணங்கும், வெறியும், கழங்கும், வேலன் ஆடல்.
(3 பெயர்கள்) 357

**ஒத்து அறுத்தல்**

வட்டித்தல், தட்டல், வட்டணை, ஒத்து அறுத்தல்.
(3 பெயர்கள்) 358

**கை குவித்துக் கொட்டல்**

கொம்மை கொட்டல், கை குவித்துக் கொட்டல்.
(1 பெயர்) 359

**ஆர்த்து வாய் கொட்டல்**

ஆவலம் கொட்டல், ஆர்த்து வாய் கொட்டல்.
(1 பெயர்) 360

**குந்தி நிற்றல்**

குந்திய கால் நிலை, குஞ்சித்தல் (ஆகும்).
(1 பெயர்) 361

**கை கூப்பி மெய் கோட்டி நிற்றல்**

குடந்தம், கை கூப்பி மெய் கோட்டி நிற்றல்.
(1 பெயர்) 362

**கூத்தாடல்**

அகவல், தாண்டல், ஆடுதல், நடித்தல்,
அசைதல், பெயர்தல், அடுத்தல், கூத்து ஆடல். 363

**மற்றும் கூத்து ஆடல்**

மாறல் (என்பதும் கூறல் ஆகும்).
(8 பெயர்கள்) 364

**தாள ஒத்து**

சதியும், சீரும், தாள ஒத்தின் (பெயர்).
(2 பெயர்கள்) 365

**நாடகம்**

அதினின் நடிக்கும் நடம், நாடகம் (ஆகும்)
(1 பெயர்) 366

### 11. மண்டில வகை

**வில் தொடுத்து அம்பினை எய்வார்க்கு உரிய நால்வகை நிலை**

(நவை அறு) பைசாச நிலையும், மண்டிலமும்,
ஆலீட நிலையும், பிரத்தியாலீடமும்,
(எனக் கொளும் நிலையும்) ஒரு நால் வகையே.
(4 பெயர்கள்) 367

**அவற்றுள் பைசாச நிலை வகை**

ஒரு கால் நிலை நின்று ஒரு கால் முடக்கும்
பரிசாய நிலையது, பைசாச நிலையே. 368

**மண்டில நிலை வகை**

இரு கால் மண்டிலித்திடுதல், மண்டில நிலை. 369

**ஆலீட நிலை வகை**

வலக் கால் மண்டிலித்து இடக் கால் முந்துறில்,
(அதன் பெயர்) ஆலீட நிலை அது (ஆகும்.) 370

**பிரத்தியாலீட நிலை**

வலக்கால் முந்துற்று இடக் கால் மண்டிலித்
திடல் (பெயர்), பிரத்தியாலீட நிலையே. 371

### 12. படை வகை

**போர்**

யுத்தம், ஆகவம், தும்பை, சமரம்,
கணையம், செரு, சங்கிராமம், இகல், எதிர்,
ஞாட்பு, பூசல், ஆயோதனம், அடல், அமர்,
இரணம், மலைதல், (ஆம் இன்னவை) போரே.
(16 பெயர்கள்) 372

**புறவகை**
**(வெண்பா)**

வெட்சி நிரை கவர்தல், மீட்டல் கரந்தையாம்,
வட்கார்மேல் செல்வது வஞ்சியாம்,– உட்காது
எதிர் ஊன்றல் காஞ்சி, எயில் காத்தல் நொச்சி,
அது வளைத்தல் ஆகும் உழிஞை, அதிரப்
பொருவது தும்பையாம், போர்க் களத்து மிக்கோர்
செரு வென்றது வாகை ஆம்.
(8 பெயர்கள்) 373

**புறப் புற வகை**

வாகை, பாடாண், பொது வியல் (திணை எனப்
போகிய மூன்றும்) புறப் புறம் (ஆகும்).
(3 பெயர்கள்) 374

**நால் வகைப் படை**

(கோலத்) தேர், சரி, குதிரை, காலாள்,
நால் வகைப் படையின் (நாமம் ஆகும்).
(4 பெயர்கள்) 375

**தேர்**

குயவு, வையம், கொடிஞ்சி, சயந்தனம்,
திகிரி, யந்திரம், கவரி,அரி, இரதம், தேர். 376

**மற்றும் தேர்**

கூவிரம் (என்பதும் ஓர் வழிக் கொளலே).
(10 பெயர்கள்) 377

**தேர் உருள்**

உருளி, கால், ஆழி, பரிதி, உந்தி,
திகிரி, சில்லி, நேமி, தேர் உருளே.
(8 பெயர்கள்) 378

**தேர் உருளின் அகத்தில் செறி கதிர்**

அகத்தில் செறி கதிர் ஆர் (எனல் ஆகும்).
(1 பெயர்) 379

**தேர்க் கொடிஞ்சி**

கூவிரம், கொடிஞ்சி. (1 பெயர்) 380

**தேர் மொட்டு**

கூம்பு, தேர் மொட்டே. (1 பெயர்) 381

**தேர் முட்டி**

பிரம்பு, தேர் முட்டி (என்னப் பேசுவர்).
(1 பெயர்) 382

**தேர் நடு**

நடுவண் தேர்ப் பெயர், நாப்பணும், தட்டும்.
(2 பெயர்கள்) 383

**தேர் மரச் சுற்று**

கிடுகு, (என் கிளவி) தேர் மரச் சுற்றே.
(1 பெயர்) 384

**தேர்ப் பலகைப் பா**

பாரே, பலகைப் பா (எனல் ஆகும்).
(1 பெயர்) 385

**தேர்ப் பரப்பு**

பாரே, தேரின் பரப்பும் (ஆகும்).
(1 பெயர்) 386

**அச்சுருவாணி**

அச்சே, தேரின் அச்சுருவாணி. (1 பெயர்) 387

**பரி பூண்ட தேர்**

பாண்டில், கஞ்சிகை, வையம், பரி பூண்ட தேரே.
(3 பெயர்கள்) 388

**பண்டி**

சகடம், ஒழுகை, சாகாடு, பண்டி.
(3 பெயர்கள்) 389

### பண்டி உள் இருசு

பண்டி உள் இருசு, கந்து (எனப் பகர்வர்).
(1 பெயர்) 390

### அரசுவாவின் இலக்கணம்

கால் ஓர் நான்கும், தனிக் கையும், கோசமும்,
வால் உறுப்போடு ஏழும் மா நிலம் தோய்வதும்,
பாலும், சங்கும் போலும் கால் உகிர்;
காலினும், தன் தனிக் கையினும், மெய்யினும்,
வாலினும், மருப்பினும், கோறல் வல்லதுவாய்;
ஏழ் முழம் உயர்ந்து, ஒன்பான் முழம் நீண்டு,
பதின்மூன்று முழம் சுற்று உடைத்தாகி,
தீ உமிழ் சிறு கண்ணும், செம் புகரும் உடைத்தாய்,
முன்னபு உயர்ந்து பின்ன் பணித்து ஆயது
யானை, அரசுவா (ஆகும் என்ப). 391

### அரசர்க்கு உரிய பரியின் இலக்கணம்

மாதர்தம் மணம் என மிக்க மணத்தது;
வாழை மடல் என வளர்ந்த செவியது;
நாலு தாளும், எருத்தும், முகனும்,
வெந்நும், முன்னும், வெண்மை உடையதாய்;
எண்பத்து இருவிரல் உயரம் உயர்ந்தது;
பண்புடை, அரசர்க்கு ஆவது பரியே. 392

### பரியின் கதி வகை

மல்ல கதியே, வானர கதியே,
மயூர கதியே, வல்லிய கதியே,
(மால்) விடைக் கதி, (என வரும் கதி ஐந்தும்)
(தோலாப்) புரவிக்குச் (சொல்லிய) கதியே.
(5 பெயர்கள்) 393

## 13. காலாள் வகை

### பகைவர் மேல் செல்லல்

ஊராண்மை, (என்பது) ஓங்கிச் செல்லல்.
(1 பெயர்) 394

### பகைவரிடத்தில் செய்யும் அரிய செயல்

பேராண்மை, (என்பது) அரிய செயலே.
(1 பெயர்) 395

### புறங் கொடுத்தோர் மேல் ஆயுதம் எறியாமை

சாய்குநர்மேல் படை விடாமை, தழிஞ்சி.
(1 பெயர்) 396

### வெற்றிப் பூ

பூளை, வெற்றிப் பூ (ஆகும்மே).
(1 பெயர்) 397

### கொள்ளை

சூறையும், கொண்டியும், கொள்ளை ஆகும்.
(2 பெயர்கள்) 398

### வாரல்

வாரல், கவரல், வௌவல் (அது), கொளல்.
(3 பெயர்கள்) 399

### படை

தானை, பதாதி, தண்டம், பதாகினி,
வானி, அனிகம், வாகினி, தந்திரம்,
சேனை, பகுதி, பாடி, பலம், படை. 400

### மற்றும் படை

நிதானமும், ககனமும், தளமும் (நிகழ்த்தும்).
(15 பெயர்கள்) 401

### படை வகுப்பு

ஒட்டும், யூகமும், உண்டையும், அணியும்,
(மற்று இவை) படையின் வகுப்பு (எனல் ஆகும்).
(4 பெயர்கள்) 402

### படை உறுப்பு

தூசியும், கூழையும், நெற்றியும், கையும்,
அணியும், (என்பது அப்) படைக்கு உறுப்பே.
(5 பெயர்கள்) 403

### பேர் அணி

கூழை, (என்பது) பேர் அணி (ஆகும்).
(1 பெயர்) 404

### கொடிப் படை

தாரே, (முன் செல்) கொடிப் படை (ஆகும்).
(1 பெயர்) 405

### கீழ் அறுத்தல்

அறை போதல், கீழ் அறுத்தல், படை மறுத்தல் (ஆகும்).
(2 பெயர்கள்) 406

### பொர அழைத்தல்

அறை கூவல், (என்பது) பொர அழைத்தல் (ஆகும்).
(1 பெயர்) 407

## 14. தோல் கருவி வகை

### முழவு

முழவு, குளிரே. (1 பெயர்) 408

### குட முழா

மண்கணை, முழவம், குடமுழா (ஆகும்).
(2 பெயர்கள்) 409

### படகம்

பணவம், திண்டிமம், ஆனகம், படகம்.
(3 பெயர்கள்) 410

**கடிப்பு**

குணிலே, கடிப்பின் (கூற்று ஆகும்மே).
(1 பெயர்) 411

**சிறு பறை**

ஆகுளி, சிறு பறை. (1 பெயர்) 412

**திமிலே**

சல்லரி, திமிலே. (1 பெயர்) 413

**ஒரு கண் பறை**

ஒரு கண் பறையே, மொந்தை (என்ப).
(1 பெயர்) 414

**நிசாளம்**

தண்ணுமை, நிசாளம். (1 பெயர்) 415

**ஒரு பறை விகற்பம்**

ஒரு பறை விகற்பம், தாழ் பீலி (ஆகும்).
(1 பெயர்) 416

**பன்றிப் பறை**

பன்றிப் பறையே, குடப் பறை (ஆகும்).
(1 பெயர்) 417

**கரடிப் பறை**

கரடி (நாமக் கட்டுரை), தட்டை. (1 பெயர்) 418

**ஒரு கண் பகு வாய்ப் பறை**

பதலே, ஒரு கண் பகுவாய்ப் பறையே.
(1 பெயர்) 419

**துந்துபி**

சகண்டை, முரசு, பணையே, சகடம்,
துந்துபி (என்ப), தூரியமும் (ஆகும்). 420

**மற்றும் துந்துபி**

பேரி, தகணிதம் (என்னவும் பேசுவர்).
(7 பெயர்கள்) 421

**உவகைப் பறை**

உவகைப் பறையே, தூரியம் (ஆகும்).
(1 பெயர்) 422

**உடுக்கை**

துடியே, உடுக்கை. (1 பெயர்) 423

**பம்பைப் பறை**

தடாரி, பம்பைப் பறை. (1 பெயர்) 424

**தம்பட்டம்**

முரசு, தம்பட்டம், முழவும் (ஆகும்).
(2 பெயர்கள்) 425

**தலேவிரி பறை**

(குழை உடல்) தலே விரி பறை, கத்திரியே.
(1 பெயர்) 426

**மரக்கால் பறை**

மரக்கால் பறையே, கோதை (ஆகும்).
(1 பெயர்) 427

**பலவகைப் பறை**

பணவம், திண்டிமம், தக்கை, இடக்கை,
திமிலே, கண்டிகை, கண்டை, குறடு,
பணே, சிந்தூரம், பாண்டிகம், பீலி,
கரடிகை, துடிகை, கடுவை, ஊமை,
சகடை, கிடுகு, பல் வகைப் பறையே.
(18 பெயர்கள்) 428

**வாச்சியப் பொதுப் பெயர்**

தூரியம், முழவம், வைரம், கோடணே,
முரசு, பீலி, முருடு, தடாரி,
இயம், பணே, வாச்சியப் பொதுப் பெயர் (என்ப).
(10 பெயர்கள்) 429

## 15. குடை வகை

**குடை**

கவிகை, சத்திரம், பிச்சம், கவிப்பு,
(குளிர்) ஆதபத்திரம், தொங்கல், குடைப் (பெயர்).
(6 பெயர்கள்) 430

**செங் குடை**

செங் குடை, மீயையும், சிந்தூரமும் (ஆகும்).
(2 பெயர்கள்) 431

**பீலிக் குடை**

(துங்கப்) பீலிக் குடை, சுழல் (ஆகும்).
(1 பெயர்) 432

**பீலிக் குஞ்சக் குடை**

தழையே, தொங்கல், சமாலம், பிச்சம்,
குளிரி, பீலிக் குஞ்சம் (ஆகும்). (5 பெயர்கள்) 433

## 16. ஆயுத வகை

**வில்**

கோதண்டம், சிலே, கொடு மரம், கார் முகம்,
சாபம், துரோணம், தனு, வில் (ஆகும்). 434

**மற்றும் வில்**

தடி, முனி, சிந்துவாரம், சராசனம்,
தவரே, வேணு, சார்ங்கமும் (ஆகும்).
(14 பெயர்கள்) 435

**நாண்**

பூரி, ஆவம், பூட்டு, தொடை, வடம்,
நாரி, நரம்பு, குணம், நாணின் பெயரே.
(8 பெயர்கள்) 436

**நாண் ஒலி**

நாணின் ஒலியே, மருமராஞ்சம் (ஆகும்).
(1 பெயர்) 437

**அம்பு**

பகழி, வாளி, தோணி, பாணம்,
கதிரம், பல்லம், கணை, கோல், சரமொடு,
வண்டு, பத்திரம், சிலீமுகம், விசிகம்,
அம்பின் (பெயர்), உடு (ஆகலும் உரித்தே).
(14 பெயர்கள்) 438

**அம்புத் தலை**

உடு, அம்புத் தலை. (1 பெயர்) 439

**மொட்டம்பு**

உதண், மொட்டம்பே. (1 பெயர்) 440

**அம்புக் குப்பி**

புழுகு, குப்பி. (1 பெயர்) 441

**அம்புக் கட்டு**

புதை, அம்புக் கட்டே. (1 பெயர்) 442

**அம்புக் குதை**

பகழி, புங்கம், அம்புக் குதையே. (2 பெயர்கள்) 443

**அம்புத் திரள் கட்டும் கயிறு**

பகழித் திரளின் (பெயர்), பற்றுக்கை. (1 பெயர்) 444

**அம்பறாத் தூணி**

தூணி, புட்டில், அம்பறாத் தூணி. 445

**மற்றும் அம்பறாத் தூணி**

ஆவமும், ஆவ நாழிகையும் (ஆகும்).
(4 பெயர்கள்) 446

**குதை**

குலையே, (வில்லில் இருதலைக்) குதையே.
(1 பெயர்) 447

**அம்பின் இறகு**

அம்பின் இறகு, உடு (என்று ஆகும்). (1 பெயர்) 448

**பிண்டி பாலம்**

பீலித் தண்டு, எஃகம், பிண்டி பாலம்.
(2 பெயர்கள்) 449

**நாராசம்**

சலாகை, நாராசம். (1 பெயர்) 450

**இருப்பு முள்**

தாறு, இருப்பு முள்ளே. (1 பெயர்) 451

**கழு முள்**

கழுக்கடை, கழு முள் (கட்டுரை ஆகும்).
(1 பெயர்) 452

**வாள்**

நவிர், ஏதி, நாட்டம், கடுத்தலை, நாந்தகம்,
வசியே, கட்கம், வஞ்சம், வாளே. 453

**மற்றும் வாள்**

மட்டாயுதம், தூவத்தியும் (ஆகும்).
(10 பெயர்கள்) 454

**கூன் வாள்**

கோணம், கூன் வாள். (1 பெயர்) 455

**சிறு வாள்**

முசுண்டி, சிறு வாள். (1 பெயர்) 456

**கொடு வாள்**

குயமும், புள்ளமும், கொடு வாள் (ஆகும்).
(2 பெயர்கள்) 457

**அரி வாள்**

அரி கதிர் கத்திக்கும் அப் பெயர் (ஆகும்).
(2 பெயர்கள்) 458

**சுழல் படை**

சுழல் படை, வட்டம், பாரா வளையம்.
(2 பெயர்கள்) 459

**ஈர் வாள்**

வேதினம், கரபத்திரமும், ஈர் வாள்.
(2 பெயர்கள்) 460

**உடை வாள்**

சுரிகை, பத்திரம், குறும் பிடி, உடைவாள்.
(3 பெயர்கள்) 461

**கை வாள்**

கண்டம் (என்பது), கை வாள் (ஆகும்).
(1 பெயர்) 462

**கணையம்**

எழுவும், பரிகமும், கணையம் (என்ப).
(2 பெயர்கள்) 463

**சூலம்**

காளம், நல்வசி, சூலம், கழு முள்,
மூ இலை வேல், முத்தலை, கழு, (எனல்).
(6 பெயர்கள்) 464

### பூங் கருவி

சன்னகம், பூங் கருவி (ஆகச் சாற்றும்).
(1 பெயர்) 465

### மழு

பரசு, கணிச்சி, நவியமும், மழுவே. 466

### மற்றும் மழு

பாலம், தண்ணமும், மழுப் படை (ஆகும்).
(5 பெயர்கள்) 467

### இலே மூக்கு அரி கத்தி

குளிர், இலே மூக்கு அரி கத்தி (ஆகும்),
கணிச்சியும் (அதன்பால் கருதப்படுமே).
(2 பெயர்கள்) 468

### கோடாலி

குடாரமும், நவியமும், கோடாலி (ஆகும்).
(2 பெயர்கள்) 469

### தோட்டி

சரணம், கணிச்சி, அங்குசம், தோட்டி. 470

### மற்றும் தோட்டி

கோணம் (என்றும் கூறப்படுமே).
(4 பெயர்கள்) 471

### வேல்

உடம்பிடி, எஃகம், அயிலே, சத்தி,
விட்டேறு, அரணம், ஞாங்கரும், வேலே.
(7 பெயர்கள்) 472

### வச்சிராயுதம்

வயிரப் படையே, சம்பம், குலிசம்,
அசனி, வச்சிரப் படை (ஆகும்மே). 473

### மற்றும் வச்சிராயுதம்

சதகோடி (என்பதும் சாற்றப் பெறுமே).
(5 பெயர்கள்) 474

### தண்டாயுதம்

தடியும், கதையும், சீரும், தண்டு எனல். 475

### மற்றும் தண்டாயுதம்

வயிரமும், முளையும், எறுழும், (மற்று அதுவே).
(6 பெயர்கள்) 476

### கிளி கடி கருவி

தழலும், தட்டையும், கிளி கடி கருவி.
(2 பெயர்கள்) 477

### குறுந் தடி

குணிலே, குறுந் தடி. (1 பெயர்) 478

### ஈட்டி

இட்டி, ஈட்டி. (1 பெயர்) 479

### கவண்

கவணே, ஒடிசில், குணில், குளிர், கவணே.
(4 பெயர்கள்) 480

### சிறு சவளம்

குந்தம், சிறு சவளம். (1 பெயர்) 481

### பெருஞ் சவளம்

குந்தம், தோமரம், பீலி, பெருஞ் சவளம்.
(3 பெயர்கள்) 482

### சக்கரம்

திகிரி, நேமி, ஆழி, எஃகம், வளே,
பரிதி, ஒளிவட்டம், சுதரிசனம், சக்கரம்.
(8 பெயர்கள்) 483

### கைக் கட்டி

கோதை, கைக் கட்டி, கைப்புடையும் (கூறும்).
(2 பெயர்கள்) 484

### கைவிடு படை

அத்திரம், விடு படை. (1 பெயர்) 485

### கை விடாப் படை

சத்திரம், விடாப் படை. (1 பெயர்) 486

### சுவர் அகழ் கருவி

கன்னம், சுவர் அகழ் கருவி (ஆகும்).
(1 பெயர்) 487

### தறிகை, உளி

தறிகை, கணிச்சி; உளிக்கும் (அதுவே).
(1 பெயர்) 488

### கை வேல்

கை வேல் (விகற்பம்), கப்பணம், தோமரம்.
(2 பெயர்கள்) 489

### கயிறு

பாசம், கச்சை, நாண், வடம், பழுதை,
தர்மம், இரச்சு, தாம்பு, கயிறே.
(8 பெயர்கள்) 490

### தாமணி

தாமணி, கண்ணி, தாம்பும் (ஆகும்).
(2 பெயர்கள்) 491

### வலேக் கயிறு

சாலம், (என்பது) கயிற்று வலேயே.
(1 பெயர்) 492

### அஞ்சனம் எழுதும் கருவி

கோலே, அஞ்சனம் எழுதும் கருவி.
(1 பெயர்) 493

### எழுதும் கருவி

கண்டம், ஊசி, ஆணி, எழுதும் கருவி.
(3 பெயர்கள்) 494

### ஊசி

சூசி, ஊசி (என்ப) (1 பெயர்) 495

### ஊசித் தொளை

பாசம், ஊசித் தொளை, துன்னமும் (பகரும்).
(2 பெயர்கள்) 496

### நுனி

நுதியும், நுனையும், நுனி (ஆகும்மே).
(2 பெயர்கள்) 497

### முசுண்டி

தானை, படையே, முற்கரம், முசுண்டி.
(3 பெயர்கள்) 498

### இருப்பு உலக்கை

முசலம், இருப்பு உலக்கை. (1 பெயர்) 499

### சங்கிலி

துவக்கு, தொடர், சங்கிலியே, இடங்கணி.
(3 பெயர்கள்) 500

### பற்று இரும்பு

கற்பொறி, அள், வலி, பற்று இரும்பு (ஆகும்).
(3 பெயர்கள்) 501

### கூர்மை

வயிரமும், வள்ளும், வசியும், வையும்,
அயிலும், நிசிதமும், அள்ளும், பூவும்,
ஆரும், கூர்மையின் (அபிதானம்மே).
(9 பெயர்கள்) 502

### ஆயுதப் பொதுப் பெயர்

தானை, படையே, படைக்கலம், கருவி,
எஃகு, (இவை) ஆயுதம், வேலும் (இயம்புவர்) 503

### மற்றும் ஆயுதப் பொதுப் பெயர்

துப்பும், ஏதியும், சுதன்மமும் (ஆகும்).
(9 பெயர்கள்) 504

### படை உறை

தடறும், கருவிப் புட்டிலும், உறை (எனல்).
(2 பெயர்கள்) 505

## 17. செயற்கை வகை

### கவசம்

ஆசு, தசனம், சடாரி, அரணம்,
பாசம், கண்டம், பருமம், கச்சை,
சாலிகை, மாடிகை, கந்தளம், பாரம்,
மேழகம், கசையே, மெய்புகு கருவி,
கவசப் (பெயரே), சுடாரியும், (சொல்லும்). 506

### மற்றும் கவசம்

அந்தளமும், அபரமும், சுரிகையும், (சொல்லும்).
(19 பெயர்கள்) 507

### கேடகம்

கேடயம், வட்டம், தட்டி, கடகம்,
வேதிகை, கிடுகு, பலகை, கேடகம்.
(7 பெயர்கள்) 508

### மாவட்டணம்

தட்டியம், பலகை, தட்டு, மாவட்டணம்.
(3 பெயர்கள்) 509

### தோல் பலகை

தோற்பரம், தட்டு, தோல் பலகை, தோலும் (ஆம்).
(3 பெயர்கள்) 510

### யானைப் புரசைக் கயிறு

தூசு, கவடு, புரசைக் கயிறு (எனல்).
(2 பெயர்கள்) 511

### யானை முக படாம்

சூழி, படமே, வேழ முக படாம். 512

### மற்றும் யானை முக படாம்

(மலையின்) மந்தனம் (என்றும் சொல்லும்).
(3 பெயர்கள்) 513

### யானை கட்டும் தறி

ஆளானம், வெளிலே, யானை அணை தறி.
(2 பெயர்கள்) 514

### யானைக் கச்சை

கரியின் கச்சை, கண்டம் (ஆகும்).
(1 பெயர்) 515

### யானை மேல் தவிசு

இலகடம், பலகாரம், தவிசு (எனல் ஆகும்). 516

### மற்றும் யானை மேல் தவிசு

மணையும், பலகையும், (அப் பெயர் கூறும்).
(4 பெயர்கள்) 517

#### குதிரைக் கலணை

பருமமும், பண்ணும், படையும், பல்லணமும்,
பரமும், (என்று இவை) பரிமாக் கலணை. 518

#### மற்றும் குதிரைக் கலணை

சூழியும், பரிமாக் கலணை (ஆகும்).
(6 பெயர்கள்) 519

#### குதிரை அங்க அடி

கச்சமும், படியும், அங்க அடி (என்ப).
(2 பெயர்கள்) 520

#### குதிரைச் சம்மட்டி

மத்திகை, கோலே, (மற்று இவை) சம்மட்டி.
(2 பெயர்கள்) 521

#### குதிரைக் கயிறு

வற்கம், வாய் வட்டம், குசை, கயிறு (என்ப).
(3 பெயர்கள்) 522

#### குதிரைக் கடிவாளம்

கலியமும், மூட்டும், கிராமும், கலினமும்,
கறுழும், (என்று இவை) கடிவாளப் (பெயர்).
(5 பெயர்கள்) 523

#### கடிவாளப் பூண்

(மற்று) அதற்கு அணியும், விருளே (எனல் ஆகும்).
(1 பெயர்) 524

#### கலப்பை

படை, அலம், தொடுப்பு, படைவாள், நாஞ்சில்,
இலாங்கலி, ஆலம், உழுபடை, கலப்பை. 525

#### மற்றும் கலப்பை

கலனே (என்பதும் கலப்பைப் பேரே).
(9 பெயர்கள்) 526

#### மேழி

கொடு நுகம், மேழிக் (கூற்று ஆகும்மே).
(1 பெயர்) 527

#### குறுந்தறி

போதிகை, குறுந் தறி. (1 பெயர்) 528

#### வேள்வித் தறி

யூபம்,வேள்வித் தறி. (1 பெயர்) 529

#### தூண்

தாணுவும், காலும், கம்பமும், தம்பமும்,
ஆளானம், மதலே, எழு, வெளிலே, தறி,
தூண் (என்று உரைப்பர்), கந்தும் (சொல்லும்).
(10 பெயர்கள்) 530

#### தொழு

தொழுவின் (பெயரே), தோழம் (ஆகும்).
(1 பெயர்) 531

#### யானைத் தோட்டி

(யானையின்) குடாரி, அங்குசம், தோட்டி
கோணம், யானை வணக்கியும் (கூறும்).
(4 பெயர்கள்) 532

#### அடை குறடு

அடை குறட்டின் பெயர், பட்டடை (ஆகும்).
(1 பெயர்) 533

#### பெருங் குறடு

(கூறின்) முருடு, பெருங் குறடு (என்ப).
(1 பெயர்) 534

#### சம்மட்டி

(கொட்டும்) சம்மட்டி, கூடம் (என்ப).
(1 பெயர்) 535

#### சுட்டுக் கோல்

சுட்டுக் கோல், ஆணி. (1 பெயர்) 536

#### கொழு

கோல், கொழு (என்ப). (1 பெயர்) 537

#### ஒண்டி

ஊற்றாணி, ஒண்டி. (1 பெயர்) 538

#### பாரைக் கோல்

மீன் குத்தி, பாரைக் கோல். (1 பெயர்) 539

### 18. அக்குரோணி வகை

#### பதாதி

ஒரு பெருங் களிறும், ஒரு பெருந் தேரும்,
புரவி மூன்றும், படைஞர் ஐவரும்,
பதாதி (என்று பகரப்படுமே). 540

#### சேனாமுகம்

பதாதி மும்மடி, சேனாமுகமே. 541

#### குமுதம்

சேனாமுகம் மும்மடி (தான் ஆம்), குமுதம். 542

#### கணகம்

குமுதம் மும்மடி (கொண்டது), கணகம். 543

#### வாகினி

கணகம் மும்மடி (கொண்டது), வாகினி. 544

### பிரளயம்

வாகினி மும்மடி (ஆகும்), பிரளயம். 545

### சமுத்திரம்

பிரளயம் மும்மடி (கொண்டது), சமுத்திரம். 546

### சங்கம்

சமுத்திரம் மும்மடி (கொண்டது), சங்கம். 547

### அநீகம்

சங்கம் மும்மடி (கொண்டது), அநீகம். 548

### அக்குரோணி

அநீகம் மும்மடி, அக்குரோணி (ஆகும்.) 549

## 19. வெள்ள வகை

### அக்குரோணி எட்டுப் பங்கு கொண்டது

முந்தை எண் மடங்கு (கொண்டது ஒன்று), ஏகம். 550

### ஏகம் எட்டுப் பங்கு கொண்டது

ஏகம் எண் மடங்கு (கொண்டது), கோடி. 551

### கோடி எட்டுப் பங்கு கொண்டது

கோடி எண் மடங்கு (கொண்டது), சங்கம். 552

### சங்கம் எட்டுப் பங்கு கொண்டது

சங்கம் எண் மடங்கு (கொண்டது), விந்தம். 553

### விந்தம் எட்டுப் பங்கு கொண்டது

விந்தம் எண் மடங்கு (கொண்டது), குமுதம். 554

### குமுதம் எட்டுப் பங்கு கொண்டது

குமுதம் எண் மடங்கு (கொண்டது), பதுமம். 555

### பதுமம் எட்டுப் பங்கு கொண்டது

பதுமம் எண் மடங்கு (கொண்டது), நாடு. 556

### நாடு எட்டுப் பங்கு கொண்டது

நாடு எண் மடங்கு (கொண்டது), சமுத்திரம். 557

### சமுத்திரம் எட்டுப் பங்கு கொண்டது

சமுத்திரம் எண் மடங்கு (கொண்டது), வெள்ளம். 558

## 20-வது இல்லணி வகை

### கரும பூமியின் இயல்

உழவு, தொழிலே, வரைவு, வாணிகம்,
விச்சை, சிற்பம், (என்று இத் திறத்து) அறு தொழில்
கற்பனை உடையது, கரும பூமி. 559

### போக பூமி இயல்

பதினாறு ஆட்டைக் குமரனும், சிறந்த
பன்னீர் ஆட்டைக் குமரியும் ஆகி,
ஒத்த மரபினும், ஒத்த அன்பினும்,
கற்பக நல் மரம் நல் பயன் உதவ,
ஆகிய செய் தவத்து அளவும் அவ்வழிப்
போகம் நுகர்வது, போக பூமி. 560

### ஆசிரியர் கூற்று

(அந்தணர் அருமறை மன்றல் எட்டினுள்,)
பிரமம், தெய்வம், பிரசாபத்தியம்,
ஆரிடம், காந்தருவம், ஆசுரம், இராக்கதம்,
பைசாசம் (என்ன) எண் வகைப் படூஉம்
வதுவை (வகையின் மணம் ஒன்றுயினர்
வாழ்க்கை என்னும் இல்லற நல் நெறிக்கு
ஏற்பவை நாமத்து எஞ்சிய கூறுவன்). 561

### கட்டில்

கட்டில், பாரி, மஞ்சம், பரியங்கம், பாண்டில்.
(4 பெயர்கள்) 562

### விசி

(கட்டிலின்) விசியே, அரி (எனக் கழறும்).
(1 பெயர்) 563

### பீடம்

பீடிகை, தவிசு, விட்டரம், பீடம்.
(3 பெயர்கள்) 564

### சிங்காதனம்

பத்திராதனம், சிங்காதனம் (என்ப).
(1 பெயர்) 565

### உரல்

கறையும், உலூகலமும், திட்டையும், உரலே.
(3 பெயர்கள்) 566

### உலக்கை

முசலமும், தடியும், உரோங்கலும், உலக்கை.
(3 பெயர்கள்) 567

### உறி

சிமிலி, தூக்கு, சிக்கம், சிதர், உறி.
(4 பெயர்கள்) 568

### ஊஞ்சல்

ஊசல், ஊஞ்சல், தூரியும் (ஆகும்).
(2 பெயர்கள்) 569

### ஏணி

இறைவையும், கடவையும், ஏணி (ஆகும்).
(2 பெயர்கள்) 570

### கண் ஏணி

கண் ஏணிப் (பெயர்), மால்பு (என்று ஆகும்).
(1 பெயர்) 571

**அளவை**

கச்சமும், கடனும், அளவை (ஆகும்).
(2 பெயர்கள்) 572

**மரக்கால்**

அம்பணம், தூம்பு, கால் (ஆகலும் உரித்தே).
(2 பெயர்கள்) 573

**தூக்குக் கோல்**

நிறையே, கட்டளை, வாணிகன், நிறுப்பான்,
துலையே, கோலொடு, தூக்குக் கோலே.
(6 பெயர்கள்) 574

**கொத்தளிப் பாய்**

ஆரை, கொத்தளிப் பாய். (1 பெயர்) 575

**புல் பாய்**

சாப்பை, புல் பாய். (1 பெயர்) 576

**பிரப்பம் பாய்**

சாதி, பிரப்பம் பாய். (1 பெயர்) 577

**தோல் பாய்**

சருமம், தோல் பாய். (1 பெயர்) 578

**தடுக்கு**

தவிசு, தடுக்கே. (1 பெயர்) 579

**குழாய்**

தண்டு, குழாயே. (1 பெயர்) 580

**பூந் தட்டு**

பீடிகை, படலிகை, கோடிகம், பூந் தட்டு.
(3 பெயர்கள்) 581

**விளக்குத் தண்டு**

கௌசிகம், மல்லிகை, கம்பம், மத்திகை,
சுடர் நிலைத் தண்டு, (எனத்) தீபமும் (அதற்கே).
(5 பெயர்கள்) 582

**முறம்**

சின்னம், தட்டு, சேட்டை, முச்சில், முறம்.
(4 பெயர்கள்) 583

**சுளகு**

சூர்ப்பம், சுளகே. (1 பெயர்) 584

**புட்டில்**

இறைவை, புட்டில். (1 பெயர்) 585

**கூடை**

வட்டிகை, கூடை. (1 பெயர்) 586

**துடைப்பம்**

துடைப்பம், சோதனி, மாறு, அலகு, வாருகோல்.
(4 பெயர்கள்) 587

**நாழி**

வட்டி, குஞ்சம், படி, நாழி (ஆகும்).
(3 பெயர்கள்) 588

**தயிர் கடை தறி**

தயிர் கடை தறி, வெளில். (1 பெயர்) 589

**தயிர்க் கோல்**

தயிர்க் கோல், மத்து (ஆம்). (1 பெயர்) 590

**காராம்பி**

காராம்பி, அம்பி. (1 பெயர்) 591

**நீர்ப் பத்தல்**

பத்தல், அம்பணம். (1 பெயர்) 592

**கரண்டி**

கரண்டம், கரண்டி. (1 பெயர்) 593

**அம்மி**

அரைசிலை, அம்மி (ஆகலும் உரித்தே).
(1 பெயர்) 594

**அம்மிக் கல்**

அம்மிக் கல், குழவி. (1 பெயர்) 595

**சாணை**

சிலாவட்டம் (என்பது), சாணை (ஆகும்).
(1 பெயர்) 596

**சந்தனம் அரை கல்**

சாணம், சிலாவட்டம், சந்தனம் அரை கல்.
(2 பெயர்கள்) 597

**நாடா**

(காருகர்) நாடா, நூனாழி (ஆகும்). (1 பெயர்) 598

**இறை கூடை**

இடார், இறை கூடை. (1 பெயர்) 599

**சும்மாடு**

சுமடு, சுடுவும், சுமையடை, சும்மாடே.
(3 பெயர்கள்) 600

**பேர் ஆலவட்டம்**

ஆலவட்டம், உக்கம், தாலவிருந்தம். 601

**மற்றும் பேர் ஆலவட்டம்**

கால் செய் வட்டமும், (அப் பெயர் கழறும்).
(3 பெயர்கள்) 602

**சிற்றுலவட்டம்**

*சிவிறி, (என்பது) சிற்றுலவட்டம். (1 பெயர்) 603*

**சாந்தாற்றி**

*பீலி (என்பது), சாந்தாற்றி (ஆகும்).*
*(1 பெயர்) 604*

**சிப்பு**

*சிக்கம், மயிர்வாரி, கங்கம், சீப்பு (எனல்).*
*(3 பெயர்கள்) 605*

**திரிகை**

*வட்டமும், பந்தும், தட்டும், திரிகை.*
*(3 பெயர்கள்) 606*

**பந்து**

*கந்துகம், பந்து (எனல்). (1 பெயர்) 607*

**அம்மானை**

*அம்மனை, அம்மானை. (1 பெயர்) 608*

**மகளிர் விளையாட்டுக் கலம்**

*ஓரை, (என்பது) விளையாட்டு ஒண்கலம்.*
*(1 பெயர்) 609*

**கூத்தர் கருவி**

*கலப்பை, கூத்தர் கருவி (ஆகும்). (1 பெயர்) 610*

**நீர் சிதறும் துருத்தி**

*நீர் சிதறும் துருத்தி, சிவிறி (ஆகும்). (1 பெயர்) 611*

**செருப்பு**

*தொடு தோல், கழல், (இவை தோல்) செருப்பு (ஆகும்).*
*(2 பெயர்கள்) 612*

**மிதியடி**

*பாதுகை, மிதியடி, பாவலும் (ஆகும்).*
*(2 பெயர்கள்) 613*

**மிதியடியின் மேல் இட்ட கொட்டை**

*குடையே, கல்லை, கொட்டை (அதன் பெயர்).*
*(2 பெயர்கள்) 614*

**உலைத் துருத்தி**

*உதி, அத்திரி, சிவை, உலைத் துருத்திப் (பெயர்).*
*(3 பெயர்கள்) 615*

**கொல் உலை மூக்கு**

*குருகும், சிவையும், கொல் உலை மூக்கே.*
*(2 பெயர்கள்) 616*

**சுண்ணச் சாந்து**

*சுதையே, களபம், (சுடு) சுண்ணச் சாந்தே.*
*(2 பெயர்கள்) 617*

**நெருப்பு உறு விறகு**

*ஞெகிழி, கொள்ளி, நெருப்பு உறு விறகே.*
*(2 பெயர்கள்) 618*

**விறகு**

*இந்தனம், காட்டம், துவர், (இவை) விறகே.*
*(3 பெயர்கள்) 619*

**ஓம விறகு**

*சமிதை, ஓம விறகு (எனச் சாற்றும்).*
*(1 பெயர்) 620*

**அரி வாள் மணை**

*புள்ளம், கூர் வாய் இரும்பு, அரி வாள் மணை.*
*(2 பெயர்கள்) 621*

**சுக்கு**

*நாகரம், சுண்டி, சுக்கு (ஆகும்மே).*
*(2 பெயர்கள்) 622*

**மிளகு**

*திரங்கல், கலினை, கோளகம், மிரியல்,*
*காயம், மரீசம், கறி, (இவை) மிளகே.*
*(7 பெயர்கள்) 623*

**மஞ்சள்**

*நிசி, அரிசனமே, பீதம், காஞ்சனி,*
*அரித்திரம், (இன்னவை) மஞ்சள் (ஆகும்).*
*(5 பெயர்கள்) 624*

**அரிசி**

*அரியே, வீயம், தண்டுலம், அரிசி.*
*(3 பெயர்கள்) 625*

**தவிடு**

*முட்டை, தவிடே, முடை, பொதியும் (ஆகும்).*
*(3 பெயர்கள்) 626*

**பெருங்காயம்**

*இங்கு, பெருங்காயம். (1 பெயர்) 627*

**குங்குலியம்**

*குக்கில், குங்குலியம். (1 பெயர்) 628*

**கடுகு**

*ஐயவி, கடுகு. (1 பெயர்) 629*

**உப்பு**

*இலவணம், உப்பு (ஆகும்). (1 பெயர்) 630*

**பருப்பு**

*முதிரை, முற்கம், பருப்பு (என மொழிப).*
*(2 பெயர்கள்) 631*

**அரக்கு**

அரத்தமும், துப்பும், அரக்கின் (பெயரே).
(2 பெயர்கள்) 632

**செத்தை**

காடும், துராலும், மயலும், செத்தை.
(3 பெயர்கள்) 633

**பாடை**

பாடை, வெள்ளில், ஆசந்தியும் (ஆகும்).
(2 பெயர்கள்) 634

**தாழி**

அகளமும், சாடியும், பதலேயும், (அன்றித்)
தளமும், தாழியின் (சாற்றிய) பெயரே.
(4 பெயர்கள்) 635

**நீர்ச்சால்**

நிறை, வட்டம், இடங்கர், நீர்ச்சால் (ஆகும்).
(3 பெயர்கள்) 636

**கொப்பரை**

கொப்பரை, கொப்பரி, கடாரம், தசும்பு.
(3 பெயர்கள்) 637

**குடம்**

கடமும், இடங்கரும், தாழியும், இறங்கரும்,
குணமும், இரும்பையும், கும்பமும், குடங்கரும்,
குடந்தமும், கலசமும், இடக்கரும், குடமே.
(11 பெயர்கள்) 638

**மிடா**

கரீரம், குழிசி, முகை, தடா, மிடாவே.
(4 பெயர்கள்) 639

**பானே**

குண்டமும், மிடாவும், குழிசியும், பானே.
(3 பெயர்கள்) 640

**தயிர் கடை தாழி**

குடாரும், மந்தினி, (வெண்) தயிர்த் தாழி.
(2 பெயர்கள்) 641

**கரகம்**

கர்க்கரி, சிரகம், கன்னல், கரகம். (3 பெயர்கள்) 642

**மண் கலம்**

கடிஞை, பாத்திரம், மண் கலம் (ஆகும்).
(2 பெயர்கள்) 643

**தகழி**

இடிஞ்சில், பாண்டில், (எரி சுடர்த்) தகழி.
(2 பெயர்கள்) 6 44

**குடுவை**

குடுவை, குண்டம். (1 பெயர்) 645

**சட்டி**

விசளே, சட்டி (1 பெயர்) 646

**அகல்**

சராவம், சுத்திகை, இடிஞ்சில், அகல் (என்ப).
(3 பெயர்கள்) 647

**கொள் கலம்**

இடும் கலம், கொள் கலம், பாண்டம் (என்ப).
(2 பெயர்கள்) 648

**வெற்றிலே**

நாக வல்லி, தாம்பூலம், வெற்றிலே. (2 பெயர்கள்) 649

**பாக்கு**

கோலம், துவர்க்காய், பாகு, பாக்கே.
(3 பெயர்கள்) 650

**சுண்ணும்பு**

சுண்ணமும், நீறும், சுண்ணும்பு (ஆகும்).
(2 பெயர்கள்) 651

**திரு நீறு**

பூதி, ஓமப் பொடி, விபூதி, காப்பு,
புண்ணிய சாந்தம், வெண் தாது, திரு நீறே.
(6 பெயர்கள்) 652

**சாணி**

புண்ணிய சாந்தம், சாணி, சாணகம்.
(2 பெயர்கள்) 653

**சாம்பல்**

அடலே, வெண்பலி, சாம்பல் (ஆகும்).
(2 பெயர்கள்) 654

**பெட்டி**

மஞ்சிகம், பெட்டி. (1 பெயர்) 655

**பேழை**

மஞ்சிகை, பேழை. (1 பெயர்) 656

**அணிகலச் செப்பு**

கண்டிகை, பீடிகை, காண்டம், கடிப்பம்,
(அன்றியும்) கோடிகம், அணிகலச் செப்பே.
(5 பெயர்கள்) 657

**ஆருவது**
**அனுபோக வகை**
**முற்றிற்று.**

## 7. பண்பின் செயலின் பகுதி வகை.

### 1. உள்ள நல் வகை

#### குணம்

(உள்ள நல்வகை உரைக்கும் காலை,)
மாலையும், பெற்றியும், மரபும், கிழமையும்,
பாலும், விதியும், பான்மையும், இயல்பும்,
தகவும், தகுதியும், தகைமையும், தன்மையும்,
பரிசும், படியும், முறையும், பண்பும்,
நிலையும், வண்மையும், நீரும், சால்பும்,
குணம் (எனல் அதன் பெயர்), கொள்கையும் (ஆகும்).
(21 பெயர்கள்) 1

#### உயர்வு

உவப்பு, புரை, சேண், உன்னதம், துங்கம்,
நிவப்பு, மேடு, நீள், வரி, பிறங்கல்,
ஏந்தல், ஒழுகல், போகல், ஓச்சல்,
ஓங்கல், வார்தல், உறை, உயர்வு (என்ப).
(17 பெயர்கள்) 2

#### வலி

முரணும், மறமும், முன்பும், நோன்மையும்,
உரமும், பாழியும், ஊக்கமும், மதுகையும்,
முடலையும், உம்பலும், மூரியும், தோற்றமும்,
மிடலும், மள்ளமும், கூளியும், ஈடும்,
திறமும், எழிலும், எறுழும், திண்மையும்,
வயமும், விறலும், மைந்தும், துப்பும்,
மீளியும், அடலும், தாவும், ஆண்மையும்,
ஆற்றலும், கோளும், இகலும், மொய்ம்பும்,
மதனும், கலியும், வலியின் (பெயரே).
(34 பெயர்கள்) 3

#### மாட்சிமை

மாணலும், மாணும், சால்பும், மதனும்,
ஆன்றலும், வாய்த்தலும், மாட்சிமை (ஆகும்).
(6 பெயர்கள்) 4

#### கொழுமை

கொழுமையும் செழுமையும், வளமையும்,
கொழுப்பே.
(3 பெயர்கள்) 5

#### குளிர்

நளி, பனி, சீதம், தண்ணே, சீதளம்,
குளிரின் (பெயரே), நளிரும் (கூறும்).
(6 பெயர்கள்) 6

#### செவ்விது

செவ்வையும், செப்பமும், செம்மையும், செவ்வனும்,
(இவ் வகை பிறவும்) செவ்விதின் (பெயரே).
(4 பெயர்கள்) 7

#### அறிவு

உணர்வு, காட்சி, உரனே, மேதை,
தெளிவு, புலனே, தெருட்சி, போதம்,
புத்தி, ஞானம், அறிவு (எனப் புகல்வர்).
(10 பெயர்கள்) 8

#### வெற்றி

வலனும், கொற்றமும், வாகையும், முல்லையும்,
சயமும், ஆடும், புகலும், படினமும்,
விசயமும், வெற்றமும், வென்றியும், வெற்றி.
(11 பெயர்கள்) 9

#### செல்வம்

சீரும், வெறுக்கையும், விபவமும், திருவும்,
மாவும், ஆக்கமும், வாழ்க்கையும், பொறியும்,
(ஆகும்) செல்வத்து (அபிதானம்மே).
(8 பெயர்கள்) 10

#### பற்று

பரிவும், ஆர்வமும், ஈரமும், பற்றே.
(3 பெயர்கள்) 11

#### அன்பு

அளி, நார், சங்கம், நேயம், அன்பே. 12

#### மற்றும் அன்பு

பாசம் (என்றும் பேசப்படுமே).
(5 பெயர்கள்) 13

#### அருள்

தகவும், கருணையும், இரக்கமும், தயவும்,
கிருபையும், அபயமும், (கிளர்) அருள் (ஆகும்).
(6 பெயர்கள்) 14

#### மனம்

முன்னமும், அகமும், உள்ளமும், உன்னமும்,
இதயமும், நெஞ்சும், உள்ளும், மனமே.
(7 பெயர்கள்) 15

#### குறிப்பு

சிந்தையும், நினைவும், தெளிவும், தியானமும்,
இங்கிதமும், கருத்தும், எண்ணமும், குறிப்பே. 16

#### மற்றும் குறிப்பு

(அங்கு அது) நாட்டியம் (ஆகலும் உரித்தே).
(8 பெயர்கள்) 17

#### குறித்தல்

கண்ணல், நுதலல், காணல், புகறல்,
எண்ணல், பேணல், கருதல், சுட்டல்,
உன்னல், (என்று இவை) குறித்தலை (உரைக்கும்).
(9 பெயர்கள்) 18

### வரையறுத்தல்

குணித்தலும், கணித்தலும், குறித்தலும், (அன்றி)
மதித்தலும், வரையறுத்தல் (பொருட்டு ஆமே).
(4 பெயர்கள்) 19

### தேடல்

நாடலும், நேடலும், தேடல் (ஆகும்). 20

### மற்றும் தேடல்

கூடலும், கையரிக் கொளலும் (அதற்கே).
(4 பெயர்கள்) 21

### நினைத்தல்

உன்னல், படர்தல், ஊழ்த்தல், கருதல்,
முன்னல், அறிதல், வலித்தல், சிந்தித்தல்,
எண்ணல், (அனைத்தும்) நினைப்பு (என்று இசைப்பர்).
(9 பெயர்கள்) 22

### ஏமாப்பு

ஏமாப்பு, செம்மாப்பு. (1 பெயர்) 23

### இறுமாப்பு

ஏக்கழுத்தம், இறுமாப்பு. (1 பெயர்) 24

### களிப்பு

மதர்ப்பு, மதர்வை, மதம், தருக்கு, ஏமம்,
பெருமிதம், செருக்கும், (பேசில்) களிப்பே.
(7 பெயர்கள்) 25

### இன்பம்

நகையும், ஏமமும், நயமும், மகிழ்ச்சியும்,
சுகமும், கடியும், தொய்யலும், இன்பம்.
(7 பெயர்கள்) 26

### பேர் இன்பம்

அக மலர்ச்சி, பேர் இன்பம், ஆனந்தம் (ஆகும்).
(2 பெயர்கள்) 27

### சுகம்

சந்தமும், தருமமும், அழகும், மகிழ்வும், சுகம்.
(4 பெயர்கள்) 28

### தெளிவு

தெருளும், மானவும், உணர்வும், தேறலும்,
தேற்றமும், துணிவும், தெளிவின் (திறத்த).
(6 பெயர்கள்) 29

### நயம்

நறுமை, விழுப்பம், நன்னர், நயமே.
(3 பெயர்கள்) 30

### நன்மை

உறுதி, யாணர், ஒண்மை, உத்தமம்,
நன்றி, சேடு, நன்மை, நன்று (ஆகும்).
(7 பெயர்கள்) 31

### பொறுத்தல்

சமித்தலும், நோன்றலும், கமித்தலும், பொறுத்தல்.
(3 பெயர்கள்) 32

### முயற்சி

முயற்சி, ஊக்கம், இயற்றி, ஆள்வினை,
உளுற்று,தாள், துப்பு, உற்சாகம்மே.
(7 பெயர்கள்) 33

### உற்சாகம்

உளுற்று, தாள்வினை, துப்பு, ஊக்கம், உற்சாகம்.
(4 பெயர்கள்) 34

### இலாபம்

பலனும், ஊதியமும், பயனும், ஆக்கமும்,
பேறும், பலித்தலும், இலாபப் (பெயரே).
(6 பெயர்கள்) 35

### ஒற்றுமை

ஒருமை, குறிப்போடு, ஒற்றுமை (ஆகும்).
(2 பெயர்கள்) 36

### துணை

இணையும், துப்பும், சகாயமும், (என்று இவை)
துணை (என்ப), புகலும் (சொல்லுவர் புலவர்).
(4 பெயர்கள்) 37

### தவம்

நோன்பு, (என் கிளவி தான்) தவம் (ஆகும்). 38

### மற்றும் தவம்

உவ்வு (என் கிளவியும் ஓதுவர் அதற்கே).
(2 பெயர்கள்) 39

### நல்வினை

தானமும், அறமும், தருமமும், சீலமும்,
அருளும், மங்கலமும், சுபமும், சுகிர்தமும்,
புண்ணியமும், பாக்கியமும், நல்வினை (ஆகும்).
(10 பெயர்கள்) 40

### அருச்சனை

ஆராதனையே, வழிபாடு, அருச்சனை.
(2 பெயர்கள்) 41

### பூசை

பூசனை, (என்ப) பூசையின் (பெயரே).
(1 பெயர்கள்) 42

### யாகம்

சித்து, யாகம், வேள்வி, கிருது (ஆகும்).
(3 பெயர்கள்) 43

### வெறுப்பு

வெறுப்பு, ஒல்லாமையும், வேண்டாமையும், முனிவும்,
ஒறுத்தலும், உவர்த்தலும், உவர்ப்பும் (ஆகும்).
(6 பெயர்கள்) 44

### துறவு

துறத்தல், நிவர்த்தி, துறவு (ஆகும்மே).
(2 பெயர்கள்) 45

### உறவு

உறவி, விருப்பம், உறவு (ஆகும்மே).
(2 பெயர்கள்) 46

### நாணம்

வெட்கம், இலச்சை, வெள்கல், சமழ்த்தல்,
வட்கல், இருளீ, மானமும், (அன்றி)
உட்கு, நாணத்து (உரை) (எனப்படுமே).
(8 பெயர்கள்) 47

### செல்வப் பகுதி

மல்லும், தடமும், வளமும், வாரியும்,
செல்வப் பகுதிக்குச் (செப்பிய பெயரே).
(4 பெயர்கள்) 48

### நிலை பேறு

துஞ்சல், மன்னல், திதி, நிலை பேறே. 49

### மற்றும் நிலை பேறு

(அங்கு அது) திறமோடு, ஏணம், தாணு,
(என்பன மூன்றும் இசைக்கப் பெறுமே).
(6 பெயர்கள்) 50

### மெய்

சாதம், வாய்மை, சத்தியம், உண்மை,
நீதி, நிலைமை, நியாயம், நிச்சயம்,
வாய், திடம், ஆணை, மன்றம், சரதம்,
வேளாண்மை, பட்டாங்கு, மெய் (என உரைப்பர்).
(15 பெயர்கள்) 51

### பிழைப்பு

இழுக்கம், வழுக்கு, தப்பல், பிழைப்பு (என்ப),
உஞற்றும், பணைத்தலும் (உள அப் பெயர்க்கே).
(5 பெயர்கள்) 52

### ஆதல்

ஆதல், நந்துதல். (1 பெயர்) 53

### ஏவல்

ஆணை, ஏவல். (1 பெயர்) 54

### ஒற்று

வேய், (என் கிளவி), ஒற்று (ஆகும்மே). (1 பெயர்) 55

### செய்தி

செயல், செய்கை,செய்தல், செய்தி (ஆகும்).
(3 பெயர்கள்) 56

### ஒழுக்கம்

சரியை, ஆசாரம், நடை, இயல்பு, ஒழுக்கம்.
(4 பெயர்கள்) 57

### நீதி

நெறியும், நியாயமும், தருமமும், நீதி. 58

### மற்றும் நீதி

விதியும், நிழலும் (வரைவு இன்று என்ப).
(5 பெயர்கள்) 59

### உள்

அகணி, அகடே, அகமே, கோட்டை,
(உரை செயில் இன்னவை) உள் (ஆகும்மே).
(4 பெயர்கள்) 60

### சூழ்ச்சி

சூழ்ச்சி, உசாவே, தேர்ச்சி, விசாரம்,
யாப்பே, எண்ணம், மந்திரம், நூலே. 61

### மற்றும் சூழ்ச்சி

ஆய்தலும், தேர்தலும் (ஆகலும் உரித்தே).
(9 பெயர்கள்) 62

### உண்டாதல்

விளைதல், பூத்தல், படுதல், உண்டாதல்.
(3 பெயர்கள்) 63

### தோற்றுதல்

பிறப்பித்தலும், படைத்தலும், நாறலும், வெளிப்படலும்,
தோற்றலும், உருத்தலும், தோற்றுதல் (ஆகும்).
(6 பெயர்கள்) 64

### காத்தல்

நிலைபெறுத்தலும், புரத்தலும், அளித்தலும், காப்பும்,
நோக்கலும், திதியும், காத்தல் (என்ப).
(6 பெயர்கள்) 65

### பாதுகாத்தல்

போற்றல், ஓம்பல், நோக்கல், பாதுகாத்தல்.
(3 பெயர்கள்) 66

### காவல்

சிறையும், அரணும், சேமமும், செயலும்,
காப்பும், வேலியும், கடியும், தட்டியும்,
கட்டும், தட்டும், காவல் (பெயரே).
(10 பெயர்கள்) 67

**கொள்கை**

தெவ்வு, வரைதல், தேர்தல், ஏற்றல், (எனக் கூறிய பிறவும்) கொள்கை (ஆகும்).
*(4 பெயர்கள்)* 68

**மேற்கோள்**

பூட்கை, (என்பது) மேற்கோள் (ஆகும்).
*(1 பெயர்)* 69

**உய்தல்**

ஆற்றுதல், வலிதல், உய்தல் (ஆகும்).
*(2 பெயர்கள்)* 70

**தூய்மை செய்தல்**

உவளித்தல், தூய்மை செய்தலை (உரைக்கும்).
*(1 பெயர்)* 71

**உடன்பாடு**

வலித்தல், ஒட்டல், நேர்தல், இசைதல், (என்று உரைத்த பலவும்) உடன்பாடு (ஆகும்).
*(4 பெயர்கள்)* 72

**விதி முறை**

நியமம், (என் கிளவி) விதி முறை (ஆகும்).
*(1 பெயர்)* 73

**குற்றல்**

நவித்தலும், துப்பலும், துற்றலும், குற்றல்.
*(3 பெயர்கள்)* 74

**அவியல்**

அவைத்தலும், அவித்தலும், அவியல் (ஆகும்).
*(2 பெயர்கள்)* 75

**ஒட்டுதல்**

அணவல், ஒட்டுதல். *(1 பெயர்)* 76

**தெரிதல்**

தெள்ளுதல், தெரிதல். *(1 பெயர்)* 77

**தெளிதல்**

தேறுதல், தெளிதல் (ஆகச் செப்புவர்).
*(1 பெயர்)* 78

**கேளா**

வேளா, (என்பது) கேளா (என்றல்). *(1 பெயர்)* 79

**தவிர்தல்**

வாளா, (என் கிளவி) தவிர்தல் (ஆகும்).
*(1 பெயர்)* 80

**தேற்றம்**

மன்ற, தேறு, தேற்றம் (ஆகும்). *(2 பெயர்கள்)* 81

**ஆம்**

அன்றெனல், இன்றெனல், ஆம் (எனல் ஆகும்).
*(2 பெயர்கள்)* 82

**சரண் புகல்**

மறை, புகல், (கிளவி) சரண் புகல் (ஆகும்).
*(2 பெயர்கள்)* 83

**எண்ணல்**

கரணமும், கணிதமும், கணக்கும், எண்ணல்.
*(3 பெயர்கள்)* 84

**நிமித்தம்**

சோதனம், சோதிடம், நிமித்தச் சொல்லே.
*(2 பெயர்கள்)* 85

**உடன் நிகழ்வு**

ஒடு, (என் கிளவி) உடன் நிகழ்வு (ஆகும்).
*(1 பெயர்)* 86

**பெயர்**

அபிதானம், ஆக்குவயம், நாமமும், பெயரே.
*(3 பெயர்கள்)* 87

**ஆதார நிலை**

கந்தும், ஆலம்பமும், ஆலம்பனமும், தஞ்சமும், தூவும், ஆதார நிலையே.
*(5 பெயர்கள்)* 88

**பேர் அறிவு**

முதுக்குறைவு, பேர் அறிவு, முகரிமையும் (ஆகும்).
*(2 பெயர்கள்)* 89

**உள்ளது சிறத்தல்**

கூர்ப்பும், களிப்பும், உள்ளது சிறத்தல்.
*(2 பெயர்கள்)* 90

## 2. உள்ளத்தின் தீய வகை

**தீ வினை**

பவமும், பாவமும், பாதகமும், தீ வினை.
*(3 பெயர்கள்)* 91

**தாழ்வு**

சாய்ப்பும், இழிவும், தண்மையும், தஞ்சமும், தாழ்வு (என் கிளவித் தன்மையது ஆகும்).
*(4 பெயர்கள்)* 92

**கூம்புதல்**

சாம்புதல், ஒடுங்குதல், கூம்புதல் (ஆகும்).
*(2 பெயர்கள்)* 93

### அச்சம்

உருமும், உருவும், உட்கும், பனிப்பும்,
வெருவும், புலம்பும், வெறியும், பயமும்,
பிறப்பும், கொன்னும், பேமும், நாமும்,
வெறுப்பும், சூரும், பீரும், வெடியும்,
கவலையும், அடுப்பும், கலக்கமும், அச்சம்.
*(19 பெயர்கள்)* *94*

### குலைதல்

ஓடல், வெய்துறல், உலமரல், தேங்கல்,
கூசல், திட்கல், குலையுல், துணுக்கெனல்,
வெள்கல், துண்ணெனல், தெருமரல், அளுக்கல்,
ஞொள்கல், (பிறவும்) குலைதலின் (நுவல் பெயர்).
*(13 பெயர்கள்)* *95*

### நடுக்கம்

விதிர்ப்பு, பனிப்பு, விதலை, கம்பம்,
அதிர்ப்பு, பொதிர்ப்பு, விதப்பு, நடுக்கம்.
*(7 பெயர்கள்)* *96*

### கலக்கம்

கதனமும், துரிதமும், பிரமமும், கலக்கம். *97*

### மற்றும் கலக்கம்

வெறி (என்று உரைப்பதும் அப் பெயர் மேற்றே).
*(4 பெயர்கள்)* *98*

### எளிமை

எண்மை, பரிபவம், இழிதகவும், எளிமை. *99*

### மற்றும் எளிமை

தண்மை (என்பதும் அதன்பால் சாற்றும்).
*(4 பெயர்கள்)* *100*

### பேதைமை

பேதைமை, மடமை, வெறியே, மருட்சி.
*(3 பெயர்கள்)* *101*

### மாசு

கசடும், மலினமும், கறையும், அழுக்கும்,
மலமும், களங்கமும், மாசு (ஆகும்மே).
*(6 பெயர்கள்)* *102*

### குற்றம்

காசும், தவறும், கறையும், களங்கமும்,
மாசும், வசையும், மறுவும், வடுவும்,
ஆசும், புகரும், அரிலும், களையும்,
ஏசும், பழியும், போக்கும், ஏதமும்,
நறையும், வண்டும், கடவையும், நவையும்,
மிறையும், பிழையும், விடலும், கரிலும்,
தோமும், தப்பும், துகளும், புரையும்,
கோதும், செயிரும், மையும், குற்றம். *103*

### மற்றும் குற்றம்

இழுக்கும், சோர்வும், புன்மையும், இகழ்ச்சியும்,
வழுக்கும், கீழும், மறவியும், பொல்லாங்கும்,
பொச்சாப்பு (என்பதும் புகலும் அப் பெயர்க்கே).
*(40 பெயர்கள்)* *104*

### வெம்மை

உருமமும், கருமமும், உருப்பமும், வெப்பமும்,
அழனமும், கோரமும், அழலும், வெம்மை.
*(7 பெயர்கள்)* *105*

### தோல்வி

நிலை அழிவு, ஓட்டம், பின் இடல், தோல்வே,
தொலைதல், தோற்றல், அஞ்சல், தோல்விப் (பெயர்).
*(7 பெயர்கள்)* *106*

### கொடுமை

கடுமை, கோடணை, சண்டம், கடினம்,
கொடுமையின் பெயர் (இவை), கூரமும் (ஆகும்). *107*

### மற்றும் கொடுமை

உக்கிரம், கோரம், உறைப்பு, பூதி,
வக்கிரம், வஞ்சம், சடம், கரிலும் (ஆமே).
*(13 பெயர்கள்)* *108*

### மறப்பு

வழுக்கும், மறவியும், அயர்ப்பும், இவறலும்,
மறப்பு (என் கிளவி), மறலும் (ஆகும்).
*(5 பெயர்கள்)* *109*

### வறுமை

மிசை, குறை, மிடியே, தரித்திரம், ஒற்கம்,
இலம்பாடு, இலாமை, நல்குரவும், வறுமை. *110*

### மற்றும் வறுமை

மறலும், இன்மையும், நிரப்பும், (மற்று அதன் பெயர்).
*(11 பெயர்கள்)* *111*

### பகை

முனையும், முரணும், உறழ்வும், தூவும்,
படியும், தெவ்வும், துப்பும், பகை (என்ப). *112*

### மற்றும் பகை

இகலும், செறலும், (அதன் பெயர் என்ப).
*(9 பெயர்கள்)* *113*

### வெகுளி

கறுவம், கோபம், கலாம், மறம், குரோதம்,
வெகுளி (என்பர்), வேரமும் (ஆகும்).
*(6 பெயர்கள்)* *114*

### சினம்

முனிவும், செயிரும், சீற்றமும், வியர்ப்பும்,
சினம் (என் கிளவி தெரிக்குங்காலே).
*(4 பெயர்கள்)* *115*

### சினக் குறிப்பு

கறுப்பும், செவப்பும், கனுறலும், கன்றலும்,
வியர்ப்பும், வெதிர்ப்பும், புழுங்கலும், கொதித்தலும்,
வெய்துறலும், புகைதலும், வயிரமும், (இனைத்தும்)
சினத்தின் குறிப்பினைத் (தெரிக்கும்) (கிளவி).
*(11 பெயர்கள்)* *116*

### தணியாக் கோபம்

கோம்பலும், கொந்தலும், கனிதலும், வெம்பலும்,
வெதும்பலும், தணியாக் கோபம் (என்ப).
*(5 பெயர்கள்)* *117*

### பெருஞ் சினம்

உடற்றல், சீறல், உருத்தல், காய்தல்,
முனைதல், விடைத்தல், பைத்தல், பெருஞ் சினம்.
*(7 பெயர்கள்)* *118*

### தணியா முனிவு

சலமும், வயிரமும், செற்றமும், (மற்று இவை
கறுவு கொள் நெஞ்சம் கடை முடிவு அளவும்)
தணியா முனிவு தான் ஆகும்மே). *(3 பெயர்கள்)* *119*

### இகழ்தல்

எள்ளல், நகுதல், நிந்தை, இகழ்தல்.
*(3 பெயர்கள்)* *120*

### வருத்தம்

உயவே, அனுக்கம், கவற்சி, உயங்கல்,
அயர்வே, கசிவே, ஆகுலம், அணங்கு,
வயாவே, அழுங்கல், வருத்தம் (ஆகும்).
*(10 பெயர்கள்)* *121*

### குணம் இன்மை

சீரணம், சிதம்பு, சீத்தை, செடி, (எனக்
கூடிய பலவும்) குணம் இன்மை (ஆகும்).
*(4 பெயர்கள்)* *122*

### துக்கம்

அல்லல், பீடை, அரந்தை, கோட்டாலை,
செல்லல், கலக்கம், சிறுமை, உறுகண்,
கவ்வை, மம்மர், விழுமம், கவலை,
எவ்வம், இன்னல், இடும்பை, இடுக்கண்,
படர், சூர், பைதல், பருவரல், பழங்கண்,
இடர், அஞர், ஏதம், யாதனை, இட்டளம்,
கலக்கம், புன்கண், பனி, நோய், கம்பலை,
அலக்கண், வெய்துறல், அழுங்கல், பீழை,
அலமரல், நடலை, உறுவல், வெறுப்பே,
கிலேசம், துயர், துனி, துன்பம், துக்கம் (ஆம்). *123*

### மற்றும் துக்கம்

துரிசும், அல்லகண்டமும், துராலும்,
சிலுகும், அலந்தலையும் (செப்பற்கு உரித்தே).
*(48 பெயர்கள்)* *124*

### சந்தேகம்

அனுமானமும், சங்கையும், சந்தேகம் (ஆகும்). *125*

### மற்றும் சந்தேகம்

ஐயுறல், கடுத்தலும், (அப் பெயர்க்கு உரித்தே).
*(4 பெயர்கள்)* *126*

### மயக்கம்

களிப்பும், மறமும், கழுமலும், பிறப்பும்,
மாலும், மறலும், மையலும், மான்றலும்,
இருளும், மைந்தும், ஏமமும், இளமையும்,
மருளும், மயர்வும், மயக்கம் (என்ப). *127*

### மற்றும் மயக்கம்

மோகமும், உணராமையும், உன்மத்தமும்,
களன் (என் கிளவியும் அப் பெயர்க் கட்டுரை).
*(18 பெயர்கள்)* *128*

### தீது

தீங்கும், கோளும், ஊறும், தீது (எனல்). *129*

### மற்றும் தீது

(ஆங்கு அது) மாயமும், அந்தரமும் (என்ப).
*(5 பெயர்கள்)* *130*

### பொய்

படிறும், மிச்சையும், பெட்டும், பழுதும்,
வழுதும், தத்திகாரமும், மாயமும்,
பொக்கமும், பிசியும், நடலையும், பொய்யே.
*(10 பெயர்கள்)* *131*

### பொறாமை

நோனாமை, வக்கிரம், அழுக்காறு, அவ்வியம்,
கூரம், (என்பது) பொறாமையின் கூற்றே.
*(5 பெயர்கள்)* *132*

### சோம்பல்

தூங்கல், அசைதல், அலைசுதல், சோம்பே. *133*

### மற்றும் சோம்பல்

சடம், மடி, தள்ளாவாரமும் (தகுமே).
*(6 பெயர்கள்)* *134*

### வஞ்சனை

கூடம், புள்ளுவம், குத்திரம், கஞ்சம்,
மாயை, தொடு, பட்டிமை, வஞ்சனை (ஆகும்).
*(7 பெயர்கள்)* *135*

### வேறுபாடு

வீற்று, விகிர்தம், விகடம், விரூபம்,
வேற்றுமை, விபரீதம், வேறுபாடு (ஆகும்). *136*

### மற்றும் வேறுபாடு

திரிபும், விள்ளலும், (செப்பும் அப் பெயர்க்கே).
*(8 பெயர்கள்)* *137*

**தளர்வு**

எளிமை, உடைதல், இட்டளம், தளர்வே.
(3 பெயர்கள்) 138

**தனிமை**

கேவலமும், புலம்பும், தனிமையைக் (கிளக்கும்).
(2 பெயர்கள்) 139

**பாவம்**

தீவினை, மறமே, செடியே, அகமே,
துரிதம், கலுடம், பாவம் (ஆமே).
(6 பெயர்கள்) 140

**விருப்பம்**

மாதர், காதல், வயாவே, வேட்கை,
ஆதரவு, ஆசை,அவாவே, ஆர்வம்,
நச்சு, நசை, விழைவு, நயப்பு, காமம்,
இச்சை, பெட்பு, மோகம், ஏட்டை,
வெப்பம், பற்று, விழுப்பம், வீழ்தல்,
இவர்தல், கவர்தல், வேண்டல், பேணல்,
வேட்டல், தாழ்தல், வெஃகலும், விருப்பம்.
(28 பெயர்கள்) 141

**வேட்கைப் பெருக்கம்**

வேட்கைப் பெருக்கம், வேணவா (ஆகும்).
(1 பெயர்) 142

**நோய்**

மடங்கல், பிணி, மடி, மாரி, பையுள்,
அணங்கு, வியாதி, அவலம், நீழல்,
உறுகண், புன்கண், உரோகம், சூர், நோய். 143

**மற்றும் நோய்**

சிறுமையும், குத்தும், (அப் பெயர் தெரிக்கும்).
(15 பெயர்கள்) 144

**வேதனை நோய்**

ஈதி, வாதை, வேதனை நோயே. (2 பெயர்கள்) 145

**காம நோய்**

விரகம், மதனம், காமக் கவலை,
காம நோயின் கட்டுரை (ஆகும்).
(3 பெயர்கள்) 146

**களவு**

கரப்பு, கட்டல், பட்டிமை, சோர்வு,
கயவு, படிறு, கரவடம், களவே.
(7 பெயர்கள்) 147

**பயன் இன்மை**

வறிதும், கொன்னும், விழலும், விதாவும்,
அல்லவை, பயன் இல் சொல் (ஆகும்மே).
(5 பெயர்கள்) 148

**மரணம்**

முஞ்சலும், துவன்றலும், முடிதலும், விளிதலும்,
துஞ்சலும், தவறலும், இறப்பும், பொன்றலும்,
வீய்வும், உலப்பும், வீடலும், மாய்தலும்,
மாண்டலும், மரித்தலும், சாவும், மரணம். 149

**மற்றும் மரணம்**

இல்லெனல் (என்பதுவும் சொல்லப்படுமே).
(16 பெயர்கள்) 150

**சாய்தல்**

இரிதல், நெரிதல், இடைதல், உடைதல்,
கெடுதல், சரிதல், சாய்தல் (ஆகும்).
(6 பெயர்கள்) 151

**பிணக்கு**

அரில், மறல், அபரம், துவக்கு (என அமைந்த
பெயர் இவை நான்கும்) பிணக்கு (என மொழிப).
(4 பெயர்கள்) 152

**முறிதல்**

ஒடிதல், ஒசிதல், ஞெமிர்தல், இடிதல்,
முரிதல், இறுதல், முறிதல் (பெயரே).
(6 பெயர்கள்) 153

**கேடு**

வழுவு, சிதைவு, மங்குதல், சேதம்,
அழிவு, சிந்துதல், நந்துதல், முரிதல்,
இறுதல், சுதம், மடி, ஒருங்கல், கேடு (என்ப).
(12 பெயர்கள்) 154

**கொலை**

கோளே, அணங்கு, வேட்டம், கொலை (எனல்).
(3 பெயர்கள்) 155

**வெளிறு**

வெண்மையும், தண்மையும், வெளிறு (எனல் ஆகும்).
(2 பெயர்கள்) 156

**புன்மை**

நவிரம், (என்பது) புன்மை (ஆகும்).
(1 பெயர்) 157

**இரங்குதல்**

இனைதல், எற்றித்தல், இரங்குதல் (ஆகும்).
(2 பெயர்கள்) 158

**அருவருப்பு**

வாலாமை, சூதகம், பயிர்ப்பு, அருவருப்பே.
(3 பெயர்கள்) 159

**ஒழிதல்**

ஒவும், மன்னும், ஒழிதல் (சொல்லே). 160

### மற்றும் ஒழிதல்

ஏனையும் (அப் பெயர் இயல்பு ஆகும்மே).
(3 பெயர்கள்) 161

### கலங்குதல்

கதுவே, கலுழல், க்லங்குதல், மலங்குதல்.
(3 பெயர்கள்) 162

### குலுங்குதல்

குலேதல், நடுங்குதல், குலுங்குதல் (ஆகும்).
(2 பெயர்கள்) 163

### வாட்டம்

தேம்பலும், குழைதலும், அனுங்கலும், முளியும்,
வாடலும், தளர்தலும், வாட்டம் (எனல் ஆகும்).
(6 பெயர்கள்) 164

### குழைதல்

சுனேதல், கனேதல், குழைதல் (ஆகும்).
(2 பெயர்கள்) 165

### மாறுபாடு

தெற்றே, மாறுபாடு (ஆகத் தெரிக்கும்).
(1 பெயர்) 166

### நிலே இன்மை

வம்பு, (என் கிளவி) நிலே இன்மையின் பெயர்.
(1 பெயர்) 167

### மேன்மை

கயவும், சாயலும், ஞெள்ளலும், மேன்மை.
(3 பெயர்கள்) 168

### மனக் கோட்டம்

அழுக்காறும், மனத்து அழுக்கும், அவ்வியமும்,
மனக் கோட்டம்.
(3 பெயர்கள்) 169

## 3. மெய் வகை

### பருமை

(மெய் வகைக்கு இயன்றன விளம்பும் காலேப்)
பரூஉம், பீனமும், தடித்தலும், பருமை.
(3 பெயர்கள்) 170

### இளேப்பு

தேம்பலும், பழுங்கணும், சிங்கலும், தேய்வும்,
நாம்பலும், ஞொள்கலும், மெலிவும், இளேப்பே.
(7 பெயர்கள்) 171

### வெண்மை

சுவேதம், தவளம், சுக்கிலம், குருத்து,
விளர், வால், வெள்ளே, நரை, சிதம், வெண்மை. 172

### மற்றும் வெண்மை

குருகு, பால், சுப்பிரம் (என்னவும் கூறும்).
(12 பெயர்கள்) 173

### பொன்மை

பீதகம், பசப்பு, பிங்கலம், அரிதம்,
(நாலும்) காஞ்சனியும், பொன்மையின் (பெயரே).
(5 பெயர்கள்) 174

### செவப்பு

அத்தும், அருணமும், அரத்தமும், சேப்பும்,
சோணமும், குருதியும், துவரும், சிந்தூரமும்,
பூவலும், படீரமும், சேத்தும், அரக்கும்,
செக்கரும், செம்மையும், சேந்தும், பாடலமும்,
கிஞ்சுகமும், குலிகமும், துப்பும், செவப்பே.
(19 பெயர்கள்) 175

### பச்சை

பாசும், பையும், அரியும், பசுமையும்,
பலாசும், சாமமும், அரிதமும், பச்சை.
(7 பெயர்கள்) 176

### கரு நிறம்

காளமும், காழகமும், காளிமமும், காரி, மால்,
மாவும், இருளும், நீலமும், அசிதமும்,
காரும், அஞ்சனமும், நல்லமும், கருளும்,
(ஆகும்) கருநிறத்து (அபிதானம்மே).
(13 பெயர்கள்) 177

### புற்கெனும் நிறம்

கபிலம், குரால், புகர், புற்கெனும் நிறமே.
(3 பெயர்கள்) 178

### ஒளி

வெயிலும், நிலவும், வில்லும், வாளும்,
நிழலும், எல்லும், நீமமும், நகையும்,
கானலும், கிரணமும், கதிரும், செடியும்,
சோதியும், மின்னும், துணியும், அரியும்,
கேழும், கரமும், தேசும், கிளர், ஒளி. 179

### மற்றும் ஒளி

ஆதவம் (என்பதும் அதன்பாற்படும்).
(21 பெயர்கள்) 180

### ஒளி விடுதல்

விளங்குதல், நகுதல், மின்னல், மிளிர்தல்,
துளங்குதல், நிகழ்தல், சுடர்தல், பிறழ்தல்,
இரங்கல், வயங்கல், இலகுதல், இமைத்தல்,
அலங்கல், தயங்கல், அவிர்தல், நிலவல்,
ஒளிர்தல், (என்று இவை) ஒளி விடல் (ஆகும்).
(17 பெயர்கள்) 181

**ஒளி மழுங்குதல்**

மட்கல், புல்லெனல், மழுங்குதல், அழுங்குதல்,
ஒளி மழுங்குதல் (என உரைத்தல் வேண்டும்).
(4 பெயர்கள்) 182

**அழகு**

ஏரும், வனப்பும், எழிலும், இராமமும்,
காரிகையும், மாவும், அம்மையும், கவினும்,
செழுமையும், பந்தமும், தேசிகமும், நோக்கும்,
அணியும், அணங்கும், யாணரும், பாணியும்,
மாதரும், மாழையும், சாயலும், வகுப்பும்,
வண்ணமும், வளமும், பூவும், பொற்பும்,
சேடும், பொன்னும், சித்திரமும், பத்திரமும்,
மாமையும், தளிமமும், மயமும், மஞ்சும்,
மதனும், பாங்கும், அம்மும், சொக்கும்,
சுந்தரமும், தோட்டியும், ஐயும், ஒப்பும்,
அந்தமும், ஒண்மையும், விடங்கமும், அமலமும்,
குழகும், கோலமும், வாமமும், காந்தியும்,
அழகின் (பெயர்), அலங்காரமும் (ஆகும்). 183

**மற்றும் அழகு**

கொம்மையும், மனோகரமும், சாருவும் (கூறுப).
(52 பெயர்கள்) 184

**கட்டழகு**

சித்திரம், மனோகரம், சுந்தரம், கட்டழகே.
(3 பெயர்கள்) 185

**நிறம்**

குருவும், கொழுமையும், குணமும், கெழுமையும்,
அரியும், சாயலும், வருணமும், (அன்றிப்)
பயப்பும், கறையும், கருவும், நிறமே.
(10 பெயர்கள்) 186

**வடிவம்**

செண்ணம், படிவம், வடிவம் (என்ப).
(2 பெயர்கள்) 187

**வண்ணம்**

வண்ணம், சந்தம் (1 பெயர்) 188

**வளைதல்**

குடிலம், தடவு, கூன், கோண், கோட்டம்,
வசிவு, கோணல், வாங்கல், குலாவல்,
வளாவல், (என்று இன்னவை) வளைதல் (ஆகும்).
(10 பெயர்கள்) 189

**இளமை**

மழவும், முருகும், தருணமும், மஞ்சும்,
குழவும், விளரும், கொம்மையும், புருவையும்,
கோமளமும், போதகமும், இளமையின் (கூற்றே).
(10 பெயர்கள்) 190

**முதுமை**

முதுமை, மூப்பு, முரஞ்சுதல், முற்றுதல். 191

**மற்றும் முதுமை**

விளவும், சாம்பலும் (விதந்து கொளப்படுமே).
(5 பெயர்கள்) 192

**கலியாணம்**

வதுவை, மன்றல், மணம், கலியாணம். 193

**மற்றும் கலியாணம்**

கடியும், வேட்டலும், கைப் பற்றலும் (ஆகும்).
(6 பெயர்கள்) 194

**கொண்டாடுதல்**

குலாவல், பாராட்டு, கொண்டாடுதலே.
(2 பெயர்கள்) 195

**அலங்கரித்தல்**

புனைதலும், மண்ணலும், பொற்புறுத்துதலும்,
அணிதலும், கை செய்தலும், அலங்கரித்தல்.
(5 பெயர்கள்) 196

**சிங்காரம்**

அணியே, பொற்பு, கை, அலங்காரம்,
(தெரியின்) ஒப்பனையும், சிங்காரம் (ஆகும்).
(5 பெயர்கள்) 197

**புதுமை**

புதை, புணர், விருந்து, புத்தேள், கடி, நவம்,
நூதனம், கோடகம், வம்பு, (இவை) புதுமை.
(9 பெயர்கள்) 198

**மகளிர் விளையாட்டு**

தொடலையும், தகுளமும், மகளிர் விளையாட்டே.
(2 பெயர்கள்) 199

**சூடுதல்**

மிலைதலும், மலைதலும், வேய்தலும், சூடுதல்.
(3 பெயர்கள்) 200

**இகுத்தல்**

செகுத்தல், இகுத்தல். (1 பெயர்) 201

**மீளுதல்**

திரிதல், மீளுதல். (1 பெயர்) 202

**புறம்**

புறணியும், புடமும், புறம் (எனல் ஆகும்).
(2 பெயர்கள்) 203

**பதுங்கல்**

பழகலும், ஒடுங்கலும், பாந்தலும், பதுங்கல்.
(3 பெயர்கள்) 204

**ஆர்தல்**

அசைதல், தெவிட்டல், இறுத்தல், ஆர்தல். 205

**மற்றும் ஆர்தல்**

வதிதல், வைகல், இறையும் (அப் பெயர்).
(6 பெயர்கள்) 206

**அடக்கம்**

முடக்கமும், நொறிலும், மடங்கும், முணங்கும்,
ஒடுக்கமும், அடக்கம், ஒருங்கும் (ஆமே).
(6 பெயர்கள்) 207

**கூடல்**

விழைச்சும், பிணேச்சும், விழைவும், மைதுனமும்,
புணர்ச்சியும், கூடல் (புகலும் கிளவி),
அணேதல், கலவி, சையோகமும் (ஆகும்). 208

**மற்றும் கூடல்**

மணத்தல், பயினி, (மற்று இவை கூடுதல்).
(10 பெயர்கள்) 209

**பிரிதல்**

நீத்தல், தவிர்தல், அகலல், உணர்தல்,
தணத்தல், வல்லி, பகல், (இவை) பிரிதல்.
(7 பெயர்கள்) 210

**புலத்தல்**

புலவி, ஊடல், புலத்தல் (ஆகும்).
(2 பெயர்கள்) 211

**புலவி நீடுதல்**

துனி, (என் கிளவி) புலவி நீடுதல்.
(1 பெயர்) 212

**கலத்தல்**

புணர்தல், படிதல், தோய்தல், சார்தல்,
கலவல், மேவல், கலத்தல் (ஆகும்).
(6 பெயர்கள்) 213

**அளவளாவல்**

கலாவலும், துழாவலும், வளாவலும், சிவணலும்,
புணர்தலும், பொருந்தலும், அளவளாவல் (பெயர்).
(6 பெயர்கள்) 214

**வணங்கல்**

வந்தனே, பணிதல், தண்டன், வணக்கம்,
பரவல், இறைஞ்சல், தாழ்தல், காண்டல்,
வந்தித்தல், போற்றல், வணங்கல் (ஆகும்).
(10 பெயர்கள்) 215

**சிறைப் படல்**

வலேப்படல், தளேப்படல், சிறைப்படல் (ஆகும்).
(2 பெயர்கள்) 216

**சருச்சரை வடிவு**

பிணரே, சருச்சரை வடிவினது (ஆகும்).
(1 பெயர்) 217

**தாழ்தல்**

இறைஞ்சலும், குரங்கலும், தாழ்தலே (இசைக்கும்).
(2 பெயர்கள்) 218

**அலேதல்**

நடுங்கல், ஆஞ்சி, ஞெகிழ்தல், ஞொள்கல்,
அழுங்குதல், சோம்பு (எனல்), அலேதலும் (ஆகும்).
(6 பெயர்கள்) 219

**சுமத்தல்**

பரித்தல், பொறுத்தல், தரித்தல், சுமத்தல்.
(3 பெயர்கள்) 220

**ஏறுதல்**

எக்கல், இவரல், மீக்கோள், ஏறுதல்.
(3 பெயர்கள்) 221

**எதிர்தல்**

முட்டல், கிடைத்தல், முடுகல், நேர்தல்,
ஏற்றல், தலேப்படல், எதிர்தல் (ஆகும்).
(6 பெயர்கள்) 222

**மீதூரல்**

இடங்கழி, நெருங்குதல், மீதூரல் (ஆகும்).
(2 பெயர்கள்) 223

**ஒருங்கு**

உடங்கு, ஒருங்கு (ஆகும்). (1 பெயர்) 224

**வடுப்படுத்தல்**

கதுவாய், வடுப்படுத்தல் (ஆகக் கருதுவர்).
(1 பெயர்) 225

**சொறி**

கண்டூதி, தினவு, சொறி (எனக் கழறும்).
(2 பெயர்கள்) 226

**பொங்குதல்**

பூரித்தல், மிகுதல், பொங்குதல் (ஆகும்).
(2 பெயர்கள்) 227

**வேர்த்தல்**

வேர்த்தல், வியர்ப்பு. (1 பெயர்) 228

**விடுதல்**

விடுதல், உயிர்த்தல். (1 பெயர்) 229

**மூடுதல்**

போர்வை, மூய்தல், கவித்தல், மூடுதல்.
(3 பெயர்கள்) 230

### பூணல்

புனைதல், ஆர்த்தல், பூணல் (ஆகும்).
(2 பெயர்கள்) 231

### இயைபு

இயைபே, புணர்ச்சி, இசைப்பு (இவை ஆகும்).
(2 பெயர்கள்) 232

### மஞ்சனம்

நானம், (என்பது) மஞ்சனம் (ஆகும்).
(1 பெயர்) 233

### குளித்தல்

தோய்தலும், படிதலும், ஆடலும், (அன்றிக்)
குடைதலும், மூழ்கலும், குளித்தலின் (கூற்றே).
(5 பெயர்கள்) 234

### பிறகிடல்

பின்றல், பிறக்கிடல், பிறகிடல் (ஆகும்).
(2 பெயர்கள்) 235

### கருவுள் அமைப்பும், மெய்படு பருவமும்

பேறு, இழவு, இன்பம், பிணி, மூப்பு, சாக்காடு, (என்று
ஆறு உள) அந் நாள் அமைந்தன (அறியக்
கூறிய புலவர் கோட்பாடு அன்றியும்)
பாலை, பாலன், காளை, இளையோன்,
முதியோன், (என்ன விதி வழி வந்த
மெய்யே) மெய்யின் மேம்படு குணமே.
(6, 5 பெயர்கள்) 236

## 4. வாய் வகை

### இன் சுவை

(வாய் வகை இயல்பு வகுக்கும் காலை)
தீம், (என் கிளவியோடு) இரதம், இன் சுவை.
(2 பெயர்கள்) 237

### அழைத்தல்

கேதல், உளைத்தல், இகுத்தல், விளித்தல்,
மா எனல், கூவுதல், வா எனல், மத்தல்,
கரைதல், ஆகருடணை, (இவையே அன்றி)
அகவல், (என்பதும்) அழைத்தல் (ஆகும்).
(11 பெயர்கள்) 238

### சிரிப்பு

மூரலும், இளியும், முறுவலும், நகையும்,
ஆசமும், சிரிப்பு (எனல்), ஆர்ப்பும் (ஆகும்).
(6 பெயர்கள்) 239

### உண்டல்

அயிறல், மிசைதல், அருந்துதல், நுகர்தல்,
துவ்வல், துய்த்தல், துற்றல், துறுவல்,
ஆர்தல், மாந்தல், கைதொடல், உண்டல். 240

### மற்றும் உண்டல்

பானகம், போனகம் (பண்பொடு வருமே).
(13 பெயர்கள்) 241

### குடித்தல்

பருகல், மாந்தல், பானம், குடித்தல்.
(3 பெயர்கள்) 242

### விழுங்கல்

நுங்கல், நுகர்தல், விழுங்கல் (என்று ஆகும்).
(2 பெயர்கள்) 243

### இயம்பல்

கதையும், நுவலும், காதையும், கிளவியும்,
பனுவலும், அறையும், பறையும், வாணியும்,
கூற்றும், மொழியும், குயிறலும், புகறலும்,
மாற்றமும், மறையும், நொடியும், பரவலும்,
இசையும், இயமும், பேச்சும், உரையும்,
எதிர்ப்பும், (என்று இவை) இயம்பல் (ஆகும்).
(21 பெயர்கள்) 244

### வாசகம்

வசனம், பாசுரம், வார்த்தையும், வாசகம்.
(3 பெயர்கள்) 245

### பதம்

பாழியும், உரையும், பதம் (எனல் ஆகும்).
(2 பெயர்கள்) 246

### பேசுதல்

இசைத்தல், இறுத்தல், இயம்பல், புகறல்,
பிதற்றல், (என்று இவை) பேசுதல் (ஆகும்).
(5 பெயர்கள்) 247

### பல் கால் விளம்புதல்

மீதுரை, பல் கால் விளம்புதல் (ஆகும்).
(1 பெயர்) 248

### துதித்தல்

பரவல், வழுத்தல், ஏத்தல், போற்றல்,
பழிச்சல், வாழ்த்தல், துதித்தல் (ஆகும்).
(6 பெயர்கள்) 249

### வாழ்த்து

ஆசிடை, ஆசி, வாழ்த்து (ஆகும்மே).
(2 பெயர்கள்) 250

### சொல்லுதல்

இயம்பல், விரித்தல், மொழிதல், விளம்பல்,
பகர்தல், பன்னல், நவிறல், கத்துதல்,
உரைத்தல், கூறல், வழங்கல், குயிலல்,
புகலல், பேசல், நொடிதல், பிறழ்தல்,
பறைதல், செப்பல், அதிர்த்தல், பணித்தல்,
சொற்றல், ஆடல், சொல்லுதல் (என்ப).
(22 பெயர்கள்) 251

**படித்தல்**

பாடல், ஓதல், வாசித்தல், படித்தல்.
*(3 பெயர்கள்) 252*

**பெருஞ் சொல்**

பெருஞ் சொல், பலர் அறி சொல் (எனப் பெயர் பெறும்).
*(1 பெயர்) 253*

**சிறு சொல்**

சிறு சொல், இழிச் சொல், தீச் சொல், பழிச் சொல்.
*(3 பெயர்கள்) 254*

**பழி மொழி**

அம்பலும், கௌவையும், அலரும், பழி மொழி.
*(3 பெயர்கள்) 255*

**திசைச் சொல்**

தேசிகம், (என்பது) திசைச் சொல் (ஆகும்).
*(1 பெயர்) 256*

**மறைத்து மொழி கிளவி**

இடக்கர், மறை மொழி, எக்கரும் (ஆகும்).
*(2 பெயர்கள்) 257*

**சிலர் அறிந்து தம்முள் தூற்றல்**

அம்பல், சிலர் அறிந்து தம்முள் புறங்கூறல்.
*(1 பெயர்) 258*

**பலர் அறிந்து தூற்றல்**

அலரே, பலரும் அறிந்து அலர் தூற்றல்.
*(1 பெயர்) 259*

**உறுதிக் கட்டுரை**

கழறலும், இடித்தலும், நெருங்கலும், (என்று இவை) உறுதிக் கட்டுரை (என உரைத்தனரே).
*(3 பெயர்கள்) 260*

**நயச் சொல்**

முகமன், சம்மானம், உபசாரம், நயச் சொல்.
*(3 பெயர்கள்) 261*

**குறளை மொழி**

கொடுவாய், பிசுனம், தொடுப்பு, குஞ்சம், குறளை மொழி, கொண்டியமும் (ஆகும்).
*(5 பெயர்கள்) 262*

**அசதியாடல்**

அசதி, நகல், நயக் கிளவி (ஆகும்).
*(2 பெயர்கள்) 263*

**நிரம்பா மென் மொழி**

குதலை, மழலை, கொஞ்சல், உல்லாபம், மிழலை, நிரம்பா மென் மொழி (ஆகும்).
*(5 பெயர்கள்) 264*

**சத்தியம்**

ஆணை, வஞ்சினம், சபதம், சத்தியம். *265*

**மற்றும் சத்தியம்**

சூளே, விரதம், சூளுறவும் (ஆகும்).
*(6 பெயர்கள்) 266*

**முது சொல்**

மொழிமை, மூதுரை, முன் சொல், பழஞ் சொல், முது சொல் (என்பர்), பழ மொழியும் (ஆமே).
*(5 பெயர்கள்) 267*

**நல் நிமித்தம்**

விரிச்சியும், வாய்ப் புள்ளும், நற் சொல் நிமித்தம்.
*(2 பெயர்கள்) 268*

**கதை**

கதை, (என்று உரைப்பது) காரணச் சொல் (எனல்).
*(1 பெயர்) 269*

**வினவல்**

வினவல், கடாவல். *(1 பெயர்) 270*

**எதிர் மொழி**

விடை, (அதற்கு) எதிர் மொழி. *(1 பெயர்) 271*

**வினவும் விடையும்**
**கூடிய பொருள்**

வினவொடு விடையும் விளம்புதல், சல்லாபம்.
*(1 பெயர்) 272*

**பாயிரம்**

அணிந்துரை, பெய்துரை, புனைந்துரை, நூன்முகம், முகவுரை, தந்துரை, புறவுரை, பாயிரம்.
*(7 பெயர்கள்) 273*

**சத்தி பண்ணல்**

உமிழ்தல், தெவிட்டல், கான்றல், ஓங்கல், உக்காரம், சத்தி, (அன்றிக்) கக்கல். *274*

**மற்றும் சத்தி பண்ணல்**

அபனம் (என்பதும் அதன் பெயர் ஆகும்).
*(7 பெயர்கள்) 275*

**எச்சில்**

மிச்சில், பேளிகை, உச்சிட்டம், விசதம், எச்சில், (என்றற்கு) இழவும் (ஆகும்).
*(5 பெயர்கள்) 276*

**கொட்டாவி**

ஆவித்தல், கொட்டாவி (ஆகும் என்ப).
*(1 பெயர்) 277*

## 5. கண் வகை

### கண்ணேட்டம்

கண்ணிற்கு (அமைந்த கடன் நெறி கூறின்)
கண்மை, நாகரிகம், பார்வை, கண்ணேட்டம். 278

### மற்றும் கண்ணேட்டம்

கண் (என்பதும் அக் கட்டுரை ஆகும்).
(4 பெயர்கள்) 279

### உற்சவம்

சாறு, முருகு, துணங்கறல், விழாவுடன்,
(ஓதும்) சேறும், உற்சவம் (ஆகும்).
(5 பெயர்கள்) 280

### தூங்கல்

கனவு, துயிலே, கண்படை, அனந்தல்,
படலே, நித்திரை, பள்ளி, உறக்கம்,
துஞ்சல், உறங்கல், தூங்கல் (ஆகும்).
(10 பெயர்கள்) 281

### நிரம்பாத் துயில்

தூங்கல், நிரம்பாத் துயிலும் (ஆமே).
(1 பெயர்) 282

### அழுகை

கலக்கம், உரோதனம், கலுழ்ச்சி, அழுகை. 283

### மற்றும் அழுகை

அரற்றல், இரங்கல், விம்மல், பொருமல்,
ஏங்கல், இராவணம், (ஆங்கு அதன் நிலையே).
(9 பெயர்கள்) 284

### துயில் ஒழிதல்

சாகரம், (என்பது) துயில் ஒழிதல் (ஆகும்).
(1 பெயர்) 285

### கண் பார்வை

விழித்தல், கண் பார்வை. (1 பெயர்) 286

### கண் மூடல்

சிமிழ்த்தல், கண் மூடல். (1 பெயர்) 287

### காண்டல்

நோக்கல், தெரிசித்தல், பார்த்தல், காண்டல்.
(3 பெயர்கள்) 288

### கண்ணுறல்

காட்சி, (என்பது) கண்ணுறல் (ஆகும்).
(1 பெயர்) 289

### கண் இமை

கண் இமை, இதழ், விளிம்பு (என்னவும் பெறுமே).
(2 பெயர்கள்) 290

## 6. மூக்கின் வகை

### கந்தித்தல்

(மூக்கின் இயல்பு மொழியும் காலை)
மணமும், முருகும், மன்றலும், வாசமும்,
விரையும், வதுவையும், நானமும், வேரியும்,
கடியும், தேனும், வம்பும், கானும்,
நறையும், கந்தமும், மோதமும், நாற்றமும்,
கமழலும், வெறியும், கந்தித்தல் (ஆகும்).
(18 பெயர்கள்) 291

### நறு மணம்

சுகந்தம், நறு மணம். (1 பெயர்) 292

### பெரு மணம்

பரிமளம், பெரு மணம். (1 பெயர்) 293

### மூச்சு

தும்மல், மூச்சு, சுவாதம், கொறுக்கை,
இரேசகம், பூரகம், கும்பகம், (அன்றிச்)
சுவாசம், நிசுவாசம் (சொல்லப் பெறுமே).
(8 பெயர்கள்) 294

## 7. செவி வகை

### கல்வி

(செவியில் தேறும் திறன் இனிது உரைக்கில்)
உறுதியும், கேள்வியும், ஓதியும், கலையும்,
பனுவலும், கல்விப் (பெயர் எனப் பகரும்).
(5 பெயர்கள்) 295

### சொல் மாலை

தோற்றம், சீர், ஒளி, சுலோகம், சொல் மாலை.
(4 பெயர்கள்) 296

### புகழ்

ஏற்றம், கியாதம், இசை, மெய்ப்பாடு,
சீர்த்தி, கீர்த்தி, சொல், (திகழ்) புகழ் (ஆகும்). 297

### மற்றும் புகழ்

மீக்கூற்று (என்று விளம்பவும் பெறுமே).
(8 பெயர்கள்) 298

### நூல்

அதிகாரம், பிடகம், ஆரிடம், தந்திரம்,
பனுவல், ஆகமம், சூத்திரம், நூலே.
(7 பெயர்கள்) 299

### நற்பொருள்

ஞாபகம், பிசி, (இவை) நற்பொருள் (ஆகும்).
(2 பெயர்கள்) 300

**வேதம்**

இருக்கு, சுருதி, மறை, எழுதாக் கிளவி,
ஆதி நூல், சாகை, ஆரணம், வேதம்.
*(7 பெயர்கள்)* 301

**முதல் வேதம்**

பௌடிகம், இருக்கு, முதல் வேதம் (ஆகும்).
*(2 பெயர்கள்)* 302

**இரண்டாம் வேதம்**

இரண்டாம் வேதம், யசு, தைத்திரியம்.
*(2 பெயர்கள்)* 303

**மூன்றும் வேதம்**

மூன்றது, சாம வேதம், கீத நடை.
*(2 பெயர்கள்)* 304

**நான்காம் வேதம்**

நான்காம் வேதம், அதர்வணம் (என்ப).
*(1 பெயர்)* 305

**வேதத்து உள் பொருள்**

உபநிடதம், வேதத்தின் உட்பொருள் (ஆகும்).
*(1 பெயர்)* 306

**வேத மார்க்கம்**

வைதிகம், வேத (மொழி) மார்க்கம் (ஆகும்).
*(1 பெயர்)* 307

**உதாரணம்**

இதிகாசம், இலக்கியம், எடுத்துக் காட்டல்,
உதாரணம் (என உரைக்கப்படுமே).
*(3 பெயர்கள்)* 308

**ஆகமம்**

ஆகமம், ஞானம். *(1 பெயர்)* 309

**அத்தியாயம்**

படலம், இலம்பகம், சருக்கம், காண்டம்,
பரிச் சேதம், அத்தியாயம் (ஆகும்).
*(5 பெயர்கள்)* 310

**நூற்பா அகவல்**

(அடி வரை இன்றி விழுமிதின் நடக்கும்)
நூற்பா அகவல், சூத்திரம் (ஆகும்). *(1 பெயர்)* 311

**ஒத்து**

நிரல் பட வைப்பது, ஒத்து (என மொழிப). 312

**படலம்**

பொது மொழி தொடர்வது, படலம் (ஆகும்). 313

**பொழிப்புரை**

பொழிப்புரை, பிண்டப் பொருளது (என்ப). 314

**விரித்துரை**

விரித்துரை, பதவுரை, விரித்த சூரணை,
தொகுதி, (பகுதிப் பொருளது ஆகும்).
*(3 பெயர்கள்)* 315

**கீர்த்தியின் ஏற்றம்**

ஏற்றம், கியாதம், மிகைப்பாடு (என்ப).
*(2 பெயர்கள்)* 316

**தன் மேம்பாடு தான் நிகழ்த்தல்**

நெடு மொழி, தன் மேம்பாட்டு உரை (என்ப).
*(1 பெயர்)* 317

**சோபனம்**

பல்லாண்டு, சோபனம். *(1 பெயர்)* 318

**பழிச்சொல்**

பழிச் சொல், பரிவாதம். *(1 பெயர்)* 319

**பிடித்து ஒன்றைப் பேசுதல்**

பிடித்து ஒன்றைப் பேசுதல், பிதற்றுதல் (ஆகும்).
*(1 பெயர்)* 320

**வெண்பா**

முதற் பா, வெண்பா. *(1 பெயர்)* 321

**கலிப்பா**

விகற்பம், கலிப்பா. *(1 பெயர்)* 322

**ஆசிரியப்பா**

அகவலும், தொகையும், ஆசிரியப்பா.
*(2 பெயர்கள்)* 323

**வஞ்சிப் பா**

அதனின் விகற்பம், வஞ்சி (ஆகும்). 324

**அராகம்**

அராகம், முடுகியல், வண்ணம் (ஆகும்).
*(2 பெயர்கள்)* 325

**குளகச் செய்யுள்**

குற்றெழுத்துத் தொடரின் அது, குளகச் செய்யுள். 326

**கணக்கு**

எழுத்தும், எண்ணும், கணக்கு (என்று ஆகும்).
*(2 பெயர்கள்)* 327

**எண்**

எண்ணே, கரணமும், கணிதமும் (என்ப).
*(2 பெயர்கள்)* 328

**நால் வகை எழுத்து**

வடிவு, பெயர், தன்மை, முடிவு, நான்கு எழுத்தே.
*(4 பெயர்கள்)* 329

**ஒற்று எழுத்து**

விராமமும், புலுதமும், மெய்யும், ஒற்று எழுத்தே.
*(3 பெயர்கள்) 330*

**இரு வகைப் பாயிரம்**

பாயிரம், பொது, சிறப்பு (என இரு பாற்றே).
*(2 பெயர்கள்) 331*

**முதல்வன் வாக்கு**

ஆகமம், முதல்வன் வாக்கு (அது) (ஆகும்).
*(1 பெயர்) 332*

**அந்தணர்க்கு உரிய மார்க்கம்**

அந்தணர் (அவர்க்கே) வேத மார்க்கம்.
*(1 பெயர்) 333*

**தந்திரம்**

மிருதி, ஆரிடம், பனுவல், தந்திரம்.
*(3 பெயர்கள்) 334*

**பா**

தூக்கும், யாப்பும், செய்யுளும், கவியும்,
பாட்டும், தொடர்பும், பா (என்று ஆகும்).
*(6 பெயர்கள்) 335*

**உலக்கைப் பாட்டு**

உலக்கைப் பாட்டே, வள்ளைப் பாட்டு (என்ப).
*(1 பெயர்) 336*

**இடத்தின் சந்தேகச் சொல்**

யாண்டையும், யாங்கும், இடத்தின் ஐயுறல் சொல்.
*(2 பெயர்கள்) 337*

**ஐயச் சொல்**

யாது, எவன், என்னை, ஏது, கொல், ஐயம்.
*(5 பெயர்கள்) 338*

**இசை நிறை அசைச் சொல்**

ஏயும், குரையும் இசை நிறை அசைச் சொல்.
*(2 பெயர்கள்) 339*

**முன்னிலை அசைச் சொல்**

மியா, இக, மோ, மதி, இகும், சின், (என்னும்
இன்னவை) முன்னிலை அசைச் சொல் (என்ப).
*(6 பெயர்கள்) 340*

**சுட்டு**

அ, இ, உ (அம் மூன்றும்) சுட்டே.
*(3 பெயர்கள்) 341*

**வினா**

ஆ, ஏ, ஓ (அம் மூன்றும்) வினாவே.
*(3 பெயர்கள்) 342*

**சாரியைச் சொல்**

இன்னே, வற்றே, இக்கே, அம்மே,
ஒன்னே, ஆனே, அக்கே, அன்னே,
(இன்னவை எல்லாம்) சாரியைச் சொல்லே.
*(8 பெயர்கள்) 343*

**எழுத்தின் சாரியை**

கரமும், கானும், காரமும், அகரமும்,
ஏனமும், (பிறவும்) எழுத்தின் சாரியை.
*(5 பெயர்கள்) 344*

**இடைச் சொல்**

அரோ, போ, மாது, ஒ, அல், ஆல், உறை, கெழு,
ஆங்கு, தெய்ய, என, ஏ, ஞான்று,
அந்தில், ஒரும், (இனைய) இடைச் சொல்.
*(15 பெயர்கள்) 345*

**அதிசய மொழி**

ஆஅ, ஓஒ, அத்தோ, அந்தோ,
அன்னோ, ஐயோ, அக்கோ, அச்சோ,
என்னோ, எற்றே, (இவை) அதிசய மொழி.
*(10 பெயர்கள்) 346*

**இகழ்ச்சிக் குறிப்பு**

ஏஎ, சீச்சீ, எல், என், இகழ் மொழி.
*(4 பெயர்கள்) 347*

**வேற்றுமை உருபு**

ஐ, ஒடு, கு, இன், அது, கண், (என்னும்
அவ் ஆறு என்ப) வேற்றுமை உருபே.
*(6 பெயர்கள்) 348*

**ஒலி**

ஆரவாரம், கம்பலை, அரவம்,
கோடணை, புலம்பு, கோசனை, உளையே,
நாதம், ஓதை, ஆகுலம், துழனி,
இடி, இசை, சும்மை, ஓசை, தொனியே,
உரையே, பாடு, சத்தம், ஒலி (எனல்).
*(19 பெயர்கள்) 349*

**ஆபரண ஓசை**

சிஞ்சிதம், ஆபரண ஓசை (ஆகும்).
*(1 பெயர்) 350*

**எடுத்தல் ஓசை**

முரல்வும், நரல்வும், முக்கலும், பயிறலும்,
தெளிறலும், ஞெளிர்தலும், சிரற்றலும், பிரற்றலும்,
குளிறலும், குமுறலும், குருமித்தலும், நெளிர்தலும்,
அகவலும், எடுத்தல் ஓசைப் (பெயரே). 351

**மற்றும் எடுத்தல் ஓசை**

உளை (என்று உரைத்தலும் அப் பெயர்க்கு உரித்தே).
*(14 பெயர்கள்) 352*

### தொனித்தல்

கலித்தல், கனைத்தல், கறங்கல், கதித்தல்,
சிலைத்தல், சிலம்பல், இரைத்தல், இரட்டல்,
இடித்தல், இசைத்தல், உளைத்தல், உரப்பல்,
உரற்றல், உழம்பல், முரற்றல், இரற்றல்,
முழங்கல், தழங்கல், கத்தல், புலம்பல்,
அழுங்கல், இயம்பல், துவைத்தல், இரங்கல்,
தெழித்தல், குரைத்தல், கொழித்தல், நரற்றல்,
தெவிட்டல், ஆலித்தல், இமிழ்த்தல், குமுறல்,
ஏங்கல், விம்மல், பிளிறல், தொனித்தல்.
*(35 பெயர்கள்)* *353*

### பேர் ஒலி

திமிலம், குமிலம், திமிர்தம், திமிதம்,
களகளம், (என்பன) பேர் ஒலிக் கட்டுரை. *354*

### மற்றும் பேர் ஒலி

குமுதம் (என்பதும் அப் பெயர்க் கூற்றே).
*(6 பெயர்கள்)* *355*

### ஆரவாரம்

அலம்பல், உளறல், அரற்றல், ஏம்பல்,
தழங்கல், பிளிறல், கலித்தல், குமுறல்,
பூசல், தமரம், கோசணை, உலம்பல்,
ஆகுலம், கோலாகலம், ஆரவாரம் (என்ப).
*(14 பெயர்கள்)* *356*

### கதறல்

அரற்றலும், முரற்றலும், அழைத்தலும், கத்தலும்,
கதறல் (என்னும் கட்டுரை ஆகும்).
*(4 பெயர்கள்)* *357*

### அனுகரண ஓசை

இம் எனல், கல் எனல், இழும் எனல், வல் எனல்,
பொம் எனல், ஓர் எனல், பொள் எனல், ஞெரேல் எனல்,
கொம் எனல், சரேல் எனல், ஞொள் எனல், கொல் எனல்,
அம் எனல், (பிறவும்) அனுகரண ஓசை.
*(13 பெயர்கள்)* *358*

### அனுகரண உபய ஓசை

வெடுவெடு எனல், திடு திடு எனல், கள கனெனல்,
கொள் கொளெனல், நெடுநெடு எனல், மொக மொ
கெனல், நெறு நெறு எனல், படபடெனல்,
மொடுமொடு எனல், சடசடெனல், சளசளெனல்,
கலகலெனல், சலசலெனல், கிடுகிடு எனல், (ஆம்
அன்ன பிறவும்) அனுகரண உபய ஓசைப் பெயரே.
*(14 பெயர்கள்)* *359*

### கலப்புக் கட்டோசை

உளறல், தெழித்தல், உலப்பல், அலப்பல்,
பூசல், குமுறல், துவை வரல், துவைத்தல்,
ஆகுலம், கோடணை, கோலாகலமே,
ஆர்ப்பு, தமரம், கலப்புக் கட்டோசை.
*(13 பெயர்கள்)* *360*

### அடர் ஒலி

அதிர்த்தல், தெழித்தல், அதட்டல், உறைத்தல்,
உரப்பல், அடர் ஒலிப் (பெயர் அது ஆகும்).
*(5 பெயர்கள்)* *361*

### செவி அறிவு

சத்தம், பரிசம், ரூபம், ரசம், கந்தம், (என்று
ஒத்த ஐம் புலனும்) செவி அறிவு (என்ப).
*(5 பெயர்கள்)* *362*

## 8. கை வகை

### பறித்தல்

(கைக் கடன் ஆய காரணம் உரைப்பின்)
பரூஉவும், குற்றலும், பறித்தல் (மேற்றே).
*(2 பெயர்கள்)* *363*

### கடைதல்

கடைதல், குடைதல், கவர்தல், (அன்றி)
மதனமும், துருவலும் (மற்று அதன் பெயரே).
*(4 பெயர்கள்)* *364*

### தேய்த்தல்

அரைத்தலும், அரக்கலும், சிரத்தலும், சிதைத்தலும்,
தேய்த்தலின் (பெயர் என்ன வழங்கும்).
*(4 பெயர்கள்)* *365*

### எழுதல்

தெரித்தல், வரிதல், தீட்டல், பொறித்தல்,
வரைதல், கீறல், கிறுக்குதல், எழுதல்.
*(7 பெயர்கள்)* *366*

### எழுத்து

வரியும், பொறியும், அக்கரமும், (அன்றி)
இரேகையும், எழுத்தின் பெயர் (ஆகும்மே).
*(4 பெயர்கள்)* *367*

### கொல்லுதல்

காதுதல், தொலைத்தல், எற்றல், களைதல்,
சவட்டல், கோறல், செறித்தல், செவிட்டல்,
அடுதல், தெறுதல், செறுத்தல், முருக்குதல்,
செகுத்தல், வதைத்தல், கொல்லுதல் (செப்பும்).
*(14 பெயர்கள்)* *368*

### எற்றல்

எறிதல், அள்ளல், எற்றலின் (மேற்றே.)
*(2 பெயர்கள்)* *369*

### கொடை

ஈகை, தானம், இடுகை, கவிகை,
வேள்வி, வண்மை, தியாகம், வேளாண்மை,
உதாரம், கடப்பாடு, உபகாரம், கொடை (எனல்).
*(11 பெயர்கள்)* *370*

### பெருங் கொடை

ஈதல், வீசல், இசைத்தல், நீட்டல்,
புரத்தல், நல்கல், அருளல், பகுத்தல்,
கொடுத்தல், வழங்கல், அளித்தல், பெருங் கொடை.
*(11 பெயர்கள்)* 371

### வரையாது கொடுத்தல்

கொடை மடம், (என்பது) வரையாது கொடுத்தல்.
*(1 பெயர்)* 372

### கொடாமை

மாற்றலும், கரத்தலும், மறுத்தலும், கொடாமை.
*(3 பெயர்கள்)* 373

### இரத்தல்

ஏற்றல், குறைகோள், இரத்தல் வேண்டுதல்.
*(3 பெயர்கள்)* 374

### பிச்சை

பலியும், படிகமும், பாகமும், பயிக்கமும்,
பிண்டமும், சரியையும், ஐயமும், பிச்சை.
*(7 பெயர்கள்)* 375

### கும்பிடுதல்

தொழுதல், அஞ்சலி, சோத்தம், கும்பிடல்.
*(3 பெயர்கள்)* 376

### மெய் கோட்டிக் கை குவித்தல்

குடந்தம், மெய் கோட்டிக் கை குவித்தல் (என்ப).
*(1 பெயர்)* 377

### தொடுதல்

திவளல், ஊறு, பரிசம், தீண்டல்,
துவளல், தொட்டல், தொடுதல் (ஆகும்).
*(6 பெயர்கள்)* 378

### அடித்தல்

புடைத்தல், எற்றல், எறிதல், மொக்கல்,
குத்தல், மோதல், மொத்தல், அறைதல்,
அடித்தல் (என்ப), அகைத்தலும் (ஆகும்). 379

### மற்றும் அடித்தல்

வழுக்கலும் (அப் பெயர் வரைவு இன்று ஆகும்).
*(10 பெயர்கள்)* 380

### குத்தல்

அவைத்தல், (என் கிளவி) குத்தல் (ஆகும்).
*(1 பெயர்)* 381

### கட்டல்

விசித்தல், இசைத்தல், வீக்கல், கட்டல். 382

### மற்றும் கட்டல்

அசைத்தல், இமிழ்த்தல், ஆர்த்தல், யாப்பு,
சிமிழ்த்தல், பிணித்தல், சுருக்கல், தொடுத்தல்,
கிட்டல், துவக்கல், கட்டுதல் (ஆகும்).
*(14 பெயர்கள்)* 383

### தீட்டல்

தீட்டல், துலக்கல். *(1 பெயர்)* 384

### வெட்டல்

துழாவல், வெட்டல். *(1 பெயர்)* 385

### துணித்தல்

துமித்தலும், எற்றலும், துணித்தல் (ஆகும்).
*(2 பெயர்கள்)* 386

### அறுத்தல்

கடிதல், தடிதல், பரிதல், கண்டித்தல்,
சேதித்தல், கொய்தல், அறுத்தல் (ஆகும்).
*(6 பெயர்கள்)* 387

### முகத்தல்

தோண்டல், முகத்தல். *(1 பெயர்)* 388

### நிறுத்தல்

நோன்றல், நிறுத்தல். *(1 பெயர்)* 389

### கிண்டல்

கிண்டல், கிளைத்தல். *(1 பெயர்)* 390

### கிளறுதல்

நோண்டல், கிளறுதல். *(1 பெயர்)* 391

### தெள்ளுதல்

வறண்டல், தெள்ளுதல். *(1 பெயர்)* 392

### கொழித்தல்

வரன்றல், கொழித்தல். *(1 பெயர்)* 393

### தொளைத்தல்

தொள்கலும், குயிறலும், தொளைத்தல் (ஆகும்).
*(2 பெயர்கள்)* 394

### தோண்டல்

சூறல், சூன்றல், தொட்டல், தோண்டல்
(ஆகும்), தொடுதலும், அகழ்தலும் (அதற்கே).
*(5 பெயர்கள்)* 395

### கிழித்தல்

கீறல், கிண்டல், கிள்ளல், கிழித்தல். 396

### மற்றும் கிழித்தல்

பீறல் (என்பதும் அப் பெயர் மேற்றே).
*(4 பெயர்கள்)* 397

**அடைக்கலம்**

கையடை, இல்லடை, அபயம், அடைக்கலம்.
(3 பெயர்கள்) 398

**பிடுங்குதல்**

புய்த்தலும், பறித்தலும், பிடுங்குதல் (ஆகும்).
(2 பெயர்கள்) 399

**களைதல்**

கட்டல், (என்பது) களைதல் (ஆகும்). 400

**மற்றும் களைதல்**

சிதைத்தல், குத்தல், சிந்துதல், விலங்கல்.
(5 பெயர்கள்) 401

**உருவுதல்**

சிதகல், உருவுதல். (1 பெயர்) 402

**முடைதல்**

வலத்தல், முடைதல், நிணத்தல் (ஆகும்).
(2 பெயர்கள்) 403

**எறிதல்**

விலகல், செலவிடல், வீசல், ஓச்சுதல்,
விடுதல், எறிதல் (ஆகும் என்ப). (5 பெயர்கள்) 404

**மாற்றுதல்**

மாற்றுதல், விலக்கல். (1 பெயர்) 405

**பிடித்தல்**

தொடலும், பற்றலும், பிடித்தல் (ஆகும்).
(2 பெயர்கள்) 406

**நெரித்தல்**

தெறுத்தல், நெரித்தல். (1 பெயர்) 407

**கூட்டுதல்**

அடுத்தல், பொருத்தல், கூட்டுதல் (ஆகும்).
(2 பெயர்கள்) 408

**எழுப்புதல்**

எடுத்தல், எற்றல், எழுப்புதல் (ஆகும்).
(2 பெயர்கள்) 409

**தடுத்தல்**

வாரித்தல், வாரணை, தகைத்தல், தடுத்தல்.
(3 பெயர்கள்) 410

**பகுத்தல்**

பகிர்தல், பாத்தி, பகுத்தல் (ஆகும்).
(2 பெயர்கள்) 411

**சிந்துதல்**

சிதர்த்தல், சிந்துதல். (1 பெயர்) 412

**வாரல்**

வாரல், கவரல், வெளவல் (என்ப).
(2 பெயர்கள்) 413

**வகிர்தல்**

வகிர்தல், துவர்தல். (1 பெயர்) 414

**தடவல்**

தடவல், தைவரல், நீவல், வருடல்.
(3 பெயர்கள்) 415

**அசைதல்**

துயல்வரல், அசைதல். (1 பெயர்) 416

**சொரிதல்**

சொரிதல், பொழிதல். (1 பெயர்) 417

**மூட்டல்**

மாட்டலும், பொருத்தலும், மூட்டல் (ஆகும்).
(2 பெயர்கள்) 418

**தள்ளுதல்**

நோன்றல், ஊன்றல், நூக்கல், தள்ளுதல்.
(3 பெயர்கள்) 419

**செறித்தல்**

அளித்தலும், பெய்தலும், செறித்தல் (ஆகும்).
(2 பெயர்கள்) 420

**பரப்புதல்**

விரியல், விளம்பல், பாரித்தல், பரப்புதல்.
(3 பெயர்கள்) 421

**அடுக்குதல்**

ஏற்றல், அடுக்குதல். (1 பெயர்) 422

**புதைத்தல்**

பொத்தல், கனிதல், புதைத்தல் (ஆகும்).
(2 பெயர்கள்) 423

**குட்டல்**

குட்டல், புடைத்தல், தகர்த்தல் (ஆகும்).
(2 பெயர்கள்) 424

**9. கால் வகை**

**கடத்தல்**

(காலிற்கு அமைந்த கடன் நெறி கூறில்)
இறத்தலும், கழிதலும், இகத்தலும், கடத்தல்.
நடத்தலும், மீளலும், (அவ் இயல்பு ஆகும்).
(5 பெயர்கள்) 425

### 10. முறைமை வகை

**முறைமை**

முறைமையும், ஊழும், பாவமும், தன்மமும்,
முறையும், வாழும் வழியும் (ஆம் என்ப).
(6 பெயர்கள்) 448

**கோத்திரம்**

குடியே, உம்பல், கோத்திரம் (ஆகும்).
(2 பெயர்கள்) 449

**பழைமை**

ஒல்லே, புராணம், முதுமை, முறை, ஊழ்,
தொல்லே, முந்தை, தொன்று, பண்டு,
தொன்மை, முன்னே, புராதனம், பழைமை.
(12 பெயர்கள்) 450

**முன் பிறப்பு**

உம்மை, முன் பிறப்பு. (1 பெயர்) 451

**இப் பிறப்பு**

இம்மை, இப் பிறப்பு. (1 பெயர்) 452

**வரு பிறப்பு**

அம்மையும், மறுமையும், வரு பிறப்பு (ஆகும்).
(2 பெயர்கள்) 453

**பிறப்பு**

பிறந்தையும், பவமும், யோனியும்,
பிறப்பு (எனல்). 454

**மற்றும் பிறப்பு**

சூதகம் (என்ன ஓதவும் பெறுமே).
(4 பெயர்கள்) 455

**உரிமை**

உரிமை, கிழமை, ஆட்சியும் (ஆகும்).
(2 பெயர்கள்) 456

**பயிறல்**

நவிறல், கெழுமல், பயிறல் (ஆகும்).
(2 பெயர்கள்) 457

**அடைவு**

ஆம்பல், அடைவே. (1 பெயர்) 458

### 11. அளவின் வகை

**விரிவு**

(அளவின் வகையை அளந்து ஈங்கு உரைப்பின்)
விசாலமும், விபுலமும், விரிவு (எனல் ஆகும்).
(2 பெயர்கள்) 459

**பரப்பு**

பாய்தல், விரியல், பப்பு, பரவை,
தாவல், (என்று இவை தாம்) பரப்பு (ஆகும்).
(5 பெயர்கள்) 460

**தூரம்**

சேணும், நீளமும், சேய்மையும், தூரம்.
(3 பெயர்கள்) 461

**அகலம்**

நனவே, கண்ணறை, வியல், (இவை) அகலம்.
(3 பெயர்கள்) 462

**கனம்**

கனமே, அடையும், ஞாட்பும் (ஆகும்).
(2 பெயர்கள்) 463

**எல்லே**

அவதியும், சிம்மும், காடும், பரியந்தமும்,
ஏணியும், வரைப்பும், கொத்தமும், எல்லே.
(7 பெயர்கள்) 464

**அளவு**

தனேயும், காறும், தாறும், துணேயும்,
வரையும், பிரமாணமும், மாத்திரையும், மட்டும்,
அளவின் பெயர் (என்று அறைந்தனர் புலவர்).
(8 பெயர்கள்) 465

**அளவு இன்மை**

அபரிமிதமும், அனந்தமும், அபாரமும்,
எல்லே இல் பொருளும், அளவு இன்மை (என்ப).
(4 பெயர்கள்) 466

**பெருமை**

இருமையும், பொழிலும், ஏந்தலும், ஈடும்,
கருமையும், தடவும், கயவும், அணியும்,
பகடும், அண்ணலும், செம்மலும், பரியும்,
இறையும், பேழும், கொன்னும், விபுலமும்,
வியலும், தலேயும், நெய்தையும், மாவும்,
தகையும், முடலேயும், மூரியும், வீறும்,
நளியும், மீளியும், நன்றும், பாடும்,
நனியும், பணேயும், விறலும், சேடும்,
பீடும், கதழ்வும், பெருமைப் (பெயரே).
(34 பெயர்கள்) 467

**நுண்மை**

ஐயும், நுணுக்கமும், அணுவும், முளரியும்,
நுவணேயும், நுட்பமும், நுணங்கும், நூழையும்,
நுணுகும், நுழையும், நுண்மைப் (பெயரே).
(10 பெயர்கள்) 468

### சிறுமை

அற்பமும், கன்றும், தன்னமும், ஆசும்,
பேடும், வறிதும், இறையும், சிறுமை.
(7 பெயர்கள்) 469

### நிறைவு

மலிதல், துவன்றல், மல்கல், ஆர்தல்,
தெகுளல், ததும்பல், தேக்கல், கிளைத்தல்,
நிரம்பல், பூரணம், கமமே, நிறைவு.
(11 பெயர்கள்) 470

### பெருக்கம்

பிறங்கலும், பெருகலும், பெருக்கம் (ஆகும்).
(2 பெயர்கள்) 471

### குறைபாடு

ஊனமும், நிரப்பும், விகலமும், தவலும்,
ஈனமும், குறைபாடு (என்று இயம்பல் வேண்டும்).
(5 பெயர்கள்) 472

### குறைதல்

சுருங்கலும், குறையும், அருகலும், குன்றலும்,
எஞ்சலும், குறைதலின் (இயன்ற பெயரே).
(5 பெயர்கள்) 473

### மிகுதி

அமலை, நனியே, ஆற்றல், இறப்பு,
பெருகல், கழிவு, சிறப்பு, பிறங்கல்,
உருப்பம், தவ, மதர், ஊக்கம், அதிகம்,
விதப்பு, செறிதல், பொங்கல், மிகுதி.
(16 பெயர்கள்) 474

### பொலிவு

துப்பு, கலிப்பு, கஞறல், பொம்மல்,
பொறியே, பொக்கம், பூ, பொலிவு (ஆகும்).
(7 பெயர்கள்) 475

### செறிவு

துறுதல், உறுப்பு, பிறப்பு, துதைதல்,
மிடைதல், துற்று, எறிதல், ஓதி,
செற்று, வெறுப்பு, கஞறல், அடர்தல்,
நெருங்குதல், திணுங்குதல், செறிவின் (பெயரே).
(14 பெயர்கள்) 476

### கூட்டம்

கூளியும், ஈட்டமும், குழுமலும், தோடும்,
தொழுதியும், தொறுவும், தொகையும், குழாமும்,
துற்றும், நளியும், முகையும், மொய்யும்,
கணமும், சரியும், ஈண்டலும், சங்கமும்,
திரளையும், சவையும், அவையும், கூட்டம்.
(19 பெயர்கள்) 477

### திரள்

கொம்மையும், உண்டையும், குழியமும், குப்பையும்,
முத்தையும், பூகமும், சோகமும், புஞ்சமும்,
பந்தமும், மாழையும், வட்டும், பிண்டமும்,
வழியும், சேடும், சேர்வும், திரளே.
(15 பெயர்கள்) 478

### ஐம்மை

அரியும், தகடும், அடரும், ஐம்மை.
(3 பெயர்கள்) 479

### எல்லாம்

அடையவும், அடங்கலும், அனைத்தும், யாவையும்,
முழுவதும், முற்றும், சமத்தமும், முட்டவும்,
எவையும், எல்லாம் (என்றலின் பெயரே). 480

### மற்றும் எல்லாம்

அகிலமும், அகண்டமும், (அப் பெயர் ஆகும்).
(11 பெயர்கள்) 481

### பாதி

பாயல், பயல், அருத்தம், பங்கு, பாதி. 482

### மற்றும் பாதி

கூறும், பாகமும், (கூறும் அதற்கே).
(6 பெயர்கள்) 483

### பாரம்

சீரும், கனமும், குருவும், ஞாட்பும்
பாரம் (ஆகும்), பரமும் (அதற்கே).
(5 பெயர்கள்) 484

### நொய்மை

நொய்வும், இலேசும், நொய்மை (ஆகும்).
(2 பெயர்கள்) 485

### பொழுது போக்கல்

நெடித்தல், பாணித்தல், பொழுது போக்கல்.
(2 பெயர்கள்) 486

### மீறுதல்

திருகலும், முறுகலும், மீறுதல் (என்ப).
(2 பெயர்கள்) 487

### குவிதல்

குவையும், குவாலும், இராசியும், குப்பையும்,
குவவும், நூழிலும், குவிதல் (பெயரே).
(6 பெயர்கள்) 488

### முதல்

ஆதி, தலை, தாள், அடி, முன், எழுவாய்,
மோனை, பிராசயம், முதல் (எனப்படுமே).
(8 பெயர்கள்) 489

### இஞ்சி

நல்லம், அல்லம், நறு மருப்பு, இஞ்சி.
(3 பெயர்கள்) 267

### வழுதலை

வழுதுணை, வங்கம், பிருகதி, வழுதலை.
(3 பெயர்கள்) 268

### கையாந்தகரை

கோகணம், அறுபதம், கையாந்தகரை.
(2 பெயர்கள்) 269

### பொன்னாங்காணி

சீதை, பொன்னாங்காணி (ஆகும்) (1 பெயர்) 270

### சிறு கீரை

சில்லி, சாகினி, மேக நாதம், சிறு கீரை.
(3 பெயர்கள்) 271

### சேம்பு

சாகினி, சேம்பு, சகுடம் (ஆகும்).
(2 பெயர்கள்) 272

### வள்ளை

நாளிகம், வள்ளை. (1 பெயர்) 273

### பசிரி

பசிரி, பாவிரி. (1 பெயர்) 274

### வெள்ளரி

உருவாரம், வெள்ளரி. (1 பெயர்) 275

### சிறு கிழங்கு

சுரசம், சிறு கிழங்கு. (1 பெயர்) 276

### கருணைக் கிழங்கு

கந்தம், சூரணம், கருணைப் (பெயரே).
(2 பெயர்கள்) 277

### பாகல்

காரவல்லி, கூலம், பாகல். (2 பெயர்கள்) 278

### பீர்க்கு

பிரம், பீர்க்கு. (1 பெயர்) 279

### பெரும் பீர்க்கு

படலிகை, பெரும் பீர்க்கு. (1 பெயர்) 280

### கொடிக் கொத்தான்

நூழில், கொடிக் கொத்தான். (1 பெயர்) 281

### சுரை

தும்பியும், அலாபமும், சுரை (ஆகும்மே).
(2 பெயர்கள்) 282

### பேய்ச்சுரை

புற்கொடி, பேய்ச்சுரை. (1 பெயர்) 283

### கொடியின் வகை

கோற்கொடி, மென் கொடி, கொடி (என்று ஆகும்).
(2 பெயர்கள்) 284

### கொடி

இலதை, வல்லி, நூழில், கொடிப் பெயர்.
(3 பெயர்கள்) 285

### வெற்றிலை

நாக வல்லி, மெல்லிலை, தாம்பூலம்,
மூலவல்லி, இலைக் கொடி, வெற்றிலை.
(5 பெயர்கள்) 286

### மிளகு

கறியும், மரீசியும், காயமும், கலினையும்,
கோளகமும், திரங்கலும், மிரியலும், மிளகே.
(7 பெயர்கள்) 287

### ஏலம்

இலாஞ்சி, துடியே, ஏலம் (ஆகும்).
(2 பெயர்கள்) 288

### மஞ்சள்

பீதம், காஞ்சனி, நிசி, அரிசனம், (உடன்
ஓதும்) அரித்திராபமும் மஞ்சட்கு (உறு பெயர்).
(5 பெயர்கள்) 289

### வெண்சிறு கடுகு

அந்தில், கடிப்பகை, ஐயவி, சித்தார்த்தம்,
வெண் சிறு கடுகு (என விளம்பலாகும்).
(4 பெயர்கள்) 290

### திப்பிலி

பிப்பிலி, காமன், சிறுமூலகமே,
மாகதி, கலினி, திப்பிலி (ஆகும்).
(5 பெயர்கள்) 291

### கொத்துமலி

உருளரிசி, கொத்துமலி (என்று உரைப்பர்).
(1 பெயர்) 292

### வெண்காயம்

காயம், உள்ளி, வெண்காயம் (ஆகும்).
(2 பெயர்கள்) 293

### வாசம் தரும் பல பண்டம்

தகரம், தக்கோலம், கோட்டம், சாதிக்காய்,
இலவங்கம், ஏலம், கச்சோலம், மாஞ்சி,
(பகரும்) வாசம் தரும் பண்டப் (பெயரே).
(8 பெயர்கள்) 294

**மல்லிகை**

மாலதி, அனங்கம், பூருண்டி, மல்லிகை.
(3 பெயர்கள்) 295

**வன மல்லிகை**

மௌவல், (என்பது) வன மல்லிகையே.
(1 பெயர்) 296

**இருவாட்சி**

மயிலை, அனங்கம், இருவாட்சி. (2 பெயர்கள்) 297

**சாதிப் பூ**

கருமுகை, பித்திகை, சாதி (ஆகும்).
(2 பெயர்கள்) 298

**முல்லை**

தளவம், முல்லை, சாதி, பிச்சி. (3 பெயர்கள்) 299

**ஊசி முல்லை**

தளவு, மாகதி, நைதிகை, ஊசி முல்லை.
(3 பெயர்கள்) 300

**கொடி மல்லிகை**

விசலிகை, (என்ப) கொடி மல்லிகையே.
(1 பெயர்) 301

**நந்தியாவர்த்தம்**

வலம்புரி, நந்தியாவர்த்தம் (ஆகும்).
(1 பெயர்) 302

**மருக் கொழுந்து**

தமனகம், மருக் கொழுந்து. (1 பெயர்) 303

**மலைப் பச்சை**

குளவி, மலைப் பச்சை. (1 பெயர்) 304

**அடம்பு**

அடம்பு, பாலிகை. (1 பெயர்) 305

**வெட்டு வேர்**

முடி வாழை, வெட்டு வேர். (1 பெயர்) 306

**துவரை**

ஆடகி, துவரை. (1 பெயர்) 307

**அவரை**

அவரை, சிக்கடி. (1 பெயர்) 308

**உழுந்து**

மாடம், உழுந்து. (1 பெயர்) 309

**கடலை**

மஞ்சூரம், கடலை. (1 பெயர்) 310

**காராமணி**

காரா மணி, இதை, கூலமும் (ஆகும்).
(2 பெயர்கள்) 311

**பசும் பயறு**

பாசி, முற்கம், பசும் பயறு (ஆகும்).
(2 பெயர்கள்) 312

**கொள்**

காணம், குலுத்தம், கொள் (எனக் கருதுவர்).
(2 பெயர்கள்) 313

**துவரை அவரை முதலியவை**

இனையவை முதிரை (என்னவும் ஆகும்). (1 பெயர்) 314

**சோளம்**

சொன்னலும், இறுங்கும், சோளம் (ஆகும்).
(2 பெயர்கள்) 315

**வரகு**

(மருவு) கோத்திரவம், வரகு (எனல் ஆகும்).
(1 பெயர்) 316

**கருந்தினை**

இறடியும், கங்கும், கருந்தினை (என்ப).
(2 பெயர்கள்) 317

**செந்தினை**

கம்பும், கவலையும், செந்தினை (என்ப).
(2 பெயர்கள்) 318

**பைந்தினை**

ஏனல், குரல், நுவணை, பைந்தினை (என்ப).
(3 பெயர்கள்) 319

**தினைத் தாள்**

அருவி, தினைத் தாள், இருவியும் (ஆகும்).
(2 பெயர்கள்) 320

**எள்**

எண்ணும், திலமும், நூவும், எள் (ஆகும்).
(3 பெயர்கள்) 321

**இளையெள்**

குமிகை, இளையெள். (1 பெயர்) 322

**எள் இளங்காய்**

கவ்வை, எள் இளங்காய் (ஆகும்மே).
(2 பெயர்கள்) 323

**நெல்**

சொல்லும், விரீகியும், வரியும், சாலியும்,
யவமும், நெல்லின் பொதுப் (பெயர்) (ஆகும்).
(5 பெயர்கள்) 324

**குள நெல்**

நீர்வாரம், குள நெல் (ஆகும்மே). *(1 பெயர்)* *325*

**மலைச் சாரல் விளை நெல்**

ஐவனம், மலைச் சாரல் விளை நெல் (ஆகும்).
*(1 பெயர்)* *326*

**செஞ்சாலி**

செந் நெல், நன் னெல், செஞ்சாலிப் (பெயர்).
*(2 பெயர்கள்)* *327*

**பயிர்**

பயிரே, பசும்புல், பைங் கூழ் (ஆகும்).
*(2 பெயர்கள்)* *328*

**பதர்**

பதடி, பதரே, பொல்லும் (ஆகும்).
*(2 பெயர்கள்)* *329*

**இளஞ் சூல்**

இளஞ் சூல், பீட்டை. *(1 பெயர்)* *330*

**இளங்கதிர்**

பீள், இளங்கதிர். *(1 பெயர்)* *331*

**கதிர்**

ஏனலும், குரலும், (கொழுங்) கதிர் (என்ப).
*(2 பெயர்கள்)* *332*

**கோதுமை**

கோதி, கோதுமை. *(1 பெயர்)* *333*

**தோரை நெல்**

இயவை, தோரை. *(1 பெயர்)* *334*

**போர்**

போர், சும்மை, சூடும், போர்ப்பும் (ஆகும்).
*(3 பெயர்கள்)* *335*

**தூற்று நெற் சூடு**

பொலி, பொங்கழி, தூற்று நெற் சூடு (ஆகும்).
*(2 பெயர்கள்)* *336*

**வைக்கோல்**

வையே, பலாலம், வழுது, வைக்கோலே.
*(3 பெயர்கள்)* *337*

**நெல்லின் நாற்று**

நாறு, நெல்லின் நாற்று (ஆகும்மே). *(1 பெயர்)* *338*

**விழல்**

விழலே, விரணம் (விளம்புங் காலே).
*(1 பெயர்)* *339*

**வேய் அரிசி**

வேரல், வேய் அரிசி, தோரையும் (ஆகும்).
*(2 பெயர்கள்)* *340*

**தருப்பை**

குசை, குமுதம், கூர்ச்சம், குசமும், தருப்பை.
*(4 பெயர்கள்)* *341*

**நாணல்**

கானசரமே, காம வேழம்,
(நவை இல்) சரவணம், நாணல் (பெயரே). *342*

**மற்றும் நாணல்**

சிவேதை, காசை, (நாணல் எனச் செப்புவர்).
*(5 பெயர்கள்)* *343*

**கொறுக்கை**

எருவை, வேழம், கொறுக்கை, கொறுக்கச்சி.
*(3 பெயர்கள்)* *344*

**திரள் கோரை**

எருவை, சாய், பஞ்சாய், திரள் கோரை (என்ப).
*(3 பெயர்கள்)* *345*

**வாட் கோரை**

செருந்தி, வாட் கோரை (என்னச் செப்புவர்).
*(1 பெயர்)* *346*

**பச்சறுகு**

பதமும், தூர்வையும், பச்சறுகு (ஆகும்).
*(2 பெயர்கள்)* *347*

**பசும்புல்**

சட்பம், பசும்புல். *(1 பெயர்)* *348*

**உலர்ந்த புல்**

திரணம், உலர்ந்த புல். *(1 பெயர்)* *349*

**புற்பிடி**

காசை, புற்பிடி. *(1 பெயர்)* *350*

**இளம் புல்**

இளம் புல், பதமே. *(1 பெயர்)* *351*

**ஒரு வகைப் புல்**

புதவு, ஒரு விகற்பப் புல் (ஆகும்மே). *(1 பெயர்)* *352*

**நீர் முள்ளி**

நீர் முள்ளி, முண்டகம். *(1 பெயர்)* *353*

**நீர்க் குளிரி**

கல்லாரம், நீர்க் குளிரி. *(1 பெயர்)* *354*

**கத்தூரி மஞ்சள்**

சுவாங்கி, கத்தூரி. *(1 பெயர்)* *355*

**கிடை**

சடையே, கிடை (எனல்). (1 பெயர்) 356

**பாசி**

நாரம், செவிரம், சடைச்சி, சைவலம்,
பாசி (என்பர்), பதியமும் (ஆகும்).
(5 பெயர்கள்) 357

**தாமரை**

அம்புயம், அம்போருகம், அரவிந்தம்,
பங்கயம், புண்டரீகம், பதுமம்,
முண்டகம், நளினம், முளரி, சரோருகம்,
சதபத்திரி, கோகனதம், சலசம்,
வனசம், கமலம், வாரிசம், கஞ்சம்,
திருமால் கொப்பூழ், திருமலர், இண்டை,
பங்கேருகம், தாமரைப் பெயர் (ஆகும்).
(21 பெயர்கள்) 358

**தாமரை மலர்**

இறும்பு, இராசீவம், (நறுந்தண்) பூவே.
(2 பெயர்கள்) 359

**தாமரைக் கொட்டை**

(பூவினுள்) கொட்டை, பொகுட்டே, கன்னிகை.
(2 பெயர்கள்) 360

**தாமரைச் சுருள்**

விசியும், வளையமும், சுருள் (எனப் பேசுவர்).
(2 பெயர்கள்) 361

**தாமரைக் காய்**

வராடகம், வராண்டம், (வண்) காய் (ஆகும்).
(2 பெயர்கள்) 362

**செங்குவளை**

அரத்தம், உற்பலம் (ஆம்), செங்குவளை. 363

**மற்றும் செங்குவளை**

எருமணம், கல்லாரம், செங்கழு நீரும் (ஆமே).
(5 பெயர்கள்) 364

**கருங் குவளை**

பானல், கருங் குவளை. 365

**மற்றும் கருங்குவளை**

நீலம், உற்பலம், நீலோற்பலமும் (ஆம்).
(4 பெயர்கள்) 366

**கரு நெய்தல்**

நீலம், இந்தீவரம், கரு நெய்தல். 367

**மற்றும் கரு நெய்தல்**

நீலோற்பலமும் (நிகழ்த்தப் பெறுமே).
(3 பெயர்கள்) 368

**வெண்ணெய்தல்**

வெள்ளாம்பல், குமுதம், வெண் நிற நெய்தல்.
(2 பெயர்கள்) 369

**செவ்வாம்பல்**

சேதாம்பல், அரக்காம்பல், செவ்வாம்பல்,
செங்குமுதம். 370

**மற்றும் செவ்வாம்பல்**

செவ்வல்லி, (செவ்வாம்பல்). (4 பெயர்கள்) 371

**வெள்ளாம்பல்**

அல்லி, வெள்ளாம்பல், கைரவம் ஆகும். 372

**மற்றும் வெள்ளாம்பல்**

வெள்ளல்லி, (வெள்ளாம்பல்). (3 பெயர்கள்) 373

**குமுத வகை**

வெள்ளாம்பல், சேதாம்பல் (என்று இரு விகற்பம்
கொள்ப மன்னே) குமுதப் பெயரே.
(2 பெயர்கள்) 374

**குமுதம்**

ஆம்பலும், நெய்தலும், அல்லியும், குமுதம்.
(3 பெயர்கள்) 375

**செங்கழு நீர்**

கல்லாரம், உற்பலம், செங்கழு நீரே.
(2 பெயர்கள்) 376

**சிகை மாலை**

சிகழிகை, படலிகை, வாசிகை, சிகைமாலை.
(3 பெயர்கள்) 377

**மார்பில் அணி மாலை**

மஞ்சரி, இலம்பகம், மார்பில் அணி மாலை.
(2 பெயர்கள்) 378

**தோள் அணி மாலை**

தொடையல், தாமம், தோள் அணி மாலை.
(2 பெயர்கள்) 379

**கொண்டை மாலை**

கோதை, தொங்கல், கொண்டை மாலை.
(2 பெயர்கள்) 380

**மயிர்ச் சூட்டு மாலை**

வாசிகை, அலங்கல், மயிர்ச் சூட்டு மாலை.
(2 பெயர்கள்) 381

**ஒன்பதாவது மரப் பெயர் வகை**
**முற்றிற்று.**

## 10. ஒரு சொல் பல் பொருள் வகை

### 1. அகர வருக்கம்

**அகப்பா**

புரிசையும், உள் உயர் நிலமும், அகப்பா.
(2 பெயர்கள்) 1

**அகம்**

மனமும், உள்ளும், மனையும், பாவமும்,
புவியும், மரப் பொதுப் பெயரும், அகமே.
(6 பெயர்கள்) 2

**அகலுள்**

ஊரும், நாடும், அகலுள் (ஆகும்).
(2 பெயர்கள்) 3

**அகி**

அரவும், இரும்பும், அகி (எனல் ஆகும்).
(2 பெயர்கள்) 4

**அக்காரம்**

ஆடையும், சருக்கரையும், அக்காரம் (ஆகும்).
(2 பெயர்கள்) 5

**அக்கு**

வளை மணி, ஏற்றின் முரிப்பு, (இவை) அக்கு (எனல்).
(2 பெயர்கள்) 6

**அங்கணம்**

தூம்பு வாயிலும், முன்றிலும், அங்கணம்.
(2 பெயர்கள்) 7

**அங்கதம்**

அரவு, தோள் அணி, வசை, (இவை) அங்கதம்.
(3 பெயர்கள்) 8

**அங்கம்**

யாக்கையும், உறுப்பும், சயனமும், அங்கம்.
(3 பெயர்கள்) 9

**அங்கி**

அனலும், சட்டையும், அங்கி (ஆகும்).
(2 பெயர்கள்) 10

**அசனம்**

பசியும், கொழுப்பும், பகுதியும், அளவும்,
வேங்கை மரமும், உணவும், அசனம்.
(6 பெயர்கள்) 11

**அச்சம்**

அகத்தியும், பயமும், அச்சம் (ஆகும்).
(2 பெயர்கள்) 12

**அஞ்சலி**

தொழுதலும், வாவல் பறவையும், அஞ்சலி.
(2 பெயர்கள்) 13

**அஞ்சனம்**

காள நிறனும், மையும், திசைகளின்
யானையில் ஒன்றும், அஞ்சனம் (ஆகும்).
(3 பெயர்கள்) 14

**அடல்**

வலியும், செருவும், அடல் (என்று ஆகும்).
(2 பெயர்கள்) 15

**அடி**

முதலும், காலும், ஒறுத்தலும், அடி (எனல்).
(3 பெயர்கள்) 16

**அடுப்பு**

தரும நாளும், உத்தானமும், (அன்றி)
அச்சப் பெயரும், அடுப்பு (எனல் ஆகும்).
(3 பெயர்கள்) 17

**அடை**

இலையும், கனமும், விலையும், வழியும்,
அப்பமும், (மற்று இவை) அடை (எனல் ஆகும்).
(5 பெயர்கள்) 18

**அணங்கு**

தெய்வமும், தெய்வத்து உவமை சொல் மாதரும்,
மையல் நோயும், வருத்தமும், கொலையும்,
அழகும், ஆசையும், அணங்கு (என்று ஆமே).
(7 பெயர்கள்) 19

**அணி**

படையினது உறுப்பும், ஒப்பனையும், அழகும்,
பெருமையும், கலனும், அன்பும், அணி (எனல்).
(6 பெயர்கள்) 20

**அணு**

உயிரும், நுண்மையும், அணு (எனல் ஆகும்).
(2 பெயர்கள்) 21

**அணை**

விடயமும், சேதுவும், மெத்தையும், சயனமும்,
அணை (என மொழிப அறிந்திசினோரே).
(4 பெயர்கள்) 22

**அண்டசம்**

அரவு, தவளை, முதலை, ஆமை,
யானை, உடும்பு, மீன், ஓந்தியும், பறவையும்,
பல்லியும், இப்பியும், அண்டசம் (என்ப).
(11 பெயர்கள்) 23

**அண்டம்**

அண்டம், முட்டையும், ஆகாயமுமே.
(2 பெயர்கள்) 24

**அண்டர்**

உயர்நிலை, உம்பர், ஒன்னலருடனே,
இடையர், அண்டர் (என்னல் ஆகும்).
(4 பெயர்கள்) 25

**அத்தம்**

ஒரு நாள் மீனும், (ஒள்ளிய) பொன்னும்,
அரு நெறியும், கண்ணாடியும், பாதியும்,
கரமும், (பகர்) சொல் பொருளும் அத்தம்.
(7 பெயர்கள்) 26

**அத்தி**

யானையும், ஒரு மரப் பெயரும், என்பும்,
ஆர்கலிப் (பெயரும்,) அத்தி (என்று ஆகும்).
(4 பெயர்கள்) 27

**அத்து**

அரைப் பட்டிகையும், துன்னமும், அசைச் சொலும்,
செந்நிறமும் (இவை தெரியில்) அத்து (என்ப).
(4 பெயர்கள்) 28

**அத்தை**

அசைநிலைச் சொல்லும், குருவும், அத்தை.
(2 பெயர்கள்) 29

**அந்தம்**

அழகும், ஈறும், அந்தம் (என்ப). (2 பெயர்கள்) 30

**அந்தரம்**

அந்தரம், ஏகம், தனி, ஆகாயம்
இறுதி, திமிரம், கூட்டம் (ஆகும்).
(6 பெயர்கள்) 31

**அந்தரி**

அம்பிகைப் பெயரும், துர்க்கையும், அந்தரி.
(2 பெயர்கள்) 32

**அந்தி**

பாலை யாழ்த் திறத்து ஓர் இசைப் பெயரும்,
மாலைக் காலமும், (மற்று இவை) அந்தி.
(2 பெயர்கள்) 33

**அபரம்**

நரகமும், பொய்யும், பிறகும், அபரம்.
(3 பெயர்கள்) 34

**அமரர்**

அடையலர் (பெயரும்), தேவரும், அமரர்.
(2 பெயர்கள்) 35

**அமலம்**

அமலம், அழுக்கு இன்மையும்; அறிவும், அழகும்.
(3 பெயர்கள்) 36

**அமுதம்**

சுவை, பால், நீர்மை, சோறு, தெய்வ
உணவு, நீர், மோக்கம், உப்பும், அமுதம்.
(8 பெயர்கள்) 37

**அமை**

அழகும், மூங்கிலும், அமைவும், அமையே.
(3 பெயர்கள்) 38

**அம்பணம்**

அளவை, காராம்பி, கதலி, அம்பணம்.
(3 பெயர்கள்) 39

**அம்பரம்**

அம்பரம், கடலும், ஆடையும், ஆகாயமும்.
(3 பெயர்கள்) 40

**அம்பல்**

சிலர் அறிந்து புறங்கூறலும், பழி மொழியும், அம்பல்.
(2 பெயர்கள்) 41

**அம்மை**

அழகும், வரு பிறப்பும், தாயும், அம்மை.
(3 பெயர்கள்) 42

**அயம்**

அயம், (என் கிளவி) ஆடும், இரும்பும்,
குளமும், நீரும், குதிரையும் (கூறுவர்).
(5 பெயர்கள்) 43

**அயிராவதம்**

அயிராவதம், திசை யானையில் ஒன்றும்,
புரந்தரன் யானைப் பெயரும் (புகலும்).
(2 பெயர்கள்) 44

**அயில்**

வேலும், கூர்மையும், அயில் (என விளம்புவர்).
(2 பெயர்கள்) 45

**அரணம்**

காடும், எயிலும், கவசமும், அரணம்.
(3 பெயர்கள்) 46

**அரண்**

காவல், வேல், காவற் காடு (இவை), அரணே.
(3 பெயர்கள்) 47

**அரத்தம்**

கடம்பும், சுடுவனும், கழு நீர்ப் (பெயரும்),
அரக்கும், செந்நிறமும், அரத்தம் (ஆகும்).
(5 பெயர்கள்) 48

### அரந்தை

குறிஞ்சி யாழ் இசையும், துன்பமும், அரந்தை.
(2 பெயர்கள்) 49

### அரம்பை

அரம்பை, தெய்வப் பெண், வாழையும் (ஆகும்).
(2 பெயர்கள்) 50

### அரலை

கழலை, வீசம், கற்ருழை, அரலை.
(3 பெயர்கள்) 51

### அரவம்

அரவம், நூபுரமும், பாம்பும், ஓசையும் (ஆம்).
(3 பெயர்கள்) 52

### அரற்றல்

அழுகையும், ஒலித்தலும், அரற்றல் (என்ப).
(2 பெயர்கள்) 53

### அராகம்

முடுகியல், செந்நிறம், பாலை யாழ்த் திறம்,
ஆடகம், தக்கராகம், அராகம்.
(6 பெயர்கள்) 54

### அரி

கிண்கிணிப் பரலும், (கிளர்) ஒளியும், பன்றியும்,
இந்திரனும், வண்டும், பாம்பும், குரங்கும்,
குதிரையும்,கிளியும், தவளையும், மூங்கிலும்,
திகிரியும், நிறமும், சிங்கமும், தேரும்,
சயனமும், கண்ணின் வரியும், துயிலும்,
இயமனும், நெருப்பும், காற்றும், புகையும்,
பகையும், சேகும், பறையும், மதுவும்,
மதியும், ஞாயிறும், பஞ்சாயுதனும்,
பொள்ளலும், பௌவமும், பொன்னும், பசுமையும்,
வரையும், மைம்மையும், (செந்) நெற் கதிரும்,
சோலையும், படைக்கலப் பெயரும், விசியும்,
அரிசியும், வரியும், அரி (எனல் ஆகும்).
(41 பெயர்கள்) 55

### அரிட்டம்

காகமும், கள்ளும், பிறவியின் குற்றமும்,
அரிட்டம் (என்ப அறிந்திசினேரே).
(3 பெயர்கள்) 56

### அருணம்

ஆடும், மானும், அருணம் (என்ப).
(2 பெயர்கள்) 57

### அருணன்

அருணன், அருக்கனும், அவன் தேர்ப் பாகனும்,
புதனும், (என்னப் புகலப் பெறுமே).
(3 பெயர்கள்) 58

### அருப்பம்

ஊர்ப் பொதுப் பெயரும், ஒரு பெரும் பிணியும்,
அடவியின் பெயரும், அருப்பம் (என்ப).
(3 பெயர்கள்) 59

### அருவி

மலையின் வீழ் புனலும், தினைத் தாளும் அருவி.
(2 பெயர்கள்) 60

### அலகு

பலகறையும், நுளம்பும், அளவும், அலகு (எனல்).
(3 பெயர்கள்) 61

### அலங்கல்

பூவின் மாலையும், தளிரும், அசைவும்,
இரங்கலும், ஒளிர்தலும், அலங்கல் (ஆகும்).
(5 பெயர்கள்) 62

### அலரி

அலரி, மலரும், தபனனும், அழகும்,
கண்வரி, ஓர் மரம் (என்மனூர் புலவர்).
(5 பெயர்கள்) 63

### அலர்

பழிமொழியும், பலர் அறிந்து அலர் தூற்றலும்,
மலரும், மகிழ்வும், அலர் (என்று ஆகும்).
(4 பெயர்கள்) 64

### அலை

அலையே, கொலையும், திரையும் (ஆகும்).
(2 பெயர்கள்) 65

### அல்

இரவும், இருளும் (இவை), அல் (ஆகும்).
(2 பெயர்கள்) 66

### அல்கல்

அல்கல், (என்பது) தங்கலும், நாளும்.
(2 பெயர்கள்) 67

### அல்லி

வெண் நிற ஆம்பலும், காயா மரமும்,
அக இதழும் (இவை), அல்லி (என்று ஆகும்).
(3 பெயர்கள்) 68

### அவந்தி

கிளியும், உஞ்சைப் பதியும், அவந்தி.
(2 பெயர்கள்) 69

### அவலை

காடும், கடுப்பும், அவலையின் (கண்ண).
(2 பெயர்கள்) 70

### அழனம்

அழலும், பிணமும், அழனம் (என்ப).
(2 பெயர்கள்) 71

### அழுக்காறு

பொறாமையும், மனத்து அழுக்கும், அழுக்காறு (என்ப).
(2 பெயர்கள்) 72

### அளகம்

அளகம், புனலும், மயிரும் (ஆகும்).
(2 பெயர்கள்) 73

### அளக்கர்

கடலும், புவியும், கார்த்திகை நாளும்,
அளமும், சேறும், அளக்கர் (என்ப).
(5 பெயர்கள்) 74

### அளறு

நரகமும், சேறும், அளறு (என நவில்வர்).
(2 பெயர்கள்) 75

### அளி

அறுபதமும், அன்பும், கள்ளும், அளி (எனல்).
(3 பெயர்கள்) 76

### அளித்தல்

கொடுத்தலும், காத்தலும், செறித்தலும், அளித்தல்.
(3 பெயர்கள்) 77

### அளை

வளை, தயிர், புற்றும், அளை (ஆகும்மே).
(3 பெயர்கள்) 78

### அறல்

அறுதியும், அப்பும், அறல் (என மொழிப).
(2 பெயர்கள்) 79

### அறுவை

ஆடை, சித்திரை நாள், (இவை) அறுவை.
(2 பெயர்கள்) 80

### அனந்தம்

அளவு இல் பொருளும், பொன்னும், அனந்தம்.
(2 பெயர்கள்) 81

### அனந்தன்

நாலிரு தெய்வ அரவில் ஒன்றும்,
நான்முகன், அருகன், (ஆதி) அரன், மால்,
சேடன், அனந்தன் (என்றிசினோரே).
(6 பெயர்கள்) 82

### அனலி

தினகரன் (பெயரும்,) தீப் (பெயரும்) அனலி.
(2 பெயர்கள்) 83

### அன்றில்

அசுர நாளும், ஓர் பறவையும், அன்றில்.
(2 பெயர்கள்) 84

### அன்னம்

அடிசிலும், எகினமும், அன்னம் (ஆகும்).
(2 பெயர்கள்) 85

### அன்னை

தாயும், முன் பிறந்தாளும், அன்னை.
(2 பெயர்கள்) 86

### ஆகம்

யாக்கையும், மார்பும், ஆகம் (என்று உரைப்பர்).
(2 பெயர்கள்) 87

### ஆகாரம்

அசனமும், நெய்யும், படிவமும், ஆகாரம்.
(3 பெயர்கள்) 88

### ஆகு

எலியும், பெருச்சாளியும், ஆகு (ஆகும்).
(2 பெயர்கள்) 89

### ஆகுலம்

வருத்தமும், சத்த ஒலியும், ஆகுலம்.
(2 பெயர்கள்) 90

### ஆக்கம்

ஆக்கம், செல்வமும், திருமகளும் (ஆகும்).
(2 பெயர்கள்) 91

### ஆசாரம்

ஆடையும், ஒழுக்கமும், அருப் பெரு மழையும்,
அரசர் வாழ் கூடமும், ஆசாரம் (ஆகும்).
(4 பெயர்கள்) 92

### ஆசினி

ஈரப் பலா, மரச்சேகு, (இவை) ஆசினி.
(2 பெயர்கள்) 93

### ஆசு

மெய்புகு கருவியும், சடுதியும், குற்றமும்,
அற்பமும், ஓர் கவியும், ஆசு (எனல் ஆகும்).
(5 பெயர்கள்) 94

### ஆசை

ஆர்வமும், பொன்னும், திசையும், ஆசை.
(3 பெயர்கள்) 95

### ஆடல்

உரையும், கூத்தும், வெற்றியும், ஆடல்.
(3 பெயர்கள்) 96

### ஆடவர்

ஆண் பெயர், இளையோர், (என்று இவர்) ஆடவர்.
(2 பெயர்கள்) 97

### ஆடி

(வாய்ந்த) கண்ணுடியும், மாதத்து ஒன்றும்,
(ஆய்ந்த) உத்தராடமும், ஆடி (ஆகும்).
(3 பெயர்கள்) 98

### ஆடு

மேடமும், வெற்றியும், ஆடு (ஆகும்மே).
(2 பெயர்கள்) 99

### ஆணை

ஏவல், மெய்ப்பாடே, விறல் செயல், தடுத்தல்,
சூளுறவும், இலாஞ்சனையும், ஆணை (ஆகும்).
(6 பெயர்கள்) 100

### ஆண்மை

வலியும், வென்றியும், வாய்மையும், ஆண்மை.
(3 பெயர்கள்) 101

### ஆதி

ஆதி, பழமையும், அரனும், மாலும்,
முதலும், நேர் ஓட்டமும், (மொழியப் பெறுமே).
(5 பெயர்கள்) 102

### ஆம்பல்

இசையின் குழலும், கள்ளும், மூங்கிலும்,
அல்லியும், யானையும், ஆம்பல் (ஆகும்).
(5 பெயர்கள்) 103

### ஆரம்

சந்தனம், மணி வடம், தரளம், பதக்கம்,
ஆபரணப் பொதுவும், ஆரம் (ஆகும்).
(5 பெயர்கள்) 104

### ஆரல்

கார்த்திகை நாளும், ஒரு மீன் பெயரும்,
அங்காரகனும், மதிலும், ஆரல்.
(4 பெயர்கள்) 105

### ஆரவாரம்

ஆகுலமும், துக்கமும், ஆரவாரம் (ஆகும்).
(2 பெயர்கள்) 106

### ஆரை

புரிசை, புல் பாய், ஓர் புதலும், ஆரை.
(3 பெயர்கள்) 107

### ஆர்

ஆர்வும், கூர்மையும், ஆத்தியும், ஆர் (எனல்). 108

### மற்றும் ஆர்

தேர் ஆழி அகத்தில் செறி உறுப்பும் (ஆகும்).
(4 பெயர்கள்) 109

### ஆர்தல்

அணிதலும், நிறைதலும், உண்டலும், ஆர்தல்.
(3 பெயர்கள்) 110

### ஆர்ப்பு

அமரும், சிரிப்பும், ஆர்ப்பு (எனல் ஆகும்).
(2 பெயர்கள்) 111

### ஆர்வம்

ஆசையும், நரகத்து ஒன்றும், ஆர்வம்.
(2 பெயர்கள்) 112

### ஆர்வலர்

காதலர், வேட்டோர், கனிந்தோர், ஆர்வலர்.
(3 பெயர்கள்) 113

### ஆலம்

பூவும், நீரும், ஒரு மரப் பெயரும்,
(ஆழ் கடல்) விடமும், ஆலம் (ஆகும்).
(4 பெயர்கள்) 114

### ஆலவன்

அம்புலிப் பெயரும், ஆசையும், ஆலவன்.
(2 பெயர்கள்) 115

### ஆலாலம்

(அலர்ந்த) பூவும், நீரும், ஓர் மரமும்,
(அலை கடல்) விடமும், வாவலும், ஆலாலம்.
(5 பெயர்கள்) 116

### ஆலி

துளியும், (நீர் கொள்) ஆலாங் கட்டியும்,
மழையும், ஆலி (என வகுத்தனரே).
(3 பெயர்கள்) 117

### ஆலயம்

யானைக் கூடமும், நகரமும், தேவர்
கோட்டமும், ஆலயம் (என்னக் கூறும்).
(3 பெயர்கள்) 118

### ஆவணம்

உரிமை, அங்காடி, தெருவு, புனர் பூசம்,
(இவை ஒரு நான்கும்) ஆவணம் (என்ப).
(4 பெயர்கள்) 119

### ஆவலர்

காதலர், வேட்டோர், ஆவலர் (ஆகும்).
(2 பெயர்கள்) 120

### ஆழி, நேமி

சாகரம், தேர்க் கால், சக்கரம், வட்டம்,
மோதிரம், (என்ன மொழிந்தவை ஐந்தும்)
நேமியும், ஆழியும் (என நிகழ்த்தினரே).
*(5 பெயர்கள்)* 121

### ஆறு

வழியும், நதியும், ஓர் எண்ணும், ஆறு (எனல்).
*(3 பெயர்கள்)* 122

### ஆற்றல்

வலியும், வென்றியும், வாய்மையும், ஆண்மையும்,
மிகுதியும், பரித்தலும், ஞானமும், பொறையும்,
கூட்டுதலும், (இவை) ஆற்றல் (ஆகும்).
*(9 பெயர்கள்)* 123

### ஆனி

அழிவும், மூலமும், ஆனி (என்று ஆகும்).
*(2 பெயர்கள்)* 124

### இகத்தல்

பொறுத்தலும், நடத்தலும், இகத்தல் (ஆகும்).
*(2 பெயர்கள்)* 125

### இகல்

பகையும், வலியும், அமரும், இகல் (எனல்).
*(3 பெயர்கள்)* 126

### இகுளை

சுற்றமும், தோழியும், இகுளை (என்ப).
*(2 பெயர்கள்)* 127

### இசை

இசையே, புகழும், மொழியும், நாதமும்.
*(3 பெயர்கள்)* 128

### இடக்கர்

குடத்தின் பெயரும், மறை மொழியும், இடக்கர்.
*(2 பெயர்கள்)* 129

### இடம்

வீடும், வலியும், படுப்பதும், இடம் (எனல்).
*(3 பெயர்கள்)* 130

### இடி

உறுதி மொழி, பிண்டி, உருமும், இடியே.
*(3 பெயர்கள்)* 131

### இடை

இடமும், நுசுப்பும், நடுவும், இடை (எனல்).
*(3 பெயர்கள்)* 132

### இந்தளம்

நெருப்பு இடு கலனும், இசையும், இந்தளம்.
*(2 பெயர்கள்)* 133

### இபம்

மரத்தின் கொம்பும், யானையும், இபம் (எனல்).
*(2 பெயர்கள்)* 134

### இரசதம்

அரைப் பட்டிகையும், வெள்ளியும், இரசதம்.
*(2 பெயர்கள்)* 135

### இரதம்

புணர்ச்சியும், சூதமும், அளியும், தேரும்,
அரைஞாணும், சுவையும், இரதம் (என்ப).
*(6 பெயர்கள்)* 136

### இரலை

இரலைக் (கிளவி), மானின் ஏறும்,
தலை நாளும், ஊதும் கொம்பும் (ஆகும்).
*(3 பெயர்கள்)* 137

### இரவி

மலையும், அருக்கனும், வாணிகத் தொழிலும்,
இரவி (ஆம் என்று இசைக்கப்படுமே).
*(3 பெயர்கள்)* 138

### இராகம்

இசை, நிறம், கீதம், செம்மையும், இராகம்.
*(4 பெயர்கள்)* 139

### இருள்

நரகமும், மயக்கமும், கருமையும், இருள் (எனல்).
*(3 பெயர்கள்)* 140

### இரௌரவம்

ஆகமத்து ஒன்றும், நரகும், இரௌரவம்.
*(2 பெயர்கள்)* 141

### இலஞ்சி

மகிழ் மரம், கொப்பூழ், மடு, (இவை) இலஞ்சி.
*(3 பெயர்கள்)* 142

### இலம்பகம்

நுதல் அணி, அத்தியாயம், இலம்பகம்.
*(2 பெயர்கள்)* 143

### இலாங்கலி

நாளிகேரமும், செங்காந்தளும், இலாங்கலி.
*(2 பெயர்கள்)* 144

### இலயம்

கூத்தும், கூத்தின் விகற்பமும், இலயம்.
*(2 பெயர்கள்)* 145

### இல்

மனையும், குடியும், இல்லை என்றலும்,
இடமும், இராசியும், இல் (என்று ஆகும்).
*(5 பெயர்கள்)* 146

**இழுக்கு**

பிழைத்தல், பொல்லாங்கு, (இவை) இழுக்கு (ஆகும்).
*(2 பெயர்கள்)* 147

**இளி**

யாழின் ஓர் நரம்பும், சிரிப்பும், இளி (எனல்).
*(2 பெயர்கள்)* 148

**இறப்பு**

மிகுதியும், மரணமும், போக்கும், இறப்பே.
*(3 பெயர்கள்)* 149

**இருல்**

எரிநாள், தேன் கூடு, எருது, மீன், இருலே.
*(4 பெயர்கள்)* 150

**இறும்பு**

குன்றும், காடும், (மிடை) தூறும், இறும்பே. 151

**மற்றும் இறும்பு**

தாமரை (நறுந்தண்) பூவும் (சாற்றும்).
*(4 பெயர்கள்)* 152

**இறை**

சிறந்தோன் பெயரும், செம்மையும், சிறுமையும்,
தலைவனும், தலைமையும், பெருமையும், தங்கலும்,
அயனும், அரனும், ஆதியின் (பெயரும்,)
புள்ளின் இறகும், கடனும், வரையும்,
இல்லின் இறப்பும், கடமையும், இறையே.
*(15 பெயர்கள்)* 153

**இறைவை**

ஏணியும், புட்டிலும், இறைவை (ஆகும்).
*(2 பெயர்கள்)* 154

**ஈகை**

ஈங்கையும், கொடுத்தலும், பொன்னும், ஈகை.
*(3 பெயர்கள்)* 155

**ஈழம்**

இரணியம், சிங்களம், ஈழம் (ஆகும்).
*(2 பெயர்கள்)* 156

**உஞற்று**

உற்சாகமும், தப்பும், உஞற்று (என மொழிப).
*(2 பெயர்கள்)* 157

**உடல்**

யாக்கையும், ஆடகமும், உடல் (என்ப).
*(2 பெயர்கள்)* 158

**உடு**

அம்பும், ஆடும், அம்புத் தலையும்,
(ஒளி)வான் மீனும், கிடங்கும், நாவாய்
ஓட்டும் கோலும், உடு (எனல் ஆகும்).
*(6 பெயர்கள்)* 159

**உடை**

உடுக்கையும், செல்வமும், குடை வேலும், உடையே.
*(4 பெயர்கள்)* 160

**உணர்வு**

அறிவும், தெளிவும், ஒழிவும், உணர்வு (எனல்).
*(3 பெயர்கள்)* 161

**உண்டை**

படையின் வகுப்பும், திரட்சியும், உண்டை.
*(2 பெயர்கள்)* 162

**உத்தரம்**

வடக்கு, மேல், ஊழித் தீ, வார்த்தையும், உத்தரம்.
*(4 பெயர்கள்)* 163

**உத்தி**

உரகப் படப் பொறி, சுணங்கு, உரையாடல்,
(ஓர்) திரு உறுப்பும், உத்தி (ஆகும்).
*(4 பெயர்கள்)* 164

**உத்திரம்**

உத்திரம், (என்ப) ஓர் நாளுடனே,
சித்திர மாளிகை சேர்ந்தது ஓர் உறுப்பே.
*(2 பெயர்கள்)* 165

**உந்தி**

பேதையர் விரும்பி ஆடலும், நீரும்,
நீரின் சுழியும், தேரின் தட்டும்,
நாபியும், கடலும், நதியும், யாழின்
(ஓதும்) உறுப்பும், உந்தி (ஆகும்).
*(8 பெயர்கள்)* 166

**உப்பளம்**

அளமும், கழி நிலமும், உப்பளம் (ஆகும்).
*(2 பெயர்கள்)* 167

**உப்பு**

வேலையும், அதனில் விளைவும், விளையாட்டும்,
(ஓதும்) உவரும், இனிமையும், உப்பே.
*(5 பெயர்கள்)* 168

**உம்பர்**

உயர் நிலையோரும், மிசையும், உம்பர்.
*(2 பெயர்கள்)* 169

**உம்பல்**

யானையும், விலங்கின் ஆண்பால் பெயரும்,
குடியும், வழித் தோன்றலும், உம்பல் (ஆகும்).
*(4 பெயர்கள்)* 170

**உயவை**

கான்யாற்றுப் பெயர், கருவிளை, உயவை.
*(2 பெயர்கள்)* 171

**உரம்**

வலி, மார்பு, ஊக்கம், ஞானம், திடம், உரம்.
*(5 பெயர்கள்)* 172

**உரை**

சத்த ஒலி, விருத்தி, உரைத்தலும், உரையே.
*(3 பெயர்கள்)* 173

**உலகம்**

உலகம், புவி, திசை, உயர் குணம் (ஆமே).
*(3 பெயர்கள்)* 174

**உலகு**

அவனி, திசை, ஆகாயம், உயர்ந்தோர்,
குலம், (இவை) உலகு (எனக் கூறல் ஆகும்).
*(5 பெயர்கள்)* 175

**உலக்கை**

ஓண நாளும், உரோங்கலும், உலக்கை.
*(2 பெயர்கள்)* 176

**உலவை**

மாக்களின் மருப்பும், மரமும், மரத்தின்
கோடும், காற்றும், உலவையின் (கூற்றே).
*(4 பெயர்கள்)* 177

**உவளகம்**

பிரிதலும், இடையர் சேரியும், மதிலும்,
ஒரு சிறை இடமும், எயில் உறுப்பும், பள்ளமும்,
வாலியும், விசாலமும், உவளகம் (ஆகும்).
*(8 பெயர்கள்)* 178

**உவா**

அநு மதி, யானே, இளையோன், உவா (எனல்).
*(3 பெயர்கள்)* 179

**உழை**

இடமும், மானும், யாழ் நரம்பும், உழை.
*(3 பெயர்கள்)* 180

**உளை**

ஆண் பால் மயிரும், அஃறிணை மயிரும்,
பரியின் கழுத்து (அணி) மயிரும், இசையும்
சத்த ஒலியும், உளை (எனல் ஆகும்).
*(5 பெயர்கள்)* 181

**உறுகண்**

துக்கமும், நோயும், உறுகண் (என்ப).
*(2 பெயர்கள்)* 182

**உறுவன்**

அசோகு அமர் கடவுளும், முனிவனும், உறுவன்.
*(2 பெயர்கள்)* 183

**உறை**

நீர்த்துளி முதலாம் துளியும், (நீள் நோய்
போக்கும்) மருந்தும், பொருளும், போர்வையும்,
வெண்கலப் பெயரும், விழுமமும், பெருமையும்,
எண் குறிப்பு எண்ணிப் பொலிந்துழி இடுவதும்,
பால் உறு பிரையும், காரமும், உணவும்,
(குறை) உவர் நீரும், படையின் கூடும்,
ஓர் இடைச் சொல்லும், வாழ் நாளும், உறை (எனல்).
*(15 பெயர்கள்)* 184

**உறையுள்**

ஊர்ப் பொதுப் பெயரும், அகாரமும், உறையுள்.
*(2 பெயர்கள்)* 185

**உன்னல்**

மனமும், நினைவும், உன்னல் (ஆகும்).
*(2 பெயர்கள்)* 186

**ஊக்கம்**

உற்சாகம், வலி, மன மிகுதி, ஊக்கம்.
*(3 பெயர்கள்)* 187

**ஊழ்**

பழமையும், மரபும், பகையும், ஊழ் (எனல்).
*(3 பெயர்கள்)* 188

**ஊறு**

தீதும், கொலையும், தீண்டலும், ஊறு (எனல்).
*(3 பெயர்கள்)* 189

**ஊனம்**

பிணமும், கேடும், ஊனம் (ஆகும்).
*(2 பெயர்கள்)* 190

**எகினம்**

அன்னமும், கவரி மாவும், ஆண் மரமும், நாயும்,
புளியும், புளி மாப் (பெயரும்), எகினம்.
*(6 பெயர்கள்)* 191

**எக்கல்**

குவித்தலும், சொரிதலும், எக்கல் (என்ப).
*(2 பெயர்கள்)* 192

**எருவை**

கழுகும், செம்பும், கொறுக்கையும், எருவை.
*(3 பெயர்கள்)* 193

**எலி**

ஆகுவும், மதுவும், பூர நாளும், எலி.
*(3 பெயர்கள்)* 194

**எல்**

(நல்) ஒளிப் பெயரும், ஞாயிறும், பகலும்,
எல்லியும், இகழ்ச்சியும், எல் (என வைப்பர்).
*(5 பெயர்கள்)* 195

### எறுழ்

தண்டாயுதம், வலி, எறுழ் (ஆகும்மே).
(2 பெயர்கள்) 196

### என்றூழ்

(விரி) கதிரவனும், வெயிலும், என்றூழ்.
(2 பெயர்கள்) 197

### ஏதம்

குற்றமும், துன்பமும், ஏதம் (ஆகும்).
(2 பெயர்கள்) 198

### ஏதி

ஆயுதமும், துண்டமும், வாளும், ஏதி.
(3 பெயர்கள்) 199

### ஏந்தல்

பெருமையும், உயர்வும், தலைவனும், ஏந்தல்.
(3 பெயர்கள்) 200

### ஏமம்

இன்பமும், நீறும், பொன்னும், காவலும்,
இரவும், சேமமும், ஏமாப்பும், மயக்கமும்,
(என்பன) ஏமப் (பெயரன) (ஆகும்).
(8 பெயர்கள்) 201

### ஏரண்டம்

ஆமணக்கும், சித்திரமும், ஏரண்டம்.
(2 பெயர்கள்) 202

### ஏல்வை

மடுவும், பொழுதும், ஏல்வை (என்று ஆகும்).
(2 பெயர்கள்) 203

### ஏறு

விடையும், எருதும், விலங்கின் ஆண் பெயரும்,
இடியும், முதல் நாள், ஏறு (எனப்படுமே).
(5 பெயர்கள்) 204

### ஏனல்

தினைப் புனமும், தினையும், ஏனல் (ஆகும்).
(2 பெயர்கள்) 205

### ஏனாதியர்

மந்திரிப் பெயரும், சேனை காப்போரும்,
மறவரும், மயிர் வினைஞரும், ஏனாதியர்.
(4 பெயர்கள்) 206

### ஐயம்

பொழுதும், பிச்சையும், பிசசை கொள் கலனும்,
அனுமானமும், (இவை) ஐயம் (என்று ஆகும்).
(4 பெயர்கள்) 207

### ஐயன்

வானோர், முனிவர், மறையவர், ஆசான்,
சாத்தன், மூத்தோன், தகப்பனும், ஐயன்.
(7 பெயர்கள்) 208

### ஐயை

ஆரியை, விந்தை, அலகைக் கொடியாள்,
ஆசாரியன் பெருமாட்டியும், ஐயை.
(4 பெயர்கள்) 209

### ஒண்மை

அழகும், நன்றும், அறிவும், ஒண்மை.
(3 பெயர்கள்) 210

### ஒலி

ஓசையும், உருமும், காற்றும், ஒலியே.
(3 பெயர்கள்) 211

### ஒலியல்

அதழும், ஆடையும், மாலையும், ஆறும்,
ஒலியல் (என்னும் ஒண் பெயர் பெறுமே).
(4 பெயர்கள்) 212

### ஒழுக்கம்

வழியும், குலமும், ஆசாரமும், ஒழுக்கம்.
(3 பெயர்கள்) 213

### ஒளி

ஆதவன், மதி, புகழ், விளக்குடன், ஒளிப்பீடம்,
(ஓதும்) கனலும், கேட்டையும், ஒளி (எனல்).
(7 பெயர்கள்) 214

### ஒளி வட்டம்

சக்கரம், கண்ணாடி, (தான்) ஒளி வட்டம்.
(2 பெயர்கள்) 215

### ஓங்கல்

மலையும், தலைவனும், வலியோன் (பெயரும்),
உயர்வும், மேடும், மூங்கிலும், ஓங்கல்.
(6 பெயர்கள்) 216

### ஓடை

நீர்நிலைப் (பெயரும்), அகழும், கிரிநெறியும்,
மரமும், பட்டமும், (மற்று இவை) ஓடை.
(5 பெயர்கள்) 217

### ஓட்டம்

ஓட்டம், மேல் உதடும், தோல்வியும் (உரைக்கும்).
(2 பெயர்கள்) 218

### ஓணம்

மாயோன் நாளும், (வரு புனல்) ஆறும்,
ஓணம் (என்பர் உணர்ந்திசினோரே).
(2 பெயர்கள்) 219

### ஒதம்

ஈரமும், கடலின் திரையும், கடலும்,
ஓதம் (என்னும் பெயர்க்கு உரியனவே).
(3 பெயர்கள்) 220

### ஓதனம்

உணவும், சோறும், ஓதனம் (என்ப).
(2 பெயர்கள்) 221

### ஓதி

மலையும், பெண்பால் மயிரும், பூசையும்,
ஓதினவன் (பெயரும்), ஓதி (என்று உரைப்பர்).
(4 பெயர்கள்) 222

### ஓதை

புரிசையும், உள் உயர் நிலமும், அகரம்
ஆதியின் சத்தமும், ஒலியும், ஓதை.
(4 பெயர்கள்) 223

### ஓரி

அரிவையர் மயிர் ஒழித்து எல்லா மயிரும்,
முது நரியும், முசுவும், விலங்கின் சேக்கையும்,
ஓரி (என்பர்), ஓர் வள்ளலும் (உரைக்கும்).
(5 பெயர்கள்) 224

### ஓரை

மகளிர் ஈட்டமும், (மற்று) அவர் ஆடலும்,
அவர் விளையாடும் களமும், இராசியும்,
ஓர் இடைச் சொல்லும், குரவையும், ஓரை.
(6 பெயர்கள்) 225

### ஓலம்

ஒலியும், பாம்பும், ஓலம் (என்ப).
(2 பெயர்கள்) 226

### ஓவியர்

கண்ணுளரும், சித்திரரும், ஓவியர்.
(2 பெயர்கள்) 227

## 2. ககரவருக்கம்

### ககனம்

காடும், சேனையும், வெளியும், ககனம்.
(3 பெயர்கள்) 228

### கங்கம்

பருந்தும், சீப்பும், கங்கம் (என்ப).
(2 பெயர்கள்) 229

### கங்கு

கருந்தினையும், வரம்பின் அருகும், கங்கு (எனல்).
(2 பெயர்கள்) 230

### கசடு

குற்றமும், அழுக்கும், ஐயமும், கசடே.
(3 பெயர்கள்) 231

### கச்சம்

கவடும், அளவையும், காலும், கச்சம்.
(3 பெயர்கள்) 232

### கச்சை

கயிறும், மெய்புகு கருவியும், தழும்பும்,
கச்சை (என்று கருதப்படுமே).
(3 பெயர்கள்) 233

### கஞறல்

சிறுமையும், பொலிவும், கஞறல் (என்ப).
(2 பெயர்கள்) 234

### கஞ்சம்

தாளம், வெண்கலம், தாமரை, குல்லை,
கஞ்சம் (என்பர்), அப்பமும் (கழறுவர்).
(5 பெயர்கள்) 235

### கடகம்

வட்டமும், மதிலும், மலையின் பக்கமும்,
சேனையும், ஊரும், ஓர் ஆறு, எண்ணும்,
கங்கணப் (பெயரும்), பலகையும், கடகம்.
(9 பெயர்கள்) 236

### கடம்

அருஞ் சுரப் (பெயரும்), யாக்கையும், கயிறும்,
குடமும், கானமும், குஞ்சரத் திரளும்,
(மற்று) அதன் கொடிறும், மதமும், கடமே.
(8 பெயர்கள்) 237

### கடல்

மகராலயமும், அளவையும், கடல் (எனல்).
(2 பெயர்கள்) 238

### கடவை

கவர் இறுக்கு, ஏணி, குற்றமும், கடவை.
(3 பெயர்கள்) 239

### கடி

விரைவு, கூர்மை, வெருவுதல், காவல்,
வரைவு, சிறப்பு, மணத் தொழில், விளக்கம்,
புதுமை, ஐயம், மிகுதி, கரிப்பு,
நாற்றம், காலம், பேய், (இவை) கடியே.
(15 பெயர்கள்) 240

### கடிகை

கடிகைக் (கிளவி), நாழிகை, கபாடத்து
இடுதாள், கண்டமும், துண்டமும் (இசைக்கும்).
(4 பெயர்கள்) 241

**கடிப்பம்**

காதணி, அணிகலச் செப்பு, (இவை) கடிப்பம்.
(2 பெயர்கள்) 242

கடு

ஒரு மரப் பெயரும், விடமும், கடு (எனல்).
(2 பெயர்கள்) 243

**கடை**

இடம், வாயில், ஆவணம், ஈறும், கடையே.
(4 பெயர்கள்) 244

**கட்சி**

காடும், கூடும், கட்சி (ஆகும்).
(2 பெயர்கள்) 245

**கட்டளை**

கட்டளை, துலாமும், நிறை அறி கருவியும்,
உரை அறி கருவியும், அளவும், ஒப்பும் (ஆம்).
(5 பெயர்கள்) 246

**கணம்**

(கணம் என் கிளவி) கால நுட்பமும்,
திரளும், பேயும், திப்பிலியும், நோயும்,
உடுவும், வட்டமும், கணம் (எனலாகும்).
(7 பெயர்கள்) 247

**கணி**

வேங்கை மரமும், மருதமும், கணி (எனல்).
(2 பெயர்கள்) 248

**கணிச்சி**

தோட்டியும், மழுவும், தறிகையும், கணிச்சி.
(3 பெயர்கள்) 249

**கணை**

அம்பும், திரட்சியும், பூர நாளும், கணை.
(3 பெயர்கள்) 250

**கண்டகம்**

காடும், முள்ளும், கண்டகம் (ஆகும்).
(2 பெயர்கள்) 251

**கண்டம்**

கழுத்தும், மெய் புகு கருவியும், வாளும்,
நாடும், இடு திரையும், (நவிலும்) துண்டமும்,
சருக்கரைப் (பெயரும்), வெல்லமும், கண்டம்.
(8 பெயர்கள்) 252

**கண்டிகை**

அணி கலச் செப்பும், அக்க மணியும்,
வாச்சியத்து ஒன்றும், பதக்கமும், கண்டிகை.
(4 பெயர்கள்) 253

**கண்டூதி**

காஞ்சொறியும், சொறியும், கண்டூதி (ஆகும்).
(2 பெயர்கள்) 254

**கதலி**

வாழையும், தேறும், கதலி (என்ப). (2 பெயர்கள்) 255

**கதவு**

காவலும், கபாடமும், கதவு (எனலாகும்).
(2 பெயர்கள்) 256

**கதுப்பு**

ஆண் பெண் மயிரும், ஆவின் திரளும்,
கொடிறும், கதுப்பு (எனக் கூறப்படுமே).
(4 பெயர்கள்) 257

**கதை**

காரணம், தண்டாயுதம், மொழி, கதை (எனல்).
(3 பெயர்கள்) 258

**கந்தம்**

நாற்றமும், கிழங்கும், அணுவின் கூட்டமும்,
கழுத்து அடியும், இந்திரியமும், கந்தம் (என்ப).
(5 பெயர்கள்) 259

**கந்தரம்**

கழுத்து, மலைமுழை, முகிலும், கந்தரம்.
(3 பெயர்கள்) 260

**கந்தருவம்**

கானமும், குதிரையும், கந்தருவம் (என்ப).
(2 பெயர்கள்) 261

**கந்து**

யாக்கையின் மூட்டும், ஆதார நிலையும்,
கம்பமும், பண்டியுள் இருசும், கந்து (எனல்).
(4 பெயர்கள்) 262

**கந்துகம்**

பந்தும், குதிரையும், கந்துகம் (என்ப).
(2 பெயர்கள்) 263

**கமலம்**

வனசமும், புனலும், கமலம் (எனப்படும்).
(2 பெயர்கள்) 264

**கம்**

சலமும், வெளுப்பும், தலையின் பெயரும்,
ககனமும், விதியும், கம் (எனலாகும்).
(5 பெயர்கள்) 265

**கம்பம்**

நடுக்கமும், தூணும், நடுத் தறியும், கம்பம்.
(3 பெயர்கள்) 266

**கம்பலே**

துன்பமும், சத்த ஒலியும், கம்பலே.
(2 பெயர்கள்) 267

**கயம்**

குளமும், ஆழமும், நீரும், குறையும், களிறும்,
பெருமையும், மேன்மையும், கயம் (எனல்).
(7 பெயர்கள்) 268

**கயில்**

பிடர்த் தலே, பூணின் கடைப் புணர்வு, கயிலே.
(2 பெயர்கள்) 269

**கயினி**

அத்த நாளும், விதவையும், கயினி.
(2 பெயர்கள்) 270

**கரகம்**

துளியும், ஆலாங்கட்டியும், கங்கையும்,
கமண்டலமும், நீரும், கரகம் (ஆகும்).
(5 பெயர்கள்) 271

**கரணம்**

காரணமும், கூத்தின் விகற்பமும், மனத்தின்
பகுதியும், கணிதமும், கரணம் (எனலாகும்).
(4 பெயர்கள்) 272

**கரண்டம்**

அணிகலச் செப்பும், நீர்க் காக்கையும், கரண்டம்.
(2 பெயர்கள்) 273

**கரம்**

கழுதை, கை, கிரணம், நஞ்சு, இறை, கரம் (எனல்).
(5 பெயர்கள்) 274

**கரிணி**

கரியும், பிடியும், கரிணி (என்ப).
(2 பெயர்கள்) 275

**கரில்**

காழ்த்தலும், குற்றமும், கொடுமையும், கரில் (எனல்).
(3 பெயர்கள்) 276

**கரீரம்**

அகத்தி, மிடாவே, யானேப் பல் அடி,
கரீரம் (என்று கருதப்படுமே).
(3 பெயர்கள்) 277

**கலாபம்**

மேகலேயும், மணிக் கோவையும், மயிலின்
தோகையும், கலாபம் (எனச் சொல்லப்படுமே).
(3 பெயர்கள்) 278

**கலாம்**

கொடுமையும், சினமும், கலாம் (எனலாகும்).
(2 பெயர்கள்) 279

**கலி**

வலியும், ஒலியும், கடலும், ஓர் பாவும்,
கடை யுகப் பெயரும், கலி (என்று உரைப்பர்).
(5 பெயர்கள்) 280

**கலிங்கம்**

வானம் பாடிப் புள்ளும், ஆடையும்,
ஊர்க் குருவிப் பெயரும், ஓர் நாடும், கலிங்கம்.
(4 பெயர்கள்) 281

**கலே**

மகரமும், துகிலும், மரத்தின் கவடும்,
பிறை நிரம்புதலும், ஆண் முசுப் பெயரும்,
மானின் ஏறும், கல்வியும், சேகும்,
கால நுட்பமும், நூலும், கலே (எனல்).
(10 பெயர்கள்) 282

**கல்**

அருவியின் ஓசையும், சிலேயும், கல் (எனல்).
(2 பெயர்கள்) 283

**கவடு**

புரோசைக் கயிறும், கப்பும், கவடு. (2 பெயர்கள்) 284

**கவந்தம்**

புனலும், செக்கும், (புகன்றிடு) கடியும்,
தலேக் குறைப் பிணமும், கவந்தம் (ஆகும்).
(4 பெயர்கள்) 285

**கவலே**

கவர் நெறி, அச்சம், செந்தினே, கவலே.
(3 பெயர்கள்) 286

**கவனம்**

காடும், விரைவும், கவனம் (என்ப).
(2 பெயர்கள்) 287

**கவி**

குதிரை வாய் பெய் கருவியும், குரங்கும்,
புலமையில் ஒன்றும், வெள்ளியும், கவி (எனல்).
(4 பெயர்கள்) 288

**கவிகை**

குடையும், கொடுத்தலும், (கூறுப) கவிகை.
(2 பெயர்கள்) 289

**கவை**

எள் இளங் காயும், ஆயிலிய நாளும்,
கவரும், காடும், கவை (எனலாகும்).
(4 பெயர்கள்) 290

**கழி**

நுகத் தொளை கோப்பதும், மிகுதிப் பெயரும்,
கடல் புறத்து அமர்வதும், கழி (என்று ஆகும்).
(3 பெயர்கள்) 291

**கழிவு**

காலி, மிகுதியும், கழிவு (எனலாகும்).
(2 பெயர்கள்) 292

**கழுது**

பேயும், வண்டும், பரணும், கழுதே.
(3 பெயர்கள்) 293

**கழை**

கரும்பும், மூங்கிலும், புனர்தமும், கழை (எனல்).
(3 பெயர்கள்) 294

**களபம்**

களபமும், யானைக் கன்றும், களபம்.
(2 பெயர்கள்) 295

**களம்**

கரு நிறமும், செருக் களமும், கழுத்தும்,
களரும், விடமும், இடமும், களமே.
(6 பெயர்கள்) 296

**களரி**

காடும், செருச் செய் களமும், களரி.
(2 பெயர்கள்) 297

**களிறு**

ஏனமும், சுறா முதல் இவற்றின் ஏறும்,
யானையும், அத்த நாளும், களிறே. (4 பெயர்கள்) 298

**கள்**

மதுவும், தேனும், சோர்வும், கள் (ஆம்).
(3 பெயர்கள்) 299

**கள்வன்**

(கட)கரிப் (பெயரும்), கரு நிற மகனும்,
கர்க்கடக இராசியும், ஞெண்டும், கள்வன்.
(4 பெயர்கள்) 300

**கறங்கு**

சத்த ஒலியும், சுழலும், கறங்கே. (2 பெயர்கள்) 301

**கறுப்பு**

கரு நிறமும், சினக் குறிப்பும், கறுப்பே.
(2 பெயர்கள்) 302

**கறை**

உதிரமும், மாசும், உரலும், நிறமும்,
கடுவும், இறையும், கருமையும், கறையே.
(7 பெயர்கள்) 303

**கனம்**

பாரமும், மேகமும், கனம் (எனப்படுமே).
(2 பெயர்கள்) 304

**கனலி**

தினகரனும், அங்கியும், கனலி (என்ப).
(2 பெயர்கள்) 305

**கன்று**

ஆன் கன்று (இனமும்), சிறுமையும், கையின்
வளையும், இளைய மரமும், கன்றே. (4 பெயர்கள்) 306

**கன்னல்**

நாழிகையும், நாழிகை வட்டிலும், கட்டியும்,
கரகமும், கரும்பும், கன்னல் (என்று ஆகும்).
(5 பெயர்கள்) 307

**கன்னி**

அழிவு இல் மாதரும், அழிவு இல் பொருளும்,
இளைமையும், அத்த நாளும், இராசியும்,
கவுரியும், துர்க்கையும், யாறும், கன்னி.
(8 பெயர்கள்) 308

**கா**

சோலையும், தோள் சுமையும், துலாமும், கா (எனல்).
(3 பெயர்கள்) 309

**காகுளி**

இசை, மிடற்று ஓசை, தவிசு, (இவை) காகுளி.
(3 பெயர்கள்) 310

**காசு**

குற்றமும், மணியும், கோழையும், காசே.
(3 பெயர்கள்) 311

**காசை**

நாணல், புல்பிடி, காசை (என்ப). (2 பெயர்கள்) 312

**காஞ்சி**

ஒரு மரப் பெயரும், ஓர் இசைப் பெயரும்,
கச்சிப் பதியும், மேகலையும், காஞ்சி.
(4 பெயர்கள்) 313

**காடு**

கானும், இடமும், காடு (எனலாகும்).
(2 பெயர்கள்) 314

**காண்டம்**

இடு திரைப் (பெயரும்), படலமும், காண்டம்.
(2 பெயர்கள்) 315

**காண்டை**

தவத்தோர் இடமும், கல் பாழியும், காண்டை.
(2 பெயர்கள்) 316

**காத்திரம்**

யாக்கையும், உறுப்பும், யானை முன் காலும்,
சீற்றமும், கனத்தலும், காத்திரம் (ஆகும்).
(5 பெயர்கள்) 317

**காந்தாரம்**

காடும், ஓர் இசையும், காந்தாரம் (ஆகும்).
(2 பெயர்கள்) 318

**காப்பு**

புரிசையும், உள் உயர் நிலமும், காப்பு (எனல்).
(2 பெயர்கள்) 319

**காமரம்**

இசை, இசைப் பொதுப் (பெயர்), அடுப்பும், காமரம்.
(3 பெயர்கள்) 320

**காயம்**

காழ்த்தலும், யாக்கையும், காயம் (என்ப).
(2 பெயர்கள்) 321

**காரி**

வடுகக் கடவுளும், சனியும், சாத்தனும்,
கருமையும், ஒரு புள்ளும், காரி (ஆகும்).
(5 பெயர்கள்) 322

**கார்**

கருதிய கருமம் கடை முடிவு அளவும்
தவிராச் சினமும், வெள்ளாடும், புனலும்,
நாகமும், மேகமும், தமமும், மழைபடு
காலமும், கருமையும், கார் (எனும் கட்டுரை). 323

**மற்றும் கார்**

ஆகு மயிரும், அழகும் (மற்று அதற்கே).
(10 பெயர்கள்) 324

**கார்த்திகை**

கொற்றவை, ஓர் நாள், மாதமும், கார்த்திகை.
(3 பெயர்கள்) 325

**காலம்**

காலையும், விடியலும், காலம் (ஆகும்).
(2 பெயர்கள்) 326

**கால்**

காலே, வலிமையும், காற்றும், கூற்றும்,
தாளும், பொழுதும், தறியும், வழியும்,
அளவையும், தேரின் உருளும் (ஆகும்).
(9 பெயர்கள்) 327

**காவி**

கள்ளும், குவளையும், ஓர் கல்லும், காவி.
(3 பெயர்கள்) 328

**காழகம்**

கரு நிறமும், புடைவையும், கடாரமும், காழகம்.
(3 பெயர்கள்) 329

**காளம்**

காளம், கழுவும், கறுப்பும், நஞ்சும்,
வாத்தியத்து ஒன்றும் (வகுக்கப்படுமே).
(4 பெயர்கள்) 330

**காளை**

பாலைத் தலைவனும், சிறுவனும், காளை.
(2 பெயர்கள்) 331

**கானம்**

காடும், இசையும், கானம் (ஆகும்).
(2 பெயர்கள்) 332

**கானல்**

கழிக் கரைச் சோலையும், மலைப் புறச் சோலையும்,
கதிரவன் ஒளியும், கழியும், பேய்த் தேரும்,
உவரும், முரம்பும், உப்பளமும், கானல்.
(8 பெயர்கள்) 333

**கான்**

காடும், கந்தமும், கான் (என மொழிப).
(2 பெயர்கள்) 334

**கிஞ்சுகம்**

செந் நிறமும், முள் முருக்கும், கிஞ்சுகம்.
(2 பெயர்கள்) 335

**கிடக்கை**

தராதலப் (பெயரும்), சயனமும், கிடக்கை.
(2 பெயர்கள்) 336

**கிடுகு**

பலகையும், தேர் மரச் சுற்றும், கிடுகு (எனல்).
(2 பெயர்கள்) 337

**கிட்டி**

தாளமும், தலை ஈற்றுப் பசுவும், கிட்டி.
(2 பெயர்கள்) 338

**கிம்புரி**

முடியினது உறுப்பும், தாங்கியும், கிம்புரி.
(2 பெயர்கள்) 339

**கிழமை**

வாரமும், குணமும், காணியும், கிழமை.
(3 பெயர்கள்) 340

**கிளர்**

ஒளியும், (கோட்டின்) மலர்த் தாதும், கிளர் (ஆம்).
(2 பெயர்கள்) 341

**கிளை**

கேளும், மூங்கிலும், யாழ் இசையும், கிளை.
(3 பெயர்கள்) 342

**கிள்ளை**

கிளியும், குதிரையும், கிள்ளை (எனப்படும்).
(2 பெயர்கள்) 343

**கின்னரம்**

யாழின் பெயரும், நீர்ப் பறவையும், கின்னரம்.
(2 பெயர்கள்) 344

**கீசகம்**

குரங்கும், மூங்கிலும், கீசகம் (ஆகும்).
(2 பெயர்கள்) 345

**கீரம்**

கிளியும், பாலும், கீரம் (ஆகும்).
(2 பெயர்கள்) 346

**குக்குடம்**

கோழியும், பறவை நாகமும், குக்குடம்.
(2 பெயர்கள்) 347

**குசலம்**

குணமும், மாட்சிமையும், குசலம் (என்ப).
(2 பெயர்கள்) 348

**குஞ்சம்**

குறளும், நாழியும், குறளையும், குஞ்சம்.
(3 பெயர்கள்) 349

**குஞ்சி**

குன்றியும், ஆண்பால் மயிரும், குஞ்சி.
(2 பெயர்கள்) 350

**குடம்**

பதினொர் ஆடலில் ஒன்றும், கொட்டிக் கை குவித்தலும்,
கும்பமும், பசுவும், நகரமும், கரும்பின்
கட்டியும், இடங்கரும், குடம் (எனக் கழறும்).
(7 பெயர்கள்) 351

**குடம்பை**

குடம்பை, முட்டையும், கூடும் (ஆகும்).
(2 பெயர்கள்) 352

**குடி**

ஊர்ப் பொதுப் பெயரும், புருவமும், (அன்றிக்)
குலமும், கோத்திரமும், குடி (என்று ஆகும்).
(4 பெயர்கள்) 353

**குடிஞை**

கூகையும், புள் பொதுவும், யாறும், குடிஞை.
(3 பெயர்கள்) 354

**குடுமி**

கொற்றமும், உச்சியும், மயிரும், குடுமி.
(3 பெயர்கள்) 355

**குணம்**

குடமும், நிறமும், நூலும், குணம் (எனல்).
(3 பெயர்கள்) 356

**குணில்**

குறுந்தடியும், கடிப்பும், கவணும், குணிலே.
(3 பெயர்கள்) 357

**குணுங்கர்**

தோல் கருவியோரும், புலைஞரும், குணுங்கர்.
(2 பெயர்கள்) 358

**குண்டலம்**

குண்டலம், விசும்பும், குழையும் (ஆகும்).
(2 பெயர்கள்) 359

**குண்டு**

துலையும், குதிரையும், ஆழமும், குண்டு (எனல்).
(3 பெயர்கள்) 360

**குத்திரம்**

மலையின் பெயரும், வஞ்சனையும், குத்திரம்.
(2 பெயர்கள்) 361

**குமரி**

யாமளை, விந்தை, அழிவு இலா மாதர்,
ஏழ் மாதர்களில் எண்ணும் ஓர் அணங்கு,
ஓர் நதிப் (பெயரும்), கற்றாழையும், குமரி.
(6 பெயர்கள்) 362

**குமுதம்**

(நெடுந்) திசை யானையில் ஒன்றும், நெய்தலும்,
அடுப்பும், ஒலியும், தருப்பையும், குமுதம்.
(5 பெயர்கள்) 363

**கும்பம்**

(வெங்)கரி நெற்றியும், (மிக்க) நீர்க் குடமும்,
கும்ப இராசியும், கும்பம் (ஆகும்).
(3 பெயர்கள்) 364

**கும்பி**

யானையும், நரகமும், சேறும், கும்பி.
(3 பெயர்கள்) 365

**குயம்**

கொங்கையும், அரிவாளும், குயம் (எனப்படுமே).
(2 பெயர்கள்) 366

**குயில்**

குறித்திடும் உரையும், கோகிலமும், தொளையும்,
(எண்ணும் இம் மூன்றும்) குயில் (என மொழிப).
*(3 பெயர்கள்) 367*

**குரல்**

கிண்கிணி மாலையும், (கிளர்) நெல் கதிரும்,
யாழின் ஓர் நரம்பும், கோதையர் மயிரும்,
புள்ளின் சிறகும், குரல் (என மொழிப).
*(5 பெயர்கள்) 368*

**குரவை**

கடலும், கை கோத்து ஆடலும், குரவை.
*(2 பெயர்கள்) 369*

**குரு**

குரவனும், நோயும், நிறமும், பாரமும்,
அரசனும், குரு (எனலாகும் என்ப).
*(5 பெயர்கள்) 370*

**குருகு**

(கொல்) உலை மூக்கும், குருக்கத்தி மரமும்,
வெண்மையும், மூல நாளும், நாரையும்,
கோழியும், கையின் வளையும், குருகு (எனல்).
*(7 பெயர்கள்) 371*

**குருதி**

செவப்பும், குசனும், உதிரமும், குருதி.
*(3 பெயர்கள்) 372*

**குருந்து**

குருந்து, முருந்தும், குருக்கத்தியும், பிள்ளையும்.
*(3 பெயர்கள்) 373*

**குலம்**

இரேவதி நாளும், வருணமும், விலங்கின்
கூட்டமும், கோயிலும், குலம் (என்று ஆகும்).
*(4 பெயர்கள்) 374*

**குவடு**

மலையும், கணமும், கவடும், குவடே.
*(3 பெயர்கள்) 375*

**குவலயம்**

குவளையும், புவியும், குவலயம் (என்ப).
*(2 பெயர்கள்) 376*

**குழல்**

இரு பால் மயிரும், இசையின் கருவியும்,
தொளையுடைப் பொருளும், குழல் (என்று ஆகும்).
*(4 பெயர்கள்) 377*

**குழை**

ககனமும், சங்கும், சேறும், காடும்,
குண்டலமும், தளிரும், குழலும், குழையே.
*(7 பெயர்கள்) 378*

**குளகம்**

குற்றெழுத்துச் செய்யுளும், மரக்காலும், குளகம்.
*(2 பெயர்கள்) 379*

**குளம்**

குட்டமும், நுதலும், சருக்கரையும், குளம்.
*(3 பெயர்கள்) 380*

**குளிர்**

இலை மூக்கு அரி கருவியும், சீதமும், கவணும்,
குட முழவும், ஞெண்டும், குளிர் (எனலாகும்).
*(5 பெயர்கள்) 381*

**குறிஞ்சி**

ஐவகை நிலத்தில் ஓர் நிலமும், ஓர் மரமும்,
ஓர் இசையும், யாழும், ஓர் பண்ணும், குறிஞ்சி.
*(5 பெயர்கள்) 382*

**குறும்பொறை**

குறிஞ்சி நிலத்து ஊரும், குன்றும், காடும்,
குறும்பொறை (என்று கூறப்படுமே).
*(3 பெயர்கள்) 383*

**குன்று**

வருண நாளும், மலையும், குன்றே. *(2 பெயர்கள்) 384*

**கூடம்**

மனையும், மறைவும், கொல்லன் சம்மட்டியும்,
குவட்டின் உச்சியும், கூடம் (ஆகும்).
*(4 பெயர்கள்) 385*

**கூட்டம்**

குழாமும், மலையின் முடியும், கூட்டம்.
*(2 பெயர்கள்) 386*

**கூந்தல்**

கோதையர் மயிரும், மயில் தோகையும், கூந்தல்.
*(2 பெயர்கள்) 387*

**கூரல்**

கோதையர் மயிர், புள் சிறகு, (இவை) கூரல்.
*(2 பெயர்கள்) 388*

**கூலம்**

அங்காடியும், வரம்பும், புனல் கரையும், பாகலும்,
பசுவும், பண்ணிகாரமும், விலங்கின்
வாலும், கூலம் (ஆகும் என்ப).
*(7 பெயர்கள்) 389*

**கூவிரம்**

கொடிஞ்சியும், தேரும், கூவிளமும், கூவிரம்.
*(3 பெயர்கள்) 390*

**கூழை**

பெண்ணின் மயிரும், புள் சிறகும், கூழை.
*(2 பெயர்கள்) 391*

**கூளி**

ஏறும், பேயும், இடபமும், ஈட்டமும்,
கூளி (என்பர்), குடும்பமும் (அதற்கே).
*(5 பெயர்கள்) 392*

**கூளியர்**

குறவரும், வீரரும், கூளியர் (ஆகும்).
*(2 பெயர்கள்) 393*

**கூற்று**

கூற்று, (என் கிளவி) உரையும், காலனும்.
*(2 பெயர்கள்) 394*

**கேசம்**

ஆண், பெண், அஃறிணை, மயிர், (இவை) கேசம்.
*(3 பெயர்கள்) 395*

**கேசரம்**

மலரின் தாதும், மகிழ் மரமும், கேசரம்.
*(2 பெயர்கள்) 396*

**கேடகம்**

பலகையும், கேடு இல் ஊரும், பரிசையும், கேடகம்.
*(3 பெயர்கள்) 397*

**கேழ்**

ஒளியும், நிறமும், ஒப்பும், கேழே.
*(3 பெயர்கள்) 398*

**கை**

ஒப்பனை, படை உறுப்பு, ஒழுக்கம், சிறுமை,
கரமும், பின்பிறந்தாளும், கையே. *(6 பெயர்கள்) 399*

**கொக்கு**

ஒரு மரப் பெயரும், மூல நாளும், குதிரையும்,
விருகமும், குரண்டமும், கொக்கு (எனல்).
*(5 பெயர்கள்) 400*

**கொடி**

வல்லியும், கேதுவும், படமும், கொடி (எனல்).
*(3 பெயர்கள்) 401*

**கொடிறு**

கடைவாய்ப் புறமும், கருவிப் பற்றும்,
(குரு மகிழ்) பூசமும், கொடிறு (எனல் ஆகும்).
*(3 பெயர்கள்) 402*

**கொண்டல்**

குணக்கு எழு காற்றும், மேகமும், கொண்டல்.
*(2 பெயர்கள்) 403*

**கொண்டை**

இலந்தைக் கனி, மயிர்முடி, (இவை) கொண்டை.
*(2 பெயர்கள்) 404*

**கொண்மூ**

கொண்மூ, மேகம், ஆகாயம் (இரண்டே).
*(2 பெயர்கள்) 405*

**கொந்தளம்**

மாதர் மயிரும், மற்றவர் சுருளும்,
குழலின் கொத்தும், கொந்தளம் (ஆகும்).
*(3 பெயர்கள்) 406*

**கொம்மை**

கொங்கையும், கை குவித்துக் கொட்டலும், அழகும்,
வலியும், மார்பும், திடரும், கொம்மை.
*(6 பெயர்கள்) 407*

**கொற்றி**

கோ இளங் கன்றும், மோடியும், கொற்றி.
*(2 பெயர்கள்) 408*

**கொன்**

ஓர் இடைச் சொல்லும், வறிதும், பெருமையும்,
காலமும், அச்சமும், கொன் (எனும் கட்டுரை).
*(5 பெயர்கள்) 409*

**கோ**

ஆவும், தலைவனும், ஒளியும், அண்டமும்,
பாரும், சொல்லும், பகழியும், கண்ணும்,
குலிசமும், திக்கும், சலமும், கோவே.
*(11 பெயர்கள்) 410*

**கோகிலம்**

குயிலும், குரங்கும், கோகிலம் (என்ப).
*(2 பெயர்கள்) 411*

**கோசம்**

மதில் உறுப்பும், பண்டாரமும், முட்டையும்,
ஆணின் குறியும், புத்தகமும், கோசம்.
*(5 பெயர்கள்) 412*

**கோசிகம்**

பட்டும், புடைவையும், கோசிகம் (ஆகும்).
*(2 பெயர்கள்) 413*

**கோடகம்**

குதிரையும், புதுமையும், முடி உறுப்பும், கோடகம்.
*(3 பெயர்கள்) 414*

### கோடரம்

எட்டியும், மரக் கொம்பும், பொதும்பரும்,
குதிரையும், தேரின் மொட்டும், கோடரம். *415*

### மற்றும் கோடரம்

குரங்கின் (பெயரும் கூறுவர் அதற்கே).
*(6 பெயர்கள்) 416*

### கோடிகம்

பூவின் தட்டும், புடைவையும், கோடிகம்.
*(2 பெயர்கள்) 417*

### கோடு

மலை அதன் முகடும், வரம்பும், நீர்க் கரையும்,
மாக்களின் மருப்பும், ஊது கொம்பும்,
சங்கும், மரத்தின் கொம்பும், கோடு (எனல்).
*(7 பெயர்கள்) 418*

### கோடை

வெயிலும், காந்தளும், மேல் திசைக் காற்றும்,
குதிரையும், வேனிலும், கோடை (ஆகும்).
*(5 பெயர்கள்) 419*

### கோட்டம்

மருத நிலத்து ஊர், பாசறை இடமே,
நாடு, நகரம், ஆன் நிரை, படப்பை,
குரவு, வளைவு, கோவில், ஓளவியம்,
நறும் புதலும், உண்பனவும், கோட்டம் (ஆகும்).
*(12 பெயர்கள்) 420*

### கோட்டி

கோட்டமும், வாயிலும், அலைச்சலும், கோட்டி.
*(3 பெயர்கள்) 421*

### கோணம்

வளைவும், தோட்டியும், கூனிய வாளும்,
குதிரையும், மூக்கும், கோணம் (ஆகும்).
*(5 பெயர்கள்) 422*

### கோணல்

கூனும், வளைவும், கோணல் (என்ப).
*(2 பெயர்கள்) 423*

### கோதை

மாலையும், மாதரும், கைத்தோல் கட்டியும்,
உடும்பும், குழலும், காற்றும், சேரனும்,
ஒழுங்கும், இயமும், கோதை (என்ப).
*(9 பெயர்கள்) 424*

### கோத்திரம்

குடியும், மலையும், கோத்திரம் (ஆகும்).
*(2 பெயர்கள்) 425*

### கோரம்

கொடுமையும், வட்டிலும், குதிரையும், கோரம்.
*(3 பெயர்கள்) 426*

### கோலம்

அழகும், இலந்தையும், (ஆங்கு) அதன் கனியும்,
பன்றியும், பீர்க்கும், பாக்கும், நீர் ஓட்டமும்,
கோலம் (என்னும் குறியன ஆகும்).
*(7 பெயர்கள்) 427*

### கோளி

பூவாது காய்க்கும் மரமும், அத்தியும்,
கொழிஞ்சியும், (என்று இவை) கோளி (என்ப).
*(3 பெயர்கள்) 428*

### கோள்

அலர் கதிர் முதலிய கிரகம் ஒன்பதும்,
வலியும், கொள்கையும், (வல்) இடையூறும்,
கொலையும், பிசினமும், கோள் (எனலாகும்).
*(6 பெயர்கள்) 429*

### கௌசிகம்

மருத யாழ் இசையும், கூகையும், பட்டும்,
சுடர் நிலைத் தண்டும், (சொல்லின்) கௌசிகம்.
*(4 பெயர்கள்) 430*

### கௌவை

கள்ளும், துன்பமும், பழி மொழியும், கௌவை.
*(3 பெயர்கள்) 431*

## 3 . சகர வருக்கம்

### சகடம்

சகடும், பண்டியும், சிகரமும், சகடம்.
*(3 பெயர்கள்) 432*

### சகுந்தம்

புள் பொதுப் பெயரும், கழுகும், சகுந்தம்.
*(2 பெயர்கள்) 433*

### சகுனம்

புள் பொதுவும், நிமித்தமும், கிழங்கும், சகுனம்.
*(3 பெயர்கள்) 434*

### சகுனி

பறவை, நிமித்தம் பார்ப்பவன், சகுனி.
*(2 பெயர்கள்) 435*

### சங்கம்

சங்கும், ஓர் எண்ணும், கணைக்காலும், சவையும்,
நுதலும், கவிஞரும், சங்கம் (என்ப).
*(6 பெயர்கள்) 436*

*சசி*

சசியே, இந்திரன் தாரமும், மதியமும்.

*(2 பெயர்கள்) 437*

*சடம்*

கொடுமையும், பொய்யும், மெய்யும், சடம் (எனல்).

*(3 பெயர்கள்) 438*

*சடை*

வேணியும், வேரும், கிடையும், சடை (எனல்).

*(3 பெயர்கள்) 439*

*சதம்*

எண்ணும், புள்ளின் இறகும், சதம் (எனல்).

*(2 பெயர்கள்) 440*

*சதி*

தாள ஒத்தும், அயன் நாளும், வட்டமும், கற்பாட்டியும், சோறும், சதி (எனலாகும்).

*(5 பெயர்கள்) 441*

*சத்தி*

(ஓங்கிய) உமையும், வேலும், குடையும், கான்றலும், வலியும், சூலமும், சத்தி.

*(6 பெயர்கள்) 442*

*சத்திரம்*

அதிசயம், விடாப்படை, குடை, இரும்பு, ஊண்சாலை, வேள்வியும், வேலும்; சத்திரம் (ஆகும்).

*(7 பெயர்கள்) 443*

*சந்தி*

அந்திப் பெயரும், கழையும், தெருவின் சந்தியும், இசைப்பும், சந்தி (ஆகும்).

*(4 பெயர்கள்) 444*

*சமன்*

நடுவும், நமனும், சமன் (ஆகும்மே).

*(2 பெயர்கள்) 445*

*சமித்தல்*

பொறுத்தலும், நடத்தலும், சமித்தல் (என்ப).

*(2 பெயர்கள்) 446*

*சம்பு*

சங்கரனும், மாலும், அயனும், அருகனும், நரியும், நாவலும், சம்பு (ஆகும்).

*(6 பெயர்கள்) 447*

*சரகம்*

தேனீப் (பெயரும்), வண்டும், சரகம்.

*(2 பெயர்கள்) 448*

*சரணம்*

தாளும், நகரமும், (அறை) புகலும், சரணம்.

*(3 பெயர்கள்) 449*

*சரபம்*

(தனி) வரை ஆடும், சிம்புள், சரபம்.

*(2 பெயர்கள்) 450*

*சரம்*

மணி வடமும், கொறுக்கச்சியும், அம்பும், தனிமையும், நடையும், ஓர் இருதுவும், சரமே.

*(6 பெயர்கள்) 451*

*சரி*

வழி, திரள், கைவளை, சரி (எனலாகும்).

*(3 பெயர்கள்) 452*

*சலாகை*

நாராசமும், சவளமும், நன் மணியும், சலாகை.

*(3 பெயர்கள்) 453*

*சலாங்கு*

பொய்யாப் புள்ளும், மசகமும், சலாங்கே.

*(2 பெயர்கள்) 454*

*சல்லியம்*

சல்லியம், செஞ்சந்து, எய், என்பு, பாணம்.

*(4 பெயர்கள்) 455*

*சவட்டல்*

சுவைத்தலும், கோறலும், சவட்டல் (ஆகும்).

*(2 பெயர்கள்) 456*

*சவம்*

பிணமும், மூங்கிலும், சவம் (எனலாகும்).

*(2 பெயர்கள்) 457*

*சவி*

அழகும், மணிக் கோவையும், சுவையும், செவ்வையும், சாறுவும், காந்தியும், சவி (எனலாகும்).

*(6 பெயர்கள்) 458*

*சாகம்*

கொச்சை, சிறு கீரை, தேக்கு, சாகம்.

*(3 பெயர்கள்) 459*

*சாகினி*

கீரைத் திரளும், சேம்பும், சாகினி.

*(2 பெயர்கள்) 460*

*சாடி*

சாடி, கோள்மொழி, தாழி, புடைவை (ஆம்).

*(3 பெயர்கள்) 461*

**சாதகம்**

பூதமும், வானம்பாடிப் புள்ளும்,
சாதகம் (என்பர்), சனனமும் (அதற்கே).
*(3 பெயர்கள்) 462*

**சாதம்**

சாதம், மெய்யும், சோறும், பிறப்பும் (ஆம்).
*(3 பெயர்கள்) 463*

**சாதி**

தேறலும், குலமும், சிறு சண்பகமும்,
தேக்கும், பிரம்பும், சாதி (என்ப).
*(5 பெயர்கள்) 464*

**சாபம்**

சபித்தலும், வில்லும், சாபம் (என்ப).
*(2 பெயர்கள்) 465*

**சாமம்**

யாமமும், வேதமும், இரவும், பச்சையும்,
சாமம் (என்பர்), கறுப்பும் (சாற்றும்).
*(5 பெயர்கள்) 466*

**சாமி**

குரவனும், பொன்னும், தலைவனும், முருகனும்,
அருகனும், இளமை யாட்டியும், சாமி.
*(6 பெயர்கள்) 467*

**சாம்பல்**

அடலை, ஒடுங்கல், பழம்பூ, (இவை) சாம்பல்.
*(3 பெயர்கள்) 468*

**சாரங்கம்**

சாதகப் புள்ளும், மானும், சாரங்கம்.
*(2 பெயர்கள்) 469*

**சாரம்**

அதகம், இனிமை, மரச் சேகும், சாரம்.
*(3 பெயர்கள்) 470*

**சாரல்**

மலையின் பக்கமும், மருத யாழ்த் திறத்து
ஓர் இசைப் பெயரும், சாரல் (என்ப).
*(2 பெயர்கள்) 471*

**சாரிகை**

மண்டில வரவும், நாகணவாய்ப் புள்ளும்,
சுங்கமும், சுழல் காற்றும், சாரிகை (ஆகும்).
*(4 பெயர்கள்) 472*

**சார்ங்கம்**

மாயோன் தனுவொடு, வில்லும், சார்ங்கம்.
*(2 பெயர்கள்) 473*

**சாலம்**

மதில், ஆச்சா மரம், வலை, சாலேகம்,
சவையும், குறளை மொழியும், சாலம்.
*(6 பெயர்கள்) 474*

**சாலி**

நெல் பொது, வேரி, அருந்ததி, சாலி.
*(3 பெயர்கள்) 475*

**சாலேகம்**

வாதாயனமும், மலர் மொட்டும், சாலேகம்.
*(2 பெயர்கள்) 476*

**சாலை**

கோயிலும், குதிரைப் பந்தியும், சாலை.
*(2 பெயர்கள்) 477*

**சாறு**

விழவும், குலையும், வேரியும், சாறே.
*(3 பெயர்கள்) 478*

**சானகி**

மூங்கிலும், திருவும், சானகி (என்ப).
*(2 பெயர்கள்) 479*

**சானு**

மலையும், மலைப் பக்கமும், முழந்தாளும், சானு.
*(3 பெயர்கள்) 480*

**சான்றோன்**

மிருக சீரிடமும், மிக்கோன் பெயரும்,
(பெருகிய) கதிரின் (பெயரும்), சான்றோன்.
*(3 பெயர்கள்) 481*

**சிகண்டி**

மயிலும், பாலை யாழ்த் திறத்து ஓர் ஓசையும்,
அலியும், சிகண்டி (ஆம் என விளம்புவர்).
*(3 பெயர்கள்) 482*

**சிகரி**

எலியும், கருநாரையும், (இவை) சிகரி.
*(2 பெயர்கள்) 483*

**சிகழிகை**

மயிர்முடி, வாசிகை, கோவை, சிகழிகை.
*(3 பெயர்கள்) 484*

**சிகி**

கேதுவும், மயிலும், நெருப்பும், சிகியே.
*(3 பெயர்கள்) 485*

**சிக்கம்**

குடுமியும், உறியும், சீப்பும், சிக்கம்.
*(3 பெயர்கள்) 486*

**சிதடன்**

குருடனும், அறிவில்லோனும், சிதடன்.

*(2 பெயர்கள்) 487*

**சிதம்**

சிதம், வான் மீனும், வெளுப்பும், ஞானமும் (ஆகும்), சயமுறப்படலும் (ஆகும்).

*(4 பெயர்கள்) 488*

**சிதர்**

துவலையும், வண்டும், துணியும், சிதரே.

*(3 பெயர்கள்) 489*

**சிதலை**

செல்லும், துணியும், நோயும், சிதலை.

*(3 பெயர்கள்) 490*

**சித்திரம்**

அழகும், காடும், ஆமணக்கும், செய் கோல் வடிவும், பொய்யை மெய்யாப் புணர்த்தலும், சிறப்பும், விம்மிதமும், ஓர் பாடலும், சித்திரம்.

*(8 பெயர்கள்) 491*

**சிந்து**

நீரும், தேசமும், யாறும், கடலும், (கூறும்) முச்சீரும், குறளும், சிந்து.

*(6 பெயர்கள்) 492*

**சிந்தூரம்**

திலகமும், செந்நிறமும், செங்குடையும், புளியும், யானையும், யானை முகமும், சிந்தூரம்.

*(6 பெயர்கள்) 493*

**சிமிலி**

சிள்வீடும், உறியும், குடுமியும், சிமிலி.

*(3 பெயர்கள்) 494*

**சிமையம்**

சிகரமும், மலையும், சிமையம் (ஆகும்).

*(2 பெயர்கள்) 495*

**சிரகம்**

வட்டிலும், தலைத்திராணமும், சிரகம்.

*(2 பெயர்கள்) 496*

**சிலீமுகம்**

அம்பும், முலைக் கண்ணும், அளியும், சிலீமுகம்.

*(3 பெயர்கள்) 497*

**சிலை**

வில், மலை, ஓர் மரம், சிராவணமும், சிலை.

*(4 பெயர்கள்) 498*

**சில்லி**

தேர் உருளும், கீரையும், வட்டமும், சில்லி.

*(3 பெயர்கள்) 499*

**சில்லை**

பகண்டையும், சிள்வீடும், கிலுகிலுப்பையும், சில்லை.

*(3 பெயர்கள்) 500*

**செவப்பு**

சினமும், சினக்குறிப்பும், செந்நிறமும், செவப்பே.

*(3 பெயர்கள்) 501*

**சிவை**

(கொல்) உலை மூக்கும், கோமான் இடத்து உறை செல்வி பெயரும், வேரும், சிவை (எனல்).

*(3 பெயர்கள்) 502*

**சிறுமை**

துக்கமும், நோயும், அற்பமும், சிறுமை.

*(3 பெயர்கள்) 503*

**சிறை**

புள்ளின் இறகும், கரையின் பக்கமும், ஏரியும், இடமும், காவலும், சிறையே.

*(5 பெயர்கள்) 504*

**சினை**

கருவின் (பெயரும்), முட்டையும், உறுப்பும், (செழு) மரக் கோடும், சினை (எனலாகும்).

*(4 பெயர்கள்) 505*

**சீகரம்**

மலையும், அதன் சேண் முகடும், சிரமும், திரையும், துவலையும், கரகமும், சீகரம்.

*(6 பெயர்கள்) 506*

**சீதம்**

குளிரும், புனலும், மேகமும், சீதம்.

*(3 பெயர்கள்) 507*

**சீப்பு**

கதவின் தாழும், கங்கமும், சீப்பே.

*(2 பெயர்கள்) 508*

**சீருள்**

செம்பும், ஈயமும், ஆக்கமும், சீருள்.

*(3 பெயர்கள்) 509*

**சீர்**

தாளமும், செல்வமும், தண்டாயுதமும், சீர்த்தியும், காவும், பாரமும், சீர் (எனல்).

*(6 பெயர்கள்) 510*

**சீவனி**

செவ்வழி யாழ்த்திறத்து ஓர் இசைப் பெயரும்,
உயிர் தரும் மருந்தும், சீவனி (ஆகும்).
*(2 பெயர்கள்)* *511*

**சீவன்**

வியாழமும், உயிரும், சீவன் (என்ப).
*(2 பெயர்கள்)* *512*

**சுகம்**

இன்பமும், கிளியும், சுகம் (என விளம்புவர்).
*(2 பெயர்கள்)* *513*

**சுக்கை**

மாலையும், வான மீனும், சுக்கை.
*(2 பெயர்கள்)* *514*

**சுசி**

சுசியே, சுத்தமும், கோடையும், (அன்றி)
அனலின் (பெயர்க்கும் அபிதானம்மே).
*(3 பெயர்கள்)* *515*

**சுடர்**

தழலும், விளக்கும், சந்திராதித்தரும்,
ஒளியும், சுடர் (என்று உரைத்தனர் புலவர்).
*(5 பெயர்கள்)* *516*

**சுடிகை**

சுட்டி, (மணி)முடி, உச்சி, சுடிகை.
*(3 பெயர்கள்)* *517*

**சுண்டன்**

சூரனும், சதய நாளும், சுண்டன்.
*(2 பெயர்கள்)* *518*

**சுதை**

(சுடு) சுண்ணச் சாந்தும், புதல்வியும், அமிழ்தும்,
கறவாத் தேனும், சுதை (எனலாகும்).
*(4 பெயர்கள்)* *519*

**சுந்தரி**

சூரனும், சசியும், துர்க்கையும், சுந்தரி.
*(3 பெயர்கள்)* *520*

**சுபம்**

தருமம், நன்மை, மோக்கமும், சுபமே.
*(3 பெயர்கள்)* *521*

**சும்மை**

ஊர்ப் பொதுப் பெயரும், நாடும், சுமையும்,
ஒலியும், நெல் முதல் போரும், சும்மை.
*(5 பெயர்கள்)* *522*

**சுரிகை**

மெய்புகு கருவி, பத்திரம், சுரிகை.
*(2 பெயர்கள்)* *523*

**சுரியல்**

ஆண் பெண் மயிரும், சுழியும், சுரியல்.
*(3 பெயர்கள்)* *524*

**சுருங்கை**

நுழை வாயிலும், நீர்ப் போகியும், சுருங்கை.
*(2 பெயர்கள்)* *525*

**சுருதி**

ஒலியும், வேதமும், சுருதி (என்ப). *(2 பெயர்கள்)* *526*

**சுரை**

ஆவின் முலையும், அலாபும், தொண்டியும்,
உள்தொளைப் பெயரும், சுரை (என உரைப்பர்).
*(4 பெயர்கள்)* *527*

**சுவர்க்கம்**

தெய்வ லோகமும், முலையும், சுவர்க்கம்.
*(2 பெயர்கள்)* *528*

**சுவல்**

மேடும், பிடரும், தோளின் மேலும்,
குரகதக் குசையும், (கூறும்) சுவலே.
*(4 பெயர்கள்)* *529*

**சுவவு**

புத்தேள் நாடும், புள்ளின் மூக்கும்,
சுண்டன் பெயரும், சுவவு (என்று ஆகும்).
*(3 பெயர்கள்)* *530*

**சூதகம்**

தோற்றமும், வாலாமையும், முலைக் கண்ணும், சூதகம்.
*(3 பெயர்கள்)* *531*

**சூரன்**

சூரன், (என் கிளவி) சூரன் பெயரும்,
தீரனும், நாயும் (தெரிக்கப்படுமே). *532*

**மற்றும் சூரன்**

அருக்கனும், தீயும், (ஆகும் மற்று அதற்கே).
*(5 பெயர்கள்)* *533*

**சூர்**

சூர் (என் கிளவி), அச்சமும், துன்பமும்,
பிணியும், தெய்வப் பெயரும் (ஆகும்).
*(4 பெயர்கள்)* *534*

**சூழி**

சுனையும், கரி முகபடாமும், சூழி.
*(2 பெயர்கள்)* *535*

**செச்சை**

வெட்சி, வெள்ளாட்டு ஆண் பெயர், செச்சை.
(2 பெயர்கள்) 536

**செடி**

பாவம், குணம் இன்மை, நாற்றம், புதல், செடி.
(4 பெயர்கள்) 537

**செந்து**

ஓசையும், நரகத்து ஒன்றும், நரியும்,
சீவனும், அணுவும், செந்து (ஆகும்).
(5 பெயர்கள்) 538

**செப்பம்**

தெருவு, நெஞ்சு, நடு, செம்மையும், செப்பம்.
(4 பெயர்கள்) 539

**செம்புலம்**

பறந்தலை, பாலைநிலம், செம்புலமே.
(2 பெயர்கள்) 540

**செம்மல்**

பெருமையும், வலியும், பழம் பூவும், ஈசனும்,
சிறுவனும், தலைவனும், செம்மல் (என்ப).
(6 பெயர்கள்) 541

**செய்யல்**

சேறும், ஒழுக்கமும், காவலும், செய்யல்.
(3 பெயர்கள்) 542

**செல்**

இடியும், மேகமும், சிதலையும், செல் (எனல்).
(3 பெயர்கள்) 543

**செவிலி**

முன் பிறந்தாளும், கோள்தாயும், செவிலி.
(2 பெயர்கள்) 544

**செவ்வி**

போதும், பருவமும், பொழுதும், செவ்வி.
(3 பெயர்கள்) 545

**செழுமை**

வனப்பும், கொழுப்பும், மாட்சிமையும், செழுமை.
(3 பெயர்கள்) 546

**சேக்கை**

சயனமும், முலையும், சேக்கை (ஆகும்). 547

**மற்றும் சேக்கை**

விலங்கின் துயில் இடப் (பெயரும் விளம்புவர்).
(3 பெயர்கள்) 548

**சேடன்**

இளையோன் பெயரும், அடிமையும், பாங்கனும்,
அனந்தனும், ஓர் சாதிப் பெயரும் சேடன்.
(5 பெயர்கள்) 549

**சேடி**

சிலதியும், விஞ்சையர் சேரியும், சேடி.
(2 பெயர்கள்) 550

**சேடு**

திரட்சி, அழகு, நன்று, பெருமையும், சேடே.
(4 பெயர்கள்) 551

**சேண்**

உயரமும், நீளமும், அகலமும், சேணே.
(3 பெயர்கள்) 552

**சேதகம்**

சேறும், செந்நிறமும், சேதகம் (என்ப).
(2 பெயர்கள்) 553

**சேத்து**

செந்நிறப் பெயரும், ஒப்பும், அசைச் சொலும்,
உறுப்பும், கருத்தும், ஐயமும், சேத்து (எனல்).
(6 பெயர்கள்) 554

**சேய்**

குமரனும், செவ்வாய்க் கோளும், செவப்பும்,
சிறுவனும், நீளமும், சேய் (எனலாகும்).
(5 பெயர்கள்) 555

**சொல்**

நெல்லும், புகழும், சொல்லும், சொல்லே.
(3 பெயர்கள்) 556

**சோதி**

இரவியும், (எனை ஆள்) ஈசன் (பெயரும்),
ஒரு நாள் மீனும், ஒளியும், சோதி.
(4 பெயர்கள்) 557

**சோனை**

ஓண மீனும், ஒழியாது சொரியும்
மாரியும், சோனை (என்ன வகுப்பர்).
(2 பெயர்கள்) 558

**சௌரி**

கன்னன் பெயரும், கார் வண்ணன் பெயரும்,
சனியின் பெயரும், இயமனும், சௌரி. 559

**மற்றும் சௌரி**

(கருதில்) ஓர் நதிக்கும் (கருதப்படுமே).
(5 பெயர்கள்) 560

### 4. ஞகர வருக்கம்

#### ஞாட்பு

சமரும், பாரமும், களமும், ஞாட்பே.
(3 பெயர்கள்) 561

#### ஞாளி

நாயும், கள்ளும், ஞாளி (என்ப).
(2 பெயர்கள்) 562

#### ஞெகிழி

நூபுரம், தீ உறு விறகு, தீக் கடை கோல்,
ஞெகிழி (என்னும் நெறிய ஆகும்).
(3 பெயர்கள்) 563

#### ஞெள்ளல்

பள்ளமும், தெருவும், மேன்மையும், ஞெள்ளல்.
(3 பெயர்கள்) 564

### 5. தகர வருக்கம்

#### தகடு

ஐமையும், இலையும், தகடு (எனலாகும்).
(2 பெயர்கள்) 565

#### தகை

அருளும், குணமும், தளர்வும், தகையே.
(3 பெயர்கள்) 566

#### தகைமை

அழகும், பண்பும், பெருமையும், தகைமை.
(3 பெயர்கள்) 567

#### தடம்

தடாகப் பெயரும், மலை அடியும், தடம்.
(2 பெயர்கள்) 568

#### தடவு

பகுதியும், வளைவும், பெருமையும், தடவு (எனல்).
(3 பெயர்கள்) 569

#### தடி

தனுவும், உலக்கையும், தசையும், உடும்பும்,
தண்டும், வயலும், மின்னலும், தடியே.
(7 பெயர்கள்) 570

#### தட்டு

நடுவண் தேரும், (ஒண்) திரிகையும், பரிசையும்,
வட்டப் பெயரும், தட்டு (எனலாகும்).
(4 பெயர்கள்) 571

#### தட்டை

கரடிகை, கிளி கடி கருவி, சின்னம்,
தினைத் தாள், மூங்கில் (என்று இவை), தட்டை.
(5 பெயர்கள்) 572

#### தண்டம்

தந்திரமும், கரி செல் வழியும், தண்டம்.
(2 பெயர்கள்) 573

#### தண்டு

தடியும், தானையும், குழாயும், வீணையும்,
மிதுனமும், உலக்கையும், தண்டு (எனலாகும்).
(6 பெயர்கள்) 574

#### தண்ணடை

நாடும், மருதத்து ஊரும், தண்ணடை.
(2 பெயர்கள்) 575

#### தண்ணம்

மழுவும், ஒரு கண் பறையும், தண்ணம்.
(2 பெயர்கள்) 576

#### தண்மை

தாழ்வும், எளிமையும், தண்மை (என்ப).
(2 பெயர்கள்) 577

#### தத்தை

முன் பிறந்தாளும், கிளியும், தத்தை. (2 பெயர்கள்) 578

#### தமம்

இராகுவும், இருளும், தமம் (என இசைப்பர்).
(2 பெயர்கள்) 579

#### தமிழ்

இனிமையும், நீர்மையும், தமிழ் (எனலாகும்).
(2 பெயர்கள்) 580

#### தம்பம்

கம்பமும், மெய்புகு கருவியும், தம்பம்.
(2 பெயர்கள்) 581

#### தரணி

தலமும், மலையும், தபனனும், தரணி.
(3 பெயர்கள்) 582

#### தவிசு

மெத்தையும், தடுக்கும், பீடமும், தவிசே.
(3 பெயர்கள்) 583

#### தழல்

கிளி கடி கருவியும், நெருப்பும், தழலே.
(2 பெயர்கள்) 584

**தளம்**

தாழியும், சாந்தும், தளம் (ஆகும்மே).
(2 பெயர்கள்) 585

**தளிமம்**

சயனமும், அழகும், மெத்தையும், தளிமம்.
(3 பெயர்கள்) 586

**தளை**

ஆண்பால் மயிர், தொடர்பு, சிலம்பும், தளையே.
(3 பெயர்கள்) 587

**தனஞ்சயன்**

(எவ்வம் இல்) மாருதத்து ஒன்றும், நெருப்பும்,
சவ்விய சாசியும், தனஞ்சயன் (ஆகும்).
(3 பெயர்கள்) 588

**தனம்**

கோ இளங் கன்றும், முத்திரையும், கொங்கையும்,
சாந்தும், பொன்னும், தனம் (எனலாகும்).
(5 பெயர்கள்) 589

**தனு**

யாக்கையும், வில்லும், சிறுமையும், தனுவே.
(3 பெயர்கள்) 590

**தன்மம்**

புண்ணியமும், வேதமும், தன்மம் (ஆகும்).
(2 பெயர்கள்) 591

**தன்மை**

தன்மையும், பெருமையும், நன்மையும், தன்மை.
(3 பெயர்கள்) 592

**தாணு**

(துங்க) மலையும், தூணும், நிலையும்,
சங்கரன் (பெயரும்), தாணு (ஆகும்).
(4 பெயர்கள்) 593

**தாண்டவம்**

தாவலும், ஆடலும், செலுத்தலும், தாண்டவம்.
(3 பெயர்கள்) 594

**தாதி**

அடிமையும், செவிலியும், பரணியும், தாதி.
(3 பெயர்கள்) 595

**தாமம்**

மாலையும், மலரும், மணிவடப் பெயரும்,
நகரமும், ஒளியும், கயிறும், கொன்றையும்,
தாமம் (ஆகச் சாற்றினர் புலவர்.)
(7 பெயர்கள்) 596

**தாரம்**

வல் இசைப் பெயரும், வாழ்க்கைத் துணைவியும்,
யாழின் நரம்பும், அரும் பண்டமும், வெண் தாதும்,
தராவும், நாவும், தாரம் (என்ப).
(7 பெயர்கள்) 597

**தாரை**

வழியும், கண்ணின் மணியும், சுவடும்,
உடுவும், நேர் ஓடுதலும், கூர்மையும்,
வாத்தியத்து ஒன்றும், வீழ் மழையும், தாரை.
(8 பெயர்கள்) 598

**தார்**

மாலையும், மலரும், கொடிப் படைப் பெயரும்,
கிண்கிணி மாலையும், தார் (எனக் கிளத்துப).
(4 பெயர்கள்) 599

**தாலம்**

ஞாலமும், கூந்தல் கமுகும், நாவும்,
(கோலிய) கலமும், பனையும், தாலம்.
(5 பெயர்கள்) 600

**தாழை**

நாளி கேரமும், கைதையும், தாழை.
(2 பெயர்கள்) 601

**தாழ்மை**

இளிவும், கீழ்மையும், எண்மையும், தாழ்மை.
(3 பெயர்கள்) 602

**தாள்**

காலின் பெயரும், முயற்சியும், கபாடத்
தாளும், நெல்அரி புல்லும், தாளே.
(4 பெயர்கள்) 603

**தாறு**

அளவும், குலையும், தாறு (எனலாகும்).
(2 பெயர்கள்) 604

**தானம்**

தந்தியின் மதமும், வலியும், கொடுத்தலும்,
சுவர்க்கமும், வேட்டலும், அறமும், தானம்.
(6 பெயர்கள்) 605

**தானை**

ஆடையும், படையும், ஆயுதமும், தானை.
(3 பெயர்கள்) 606

**திகிரி**

மலையும், சக்கரமும், வட்டப் பெயரும்,
தேரும், உருளையும், மூங்கிலும், திகிரி.
(6 பெயர்கள்) 607

### திகை

திசையும், சுணங்கும், திகை (எனலாகும்).
(2 பெயர்கள்) 608

### திங்கள், மதி

சந்திரன் (பெயரும்), மாதமும், (சாற்றில்)
திங்களும், மதியம்ம் (இரண்டும் செப்பும்).
(2 பெயர்கள்) 609

### திட்டை

மேடும், உரலும், வேதிகையும், திட்டை.
(3 பெயர்கள்) 610

### திணை

குலமும், நிலமும், ஒழுக்கமும், திணையே.
(3 பெயர்கள்) 611

### திதி

பக்கமும், காத்தலும், நிலைபேறும், திதியே.
(3 பெயர்கள்) 612

### திரு

திரு, இலக்குமியும்,செல்வமும் (ஆகும்).
(2 பெயர்கள்) 613

### திலம்

எள்ளும், மஞ்சாடியும், திலம் (எனப்படுமே).
(2 பெயர்கள்) 614

### தீ

தீங்கும், நெருப்பும், தீ (எனலாகும்).
(2 பெயர்கள்) 615

### தீங்கு

தீமையும், குற்றமும், தீங்கு (எனலாகும்).
(2 பெயர்கள்) 616

### துகள்

தோமும், நுண்பொடியும், துகள் (எனலாகும்).
(2 பெயர்கள்) 617

### துங்கம்

அகலமும், பெருமையும், உயரமும், துங்கம்.
(3 பெயர்கள்) 618

### துஞ்சல்

துஞ்சல், மரணமும், நிலை பேறும், உறக்கமும்.
(3 பெயர்கள்) 619

### துடி

கால நுட்பமும், குமரன் ஆடலும்,
ஏலமும், ஏழ் மாதர் நிருத்தமும், சிறு பறையும்,
துடி (என் கிளவி சொல்லுவர் புலவர்).
(5 பெயர்கள்) 620

### துணங்கறல்

இருளும், விழவும், துணங்கறல் (என்ப).
(2 பெயர்கள்) 621

### துணி

சோதியும், சீரையும், துண்டமும், துணி (எனல்).
(3 பெயர்கள்) 622

### துண்டம்

துணிபடல், வதனம், மூக்கு, சாரை,
துண்டம், புள்ளின் மூக்கும் (ஆகும்).
(5 பெயர்கள்) 623

### துத்தம்

யாழின் நரம்பும், ஒரு கல் விகற்பமும்,
பாலும், ஓர் இசையும், உதரமும், துத்தம்.
(5 பெயர்கள்) 624

### துத்தி

அரவின் பொறியும், (ஆங்கு) ஒரு புதலும்,
(துதை தரு) சுணங்கும், துத்தி (ஆகும்).
(3 பெயர்கள்) 625

### துப்பு

அரக்கும், பவளமும், ஆயுதப் பொதுவும்,
துணையும், வலியும், பொலிவும், நெய்யும்,
அனுபவமும், தூய்மையும், துப்பு (எனலாகும்).
(9 பெயர்கள்) 626

### தும்பி

சுரையும், யானையும், வண்டும், தும்பி.
(3 பெயர்கள்) 627

### துருக்கம்

குங்கும மரமும், காடும், துருக்கம்.
(2 பெயர்கள்) 628

### துருத்தி

தோலும், யாற்றிடைக் குறையும், துருத்தி.
(2 பெயர்கள்) 629

### துரோணம்

சிம்புள் பறவையும், வில்லும், காக்கையும்,
தும்பையும், பதக்கும், துரோணம் (ஆகும்).
(5 பெயர்கள்) 630

### துவக்கு

தோலும், பிணக்கும், துவக்கு (என மொழிப).
(2 பெயர்கள்) 631

### துளி

மழையும், ஆலியும், சிதர்தலோடு,
பெண் ஆமையும், துளி (என்னப் பேசுவர்).
(4 பெயர்கள்) 632

### துனி

துன்பமும், புலவி நீட்டலும், துனி (எனல்).
(2 பெயர்கள்) 633

### தூ

தூயது, ஊற்றம், பகை, தசையும், தூவே.
(4 பெயர்கள்) 634

### தூக்கு

துலாமும், உறியும், கூத்தும், பாட்டும்,
உசாவுதலும், (இவை) தூக்கு (எனலாகும்).
(5 பெயர்கள்) 635

### தூங்கல்

சோம்பும், நிரம்பாத் துயிலும், தூங்கல்.
(2 பெயர்கள்) 636

### தூசு

புடைவையும், யானைப் புரோசைக் கயிறும்,
படையினது உறுப்பும், தூசு (எனப் பகர்வர்).
(3 பெயர்கள்) 637

### தூபம்

புகையின் பெயர், நீர்க் கடம்பு, (இவை) தூபம்.
(2 பெயர்கள்) 638

### தூம்பு

வாயிலும், உள் தொளைப் பொருளும், மூங்கிலும்,
மரக்காலும், மதகும், தூம்பு (எனலாகும்).
(5 பெயர்கள்) 639

### தூரியம்

துகில், பறை, முரசு, பேர் எருதும், தூரியம். 640

### மற்றும் தூரியம்

வாத்தியப் பெயர், பொதி எருதும் (வரையார்).
(6 பெயர்கள்) 641

### தெய்

தெய், (என் கிளவி) கோறலும், தெய்வமும்.
(2 பெயர்கள்) 642

### தெரிவை

காரிகைப் பெயரும், கன்னி இராசியும்,
(தேருங்காலைத்) தெரிவை (ஆகும்).
(2 பெயர்கள்) 643

### தெவ்

கொள்கையும், பகையும், தெவ் (எனலாகும்).
(2 பெயர்கள்) 644

### தென்

தென், இசை, வனப்பும், தெற்கும், ஓர் பாடலும்.
(4 பெயர்கள்) 645

### தே

தே, (என் கிளவி) கொளற்பாடும், தெய்வமும்.
(2 பெயர்கள்) 646

### தேசிகம்

திசைச் சொலும், அழகும், காந்தியும், பொன்னும்,
ஓர் கூத்தின் (பெயரும்), தேசிகம் (என்ப).
(5 பெயர்கள்) 647

### தேசிகன்

தேசாந்தரி, குரு, வணிகன், தேசிகன்.
(3 பெயர்கள்) 648

### தேம்

தித்திப்பும், தேசமும், நாற்றமும், தேம் (எனல்).
(3 பெயர்கள்) 649

### தேயம்

காயமும், நாடும், தேயம் (என்ப).(2 பெயர்கள்) 650

### தேயு

அனலும், அருளும், தேயு (ஆகும்).
(2 பெயர்கள்) 651

### தேர்தல்

ஆராய்தலும், கொள்கையும், தேர்தல் (ஆகும்).
(2 பெயர்கள்) 652

### தேள்

விருச்சிக இராசியும், அனுட நாளும்,
தெறுக்கால் (அதனொடு), தேள் (என்று ஆகும்).
(3 பெயர்கள்) 653

### தொங்கல்

மாலையும், பீலிக் குஞ்சமும், தூக்கமும்,
மயிலின் தோகையும், மயிரும், தொங்கல்.
(5 பெயர்கள்) 654

### தொடி

கங்கணம், கைவளை, ஒரு பலம், தொடியே.
(3 பெயர்கள்) 655

### தொடு

மருத நிலமும், வஞ்சனைப் பெயரும்,
தோட்டமும், (என்று இவை) தொடு (எனலாகும்).
(3 பெயர்கள்) 656

### தொண்டை

யானைத் துதிக்கையும், கோவையும், தொண்டை.
(2 பெயர்கள்) 657

### தொத்து

தொழும்பும், மலர்த் திரளும், தொத்து (எனப்படுமே).
(2 பெயர்கள்) 658

**தொய்யல்**

இன்பமும், சேறும், தொய்யல் (என்ப).
*(2 பெயர்கள்) 659*

**தொழு**

தொழுவமும், இரேவதி நாளும், தொழு (எனல்).
*(2 பெயர்கள்) 660*

**தொறு**

தொழுவும், ஆன்நிரையும், தொகுதியும், தொறு (எனல்).
*(3 பெயர்கள்) 661*

**தோடு**

திரளும், பூவின் இதழும், தோடு (எனல்).
*(2 பெயர்கள்) 662*

**தோட்டி**

கதவும், யானைக் கருவியும், தோட்டி.
*(2 பெயர்கள்) 663*

**தோணி**

இரேவதியும், வங்கமும், எயிலினது உறுப்பும்,
அம்பும், தோணியும், மிதவையும் (ஆகும்).
*(5 பெயர்கள்) 664*

**தோல்**

யானையும், வனப்பும், அதளும், தோல்வியும், தோல்
(என்று உரைப்பர்), தோல் பலகையும் (ஆகும்).
*(5 பெயர்கள்) 665*

**தோள்**

புயமும், கையும், தோள் (எனப் புகல்வர்).
*(2 பெயர்கள்) 666*

**தோற்றம்**

வலியும், பிறப்பும், காண்டலும், தோற்றம்.
*(3 பெயர்கள்) 667*

**தோன்றல்**

சுதனும், தலைவனும், தோன்றல் (ஆகும்).
*(2 பெயர்கள்) 668*

## 6. நகர வருக்கம்

**நகம்**

உகிரும், மலையும், நகம் (எனலாகும்).
*(2 பெயர்கள்) 669*

**நகை**

எயிறும், சிரிப்பும், இன்பமும், ஒளியும்,
நகை (என் கிளவி நவிலப் பெறுமே).
*(4 பெயர்கள்) 670*

**நடை**

வழியும், ஒழுக்கமும், போக்கும், நடையே.
*(3 பெயர்கள்) 671*

**நந்தி**

ஏறும், ஈசனும், நந்தி (என்ப). *(2 பெயர்கள்) 672*

**நந்து**

பறவையும், நத்தையும், சங்கும், நந்து (எனல்).
*(3 பெயர்கள்) 673*

**நயந்தோர்**

காதலரும், வேட்டோரும், நயந்தோர் (ஆகும்).
*(2 பெயர்கள்) 674*

**நயம்**

நன்றும், இன்பமும், நியாயமும், நயம் (எனல்).
*(3 பெயர்கள்) 675*

**நரந்தம்**

நாரத்தையும், கத்தூரியும், நரந்தம். *(2 பெயர்கள்) 676*

**நரை**

வெண்ணிறமும், ஆன் ஏறும், கவரி மாவும்,
பலிதமும், பறவையில் ஒன்றும், நரையே.
*(5 பெயர்கள்) 677*

**நலம்**

(சொல்லிய) விருச்சிக இராசியும், சுகமும்,
(நல்) உபகாரமும், நலம் (என்று ஆகும்).
*(3 பெயர்கள்) 678*

**நவம்**

ஒன்பதும், புதுமையும், (ஒண்) கார் காலமும்,
(என்பன மூன்றும்) நவம் (ஆகும்மே).
*(3 பெயர்கள்) 679*

**நவியம்**

மழுவும், கோடாலியும், நவியம் (ஆகும்).
*(2 பெயர்கள்) 680*

**நவிரம்**

மலையும், புன்மையும், மயிலும், உச்சியும்,
மயிரும், நவிரம் (என்ன வகுப்பர்).
*(5 பெயர்கள்) 681*

**நவிர்**

ஆண்பால் மயிரும், தக்கேசி இசையும்,
மருத யாழ்த் திறனும், வாளும், நவிர் (எனல்).
*(4 பெயர்கள்) 682*

**நளி**

திரளும், பெருமையும், நளி (எனச் சிறக்கும்).
*(2 பெயர்கள்) 683*

**நறவம்**

அனிச்ச மரமும், வேரியும், நறவம்.
*(2 பெயர்கள்) 684*

**நற்றுடி**

நாக மரமும், வேரும், நற்றுடி. *(2 பெயர்கள்) 685*

**நனை**

பூவின் மொட்டும், கள்ளும், நனையே.
*(2 பெயர்கள்) 686*

**நாகம்**

நாகம், (என் கிளவி) நல் இழை ஆடையும்,
வேழமும், ஒரு மரப் பெயரும், வெற்பும்,
பாம்பும், குரங்கும், விசும்பும், புன்னையும்,
கடவுளர் உலகும், காரீயமும் (ஆகும்).
*(10 பெயர்கள்) 687*

**நாஞ்சில்**

கலப்பைப் படை, எயில் உறுப்பு, (இவை) நாஞ்சில்.
*(2 பெயர்கள்) 688*

**நாட்டம்**

நயனமும், பண்ணும், வாளும், நாட்டம்.
*(3 பெயர்கள்) 689*

**நாப்பண்**

நடுவு, நடுவண் தேரும், நாப்பண். *(2 பெயர்கள்) 690*

**நாரி**

நறவு, பெண், நாணி, பன்னடை, நாரி.
*(4 பெயர்கள்) 691*

**நாவிதன்**

கார்த்திகை நாளும், பூரமும், நாவிதன்.
*(2 பெயர்கள்) 692*

**நாழி**

பூரட்டாதி நாளும், உள் தொளையும்,
(சேரும்) கடிகையும், அளவையும், நாழி.
*(4 பெயர்கள்) 693*

**நானம்**

அறிவும், பூசுவன யாவையும், நாற்றமும்,
நரையும், நீராட்டும், கத்தூரியும், நானம்.
*(6 பெயர்கள்) 694*

**நிசி**

காஞ்சனம், மஞ்சள், கங்குல், நிசியே.
*(3 பெயர்கள்) 695*

**நிதம்பம்**

மலையின் பக்கமும், அல்குலும், நிதம்பம்.
*(2 பெயர்கள்) 696*

**நியமம்**

நீதியும், கோவிலும், நிச்சயமும், தெருவும்,
நகரமும், வீதியும், நியமம் (ஆகும்).
*(6 பெயர்கள்) 697*

**நிரஞ்சனம்**

நிரஞ்சனம், வெளியும், நிறைவும், மோக்கமும்.
*(3 பெயர்கள்) 698*

**நிரியாணம்**

யானையின் கடைக்கணும், மரணமும், நிரியாணம்.
*(2 பெயர்கள்) 699*

**நிருமித்தல்**

படைத்தலும், ஆராய்தலும், நிருமித்தல்.
*(2 பெயர்கள்) 700*

**நிறை**

எடை பார்ப்பனவும், (அரிவையர்) கற்பும்,
(நிகழ்) துலா இராசியும், நிறை (ஆகும்மே).
*(3 பெயர்கள்) 701*

**நீபம்**

ஏதுவும், உத்திரட்டாதி நாளும்,
நீர்க்கடம்பின் பெயரும், நீபம் (என்ப).
*(3 பெயர்கள்) 702*

**நீர்**

புனலும், குணமும், பூராடமும், நீரே.
*(3 பெயர்கள்) 703*

**நீலி**

நீலி, ஒரு மரமும், பாலைக் கிழத்தியும்,
கருமை நிறமும், அவுரியும் (ஆகும்).
*(4 பெயர்கள்) 704*

**நீவி**

புடைவையும், கொய்சகப் பெயரும், நீவி.
*(2 பெயர்கள்) 705*

**நுதல்**

புருவமும், நெற்றியும், நுதல் (ஆகும்மே).
*(2 பெயர்கள்) 706*

**நெறி**

நீதியும், வழியும், ஒழுக்கமும், நெறி (எனல்).
*(3 பெயர்கள்) 707*

**நெற்றி**

படையினது உறுப்பும், நுதலும், நெற்றி.
*(2 பெயர்கள்) 708*

**நேத்திரம்**

பட்டும், நயனமும், நேத்திரம் (ஆகும்).
*(2 பெயர்கள்) 709*

### நேயம்

நெய்யும், அன்பும், எண்ணெயும், நேயம்.
(3 பெயர்கள்) 710

### நொச்சி

எயிலும், ஓர் மரமும், சிற்றூரும், நொச்சி.
(3 பெயர்கள்) 711

## 7. பகர வருக்கம்

### பகடு

பெருமை, யானை, எருது, (இவை) பகடு (எனல்).
(3 பெயர்கள்) 712

### பகல்

பிரிவும், நடுவும், (பெரும்) பகல் பொழுதும்,
(பகரும்) முகூர்த்தமும், பகலும், நாளும்,
பாகும், நுகத்தாணியும், தேசும், பகல் (என்ப).
(9 பெயர்கள்) 713

### பகவன்

பட்டாரகன், மால், பங்கயன், பரமன்,
இரவி, அருகன், புத்தனும், பகவன்.
(7 பெயர்கள்) 714

### பகழி

அம்புக் குதையும், அம்பும், பகழி.
(2 பெயர்கள்) 715

### பக்கம்

அருகும், திதியும், இறகும், பக்கம்.
(3 பெயர்கள்) 716

### பங்கம்

சேறும், துகிலும், இடரும், பங்கம்.
(3 பெயர்கள்) 717

### பங்கி

ஆண்பால், அஃறிணை மயிரும், பங்கி.
(2 பெயர்கள்) 718

### பங்கு

பகுதியும், சனியும், முடமும், பங்கே.
(3 பெயர்கள்) 719

### பசு

உயிரும், ஆவும், பசு (என உரைப்பர்).
(2 பெயர்கள்) 720

### பச்சை

மரகதப் பெயரும், புதனும், தோலும்,
பரிமளப் புதலும், மாலும், பச்சை.
(5 பெயர்கள்) 721

### படங்கு

பெருங் கொடி, மேற்கட்டி, வானி, படங்கு (எனல்).
(3 பெயர்கள்) 722

### படம்

கொடியும், கூரையும், கோலக் கிழியும்,
பணமும், யானை முக படாமும், படமே.
(5 பெயர்கள்) 723

### படலிகை

படலிகை (என்ப), பூந் தட்டும், கைம் மணியும்,
வட்டமும், பெரும் பீர்க்கும் (வகுக்கும்).
(4 பெயர்கள்) 724

### படலை

படர்தலும், வாசிகைக் கோவையும், படலை.
(2 பெயர்கள்) 725

### படி

அவனியும், அங்க அடியும், சோபானமும்,
பகையும், குணமும், நாழியும், படியே.
(6 பெயர்கள்) 726

### படிறு

பொய்யும், சூதும், களவும், படிறே.
(3 பெயர்கள்) 727

### படு

மரத்தின் குலையும், நீர் நிலையும், மதுவும்,
முகரிமைப் பெயரும், படு (என மொழிப).
(4 பெயர்கள்) 728

### படை

படைக்கலப் பெயரும், பரிமாக் கலணையும்,
படுக்கையும், சேனையும், கலப்பையும், படையே.
(5 பெயர்கள்) 729

### பட்டம்

வழியும், (நல்ல) பதவியும், ஓடையும்,
விலங்கு துயில் இடமும், கவரி மாவும்,
பாரதி வகுப்பும், படங்கமும், பட்டம்.
(7 பெயர்கள்) 730

### பட்டி

இடமும், நாயும், தொழுவும், பட்டி.
(3 பெயர்கள்) 731

### பட்டு

சிற்றூர்ப் பெயரும், துகிலும், பட்டே.
(2 பெயர்கள்) 732

### பணவை

பரணும், கழுகும், பணவை (என்ப).
(2 பெயர்கள்) 733

### பணி

தொழிலும், தொழில் படு கருவியும், சொல்லும்,
பணிதலும், பாம்பும், அணியும், பணியே.
(6 பெயர்கள்) 734

### பணிலம்

சலஞ்சலமும், (ஒளி சேர்) சங்கும், பணிலம்.
(2 பெயர்கள்) 735

### பணை

முரசின் (பெயரும்), மூங்கிலின் (பெயரும்),
மரத்தின் கோடும், மருத நிலமும்,
அந்நிலப் பறையும், புரவியின் பந்தியும்,
பருத்தலும், வயலும், அரசும், பணை (எனல்).
(9 பெயர்கள்) 736

### பண்

பாட்டின் பெயரும், பரிமாக் கலணையும்,
(நாட்டிய) பண்ணும், பண் (என நவில்வர்).
(3 பெயர்கள்) 737

### பண்டம்

பண்ணிகாரமும், ஆடகமும், பண்டம்.
(2 பெயர்கள்) 738

### பண்ணவன்

பட்டாரகன், முனி, திறலோன், பண்ணவன்.
(3 பெயர்கள்) 739

### பண்ணை

மருத நிலமும், நீர் நிலையும், வயலும்,
விலங்கின் துயில் இடமும், மகளிர் விளையாட்டும்,
கூட்டமும், சவையும், புதலும், பண்ணை.
(8 பெயர்கள்) 740

### பதங்கம்

புள் பொதுப் பெயரும், விட்டில் பறவையும்,
பதங்கம் (என்று பகரப்படுமே). (2 பெயர்கள்) 741

### பதம்

வரிசையும், சோறும், மொழியும், வழியும்,
உணவும், செவ்வியும், மறையின் ஓர் உறுப்பும்,
பாதமும், பொழுதும், அவிழும், பதம் (எனல்).
(10 பெயர்கள்) 742

### பதலை

சைலப் பெயரும், தாழியும், ஓர் கண்,
பகுவாய்ப் பறையும், பதலை (ஆகும்).
(3 பெயர்கள்) 743

### பதி

தலைவனும், ஊரும், பதி (எனத் தகுமே).
(2 பெயர்கள்) 744

### பதுக்கை

பாறையும், மேடும், சிறு தூறும், பதுக்கை.
(3 பெயர்கள்) 745

### பத்திரம்

எழிலும், புள்ளின் இறகும், இலையும்,
பகழியும், சுரிகையும், பத்திரம் (என்ப).
(5 பெயர்கள்) 746

### பத்திரை

பசுவும், திதியும், காளியும், பத்திரை.
(3 பெயர்கள்) 747

### பந்தம்

அழகும், திரட்சியும், இழையும், கிளையும்,
தளையும், கைத் தீபமும், பந்தம் (என்ப).
(6 பெயர்கள்) 748

### பயசு

பயசு, நீரும், பாலும் (ஆகும்). (2 பெயர்கள்) 749

### பயம்

பாலும், நீரும், பயம் (எனலாகும்).
(2 பெயர்கள்) 750

### பயம்பு

பகடு படுங்குழி, நீர்நிலை, பயம்பு (எனல்).
(2 பெயர்கள்) 751

### பயல்

பாதியும், சிற்றுளும், பள்ளமும், பயல் (எனல்).
(3 பெயர்கள்) 752

### பயிர்

பைங்கூழும், புள் குரலும், பயிர் (எனல்).
(2 பெயர்கள்) 753

### பயோதரம்

முலையும், மேகமும், பயோதரம் (எனப்படும்).
(2 பெயர்கள்) 754

### பரசு

மழுவும், மூங்கிலும், பரசு (என வகுப்பர்).
(2 பெயர்கள்) 755

### பரதர்

தன வைசியரும், கழியரும், பரதர்.
(2 பெயர்கள்) 756

### பரம்

மெய்யும், மெய்புகு கருவியும், பாரமும்,
பரிமாக் கலணையும், முன்பும், பரம் (எனல்).
(5 பெயர்கள்) 757

**பரவை**

பரவைக் (கிளவி), பரப்பும், கடலும்,
திரு மகள் ஆடலும், உப்பும் (செப்பும்).
*(4 பெயர்கள்)* 758

**பரி**

துலையும், நொடியும், துரகதப் பெயரும்,
பெருமையும், செலவும், மாயமும், பரி (எனல்).
*(6 பெயர்கள்)* 759

**பரிகம்**

புரிசையுள் உயர்ந்த நிலமும், கணையமும்,
பரிகம் (என்று பகரப்படுமே).
*(2 பெயர்கள்)* 760

**பரிதி**

இரத உருளும், (இடு) பரிவேடமும்,
பகலவன் பெயரும், வட்டமும், பரிதி.
*(4 பெயர்கள்)* 761

**பருவம்**

பக்குவமும், பொழுதும், பருவம் (ஆகும்).
*(2 பெயர்கள்)* 762

**பலம்**

பழமும், கிழங்கும், காயும், சேனையும்,
நிறையும், பேறும், பலம் (என்று உரைப்பர்).
*(6 பெயர்கள்)* 763

**பலாசம்**

பச்சை நிறமும், புரசும், பலாசம்.
*(2 பெயர்கள்)* 764

**பலி**

பலிதமும், காகமும், பலி (எனப் பகர்வர்).
*(2 பெயர்கள்)* 765

**பலிதம்**

நரையும், காய்க்கும் மரமும், பலிதம்.
*(2 பெயர்கள்)* 766

**பவனம்**

பார், காற்று, இராசி, மனையும், பவனம்.
*(4 பெயர்கள்)* 767

**பழங்கண்**

துன்பமும், மெலிவும், ஒலியும், பழங்கண்.
*(3 பெயர்கள்)* 768

**பளிங்கு**

பளிங்கே, கல்லும், புகரும் (பகரும்).
*(2 பெயர்கள்)* 769

**பள்ளி**

தவத்தோர் இடமும், சயனமும், துயிறலும்,
நகரமும், சிற்றூரும், விலங்கு துயில் இடமும்,
பள்ளி (என்பர்), கோயிலும் (பகரும்).
*(7 பெயர்கள்)* 770

**பறம்பு**

மலையும், மடந்தையர் முலையும், பறம்பு (எனல்).
*(2 பெயர்கள்)* 771

**பறை**

முரசு, புள் இறகு, மொழி, (இவை) பறை (எனல்).
*(3 பெயர்கள்)* 772

**பனி**

துன்பமும், நோயும், துகினமும், சீதமும்,
அச்சமும், நடுக்கமும், பனி (என்று உரைப்பர்).
*(6 பெயர்கள்)* 773

**பாகம்**

பாதியும், பிச்சையும், பாகம் (என்ப).
*(2 பெயர்கள்)* 774

**பாகல்**

பலாவும், கார வல்லியும், பாகல்.
*(2 பெயர்கள்)* 775

**பாகு**

சருக்கரைப் பெயரும், குழம்பும், பாகே.
*(2 பெயர்கள்)* 776

**பாசம்**

பசாசும், பற்றும், துன்னமும், பாசம்.
*(3 பெயர்கள்)* 777

**பாசனம்**

தமரும், தளிகையும், பாசனம் (என்ப).
*(2 பெயர்கள்)* 778

**பாடி**

முல்லை நிலத்து ஊரும், பாசறையும், படையும்,
நாடும், நகரமும், பாடி (ஆகும்).
*(5 பெயர்கள்)* 779

**பாடு**

கேடும், சத்த ஒலியும், அருகும்,
பாடு (என்று உரைக்கும்), பெருமையும் (பகரும்).
*(4 பெயர்கள்)* 780

**பாணம்**

மழை வண்ணக் குறிஞ்சியும், அம்பும், பாணம்.
*(2 பெயர்கள்)* 781

### பாணி

பதியொடு சேர்ந்த பைம்பொழில் (பெயரும்),
அழகும், கானமும், அப்பும், பண்டமும்,
(வழு இல்) பற்றும், நாடும், கையும்,
பொழுதின் நீட்டமும், இயமும், பாணி.
(10 பெயர்கள்) 782

### பாண்டில்

வட்டம், தகழி, மஞ்சம், ஊர்தி,
கஞ்சம், சிரீடம், எருதும், பாண்டில்.
(7 பெயர்கள்) 783

### பாதிரி

ஒரு மரப் பெயரும், மூங்கிலும், பாதிரி.
(2 பெயர்கள்) 784

### பாத்தி

பகுத்தல், சிறு செய், இல்லமும், பாத்தி.
(3 பெயர்கள்) 785

### பாம்பு

பன்னகப் (பெயரும்), வரம்பும், பாம்பு (எனல்).
(2 பெயர்கள்) 786

### பாரதி

பாரதி, வங்கமும், பனுவலாட்டியும் (ஆம்).
(2 பெயர்கள்) 787

### பாராவாரம்

மகராலயமும், அதன் கரைப் பெயரும்,
(பகரில்) பாராவாரம் (ஆகும்).
(2 பெயர்கள்) 788

### பாரி

காதலி பெயரும், நல் ஆடையும், புவியும்,
பரியங்கமும், வள்ளலும், பாரி (என்ப).
(5 பெயர்கள்) 789

### பார்

தேரின் பரப்பும், புவியும், பார் (எனல்).
(2 பெயர்கள்) 790

### பாலிகை

வதுவை முளை, வட்டம், வாய் இதழ், பாலிகை.
(3 பெயர்கள்) 791

### பால்

பாதியும், இடமும், பயசும், குணமும்,
பக்கமும், திசையும், இயல்பும், பாலே.
(7 பெயர்கள்) 792

### பாழி

தாபதர் இருப்பும், விலங்கு துயில் இடமும்,
அகலமும், வலியும், நகரும், பாழும்,
கல்லின் முழையும், பாழி (என்ப).
(7 பெயர்கள்) 793

### பாளிதம்

கண்ட சருக்கரையும், சோறும், கர்ப்பூரமும்,
பட்டு வருக்கமும், பாளிதம் (என்ப).
(4 பெயர்கள்) 794

### பானல்

கரு நிறக் குவளையும், வயலும், பானல்.
(2 பெயர்கள்) 795

### பானு

(நல்) ஒளிப் (பெயரும்), ஞாயிறும், பானு.
(2 பெயர்கள்) 796

### பிசி

பொய்யும், சோறும், அரும் பொருளும், பிசியே.
(3 பெயர்கள்) 797

### பிசிதம்

விடக்கும், நீறும், வேம்பும், பிசிதம்.
(3 பெயர்கள்) 798

### பிச்சம்

ஆண்பால் மயிரும், வெண்குடைப் பெயரும்,
பீலிக் குடையும், பிச்சம் (ஆகும்).
(3 பெயர்கள்) 799

### பிணிமுகம்

புள் பொதுப் பெயரும், மயிலும், பிணிமுகம்.
(2 பெயர்கள்) 800

### பிணை

விருப்பம், மான், விலங்கின் பெண் தொடர்பும், பிணை.
(3 பெயர்கள்) 801

### பிண்டம்

பிச்சையும், திரட்சியும், பிண்டம் (எனப்படும்).
(2 பெயர்கள்) 802

### பிண்டி

பிண்ணாக்கும், மாவும், அசோகமும், பிண்டி.
(3 பெயர்கள்) 803

### பிதா

சங்கரன் பெயரும், அயனும், தாதையும்,
பெருநாரைப் பெயரும், பிதா (ஆகும்மே).
(4 பெயர்கள்) 804

**பிதிர்**

துவலையும், நொடியும், கதையும், பிதிரே.
(3 பெயர்கள்) 805

**பித்திகை**

கருமுகையும், சுவர்த் தலமும், பித்திகை.
(2 பெயர்கள்) 806

**பிரசம்**

தேனீப் (பெயரும்), தேனும், பிரசம்.
(2 பெயர்கள்) 807

**பிள்ளை**

காரிப் புள்ளும், காரிக் கடவுளும்,
(பேசின்) மகவும், பிள்ளை (ஆகும்).
(2 பெயர்கள்) 808

**பிறங்கல்**

மிகுதியும், உயர்வும், பெருகலும், பிறங்கல். 809

**மற்றும் பிறங்கல்**

மலையின் (பெயரும் மன்னும் அதற்கே).
(4 பெயர்கள்) 810

**பிறப்பு**

அச்சமும், பவமும், செறிவும், பிறப்பு (எனல்).
(3 பெயர்கள்) 811

**பீடிகை**

பீடமும், தட்டும், ஆவணமும், பீடிகை.
(3 பெயர்கள்) 812

**பீதகம்**

பொன், இருவேலி, பொன்மை, பீதகம்.
(3 பெயர்கள்) 813

**பீதம்**

பொன்மையும், சாந்தும், பொன்னும், பீதம்.
(3 பெயர்கள்) 814

**பீரு**

அச்சம் உற்றோனும், புருவமும், பீரு.
(2 பெயர்கள்) 815

**பீலி**

சயிலமும், மயிலின் கலாபமும், சவளமும்,
சின்னமும், சிற்றாலவட்டமும், பீலி.
(5 பெயர்கள்) 816

**புகர்**

புற்கெனும் நிறம், வெள்ளி, குற்றமும், புகரே.
(3 பெயர்கள்) 817

**புகல்**

யாக்கை, சொல், வெற்றி, குதிரும், புகலே.
(4 பெயர்கள்) 818

**புங்கம்**

அம்புக் குதை, துகில், உயர்ச்சியும், புங்கம்.
(3 பெயர்கள்) 819

**புட்டம்**

புடவையும், காக்கையும், புட்டம் (என்ப).
(2 பெயர்கள்) 820

**புணரி**

புணரி, கடலும், கடல் திரையும்மே.
(2 பெயர்கள்) 821

**புணர்ச்சி**

கலவியும், இயைபும், புணர்ச்சி (என்ப).
(2 பெயர்கள்) 822

**புண்டரீகம்**

கமலமும், திசையின் கரிகளில் ஒன்றும்,
புலியும், வண்டும், புண்டரீகம்மே. (4 பெயர்கள்) 823

**புதவு**

கதவும், ஒரு விகற்பப் புல்லும், புதவே.
(2 பெயர்கள்) 824

**புத்தன்**

போதிக்கு இறைவனும், மாயனும், புத்தன்.
(2 பெயர்கள்) 825

**புத்தேள்**

புதுமையும், தெய்வமும், புத்தேள் (ஆகும்).
(2 பெயர்கள்) 826

**புந்தி**

புதனும், அறிவும், சிந்தையும், புந்தி.
(3 பெயர்கள்) 827

**புரத்தல்**

வண்மையும், காத்தலும், வணங்குதலும், புரத்தல்.
(3 பெயர்கள்) 828

**புரவலன்**

பூ பாலனும், கொடையோனும், புரவலன்.
(2 பெயர்கள்) 829

**புரை**

உவமை, குற்றம், உயர்வே, உள் தொளைப்
பொருள் (என்று இன்னவை), புரை (எனலாகும்).
(4 பெயர்கள்) 830

### புலம்பு

தனிமையும், அச்சமும், சத்தமும், புலம்பே.
(3 பெயர்கள்) 831

### புலவர்

அறிஞரும், சளுக்கியர் பெயரும், அண்டரும்,
கவிஞரும், கூத்தரும், கலைவல்லாளரும்,
புரந்தரரும், கண்ணுளரும், புலவர்.
(8 பெயர்கள்) 832

### புலி

சிங்க இராசியும், நால் வகைச் சாந்தத்து
ஒன்றும், வியாக்கிரமும், (உரைப்பர்) புலியே.
(3 பெயர்கள்) 833

### புலிங்கம்

பொறியும், ஊர்க்குருவியும், புலிங்கம் (ஆகும்).
(2 பெயர்கள்) 834

### புல்

அனுடம், ஓர் புதலும், புற்கெனும் நிறமும்,
ஒரு சார் மரமும், பனையும், புலியும்,
புணர்ச்சியும், புல் (எனப் புகலப் பெறுமே).
(7 பெயர்கள்) 835

### புவனம்

புவனமும், உலகும், புனலும், புவியும் (ஆம்).
(3 பெயர்கள்) 836

### புளகம்

கண்ணுடியும், குமிழ்த்தலும், அன்னமும், புளகம்.
(3 பெயர்கள்) 837

### புள்

(பகர் இசை) வண்டும், பறவைப் பெயரும்,
(புகலும்) அவிட்ட நாளும், புள் (எனல்).
(3 பெயர்கள்) 838

### புறணி

குறிஞ்சி நிலமும், முல்லையின் புறமும்,
தோலும், மரப்பட்டையும், புறணி (என்ப).
(4 பெயர்கள்) 839

### புறம்பணை

குறிஞ்சி நிலமும், முல்லையின் புறமும்,
புறம்பணை (என்று புகலப் பெறுமே).
(2 பெயர்கள்) 840

### புறவணி

குறிஞ்சி நிலமும், முல்லையும், புறவணி.
(2 பெயர்கள்) 841

### புறவம்

முல்லை நிலமும், காடும், புறவம். (2 பெயர்கள்) 842

### புனை

பொலிவும், அழகும், ஒப்பனையும், புனை (எனல்).
(3 பெயர்கள்) 843

### புன்கண்

துன்பமும், நோயும், புன்கண் (என்ப).
(2 பெயர்கள்) 844

### பூ

அவனியும், வனப்பும், மலரும், கூர்மையும்,
பொலிவும், பிறப்பும், பூ (எனலாகும்).
(6 பெயர்கள்) 845

### பூகம்

கமுகும், திரட்சியும், கமுகும், பூகம்.
(3 பெயர்கள்) 846

### பூக்கம்

பூகமும், மருத ஊரும், பூக்கம். (2 பெயர்கள்) 847

### பூட்கை

யானை யாளிப் பெயரும், யானையும்,
மேற்கோளும் (இவை) பூட்கை (என்ப).
(3 பெயர்கள்) 848

### பூதம்

பரணி நாளும், (பல்) உயிர்ப் (பெயரும்),
பாரிடமும், இறந்த காலமும், ஆலும்,
புனிதமும், புவி முதல் ஐந்தும், பூதம்.
(7 பெயர்கள்) 849

### பூதி

நீறும், செல்வமும், (நிகழ்) துர்க்கந்தமும்,
பூதி (என்பர்), நரகும் (புகலும்). (4 பெயர்கள்) 850

### பூதியம்

புவியும், உடம்பும், செல்வமும், பூதியம்.
(3 பெயர்கள்) 851

### பூரணம்

நிறைவும், ஓர் திதியும், பூரணம் (என்ப).
(2 பெயர்கள்) 852

### பூருவம்

முதுமையும், கிழக்கும், முன்பும், பூருவம்.
(3 பெயர்கள்) 853

### பூவை

நாகணவாய்ப் புள்ளும், காயாவும், பூவை.
(2 பெயர்கள்) 854

### பூழ்தி

கொடுமையும், தசையும், நுண் பொடியும், பூழ்தி.
(3 பெயர்கள்) 855

**பூளை**

பொருப்பின் கணவாயும், ஓர் புதலும், பூளை.
*(2 பெயர்கள்)* *856*

**பேடு**

அலியும், ஊரும், மதன் ஆடலும், பேடு.
*(3 பெயர்கள்)* *857*

**பேதை**

அறிவிலோனும், எளியனும், பேதை.
*(2 பெயர்கள்)* *858*

**பேராளன்**

மிக்கோன் பெயரும், மிருக சீரிடமும்,
(பெற்றி உரைக்கில்) பேராளன்னே.
*(2 பெயர்கள்)* *859*

**பை**

படமும், பச்சையும், அழகும், பையே.
*(3 பெயர்கள்)* *860*

**பொகுட்டு**

சேற்று எழு மொக்குளும், மலையும், பங்கயப்
(பொன் நிறக்) கொட்டையும், பொகுட்டு (எனலாகும்).
*(3 பெயர்கள்)* *861*

**பொங்கர்**

பொருப்பும், மரத்தின் கொம்பும், பொங்கர். *862*

**மற்றும் பொங்கர்**

இலவின் (பெயரும் இயம்பல் வேண்டும்).
*(3 பெயர்கள்)* *863*

**பொங்கல்**

பொலிவும், மிகுதியும், கொந்தலும், பொங்கல்.
*(3 பெயர்கள்)* *864*

**பொம்மல்**

பொலிவும், சோறும், பொருமலும், பொம்மல்.
*(3 பெயர்கள்)* *865*

**பொருநன்**

கொற்றவன் (பெயரும்), தலைவனும், கூத்தனும்,
வீரனும், திண்ணியோனும், பொருநன்.
*(5 பெயர்கள்)* *866*

**பொழில்**

புவியும், சோலையும், பெருமையும், பொழிலே.
*(3 பெயர்கள்)* *867*

**பொறி**

எழுத்து, செல்வம், இலாஞ்சனை, திருமகள்,
மரக்கலம், யந்திரம், வரி, இந்திரியம்,
பொடித்து எழு நுண் சிறு கனல், (இவை) பொறியே.
*(9 பெயர்கள்)* *868*

**பொறை**

புவனமும், துறுகலும், பொருப்பும், பொறை (எனல்).
*(3 பெயர்கள்)* *869*

**பொற்பு**

பொலிவும், அழகும், ஒப்பனையும், பொற்பு (எனல்).
*(3 பெயர்கள்)* *870*

**பொன்**

அழகும், ஐவகை உலோகமும், இரும்பும்,
திருவும், வியாழமும், பொன் (எனச் செப்புவர்).
*(5 பெயர்கள்)* *871*

**போகி**

பொன் உலகு ஆளியும், பாம்பும், போகி.
*(2 பெயர்கள்)* *872*

**போகில்**

பூ மொட்டும், நாபியும், புள் பொதுவும், போகில்.
*(3 பெயர்கள்)* *873*

**போக்கு**

வழியும், இளமரக் கன்றும், குற்றமும்,
(புகலில்) போதலும், நடையும், போக்கே.
*(5 பெயர்கள்)* *874*

**போதகம்**

அப்ப வருக்கமும், யானைக் கன்றும்,
இளமையும், மரத்தின் கன்றும், போதகம்.
*(4 பெயர்கள்)* *875*

**போந்து**

பல்லியும், பனையும், போந்து (எனலாகும்).
*(2 பெயர்கள்)* *876*

**போர்**

சமரமும், நெல் முதல் சும்மையும், சதயமும்,
(புகலுங் காலைப்) போர் (எனலாகும்).
*(3 பெயர்கள்)* *877*

**போர்வை**

தோலும், மீக்கோளும், போர்வை (ஆகும்).
*(2 பெயர்கள்)* *878*

## 8. மகர வருக்கம்

**மகரம்**

மலரின் தாதும், சுறவும், மகரம். *(2 பெயர்கள்)* *879*

**மஞ்சரி**

மலரின் திரளும், தளிரும், மஞ்சரி.
*(2 பெயர்கள்)* *880*

**மஞ்சு**

எழிலும், பனியும், இளமையும், மேகமும்,
வலியும், யானையின் முதுகும், மஞ்சே.
(6 பெயர்கள்) 881

**மடங்கல்**

மடங்கல் (என் கிளவி), மறலியும், இடியும்,
மடங்கலும், நோயும், யாளியும், ஊழியும்,
மடங்கலும், வடவையும், முடிவும் (என்ப).
(9 பெயர்கள்) 882

**மடி**

பொய்யும், நோயும், புடைவையும், சோம்பும்,
புலம்பும், கேடும், அடக்கமும், தாழையும்,
வயிறும், மடங்கலும், மடி (எனலாகும்).
(10 பெயர்கள்) 883

**மடு**

மடுவும், நீர் நிலையும், மடு (என வகுப்பர்).
(2 பெயர்கள்) 884

**மடை**

பூண் கடைப் புணர்வும், சோறும், மடையே.
(2 பெயர்கள்) 885

**மட்டு**

மதுவும், அளவும், மட்டு (எனலாகும்).
(2 பெயர்கள்) 886

**மணி**

வனப்பும், நவ மணியும், மௌத்திகமும், நீலமும்,
கருநிறமும், நன்மையும், கண்டையும், மணியே.
(7 பெயர்கள்) 887

**மண்டலி**

ஒரு பெரும் பாம்பும், பூசையும், மண்டலி.
(2 பெயர்கள்) 888

**மண்டிலம்**

வட்டமும், நாடும், குதிரையும், மண்டிலம்.
(3 பெயர்கள்) 889

**மதலை**

மைந்தனும், கொன்றை மரமும், தூணும்,
மரக்கலமும், கொடுங்கையும், மதலை (ஆகும்).
(5 பெயர்கள்) 890

**மதன்**

வலியும், அழகும், (மலர்க் கணை) வேளும்,
மாட்சிமைப் (பெயரும்), மதன் (எனலாகும்).
(4 பெயர்கள்) 891

**மதி**

முன்னிலை அசைச் சொலும், உடுபதியும், உணர்வும்,
(மன்னிய) மாதமும், மதி (எனலாகும்).
(4 பெயர்கள்) 892

**திங்கள், மதியம்**

சந்திரன் பெயரும், மாதமும், (சாற்றில்)
திங்களும் மதியமும் (எனச் சிறந்தனவே).
(2 பெயர்கள்) 893

**மது**

மது, இளவேனிலும், தேனும், கள்ளும் (ஆம்).
(3 பெயர்கள்) 894

**மதுகம்**

அட்டி, மதுரமும், இருப்பையும், தராவும்,
வண்டும், அழகும், மதுகம் (ஆகும்).
(6 பெயர்கள்) 895

**மத்திகை**

மாலையும், சம்மட்டியும், மத்திகை (ஆகும்).
(2 பெயர்கள்) 896

**மந்தரம்**

மந்த ஓசையும், மேருவும், மந்தரம். (2 பெயர்கள்) 897

**மந்தாரம்**

தெய்வ மரத்தில் ஒன்றும், செம்பரத்தையும்,
மந்தாரம் (என்று வழங்கப் பெறுமே).
(2 பெயர்கள்) 898

**மந்தி**

மந்தி, பெண் குரங்கும், வண்டும், முசுவும் (ஆம்).
(3 பெயர்கள்) 899

**மந்திரம்**

கோயிலும், குதிரைப் பந்தியும், எண்ணமும்,
மதுவும், வீடும், மறையும், மந்திரம்.
(6 பெயர்கள்) 900

**மயல்**

அவாவின் பெயரும், அலகைப் பெயரும்,
மயல் (என்று அறைந்தனர் வாய் மொழிப் புலவர்).
(2 பெயர்கள்) 901

**மயிலை**

மீனின் பொதுவும், மீன இராசியும்,
(மலர்) இருவாட்சியும், மயிலை (ஆகும்).
(3 பெயர்கள்) 902

**மரக்கால்**

அளவையும், மாயவன் ஆடலும், (அன்றி
வளவிய) சோதியும், மரக்கால் (ஆகும்).
(3 பெயர்கள்) 903

### மருள்

பேயும், குறிஞ்சி யாழின் திறனும்,
மாலும், ஓர் புதலும், மருள் (என்று ஆகும்).
*(4 பெயர்கள்) 904*

### மல்

மாயோன் ஆடலும், வலியும், மல் (எனல்).
*(2 பெயர்கள்) 905*

### மல்லிகை

மாலதி, சுடர்நிலைத் தண்டு, (இவை) மல்லிகை.
*(2 பெயர்கள்) 906*

### மழை

மழையே, குளிர்ச்சியும், வருடமும், மேகமும்.
*(3 பெயர்கள்) 907*

### மள்ளர்

(செரு மலை) வீரரும், திண்ணியோரும்,
மருத நில மாக்களும், மள்ளர் (என்ப).
*(3 பெயர்கள்) 908*

### மறம்

சினமும், பாவமும், பிணக்கும், கூற்றும்,
வலியும், சேவகமும், வம்பும், மறமே.
*(7 பெயர்கள்) 909*

### மறலி

அயர்ப்பும், கூற்றும், அழுக்காறும், மறலி.
*(3 பெயர்கள்) 910*

### மறவர்

வேடர்தம் (பெயரும்), வீரரும், மறவர்.
*(2 பெயர்கள்) 911*

### மறவி

மறப்பும்,.அழுக்காறும், மறவி (ஆகும்).
*(2 பெயர்கள்) 912*

### மனவு

மணிப் பெயரும், அக்கு மணியும், மனவே.
*(2 பெயர்கள்) 913*

### மன்

மறையும், உத்திரட்டாதியும், அரசனும், நிலையும்,
மிகுதியும், ஆக்கமும், ஒழிவும், (உரை செயில்)
இடைச் சொலும், மன் (என்று உரைக்கும்.)
*(8 பெயர்கள்) 914*

### மன்றம்

வாய்மை, வெளி, வாசம், பொதுவும், மன்றம்.
*(4 பெயர்கள்) 915*

### மன்றல்

பாலை யாழ் இசையும், கடிப் பரிமளமும்,
வதுவையும், (என்று இவை) மன்றல் (ஆகும்).
*(3 பெயர்கள்) 916*

### மன்னல்

பீடும், வலியும், அடுப்பதும், மன்னல்.
*(3 பெயர்கள்) 917*

### மன்னன்

அரசனும், உத்திரட்டாதியும், மன்னன்.
*(2 பெயர்கள்) 918*

### மா

ஒரு மரப் பெயரும், அழைத்தலும், கறுப்பும்,
குதிரையும், விலங்கும், திருவும், வனப்பும்,
வலியும், வண்டும், பிண்டியும், செல்வமும்,
நிறனும், பெருமையும், நிலனும், ஓர் இலக்கமும்,
(மருவிய பெயரும்) மா (எனலாகும்).
*(15 பெயர்கள்) 919*

### மாசு

குற்றமும், மேகமும், அழுக்கும், மாசே.
*(3 பெயர்கள்) 920*

### மாடம்

மனையும், உழுந்தும், மாடம் (ஆகும்).
*(2 பெயர்கள்) 921*

### மாதர்

அரிவையரும், அழகும், காதலும், மாதர்.
*(3 பெயர்கள்) 922*

### மாதவம்

மதுவும், (நல்) தவமும், இளவேனிலும், மாதவம்.
*(3 பெயர்கள்) 923*

### மாதா

வாணியும், கௌரியும், அன்னையும், மாதா.
*(3 பெயர்கள்) 924*

### மாதிரம்

மலையும், திசையும், யானையும், மாதிரம்.
*(3 பெயர்கள்) 925*

### மாந்தல்

உண்டலும், குடித்தலும், இறத்தலும், மாந்தல்.
*(3 பெயர்கள்) 926*

### மாரி

மழையும், முகிலும், மரணமும், மதுவும்,
வடுகியும், நோயும், ஓர் புள்ளும், மாரி.
*(7 பெயர்கள்) 927*

**மார்க்கம்**

வழியும், சமயமும், தெருவும், மார்க்கம்.
*(3 பெயர்கள்) 928*

**மாலதி**

மாலதி, சுடர் நிலைத் தண்டும், நிருவாணமும்.
*(2 பெயர்கள்) 929*

**மாலை**

இரவும், தொடுத்த தொடையலும், அந்தியும்,
வரன்முறை, ஒழுக்கமும், இயல்பும், மாலை.
*(6 பெயர்கள்) 930*

**மால்**

வாயு, கருமை, பெருமை, மதிமகன்,
மாயோன், மேகம், மயக்கம், வேட்கை,
மால் (என்று உரைப்பர்), கண்ணேணியும் (ஆகும்).
*(9 பெயர்கள்) 931*

**மாழை**

அழகு, திரட்சி, ஆடகம், மாமரம்,
ஓலை, மடமை, உலோகக் கட்டி,
புளிமா, மாழை (ஆகும் என்ப). *(8 பெயர்கள்) 932*

**மான்**

விலங்கின் பெயரும், வெற்பும், குதிரையும்,
மகர இராசியும், உழையும், மான் (எனல்).
*(5 பெயர்கள்) 933*

**மிசை**

மேடும், மொழியும், மிசை (என விளம்புவர்).
*(2 பெயர்கள்) 934*

**மிச்சை**

மிச்சை, பொய்த்தல், அஞ்ஞானமும், மிடித்தலும்.
*(3 பெயர்கள்) 935*

**மீளி**

பெருமையும், வலியும், தலைவன் (பெயரும்,)
விறலோன் (பெயரும்), மீளி (ஆகும்).
*(4 பெயர்கள்) 936*

**மீன்**

மச்சப் (பெயரும்), வானத்து உடுவும்,
சித்திரை நாளும், மீன் (எனச் செப்புவர்).
*(3 பெயர்கள்) 937*

**முகில்**

திரளும், மேகமும், முகில் (எனலாகும்).
*(2 பெயர்கள்) 938*

**முடங்கல்**

மூங்கிலும், தாழையும், முடங்கல் (என்ப).
*(2 பெயர்கள்) 939*

**முடலை**

உண்டையும், திரட்சியும், பெருமையும், முடலை.
*(3 பெயர்கள்) 940*

**முண்டகம்**

தாமரைப் பெயரும், தாழையும், கள்ளும்,
(முள்ளுடை) முள்ளியும், நெற்றியும், முண்டகம்.
*(5 பெயர்கள்) 941*

**முதலை**

முதலை, செங்கிடையும், முருந்தும், இடங்கரும்.
*(3 பெயர்கள்) 942*

**முதுமை**

முற்றுதல் (பெயரும்), பழமையும், முதுமை.
*(2 பெயர்கள்) 943*

**முரசு**

உத்திரட்டாதியும், பறையும், முரசு (எனல்).
*(2 பெயர்கள்) 944*

**முரண்**

பகையும், வலியும், முரண் (எனப் பகர்வர்).
*(2 பெயர்கள்) 945*

**முரம்பு**

பரல் அடுத்த நிலமும், பாறையும், முரம்பே.
*(2 பெயர்கள்) 946*

**முருகு**

இளமையும், நாற்றமும், கள்ளும், விழவும்,
முருக வேளும், அழகும், முருகே. *(6 பெயர்கள்) 947*

**முளரி**

கமலமும், நுட்பமும், காடும், நெருப்பும்,
முளரி (என்ன மொழிந்திசினோரே).
*(4 பெயர்கள்) 948*

**முளை**

மூங்கிலும், சுதனும், அங்குரிப்பும், முளையே.
*(3 பெயர்கள்) 949*

**முறம்**

விசாகமும், சுளகும், (விளம்புவர்) முறமே.
*(2 பெயர்கள்) 950*

**முறிகுளம்**

அணை முறி குளமும், பூராடமும், முறிகுளம்.
*(2 பெயர்கள்) 951*

**முறுவல்**

பல்லும், சிரிப்பும், முறுவல் (என்ப).
*(2 பெயர்கள்) 952*

**முறை**

கோசமும், பழமையும், ஊழும், கூட்டும்,
ஆர்ப்பும், முறைமையும், முறை (எனலாகும்).
(6 பெயர்கள்) 953

**முனி**

இருடியும், வில்லும், யானைக் கன்றும்,
முனி (என்று உரைப்ப), அகத்தியும் (மொழிப).
(4 பெயர்கள்) 954

**முனை**

பகையும், வேண்டாமையும், வினையும், முனையே.
(3 பெயர்கள்) 955

**முன்னம்**

சீக்கிரி மரமும், முற்காலமும், சிங்கமும்,
முன்னம் (என்று மொழியப் பெறுமே).
(3 பெயர்கள்) 956

**மூசல்**

மொய்த்தலும், மரணமும், மூசல் (என்ப).
(2 பெயர்கள்) 957

**மூரல்**

முறுவலும், பல்லும், சோறும், மூரல்.
(3 பெயர்கள்) 958

**மூரி**

எருமையும், எருதும், பெருமையும், சோம்பும்,
வலியும், முரணும், நெரிவும், மூரி.
(7 பெயர்கள்) 959

**மூலம்**

ஒரு நாள் மீனும், ஏதுவும், கிழங்கும்,
மூலம் (என்று மொழியப் பெறுமே).
(3 பெயர்கள்) 960

**மெத்தை**

சட்டை, அணை, (இவை) மெத்தை (ஆகும்).
(2 பெயர்கள்) 961

**மெய்**

யாக்கையும், வாய்மையும், மெய் (எனலாகும்).
(2 பெயர்கள்) 962

**மேடம்**

மெய்புகு கருவியும், யாடும், மேடம்.
(2 பெயர்கள்) 963

**மேடு**

உயரமும், பெருமையும், வயிறும், மேடே.
(3 பெயர்கள்) 964

**மேதை**

புதனும், அறிஞனும், நரம்பும், மேதை.
(3 பெயர்கள்) 965

**மேல்**

மேற்கும், உம்பரும், மேன்மையும், மேலே.
(3 பெயர்கள்) 966

**மை**

அஞ்சனம், குற்றம், கரு நிறம், மலடு,
மஞ்சும், யாடும், மை (எனலாகும்).
(6 பெயர்கள்) 967

**மொக்குள்**

பூவின் மொட்டும், குமிழியும், மொக்குள்.
(2 பெயர்கள்) 968

**மொய்**

திரளும், யானையும், செருக்களமும், மொய்.
(3 பெயர்கள்) 969

**மொய்ம்பு**

வலியும், தோளும், மொய்ம்பு (எனலாகும்).
(2 பெயர்கள்) 970

**மோடு**

உயரமும், பெருமையும், வயிறும், மோடு (எனல்).
(3 பெயர்கள்) 971

**மௌவல்**

வன மல்லிகையும், குளிர் வாரமும், மௌவல்.
(2 பெயர்கள்) 972

## 9. யகர வருக்கம்

**யாணர்**

கண்ணுளர் பெயரும், புதுமையும், அழகும்,
நன்றும், யாணர் (எனும் பெயர் நவில்வர்).
(4 பெயர்கள்) 973

**யாமம்**

இரவும், சாமமும், தெற்கும், யாமம்.
(3 பெயர்கள்) 974

**யாழ்**

மிதுன இராசியும், வீணைக் (கருவியும்)
அசுபதி நாளும், யாழ் (எனலாகும்).
(3 பெயர்கள்) 975

**யூகம்**

உடல் குறை, கருங் குரங்கு, ஓர்தல், கோட்டான்,
உட்பொருள், தருக்கம், யூகம் (ஆகும்).
(6 பெயர்கள்) 976

### யூபம்

வேள்வித் தறி, கவந்தம், படை உறுப்பும், யூபம்.
*(3 பெயர்கள்)* 977

## 10. வகர வருக்கம்

### வங்கம்

வழுதுணைப் (பெயரும்), வெள்ளியும், ஈயமும்,
வங்கம் (என்ப), நாவாயும் (ஆகும்).
*(4 பெயர்கள்)* 978

### வசதி

நகரமும், மனையும், தாவும், வசதி.
*(3 பெயர்கள்)* 979

### வசந்தம்

வசந்தம், சல்லாபமும், சித்திரை மாதமும்.
*(2 பெயர்கள்)* 980

### வசி

வசியே, கூர்மை, வசி, வாள், வடுவும் (ஆம்).
*(4 பெயர்கள்)* 981

### வசு

தேவர், கோதனம்; தீ, பொன்னும், வசு.
*(4 பெயர்கள்)* 982

### வஞ்சம்

வாளும், பொய்யும், கொடுமையும், வஞ்சம்.
*(3 பெயர்கள்)* 983

### வஞ்சனை

மாயையும், பெண்ணும், பொய்யும், வஞ்சனை.
*(3 பெயர்கள்)* 984

### வஞ்சி

போரின் மேல் செலவும், புதலும், மங்கையரும்,
பாவில் ஓர் பாவும், ஓர் பதிப் பெயரும்,
(மாற்றரும்) குடையும், வஞ்சி (ஆகும்). 985

### மற்றும் வஞ்சி

மருத யாழ்த் திறத்து ஓர் ஓசையும் (வகுப்பர்).
*(7 பெயர்கள்)* 986

### வடகம்

அத்தவாளப் பட்டும், அதளும், வடகம்.
*(2 பெயர்கள்)* 987

### வடவை

வடவா அனலும், (மடநடைப்) பிடியும்,
எருமைப் (பெயரும்), குதிரையும், வடவை.
*(4 பெயர்கள்)* 988

### வடு

தழும்பும், செம்பும், தவறும், வண்டும்,
வடு (என உரைக்கும் மரபு ஆகும்மே).
*(4 பெயர்கள்)* 989

### வடுகு

மருத யாழ், ஓர் குலம், இந்தளமும், வடுகே.
*(3 பெயர்கள்)* 990

### வட்டம்

பரிசை, பாரா வளையம், கைம் மணி,
திரிகை, வலயம், சால், ஊர்கோள், வட்டம்.
*(7 பெயர்கள்)* 991

### வண்டு

குரு நாளும், குற்றமும், அளியும், கைவளையும்,
நூலும், அம்பும், சங்கும், வண்டு (எனல்).
*(7 பெயர்கள்)* 992

### வண்ணம்

வனப்பும், சந்தமும், குணமும், வண்ணம்.
*(3 பெயர்கள்)* 993

### வண்மை

வலி, வளம், கொடை, வாய்மை, வண்மை.
*(4 பெயர்கள்)* 994

### வதுவை

வதுவை, கலியாணமும், மணமும் (ஆகும்).
*(2 பெயர்கள்)* 995

### வம்பு

மணமும், நிலையின்மையும், (பாடரும்) புதுமையும்,
முலையின் கச்சும், படிறும், வம்பே.
*(5 பெயர்கள்)* 996

### வயம்

வலியும், நீரும், புள்ளும், வயம் (எனல்).
*(3 பெயர்கள்)* 997

### வயல்

வெளியும், செய்யும், வயல் (என்று ஆகும்).
*(2 பெயர்கள்)* 998

### வயவன்

திண்ணியோன் (பெயரும்), வேட்டோன் (பெயரும்),
வலியோன் (பெயரும்), வயவன் (என்ப).
*(3 பெயர்கள்)* 999

### வயா

வருத்தமும், கருவும், விருப்பமும், வயாவே.
*(3 பெயர்கள்)* 1000

#### வயிரம்

தணியா முனிவும், கூர்மையும், மணியும்,
வச்சிரப் (பெயரும்), காழும், வயிரம்.
(5 பெயர்கள்) 1001

#### வரி

இசையும், பாட்டும், எழுத்தும், இறையும்,
நெல்லும், கடலும், நிறமும், சுணங்கும்,
சந்தித் தெருவும், கடனும், வரியே.
(10 பெயர்கள்) 1002

#### வருடம்

மழையும், ஆண்டும், வருடம் (ஆகும்).
(2 பெயர்கள்) 1003

#### வருணம்

குலமும், நீரும், அழகும், வருணம்.
(3 பெயர்கள்) 1004

#### வரை

அளவும், கையிறையும், மலையும், மூங்கிலும்,
வரைவும், எழுத்தும், வரை (எனலாகும்).
(6 பெயர்கள்) 1005

#### வலம்புரி

நந்தியாவர்த்தமும், சங்கும், வலம்புரி.
(2 பெயர்கள்) 1006

#### வலவை

வஞ்சப் பெண்ணும், வல்லோனும், வலவை.
(2 பெயர்கள்) 1007

#### வலி

வலியே, ஒலியும், வலியோனும், வஞ்சமும்.
(3 பெயர்கள்) 1008

#### வலித்தல்

வலித்தல் (என்பது), நிணத்தலும், பேசலும்.
(2 பெயர்கள்) 1009

#### வழங்கல்

வண்மையும், உலாவுதலும், வழங்கல் (என்ப).
(2 பெயர்கள்) 1010

#### வழி

மரபும், ஒழுக்கமும், திரட்சியும், மகாரும்,
இடமும், பின்னும், முறைமையும், வழியே.
(7 பெயர்கள்) 1011

#### வளம்

மாட்சிமை, கொழுப்பும், தகுதி, வளம் (எனல்).
(3 பெயர்கள்) 1012

#### வள்

(வலிப்) பற்றிரும்பும், வாளும், காதும்,
வலியும், கூர்மையும், வள் (எனலாகும்).
(5 பெயர்கள்) 1013

#### வறிது

சிறுமை, பயன்இல் சொல், அறியாமை, வறிதே. 1014

#### மற்றும் வறிது

இளிமை, இயலாமையும், (வறிது எனலாகும்).
(5 பெயர்கள்) 1015

#### வன்னி

ஒரு மரப் பெயரும், கிளியும், நெருப்பும்,
பிரமசாரிப் பெயரும், வன்னி. (4 பெயர்கள்) 1016

#### வாசம்

வாசம், இருப்பிடமும், மலரின் மணமும்,
புள்ளின் இறகும், புடைவையும் (புகலும்).
(4 பெயர்கள்) 1017

#### வாசி

வங்கியம், குதிரை, வாசி (என்ப).
(2 பெயர்கள்) 1018

#### வாடை

வட காற்றும், சேரியும், ஓர் மருந்தும், வாடை.
(3 பெயர்கள்) 1019

#### வாணி

பாரதிப் (பெயரும்), பகழிப் (பெயரும்),
வார்த்தையும், ஓர் கூத்தும், வாணி (ஆகும்).
(4 பெயர்கள்) 1020

#### வாமனம்

குறளும், திசை நிலைக் குஞ்சரத்து ஒன்றும்,
(வரும்) ஒரு நூலும், மாலும், வாமனம்.
(4 பெயர்கள்) 1021

#### வாயில்

வாய் புலம், திறம், கரணம், துவாரமும், வாயில்
(4 பெயர்கள்) 1022

#### வாரணம்

யானையும், கோழியும், சங்கும், வாரணம். 1023

#### மற்றும் வாரணம்

தடை, கடல், மெய்புகு கருவியும் (சாற்றுவர்).
(6 பெயர்கள்) 1024

#### வாரம்

ஆர்கலி, கிழமைக் கூறுபாடு, அன்பு,
புனல்கரை, மலைஅடிப் பகுதியும், வாரம்.
(5 பெயர்கள்) 1025

**வாரி**

கடலும், வெள்ளமும், பகுதியும், விளைவும்,
சுற்றும், கதவும், வருவாயும், நீரும்,
வட்டையும், மதிலும், வாரி (ஆமே).
(10 பெயர்கள்) 1026

**வாருணம்**

(மறி)கடல் பெயரும், மேற்கும், வாருணம்.
(2 பெயர்கள்) 1027

**வால்**

வெண்ணிறம், பெருமை, தூய், தோகையும், வாலே.
(4 பெயர்கள்) 1028

**வாள்**

வசியும், ஒளியும், வாள் (எனலாகும்).
(2 பெயர்கள்) 1029

**வானம்**

வானம், மழையும், மரத்தின் கனியும்,
மாகமும், உலர் மரப் (பெயரும்) (வரையார்).
(4 பெயர்கள்) 1030

**வானி**

வான், ஓர் நதியும், (வளர்) துகில் கொடியும்,
சேனையும், மேற்கட்டியும் (செப்பல் வேண்டும்).
(4 பெயர்கள்) 1031

**வான்**

வான் (என் கிளவி), வலியும், பெருமையும்,
மேகமும், ஆகாயமும், பெருமழையும், இடைச்
சொல்லும், ஓர் மரம் (என்றும் ஓதுவர் புலவர்).
(7 பெயர்கள்) 1032

**விசும்பு**

விண்ணும், சுவர்க்கமும், மேகமும், விசும்பே. 1033

**மற்றும் விசும்பு**

திசையின் (பெயரும் செப்புவர் அதற்கே).
(4 பெயர்கள்) 1034

**விசையம்**

சருக்கரைப் (பெயரும்), தபன மண்டிலமும்,
வெற்றிப் (பெயரும்), விசையம் (ஆகும்).
(3 பெயர்கள்) 1035

**விடங்கம்**

வீதிக் கொடியும், வீட்டின் முகடும்,
அழகும், கொடுங்கையும், ஆண்மையும், விடங்கம்.
(5 பெயர்கள்) 1036

**விடம்**

மரப் பொதுப் பெயரும், நஞ்சும், தேளும், விடம்.
(3 பெயர்கள்) 1037

**விடர்**

கல் வளைப் பெயரும், கமரும், விடரே.
(2 பெயர்கள்) 1038

**விடலை**

திண்ணியோனும், தலைவனும், பாலை
இறைவனும், காமத் துறைவனும், விடலை.
(4 பெயர்கள்) 1039

**விடை**

ஏறும், எருதும், எதிர் மொழியும், விடை.
(3 பெயர்கள்) 1040

**விண்டு**

மாயவன், காற்று, மலையே, மூங்கில்,
மேகம், (இவ் வைந்தும்) விண்டு (எனலாகும்).
(5 பெயர்கள்) 1041

**விதப்பு**

விபரமும், நடுக்கமும், மிகுதியும், விதப்பே.
(3 பெயர்கள்) 1042

**விதவை**

சோறும், கைம்பெண்ணும், விதவை (ஆகும்).
(2 பெயர்கள்) 1043

**விதர்ப்பு**

மிகுதியும், நடுக்கமும், விதர்ப்பு (என விளம்புவர்).
(2 பெயர்கள்) 1044

**விபுலம்**

விரிவும், பெருமையும், விபுலம் (என்ப).
(2 பெயர்கள்) 1045

**விபூதி**

நிரயத்தில் ஒன்றும், நீறும், கொடுமையும்,
தசையும், குற்றமும், செல்வமும், விபூதி.
(6 பெயர்கள்) 1046

**விம்மல்**

பொருமலும், அழுதலும், ஒலித்தலும், விம்மல்.
(3 பெயர்கள்) 1047

**வியப்பு**

சினமும், சினக் குறிப்பும், அதிசயமும், வியப்பே.
(3 பெயர்கள்) 1048

**வியல்**

அகலமும், பெருமையும், காடும், வியலே.
(3 பெயர்கள்) 1049

**விலோதம்**

மங்கையர் மயிர்ச் சுருள், பதாகையும், விலோதம்.
(2 பெயர்கள்) 1050

### வில்

மூல நாள், ஒளி, கோதண்டம், வில் (எனல்).
(3 பெயர்கள்) 1051

### விழவு

மிதுன இராசியும், உற்சவமும், விழவே.
(2 பெயர்கள்) 1052

### விழைச்சு

இளமையும், கலவியும், விழைச்சு (எனலாகும்).
(2 பெயர்கள்) 1053

### விழைந்தோர்

வேட்டோரும், காதலோரும், விழைந்தோர்.
(2 பெயர்கள்) 1054

### விளர்

இளமையும், கொழுப்பும், விளர் (என்று இசைக்கும்).
(2 பெயர்கள்) 1055

### விள

விளா மரம், இளமை, கமர், (இவை) விள (எனல்).
(3 பெயர்கள்) 1056

### விறப்பு

அச்சமும், பலமும், செறிவும், விறப்பு (எனல்).
(3 பெயர்கள்) 1057

### விறல்

வென்றியும், வலிமையும், விறல் (ஆகும்மே).
(2 பெயர்கள்) 1058

### வீ

பூவும், ஒழிவும், நீக்கமும், மடிவும்,
புள்ளின் (பெயரும்), சாவும், வீயே.
(6 பெயர்கள்) 1059

### வீசல்

கொடுத்தலும், எறிதலும், வீசல் (என்ப).
(2 பெயர்கள்) 1060

### வீதி

நேர் ஓடுதலும், தெருவும், வீதி. (2 பெயர்கள்) 1061

### வீரை

ஒரு மரப் பெயரும், (உறு) துயர்ப் (பெயரும்,)
(விரி) கடல் (பெயரும்,) வீரை (ஆகும்).
(3 பெயர்கள்) 1062

### வெடி

நறைபடு புகையும், அச்சமும், (அன்றி)
வெளியின் (பெயரும்), வெடி (என்ருகும்).
(3 பெயர்கள்) 1063

### வெதிர்

செவிடும், மூங்கிலும், வெதிர் (என மொழிப).
(2 பெயர்கள்) 1064

### வெளில்

யானைத் தறியும், அணிலும், பாடையும்,
தயிர் கடை தறியும், வெளில் (எனச் சாற்றும்).
(4 பெயர்கள்) 1065

### வெள்ளம்

ஈரமும், கடலும், கடலின் திரையும்,
நீரின் பெருக்கும், ஓர் எண்ணும், வெள்ளம்.
(5 பெயர்கள்) 1066

### வெள்ளி

புகரும், இரசதமும், (புகலும்) வெள்ளி.
(2 பெயர்கள்) 1067

### வெள்ளை

பலதேவனும், வெண்பாவும், வெளிறும்,
வெள்ளை, வெள்ளாட்டு மறியும், மதுவும்,
சங்கும், வெள்ளை (என்றும் சாற்றும்).
(7 பெயர்கள்) 1068

### வெறி

அணங்கு ஆட்டும், வட்டமும், அச்சமும், பேயும்,
(மணக்கும்) நாற்றமும், (மாற்றரும்) கலக்கமும்,
(விளம்பிய) நோயும், யாடும், வெறி (எனல்).
(8 பெயர்கள்) 1069

### வெறுக்கை

செல்வமும், பொன்னும், வெறுக்கை (ஆகும்).
(2 பெயர்கள்) 1070

### வேங்கை

புலியும், ஓர் மரமும், பொன்னும், வேங்கை.
(3 பெயர்கள்) 1071

### வேசரி

கழுதையும், கோவேறு கழுதையும், வேசரி.
(2 பெயர்கள்) 1072

### வேட்டுவன்

மகம், ஓர் குளவி, மறவனும், வேட்டுவன்.
(3 பெயர்கள்) 1073

### வேணி

வேணி, சடையும், நதியும், விசும்பும் (ஆம்).
(3 பெயர்கள்) 1074

### வேணு

உள் தொளைப் பொருளும், மூங்கிலும், வேணு.
(2 பெயர்கள்) 1075

### வேதிகை

பலகையும், குறடும், திண்ணையும், வேதிகை.
*(3 பெயர்கள்) 1076*

### வேய்

ஒற்றும், மூங்கிலும், உள்தொளையும், வேயே.
*(3 பெயர்கள்) 1077*

### வேய்தல்

வேயுளும், சூடுதலும், வேய்தல் (என்ப).
*(2 பெயர்கள்) 1078*

### வேலன்

வெறியாட்டாளனும், குமரனும், வேலன்.
*(2 பெயர்கள்) 1079*

### வேலி

ஊரும், அரணும், காவலும், நிலமும்,
(மேவிய) வயலும், வேலி (ஆகும்).
*(5 பெயர்கள்) 1080*

### வேலை

கடலும், கடலின் கரையும், பொழுதும்,
வினையும், காலையும், வேலை (என்று ஆகும்).
*(5 பெயர்கள்) 1081*

### வேல்

படைக்கலமும், ஞாங்கரும், ஓர் மரமும், வேலே.
*(3 பெயர்கள்) 1082*

### வேழம்

குஞ்சரமும், கொறுக்கைச்சிப் (பெயரும்),
இசையும், கரும்பும், மூங்கிலும், வேழம்.
*(5 பெயர்கள்) 1083*

### வேளாண்மை

மெய்ம்மையும், கொடையும், வேளாண்மை (ஆகும்).
*(2 பெயர்கள்) 1084*

### வேளாளர்

சதுர்த்தரும், கொடை வள்ளலும், வேளாளர்.
*(2 பெயர்கள்) 1085*

### வேள்

தாரகாரியும், சளுக்கியர் வேந்தனும்,
வேனிலாளனும், வேள் (எனலாகும்).
*(3 பெயர்கள்) 1086*

### வேள்வி

அருச்சனை, அளித்தல், ஆதி எழும் சனி,
வேள்விக் குண்டமும், வேள்வியும், வேள்வி.
*(5 பெயர்கள்) 1087*

### வேனில்

பொலிவும், கொடையும், (ஓர்) அழகும், ஒப்பனையும்,
பேயின் தேரும், வேனில் (ஆகும்).
*(5 பெயர்கள்) 1088*

### வை

வைக்கோலும், கூர்மையும், பகுதியும், வை (எனல்).
*(3 பெயர்கள்) 1089*

### வைகல்

தினமும், தங்கலும், (தெரியின்) வைகல்.
*(2 பெயர்கள்) 1090*

### வையம்

உரோகிணி நாளும், பாரும், தேரும்,
ஏறும், ஊர்தியும், வையம் (எனப்படும்).
*(5 பெயர்கள்) 1091*

**பத்தாவது**
**ஒரு சொல் பல் பொருள் வகை**
**முற்றிற்று**

# பிங்கலம்

## நூற்பா தலைப்பு – அகராதி அட்டவணை

வகை / நூற்பா எண்

# பொருளடக்கம்

# சூடாமணி நிகண்டு

### சிறப்புப் பாயிரம்*

பொன்னும் நல் மணியும் முத்தும்
புனைந்த முக்குடை நிழற்ற
மின்னு பூம் பிண்டி நீழல்,
வீற்றிருந்தவனை வாழ்த்தி,
மன்னிய ''நிகண்டு சூடாமணி''
என ஒன்று சொல்வன்;
இந் நிலம்தன்னில் மிக்கோர்
யாவரும் இனிது கேண்மின். 1

பூ மலி அசோகின் நீழல்
பொலிந்த எம் அடிகள், முன் நாள்,
ஏமமா முதல் நூல் சொல்ல,
கணதரர், இயன்ற பாவால்,
தாம் ஒரு வழி நூல் சொல்ல,
சார்பு நூல் பிறரும் சொல்ல,
தோம் இலா மூன்று நூலும்
துவம் என உதித்த அன்றே. 2

அங்கு அது போய பின்றை
அலகு இல் நூல் பிறந்த; மற்றும்
செங்கதிர் வரத்தில் தோன்றும்
திவாகரர், சிறப்பின் மிக்க
பிங்கலர், உரை நூற்பாவில்
பேணினர் செய்தார் சேர;
இங்கு இவை இரண்டும் கற்க
எளிது அல என்று சூழ்ந்து. 3

சொல்லொடு பொருள் உணர்ந்தோன்,
சோதிட நீதி வல்லோன்,
நல் அறிவாளன், எங்கள்
நறுங் குன்றை ஞான மூர்த்தி,
பல் உயிர்க்கு ஒரு தாய் ஆகும்
பரமன், மாமுனிவன் – மெய்ந்நூல்
வல்லுநர் வல்லார்க்கு எல்லாம்,
வரை அற, தரையில் வந்து. 4

*''சிறப்புப் பாயிரம்'' என அச்சுப் பிரதிகளில் காணும் பாடல் எட்டும் தேவப் பெயர்த் தொகுதியின் பகுதியாதல் வேண்டும். தேவப் பெயர்த் தொகுதியின் இறுதிச் செய்யுள் ''இனையவை தேவர் ஈட்டச் செய்யுள் நூற்றொன்று இசைத்தான், புனை குணபத்திரன் தாள் போற்று மண்டலவன் தானே'' என நூற்றொரு செய்யுட்களை உடையதாகக் கூறும். இந்த எண் தொகை சிறப்புப் பாயிரம் எனக் குறிப்பிடும் எட்டுப் பாடல்களையும் சேர்த்தால்தான் நிரம்பும்.

பரிதி ஒன்று உதயம் செய்து
பங்கயம் அநேக கோடி
முருகு எழ மலர்வித்தென்ன
முகமுடன் அகம் மலர்த்தி,
மருவு முத்தமிழை முன் நாள்
வளர்த்த பாண்டியனே போலக்
கருதிய எல்லாம் தந்து,
கவிமணி மாலை சூடி. 5

செகம் எனும் பளிங்கு மாடத்
திகிரி வேந்தரையே போல,
புகழ் எனும் பஞ்சி சேர்த்திப்
பொலிவுறு பேர் அத்தாணி
மகிழ் குணபத்திரன், எங்கள்
வழித் தெய்வம் போல்வான், சொல்ல
இகபரம் இரண்டும் வேண்டி
இயல் இசை வல்லோர் கேட்ப. 6

விரவிய தேவர், மக்கள்,
விலங்கொடு, மரம், இடம், பல்
பொருள், செயும் வடிவு, பண்பு,
போற்றிய செயல், ஒலிப் பேர்,
ஒரு சொல் பல் பொருளினோடும்,
உரைத்த பல் பெயர்க் கூட்டந்தான்,
வருமுறை திவாகரம் போல்
வைத்து, பிங்கலந்தை தன்னில். 7

ஒருங்கு உள பொருளும் ஓர்ந்திட்டு,
உரைத்தனன், விருத்தம் தன்னில்,
இருந்த அவை நல்லோர் குற்றம்
இயம்பிடார் என்பது எண்ணி,
திருந்திய கமல வூர்தி
திருப்புகழ் புராணம் செய்தோன்,
பரந்த சீர்க் குணபத்திரன் தாள்
பணிந்த மண்டலவன்தானே. 8

## 1. தேவப் பெயர்த் தொகுதி

### அருகன்

அருகன், எண்குணன், நிச்சிந்தன்,
அறவாழி வேந்தன், வாமன்,
சினன், வரன், உறுவன், சாந்தன்,
சினேந்திரன், (நீதி நூலின்)
முனைவன், மாசேனன், தேவன்,
மூவுலகுணர்ந்த மூர்த்தி,
புனிதன், வென்றோன், விராகன்,
பூமிசை நடந்தோன், போதன். 9

பண்ணவன், கமல ஊர்தி,
பரமேட்டி, காதிவென்றோன்,
புண்ணியன், புலவன், புத்தன்,
பூரணன், பொன்னெயில் கோன்,
விண்ணவன், விமலன், வீரன்,
விநாயகன், வீதசோகன்,
அண்ணல், (வில்) மதனை வென்றோன்,
அருட்கொடி வேந்தன், ஆசான். 10

முத்தன், மாமுனி, கருத்தன்,
முக்குடைச் செல்வன், முன்னோன்,
சித்தன், எண்சிறப்பும் உள்ளோன்,
திகம்பரன், கொல்லாவேதன்,
நித்தன், நின்மலன், நின்னுமன்,
நிராயுதன், நேமிநாதன்,
அத்தன், ஆநந்தன், சோதி,
அரியணைச் செல்வன், ஆதி. 11

ஆத்தன், குற்றங்கள் இல்லான்,
அசோகு அமர் கடவுள், ஆதன்,
சாத்தன், வேதாந்தன், நாதன்,
சமி, அநாமயன், சுயம்பு,
நீத்தவன், பிதா, விதாதா,
நிரம்பரன், அனந்த ஞானி,
தீர்த்தன், மால், பகவன், சாமி,
சீபதி, சீமான், செய்யோன். 12

நிருமலன், வரதன், சாது,
நிரஞ்சனன், விறலோன், யோகி,
தருமராசன், யுகாதி,
சதுர்முகன், சாதரூபி,
திருமறு மார்பன், (நீடு)
சிவகதிக்கு இறை, (தொண்ணூறே)
அருகன் (பேர் ஆகும்; மற்றும்
அபிதானம் அநந்தம் ஆமே).
(90 பெயர்கள்) 13

### சிவன்

சங்கரன், இறையோன், சம்பு,
சதாசிவன், பேயொடு ஆடி,
(பொங்கு) அரவு அணிந்த மூர்த்தி,
புராந்தகன், பூத நாதன்,
கங்கை வேணியன், கங்காளன்,
கடுக்கையங் கண்ணி சூடி,
மங்கை ஓர் பாகன், முன்னோன்,
மகேச்சுரன், வாமதேவன், 14

நீலகண்டன், மாதேவன்,
நிருமலன், குன்றவில்லி,
சூல பாணியன், ஈசானன்,
பசுபதி, சுடலை ஆடி,
கால காலன், கபாலி,
உருத்திரன், கைலை ஆளி,
ஆல் அமர் கடவுள், நித்தன்,
ஐம்முகன், பரசு பாணி. 15

அந்தி வண்ணன், முக்கண்ணன்,
அழல் ஆடி, பாண்டரங்கன்,
சந்திரசேகரன், ஆனந்தன்,
(சடைமுடி) அனந்தன், ஆதி,
தந்தி (ஈர்) உரியோன், நம்பன்,
தற்பரன், நீறு அணிந்தோன்,
நந்தி, ஈச்சுரன், ஏறு ஊர்ந்தோன்,
நக்கன், (மா) ஞானமூர்த்தி. 16

வரன், மறை முதலி, ஈசன்,
மான் இடம் ஏந்தி, சோதி,
பிரமன் மாற்கு அரியோன், தாணு,
பிஞ்சகன், பினாக பாணி,
பரமன், எண்தோளன், பர்க்கன்,
பவன், யோகி, பகவான், ஏகன்,
அரன், உமாபதி, சிவன் (பேர்
அறுபத்தாறு; அநந்தம் மற்றும்).
(66 பெயர்கள்) 17

### பல தேவன்

(இலகும்) ஓர் குண்டலன், (மற்று)
இரேவதி கொண்கன், (முற்றும்
நிலவிய) முசலி, வெள்ளை,
(நிகழ்) நீலாம்பரன், அநந்தன்,
அலம் (உறு) படையாக் கொண்டோன்,
அச்சுதன் முன்னர் வந்தோன்,
பலபத்திரன், காமபாலன்,
பனந்தாமன், பலதேவன் (பேர்).
(11 பெயர்கள்) 18

### அரி

மாதவன், மாயன், (செய்ய)
வாமனன், வாசுதேவன்,
சீதரன், நந்தகோபன்
(திரு)மகன், உவணம் ஏற்ற
கேதனன், பதுமநாபன்,
கேசவன், பஞ்சவர்க்குத்
தூதனே, சார்ங்க பாணி,
(சுரிமுகச்) சங்கம் ஏந்தி. 19

கொண்டல் வண்ணன், காகுத்தன்,
கோவிந்தன், அச்சுதன், மால்,
விண்டு, வேலையில் துயின்றோன்,
(விரகினுல்) உந்தி பூத்தோன்,
(வண்) துழாய் மௌலி, ஆதி
வராகன், வைகுண்ட நாதன்,
முண்டகாசனை கேள்வன்,
தாமோதரன், முராரி, நேமி- 20

வலவன், தேவகி (தன்) மைந்தன்,
வனமாலி, படி இடந்தோன்,

சலசலோசனன், அனந்த
சயனன், பீதாம்பரன், (பேர்)
உலகு அளந்தருள்வோன், பஞ்சா
யுதன், உலகு உண்ட பெம்மான்,
அலகை (தன்) முலையோடு ஆவி
அருந்தினோன், நாரசிங்கன். 21

அரவணைச் செல்வன், கண்ணன்,
அறிதுயில் அமர்ந்த மூர்த்தி,
பிரமனைப் பெற்ற தாதை,
பின்னை கேள்வன், முகுந்தன்,
கரியவன், நெடியோன், காவற்
கடவுள், நாரணன், (ஏழ் ஏழே)
அரியின் (பேர் ஆகும்; மற்றும்
அபிதானம் அனந்தம் ஆமே).
(49 பெயர்கள்) 22

### பிரமன்

பிரமன், மேதினி படைத்தோன்,
பிதாமகன், பிதா, விதாதா,
வரன், அயன், மலரோன், (இந்த)
மண் பொதுத் தந்தை, வேதா,
இரணிய கருப்பன், போதன்,
(இனிய) மால் உந்தி வந்தோன்,
குரவன், ஓதிமம் உயர்த்த
கொடியினன், அன்ன ஊர்தி. 23

இறை சதானந்தன், (நீண்ட)
எண்கணன், விதி, சுயம்பு,
மறையவன், அனந்தன், ஞானி,
மால்மகன், வாணி கேள்வன்,
(முறைதெரி) பகவன், வானோர்
முதல்வன், நான்முகன், விரிஞ்சன்,
(நறை மலி) கமல யோனி
(நாமம் ஆறைந்தும் ஆமே) .
(30 பெயர்கள்) 24

### புத்தன்

தரும ராசன், முனீந்திரன்,
சினன், (பஞ்சதாரை விட்டே
அருள் சுரந்து அவுணர்க்கு ஊட்டும்)
ததாகதன், ஆதி தேவன்,
(விரவு) சாக்கியனே, சைனன்,
விநாயகன், சினம் தவிர்ந்தோன்,
அரசு நீழலில் இருந்தோன்,
(அறி)வரன், பகவன், செல்வன். 25

அண்ணலே, மாயா தேவி
சுதன், அகளங்க மூர்த்தி,
(நண்ணிய) கலைகட்கெல்லாம்
நாதன், முக்குற்றம் இல்லோன்,
எண்ணில் கண் உடையோன், வாமன்,
(ஏற்ற) புண்ணியத்தின் மூர்த்தி,
புண்ணிய முதல்வன், சாந்தன்,
பூமிசை நடந்தோன், புத்தன்.
(24 பெயர்கள்) 26

### இந்திரன்

மேக வாகனன், வேள்விக்கு
வேந்தன், விண் முழுதும் ஆளி,
பாக சாதனனே, வச்சிர
பாணி, கோபதி, (சிறப்பாம்)
நாக (நீள்) நகர்க்கு நாதன்,
நால் மருப்பு யானை ஊர்தி,
போகி, வாசவனே, வேந்தன்,
புரந்தரன், புலவன், சக்கிரன். 27

மருத (நல்) நிலத்து வேந்தன்,
மருத்துவன், வானோர் கோமான்,
புருகூதன், சசிமணாளன்,
புரோகிதன், கௌசிகன்னே,
கரியவன், சுனாசீரன், ஆ
கண்டலன், (உடன்) வலாரி,
அரி, சதக்கிரது, (நீண்ட)
ஆயிரங் கண்ணன், இந்திரன்.
(28 பெயர்கள்) 28

### விநாயகன்

அங்குச பாசம் ஏந்தி,
அம்பிகை தனயன், முன்னோன்,
ஐங்கரன், மூத்தோன், ஒற்றை
(அணி) மருப்பினன், ஏரம்பன்,
கங்கை பெற்றோன், முக்கண்ணன்,
கணபதி, ஈசன் மைந்தன்,
(வெம்) கய முகனே, ஆகு
வாகனன், விநாயகன் (பேர்).
(13 பெயர்கள்) 29

### வீரபத்திரன்

உக்கிரன், அழற்கண் வந்தோன்,
உமை மகன், சிம்புள் ஆனோன்,
முக்கணன், சடையோன், யானை
முகவனுக்கு இளையோன், வில்லி,
செக்கர் வான் நிறத்தன், குரோதன்,
சிறு விதி மகம் சிதைத்தோன்,
(மிக்க) பத்திரைக்குக் கேள்வன்,
வீரபத்திரன் (பேர் ஆமே).
(12 பெயர்கள்) 30

### கந்தன்

முருகன், வேள், சாமி, ஆறு
முகன், குகன், குழகன், மாயோன்
மருகன், சேய், கார்த்திகேயன்,
வரை பக எறிந்தோன், செட்டி,
அரன் மகன், கங்கை மைந்தன்,
ஆண்டலைக் கொடி உயர்த்தோன்,

சரவண பவன், கடம்பன்,
தாரகற் செற்றோன், ஆசான். 31

(வேய்ந்த பூங்) குறிஞ்சி வேந்தன்,
வேலினுக்கு இறை, விசாகன்,
சேந்தன், காங்கேயன், செவ்வேள்,
சிலம்பன், (மா) மஞ்ஞை ஊர்தி,
(வாய்ந்த) சூர்ப் பகைவன், வள்ளி
மணவாளன், தெய்வயானை
காந்தனே, குமரன், கந்தன்
(கலை உணர்) புலவனும் (பேர்).
(31 பெயர்கள்) 32

### காமன்

திருமகள் மைந்தன், மாரன்,
சித்தசன், சம்பராரி,
உரு இலி, மன்மதன், மீன்
(உறு)கொடி உயர்த்த தோன்றல்,
இரதி காதலன், வசந்தன்,
(எழில் பெறு) வேனில் ஆளி,
(கருதிய) கருப்பு வில்லி,
கந்தர்ப்பன், மதன், பூ வாளி. 33

திங்கள் வெண் குடையோன், தென்றல்
தேரினன், வில்லி, மோகன்,
ஐங்கணைக் கிழவன், (எய்யும்
மலர்க்கணை) வேள், அநங்கன்,
(செங்கண்) மால் மைந்தன், (மிக்க
திறல்) மனோபவன், மனோசன்,
அங்கசன், மனோபுவே, (நீர்)
ஆழி வெம் முரசோன், காமன்.
(27 பெயர்கள்) 34

### வைரவன்

முத்தனே, குமரன், பிள்ளை,
முடுவல் (வெம்) படையோன், காரி,
சித்தன், கேத்திர பாலன்னே,
செந்தொடைக்குரிய கோமான்,
வித்தகன், ஞாளி ஊர்தி,
(விறல்) கருங்குதிரை ஆளி,
(வைத்த சீர்) வடுகன், (இன்ன)
வைரவன் (நாமம் ஆமே).
(12 பெயர்கள்) 35

### ஐயன்

காரியே, புறத்தவன், (பூங்)
கடல் வண்ணன், (நெடிய) சாத்தா,
பூரணை கேள்வன், யோகி,
புட்கலை (தன்) மணாளன்,
(ஒரும்) மாசாத்தன், செண்டா
யுதன், வெள்ளை யானை ஊர்தி,
ஆரியன், அறத்தைக் காப்போன்,
அரிகர குமரன், ஐயன்.
(13 பெயர்கள்) 36

### குபேரன்

அரனது தோழனே, கின்
னரர் பிரான், அளகை ஆளி,
புருட வாகனனே, சோமன்,
புட்பக விமானம் உள்ளோன்,
இருநிதிக் கிழவன், ஏக
பிங்கலன், இயக்கர் கோமான்,
மரகதன், தனதன், மந்திரி,
வைச்சிரவணன், குபேரன்
(13 பெயர்கள்) 37

### யமன், காலன்

சமன், செங்கோல் கடவுள், கூற்று,
தருமன், அந்தகனே, சண்டன்,
நமன், வைவச்சுதனே, (மற்றை)
நடுவனே, தென்றிசைக் கோன்,
யமன், அரி, மறலியே, (மற்று)
எருமை ஊர்தியும் (ஆம்; இப்பால்
கமை இல்) கால், மறல், மடங்கல்,
காலன், பாசத்தனும் (பேர்).
(13, 4 பெயர்கள்) 38

### தரும தேவதை

மரகத வல்லி, பூக
(மா) நிழல் உற்ற வஞ்சி,
பரம சுந்தரி, இயக்கி,
பகவதி, அம்மை, (எங்கள்)
அருகனை முடி தரித்தாள்,
அம்பிகை, அறத்தின் செல்வி,
தரும தேவதை (பேர்), அம்பாலிகை
(என்றும் சாற்றலாமே).
(10 பெயர்கள்) 39

### உமை

அரன் இடத்தவள், காமக் கோட்டத்தி,
அம்பிகையே, மாதா,
தருமத்தின் செல்வி, தேவி,
சாம்பவி, மலை மடந்தை,
பரை, சிவை, கௌரி, (முக்கண்)
பார்ப்பதியொடு, பவானி,
(உரை கெழு) சத்தி, நாரி,
உமை (பெயர் மூவைந்து ஆமே).
(15 பெயர்கள்) 40

### கங்கை, காடுகாள்

வரநதி, (நீடு) மந்தாகினி,
திரிபதகை, (மற்றைச்)
சுரநதி, கங்கை பேர் சானவி,
பகிரதியும் (சொல்லும்);
(பெருகு) மூதணங்கு, மோடி,
(பேசிய) கொற்றி, சூரி,
(மருவிய) வடுகி, மாரி,
வடுகன்தாய், காடுகாள் (பேர்).
(6, 7 பெயர்கள்) 41

### திருமகள்

(மாக்) கடல் பிறந்த கோதை,
மா, அரிப்பிரியை, செய்யாள்,
ஆக்கம், பொன், பொறி, சீதேவி,
அலர்மகள், பொருளின் செல்வி,
தாக்கணங்கு, இளையாள், பூமின்,
இலக்குமி, சலசை, (செல்வம்
தேக்கும்) இந்திரை (ஈரெட்டும்)
திருமகள் (நாமம் ஆமே).
(16 பெயர்கள்) 42

### நா மகள்

கலை மகள், பனுவலாட்டி,
காயத்திரி, ஞானமூர்த்தி,
உலக மாதா, பிராமி,
(ஒள்ளிய) வெள்ளை மெய்யாள்;
(இலகு) வெண் சலசம் உற்றாள்,
பாரதி, இசை மடந்தை,
(மலர்) அயன் மனைவி, வாக்காள்,
வாணி, நாமகள் (பேர் ஆமே).
(13 பெயர்கள்) 43

### மூதேவி

சேட்டை, இந்திரைக்கு மூத்தாள்,
சீர்கேடி, சிறப்பிலாதாள்,
(நீட்டிய) ஏகவேணி,
(நெடுங்)காகத் துவசம் உற்றாள்,
கேட்டையே, கெடலணங்கு,
கழுதை வாகனி, (கேடு எல்லாம்
மூட்டிய) கலதி, தௌவை,
முகடி, மூதேவி (ஆமே).
(12 பெயர்கள்) 44

### இந்திரன் மனைவி, இந்திரன் மைந்தன், அமரர் மாது, தெய்வ மெல்லியர் பொதுப் பெயர்

(பொரு இல்) இந்திராணி, (செய்ய)
புலோமசை, சசி, (பேரின்பம்
தரும்) அயிராணி, இந்திரன் மனைவி (பேர்);
சயந்தன், மைந்தன்;
அரமகள், அரம்பை, (என்ப)
அமரர் (தம்) மாதின் (பேரே);
(விரவு) சூர், அணங்கு, தெய்வ
மெல்லியர் பொதுப் பேர் (சொல்லும்).
(4, 1, 2, 2 பெயர்கள்) 45

### காளி, இடாகினி, காளி தன் ஏவல் செய்வாள்

சூரி, மாலினி, எண்தோளி,
சூலி, சண்டிகையே, தேவி,
வீரி, மாதரி, கங்காளி,
வேதாளியொடு, மாதங்கி,
தாரகற் செற்ற தையல், பைரவி,
சிவை, சாமுண்டி,
ஆரணி, வல்லணங்கோடு,
ஐயை, யாமளை, முக்கண்ணி. 46

அலகை வெம் கொடி உயர்த்தாள்,
மதுபதி, ஆளி ஊர்தி,
(உலவிய) மாயை, (உற்ற)
யோகினி, காளி (நாமம்);
வலவை, சூர்மகள் (தனோடு),
மாயவள், இடாகினிப் (பேர்)
(இலகு) சன்மினி, வஞ்சப் பெண்,
காளி தன் ஏவல் செய்வாள்.
(25, 3, 2 பெயர்கள்) 47

### துர்க்கை

அமரி, எண்தோளி, வெற்றி,
அந்தரி, அம்பணத்தி,
சமரி, பாலைக் கிழத்தி,
சயமகள், வீரச் செல்வி,
குமரி, (மா) மகிடற் செற்றாள்,
கொற்றவை, சக்கிரபாணி,
விமலை, (வண்) கலையானத்தி,
விசையை, நாரணியே, விந்தை. 48

நீலியே, (நெடிய) காத்தியாயினி,
மேதிச் சென்னி
(மேல் இடர் உற) மிதித்த
மெல்லியல், கௌரி, ஐயை,
மாலினுக்கு இளைய நங்கை,
பகவதி, வாள் கைக் கொண்டாள்,
சூலி, சண்டிகையே, கன்னி,
சுந்தரி, துர்க்கை (நாமம்).
(30 பெயர்கள்) 49

### தேவர்

அமரர், பண்ணவர், புத்தேளிர்,
கடவுளர், அண்டர், உம்பர்,
இமையவர், விபுதர், வானோர்,
இலேகரே, புலவர், விண்ணோர்,
அமுதர், ஆதித்தர், மேலோர்,
ஐயரே, சுரரே, தீர்த்தர்,
(உமிழ் சுடர் மௌலி சூட்டும்)
உயர்நிலத்தவரும், தேவர்.
(19 பெயர்கள்) 50

### தெய்வம், அசுரர்

(ஈனம் இல்) அணங்கு, புத்தேள்,
(ஏற்ற) சூர், கடவுள், தேவே,
(ஆன) தெய்வதம்மே, தெய்வம்
(ஆம் என உரைப்பர் நூலோர்);
தானவர், அவுணரோடு,
தைத்தியர், திதியின் மைந்தர்,

*(ஏனைய) அசுரர் (ஆகும்),*
*நிசாசரர் (என்றும்) ஏற்கும்).*
*(6, 5 பெயர்கள்) 51*

**இராக்கதர், விஞ்சையர், கந்தருவர்**

*நிருதரே, பிசித ஊணர்,*
*நிசாசரர், அரக்கர், (தீமை*
*தரும்) இராக்கதர் (பேர்), சால*
*கடங்கடர் (தானும் ஆகும்);*
*(விரவு) விஞ்சையர் பேர்*
*வித்தியாதரரே,கேசரரும் (ஆம்); கந்-*
*தருவர், யாழ் வல்லோரே, காந்-*
*தருவர், கின்னரரும் (ஆமே).*
*(5, 2, 3 பெயர்கள்) 52*

**பூதம், பேய்**

*குறள், கிருத்திமமே, கூளி,*
*பாரிடம், சாதகம், (செந்*
*நெறி இல்) பூதப் (பேர் ஐந்தாம்);*
*(நீள்) பிரேதம், வேதாளம்,*
*வெறி, மயல், பிசாசம், பாசம்,*
*வியந்தரம், மண்ணை, சோகோடு,*
*(அறிவு அழி) கழுது, கூளி,*
*அலகை, பேய், கடி, சாவும் (பேர்).*
*(5, 14 பெயர்கள்) 53*

**ஆகாயம்**

*அண்டம், வான், உலகு, மங்குல்,*
*அந்தரம், அம்பரம், கோ,*
*குண்டலம், ககனம், காயம்,*
*குடிலம், புட்கரம், அநந்தம்,*
*(கண்டிடா) வெளியே, மீ, மா*
*கத்தோடு, ஆசினி, நபம், கம்,*
*விண்தலம், விசும்பு, வேணி,*
*வியோமம், ஆகாயம் (ஆமே).*
*(23 பெயர்கள்) 54*

**காற்று**

*வாதம், கால், வளி, மருத்து,*
*வாடையே, பவனம், வாயு,*
*கூதிர், மாருதம், மால், கோதை,*
*கொண்டலே, உலவை, கோடை,*
*ஊதை, வங்கூழ், (சிறந்த)*
*ஒலி, சதாகதி, உயிர்ப்பு,*
*(காது) அரி, கந்தவாகன், பிரபஞ்*
*சனன், சலனன், காற்றே.*
*(23 பெயர்கள்) 55*

**மேல் காற்று, கீழ் காற்று, வாடை,**
**பனிக்காற்று, சுழல் காற்று**

*கோடை, மேல் காற்றின் (நாமம்);*
*கொண்டல், கீழ் காற்றிற்கு (ஏற்கும்);*
*வாடையின் (நாமம் வீசு)*
*வடகாற்று, வடந்தை (என்ப);*
*(கூடிய) கூதிர், ஊதை,*
*(குளிர்) பனிக் காற்றின் (நாமம்);*
*(சாடிய) சுழல் காற்றின் (பேர்)*
*சாரிகை, சூறை (ஆமே).*
*(1, 1, 2, 2, 2 பெயர்கள்) 56*

**தென்றல், நெருப்பு**

*(வரு) தென்கால், சிறுகால், தென்றி,*
*மலயக்கால், வசந்தன், தென்றல்;*
*அரி, வசு, தகனன், அங்கி,*
*அனல், அயவாகனன், தீ,*
*எரி, சுசி, சிகியே, ஆரல்,*
*(இயங்கு) காற்றின் சகாயன்,*
*கருநெறி, கனலியே, அங்*
*காரகன், சித்திர பானு. 57*

*தழல், உதாசனன், (சிறந்த)*
*தனஞ்சயன், சாத வேதா,*
*(செழுமைய) முளரி, தென்கீழ்த்*
*திசை இறை, சேர்ந்தார்க் கொல்லி,*
*எழு(வித) நாவே, வன்னி,*
*(ஏற்ற) பாவகனே, தேயு,*
*அழல், சுடர், ஞெகிழி, (இன்ன)*
*நெருப்பின் (பேர் ஆறைந்து ஆமே).*
*(5, 30 பெயர்கள்) 58*

**ஊழித் தீ, கனல் ஒழுங்கு,**
**விண் வீழ் கொள்ளி, நறும்புகை**

*வடவை, தீத்திரள், மடங்கல்,*
*(வரு) வடவாமுகம், (சூழ்)*
*கடையனல், ஊழித் தீ (ஆம்);*
*கனல் ஒழுங்கு (அது), சுவாலை;*
*(அடைவு இல்) விண் வீழுங் கொள்ளி,*
*உற்கை (என்று அறையலாமே);*
*வெடி, நறை, குய், (இம் மூன்றும்*
*மிகு) நறும் புகையின் (நாமம்).*
*(5, 1, 1, 3 பெயர்கள்) 59*

**காட்டழல், தீக்கடை கோல், விளக்கு,**
**புகை,தீப் பொறி, தீத் தெய்வம்,**
**தீத் தெய்வத்தின் பாரி**

*தாவம், காட்டழல்; (அத்) தீயைத்*
*தரு கோலே, ஞெலிகோல் (என்ப);*
*தீவிகை, தீபம், (மற்றைத்*
*திகழ்) சுடர், ஒளி, விளக்கே;*
*ஆவி, தூபம், தூமத்தோடு,*
*அரி, புகை; பொறி, புலிங்கம்;*
*பாவகன், (அத்) தீத் தெய்வம்;*
*பாரியே, சுவாகாதேவி.*
*(1, 1, 4, 4, 1, 1, 1 பெயர்கள்) 60*

### நீர், புனல் வேந்தன்

வாரி, ஆலம், கிலாலம்,
மழையலர், கமலம், காண்டம்,
நீரம், புட்கரமே, சிந்து,
(நெடும்) புனல், சலிலம், பாணி,
கார், அறல், புவனம், நாரம்,
கன விரதம், கவந்தம்,
மாரி, அம்பு, உதமே, அப்பு,
வருணம், சீவனம், வனம், வார், 61

பயம், மழை, உதகம், தோயம்,
பயசு, சம்பரம், பானீயம்,
வயமொடு, சீவனீயம்,
(வரு) தீர்த்தம், கீரம், சீதம்,
அயம், அளத்தோடு, ஆம், அம்,
அமுதம், கம், சலம், நீர் (ஆகும்);
(நயன் உறு) வருணன், (இந்த
நற்) புனல் வேந்தன் (நாமம்).
(45, 1 பெயர்கள்) 62

### சூரியன், பரிதியின் வட்டம், பரிதியின் கிரணம்

பரிதி, பாற்கரன், ஆதித்தன்,
பனிப்பகை, சுடர், பதங்கன்,
இருள் வலி, சவிதா, சூரன்,
எல்(லு), மார்த்தாண்டன், என்றூழ்,
அருணன், ஆதவனே, மித்திரன்,
ஆயிரம் சோதி உள்ளோன்,
தரணி, செங்கதிரோன், சண்டன்,
தபனனே, ஒளியே, சான்றோன். 63

அனலியே, அரியே, பானு,
அலரியே, அண்டயோனி,
கனலியே, விகர்த்தனன், (வெங்)
கதிரவன், பகலோன், வெய்யோன்,
தினகரன், பகலே, சோதி,
திவாகரன், அரியமாவே,
இனன் (உடன்), உதயன், ஞாயிறு,
எல்லையே, கிரணமாலி. 64

(விரவும்) ஏழ் பரியோன், வேந்தன்,
விரிச்சிகன், விரோசனன், (பேர்)
இரவி, விண்மணி, அருக்கன்,
(ஏழ் ஏழும்) சூரியன் (பேர்);
பரிதியின் வட்டம் (தானே)
விசயம் (ஆம்); பரிதி வீசும்
கிரணமே, கரமும், (மற்றைக்
கிளர்ந்த) தீவிரமும் (ஆகும்).
(49, 1, 2 பெயர்கள்) 65

### சந்திரன்

நிலவு, சோமன், களங்கன்,
நிசாபதி, பிறை, (குளிர்ந்த)
கலையினன், உடுவின் வேந்தன்,
கலாநிதியொடு, குபேரன்,
அலவனே, சசியே, திங்கள்,
அம்புலி, நிசாகரன், (வான்
உலவு) இமகிரணன், (சாந்தம்
உற்ற) தண்ணவன், குரங்கி. 66

மதி, இராக் கதிரே, இந்து,
(மருவு) தானவனே, அல்லோன்,
விதுவொடு, குமுத நண்பன், சுதாகரன்,
வேந்தன், ஆலோன்,
(சிதைவு இலா) முயலின் கூடு,
பசுங்கதிர்த் தே (என்று எல்லாம்
புதிய) சந்திரன் (மூவேழும்
எட்டுமே புகன்ற நாமம்).
(29 பெயர்கள்) 67

### செவ்வாய்

(கருதிய) செந்தீ வண்ணன்,
(காட்டும்) அங்காரகன், சேய்,
குருதி, வக்கிரனே, பௌமன்,
குசன், நிலமகன், அரத்தன்,
(மருவிய) அழலோன், (மற்றை)
மங்கலன் (உடனே), ஆரல்,
(விரவிய) உதிரன், (இன்ன
மேவு) செவ்வாயின் (நாமம்).
(13 பெயர்கள்) 68

### புதன்

சிந்தை கூரியன், கணக்கன்,
தேர்ப்பாகன், அருணன், சாமன்,
(வந்த) தூதுவனே, மாலே,
மதிமுகன், அறிஞன், பாகன்,
(அந்தம் ஆம்) புலவன், (மற்றை)
அனுவழி, மேதை, பச்சை,
புந்தி, பண்டிதன், (ஈரெட்டும்)
புதன் (பெயர் ஆகும் அன்றே).
(16 பெயர்கள்) 69

### வியாழன், வெள்ளி

(தீது இலாத) தெய்வ மந்திரி,
சிகண்டிசன், அமைச்சன், சீவன்,
வேதன், ஆண்டளப்பான், ஆசான்,
வேந்தன், பொன், வியாழன் (பேராம்);
(ஓதிய) அசுர மந்திரி,
உசனன், பார்க்கவனே, சுங்கன்,
(கோது இல்) சுக்கிரன், பளிங்கு, புகர்,
கவி, மழைக்கோள், வெள்ளி.
(9, 9 பெயர்கள்) 70

### சனி, இராகு, கேது

கதிர் மகன், மந்தன், காரி,
கரியவன், சௌரி, மேற்கோள்,

முதுமகன், பங்கு, நீலன்,
முடவன், நோய்முகன், சனிப் (பேர்);
(மதி உணும்) இராகு (நாமம்,
மற்று அது) தமம், கறுப்பு (ஆம்);
(அதிகம் ஆம்) கேது, செம்மை,
சிகி, கதிர்ப்பகையும் (ஆமே).
(11, 2, 3 பெயர்கள்) 71

**மேடம், இடபம், மிதுனம், கர்க்கடகம்**

(கொண்ட) மை, வருடை, ஆடு,
கொறி, மறி, மேடம், (என்ப);
குண்டை, சே, மூரி, புல்லம்,
கோ, விடை, இடபம் (ஆகும்);
தண்டு, யாழ், விழவு, இரட்டை,
சவைமகள், மிதுனம் (தானே);
நண்டு, ஞெண்டு, அலவன், சேக்கை
நள்ளி, கர்க்கடகம் (ஆமே).
(5, 6, 5, 5 பெயர்கள்) 72

**சிங்கம், கன்னி, துலாம், விருச்சிகம்**

(கொலை) அரி, யாளி, மாவே,
கொடும் புலி, சிங்கம் (என்ப);
(முலை) மடந்தையர் பேர் எல்லாம்
(மொழிந்திடும்) கன்னி (தானே);
துலை, நிறை, நிறுப்பான், சீர், கோல்,
தூக்கு, வாணிகன், துலாப் பேர்;
(உலைவுறு) தெறுக்கால், தேளே,
(ஓதிய) விருச்சிகப் (பேர்).
(4, 1, 7, 2 பெயர்கள்) 73

**தனு, மகரம், கும்பம், மீனம்**

கொடுமரம், துரோணம், சாபம்,
சிலை, தனு (நாற் பேரே);
(வடிவின்) மான், கலை, சுறாவே,
மகர ராசிக்கு (முப்பேர்);
குடமொடு, கரீரம், சாடி,
குடங்கரே, கும்பம் (என்ப);
(நெடிய) மீன், மயிலை, மற்சம்,
சலசரம், (நேரும்) மீனம்.
(4, 3, 4, 4 பெயர்கள்) 74

**அச்சுவினி, பரணி**

பரி, மருத்துவ நாள், வாசி,
(பரவும்) ஐப்பசி, யாழ், ஏறேடு,
இரலையே, முதல்நாள், சென்னி,
(என்பது) அச்சுவினியின் (பேர்);
பரணியே, கிழவன், சோறு,
பகலவன், தராசு, தாழி,
தருமன் நாள், அடுப்பு, பூதம்,
தாசி, முக்கூட்டு (தானே).
(9, 10 பெயர்கள்) 75

**கார்த்திகை, உரோகிணி**

எரி (பிறந்திடு) நாள், ஆரல்,
இறால், அறுவாய், அளக்கர்,
(கருது) நாவிதனே, அங்கி,
கார்த்திகை, அளகும் (ஏற்கும்);
பிரமன் நாள், சகடு, பண்டி,
(பேசிய) சதியே, வையம்,
உருள், விமானம், தேர், ஊற்றால்,
உரோணியே, உரோகிணிப் பேர்.
(8, 10 பெயர்கள்) 76

**மிருக சீரிடம், திருவாதிரை**

திங்கள் நாள், மதி, பேராளன்,
(சேர்ந்த) மான் தலையே, மாழ்கு,
(பொங்கு) மார்கழியே, மும்மீன்,
(புகழ்) நரிப்புறமே, பாலை,
(இங்கு இவை ஒன்பது என்ப)
மிருக சீரிடத்தின் (நாமம்);
செங்கை, மூதிரை, யாழ், ஈசன்
தினம், (இவை) ஆதிரைப் (பேர்).
(9, 4 பெயர்கள்) 77

**புனர் பூசம், பூசம், ஆயிலியம்**

(கருதிய) அதிதி நாளே,
கழை, புனர்தம், கரும்பு,
(பொரு இலாப்) புனிதம், பிண்டி,
ஆவணம், புனர் பூசப் (பேர்);
குருவின் நாள், கொடிறு, வண்டு,
(குறித்த) காற் குளமே, பூசம்;
அரவின் நாள், கவ்வை, பாம்பே,
ஆயில், ஆயிலியம் (நாற்பேர்).
(7, 4, 4 பெயர்கள்) 78

**மகம், பூரம்**

கொடு நுகம், வேள்வி, வாய்க்கால்,
(குறித்த) வேட்டுவனே, மாசி,
(வடு அற) முதலில் (தோன்றி)
வரும் சனி, மகநாள் (என்ப);
இடை எழும் சனியே, துர்க்கை,
எலி, பகவதி நாளோடு,
(கடிய) நாவிதனே, (எய்யும்)
கணை, (இரு முப்பேர்) பூரம்.
(6, 6 பெயர்கள்) 79

**உத்தரம், அத்தம்**

பங்குனி, கடையில் வந்து
பற்றிய சனியினோடு,
செங்கதிர் (பிறந்த) நாளும்,
(சிறந்த) உத்தரம் (என்று ஆகும்);
(தங்கு) காமரமே, அங்கி
(சார்ந்த) நாள், கௌத்துவத்தோடு,

(அங்)கைம்மீன், களிறு, நவ்வி,
ஐவிரல், அத்தம் (ஏழ் பேர்).
*(3, 7 பெயர்கள்)* *80*

**சித்திரை, சோதி**

(அளக்கும்) நெய், பயறு, மீனே,
அறுவையே, ஆடை, தூசு,
(துளக்கு இலா) நடு நாள், தச்சன்,
துவட்டா நாள், சித்திரைப் பேர்;
விளக்கொடு, மரக்கால், வீழ்க்கை,
வெறுநுகம், காற்றின் நாளே,
(கிளத்திய) காற்று, தீபம்,
(கேடு இலாச்) சோதி (ஏழ் பேர்).
*(9, 7 பெயர்கள்)* *81*

**விசாகம், அனுடம்**

முற்றில், வைகாசி, காற்று
(முந்து) நாள், முறத்திஞேடு,
(வெற்றி சேர்) சுளகு, சேட்டை,
விசாக நாள் (இரு முப்பேரே);
புல், தாளி, பெண்ணே, தேளே,
போந்தை, மித்திர நாள், (ஆறும்
சொற்றனர்) அனுடம் (என்று
சோர்வு இலா நூலோர் தாமே).
*(6, 6 பெயர்கள்)* *82*

**கேட்டை, மூலம்**

சேட்டை, இந்திரன் நாள், வேதி,
(செந்)தழல், எரி, (இவ் ஐந்தும்)
கேட்டை, வல்லாரை, (என்றும்
கிளத்துப வளத்த நூலோர்);
தேட்கடை, குருகு, கொக்கு,
சிலே(யுடன்), அன்றில், ஆனி,
(ஈட்டிய) அசுர நாள்,
(இவ் ஏழ் பெயர்) மூலம் (என்ப).
*(6, 7 பெயர்கள்)* *83*

**பூராடம், உத்தராடம், திருவோணம்**

உடை குளம், முற்குளம், நீர்
(உதித்த) நாள், பூராடப் பேர்;
கடையினில் குளமே, ஆனி,
(கருது) விச்சுவநாள், ஆடி,
(மிடை இல்) உத்தராடம் (என்ப);
(மேவிய) ஓணம், மாயோன்
(அடையும்) நாள், உலக்கை, முக்கோல்,
சிரவணம், சோணே (ஆமே).
*(3, 4, 5 பெயர்கள்)* *84*

**அவிட்டம், சதயம்**

(மருவிய) காகப் புள்ளு,
வசுக்கள் நாள், பறவை, புள்ளு,
(விரவும்) ஆவணி, அவிட்டம்
(விளம்பிய நாமம் ஐந்தாம்);
(பெருகிய) செக்கு, சுண்டன்,
(பேசிய) போரே, குன்று,
வருணன் நாள், சதயம் (ஐந்தும்
வகுத்த பேர் தொகுத்ததாமே).
*(5, 5 பெயர்கள்)* *85*

**பூரட்டாதி, உத்தரட்டாதி, இரேவதி**

(பொரு இல்) முற் கொழுங்கால், நாழி,
புரட்டையே, பூரட்டாதி
முரசு, பிற்கொழுங்கால், மன்னன்
உத்தரட்டாதி (முப்பேர்);
இரவி நாள், கலமே, தோணி,
(ஏற்றம் ஆம்) தொழுவே, நாவாய்,
(பெருகிய) கடைநாள், சூலம்,
பெருநாள், (எட்டு) இரேவதிப் பேர்.
*(3, 3, 8 பெயர்கள்)* *86*

**அருந்ததி, விண்மீன், நாழிகை, காலநுட்பம்**

வட மீனே, சாலி, (என்ப
மற்று) அருந்ததியின் (பேரே);
உடுவே, தாரகையே, பம்மே,
உற்கையே, சுக்கை, விண்மீன்;
கடிகை, நாழிகை (ஆம்), கன்னல்,
இரித்தையும், (அதுவே காட்டும்);
துடி, கலே, விகலே, (முப்பேர்
சொல்லிய) கால நுட்பம்.
*(2, 5, 3, 3 பெயர்கள்)* *87*

**காலம், நெடும் போழ்து**

வேலேயே, அமையம், செவ்வி,
ஏல்வையே, பொழுது, பாணி,
காலே, கொன், பதமே, போழ்து,
காலப் (பேர் ஈரைந்து ஆகும்);
(சால) நீட்டித்தலோடு,
(சார்ந்த) பாணித்தல் (தானும்,)
(நீல உண் கண்ணுய்! மற்று)
நெடித்தலும், நெடும் போழ்து (என்ப).
*(3, 10 பெயர்கள்)* *88*

**கால விரைவு, மத்தியானம், இராசி**

ஒல்லேயே, இறையே, (உற்ற)
சிறுவரை(யுடன்,) இலேசம்,
வல்லே, மாத்திரை(கள்), கால
விரைவின் (பேர் வகுக்கில் ஆறும்);
(நல்ல) நண்பகலே, உச்சி,
நடுப்பகல், மத்தியானம்;
இல்(லுடன்), பவனம், ஓரை,
இராசியின் (பெயராம் என்ப).
*(6, 3, 3 பெயர்கள்)* *89*

**இரா, பகல், நாள்**

அல், விபாவரியே, கங்குல்,
அல்கல், யாமினியே, நத்தம்,
எல்லியோடு, யாமம், மாலை,
இரசனி, நிசி, இரா (ஆம்);
எல்லொடு, திவா, பகல் (பேர்);
ஏல்வையே, திவசம், வைகல்,
அல்கலே, தினமே, எல்லை,
ஆனியம், பகலே, நாள் (ஆம்).
*(11, 2, 8 பெயர்கள்)* *90*

**இருள், முன்னை நாள், பின்னை நாள்**

சருவரி, அந்தகாரம், கச்
சளம், தமம், துவாந்தம்,
இருள் (என்ப), திமிரமோடு,
துணங்கறல் (என்றும் ஏற்கும்);
நெருநலும், நென்னலும் (தான்,
நிகழ்த்துப), முன்னை நாளே;
(பெருகிய) பின்றை, பிற்றை,
பின்னை (என்று இயம்பலாமே.)
*(7, 2, 2 பெயர்கள்)* *91*

**வைகறை, நிலவு, வெய்யில், மாலை,**
**சாமம், பருவம்**

புலரி, வைகறையின் (நாமம்),
விடியலும் (போற்றும் அப் பேர்);
நிலவு, சந்திரிகை; வெய்யில்,
(நிகழ்ந்த) ஆதபமே, என்றாழ்;
(இலகிய) மாலை, சாயம், சந்தி
(ஆம்); யாமம், சாமம்;
(அலைவு அறு) பருவம் (தானே),
ஆனியம், இருது (ஆகும்).
*(2, 1, 2, 2, 1, 2 பெயர்கள்)* *92*

**ஒரு கலை, மாதம், மதி தெரி கலை இரா,**
**மதி மறை கலை இரா**

திதியொடு, பக்கம் (தானே),
ஒருகலை (தெரிக்கும் என்ப);
மதியொடு, திங்கள், (சொல்லின்)
மாதமே (பேதம் இல்லை);
மதி தெரி கலை இராப் (பேர்,
வரும்) சினீ வாலி (ஆகும்);
மதி மறை கலை இராவின்,
(வரும் பெயர்) குகு (என்று ஆமே).
*(2, 2, 1, 1 பெயர்கள்)* *93*

**பூரணை, அமாவாசை, முதல் பக்கம் தொட்டு**
**மூன்று வட்டமாக வரும் ஐந்து பக்கங்கள்**

(அந்தம் ஆம்) உவாவே, பவ்வம்,
பூரணை (இரு பேர் ஆகும்);
இந்துவோடு இரவி கூட்டம்,
அமாவாசை, அமையும் (என்ப);
நந்தை, பத்திரையினோடு,
(நாட்டிய) சயை, இரித்தை,
(முந்து) பூரணை (ஆம்), பக்கம்
முதல் தொட்டு மூன்று வட்டம்.
*(2, 2, 5 பெயர்கள்)* *94*

**ஆவணி முதல் இரண்டிரண்டு மாதம்**
**ஆகிய அறுவகைப் பருவம்**

(பரவிய) காரே, கூதிர்,
முன், பினிற் பனிகளோடு,
(விரவிய) இளைய வேனில்,
(விரைந்திடு) முதிர்ந்த வேனில்,
(மருவும்) ஆவணியே ஆதி
மற்று இரண்டு இரண்டு மாதம்
பருவம் மூவிரண்டும் (ஆய்ந்து
பார்த்திடின் வாய்த்த பேராம்).
*(6 பெயர்கள்)* *95*

**வருடம், ஆண்டில் பாதி, ஊழி, வாழ்நாள்,**
**அயன் வாழ்நாள்**

(இகழ்வு இல்) வற்சரமே, ஆண்டே,
சமை, (முப்பேர்) வருடம் என்ப,
(பகரில்) ஆயனமும் (அப்பேர்);
அயனமே, ஆண்டில் பாதி;
உகமுடிவுடன், மடங்கல்,
ஊழி (ஆம்); ஆயுள், வாழ்நாள்;
(மகிழ்வுறு) கற்பம் (தானே),
(மலர்) அயன் வாழ்நாள் (என்ப).
*(4, 1, 2, 1, 1 பெயர்கள்)* *96*

**மழை, பெருமழை, விடா மழை**

(சொரி) துளி, திவலை, தூவல்,
சீகரம், தூறல், மாரி,
வருடமோடு, உறையே, ஆலி,
வானமும், மழைப் (பேர் பத்தாம்);
பெருமழை (என்ப தானே
பேசில்), ஆசாரம் (ஆகும்);
(விரவிய) பனித்தல், சோனை,
விடாமழை (இரு பேர் ஆமே).
*(10, 1, 2 பெயர்கள்)* *97*

**துளி, ஆலங்கட்டி, மேல், கீழ்**

(வாலிய) திவலை, தூவல்,
(வண்) சிதர், சீகரத்தோடு,
ஆலியே, தளியே, (மிக்க)
உறை, துளி (ஆக ஏழ் பேர்);
ஆலியே, கரகம், (மற்றைக்)
கனோபலம், ஆலங்கட்டி;
மேலின் (நாமம்தான்), உம்பர்,
மேக்கும் (ஆம்); கிழக்கு, கீழே.
*(7, 3, 2, 1 பெயர்கள்)* *98*

### மேகம்

(பயன் உறு) மங்குல், சீதம்,
பயோதரம், தாராதாரம்,
குயின், மழை, எழிலி, மஞ்சு,
கொண்டல், சீமுதம், கொண்மூ,
(வியன்) முகில், விண், விசும்பு,
(விளையும்) மால், சலதரம், செல்,
புயல், கனம், கந்தரம், கார்,
(போற்று) மை, மாரி, மேகம்.

(23 பெயர்கள்) 99

### இடி, மின்

வெடி, ஒலி, அசனி, செல்லு,
விண்ணேறு, மடங்கல், (ஆறே)
இடியின் (பேர்), உருமும், (மற்றை)
அனலேறும் (இதன் பேர் என்ப);
(நெடு) வித்துத்து, தடித்து,
(நீள்) சம்பை, சபலையோடு,
(கடிய) சஞ்சலையே, மின்னல்
கனருசி, மின்னின் (ஏழ் பேர்).

(8, 7 பெயர்கள்) 100

### பனி, பரிவேடம், வானவில்

பனி, இமம், துகினமும் (பேர்);
பரிவேடம், ஊர்கோள், வட்டம்;
(தனி இடு) வானவில்லே,
இந்திர தனு (என்று ஆகும்);
(இனையவை தேவர் ஈட்டச்
செய்யுள் நூற்றொன்று இசைத்தான்
புனை குணபத்திரன் தாள்
போற்றும் மண்டலவன் தானே).

(2, 2, 1 பெயர்கள்) 101

முதலாவது
தேவப் பெயர்த் தொகுதி முற்றிற்று

## 2. மக்கட் பெயர்த் தொகுதி

### தெய்வ வணக்கமும் தோற்றுவாயும்

(தேன் அவிழ்த்து, அளிகள் எல்லாம்
செவ்வழி பாடா நின்ற
பூ நகைத்து இலங்கு கஞ்சப்
பொகுட்டின்மீதே ஒதுங்கு
நான்முகக் கடவுள் பாதம்
நாவினுல் நவிற்றி ஏத்தி,
மானவர்க்கு இயன்ற பேரை
வகுத்திடும் தொகுதி சொல்வாம்). 1

### முனிவர்

துறவர், சார்பில்லோர், நீத்தோர்,
(தூய்)தவர், முனைவர், மெய்யர்,
அறவர், மாதவர், கடிந்தோர்,
அந்தணர், அடிகள், ஐயர்,
உறுவர், தாபதர், (விளங்கும்)
இருடிகள், உயர்ந்தோர், யோகர்,
அறிஞர், பண்ணவர், (சிறந்த)
அருந்தவர், முனிவர் (ஆமே).

(20 பெயர்கள்) 2

### சமண நீத்தோர், சைவத்தோர், மால் சமயத்தோர், புத்தர்

(தா இல்) சௌமியரே, யோகர்,
திகம்பரர், சமண நீத்தோர்;
மாவிரதியரே, பாசுபதர், காளா
முகர், சைவத்தோர்;
(மேவு) மால் சமயத்தோர், (பேர்
மிக்க) பாகவதர் (ஆகும்);
சீவகர், பௌத்தரோடு,
தேரர், சாக்கியரே, புத்தர்.

(3, 3, 1, 4 பெயர்கள்) 3

### சமணரில் சித்தி பெற்றோர், சடை முடித்த படிவர், அகத்தியன்

நீரினில் பூவில் வானில்
நினைத்துழி ஒதுங்குகின்ற
சாரணர் எண்மர் (ஆவார்),
சமணரில் இருத்தி பெற்றோர்;
(பாரிய) சடை முடித்த
படிவர், தாபதரே (என்ப);
(கூரிய) கும்ப யோனி,
குறுமுனி, அகத்தியன் (பேர்).

(1, 1, 2 பெயர்கள்) 4

### மறையவர், பிரமசாரி, துரோணாசாரியன்

ஐயர், வேதியரே, நூலோர்,
அறுதொழிலாளர், ஆய்ந்தோர்,
(மை இல்) பூசுரரே, (செந்)தீ
வளர்ப்பவர், தொழுகுலத்தோர்,
(பொய் இல்) அந்தணரே, ஆதி
வருணர், முப்புரிநூல் மார்பர்,
மெய்யர், விப்பிரரே, வேத
பாரகர், வேள்வியாளர். 5

இரு பிறப்பாளர், பார்ப்பார்,
(ஏற்ற) மேற்குலர், உயர்ந்தோர்,
(வரு) மறையவர் (தம் பேராம்);
வன்னியே, பிரமசாரி;
(அரு) மறைக் கொடியோன், வின்னூ-
லாளன், பாரத்துவாசன்,

(தரு நெறி வழாத்) துரோணு-
சாரியன் (பேர் மூன்று ஆமே).
(19, 1, 3 பெயர்கள்) 6

**அறிஞர், ஆசாரியன், மாணுக்கன்**

சான்றவர், மிக்கோர், நல்லோர்,
தகுதியோர், மேலோர், ஆய்ந்தோர்,
ஆன்றவர், உலகம், மேதாவியர்,
அறிஞர்கள் (பேர்); ஆசான்,
(ஊன்று) தேசிகனே, ஓசன்,
உபாத்தியாயன், பணிக்கன்,
(ஏன்ற) ஆசாரியன் (பேர்);
(ஏற்ற) மாணுக்கன், கற்போன்.
(9, 5, 1 பெயர்கள்) 7

**பண்டிதர், கலைஞர், ஒத்துரைப்போர்**

கலைஞர், மேதையரே, மூத்தோர்,
கற்றவர், அவை, விற்பன்னர்,
(தலைமை ஆம்) கவிஞர், சங்கம்,
சாரதி, சூரி, சாடு,
புலவர், பண்டிதர் (பேர்), (போற்றில்)
அறிஞரும், புதரும் (ஆகும்);
கலைஞரே, கவி வல்லோர் (ஆம்);
கணக்காயர், ஒத்துரைப்போர்.
(14, 1, 1 பெயர்கள்) 8

**மூத்தோன், பெருமையின் சிறந்தோன்**

குரவன், ஐயன், சுவாமி,
கோமானே, அடிகள், அத்தன்,
(பரவிய) உரவோன், ஈசன்,
பதி, இறை, மூத்தோன் (பேர் ஆம்);
குரிசிலோடு, அண்ணல், ஏந்தல்,
(கூறிய) தோன்றல், செம்மல்,
பெருமையில் சிறந்தோன் (என்று
பேசினர் மாசு இல் நூலோர்).
(10, 5 பெயர்கள்) 9

**எப் பொருட்கும் இறை, உயர்ந்தவர்**

நாதனே, கொழுநன், காந்தன்,
(நாட்டிய) பதி, கோன், ஈசன்,
ஆதிபன், அதிபன், செம்மல்,
அரன், பிரான், ஆதி, மன்னன்,
(ஏதில்) எப்பொருட்கும் (தானே)
இறை (பெயர் இவை பன்மூன்றும்);
(ஓது சீர்) உலகம் (என்பது),
உயர்ந்தவர்க்கு (இயம்பும் நாமம்).
(13, 1 பெயர்கள்) 10

**திரண்டோர், பெண்கள் கூட்டம்**

சவை, சமவாயம், சங்கம்,
சமுதாயம், சமூகம், கோட்டி,
அவை, குழாம், குழுவே, கூட்டம்,
(அடர்) திரள், கணங்கள், (ஈராறு
இவை) திரண்டோர் (பேர்); பண்ணை,
(எய்திய) ஓரை, பொய்தல்,
(அவை) பெண்கள் கூட்டம்,
ஆயம், கெடவரல் (அதுவும் ஆமே).
(12, 5 பெயர்கள்) 11

**அரசன்**

புரவலன், பெருமான், ஏந்தல்,
பூபாலன், வேந்தன், மன்னன்,
நரபதி, பொருநன், சக்கிரி,
(நகை முடி) நிருபனோடு,
குரிசில், பார்த்திவனே, கோவே,
கொற்றவன், இறைவன், அண்ணல்,
அரசன் (பேர் இவை ஈரெட்டாம்),
தலைவன், காவலனும் (ஆமே).
(18 பெயர்கள்) 12

**வீட்டுமன், குருகுல வேந்தர்**

(தரு) தெய்வ விரதன், கங்கை
தனயன், சந்தனுமுன் பெற்றோன்,
(கருதிய) பிரமசாரி,
காங்கேயன், வீட்டுமன் (பேர்);
(பரவு) பாரதரே, (மற்றைப்)
பௌரவர், (என்னும் நாமம்)
குருகுல வேந்தர்க்கு (ஆகும்),
கௌரவர் (என்றும் கூறும்).
(5, 3 பெயர்கள்) 13

**தருமன்**

(தரம் மிகு) குவளைத்தாரான்,
யுதிட்டிரன், பொறையன், (சாற்றும்)
முரசு (உயர்) கொடியோன், (நீதி
மொழியும் நல்) அறத்தின் சேயே,
(குருகுலப்) பாண்டு மைந்தன்,
குந்தி (தன்) புதல்வன், மெய்ம்மை
விரதமாக் கொள்வோன், (மேன்மைத்)
தருமன் (பேர் எட்டும் ஆமே).
(8 பெயர்கள்) 14

**துரியோதனன்**

(மருவு) காந்தாரி மைந்தன்,
நந்தியா வர்த்தத் தாமன்,
அரவுயர்த்தவன், வணங்கா
முடியினன், அரசர் மன்னன்,
(உரைகெழு) சுயோதனன், (கண்-
ணென்றும் இல்லாதோன் ஆன)
திருதராட்டிரன்தன் செல்வன்,
(சீர்த்) துரியோதனன் (பேர்) .
(7 பெயர்கள்) 15

**கன்னன், வீமன்**

(கடுங்) கதிர் மதலை, (வீசும்)
கவச குண்டலனே, கச்சை

*(நெடுங்) கொடியினன், கானீனன்,*
*(நீள்) அங்கர் கோமான், கன்னன்;*
*மடங்கலின் கொடியோன், (வெய்ய)*
*மாருதி, வாயு மைந்தன்,*
*இடிம்பை (தன்) கொழுநன், வீமன்*
*கதாயுதன் (என்றும் ஏற்கும்).*

*(5, 5 பெயர்கள்)* **16**

**அருச்சுனன்**

*(குற்றம் இல்) கிருட்டிணன், பற்-*
*குனன், தனஞ்சயன், காண்டீவன்,*
*(வெற்றிசேர்) சவ்வியசாசி,*
*வீபற்சு, விசயன், பார்த்தன்,*
*(சொற்ற) கேசவற்குத் தோழன்,*
*சுவேதவாகனன், கிரீடி,*
*(அற்றம் இல்) அருச்சுனற்கே*
*(அமைந்த பேர் பன்னொன்றாமே).*

*(11 பெயர்கள்)* **17**

**சேரன்**

*வில்லவன், கொங்கன், வஞ்சி*
*வேந்தனே, போந்தின் தாரோன்,*
*கொல்லி வெற்பன், குடக் கோ,*
*குட்டுவன், குடகன், கோதை,*
*(மல்லல் சேர்) உதியன், வான*
*வரம்பனே, மலையமானே,*
*(செல்லல் தீர்) பொருநையாற்றோன்,*
*சேரலன், சேரன் (பேரே).*

*(14 பெயர்கள்)* **18**

**சோழன்**

*நேரியன், சென்னி, பொன்னித்*
*துறைவனே, நேரி வெற்பன்,*
*ஆரின் மாலையனே, கிள்ளி,*
*அபயனே, கோழி வேந்தன்,*
*(சீரிய) வளவன், (மிக்க)*
*செம்பியன், புலி உயர்த்தோன்,*
*சூரியன், புனனாடன், (கோச்)*
*சோழன், மால் (என்றும் சொல்லும்).*

*(14 பெயர்கள்)* **19**

**பாண்டியன்**

*செழியனே, கூடற்கோமான்,*
*தென்னவன், வேம்பின் தாரோன்,*
*வழுதியே, குமரிச் சேர்ப்பன்,*
*வைகையந் துறைவன், மாறன்,*
*(விழைவுறு) பொதிய வெற்பன்,*
*மீனவன், கைதவன், (சொல்*
*பழைய) பஞ்சவனே, (வெய்ய)*
*கௌரியன், பாண்டியன் (பேர்).*

*(13 பெயர்கள்)* **20**

**குறுநில மன்னர், அமைச்சர்**

*குறும்பரே, அரட்டர், வேளிர்,*
*குறுநில மன்னர் (ஆகும்),*
*(செறிந்திடும்) புரோசரும் (பேர்);*
*தேர்ச்சியில் துணைவர், எண்ணர்,*
*(உறைந்திடு) நூலோர், சூழ்வோர்,*
*உழையர், மந்திரரே, (நீதி*
*அறிந்திடு) முதுவர், முன்னோர்,*
*அமாத்தியர், அமைச்சர் (நாமம்).*

*(4, 9 பெயர்கள்)* **21**

**படைத் தலைவன், நிமித்திகன், கணக்கர் வழியினுள்ளார், பரிவாரம்**

*(பெருகிய) பொருநன், சேனா-*
*பதி, படைத் தலைவன் (பேரே);*
*(வரு) நிமித்திகன் (பேர்), சாக்கை,*
*வள்ளுவன் (என்றும் ஆகும்);*
*(கருது) காவிதியர் (என்ப),*
*கணக்கர் (தம்) வழியின் உள்ளார்;*
*(பரவிய) பரிவாரப் (பேர்),*
*பரியாளம் (என்னல் ஆமே).*

*(2, 2, 1, 1 பெயர்கள்)* **22**

**முதல் வள்ளல் எழுவர், இடை வள்ளல் எழுவர்**

*(மிக்க) செம்பியனே, காரி,*
*விராடனே, நிருதி (தானும்),*
*(தக்க) துந்துமாரி (தானும்,)*
*சகரனும், நளனும் (தாம்) முன்;*
*அக்குரன், சந்திமானோடு,*
*அந்திமான், சிசுபாலன்னே,*
*வக்கிரன், கன்னன், சந்தன்*
*இடைவள்ளல் (வகுத்தவாறே).*

*(7, 7 பெயர்கள்)* **23**

**கடை வள்ளல் எழுவர்**

*பாரி, ஆய், எழினி, நள்ளி,*
*(பசுந்தொடை) மலையன், பேகன்,*
*ஓரியே, கடையில் உற்றோர்;*
*(உறுபொருள் தண்டாது ஈந்தும்,*
*வாரியில் இரந்தோர்க்கு இட்டும்,*
*வளர்புகழ் துதிக்க ஈந்தும்,*
*பேர் இயல், வையம் எண்ணப்*
*பெற்றனர் முப்பால் ஆகும்).*

*(7 பெயர்கள்)* **24**

**வைசியர்**

*இளங்கோக்கள், மன்னர் பின்னர்,*
*இப்பர், எட்டியரே, நாய்கர்,*
*(வளம் பெறு) வணிகர், (நல்)*
*ஆன் காவலர், உழவர் (மற்றும்*
*விளங்கிய) பரதர், (மேய)*
*வினைஞர், செட்டியர், (பன்னொன்றும்*

உளம்கெழு) வைசியர் (பேர் ஆம்),
(உறு) சிரேட்டிகளும் (ஆகும்).
(12 பெயர்கள்) 25

### சூத்திரர்

மண்மகள் புதல்வர், (வாய்ந்த)
வளமையர், களமர், (என்றும்
உண்மைசால்) சதுர்த்தர், (மாறு)
உழவர், மேழியர், வேளாளர்,
(திண்மைகொள்) ஏரின் வாழ்நர்,
காராளர், வினைஞர், (செம்மை
நண்ணு) பின்னவர், (பன்னொன்றும்
நவின்ற) சூத்திரர் (தம் பேரே).
(11 பெயர்கள்) 26

### மருத்துவர், குயவன்

(வெம்பிய) பிடகர், ஆயுள்
வேதியர், மருத்துவர்க்கு (ஆம்),
(அம்புவி மற்றும்) மாமாத்திரர்
(என்றும் அவர்க்கே கூறும்);
கும்பகாரன், குலாலன்,
(குறித்த) வேட்கோவன், சக்கிரி,
(நம்பும்) மட்பகைவன், (ஐந்தும்
நாட்டிய) குயவன் (நாமம்).
(3, 5 பெயர்கள்) 27

### சித்திரகாரர், கண்ணுளர்

சிற்பர், ஓவியரே, மோகர்,
சித்திரகாரர் (நாமம்);
சிற்பியர், துவட்டா, ஓவர்,
தபதியர், (சிறப்பின் மிக்க)
அற்புதர், யவனர், கொல்லர்,
அக்கசாலையர், புனைந்தோர்,
(கற்பில்) கம்மியரே, கண்ணுள்
வினைஞர், கண்ணுளர் (நாமம்).
(3, 11 பெயர்கள்) 28

### கொல்லர், தச்சர், தட்டார்

கருமரே, மனுவர், கொல்லர்
(காட்டிய நாமம் ஆகும்);
மரவினையாளன், (மற்றை)
மயனொடு, தபதி, தச்சன்;
(புரியும்) பொன் செய்யும் கொல்லர்,
பொன் வினை மாக்கள், தட்டார்,
(உரைகெழு) சொன்னகாரர்,
அக்க சாலையரும் (ஓதும்).
(2, 3, 4 பெயர்கள்) 29

### சிற்பாசாரியர், பொருளினை உருக்கும் தட்டார், பணித் தட்டார், முத்தம் கோப்பார்

(தருமுறை தெரிந்த) சிற்பா -
சாரியர், மண்ணீட்டாளர்;
பொருளினை உருக்கும் தட்டார்
பொன் செய்யும் புலவர் (என்ப);
(பெருகிய) பணித்தட்டார், (தம்
பேர்) கலந்தருநர் (தாமே);
(வருமுறை) முத்தம் கோப்பார்,
மணிகுயிற்றுநர் (என்று ஆமே).
(1, 1, 1, 1 பெயர்கள்) 30

### கன்னார், அநாரியர், சோனகர், உப்பு வணிகர்

(கலத்தைச் செய்) கஞ்சகாரர்,
கன்னுவர், கன்னார் (ஆகும்);
மிலேச்சரே, அநாரியர்க்கு (ஆம்),
மிலேச்சரும் (விதித்த பேரே);
(துலைப்படும்) யவனர் (என்ப),
சோனகர், உவச்சரும் (பேர்);
(மலைப்பு இலா) உமணர், உப்பு
வாணிகர் (காணுங்காலே).
(2, 2, 2, 1 பெயர்கள்) 31

### வண்ணார், நாவிதர், வேதகாரர், நெய்வார்

(இருந்த) காழியரே, தூசர்,
ஈரங்கோலியரே, வண்ணார்;
(வரும் பெரு) மஞ்சிகன்,
சீமங்கிலி, (மாசுதீர்த்துத்
திருந்தும்) ஏனாதி, (மூன்றும்
சிறந்த) நாவிதன் (பேர் ஆகும்);
பொருந்தரே, வேதகாரர்;
(போற்றும்) காருகர், நெய்வார் (பேர்).
(3, 3, 1, 1 பெயர்கள்) 32

### துன்னர், தோல் துன்னர், கூவனூலோர், சங்கறுப்போர், ஊன் விற்போர், தோல் வினை மாக்கள்

பொல்லரே, துன்னர் (என்ப);
(புகன்ற) தோல் துன்னர், செம்மார்;
உல்லியர், கூவனூலோர் ;
(ஒளி) வளை போழ்நர் (தாமே),
(மெல்லிய) சங்கறுப்போர் ;
சூனர், ஊன் விற்போர் (என்ப);
(சொல்லிய) பறம்பர் (தாமே),
தோல் வினை மாக்கள் (நாமம்).
(1, 1, 1, 1, 1, 1 பெயர்கள்) 33

### சண்டாளர், பாணர்

கொலைஞரே, களைஞர், வங்கர்,
குணுங்கர், மாதங்கரோடு,
புலைஞரே, இழிஞர், (ஏழ்பேர்
பொருந்து) சண்டாளர் (நாமம்);
(உலவு) சென்னியரே, பண்டர்,
ஓவர், வந்தித்து நிற்போர்,
(பலர் புகழ்) மதங்கர், சூதர்,
பண்ணவர், பாணர் (ஆமே).
(7, 7 பெயர்கள்) 34

**செக்கான், கள் விற்போர், மீகாமன்**

சக்கிரி, நந்தி, செக்கான்
(தன் பெயர் ஆகும் என்ப);
(தொக்க) கள் விற்போர் (நாமம்),
சௌண்டிகர், துவசரோடு,
(தக்கதோர்) பிழியர், (மற்றும்)
படுவரும் (சாற்றும் அன்றே);
(மிக்க) மீகாமன் (நாமம்),
மீகான், மாலுமி, நீகான் (ஆகும்).
(2, 4, 3 பெயர்கள்) 35

**பண்ணுவார், யானைப் பாகர், மெய்காப்பாளர், உறைகாரர்**

மாவலர், வதுவரோடு,
வாதுவர், பண்ணுவார் (பேர்);
(சோர்வு இலாப்) பாகரோடு,
ஆதோரணர், யானைப்பாகர்;
காவலர், மெய்காப்பாளர்,
கஞ்சுகி (என்றும் காட்டும்);
(மேவு) காரோடர் (என்ப),
உறைகாரர் (விதித்த பேரே).
(3, 2, 2, 1 பெயர்கள்) 36

**தேர்ப்பாகன், ஒற்றர், மடையர்**

(தூய) தேர்ப்பாகன், சூதன்,
வலவன், சாரதியும் (சொல்லும்);
வேயர், சாரணரே, ஒற்றர்
(விதித்த பேர்); மடையர் (நாமம்,
ஏய) வாலுவரே, (மிக்க)
கூவியர், (என்றும் நூலை
ஆயும்) பானசிகர் (என்றும்),
பாசகர் (என்றும் ஆமே).
(3, 2, 4 பெயர்கள்) 37

**கூத்தர்; தமிழ்க் கூத்தர், கழாயர்**

நாடகர், கண்ணுளாளர்,
நடர், வயிரியர், நிருத்தர்,
கோடியர், பொருநர், கூத்தர்,
அவிநயர் (என்றும் கூறும்);
(நீடிய) வாயிலோரே,
(நெடுந்) தமிழ்க் கூத்தர் (என்பர்);
(ஆடும்) வேழம்பர் (என்ப),
கழாயருக்கு (அடைத்த நாமம்).
(8, 1, 1 பெயர்கள்) 38

**நரம்புக் கருவியாளர், தோற் கருவியாளர், வெறியாட்டாளன், தேவராட்டி, அயலவர்**

குயிலுவர், நரம்பின் ஆய
கருவியைக் கொளுத்தும் மாக்கள்;
(இயலும்) தோற்கருவியாளர்,
இயவர் (ஆம்); வெறியாட்டாளன்,
(சயமுறு) தேவராளன்;
சாலினி, தேவராட்டி;
அயலவர், நொதுமலாளர்,
வம்பலர் (என்றும் ஆமே).
(1, 1, 1, 1, 2 பெயர்கள்) 39

**புதியவர், வழிச் செல்வோன், ஏவுவான், மூதுணர்ந்தோர், உரியோர், குறிக் கொள்வோர்**

புதியவர், விருந்தோர் (என்ப),
அதிதி, வம்பலரும் (போற்றும்);
பதிகனே, வழிச்செல்வோன் (ஆம்);
வியவனே, ஏவுவான் (பேர்);
முதுவர், மூதுணர்ந்தோர் (நாமம்);
கிழவரே, உரியோர் (பேர் ஆம்);
(அதிகம் ஆம்) குறிக்கொள்வோர்,
பாராயணர் (என்பதாமே).
(3, 1, 1, 1, 1, 1 பெயர்கள்) 40

**தூதர், அடிமை**

வித்தகர், வினை உரைப்போர்,
(விதியுளி) வழியுரைப்போர்,
(உத்தமம் ஆன) பண்புற்-
றுரைப்பவர், தூதர் (ஆகும்);
தொத்தொடு, கிணகர், தாசர்,
தொழும்பொடு, தொறு, விருத்தி,
(அத்தகு) தொண்டு, சேடர்,
ஆள், (இவை) அடிமை (ஆமே).
(4, 9 பெயர்கள்) 41

**தோழன், தோழன் முன்னிலைப் பெயர், தோழி, தோழி முன்னிலைப் பெயர்**

சிலதனே, நண்பன், பாங்கன்,
சேடனே, துணைவன், தோழன்,
எலுவனும் (ஆம்); இவன்
முன்னிலைப் பெயர் ஏடா (என்ப);
சிலதியே, சகியே, பாங்கி,
சேடியே, இகுளை, தோழி;
(நலமுறும்) முன்னிலைப் பேர்,
(நாடின் மற்று) ஏடி, எல்லா.
(6, 1, 5, 2 பெயர்கள்) 42

**குருடன், கூன், குறள், செவிடு, முடம், ஊமை, அலி**

அந்தகன், சிதடன், (என்ப)
குருடன் (ஆம்); கோணல், கூன் (பேர்);
சிந்து, வாமனமே, குஞ்சம்,
குறள்; வதிர், செவிடு (என்று ஆகும்);
(முந்திய) முடமே, பங்கு,
குணி; ஊமை, மூகை, மூங்கை;
(தந்த) பெண்டகனே, பேடி,
நபுஞ்சகன், அலியே, சண்டன்.
(2, 1, 3, 1, 2, 2, 4 பெயர்கள்) 43

**கொலையாளி, வேதனை செய்வோன், அச்சம் உள்ளோன், வேகி, வஞ்சகன்**

காதகன், சாருகன், *(தான்*
    *கடுங்)* கொலையாளி *(நாமம்);*
வேதனை செய்வோன் *(பேரே),*
    அருந்துதன் *(விளம்பல் ஆகும்);*
பீதனே, சகிதனோடு,
    பீருவும், அச்சம் உள்ளோன்;
*(ஓதிய)* சவனன், வேகி;
    *(உற்ற)* வஞ்சகன், நிசாதன்.

*(2, 1,3, 1, 1 பெயர்கள்)* *44*

**தூர்த்தர், நாகரிகர், கிராமம் உற்றோன்**

படிறர், பல்லவர், பரத்தர்,
    *(பகர்)* இடங்கழியரோடு,
விடரும், காமுகரும், தூர்த்தர் ;
    *(மிக்க)* நாகரிகர், *(என்ப*
*கடிநகர்ப் பதி வாழ்கின்ற)* சதுரர்,
    காமுகர் *(என்றும் பேர்);*
*(அடைவுள)* கிராமம் உற்றோன்,
    கிராமியன் *(ஆகும் அன்றே).*

*(6, 2, 1 பெயர்கள்)* *45*

**வல்லோன், மாட்டார், குலம் உளோன், கரியவன், நோய் உற்று ஒழிந்தோன், காலாள், ஆயத்தமானோன்**

வலவை, வல்லுநனே, வல்லோன்;
    மாட்டார் *(பேர்),* வல்லார் *(என்ப);*
குலம் உளோன், குலீனன் *(ஆகும்);*
    கரியவன், *(குறித்த)* கள்வன்;
*(உலவு)* நோய் உற்று ஒழிந்தோன்,
    உல்லாகன்; பதாதி, காலாள்;
*(அலைவு இல்)* சந்நத்தன் *(என்பது),*
    ஆயத்தமானோன் *(பேரே).*

*(2, 1, 1, 1, 1, 1, 1 பெயர்கள்)* *46*

**கூர்மை இல்லோன், நிர்வாணி, மிகு புகழாளன், அருளோன், கடிகை மாக்கள்**

மந்தனே, கூர்மை இல்லோன்;
    நக்கன், நிர்வாணி *(நாமம்);*
*(வெந்திறல்)* இயவுள் *(என்ப),*
    மிகு புகழாளன் *(பேரே);*
*(உந்திய)* அருளோனே, கா-
    ருண்ணியன் *(என்பர்);* எட்டர்,
வந்திகள், கவிகள், கற்றோர்,
    வண்டரே, கடிகை மாக்கள்.

*(1, 1, 1, 1, 5 பெயர்கள்)* *47*

**கொடையுளோன், வரைவறக் கொடுத்தளிப்போன், ஏற்போன்**

புரவலன், ஈகையாளன்,
    *(போற்றும்)* வேளாளன், தியாகி,
*(உரைகெழு)* வேள்வியாளன்,
    உபகாரி, கொடையுளோன் *(ஆம்);*
வரைவறக் கொடுத்தளிப்போன்,
    வள்ளியோன் *(என்று கூறும்);*
இரவலன், பரிசிலாளன்,
    யாசகன், தீனன், ஏற்போன்.

*(6, 1, 4 பெயர்கள்)* *48*

**திருடர், தரித்திரன்.**

கரவடர், சோரர், தேனர்,
    பட்டிகர், புரையோர், கள்வர்,
திருடர் *(ஆம்);* தரித்திரன் *(பேர்),*
    அகிஞ்சனன், தீனன், பேதை,
*(மருவு)* நல்கூர்ந்தோன், இல்லோன்,
    வறியன், ஆதுலனே, ஏழை,
*(விரவிய)* உறுகணாளன்,
    இலம்பாட்டோன், மிடியன் *(ஆமே).*

*(6, 11 பெயர்கள்)* *49*

**திண்ணியன், தானைத் தலைவர்**

வயவனே, திறலோன், *(மற்றை)*
    வண்டனே, மிண்டன், மள்ளன்,
வியவனே, விறலோன், மீளி,
    வீரனே, திண்ணியன் *(பேர்);*
*(நயம் இல்)* கூளியர், ஏஞர்,
    *(நாட்டும்)* வாள் உழவர், மள்ளர்,
*(சயம் மிகு)* மறவர், தானைத்
    தலைவர் *(ஆம்),* படரும் *(ஆமே).*

*(9, 6 பெயர்கள்)* *50*

**பகைவர்**

அரிகளே, செறுநர், சேரார்,
    அமரார், உள்ளாரே, நள்ளார்
மருவலர், தெவ்வர், மாணர்,
    மாற்றலர், மன்னர், ஒன்னர்,
தரியலர், ஒட்டார், வட்கார்,
    சார்பிலார், பற்றார், செற்றார்,
பரரொடு, கேளார், ஒல்லார்,
    பகைவர் *(பேர் எழு மூன்றுமே).*

*(21 பெயர்கள்)* *51*

**மேவினர்**

ஒல்லுநர், தொடர்ந்தார், சேர்ந்தார்,
    ஒட்டுநர், பெட்டார், வேட்டார்,
புல்லுநர், பசைந்தார், மித்திரர்,
    புரிந்தார், ஆர்வலர், விழைந்தார்,
நல்லவர், காதலித்தார்,
    நள்ளுநர், நயந்தார், கூட்டம்,
*(மெல்ல)* ஒன்றுநர், *(மூவாறும்)*
    மேவினர் *(நாமம் ஆமே).*

*(18 பெயர்கள்)* *52*

**சுற்றம்**

உற்றவர், இகுளை, நட்டோர்,
உறவு, ஒக்கல், கிளையே, சார்ந்தோர்,
பற்றினர், சிறந்தோர், நட்பு,
பந்தமே, பரிசனம், கேள்,
(குற்றம் இல்) நண்பு, கூளி,
குடும்பமே, கடும்பு, நள்ளி,
சுற்றம் (மூவாறு பேரும்
சூழ்ந்த), பாசனமும் (சொல்லும்).
(19 பெயர்கள்) 53

**கீழோர்**

பொறியிலார், கயவர், நீசர்,
புள்ளுவர், புல்லர், தீயோர்,
சிறிய சிந்தையர், கனிட்டர்,
தீக்குணர், தீம்பர், தேரார்,
முறையிலார், முசுண்டர், மூர்க்கர்,
முசுடர், பல்லவரே, கையர்,
(மறைவு இலாக்) கலர், (மூவாறும்)
மன்னு) பூரியரும், கீழோர் .
(19 பெயர்கள்) 54

**அறிவிலான், தொழில் செய்வோர், வாயில் காப்போர்**

முழுமகன், சிதடன், பேதை,
மூடனே, மண்ணை, அஞ்ஞை,
இழுதையே, மடனே, ஆதன்,
ஏழையே, அறிவிலான் (பேர்);
தொழுவர், கம்மியரே, (மற்றைத்)
தொழில் செய்வோர் (நாமம் ஆகும்);
(வழு இலா) வாயிலாளர்,
வாயில் காப்போர் (தம் பேரே).
(10, 2, 1 பெயர்கள்) 55

**பெண்**

அரிவை, அங்கனை, மடந்தை,
ஆடவள், ஆட்டி, மாயோள்,
சுரி குழல், மகடூஉ, காந்தை,
சுந்தரி, வனிதை, மாது,
தெரிவை, மானினியே, நல்லாள்,
சிறுமியே, தையல், நாரி,
பிரியை, காரிகை, அணங்கு,
பிணா, பெண்டு, பேதை, பெண் (பேர்).
(24 பெயர்கள்) 56

**புருடன், ஆண் பெண்ணைச் சிறப்பிக்கும் நாமம்**

ஆடவன், மைந்தன், காளை,
ஆடூஉவே, மகன், புமானே,
(நீடிய) குமரன், (ஏழும்
நிருமித்த) புருடன் (நாமம்);
(நாடிய) நம்பியோடு, நங்கை,
(என்றிரண்டு) ஆண் பெண்ணைத்
(தேடிய கவிகள் எல்லாம்)
சிறப்பிக்கும் நாமம் (ஆமே).
(7, 1, 1 பெயர்கள்) 57

**பெண்பாற்குரிய பருவம், ஆண்டு**

பேதையே, பெதும்பை, மங்கை,
(பெருகிய) மடந்தையோடு,
(தீது இலா) அரிவை, (மற்றைத்)
தெரிவை, பேரிளம் பெண் (என்ப
ஏதம் இல்) பருவம்; ஆண்டு,
ஏழ், (எய்து) பன்னொன்று, பன்மூன்று,
(ஓது) பத்தொன்பான், ஐயைந்து,
(உடன்) முப்பத்தொன்று, எண்ணைந்தே.
(7 பெயர்கள்) 58

**கைம்மை பெற்றோன், வேற்றோர்க்குப் பெற்ற பிள்ளை, கன்னி பெற்ற பிள்ளை**

(முன்னிய) கைம்மை பெற்றோன்,
(மொழிந்த) கோளகனே (ஆகும்);
(பின்னை) வேற்றோர்க்குப் பெற்ற
பிள்ளை, குண்டகனே (என்ப);
(பன்னி வாழ்க்கைப்படாமுன்
படர்ந்தொரு களவினாலே)
கன்னி(யே) பெற்ற பிள்ளை
கானீனன் (என்றே ஓதும்).
(1, 1, 1 பெயர்கள்) 59

**நாற்குலத்துள் உயர்குலத்து ஆணும் இழிகுலப் பெண்ணும் கூடிப் பெற்ற பிள்ளை, உயர்குலப் பெண்ணும் இழிகுலத்து ஆணும் கூடிப் பெற்ற பிள்ளை**

(உயர்ந்த) நாற்குலத்தில் ஆண் பெண்
உயர்பு இழிவு இரண்டும் கூடி
இயங்கிய பிள்ளைப் (பேரே)
அநுலோமன் (என்று கூறும்);
(நயந்த அப்) பெண்ணும் ஆணும்
(நண்ணிய) உயர்வு தாழ்வில்
வியந்திடும் பிள்ளைப் (பேரே,
விறல்) பிரதிலோமன் (ஆமே).
(1, 1 பெயர்கள்) 60

**அநுலோமத்தாணும் பிரதிலோமப் பெண்ணும் கூடிப் பெற்ற பிள்ளை, அநுலோமப் பெண்ணும் பிரதிலோமத்தாணும் கூடிப் பெற்ற பிள்ளை**

(பெருத்த அவ்) அநுலோமன்னே
பிரதிலோமன் (என்ற பேரில்
உரைத்த) ஆண் பெண்ணில் வந்தே
உற்றவன் அந்தராளன்;
நிரைத்தவர் மாறிக் கூடிப்
பிறந்தவன் (நீண்ட பேரே
விரித்தது வினவிக் கேட்கில்)
விராத்தியன் (என்னும் நூலே).
(1, 1 பெயர்கள்) 61

**தலைவி, நோற்பாள்**

(முந்திய) குரத்தி, அத்தை,
முதல்வி, கோமாட்டி, ஆசாள்,
(தந்திடும்) இறைவி, ஐயை,
சாமியே, தலைவி (நாமம்);
(நந்திய பிண்டி வாமன்
நன்னெறி வழாது) நோற்பாள்,
தந்தியே, அவ்வை, அம்மை,
கன்னியே, கௌந்தி (என்ப).
(8, 5 பெயர்கள்) 62

**அமங்கலை, மலடி, கோலம் செய்வாள்**

கைம்மையே, கைனி, (பூண்ட)
கலன் கழி மடந்தை, (ஏங்கி
விம்மிய) விதவை, (நான்கே),
அமங்கலை (விளங்கு நாமம்);
மைம்மையே, வந்தி, (என்ப)
மலடிக்கு (வகுத்த பேராம்);
(செம்மையாம்) கோலம் செய்வாள்,
(திகழ்) வண்ண மகளே (என்ப).
(4, 2, 1 பெயர்கள்) 63

**வேசை, மூத்தாள், குமரி, நாடகக் கணிகை**

பரத்தையே, கணிகை, சூளை,
பயனிலாள், வரைவின் மாது,
பொருட்பெண்டு, பெறுவ கொள்வாள்,
விலைமகள், (போற்றும்) வேசை;
விருத்தையே, மூத்தாள் (என்ப);
(மின்னிடைக்) குமரி, கன்னி;
நிருத்தம் செய் மாது, கூத்தி,
நாடகக் கணிகை (நீள்பேர்).
(8, 1, 1, 2 பெயர்கள்) 64

**அசதி, பதினாறாண்டிற் பெண்,
பாடுவிச்சி, தம்பதி**

குட்டினி, தொழுத்தை, கூளி,
குறளியே, படுவி, குண்டம்,
துட்டையே, அசதி (ஆகும்);
(சூழ்ந்திடும்) யுவதியே, ஈ-
ரெட்டாண்டிற் பெண்; மதங்கி,
(எய்திய) விறலி (என்ப);
(திட்டம் ஆம்) பாடுவிச்சி;
தம்பதி இரட்டை, ஆண் பெண்.
(7, 1, 2, 2 பெயர்கள்) 65

**குறிஞ்சி மாக்கள், குறிஞ்சிப் பெண்,
குறிஞ்சி நிலத்து இறைவன்**

குறவர், கானவரே, மள்ளர்,
குன்றவர், புனவரோடும்,
இறவுளர், குறிஞ்சி (தன்னில்
இன்புறும்) மாக்கள் (பேரே);
(குறி அறி) குறத்தி, (மற்றைக்)
கொடிச்சி, பெண்; இறைவன் (தானே,
திறன் மிகு) மலையன், வெற்பன்,
சிலம்பன், கானக நாடன் (பேர்).
(6, 2, 4 பெயர்கள்) 66

**பாலையாளர், பாலைப் பெண்,
பாலை நிலத் தலைவன்**

(கோளுறும்) மறவரோடும்,
எயினரே, (குறித்த) பாலை
யாளர்; புள்ளுவர், இறுக்கர்,
(அனைத்தும் ஆம்); (அவரோடு ஆடும்
வாள் விழி) எயிற்றி, வன்கட்
பிணாவொடு, மறத்தி, பெண் (பேர்);
மீளியே, காளை, (என்ப)
விடலையும், தலைவன் (நாமம்).
(4, 3, 3 பெயர்கள்) 67

**புளிஞர்**

குறவர், மாகுலவர், (வெய்ய)
குன்றவர், கிராதர், (மற்றை)
மறவர், கானவரே, (தீய)
வனசரர், சவரர், (சொல்லும்
முறை அழி) கொலைஞர், பாவ
மூர்த்திகள், முருடர், (சற்றும்)
பொறையிலார், எயினர், வேடர்,
புளிஞர் (ஈரேழ் பொதுப்பேர்).
(14 பெயர்கள்) 68

**முல்லையின் மாக்கள்**

முல்லையர், பொதுவர், அண்டர்,
(முந்து) கோவிந்தரே, ஆன்-
வல்லவர், குடவர், பாலர்,
(மதித்த) கோவலர், கோபாலர்,
(சொல்லிய) அமுதர், ஆயர்,
தொறுவரே, இடையர், (என்ப)
முல்லையின் மாக்கள் (பேர் தாம்
முந் நான்கும் ஒன்றும் ஆமே).
(13 பெயர்கள்) 69

**முல்லை நிலத்தின் பெண், முல்லையின் தலைவன்**

தொறுவியே, பொதுவி, ஆய்ச்சி,
(சூழ்ந்திடும்) குடத்தி, (மற்றை
நிறை புணர்) இடைச்சி, முல்லை
நிலத்தின் பெண் (5) (நாமம் ஐந்து ஆம்);
(குறைவு அறு) கான நாடன்,
குறும்பொறை நாடனோடு,
(முறை செயும்) அண்ணல், தோன்றல்,
முல்லையின் தலைவன் (நாமம்).
(5, 4 பெயர்கள்) 70

**மருத மாக்கள், மருத நிலப் பெண்,
மருத நிலத் தலைவன்**

களமரே, தொழுவர், மள்ளர்,
கம்பளர், உழவரோடு,

*விளைஞரே, கடைஞர், (ஏழ் பேர்)*
*(விளைவு உறு) மருத மாக்கள்;*
*(அளவு அறு) கடைச்சி, (மற்றை)*
*ஆற்றுக் காலாட்டி, பெண் (பேர்);*
*(உளம் மகிழ்) மகிழ்நன், ஊரன்,*
*கிழவனும், தலைவன் (ஆமே).*
*(7, 2, 3 பெயர்கள்)* 71

**நெய்தல் மாக்கள், நெய்தல் நிலப் பெண்**

*பரதவர், நுளையரோடு,*
*பஃறியர், திமிலர், சாலர்,*
*(கருதிய) கடலர், (கோலக்)*
*கழியரே, நெய்தல் மாக்கள்;*
*(விரவிய) பரத்தி, (மேவு)*
*நுளைச்சியே, அளத்தி, (நீண்டு*
*பெருகிய) கடற்பிணாவே,*
*நெய்தலில் பெண்ணின் (நாமம்).*
*(7, 4 பெயர்கள்)* 72

**நெய்தல் தலைவன், உப்பமைப்போர்**

*கொண்கனே, துறைவனோடு,*
*(குறித்த) மெல்லம் புலம்பன்,*
*(தண்) கடல் சேர்ப்பன், நெய்தல்*
*தலைவனைச் (சாற்றும் நாமம்);*
*(பண்படும்) அளவர் (தாமே),*
*(பகர்ந்திடும் அந்நிலத்தில்*
*உண்படும்) உப்பமைப்போர்,*
*உமணரும் (விதித்த பேரே).*
*(4, 2 பெயர்கள்)* 73

*(அணியினின் பண்பின் உற்ற*
*உவமையின் மகடூஉ ஆடூஉ*
*தணிவு இல் முன்னிலைப்பேர், வேறு*
*சாற்றிய தோற்றமாக*
*உணரும் ஐந்திணைப் பாற்பட்ட*
*கருப்பொருள், உரைத்தாம்; இப்பால்,*
*கணிதம் இல் முறைப்பேர் காட்டி,*
*காயத்தின் பேரும் சொல்வாம்).* 74

**பாட்டன், ஈன்றவன்**

*தாதைதன் தாதையே, மூ -*
*தாதையே, பாட்டன் (நாமம்),*
*பேதம் ஒன்று இல்லா மற்றும்)*
*பிதாமகன் (என்றும் ஆகும்);*
*தாதையே, அப்பன், ஐயன்,*
*தந்தையே, அம்மான், அத்தன்,*
*(ஏதம் இல்) பிதா, (என்று ஏழும்)*
*ஈன்றவன் (நாமம் ஆமே).*
*(3, 7 பெயர்கள்)* 75

**ஈன்றவள், வளர்த்த தாதி, முன் பிறந்தாள், தங்கை**

*அவ்வை, அம்மனை, பயந்தாள்,*
*அம்மையே, யாயே, அன்னை,*
*(எவ்வம் இல்) ஆயி, மோய், தாய்,*
*ஈன்றவள் (நாமம் ஒன்பான்);*
*(செவ்விதின்) வளர்த்த தாதி,*
*செவிலி, கோடாய், கைத்தாய் (ஆம்);*
*தவ்வை, முன்பிறந்தாள், சேட்டை;*
*தங்கையே, பின்னை (தானே).*
*(9, 3, 2, 1 பெயர்கள்)* 76

**தம் குடியிற் சுற்றம், மாமன், ஓர் குடியில் கொண்டோன், மூத்தோன், பின்னோன்**

*ஞாதியர், தாயத்தாரே,*
*(நாட்டும்) தம் குடியிற் சுற்றம்;*
*மாதுலன், அம்மான், மாமன்;*
*சகலன், ஓர்குடியில் கொண்டோன்;*
*(மூதுணர்) சேட்டன், தம்முன்,*
*முன்னவன், அண்ணன், மூத்தோன்;*
*(பேதம் இல்) இளவல், பின்னே,*
*அநுசனே, கனிட்டன், பின்னோன்.*
*(2, 2, 1, 4, 4 பெயர்கள்)* 77

**காதலன்**

*கணவனே, கொழுநன், வேட்டோன்,*
*கண்டன், வல்லவனே, பத்தா,*
*துணைவனே, தலைவன், கொண்கன்,*
*(சூழ்ந்திடும்) தவனே, காந்தன்,*
*மணமகன், உரியோன், அன்பன்,*
*மணவாளன், பதியே, கேள்வன்,*
*(அணையும்) காதலன் (பேர் பன்னேழ்,*
*அன்றி,) நாயகனும் (ஆமே).*
*(18 பெயர்கள்)* 78

**தேவி**

*இல்லவள், உரிமை, பன்னி,*
*குடும்பினி, இல்லே, இல்லாள்,*
*வல்லவை, களமே, தாரம்,*
*மனையாட்டி, மனை, விருந்தம்,*
*(சொல்லிய) பாரி, வாழ்க்கைத்*
*துணை, களத்திரமே, காந்தை,*
*(நல்ல) காதலி, (விரும்பு)*
*நாயகி, தேவி (நாமம்).*
*(18 பெயர்கள்)* 79

**மகன்**

*சந்ததி, மதலை, சூனு,*
*தனயன், காதலனே, மெய்யன்,*
*நந்தனன், சிறுவன், தோன்றல்,*
*குட்டனே, (நாட்டும்) செம்மல்,*
*(முந்திய) மருமான், பிள்ளை,*
*முளை, சுதன், புதல்வன், புத்திரன்,*
*மைந்தன், கால், பொருள், சேய், எச்சம்,*
*வழி, பிறங்கடை, மகன் (பேர்).*
*(24 பெயர்கள்)* 80

**புதல்வி, மகன் மகள் என்னும் இருபாற்கும் பொது, பிள்ளைப் பன்மை**

சிறுவி, புத்திரியினோடு,
(சிறந்திடும்,) தனயை, ஐயை,
(மறுஇல்) பந்தனை, (மதிப்பா)
மகள், சுதை, புதல்வி (ஏழ் பேர்);
(இறை ஆகும்) எச்சம் (தான் இவ்)
இருபாற்கும் ஏற்கும் (என்ப);
குறுமக்கள், மகார், சிறாரைக்
(கூறுப) இவர்தம் பன்மை.
*(7, 1, 3 பெயர்கள்)* 81

**படை**

தானையே, பதாதி, (வெய்ய)
தந்திரம், தளமே, தண்டம்,
வானியே, ககனம், யூகம்,
வாகினி, அனீகம், பாடி,
சேனையே, கவனம், (கூடிச்
செறி) பலம், பரிகலம், (தான்
ஊனம் இல்) படை (மூவைந்து ஆம்),
(உறு) பதாகினியும் (அப் பேர்).
*(16 பெயர்கள்)* 82

**படை வகுப்பு, படை உறுப்பு, பின்னணி, கொடிப் படை, படையறற்பேர்**

அணி, உண்டை, ஒட்டே, யூகம்,
(ஆய்வை) படை வகுப்பு (ஆம்);
அணி, நெற்றி, கையே, தூசி,
(அடு)படை உறுப்பின் பேர் (ஆம்,
அணி பின்னின், கூழை (ஆம்); தார்,
கொடிப்படை (ஆகும் என்ப);
(பணியக்) கீழறுதலோடே,
அறை போதல், படையறற் (பேர்).
*(4, 4, 1, 1, 2 பெயர்கள்)* 83

**மனிதர், மக்கட் பரப்பு**

மக்களே, நரரே, மாக்கள்,
மானவர், மாந்தர், மண்ணோர்,
(தக்க) ஆண்டையரே, மைந்தர்,
(சாற்றிய) மனுடர், (இன்பம்
தொக்க) மானுடர் (ஈரைந்தும்
சொல்லிய) மனிதர் (பேர் ஆம்);
மக்கள் (தம்) பரப்பிற்குப் (பேர்),
மன்பதை, பைஞ்ஞீல் (என்ப).
*(10, 2 பெயர்கள்)* 84

**உடம்பு**

உடல், உறுப்பு, அங்கம், யாக்கை,
உயிர்நிலை, தேகம், காயம்,
சடலமே, மூர்த்தம், மெய்யே,
தாவரம், தனு, ஆதாரம்,
கடமொடு, புதை, புணர்ப்பு,
காத்திரம், பூட்சி, ஆகம்,
(புடைகொள்) பூதிகம், சரீரம்,
புற்கலம், உடம்பின் (பேரே).
*(22 பெயர்கள்)* 85

**வடிவு, பிணம், உடற்குறை**

வடிவமோடு, உருவம், மேனி,
சட்டகம், வடிவின் (பேர் ஆம்);
(கடியும் நீள்) பிரேதம் (வேறு
காட்டிய) சவம், பிணப் (பேர்,
அடையும் மற்று அப்பேர் தானே)
களேவரம், அழனம் (என்று ஆம்);
உடலினில் குறை, கவந்தம்,
அட்டை, யூபமும் (உரைக்கும்).
*(4, 4, 3 பெயர்கள்)* 86

**கால், கரடு, கணைக்கால், முழந்தாள்**

சரணமே, பதமே, (மற்றைத்)
தாளொடு, அங்கிரியே, பாதம்,
(கருதிய) சலனம், (மற்றைக்)
கழலுடன், அடியும், கால் (ஆம்);
பரடு (என்ப), கரட்டின் (நாமம்);
(பற்றிய) கணைக்கால், சங்கம்;
(தரு) முழந்தாள், முழந்து,
சானுவும் (அதன் பேர் தானே).
*(8, 1, 1, 2 பெயர்கள்)* 87

**தொடை, அல்குல், இடை, மருங்கின் பக்கம்**

(நெடிய) ஊரு, குறங்கு,
(நீள்) வாமம், கவான், தொடைப் (பேர்);
கடிதடம், நிதம்பம், (என்ப
கவின் திகழ்) அல்குலின் (பேர்);
நடு, நுசுப்பொடு, மருங்கு,
(நாட்டு) மத்திமமே, உக்கம்,
இடையின் (பேர்); மருங்கின் பக்கம்,
ஒக்கலை (என்ப தாமே).
*(4, 2, 5, 1 பெயர்கள்)* 88

**வயிறு, தேமல், கொப்பூழ், ஆண்குறி, பெண்குறி**

உதரம், மோடு, அகடு, குக்கி
(யுடன்), பண்டி, வயிற்றின் (பேர் ஆம்);
திதலையே, பொறியே, துத்தி,
தேமல் (ஆம்), சுணங்கும் (ஆமே);
இதலையே, உந்தி, நாபி,
இலஞ்சியே, போகில், கொப்பூழ்;
(புதிய) ஆண்குறியே, கோசம்;
(பூப்)பகம், பெண்ணின் சின்னம்.
*(5, 4, 5, 1, 1 பெயர்கள்)* 89

**மார்பு, முலை, முலைக்கண்**

அகலமே, மருமம், நெஞ்சே,
ஆகமே, உரமே, மார்பு (ஆம்);

நகிலமே, கொம்மை, கொங்கை,
(நறுங்) குயம், தனம், குருக் கண்,
(பகர்) பயோதரம், சுவர்க்கம்,
பறம்பு, (இவை) முலையின் (பல் பேர்);
(திகழ்) முலைக் கண்ணின் (நாமம்),
சிலீமுகம், சூசுகங்கள்.
(5, 9, 2 பெயர்கள்) 90

**கைத்தலம், முழங்கை, மணிக்கட்டு, உள்ளங்கை, விரல், நகம்**

கரம், அத்தம், பாணி, தோளே,
கைத்தலம் (நாற்பேர் ஆம்); கூர்ப்-
பரம், முழங்கை; கிலுத்தம்,
(பணித்திடும்) மணிக்கட்டு (என்ப);
(உரவிய) அகங்கை, அங்கை,
குடங்கையே, உள்ளங்கைப் (பேர்);
விரல்கள், அங்குலி (என்று ஆகும்;
மிகும்) உகிர், நகமது (ஆமே).
(4, 1, 1, 3, 1, 1 பெயர்கள்) 91

**தோள், கழுத்து, முதுகு, பிடர், தோள்மேல்**

(விறல் மிகு) புயமும், மொய்ம்பும்,
(மேவிய) வாகுவும், தோள்;
(கறை இல்) கந்தரம், கிரீவம்,
களம், கண்டம், கழுத்தின் (நாமம்);
புறம், வெரிந், அபரம், வென்னே,
(போற்றிய) முதுகு (நாற்பேர்);
சிறுபுறம், கயில், எருத்தம்,
சுவல், பிடர்; நிகலம், தோள்மேல்.
(3, 4, 4, 4, 1 பெயர்கள்) 92

**முகம், உதடு, மேல் உதடு, கீழ் உதடு, பல்**

வதனம், ஆனனமே, துண்டம்,
வத்திரம், முகம் (என்று ஆகும்);
இதழ், உதடு, அதரமே, பா-
லிகை, முத்தம் (என்றும் பேர்); மேல்
உதடதே, ஓட்டம் (ஆம்); கீழ்
உதட்டின் (பேர்), அதரம் (என்று ஆம்);
(விதம் உறும்) எயிறு, தந்தம்
(மேவிய) தசனம், பல்லே.
(4, 4, 1, 1, 3 பெயர்கள்) 93

**பல்லும் நகையும், மோவாய், நாக்கு, காது**

(பன்னிய) முறுவல், மூரல்
பல்லும் (ஆம்), நகையும் (ஆகும்);
(முன்னிய) தாடி, கட்டம்,
சுவுகம், மோவாயின் (பேர் ஆம்);
(மன்னும்) நா, சிகுவை, தாரை,
(மற்றைத்) தாலுவும், நாக்கு (ஆகும்);
கன்னமே, அள்ளு, கேள்வி,
காதின் (பேர்), செவியும் (ஆமே).
(2, 3, 4, 4 பெயர்கள்) 94

**மிடறு, உள்நாக்கு, மேல்வாய்ப்புறம், கதுப்பு, மூக்கு**

அணல், மிடறு (ஆகும்; மற்றை)
அண்ணமே, உண்ணாக்கின் (பேர்);
அணரியே, அணலே, அண்ணம்,
(ஆன) மேல்வாய்ப்புறப் (பேர்);
(குணம் உறு) கவுள், கபோலம்,
கொடிறு, அனு, கதுப்பின் (கூற்று ஆம்);
(துணை செய்) ஆக்கிராணம், கோணம்,
துண்டமே, நாசி, மூக்கு (ஆம்).
(1, 1, 3, 4, 4 பெயர்கள்) 95

**கண், கண்மணி, கண் இமை**

நயனம், நேத்திரமே, அக்கம்,
நாட்டம், கோ, நோக்கம், சக்கு,
(வியனுறும்) பார்வை, தாரை,
விலோசனம், விழியே, அக்கி,
(செயம் உறு) திருக்கு, திட்டி,
திருட்டி, அம்பகமே, கண் (ஆம்);
(மயம் உறு) தாரை, கண்ணின்
மணி; விளிம்பு, இமையின் (நாமம்).
(16, 1, 1 பெயர்கள்) 96

**புருவம், நெற்றி**

பிருகுடி, நுதலே, (நீண்ட)
பீருவே, புரூரம், பூரு,
புருவம் (ஆம்), புகுடியும் (பேர்);
(புடைபடு) நிடலத்தோடு,
(திரு) நுதல், குளம், இலாடம்,
(சேர்ந்த) மத்தகமே, நெற்றி;
(மருவிய) பாலம், முண்டம்,
அளிகமும் (வகுக்கலாமே).
(6, 8 பெயர்கள்) 97

**தலை, குடுமி, உச்சி**

(உரவிய) தலையே, மூர்த்தம்,
உவ்வியோடு, உத்தமாங்கம்,
சிரம், முடி, சென்னி, முண்டம்,
சிகரம், மத்தகமும் (ஆகும்);
(திரு)முடி, சிமிலி, சிக்கம்,
சிகை, (இவை) குடுமி (நாற்பேர்);
(விரவிய) சுடிகை, சூழி,
(மேவிய) நவிரம், உச்சி.
(9, 4, 3 பெயர்கள்) 98

**ஆண் மயிர், ஆண் பெண் மயிர்ப் பொது**

உளை, நவிர், குடுமி, பித்தை,
ஓரியே, குழல், கார், குஞ்சி,
தளை, சிகை, தொங்கல், பங்கி,
(தான் ஈராறு) ஆண் மயிர்ப் (பேர்);
(வளர்) குழல், கதுப்பு, கேசம்,
(மருவிய) சுரியல், (நான்கும்)

இளைய மைந்தர்க்கும் மற்றை
இளங்கொடியார்க்கும் (ஏற்கும்).
*(12, 4 பெயர்கள்)* 99

**பெண் மயிர், மயிர்முடி**

குருள், குழல், விலோதம், ஓதி,
கூழை, குந்தளம், மராட்டம்,
குரல், ஐம்பால், அளகம், (பத்தும்)
பெண்மயிர், கூந்தலும் (பேர்);
(பெருகிய) கொப்பு, முச்சி,
பின்னகம், கொண்டை, பந்தம்,
(திருமிகு) தம்மில்லம், (பொன்)
சிகழிகை, மயிர் முடிப் (பேர்).
*(11, 7 பெயர்கள்)* 100

**பிறமயிர், செறி மயிர், மயிர்க்குழற்சி**

ஓரியே, கேசம், பங்கி,
உளை, உரோமம், மராட்டம்,
(நேரும் இப் பேர்கள் ஆறும்)
பிறமயிர் (நிகழ்த்தும் என்ப);
(சேரும் அவ்) உரோமம், (மற்றைச்)
சிரோந்தமும், செறி மயிர்ப் (பேர்);
(வாரும்) குந்தளம், விலோதம்,
மயிர்க் குழற்சிப் (பேர் வைக்கும்).
*(6, 2, 2 பெயர்கள்)* 101

**சடை, அவயவம், சந்து**

குடிலமே, வேணி, (நீண்ட)
கோடீரம், பின்னலோடு,
சடிலம், (என்று ஐந்து பேரும்)
சடை (என அடைவே சாற்றும்);
(நெடிய) காத்திரம், உறுப்பு,
(நீள்) அங்கம், அவயவப் (பேர்);
(கடிய) மூட்டும், கொளுத்தும்,
கந்தும், சந்து (ஆகும் அன்றே).
*(5, 3, 3 பெயர்கள்)* 102

**நரம்பு, கழலை, கோழை, உடல் தழும்பு,**
**இறை, நரை**

சிரையே, சங்கனனம், நாடி,
(திருந்திய) நரம்பு (முப்பேர்);
அரலையே, கழலை; கோழை,
ஐயொடு, காசம் (ஆகும்);
(மருவும்) அங்கிதமே, சேக்கை,
வசி, வடு, உடல் தழும்பு (ஆம்);
(தரு) பொறி, வரை, இறைப் (பேர்);
சரை, நரை, பலிதமும் (பேர்).
*(3, 1, 2, 4, 2, 2 பெயர்கள்)* 103

**தலை யோடு, எலும்பு, கழியுடல் முழுவெலும்பு,**
**இந்திரியம்**

(அழி) தலையோட்டின் (நாமம்)
கபாலமே; அத்தி, என்பு,
(கழிவுறும்) எலும்பின் (நாமம்),
களேவரம் (என்றும் காட்டும்);
கழியுடல் முழுவெலும்பு,
கங்காளம் (என்பர் நூலோர்);
(விழை) பொறி, கரணம், கந்தம்,
(மேவும்) இந்திரியம் (முப் பேர்).
*(1, 3, 1, 3 பெயர்கள்)* 104

**சுவை, ஒளி முதலியன ஒரும் கருவி,**
**உயிர்**

(தரு) சுவை, ஒளி, ஊறு, ஓசை,
(சாற்றிய) நாற்றம், ஒரும்
கருவி நா, கண்ணே, மெய்யே,
காதொடு, மூக்கும் (ஆகும்);
(தெரிதரும்) உயிரே, ஆதன்,
சேதனன், பசுவே, சீவன்,
(அரிய) புற்கலனே, கூத்தன்,
அணு, இயமானன், ஆன்மா.
*(5, 9 பெயர்கள்)* 105

(இருபதோடு, இருபான், முப்பான்,
இருபான், ஈரைந்து, மேலும்
மருவிய ஆறு செய்யுள்
மக்கள்தம் பெயர்க்குச் செய்தான்.
குரு நறுங் குன்றை வேந்தன்
குணபத்திரன் தந்த நோன்மை
தருநெறி நோற்கும் வீரை
தழைத்த மண்டலவன் தானே). 106

**இரண்டாவது**
**மக்கட் பெயர்த் தொகுதி முற்றிற்று**

## 3. விலங்கின் பெயர்த் தொகுதி

**காப்பு**

(துலங்கு முக்குடை நிழற்ற,
துந்துபி முழங்க, தேவர்
நலம்பெறு கவரி வீச,
நன்மலர் மாரி தூவ,
அலங்கு உளை அரியணைக் கீழ்
அமர்ந்த நான்முகனைப் போற்றி,
விலங்கின் பேர்த் தொகுதி தன்னை
மேதினி வியப்பச் சொல்வாம்). 1

**சிங்கம், யானையாளி**

அரி, வயப்போத்து, சீயம்,
அறுகு, கேசரியே, பூட்கை,
(மருவிய) மிருகராசன்,
வயமாவே, மடங்கலோடு,
(பரவு) கண்டீரவம்,
பஞ்சானனம், சிங்கப் (பல்பேர்);

*(பெருகிய)* யானையாளிப் *(பேர்),*
யாளி, அறுகு, பூட்கை.
*(11, 3 பெயர்கள்)* *2*

### புலி

வல்லியம், வயமாவோடு,
சித்திரகாயம், *(மற்றும்)*
வெல்லு மா, உழுவை, பாய் மா,
வியாக்கிரம், தரக்கு, வேங்கை,
*(கொல்லவே எழுந்து சீறும்)*
குயவரி, *(கொடுஞ்)* சார்த்தூலம்,
புல்லொடு, புண்டரீகம்,
கொடுவரி, புலியின் *(நாமம்).*
*(14 பெயர்கள்)* *3*

### யானை

தும்பி, மாதங்கம், தூங்கல்,
தோல், கறையடி, எறும்பி,
உம்பல், வாரணம், புழைக் கை,
ஒருத்தல், வல் விலங்கு, நாகம்,
கும்பி, நால் வாயே, பூட்கை,
குஞ்சரம், கரேணு, அத்தி,
*(கம்ப)* வேழம், உவாவே, கரி,
கயம், களிறு, கைம்மா. *4*

சிந்துரம், வயா, *(வேகம்*
*செறி)* இபம், புகர்முகங்*(கள்),*
தந்தியே, மதாவளம்,
தந்தாவளம், வழுவை, ஆம்பல்,
மந்த மா, மருண் மா, *(மற்றை)*
மத கயம், போதகத்தோடு,
*(உந்தும் ஏழைந்தும் மேலும்*
*இரண்டும் மற்று உயர்ந்த)* யானை.
*(37 பெயர்கள்)* *5*

### யானைக் கூட்டத்துத் தலையானை, மதகயம், யானை வால், யானை வால் நுனி, யானை முதுகு, யானை மத்தகம்

உதவி செய்து இனத்தைக் காக்கும்
உம்பலே, யூதநாதன்;
மத கயம், மதோற்கடம்; *(பின்)*
வாலின் *(பேர்)*, தாலவட்டம்;
*(அதன்)*, நுனி வேசகம் *(தான்*
*ஆம்);* முதுகின் *(பேர்)*, மஞ்சு *(ஆம்);*
மதகமும், கும்பந்தானும்,
மத்தகம் *(என்று கூறும்).*
*(1, 1, 1, 1, 1, 2 பெயர்கள்)* *6*

### யானை மதம் பாய் சுவடு, யானைக் கைந் நுதி, யானை மதம், யானைக் கொம்பின் நடு, யானைத் தந்தம், யானைக் கடைக் கண்

கரடமே, மதம் பாய்கின்ற
சுவடு; கைந் நுதிகளே, புட்-
கரம் *(அது ஆம்);* மதத்தின் *(நாமம்),*
கடம், கடாம், தானம் *(ஆகும்);*
*(பெருகிய)* பிரதிமானம்,
*(பேசு)* கொம்பின் நடுப் *(பேர்);*
*(கருது)* கோடு, எயிறு, தந்தம்;
நிரியாணம், கடைக் கண் *(ஆமே).*
*(1, 1, 3, 1, 2, 1 பெயர்கள்)* *7*

### யானைச் செவியடி, யானைக் கவுள், யானைத் துதிக்கை உமிழ்நீர், யானைப் பல்லடி, யானை முன் கால், யானைப் பின் கால், யானைத் துதிக்கை

*(கண்டிடும்)* செவியடிப் *(பேர்),*
சூளிகை; கவுள், கதுப்பு *(ஆம்);*
*(விண்ட)* கை உமிழும் நீரே,
விலாழி; பல்லடி, கரீரம்;
*(கொண்ட)* காத்திரமே, முன் கால்;
*(கூறிய)* அபரம், பின்கால்;
தொண்டை, தொண்டலம், துதிக்கை,
சுண்டையும் *(அப்பேர் ஆமே).*
*(1, 1, 1, 1, 1, 1, 3 பெயர்கள்)* *8*

### பிடி, யானைத் திரள், யானைக் கன்று, யானை படுகுழி, யானை நோய்

வடவை, அத்தினி, *(இரண்டும்)*
பிடிகள் *(ஆம்)*, கரிணியும் *(பேர்);*
கடகம், யானைத் திரள் *(பேர்);*
கயந்தலை, போதகங்கள்,
துடியடி, களபமோடு,
கயமுனி, யானைக் கன்று *(ஆம்);*
படுகுழி, பயம்பு *(ஆம் என்ப);*
பாகலம், யானை நோயே.
*(3, 1, 5, 1, 1 பெயர்கள்)* *9*

### குதிரை, குதிரை மயிர், குதிரைக் குளம்பு, குதிரை போம் மார்க்கம்

பரி, துரகம், *(சிறந்த)*
பாடலம், கிள்ளை, பாய்மா,
துரகதம், வாசி, உன்னி,
தூசி, கந்தருவம், கற்கி,
அரி, அயம், இவுளி, மாவே,
அச்சுவம், புரவி, கோரம்,
குரகதம், கோணம், கொக்கு,
கொய்யுளை, சடிலம், கோடை. *10*

கந்துகம், கனவட்டம், *(போர்*
*காட்டும்)* பத்திரி, துரங்கம்,
குந்தம், அத்திரி, *(ஆறைந்தும்)*
குதிரையின் *(நாமம் ஆகும்);*
*(வந்த)* மேசகத்தினோடு, சு-
வல், குசை, மயிர்; குளம்பு
*(வந்த பேர்)*, குரம், குரச்சை;
மாதிகம், அது போம் மார்க்கம்.
*(30, 3, 2, 1 பெயர்கள்)* *11*

**பசு, தெய்வப்பசு, மலட்டுப் பசு,**
**ஈன்ற பசு, கன்று**

(குலவிய) பசுப் (பேர்), கூலம்,
கோ, குடம், சுரபி, ஆவே,
(இலகிய) நிரையே, தேனு,
பெற்றம் (இவ்வெட்டும் ஆகும்);
(பலமுறு) கபிலை, தேனு,
(பரவு) தெய்வப் பசுப் (பேர்);
மலடு (தான்), வசை (ஆம்); ஈற்று,
வற்சலை; கன்று, வற்சம்.
(8, 2, 1, 1, 1 பெயர்கள்) 12

**ஓர் ஈற்றுப் பசு, நற்பசு, பசு முலை, உதை காற் பசு,**
**முலை மடி, பசுக் கூட்டம்**

(பரவும்) ஓர் ஈற்று, கிட்டி;
பத்திரை, நற் பசுப் (பேர்);
சுரை, முலை (ஆகும்); (மற்றைச்)
சுதை, உதை காற் பசுப் (பேர்);
(திரு) முலை மடியின் (நாமம்),
செருத்தல், ஆபீனம் (என்ப);
நிரை, தொறு, காலி, கோட்டம்,
(நீண்ட) காலேயம், கூட்டம்.
(1, 1, 1, 1, 2, 5 பெயர்கள்) 13

**எருத்து, எருத்தின் முரிப்பு,**
**பேரெருத்து, இடபம்**

பாறல், சே, பெற்றம், பூணி,
பாண்டில், கொட்டியம், இருலே,
ஏறெடு, மூரி, புல்லம்,
எருத்தின் (பேர்); இமில், முரிப்பு (ஆம்);
பாறல், பேரெருத்தின் (நாமம்);
பகடும், தூர்வகமும் (ஆகும்);
ஏறு, உக்கம், நரையே, நந்தி,
இடபம் (ஆம்), கூளியும் (பேர்).
(10, 1, 3, 5 பெயர்கள்) 14

**பொதியெருது, எருமை, எருமை ஆண்,**
**மலட்டெருமை**

தூர்வகம், துரியம், (என்ப)
பொதியெருது, எருமையின் (பேர்);
காரானே, வடவை, மேதி,
சைரிபம், கவரி, காரா,
மூரியே, மகிடம் (எட்டும்
மொழியும்); (மற்று) ஆண் பொதுப் (பேர்
பாரிய), கடாவினேடு,
பகடு (ஆம்); மை, மலட்டின் (நாமம்).
(2, 8, 2, 1 பெயர்கள்) 15

**ஆட்டின் பொது**

அருணம், செம்மறியே, மோத்தை,
அசம், உதள், உடுவே, கொச்சை,
துருவை, ஏழகம், வற்காலி,
துள்ளலே, பள்ளை, வெள்ளை,
வருடை, மேடம், கடா, மை, மறி,
வெறி, கொறியே, சாகம்,
புருவையே, தகர், (மூவேழும்
இரண்டும்) ஆட்டின் பொதுப் (பேர்).
(23 பெயர்கள்) 16

**செம்மறியாடு, செம்மறியாட்டு ஆண்,**
**ஆட்டுக் குட்டி**

துருவை, மை, கொறி, (முப்பேரும்
தோற்றும்) செம்மறியாட்டின் (பேர்);
(செரு மலி) தகர், கடாவே,
திண்ணகம், ஏழகங்கள்,
(பரவு) கம்பளம், (என்று ஐந்தும்
பற்றும் அவ்) ஆணின் (பல் பேர்);
(மருவிய) குட்டன், சோரன்,
மறி, பறழ், குட்டி (ஆமே).
(3, 5, 4 பெயர்கள்) 17

**வெள்ளாடு, வெள்ளாட்டுக் குட்டி,**
**வெள்ளாட்டு ஆண், வரையாடு**

வெள்ளை, வற்காலி, கொச்சை,
வெள்ளாட்டின் (நாமம் ஆகும்);
வெள்ளையே, (அதன்) மறிப் (பேர்);
(மேவிய) செச்சை, சாகம்,
(தள்ளிய) மோத்தை, (முப் பேர்
சாற்றுமே இவற்றின்) ஆண் (பேர்);
(வள்ளிய) சரபத்தோடு,
வருடையும், வரையாடு (ஆமே).
(3, 1, 3, 2 பெயர்கள்) 18

**பன்றி**

கேழலே, அரி, குரோடம்,
கிரி, கிடி, கிருட்டி, ஏனம்,
மோழலே, இருளி, (முந்து)
வல்லுளி, களிறு, மைம் மா,
(போழ் முகக்) கோட்டு மாவே,
போத்திரி, வராகம், கோலம்,
(சூழும் ஈரெட்டும்) பன்றி,
சூகரம், எறுழியும் (பேர்).
(18 பெயர்கள்) 19

**முட்பன்றி, முட்பன்றி முள், கரடி**

சல்லியம், முளவு மா, எய்,
சல்லகம், முட் பன்றிப் (பேர்);
(சொல்லும் இப் பன்றி) முள்ளு,
(சூழ்) சலம், சலலம் (என்ப);
பல்லுகம், உளியம், எண்கு,
பல்லூகம், எலுவினேடு,
பல்லமே, கரடி (நாமம்,
பகர்) குடாவடியும் (ஆமே).
(4, 2, 7 பெயர்கள்) 20

**சாமரம், கவரி மா, காட்டா, கீரி**

சவரி, சீகரமே, (வீசும்)
  சாமரம், கவரியும் (பேர்);
கவரிமா, படகம், பட்டம்,
  மான மா, எகினும் (காட்டும்);
கவய மா, ஆமர், காட்டா;
  காத்திரி, நகுலம், (என்ன
இவை இருபேரும் அன்றித்)
  தீர்வையும், கீரி (ஆமே).
(3, 4, 2, 3 பெயர்கள்) 21

**மான், கலை, புல் வாய்.**

அரிணம், சாரங்கம், நவ்வி,
  (அடல்) உழை, பிணையே, சூனம்,
மிருகமே, மறி, குரங்கம்,
  (மேவும்) மான், ஏணமும் (பேர்);
இரலை, வச்சயமே, புல்வாய்,
  கலை, கருமானும் (ஏற்கும்);
இரலை, புல்வாய்க்கும் (பேர் ஆம்
  என்றனர் குன்று நூலோர்).
(10, 4, 1 பெயர்கள்) 22

**கழுதை, கோவேறு கழுதை, ஒட்டகம்**

கழுதையின் (பேர்), வாலேயம்,
  கர்த்தபம், காளவாயே,
(அழகு இல்) அத்திரியே, கோகு,
  வேசரி, கரமும் (ஆகும்);
(குழைவுறு) வேசரிப் (பேர்),
  கோவேறு கழுதைக் (கூற்றும்);
(அழிவு இல்) ஒட்டகம், தாசேரம்,
  அத்திரி, நெடுங்கழுத்தல்.
(7, 1, 3 பெயர்கள்) 23

**நரி, முசு**

ஓரி, கோமாயு, ஊளன்,
  ஒண்டனே, இகலன், சம்பு,
பூரிமாயன், குரோட்டா,
  சிருகாலன், நரியே; (போற்றும்)
ஓரியே, கோலாங்கூலம்,
  (உற்ற) மைம் முகனே, கள்வன்,
(சீரிய) கலையோடு (ஐந்தும்),
  முசு (எனச் செப்பலாமே).
(9, 5 பெயர்கள்) 24

**நாய், பெண்ணாய், செந்நாய்**

சூரனே, முடுவல், பாசி,
  புரோகதி, சுனகன், குக்கல்,
கூரனே, எகினன், அக்கன்,
  குரைமுகன், ஞமலி, ஞாளி,
சாரமேயன், சுணங்கன், சுவாவே,
  நாய் (தான் ஐம் முப் பேர்);
(வீரிய) முடுவல், பெண்ணாய்;
  விருகம், கொக்கு, (இரண்டும்) செந்நாய்.
(15, 1, 2 பெயர்கள்) 25

**பூனை, கத்தூரி, நாவி**

வெருகுடன், அலவன், ஓதி,
  விடாரகம், விலாளம், பூசை,
(பொருந்து) மார்ச்சாலம், பாக்கன்,
  இற்புலி, பூனை (ஒன்பான்);
(மருமிகு) துருக்கம், நானம்,
  மான்மதம், நரந்தம் (நான்கும்
கருது) கத்தூரியின் (பேர்;
  காட்டிய) மறுவி, நாவி.
(9, 4, 1 பெயர்கள்) 26

**குரங்கு, கருங் குரங்கு**

வலிமுகம், கடுவன், (பாயும்)
  வானரம், அரியே, மந்தி,
பிலவங்கம், கோகிலம், (கான்
  பெயர்ந்த) கோடரமே, யூகம்,
(கலக) மர்க்கடமே, நாகம்,
  கவி, குரங்கு (இவை ஈராறு ஆம்);
(குலவு) காருகமே, யூகம்,
  (கூறிய) கருங் குரங்கே.
(12, 2 பெயர்கள்) 27

**ஓந்தி, மூஞ்சூறு, எலி**

(சாய்ந்த) சாயானதங்கள்,
  சரடமே, காமரூபி,
(ஏய்ந்த) தண்டு, ஓமான், ஓதி,
  (இசை) கோம்பி, முசலி, ஓத்தி,
ஓந்தி (ஆம்); சுவவு, சுண்டன்,
  (உறு) சுசுந்தரி, மூஞ்சூறே;
(ஆய்ந்திடு) சிகரி, ஆகோடு,
  இரும்பனும், (அகழ்) எலிப் (பேர்).
(9, 3, 3 பெயர்கள்) 28

**காரெலி, பெருச்சாளி, அணில், உடும்பு, முயல்**

கருப்பை, காரெலியின் (நாமம்);
  களதம், துந்துளமே, ஆகு,
பெருச்சாளி, மூடிகத்தோடு,
  உந்துரு (என்றும் பேர் ஆம்);
வரிப்புறம், வெளில், அணில் (பேர்);
  (வரும்) தடி, முசலி, கோதா,
(தரித்தெழும்) உடும்பின் (நாமம்);
  சசம், முயல் (என்னலாமே).
(1, 5, 2, 3, 1 பெயர்கள்) 29

**விலங்கின் ஆண் மரபு**
**விலங்கின் ஆண் பெயர் – கடுவன், மா**

கடுவன், மா, ஒருத்தல், போத்து,
  கலை, தகர், களிறு, சேவி-

னொடு, பகடு, உம்பல், ஏறோடு,
ஓரி (ஈராறும்) ஆண் (பேர்);
(வடு அறு) குரங்கு, பூனை,
(மற்று இவை) கடுவன் (ஆமே);
(அடு திறல்) யானை, பன்றி,
(ஆடல்) (வெம்) புரவி, மா (ஆம்).
(12, 2, 3 பெயர்கள்) 30

**ஒருத்தல், போத்து, கலை**

கரடி, புல்வாய், மான், யானை,
கவரியோடு, எருமை, பன்றி,
(பொரு) புலி, மரை, (என்று ஒன்பான்
புகன்றிடும்) ஒருத்தல் (ஆகும்);
மரை, பசு, புலியே, பூனை,
(மற்றைப்) புல்வாயும், போத்து (ஆம்);
(கருதிய) முசுவும், மானும்,
கலை (எனக் காட்டலாமே).
(9, 5, 2 பெயர்கள்) 31

**தகர், களிறு, சே, பகடு, உம்பல்**

துருவாடு, வேழம், யாளி,
சுறா, தகர் (என்றே சொல்லும்);
கரியொடு, சுறவு, பன்றி,
களிறு (எனக் காட்டலாமே);
(செரு மலி) குதிரை, பெற்றம்,
புல்வாயே, சே (என்று ஆகும்);
எருமையோடு, யானை, பெற்றம்,
பகடு; இபம், உம்பல் (ஆமே).
(4, 3, 3, 3, 1 பெயர்கள்) 32

**ஏறு, ஓரி**

ஆனுடன், எருமை, பன்றி,
(ஆய் மயிர்க்) கவரி, சங்கு,
மானொடு, மரை, புல்வாயும்,
(மாறு கொள்) சுறவும், ஏறு (ஆம்);
(ஊன் நுகர்) நரியினோடு,
முசு, (இவை) ஓரி (ஆகும்);
(மான நூல் விலங்கின் ஆணின்
மரபு என அடைத்தவாறே).
(9, 2 பெயர்கள்) 33

**விலங்கின் பெண் மரபு**
**விலங்கின் பெண் பால், பிடி, பிணை**

பிடி, பிணை, பெட்டை, மந்தி,
பிணாவோடு, ஆ, நாகு, பாட்டி,
(கொடு) விலங்கின் பெண்பால் (ஆம்);
குஞ்சரம், கவரியோடு,
(நெடிய) ஒட்டகம், (இம் மூன்றும்
நெடும்) பிடி (நிகழ்த்தும் நாமம்);
(வடிவுள) உழை, புல்வாய், நாய்,
வராகமே, பிணையின் (வைக்கும்).
(8, 3, 4 பெயர்கள்) 34

**பெட்டை, மந்தி, பிணா, ஆ**

ஒட்டகம், கழுதை, வாசி,
(உறு) சிங்கம், மரை, (இவ் ஐந்தும்)
பெட்டை (ஆம்); முசுவோடு, ஊகம்,
(பேசிய) குரங்கு, மந்தி;
(பட்ட) புல்வாய், நாய், பன்றி,
(பகர்ந்திடும்) பிணா (எனும் பேர்);
(கட்டிய) எருமை, பெற்றம்,
(காட்டுள) மரையே, ஆ (ஆம்).
(5, 3, 3, 3 பெயர்கள்) 35

**நாகு, பாட்டி, விலங்கின் பெண் பால் பொது,**
**விலங்கின் ஆண் பொது**

எருமையே, மரையே, பெற்றம்,
(ஏற்ற) நீர்ச்சாதி, நாகு (ஆம்);
நரி, பன்றி, நாய், (இம் மூன்றும்
நாட்டிய) பாட்டி (ஆகும்);
(பெருகு) பெண்பால், பிணா, பெண்;
(பேணும்) ஆண், (எவையும்) ஆண் (ஆம்);
(பொரு இல் நூல் உணர்ந்து சொன்ன
புலவர்தம் வாக்குத் தானே).
(4, 3, 2, 1 பெயர்கள்) 36

**விலங்கின் பிள்ளை மரபு**
**விலங்கின் பிள்ளை, பறழ், குருளை, குட்டி**

பறழ், பிள்ளை, குழவி, குட்டி,
பார்ப்பொடு, குருளை, கன்று,
மறியே, போதகம், (இவ் ஒன்பான்
வல்) விலங்கின் பிள்ளைப் (பேர்);
பறழொடு, குருளை, குட்டி
(பற்றிய மூன்று பேரும்.
உறு) புலி, முயல், வராகம்,
ஓதிய) நரி, நாய் (ஆமே).
(9, 5 பெயர்கள்) 37

**பிள்ளையும், மறியும், (பறழ், பிள்ளை, குழவி, குட்டி,**
**பார்ப்பு) எனும் ஐந்தும்**

(முறுகு) நாய் அன்றி மற்றை
மொழிந்திடும், பிள்ளை (என்ப);
மறி, (என்பது) ஆடு, அழுங்கும்,
மானொடு, குதிரை (வைக்கும்);
பறழ், பிள்ளை, குழவி, குட்டி,
பார்ப்பு (என ஐந்து பேரும்
குறியுள) குரங்கே ஆதி
கோட்டில் வாழ் விலங்கின் பிள்ளை.
(4 பெயர்கள்) 38

**கன்று, குழவி, போதகம்**

கடமை, மான், எருமை, பெற்றம்,
கவயம், ஒட்டகமே, யானை,
(விடு) பரி, மரை, கராமே,
(மேவிய) கவரி, கன்று (ஆம்);

கடமை, மான், எருமை, யானை,
(காட்டிய) குழவி (ஆகும்);
(அடு) புலி, சிங்கம், யானை,
(ஆன) போதகம் (என்று ஆமே).
(11, 4, 3 பெயர்கள்) 39

**பறழ் குட்டி பிள்ளை, பறழ் குட்டி, பறழ் பிள்ளை**

(முறுகிய) கீரி, பூனை,
முயல், அணில், (என்ப நான்கும்)
பறழொடு, குட்டி, பிள்ளை
(பன்னிய மூன்றும் ஆகும்);
பறழொடு, குட்டி (தானே)
பாக்கனும், அணிலும், (என்ப);
பறழ், பிள்ளை (இரண்டும் சொல்லில்)
பார்ப்பொடு, தவழ் சாதிப் (பேர்).
(4, 2, 2 பெயர்கள்) 40

**குருளை, கன்று, குழவி குருளை, விலங்கினிற் பொது**

குருளையும் கன்றும் மானிற்
(கொள்ளுப); குழவியோடு
குருளையும் யாளி (கொள்ளும்);
குழவியே முசுவின் (ஆகும்);
குருளையும் முசுவின் (கூற்று ஆம்;
கூறிய) மாவே, மானே,
மிருகமே, குரங்கே (நான்கும்)
விலங்கினிற் பொதுப் (பேர் ஆமே).
(1, 1, 1, 1, 4 பெயர்கள்) 41

**விலங்கின் கூட்டம், விலங்கின் வால், விலங்கினது வாலின் கீழ்**

சாலமே, வியூகம், யூதம்,
(சாற்றிய) குலம், விருந்தம்,
(கோலம் ஆர்) கணம், விலங்கின்
கூட்டம் (ஆம்; பிறவும் ஏற்கும்);
கூலம், வேசகமே, தோகை,
(குறித்திடும்) இலாங்கூலம், வால்,
வாலதி (என்றும் பேர் ஆம்);
வாலின் கீழ் வெருகம் (ஆமே).
(6, 5, 1 பெயர்கள்) 42

**விலங்கின் கொம்பு, கொம்பு இலா விலங்கு, தோல்**

மருப்பொடு, சிருங்கம், கோடு,
(மற்றைய) உலவை, கொம்பு (ஆம்,
குருத்திடும்) விடாணமும் (பேர்);
குமரம், கொம்பு இலா விலங்கு (ஆம்);
கிருத்தியே, புறணி, போர்வை,
(கிளர்) அதள், ஒலியல், தொக்கு,
துருத்தியே, சருமம், பச்சை,
துவக்கு, உரி, வடகம், தோல் (ஆம்).
(5, 1, 12 பெயர்கள்) 43

**ஊன், புலால், பசுவினது இறைச்சி**

தசை, புலால், புலவு, புண்ணை,
தடியொடு, புளிதம், தூவே,
மிசிதம், வள்ளூரம், விடக்கு,
(பேசில்) ஊனின் (பேர் பத்து ஆம்);
(பொசிதரும்) முடையே, ஊழ்த்தல்,
பூதியே, தசை, புலால் (ஆம்);
பசுவினது இறைச்சி (தானே,
பகர்ந்த) வள்ளூரம் (அது ஆமே).
(10, 4, 1 பெயர்கள்) 44

**இரத்தம், கொழுப்பு**

எருவையே, நெய்த்தோர், சோரி,
(இயம்பிடும்) உதிரம், புண்ணீர்,
குருதி, செம்பால், புலால் நீர்,
(குறித்த) சோணிதமே, செந்நீர்,
(கருதிய) சுடுவன், (மற்றைக்)
கறை, (ஈராறு) இரத்தத்தின் (பேர்);
(விரவிய) நிணம், கொழுப்பு,
விளரொடு, விழுக்கும் (ஆமே).
(12, 3 பெயர்கள்) 45

**கருப்பம், வழும்பு, ஈரல், முடை, மாசு, உள்ளின் மாசு**

கரு(வொடு), சினை, பீள், சூலே,
கருப்பமே, வயாவும் (ஆகும்);
(மருவிய) வழும்பின் (நாமம்),
வழுக்கு (என்ப); ஈருள், ஈரல்;
(கருதிய) முடையின், (நாமம்
காட்டிய) புலவோடு, ஊத்தை;
(உருவிய) மலமே, மாசே;
உபமலம், உள்ளின் மாசு (ஆம்).
(5, 1, 1, 2, 1, 1 பெயர்கள்) 46

**பாம்பு, சாரைப் பாம்பு**

அரவு, கட்செவியே, போகி,
அகி, அரி, வியாளம், சர்ப்பம்,
உரகம், பன்னகமே, நாகம்,
(உற்ற) மாசுணமே, சக்கிரி,
(பரவிய) புயங்கம், பாந்தள்,
அங்கதம், பணி, பாம்பின் (பேர்);
(இரைகொளும்) துண்டம், சாரை,
இராசிலம் (என்பதும் பேர்).
(16, 2 பெயர்கள்) 47

**மண்டலி, கண் குத்திப் பாம்பு, பெரும் பாம்பு, நாகம்**

(விடம் உமிழ்) மண்டலிக்கு,
(மேவு) கோளகமே (நாமம்);
(நெடிய) மால் உதானனே, கண்
குத்திப் பாம்பு (என்று கூறும்);

(நெடிய) மாசுணமே, பாந்தள்,
(நீள்) பெரும் பாம்பின் (நாமம்);
(முடியவே எழுந்து சீறும்)
மூர்க்கனே, நாகம் (என்ப).
(1, 1, 2, 1 பெயர்கள்) 48

**கருவழலை, பறவை நாகம், பாம்பின் படம், படப்பொறி, பாம்பின் நச்சுப் பல், பாம்புயிர்ப்பு (காற்று)**

(வரு) கரு வழலையின் (பேர்),
இராசமா நாகம் (ஆகும்);
(குரவிய) பறவை நாகம்,
குக்குட சர்ப்பம் (என்ப);
(பரவிய) படம், பணம், பை;
படப் பொறி, உத்தி, துத்தி;
(கருதிய) தட்டம், நஞ்சு
காலும் பல்; அதட்டம், காற்று (ஆம்).
(1, 1, 2, 2, 1, 1 பெயர்கள்) 49

**அன்னம், மயில்**

எகினம், ஓதிமம், மராளம்,
விகங்கம், வக்கிராங்கம், அன்னம்;
சிகியொடு, ஏமலி, தோகை,
சிகாவளம், சிகண்டி, மஞ்ஞை,
ஒகரமே, மயூரம், (மற்றும்)
(உறு) பிணி முகம், கலாபி,
(மகிழ்வுறு) நவிரம், பீலி,
கேகயம், மயில் (பன் மூப் பேர்).
(5, 13 பெயர்கள்) 50

**மயிற் பீலி, மயிற் குரல், மயிலிறகு, அன்னத்தின் இறகு**

சரணமே, சிகண்டம், கூந்தல்,
சந்திரகம், கலாபம், கூழை,
(பெருகிய) தோகை, தொங்கல்,
பீலி (ஆம்) தூவியும் (பேர்);
(மருவிய) அகவல், ஆலல்,
மயிற்குரல், ஏங்கலும், (பேர்);
(வரும்) முருந்து, இறகின் முள்ளாம்;
(மற்று) அன்னச் சிறகு, தூவி.
(9, 3, 1, 1 பெயர்கள்) 51

**கருடன், சாதகப் பறவை**

(மன்னிய) கலுழன், (மற்றை)
வைனனே, வைனதேயன்,
பன்னக வைரி (யோடு),
தார்க்கியன், பறவை வேந்தன்,
(உன்னிய) கருடன் (நாமம்),
உவணமும், (அதற்கே கூறும்);
(சொன்ன) சாதகப் புள் (தானே),
(சூழ்ந்த) சாரங்கம் (என்ப).
(7, 1 பெயர்கள்) 52

**எண்காற் புள், சக்கரவாகப் புள்**

சிம்புள், வாருண்டம், (மற்றைச்)
(செப்பிய) வருடை(யோடு),
சம்பரம், துரோணம், (வெய்ய)
சரபம், எண்காற் புள் (பேராம்);
(வெம்பிய) நேமிப் புள்ளு,
(விரும்பு) சக்கரவாகப் புள்,
(கொம்பிய) கோகம், யானைக்
குருகு (என்று கூறலாமே).
(6, 3 பெயர்கள்) 53

**கழுகு, பருந்து, அசுணமா**

(இருந்த) புண்டரமே, கங்கம்,
எருவையே, பவணை(யோடு),
(கருஞ் சிறை) உவணம், (ஐந்தும்)
கழுகு (என்ப), சகுந்தமும் (பேர்);
(திருந்திய) சேனம், பார-
சிகை, பாறு, (சேரும்) கங்கம்,
பருந்தின் (பேர்); அசுணமாவே,
(பகரிற்) கேகயம் (என்றோதும்).
(6, 4, 1 பெயர்கள்) 54

**கிளி, கருங்கிளி, நிலாமுகி, செம்போத்து**

சாருவே, அரியே, வன்னி,
தத்தையே, சுகமே, கிள்ளை
கீரமே, சுவாகதம் (தான்),
கிளி, அவந்திகையும் (ஆகும்);
கீரமும், கிள்ளை (தானும்),
(கிளர்) கருங்கிளியின் (நாமம்);
(சாரமா) நிலாமுகிப் பேர்,
சகோரம்; செம்போத்து, குக்கில்.
(9, 2, 1, 1 பெயர்கள்) 55

**குயில், கோட்டான், நாகண வாய்ப்புள்**

கோகிலம், களகண்டம்(மே),
கோரகை, குயிலின் (பேர்தான்),
(ஆகுமே) பிகத்தினோடு,
பரபுட்டம் (தானும் அப் பேர்);
கூகையும், உலூகமும், (போர்க்)
குடிஞையும், குராலும், கோட்டான்;
நாகணவாய்ப் புள், பூவை,
(நவிற்றும்) சாரிகையும் (ஆமே).
(5, 4, 2 பெயர்கள்) 56

**வலியன், காரிப்பிள்ளை, கரிக்குருவி**

கஞ்சனம், கிகிணி(யோடு),
வயவனே, கஞ்சரீடம்,
(விஞ்சு) பாரத்துவாசம்,
வலியனே (விதித்த பேரே);
வஞ்சுளன், வயவன், (மற்றை)
வயான் (என்ப), காரிப் பிள்ளை;

கஞ்சனம், கயவாய், (என்ப)
கரிக் குருவிப் (பேர்தானே).
(5, 3, 2 பெயர்கள்) 57

**சிச்சிலி, கூகை, கோழி**

சிரல், கவுதம், பொன் வாய்ப் புள்,
தித்திரி, சிச்சிலிப் (பேர்);
(கருதிய) பெரும்புள்ளோடு,
கௌசிகம், ஊமன், கூகை;
குருகு, காலாயுதம், (போர்க்)
குக்குடம், ஆண்டலைப் புள்,
(பெருகு) வாரணம், (என்று ஐந்தும்)
(பேசிய) கோழி (ஆமே).
(4, 3, 5 பெயர்கள்) 58

**ஊர்க்குருவி, நிலங்கு, கானங்கோழி, வானம்பாடி, காடை, சிவல்**

குலிங்கமே, சடகமே, ஊர்க்
குருவி (ஆம்), புலிங்கமும் (பேர்);
நிலங்கு, பூழ் (ஆம்); காதம்பம்,
(நெடிய) கானங்கோழிப் (பேர்);
கலிங்கமே, கம்புள், வானம்-
பாடி (யாம்); குறும்பூழ், காடை;
(இலங்கு) கோரசமே, புல்லோடு,
இதல், சிவல் (இவை முப் பேரே).
(3, 1, 2, 1, 3 பெயர்கள்) 59

**கவுதாரி, பகண்டை, பொய்யாப் புள், காகம், ஆந்தை**

சிரவமே, கௌதாரிப் (பேர்);
சில்லையே, பகண்டை (ஆகும்);
(மருவிய) சலாங்கு (தானே),
(வாய்த்த) பொய்யாப்புள் (ஆமே);
கரடம், வாயசம், அரிட்டம்,
கரும்பிள்ளை, கொடியே, காகம்;
இருடி, பிங்கலையே, ஆந்தை,
கின்னரம் (என்பதும் பேர்).
(1, 1, 1, 5, 3 பெயர்கள்) 60

**கரும்புறா, புறாவின் பொது, மாடப்புறா, உள்ளான், தூக்கணங் குருவி**

கரும் புறாவின் (பேர்) பாராவதம்;
(என்ப), கபோதமும் (பேர்);
(பொருந்து) தூதுணம், கபோதம்,
களரவம், புறாப் பொதுப் பேர்;
(பரிந்து) கல் மேய்வு, காள-
பதமே, மாடப்புறா (ஆம்);
(திருந்திய) உள்ளல், உள்ளான்;
சிதகம், தூக்கணங் குரீஇயே.
(2, 3, 2, 1, 1 பெயர்கள்) 61

**சம்பங்கோழி, அன்றில், கொய்யடி நாரை, பெரு நாரை, கருநாரை, வெள்ளை நாரை**

(கருதிய) கம்புள், சம்பங்-
கோழி (ஆம்); கவுஞ்சம், அன்றில்;
குருகு, வண்டானம் (என்ப),
கொய்யடி நாரை (யின் பேர்);
(பெருகிய) பிதாவே, போதா,
பெருநாரை; சிகரி (ஒன்றே),
கரு(நிற) நாரை; வெள்ளை
நாரை, சாரசம் (என்று ஆமே).
(1, 1, 1, 2, 1, 1 பெயர்கள்) 62

**நீர்க் காக்கை, கொக்கு, நீர் வாழ் பறவை**

(மன்னு) நீர்க் காக்கை, அர்க்கம்,
(மற்றும்) காரண்டமும் (பேர்);
(பன்னிய) குரண்டம், கொக்கு (ஆம்),
வலாகமும், பகமும் (அப்பேர்);
உன்னமே, கிராமம், (மற்றை)
உற்குரோசரத்தினோடு
கின்னரம், (இன்ன) நீரில்
கிளர்ந்தெழு பறவை (ஆமே).
(2, 3, 4 பெயர்கள்) 63

**வண்டு**

அரி, அளி, ஞிமிறு, மந்தி,
அறுபதம், சிலீமுகம், சஞ்-
சரிகமே, சரகமே, சஞ்-
சாளிகம், சுரும்பு, கீடம்,
பிரமரம், மா(வே), கீதம்,
பிருங்கமே, பிரசம்,புள்ளு,
(வரிகொள்) புண்டரீகம், தும்பி,
மதுபம், (நாலைந்தும்) வண்டு (ஆம்).
(20 பெயர்கள்) 64

**பெண் வண்டு, ஆண் வண்டு, துருஞ்சில், வாவல், இந்திரகோபம், தேனீ**

கரும் புளே, கேசவம், தேன்,
(கண்ட) பெண் வண்டின் (நாமம்);
சுரும்பொடு, மதுகரங்கள்,
(சொற்றிடும்) தும்பி, ஆண் (பேர்);
துருஞ்சில், ஆலாலம் (என்ப);
(சோர்வில்) அஞ்சலிகை, வாவல்;
(தரும்) கோபம், ஈயல், மூதா;
சரகமே, பிரசம், தேனீ.
(3, 3, 1, 1, 2, 2 பெயர்கள்) 65

**சிள் வீடு, விட்டில், நுளம்பு, மின்மினி, கொதுகு**

சிதடி, சில்லிகையே, சில்லை,
சிள் வீடு, சிமிலியும் (பேர்);
(பதமுறு) சலபம், விட்டில்,
(பறவையாம்) பதங்கமும் (பேர்);

(விதமுறு) நுளம்பு (தானே),
நிலத்தி; மின்மினி கச்சோதம்;
கொதுகின் (பேர்), மசகம், துள்ளல்,
(கூறின் மற்று) அசவலும் (பேர்).
(4, 2, 1, 1, 3 பெயர்கள்) 66

**பறவை ஆண் பெண் மரபு**
**மயிலும் எழாலும் அல்லனவாகிய**
**புள்ளின் ஆண், மயில் எழால் இரண்டின்**
**ஆண், கோழி கூகைகளின் பெண், பறவைப் பெண்**

மயில், எழால், அல்லாப் புள்ளின்
(வகுத்த) ஆண் சேவல் (என்ப);
மயில், எழால் எனும் இரண்டில்
(வாய்த்த) ஆண் போத்து (அது ஆகும்);
(அயர்வுறு) கோழி, கூகை,
(அல்லாப்) பெண் அளகு (என்று ஓதார்);
(பெயர் பெறும்) (எல்லாப்) புள்ளின்
பெண் பெடை, பெட்டை, பேடை.
(1, 1, 1, 3 பெயர்கள்) 67

**பறவையின் பொது**

விகங்கம், ஆசுகியே, வீயே,
விகிரமே, குடிஞை, பக்கி,
சகுந்தம், பத்திரி, பதங்கம்,
(தாழ்) பிணி முகத்தினோடு,
(பகர்ந்திடும்) ககமே, (கோலப்)
பறவை(யே), பதகம், போகில்
(புகழ்ந்திடு) குரீஇ, (மூவைந்தும்)
புட்பொது, வயானமும் (பேர்).
(16 பெயர்கள்) 68

**இறகு, முட்டை**

சிறகொடு, சதனம், வாசம்
சிறை, பிஞ்சம், கூரல், பக்கம்,
பறை, சதம், தூவி, தோகை,
பத்திரம், குரலே, கூழை,
இறை (என உரைத்த மூவைந்தும்
ஏற்றதும்) இறகின் (பேரே);
(அறை தரும்) அரிட்டம், கோசம்,
அண்டமே, சினை(யே), முட்டை.
(15, 4 பெயர்கள்) 69

**பறவைக் குஞ்சு, பறவை மூக்கு, புள் சிறகடித்துப்**
**புடைத்தல், புள்ளீட்டத்தின் ஓசை,**
**பறவைக்கூட்டம்**

பிள்ளையும், பார்ப்பும், குஞ்சின்
(பேர்); சுச்சு, சுவவு, துண்டம்,
(ஒள்ளிய) அலகு, மூக்காம்;
ஓசனிக்கின்ற(தென்ப),
புள் (எழச்) சிறகடித்துப்
புடைத்தலின் (நாமம் ஆகும்);
(துள்ளு) புள்ளீட்டத்து ஓசை,
துழனி (ஆம்); தொழுதி, கூட்டம்.
(2, 4, 1, 1, 1 பெயர்கள்) 70

**மகர மீன், பெரு மீன், யானை மீனை விழுங்கும் மீன்,**
**திமிங்கிலத்தை விழுங்கு மீன்**

கலை, சுறு, மீனேறு (என்ப),
(காட்டிய) மகரம் (ஆகும்);
(செலமுறு) யானை மீனே,
திமி, பெருமீனின் (நாமம்);
(அலைவுறு) திமிங்கிலப்பேர்,
ஆனையை விழுங்கும் மீனும்;
(மலை) திமிங்கிலகிலம் (தான்),
மற்று அதை விழுங்கும் மீனே.
(3, 2, 1, 1 பெயர்கள்) 71

**சங்கு, வலம்புரிச் சங்கு, சலஞ்சலம்**

(நலம் தரு) நந்து, சுத்தி,
நாகொடு, வளை, கம்பு, கோடு,
(இலங்கிய) வாரணம், வண்டு,
இடம்புரி, வெள்ளை, சங்கு (ஆம்);
வலம்புரி (நாமம் தானே),
(வைத்த) கொக்கரை (என்றோதும்);
சலஞ்சலம், பணிலம் (என்று
சாற்றினர் ஏற்ற நூலோர்).
(10, 1, 1 பெயர்கள்) 72

**இடம்புரி, வலம்புரி, சலஞ்சலம்,**
**பாஞ்ச சன்னியம்**

இப்பி ஆயிரமே சூழ்ந்தது,
இடம்புரி (என்று கூறும்);
(ஒப்பில்) சங்கு ஆயிரம் சூழ்
உறு, வலம்புரி (என்று ஓதும்);
அப்படி அதுவும் சூழ்ந்த
சலஞ்சலம் (ஆகும்); (மற்றைத்)
(தப்பிலாச்) சலஞ்சலங்கள்
சார்ந்தது, பாஞ்ச சன்னியம். 73

**முதலை, ஆண் முதலை, ஆமை,**
**பெண் ஆமை, மலங்கு மீன்**

இடங்கர், சிஞ்சுமாரம், வன்மீன்,
(எழில்)கராம், முதலை(யின்) (பேர்);
(கொடுந்திறல்) கராம், (மற்று) ஆண் (பேர்);
கூர்மமே, உறுப்படக்கி,
(ஒடுங்கு) கச்சபமே, ஆமை,
கமடமும் (உரைக்கற்பாற்றும்);
(மடங்கிய) துளி, பெண்ணுமை;
மலங்கின் (பேர்), நூறை (என்ப).
(4, 1, 4, 1, 1 பெயர்கள்) 74

**கிளிஞ்சில், இருல் மீன், ஆரால் மீன், கெண்டை மீன்,**
**நத்தை, அட்டை, மீனின் பொதுப்பெயர்**

ஏரலோடு, எருந்தே, ஊரல்,
கிளிஞ்சில் (ஆம்); இறவு, இருல் மீன்;
ஆரலே, ஆராலின் (பேர்);
கெண்டைமீன், சபரம், சேல் (ஆம்);

(ஊர்) கரு நந்து (ஆம்), நத்தை,
நாகும் (ஆம்); உருவே, அட்டை;
(நீருறும்) மயிலே, மற்சம்,
(நெடும்) புழல், மீன் பொதுப் (பேர்).
(3, 1, 1, 2, 2, 1, 3 பெயர்கள்) 75

**பல்லி, நாகர வண்டு, சிலம்பி, எறும்பு, நாங்கூழ், செல்**

புள்ளியே, கெவுளி, பல்லி,
(போற்றும்) கோகிலமும் (அப்பேர்);
நொள்ளை, நாகர வண்டின் பேர் ;
உலூதையே, (நோன்) சிலம்பி;
(ஒள்ளிய) பிலஞ்சுலோபம்,
பிபீலிகை, (ஊர்) எறும்பு (ஆம்);
(தெள்ளு) நாங்கூழ், பூ நாகம்;
சிதலையே, கறையான், செல்லே.
(3, 1,1, 2, 1, 2 பெயர்கள்) 76

**தேள், ஞெண்டு (நண்டு), உளு, தவளை**

நளிவிடம், தெறுக்கால், துட்டன்,
(நாட்டிய) விருச்சிகம், தேள்;
களவனே, குளிரம், நள்ளி,
கவைத் தாள், கர்க்கடகம், ஞெண்டே;
உளு, உசு(வாகும்) (என்ப);
(உற்ற) மண்டூகம், தேரை,
(தளர்) அரி, நுணலை, நீகம்,
தவளை (ஆம்), பேகமும் (பேர்).
(4, 5, 1, 6 பெயர்கள்) 77

**புழு, உலண்டு, கோற்றேன், தேன் கூடு**

கிருமியே, புழு, பொட்டும் (பேர்);
கீடம், கோல் புழு, உலண்டு (ஆம்);
பிரசம், கோல் தேன்; இறாலே,
(பேசிய) தேனின் கூடு (ஆம்);
(விரவிய விலங்கின் ஈட்டம்
விருத்தம் ஓர் எழுபத்தெட்டும்
வருமுறை உரைத்தான், வீரை
மன்னன் மண்டலவன்தானே).
(2, 2, 1, 1 பெயர்கள்) 78

**மூன்றாவது**
**விலங்கின் பெயர்த் தொகுதி முற்றிற்று**

## 4. மரப்பெயர்த் தொகுதி

### காப்பு

(திருக் கிளர் தேவர் கோமான்
ஏவலின் குபேரன் செய்த
விருப்புறு பொன்னெயிற்குள்
விளங்க எண் எழுத்து இரண்டும்
பரப்பிய ஆதி மூர்த்தி
பங்கயப் பாதம் போற்றி
மரப் பெயர்த் தொகுதி தன்னை
வருமுறை கூறலுற்றும்). 1

**ஐந் தருக்கள், சந்தன மரம்**

சந்தானம், (வேண்டிற்றெல்லாம்
தரும்) அரி சந்தனம், (பூ)
மந்தாரம், பாரிசாதம், கற்பகம்
(மற்று ஓர்) ஐந்து (ஆம்);
சந்து, ஆரம், சாந்து, சாந்தம்,
சந்திர திலகத்தோடு,
(வந்து ஏறு) படீரம், (பூசு)
மலயசம், சந்தனப் பேர்.
(5, 7 பெயர்கள்) 2

**கற்பகத் தருவிற் படர் கொடி, அகில், பாதிரி, மகிழ மரம்**

(மகிழும் அக்) கற்பகத்தில்
வளர்கொடி காமவல்லி;
அகருவே, காகதுண்டம்,
அகில் (என்ப), பூழிலும் (பேர்);
(பகரும்) புன்காலி(யோடு),
பாடலம், பாதிரிப் (பேர்);
வகுளமே, இலஞ்சி, (என்ப)
மகிழ் (ஆம்), கேசரமும் (ஆமே).
(1, 3, 2, 3 பெயர்கள்) 3

**கோங்கு, சண்பகம், புன்னை, சுரபுன்னை, நாரத்தை**

(மன்னிய) கோங்கின் (நாமம்),
(வரும்) துருமோற்பலம், (பூங்)
கன்னிகாரமும் (ஆம் என்ப);
சம்பகம், சண்பகப் (பேர்);
புன்னை புன்னுகம், நாகம்;
வாழை, சுரபுன்னைப் பேரே;
(நன்னிற) நரந்தம், நாரம்,
நாரங்கம், நாரத்தைப் பேர்.
(2, 1, 2, 1, 3 பெயர்கள்) 4

**குருக்கத்தி, சிறு சண்பகம், பித்திகை, மஞ்சாடி, மகர வாழை, வன மல்லிகை**

குருகு, நாகரி, வாசந்தி,
மாதவி, குருக்கத்திப் பேர்;
(தரு) சிறு சண்பகப் பேர்,
சாதி, மாலதியும் (ஆகும்);
கருமுகை, பித்திகைப்பேர்;
திலகம், மஞ்சாடி (காட்டும்);
மருகு(தான்), மகரவாழை;
வனமல்லிகைப் பேர், மௌவல்.
(4, 2, 1, 1, 1, 1 பெயர்கள்) 5

**மல்லிகை, காயா, வெட்சி, துளசி**

மல்லிகையே, பூருண்டி,
மாலதி அனங்கமும் (பேர்);

அல்லி, புன்காலி, காசை,
அஞ்சனி, பூவை, காயா;
குல்லையே, செச்சை, வெட்சி,
(கொந்து ஆர்) சிந்தூரமும் (பேர்);
குல்லை, (பூந்) துளவினோடு,
துளாய், வனம், துளசி (கூறும்).
(3, 5, 3, 4 பெயர்கள்) 6

**செருந்தி, அழிஞ்சில், குங்கும மரம், அனிச்ச மரம்**

செங்கோடு, பஞ்சரம் (தான்),
செருந்தியே (பொருந்தி நிற்கும்);
அங்கோலம், சே, அழிஞ்சில்,
சேமரம் (என்றும் ஆகும்);
(கொங்கு ஆரும்) துருக்கம் (என்ப),
குங்குமம், மரவமும் (பேர்);
(அம் கான) அனிச்சம் (தானே),
அருப்பலம், நறவம், சுள்ளி.
(2, 3, 2, 3 பெயர்கள்) 7

**அலரி, மருக் கொழுந்து, இருவேலி, இருவாட்சி**

கரவீரம், கவீரம், (மற்றைக்)
கணவீரம், அலரியின்பேர்;
(விரை மேவு) தமனகம் (தான்),
(மேவிய) மருக்கொழுந்தே;
இருவேலி, மூலகந்தம்,
வேரி, பீதகமும் (ஏற்கும்);
(மரு மேவும்) இருவாட்சிக்கு,
மயிலையும், அனங்கமும் (பேர்).
(3, 1, 3, 2 பெயர்கள்) 8

**தாழை, பட்டிகை, நந்தியாவர்த்தம், செவ்வரத்தம்**

முண்டகம், முடங்கல், கைதை,
முசலியே, மடியே, தாழை,
கண்டல், கேதகையும் (அப் பேர்);
பறிவை, பட்டிகையே (காட்டும்);
(வண்டு உளர்) வலம்புரிப் (பேர்),
நந்தியா வர்த்தம் (என்ப);
(விண்ட பூஞ்) செவ்வரத்தம்,
(மேவும்) மந்தாரம் (ஆமே).
(7, 1, 1, 1 பெயர்கள்) 9

**பனை, கூந்தற் பூகம், கமுகு, பாக்கு**

தாலமே, பெண்ணை, புல்லு,
தாளி, புற்பதி, பனைப் பேர்;
தாலமே, கூந்தற் பூகம்;
(தரு) கந்தி, பூகம், பூக்கம்,
(சால நீள்) கமுகு (முப் பேர்);
(சாற்றிடும்) துவர்க்காய், பாகு,
கோலம், (என்று இந்த) (மூன்றும்
குறித்த) பாக்கிற்கு (நாமம்).
(5, 1, 3, 3 பெயர்கள்) 10

**பலா, ஈரப் பலா, மாமரம், தேமா**

பனசமே, வருக்கை, பாகல்,
பலவு, (இவை) பலாவின் (பேரே);
(அனைய) ஈரப் பலாவே,
ஆசினி (என்பதாகும்);
(வினவிய) மாந்தி, சூதம்,
(மேவும்) ஆமிரமே, கொக்கே,
(சினை படு) மாழை, மா (ஆம்);
சேதாரம், தேமாவின் (பேர்);
(4, 1, 5, 1 பெயர்கள்) 11

**தெங்கு, பன்னாடை, வாழை, கரும்பு**

தாழை, தென், நாளிகேரம்,
இலாங்கலி (தாம்), தெங்கின்பேர்;
(சூழும்) நெய்யரி, பன்னாடை,
(சொல்லிய) நாரியும் (பேர்);
வாழையே, கதலி (ஆகும்),
(மற்று) அரம்பையும், (அதன் பேர்);
வேழமே, கன்னல், இக்கு,
(மென்)கழை, கரும்பு (நாற்பேர்).
(4, 2, 2, 4 பெயர்கள்) 12

**மூங்கில்**

காம்பு, பாதிரி, முடங்கல்,
கழை, பணை, விண்டு, நேமி,
தூம்பு, வேய், தட்டை, முந்தூழ்
துளை, கிளை, முளை(யே), வேணு,
ஆம்பல், கீசகம், வேல், வேரல்,
அரி, அமை, திகிரி, வேழம்,
(மேம்படு) வரை, (மூவெட்டும்)
மூங்கில் (ஆம்), வெதிரும் (அப்பேர்).
(25 பெயர்கள்) 13

**ஆலமரம், வெட்பாலை, குடைவேல், புன்கு**

வடம் (உடன்), நியக்குரோதம், பூதம்,
கான்மரம், (வான் ஓங்கிப்)
(படரும்) தொன்மரமே, கோளி,
பழுமரம், ஆலின் பேரே;
குடசம், வெட்பாலை (என்ப),
கிரி மல்லிகையுமே (கூறும்);
உடை (என்ப), குடைவேல் (ஆகும்);
(உறு) கரஞ்சகமே, புன்கு.
(7, 2, 1, 1 பெயர்கள்) 14

**அசோகு, அரசு**

(விரை செறி) செயலை, பிண்டி,
(மேவு) காகோளி, (மூன்றும்
அருகன் எம்மான் இருந்தே
அறம் பகர்) அசோகின் (பேர் ஆம்);
அரசின் (பேர்), சுவலை, குஞ்-
சராசனம், அச்சுவத்தம்,
திருமரம், பணையே, போதி,
கணவம்,பிப்பலமும் (செப்பும்).
(3, 8 பெயர்கள்) 15

**புளிய மரம், தேக்கு, கொன்றை, முள்முருங்கை**

சிந்திகம், ஆமிலம், சிந்-
    தூரமே, எகின், புளிப் (பேர்),
திந்திடீகமும் (அப் பேரே);
    தேக்கின் பேர், சாகம், சாதி;
(வந்து எழும்) இதழி, தாமம்,
    மதலேயே, கடுக்கை, கொன்றை;
(முந்து) கிஞ்சுகத்திஞேடு,
    கவிரும், முள்முருக்கின் (நாமம்).
(5, 2, 4, 2 பெயர்கள்) 16

**நாவல், குழி நாவல், வேம்பு, எலுமிச்சை**

சம்பு, நேரேடு, நாவல்;
    சாதேவம், குழி நாவல் (பேர்);
நிம்பமே, வேம்பின் (நாமம்),
    (நீள்) பிசுமர்த்தமும் (பேர்);
சம்பீரம், முருகிஞேடு,
    சதாபலம், எலுமிச்சைப் (பேர்),
(அம் புவி) இலிகுசத்தோடு,
    அருணம், சம்பளமும் (நாட்டும்).
(2, 1, 2, 6 பெயர்கள்) 17

**அத்தி, புளி மா, இலந்தை, இலந்தைக் கனி**

அதவுடன், உதும்பர(ம்)(ங்கள்),
    கோளியே, அதமே, அத்தி;
(இதமுறும்) மாழை, சிஞ்சம்,
    எகின், (மூன்றும்) புளிமாவின் (பேர்);
வதரி, கோற்கொடி, இலந்தை,
    (வளர்) கோலி, குவலியும் (பேர்);
(விதமுறு) கோலம், கோண்டை,
    (வினவில்) அக் கனியின் (பேரே).
(4, 3, 4, 2 பெயர்கள்) 18

**மாதுளே, தாது மாதுளே, பிரம்பு, ஆத்தி**

மாதுளம், மாதுளுங்கம்,
    கழுமுளே, மாதுளேப் (பேர்);
தாது மாதுளேயின் (நாமம்),
    தாடிமம் (என்றே சாற்றும்);
சாதி, வேத்திரமே, சூரல்,
    (சாற்றிய) பிரம்பு (முப் பேர்);
தாதகி, ஆத்தி, ஆரே,
    சல்லகி (எல்லாம் ஒன்றும்).
(3, 1, 3, 3 பெயர்கள்) 19

**தேற்று மரம், வாகை, வில்வம், பராய் மரம், கிலுகிலுப்பையின் பெயர், ஓடையின் பெயர்**

சில்லமே, இல்லம், தேற்று (ஆம்);
    சிரீடமே, பாண்டில், வாகை;
வில்லம், மாலூரமே, கூ-
    விளம், (இவை) வில்வப் (பேரே);
(புல்லிய) பசு நா, விட்டில்,
    புக்கு, (இவை) பராயின் (பேரே);
(பல் இணர்க்) கிலுகிலுப்பை,
    பகன்றை (ஆம்); உலவை, ஓடை.
(2, 2, 3, 3, 1, 1 பெயர்கள்) 20

**வாடாக் குறிஞ்சி, குறிஞ்சி, பேரீந்து, கோட்டம், மழை வண்ணக் குறிஞ்சி, நாயுருவி**

குரவகம் (என்ப), வாடாக்
    குறிஞ்சி (ஆம்); குரண்டகம் (தான்),
(பெருகிய) குறிஞ்சி (ஆகும்);
    பேரீந்தின், (பேர்) கர்ச்சூரம்;
குரவமே, கோட்டம் (என்ப);
    மழை வண்ணக் குறிஞ்சி, பாணம்;
(தரு) கரமஞ்சரிப் (பேர்),
    (சாற்று) நாயுருவி (ஆமே).
(1, 1, 1, 1, 1, 1 பெயர்கள்) 21

**முல்லே, களா, கருங்காலி, விளா, வெண் கடுகு**

தளவு, மாகதியே, மௌவல்,
    யூதிகை, முல்லே (சாற்றும்);
களவு (என்ப), களாவின் (நாமம்);
    கதிரமே, கருங்காலிப் (பேர்);
விளவொடு, கபித்தம், வெள்ளில்,
    விளா; கடிப் பகையிஞேடு,
(விளேயும்) ஐயவி, சித்தார்த்தம்,
    வெண் (சிறு) கடுகு (இம் முப் பேர்).
(4, 1, 1, 3, 3 பெயர்கள்) 22

**மருத மரம், வேங்கை மரம், முந்திரிகை, அதி மதுரம்**

மருது, பூதவத்திஞேடு,
    (மற்று) அருச்சுனமும் (ஏற்கும்);
(பெருகிய) கணியும்,
    பீதசாலமும், திமிசும், வேங்கை;
(திரு மிகு) மதுரசம், கோத்-
    தனியே, முந்திரிகை (ஆகும்);
(வரும்) அதிமதுரம், யட்டி,
    மதுகமே, அதிங்கம் (என்ப).
(2, 3, 2, 3 பெயர்கள்) 23

**செங்காந்தள், வெண்காந்தள், புனமுருக்கு, வன்னி, நுணு**

காந்தள், செங்காந்தள், பற்றை,
    இலாங்கலி, தோன்றி(யும் பேர்);
காந்துகம், கோடல், கோடை,
    (கருது) வெண்காந்தள் (ஆகும்);
(பூந் துணர்ப்) பலாசு (தானே),
    புனமுருக்கின் (பேர் என்ப);
(சாய்ந்து எழு) சமியே, வன்னி;
    நுணுவின் (பேர்), தணக்குத் (தானே).
(4, 3, 1, 1, 1 பெயர்கள்) 24

**குருந்தம், குமிழ், குன்றி, கடம்பு, வெண்ணெச்சி, சத்திக் கொடி**

குந்தமே, குருந்தம் (என்ப);
குமிழ், கூம்பல்; குஞ்சம், குன்றி;
இந்துளம், மரா, கதம்பம்,
(இயைந்த) நீபம், கடம்பு (ஆம்);
சிந்துவாரம், நீர்க்குண்டி,
(செப்பில்) வெண்ணொச்சி (ஆகும்);
(தந்த) சத்திக் கொடிப் (பேர்),
தாடி மஞ்சம் (தானுமே).
*(1, 1, 1, 4, 2, 1 பெயர்கள்)* 25

**கடுமரம், நெல்லி, தான்றி, திப்பலி, கொத்துமலி**

அரிதகி, பத்தியங்கள், கடுவே;
ஆமலகம், நெல்லி;
(கருதிய) தான்றி (தானே),
கலித்துருமம் (தானுகும்);
(பரவும்) மாகதி, காமன், திப்-
பலி (என்ப), கலினி(யும் பேர்);
உருளரிசிப் (பேர்); கொத்து
மலி (என உரைக்கலாமே).
*(2, 1, 1, 3, 1 பெயர்கள்)* 26

**கருவிளை, துரிஞ்சில், ஆடாதோடை, பருத்தி**

கன்னி, காக்கணம் (இரண்டும்)
கருவிளை, கிகிணியும் (பேர்);
முன்னமே, துரிஞ்சிலின் (பேர்),
(மொழிந்த) சீக்கிரியும் (ஆகும்);
(மன்னிய) ஆடாதோடை,
வாசை (என்று அறையலாமே);
பன்னல், கார்ப்பாசம், (இன்ன)
பருத்தியின் (பெருத்த நாமம்).
*(3, 2, 1, 2 பெயர்கள்)* 27

**இத்தி, ஆமணக்கு, இருப்பை, எட்டி**

இத்தியே, சுவி, இரத்தி,
இரத்திரி, இறலி (ஆகும்);
சித்திரகம், ஏரண்டம்,
(சிறந்த) ஆமணக்கின் (நாமம்);
(வைத்திடும்) இருப்பை (தானே),
மதுகம் (ஆம்), குலிகமும் (பேர்);
(கைத்த) கோடரமே, காளம்,
காஞ்சிரை, முட்டி, எட்டி.
*(4, 2, 2, 4 பெயர்கள்)* 28

**செங்கருங்காலி, ஆச்சாமரம், இலவம், வழுதலை**

செங்கருங்காலி (நாமம்),
சிறுமாரோடம் (தானுகும்);
(தங்கிய) சாலம், சுள்ளி,
மராமரம், ஆ(வே), ஆச்சா;
பொங்கர், சான்மலி(யினோடு),
பூரணி, இலவம் (முப் பேர்);
வங்கமே, வழுதலைப் (பேர்),
வழுதுணை (என்றும் ஆமே)
*(1, 4, 3, 2 பெயர்கள்)* 29

**கழற்கொடி, கழற்காய், கற்ருழை, புலிதொடக்கி, ஈகை, சிறுபூளை, ஊமத்தை**

கழலின் (நாமம்), கர்ச்சூரம்;
கழற்காயே, கழங்கு (மற்று),
முழலும் (ஆம்); கற்ருழைப் (பேர்),
(முதிர்விலாக்) குமரி, கன்னி;
(இழைவுறு) புலி தொடக்கி,
இண்டு (ஆம்); ஈகை, ஈங்கை;
உழிஞையே, சிறு பூளைப் (பேர்);
உன்மத்தம், ஊமத்தைப் (பேர்).
*(1, 2, 2, 1, 1, 1, 1 பெயர்கள்)* 30

**அகத்தி, எருக்கு, பச்சிலைமரம், சுண்டி, வறட்சுண்டி, சதுரக் கள்ளி**

அச்சமே, முனி, கரீரம்,
அகத்தி (ஆம்); எருக்கு, அருக்கம்;
பச்சிலைமரம், தமாலம்,
பசும்பிடி (என்றும் பேரே);
சுச்சுவே, சுண்டி (என்ப);
சமங்கையே, வறட்சுண்டிப் (பேர்);
வச்சிராங்கம், கண்டீர்வம்,
வச்சிரம், சதுரக்கள்ளி.
*(3, 1, 2, 1, 1, 3 பெயர்கள்)* 31

**மலைப் பச்சை, ஞாழல், சிறுகிரை, சேம்பு, வள்ளை, கொத்தான், நறுவிலி**

(பல் இணர்க்) குளவி (தானே),
மலைப் பச்சை; பலினி, ஞாழல்;
சில்லியே, மேகநாதம்,
சாகினி, சிறுகிரைப் (பேர்);
(சொல்லிய) சகுடம், சேம்பாம்;
(சூழ்ந்த) நாளிகமே, வள்ளை;
(நல்ல) நந்தைப் (பேர்), கொத்தான்;
நறுவிலி, அலி (என்ருமே).
*(1, 1, 3, 1, 1, 1, 1 பெயர்கள்)* 32

**சாறடை, கூதாளி, வெள்ளரி, கக்கரி, காஞ்சொறி, தாளி, சிவேதை**

திரிபுரி, சாறடைப் (பேர்);
(சிறந்த) கூதளம், கூதாளி;
(விரவிய) உருவாரம் (தான்),
வெள்ளரி (விளங்கும் நாமம்);
(கருது) கக்கரி, வாலுங்கி;
கண்டூதி, காஞ்சொறிப் (பேர்);
(பரவு) மஞ்சிகமே, தாளி;
பகன்றை (ஆம்), சிவேதை (தானே).
*(1, 1, 1, 1, 1, 1, 1 பெயர்கள்)* 33

**ஏலம், இசங்கு, பாகல், பாலை மரம்**

ஏலம் (ஆம்), துடி(யோடு), ஆஞ்சி
 (இரண்டுமே); இசங்கினுக்கு,
(கோலு) முத்தாபலம் (பேர்),
 குண்டலி (என்றும் ஆகும்);
கூலமே, காரவல்லி,
 (கூறிய) பாகலின் (பேர்);
பாலையின் (பேர்), சீவந்தி,
 சீவனி (என்றும் பன்னும்).
(2, 2, 2, 2 பெயர்கள்) 34

**கொவ்வை, பசிரி, தும்பை, சுரை, கொடிக்கொத்தான், முருங்கை, இலைக் கறி, பீர்க்கு, பெரும் பீர்க்கு**

விம்பமே, தொண்டை, கொவ்வை;
 பசிரி, பாவிரி; துரோணம்,
தும்பையே; அலாபு, (மற்றைச்)
 சுரை; நூழில், கொடிக் கொத்தான் (ஆம்);
(கொம்பர் சேர்) முருங்கையே,
 சிக்குரு; அடகு, இலைக்கறிப் (பேர்);
(பம்பிய) பீரம், பீர்க்கு (ஆம்);
 படலிகை, பெரும்பீர்க்கு (ஆமே).
(2, 1, 1, 1, 1, 1, 1, 1 பெயர்கள்) 35

**பாற் சொற்றி, சீந்திக் கொடி, கொடி, நாணல்**

(பரவு) பாற்சொற்றி (நாமம்),
 பாயசம் (என்று கூறும்);
(விரவிய) அமுதவல்லி,
 (மேய) சீவந்தி, சீந்தி;
(மருவிய) இலதை, வள்ளி,
 வல்லி, வண் கொடி (முப் பேராம்);
சரமொடு, காசை, காசம்
 (சாற்றிடு) நாணலின் (பேர்).
(1, 2, 3, 3 பெயர்கள்) 36

**வெற்றிலைக் கொடி, மிளகு**

(நறிய) தாம்பூல வல்லி,
 தாம்பூலி, நாகவல்லி,
(செறிதரும்) இலைக் கொடிப் (பேர்),
 திரையல், மெல்லிலை(யும்) (ஆகும்);
கறி(யொடு), மரீசம், காயம்,
 கலினை, கோளகம், திரங்கல்,
(செறிதரும்) மிளகின் (நாமம்),
 மிரியலும் (செப்பல் ஆமே).
(5, 7 பெயர்கள்) 37

**நெல், செந்நெல், பயிர், கதிர், இளஞ்சூல், இளங்கதிர்**

வரி, சொல்லு, விரீகி, சாலி,
 (வளர்) நெல் (ஆம்), யவமும் (ஆகும்);
(தெரியும்) நன்னெல்லினோடு,
 செஞ்சாலி, செந்நெல்லின் (பேர்);
(பரியும்) பைங்கூழ், பசும்புல்,
 பயிர்; கதிர், குரலோடு, ஏனல்;
(பெருகிய) இளஞ்சூல், பீட்டை;
 பீள், இளங் கதிரின் (பேரே).
(5, 2, 2, 2, 1, 1 பெயர்கள்) 38

**பதர், நெற்போர், தூற்றுத நெற்பொலி, கோதுமை, அரிசி, வைக்கோல், மலைநெல்**

(பழுதுறு) பதரின் (பேரே),
 பதடி (ஆம்); போரே, சும்மை;
(பொழியத்) தூற்றுத நெல்லின்
 பொலியே, பொங்கழி (என்று ஆகும்);
(தழுவு) கோதுமையே, கோதி;
 தண்டுலம், அரிசி (தானே);
வழுது, வை, பலாலம், வைக்கோல்;
 மலைநெல், ஐவனமே (வைக்கும்).
(1, 1, 1, 1, 1, 3, 1 பெயர்கள்) 39

**வேய் (மூங்கில்) அரிசி, குளநெல், கம்பு, தினை, பைந்தினை, கருந்தினை, தினைத்தாள்**

(தந்த) வேய் அரிசி, தோரை;
 குளநெல்லுத் (தான்), நீவாரம்;
செந்தினை, கவலை, கம்பு (ஆம்);
 தினையின் (பேர்), ஏனல் (என்ப;)
பைந்தினை (தானும்), ஏனல்;
 (பகர்ந்திடும்) கருந்தினைப் (பேர்),
(அந்தமாம்) இறடி, கங்கே;
 அருவியும், இருவியும், தாள்.
(1, 1, 2,1, 1, 2, 2 பெயர்கள்) 40

**துவரை, கடலை, அவரை, உழுந்து, பயறு, கொள், துவரை கடலை முதலியன, காராமணி**

துவரை, ஆடகமே (ஆம்);
 மஞ்சூரமே, கடலையின் (பேர்);
அவரை, சிக்கடியே, சிம்பை;
 (அழுந்திய) உழுந்து, மாடம்;
(கவர்தரு) பயறு, முற்கம்;
 காணமே, குலத்தம், கொள் (ஆம்);
இவை எலாம் முதிரை, கூலம்;
 இதை, காராமணியின் (நாமம்).
(1, 1, 2, 1, 1, 2, 2, 1 பெயர்கள்) 41

**சோளம், எள், எள்ளிளங்காய், இளையெள், வரகு**

(நண்ணிய) சொன்னல், சோளம்,
 (நாட்டிய) இறுங்கும் (ஆமே);
எண்ணெடு, திலமும், நூவும்,
 எள்; கவ்வை, இளங்காயின் (பேர்);
(பண்ணிய) குமிகை (தானே),
 (பயனுறும்) இளையெள் (ஆகும்);
(மண்ணிய) வரகின் (நாமம்),
 (மருவு) கோத்திரவம் (ஆமே).
(2, 3, 1, 1, 1 பெயர்கள்) 42

### தருப்பை, அறுகு, இளம்புல், மஞ்சள், இஞ்சி

குசை(யொடு), குமுதம், கூர்ச்சம்,
குசம், தர்ப்பை (என்று கூறும்);
(பசையுறு) பதமே, தூர்வை,
பச்சறுகு; இளம்புல், சட்பம்;
நிசி, அரிசனமே, பீதம்,
(நிகரில்) காஞ்சனியே, மஞ்சள்;
(நசையுறும்) இஞ்சி, அல்லம்,
நறுமருப்பு (என்றும் ஆமே).
*(4, 2, 1, 4, 2 பெயர்கள்)* *43*

### கருணைக் கிழங்கு, மரப் பொதுவின் பெயர்

கருணையின் (நாமம்), கந்தம்,
சூரணம் (என்றும் காட்டும்);
தரு, அகலியம், விருக்கம்,
தாவரம், விடபி, தாரு,
துருமமே, குசம் (என்று எட்டும்)
(சொல்லிய) மரப் பொதுப் பேர்,
(பரவு) பூருகமே, சாகி,
பாதபம் (என்றும் பன்னும்).
*(2, 11 பெயர்கள்)* *44*

### கிழங்கு, முளை, வேர், மரக் கொம்பு

மூலமே, சகுனம், கந்தம்,
மூலகம், கிழங்கின் (நாமம்);
காலொடு, அங்குரம், முளைப் (பேர்);
(கருது) தூர், சிவையே வேர் (ஆம்);
கோல், இபம், விடபம், கொம்பர்,
கோடரம், பொங்கர், சாகை,
(பால் அமர்) கவடு, தாரு,
பணை, சினை, உலவை, கொம்பு (ஆம்).
*(4, 2, 2, 12 பெயர்கள்)* *45*

### மர வயிரம், இலை, தழை, மரக் கன்று

கலை(யொடு), ஆசினியே, சேகு,
காழ்ப்பு, காழ், வயிரம் (ஆகும்);
தலம், அடை, தகடு, பன்னம்,
சதனம், பத்திரம், பலாசம்,
இலை, தமாலமும் (ஆம்); (மற்றும்)
(இதில்) தழை, உலவை (என்ப);
(புலன் உறு) குழவி, பிள்ளை,
போதகம், போத்து, கன்று (ஆம்).
*(5, 8, 1, 4 பெயர்கள்)* *46*

### இளங் கொம்பு, கப்பு, தளிர், குருத்து, தளிர்த்தல்

மெல்லியல், இளங்கொம்பின் (பேர்);
(மேவிய) கவரே, கப்பு (ஆம்);
வல்லரி, கிசலயம், (பூ)
மஞ்சரி, முறி, அலங்கல்,
பல்லவம், குழை, தளிர்ப் (பேர்);
(பகர்) குருத்தே, முருந்து;
(சொல்லுங்கால்) குழைத்தலோடே,
இலிர்த்தலும், தளிர்த்தலின் (பேர்).
*(1, 1, 7, 1, 2 பெயர்கள்)* *47*

### அரும்பு, பூ

முகை, நனை, கலிகை, போகில்,
முகுளமே, மொக்குள், மொட்டு,
(மகிழ்வுறு) கோரகங் (கள்),
(மற்றைச்) சாலகம், அரும்பு (ஆம்);
(தகை பெறு) குசுமம், போது,
தார், அலர், சுமனசம் (தான்),
(மிகு மண) மலரே, தாமம்,
வீ, இணர், துணர், பூவின் (பேர்).
*(9, 10 பெயர்கள்)* *48*

### பூங் கொத்து, பூந் தாது, பூந் தேன், தாதில் தூள்

தொத்து, மஞ்சரியினோடு,
துணர், இணர், குலை, (ஐந்தும்) பூங்
கொத்தின் (பேர்); மகரம், (செய்ய)
கொங்கு, கேசரம், பூந்தாது (ஆம்),
(வைத்திடும்) துணரும் (ஆகும்);
மகரந்தம், பூந்தேன் (என்ப);
(பைத்தெழும்) தாதில் தூளே,
பராகம் (ஆம்), பிரசமும் (பேர்).
*(5, 4, 1, 2 பெயர்கள்)* *49*

### மலர்தல், விரி மலர், பழம் பூ, பூவின் இதழ்

அலர்தலே, அவிழ்தல், விள்ளல்,
மலர்தல் (ஆம்), நெகிழ்தலும் (பேர்);
(இலகிய) விரி மலர்ப் (பேர்),
இக மலர், வெதிர், தொடர்ப் பூ;
(பலம் அறு) சாம்பல், செம்மல்,
பழம் பூ (ஆம்), தேம்பலும் (பேர்);
(புலனுறும்) ஏடு, தோடு,
தளம், மடல், பூ விதழ்ப் (பேர்).
*(4, 3, 3, 4 பெயர்கள்)* *50*

### அகவிதழ், புறவிதழ், காய், பழம், விதை

அல்லியே, அகவிதழ்ப் (பேர்);
(அறைந்திடும்) புறவிதழ்ப் பேர்,
புல்லியே; வடுவும், பிஞ்சும்,
(போற்றும்) தீவிளி(யும்), காய் (ஆம்);
(பல் இயல் கவிஞர் சொற்ற)
பழம், கனி, பலமும் (ஆகும்);
(மெல்லிய) பரலும், காழும்,
பீசமும், விதை, வித்தும் (பேர்).
*(1, 1, 3, 2, 4 பெயர்கள்)* *51*

### கொத்தின் பெயர், பலமிலா மரம், காய்த்திருந்த மரம், உலர்ந்த மரம், பூவாது காய்க்கும் மரம்

குலை, குச்சம், தாறு, சாறு,
குடும்பொடு, படுவும், கொத்து (ஆம்);

(மலர்) அவகேசி (தானே),
(வரு) பலமிலா மரப் (பேர்);
பலினம், காய்த்திருந்த தாரு;
(பகர்) உலர் மரமே வானம்;
(புலர்வு இலாக்) கோளியோடு,
வனபதி, பூவாக் காய்க்கும்.
(6, 1, 1, 1, 2 பெயர்கள்) 52

**விறகு, மரச் செறிவு, மரப் பொந்து, முள்**

இந்தனம், முருடு, கட்டை,
(இடு) கறல், சமிதை, காட்டம்,
(வெந்திடும்) ஞெகிழி (ஏழும்),
விறகு (என்ப), முளரியும் (பேர்);
(வந்த) கோடரம், பொதும்பர்,
மரச் செறிவு (ஆகும்); பொந்து,
(முந்து பேர்) பொள்ளல் (ஆகும்);
முள், கடு, கண்டகம்(மே).
(8, 2, 1, 2 பெயர்கள்) 53

**சோலை, ஊர் சூழ் சோலை**

துடவை, நந்தன வனம், பூந்-
தோட்டமே, அரி, உய்யானம்,
(கடி) பொழில், உத்தியானம்,
கா, மரச்செறிவு, ஆராமம்,
(நெடிய) தண்டலை(யினோடு),
(நீள்) உபவனமே, சோலை;
(வடிவுடை) ஊர் சூழ் சோலை,
வனம் (என வைக்கலாமே).
(12, 1 பெயர்கள்) 54

**காடு**

அடவி, கான், புறவம், பொச்சை,
ஆரணியம், காந்தாரம்,
கடம், வனம், முளரி, தில்லம்,
ககனம், கண்டகமே, தாவம்,
விடர், சுரம், பழுவம், கானல்,
விபினமே, கட்சி, கானம்,
கடறு, கானனமே, அத்தம்,
களரி, காடு (இருபானுற்பேர்).
(24 பெயர்கள்) 55

**பெருந்தூறு, சிறுதூறு, குறுங்காடு,**
**பெருங்காடு, காவற்காடு**

(நிறை தரு) தூறு, குன்மம்,
(நீள்) பஞ்சி, விடபமும் (பேர்);
அறல், இறல், பதுக்கை, (முப் பேர்)
(அறியலாம்) சிறிய தூறு;
குறிய காடு, இறும்பு (என்று ஆகும்);
(கூறிய) பெருங்கான், வல்லை;
(மறை) அரண், இளை, (இரண்டும்)
(வைத்த) காவற் காட்டின் (பேர்).
(3, 3, 1, 1, 2 பெயர்கள்) 56

**முதிர்காடு, கரிகாடு, வேலி, ஆண்மரம்,**
**பெண்மரம், அலி மரம்**

முதையலே, (இலை உதிர்ந்த)
முதிர் காட்டின் (நாமம் ஆகும்);
பொதி, கரிகாடு, பொச்சை
(பொருந்துமே); இளை, வேலிப் பேர்;
(அதிகம் மற்று) அகங்காழ்த்திட்டது,
ஆண் மரம்; புறக் காழ், பெண்ணும்;
(விதியுள் இவ்விரண்டும் இல்லா)
வெளிறு, அலி (யாகும் என்ப).
(1, 2, 1, 1, 1, 1 பெயர்கள்) 57

**தாமரை**

புண்டரீகத்தினோடு, அம்-
போருகம், குசேசயம், (பூ)
முண்டகம், அரவிந்தம்மே,
முளரி, பங்கயம், வாரீசம்,
இண்டை, அம்புயம், சரோசம்,
(எழில்) சதப த்திரி, (சூழ்ந்து)
(வண்டு உளர்) நளினம், கஞ்சம்,
வனசம், தாமரையின் (நாமம்). 58

**தாமரை, தாமரை மலர், தாமரைக் கொட்டை**

சலசமே, கமலம், (மற்றும்)
(சார்ந்த) கோகனதத்தோடு,
(தலம் உணும்) திருமால் உந்தி,
சரோருகம், பதுமமும் (பேர்);
மலரின் (பேர்), இறும்பு (வாகும்),
(மற்று) இராசீவமும் (பேர்);
(புலர்வு இல் பொன்னிறத்த) கொட்டை,
பொகுட்டே, கன்னிகை(யும்) (ஆகும்).
(21, 2, 2 பெயர்கள்) 59

**தாமரைச் சுருள், தாமரைக் காய், செங் கழுநீர்**

(விரித்திடும்) சுருளின் (நாமம்),
விசியொடு, வளையம் (ஆகும்);
(மருக் கிளர்) தாமரைக் காய்,
வராடகம் (என்ப நூலோர்);
அரத்த உற்பலமே, (வாசம்
அடர்ந்த) செங் குவளை, (கோலத்
திருக்கிளர்) கல்லாரங்கள்,
செங் கழு நீரின் (பேரே).
(2, 1, 2 பெயர்கள்) 60

**கருங்குவளை, கருநெய்தல், வெண்ணெய்தல்**

(கோலம் ஆர்) பானல், காவி,
குவலயம், (மணத்தை மொண்டு
காலத் தேன் உலவுகின்ற)
கருங் குவளைக்கு (நாமம்);
நீலம், இந்தீவரம் (தான்),
(நிகழ்) கருநெய்தல் (என்ப),

(கோல) உற்பலமும் (ஆகும்);
குமுதம், வெண்ணெய்தற் (பேரே).
(3, 1, 1 பெயர்கள்) 61

**அரக்காம்பல், வெள்ளாம்பல், திரள் கோரை, வாட்கோரை**

செங் குமுதம், செவ்வல்லி,
சேதாம்பல், அரக்காம்பல் (பேர்);
(வெங்கள்ளு நாறும்) அல்லி,
கைரவம், வெள்ளாம்பல் (பேர்);
(தங்கிய) திரள் கோரைப் (பேர்),
சாய், பஞ்சாய்க் கோரை (என்ப);
(அங்குள) செருந்தி (தானே),
(அடர்ந்த) வாட் கோரை (ஆமே).
(3, 2, 2, 1 பெயர்கள்) 62

**முள்ளியின் பெயர், முள்ளுடை மூலமெல்லாவற்றிற்கும் பெயர், பாசியின் பெயர், நீர்க் குளிரியின் பெயர்**

(ஒள்ளிய) கண்டல், முள்ளி,
(உரைத்த) முண்டகமே; (அன்றி)
முள்ளுடை மூலம் யாவும்,
முண்டகம் (என்றே சாற்றும்);
(தள்ளிய) நாரம், பாசி,
சைவலம், சடைச்சி(யும்) (பேர்);
(வள்ளிய) கல்லாரம் (தான்),
(மற்றை) நீர்க் குளிரி (ஆமே).
(2, 1, 3, 1 பெயர்கள்) 63

**மருந்து என்பன, வேல் தைத்த புண் மாற்று மருந்தின் பெயர், துணிபட்ட உறுப்பைப் பொருத்தும் மருந்தின் பெயர், விரணந் தீர்க்கும் மருந்தின் பெயர்**

வல்லியும், புல்லும், பூடும்,
மரம் முதல், மருந்து (என்று ஆகும்);
சல்லிய கரணி, (கூர்) வேல்
தைத்த புண் மாற்றும்; துண்டம்
புல்லிய செய்வ (தானே),
சந்தான கரணி (போலும்);
(மெல்லிய) விரணம் தீர்க்கும்,
சமனிய கரணி (வேறே). 64

**மூர்ச்சை தீர்த்துக் குற்றுயிர் தரும் மருந்து, மருந்தின் பொதுப் பெயர்**

(மறைவிலா) மிருத சஞ்சீவனி,
அமுது, (இரண்டும்)
(குறைவற) மூர்ச்சை தீர்த்தே
குற்றுயிர் தரும் மருந்து (ஆம்);
உறை(யொடு), குளியம், யோகம்,
(உறு) மருந்தின் பொதுப் (பேர்),
(அறையுங்கால் அந்தப் பேரே)
அதகமும் (ஆகும் என்ப).
(2, 4 பெயர்கள்) 65

**மாலை**

அலங்கலே, பிணையல், ஆரம்,
சிகழிகை, அணி, சுருக்கை,
இலம்பகம், தெரியல், சுக்கை,
(ஏற்ற) கத்திகையே, தாமம்,
(துலங்கிய) படலை, கண்ணி,
தொடை, தொங்கல், ஒலியல், கோதை,
(மலர்ந்த) தார் (இவை மூவாறும்)
மாலை, மஞ்சரியும் (அப் பேர்).
(19 பெயர்கள்) 66

**நுதல் அணியின் பெயர், வாசிகையின் பெயர், வாகை**

சூட்டுடன், இலம்பகங்கள்,
(சூழ்) நுதலணி (என்றாகும்);
(தீட்டு) வாசிகையின் (பேரே),
சிகழிகை, படலை (என்ப);
(ஈட்டிய) கல்வி, கேள்வி,
(இருங்)குடி, கொடை, படைக்குள்
வாட்டம் இல்லவரை வென்று
மௌலி சூட்டுவது, வாகை
(2, 2, 5 பெயர்கள்) 67

(பரப்பு நீர் உலகு தன்னில்
பாவலர் கிளைஞர் உற்ற
நிரப்பு அடும் குணபத்திரன்தான்
நித்தலும் போற்றி செய்து,
விருப்புறு விரத சீலன்
வீரை மண்டலவன் செய்தான்
மரப்பெயர்க்கு அறுபத்தெட்டு
மன்னிய கவிதைதானே) 68

**நான்காவது மரப்பெயர்த் தொகுதி முற்றிற்று**

## 5. இடப் பெயர்த் தொகுதி

**காப்பு**

(கடல் எழும் இரவி கோடி
கால் சீத்துப் பொடித்த தென்ன
மடல் அவிழ் கமல வூர்தி
வந்த வாமனையே போற்றி,
அடைவுள திணை, தேம், ஊர், வான்,
அகம், புறம், ஆதியாய
இடனுடைத்தாக வைத்த
இடப் பெயர்த் தொகுதி சொல்வாம்). 1

**மோக்கத்தின் பெயர்**

(கேடிலா) அபவருக்கம்,
கேவலத்தோடு, சித்தி,
வீடு, கைவல்லியம்மே,
மீளாத கதியே, (நூலோர்)

*(பாடு)* நிர்வாணத்தோடு,
பர கதி, சிவமே, முத்தி,
*(நீடும் ஈரைந்தும்)* மோக்கம்,
அமுதமும் *(நிகழ்த்தலாமே).*

*(11 பெயர்கள்)* 2

### தேவலோகம்

உயர்நிலை, உவணை, புத்தேள்
உலகு, பொன்னுலகு, தானம்,
வியன் உலகம், துறக்கம்,
மேல் உலகம், விமானம்
*(நயன் உறு)* சுவர்க்கம், கற்பம்,
நாகம், விண்ணுலகோடு, உம்பர்,
*(செயம் உறு)* தேவலோகம்;
*(சிறந்திடும் ஈரேழ் பேரே).*

*(14 பெயர்கள்)* 3

### நாகலோகம், விஞ்சையர் ஊர், நரகம்

*(பரவிய)* நாகலோகம்,
பவனம் *(ஆம்)*; சேடி, சேணி,
*(விரவு)* விஞ்சையர் ஊர்; *(மற்றும்)*
*(வீழ்)* அதோகதி, பாதாளம்,
நிரயமே, அளறே, தீயே,
*(நீள்)* சுவப்பிரமே, ஊழல்,
நரகு, இருள், பவர்க்கம், *(பத்தும்)*
நரகம் *(ஆம்)*, பூதியும் *(பேர்).*

*(1, 2, 11 பெயர்கள்)* 4

### திக்கு, கிழக்கு, தெற்கு

அரிதம், மாதிரம், விசும்போடு,
அம்பரம், உலகு, காட்டை,
*(கருதிய)* திசை, கோ, ஆசை,
ககுபமும், திகையும், திக்கு *(ஆம்)*;
*(பெருகு)* பூருவம், குணக்கே,
பிராசி, ஐந்திரி, கிழக்கு *(ஆம்)*;
*(தெரியும்)* யாமியம், அவாசி,
தக்கிணம், சிவேதை, தெற்கே.

*(11, 4, 4 பெயர்கள்)* 5

### மேற்கு, வடக்கு, நிலம்

குடக்கு, வாருணமே, மேக்கு,
*(குறித்த)* பச்சிமமே, மேற்கு *(ஆம்)*,
*(நடத்திய)* பிரத்தியக்கும்
*(மற்றதன் பேரே நாட்டும்)*;
வடக்கு, உதக்கு, உதீசி, *(என்ப)*,
*(மற்றை)* உத்தரமும் *(ஆகும்)*;
*(விடப்படாத்)* திணையே, மாவே,
வேலி, பூ, நிலம் *(நாற் பேரே).*

*(5, 3, 4 பெயர்கள்)* 6

### பூமி

அவனி, காசினி, சகத்தோடு,
அகலிடம், அகிலம், பாரி,
குவலயம், விபுலை, *(மற்றைக்)*
கோத்திரை, கோவே, கு*(வ்வே)*,
புவனி, மண்டலம், தலம், பூ,
பொழில், வசுந்தரை, *(உடன்)* பார்,
பவனம், தாரணி*(யினோடு)*,
படி, புவி, தரணி, வையம். 7

தாலமே, அசலை, நேமி,
வசுமதி, தாரை, தரித்திரி,
ஞாலம், தாத்திரி, அளக்கர்,
நாடு, பூதலம், கிடக்கை,
பாலமே, பூதிகங்கள்,
பார்த்திவம், பொறை, அனந்தை,
*(வேலை சூழ்)* மகி, *(ஆறேழும்)*
மேதினி, உலகும், பூமி.

*(44 பெயர்கள்)* 8

### நாட்டின் பெயர்

பாடி, மண்டலமே, சும்மை,
பைதிரம், உலகு, தேயம்,
*(நீடிய)* அகலுள், ஏணி,
நீவரம், கோட்டம், கண்டம்,
*(பீடுறு)* சனபதங்கள், *(பெரும்)*
பொழில், *(இவை) (பன்மூன்றும்)*
நாடு, தண்ணடையும் *(ஆகும்)*,
அழுவமும் *(நாட்டும் அப்பேர்).*

*(15 பெயர்கள்)* 9

### மலை

விலங்கலே, பொறை, வேதண்டம்,
விண்டு, மாதிரமே, வெற்பு,
சிலம்பு, கோத்திரம், அடுக்கல்,
சிலோச்சயம், சிமயம், பொங்கர்,
*(நலங் கொள்)* குத்திரம், பறம்பு,
நகம், குறும்பொறையே, நாகம்,
*(இலங்கிய)* வரையே, பொச்சை,
இறும்பு, கல்லகமே, ஓங்கல். 10

பொருப்பொடு, குவடு, கல்லு,
பொகுட்டு, ஓதி, திகிரி, குன்று,
பருப்பதம், சைலம், சாரல்,
பாதவம், பதலை, தாணு,
*(பெருத்த)* பூதரமே, சையம்,
பிறங்கல், அத்திரியே, பீலி
*(உருத் திகழ்)* கிரி, மலைப் *(பேர்)*
*(ஒன்றுடன் எண்ணைந்து என்ப).*

*(41 பெயர்கள்)* 11

### சிறு மலை, மலைப் பக்கம், மலையுச்சி

*(புடைபடும்)* இறும்பு, குன்று,
பொற்றையே, சிறுமலைப் பேர்,
*(படு)* குறும்பொறையே, பொச்சை,
பதலையும் *(அதன்பேர்)*; வாரம்,

தடமொடு, சாரல், சானு
(தகு) மலைப் பக்கம்; கோடு,
கொடுமுடி, சிகரம், கூடம்,
குவடு, (இவை) மலையின் உச்சி.
*(6, 4, 5 பெயர்கள்)* 12

**பொன்மலை, வெள்ளி மலை, பொதிய மலை**

(நிலைபெறும்) பொன்மலைப் (பேர்),
(நீள்) சுராலயமே, மேரு;
(விலை இல்) வெண்மலை, வேதண்டம்,
விசயார்த்தம், வெள்ளி வெற்பு (ஆம்);
மலையம், தென்மலையே, தென்றல்
வருமலை, சிமயம், (நான்கும்)
(புலமை சேர் கும்பயோனி)
பொதிய மா மலையின் (நாமம்).
*(2, 3, 4 பெயர்கள்)* 13

**துறு கல், கற் பாழி, மலைமுழை, அறை (பாறை), கீழறை, குகை, சிறுதிடர்**

பொறை, துறு கல் (என்றுகும்);
(புகலும்) கற் பாழி, காண்டை;
(முறைமையாம்) விவரத்தோடு,
முடுக்கர், கந்தரம், முழைப்பேர்;
அறை, முரஞ்சு (ஆம்); பிலம்,
கீழறை (என்ப); குகை, நிகுஞ்சம்;
சிறுகிய திடர், பதுக்கை,
திட்டையும் (இட்ட நாமம்).
*(1, 1, 3, 1, 1, 1, 2 பெயர்கள்)* 14

**கல், திரண்ட கல், பருக்கைக் கல், மேடு**

சிலையொடு, கன்னே, சையம்,
சிராவணம், உபலம், கல் (ஆம்);
உலம் (என்ப), திரண்ட கல் (பேர்);
(உறும்) பரல், பருக்கை (என்ப);
(துலை பெறு) திடறு, திட்டை,
சுவல், மெட்டு, குவாலே, குப்பை,
(குலவிய) திடரே, மேடு,
குவை (என்றும் இவையே கூறும்).
*(5, 1, 1, 8 பெயர்கள்)* 15

**கடல்**

பரவை, தெண் திரையே, சிந்து,
பௌவமே, பாராவாரம்,
நரலை, ஆர்கலியே, உந்தி,
நதி பதி, அம்பு ராசி,
குரவையே, சக்கரம், கார்-
கோள், வேலாவலயம், முந்நீர்,
அரி, மகராலயம், நீ-
ராழி, அம்பரமே, வேலை. 16

வாரிதி, அளக்கர், (நீண்ட)
வாரியே, உததி, ஓதம்,
வீரை, அன்னவமே, அத்தி,
வெள்ளம், சாகரமே, ஆழி,
(சாருறு) சலதி, உப்பு,
சல நிதி, சமுத்திரம், (சூழ்)
வாரணம், (இவை ஆறுறும்)
மறிகடல், உவரி(யும் பேர்).
*(37 பெயர்கள்)* 17

**கடற்கரை, திரை (அலை), நீர்க்கரை, வரம்பு**

(பாரிய) பாராவாரம்,
(பகர்) வேலை, கடற்கரைப் (பேர்);
(ஆரும்) சீகரம், கல்லோலம்,
அறல், தரங்கம், திரைப் (பேர்);
வாரமே, பாரம், கோடு,
வரை, அணை, தடமே, கூலம்,
தீரமே, நீர்க்கரைப் (பேர்);
(செறி) வரம்பிற்கும் (பேரே).
*(2, 4, 8, 8 பெயர்கள்)* 18

**அருவி, பேரருவி, மலைச்சாரலாறு, உவர்நீர், செய்கரை**

அருவியே, கழிமுகம்; பேர்
அருவிப் (பேர்), உவதை(யாகும்);
அருவியே, மலையின் சாரல்
ஆற்று (அபிதானம் என்ப);
(உரை செயில்) உவர் நீர் (தானே),
உறை (என்ப); குரம்பு (தான்), செய்
கரையின் (பேர்), குலையும், சேதும்
(காட்டுப மீட்டு அதற்கே).
*(1, 1, 1, 1, 3 பெயர்கள்)* 19

**யாறு, முல்லைக் கான் யாறு, கழிமுகம்**

உந்தியே, துறையே, (மற்றை)
ஒலியலே, குடிஞை, ஓணம்,
சிந்துவே, நதியே, (வீசும்
திரை) வரு புனலே, ஆறு (ஆம்),
(கந்தம் ஆர்) கலுழி, முல்லைக்
கான்யாறும்; கழிமுகப் (பேர்),
(முந்திய) கயவாய் (என்ப),
புகார், அதோமுகமும் (ஆமே).
*(8, 1, 3 பெயர்கள்)* 20

**கழி, கழிநிலம், உப்பளம், மணற்குன்று, உவர்த் தரை**

கழியின் (பேர்), முரம்பு, காயல்,
கானல், உப்பளம் (என்றுகும்);
கழிநிலம், உப்பளப்பேர்;
(காட்டும்) உப்பளமே, காயல்,
(அழிவிலா) உவளகத்தோடு,
அளக்கர் (ஆம்); புளினம், (என்ப)
(ஒழிவிலா) மணற்குன்றின் (பேர்);
உவர்த் தரை, இரிணம் (ஆமே).
*(4, 1, 3, 1, 1 பெயர்கள்)* 21

**காவேரி, பொருநை (தாமிரபர்ணி), கன்னி, கௌதமை, கோதாவரி**

பொன்னி, காவிரி, (இரண்டும்)
(பொருந்து) காவேரியின் (பேர்);
(பன்னிய) பொருநையின், (பேர்)
(பகர்ந்த தண்) பொருந்தம் (தானே);
கன்னியே, குமரி (என்ப);
கௌதமையின் (பேர்), கோதை;
(மின்னிய) விருத்த கங்கை,
விமலை, கோதாவரிப் (பேர்).
(2, 1, 1, 1, 2 பெயர்கள்) 22

**நீர் நிலை**

படுகரே, தாங்கல், கேணி,
பல்வலம், படுவே, பட்டம்,
மடு, உவளகமே, பண்ணை,
வாவியே, சுனையே, வட்டம்,
தடமொடு, கயம், பயம், (பூந்)
தடாகமே, குளமே, குட்டம்,
(அடைவுள) கிடங்கு, சூழி,
அலந்தையே, குண்டம், பங்கம் . 23

**நீர்நிலை, தெளிந்த நீர், யாற்றிடைக் குறை**

இலஞ்சி, கோட்டகமே, பொய்கை,
ஏல்வையே, ஓடை, ஏரி
(நிலந்தனில் குளிர்ந்த) நீரின்
நிலை (ஆறைந்தொன்று நீங்க);
(தலந்தனில்) தெளிந்த நீரைச்
சற்சலம் (என்றிசைப்பர்);
இலங்கையே, துருத்தி, ஆற்றின்
இடைக்குறை, அரங்கமும் (பேர்).
(29, 1, 3 பெயர்கள்) 24

**நீர்க் குமிழி, நுரை, நீர்ச் சுழி, வெள்ளம்**

நுரை, மொக்குள், பௌவத்தோடு,
(நொவ்விய) புற்புதங்கள்
(குரை கொள்) நீர்க்குமிழி (ஐந்தாம்),
கொப்புளும் (அப்பேர் தானே);
நுரையின் (பேர்), பேனம் (ஆகும்);
(நொய்ய) நீர்ச் சுழியே, உந்தி;
பிரளயம், வாரி, நீத்தம்,
பெருக்கு, ஓதம், ஓகம், வெள்ளம்.
(5, 1, 1, 6 பெயர்கள்) 25

**நிறை புனல், நீந்து புனல், கலங்கல் நீர், ஆழம்**

(மண்டிய) நிறை புனல் (பேர்),
வழாறொடு, பிராறும் (ஆகும்);
(மிண்டிய) அகாதம், நீந்தும்
வெம்புனல் (என்ப நூலோர்);
(கண்டிடும்) கலங்கல் நீரே,
கலுழி, ஆவிலமும் (ஆகும்);
குண்டு, அழுந்தொடு, கயங்கள்,
(கூறு) கம்பீரம், ஆழம்.
(2, 1, 2, 4 பெயர்கள்) 26

**நீரோட்டம், கிணறு, ஊறு புனல், ஊரிலுள்ளார் உண்ணும் நீர்**

கோலமே, (பெருகுகின்ற
கொழுந்து) நீரோட்டம் (என்ப);
(கோலிய) கிணறு, கூபம்,
கூவலே, அசும்பும் (கூறும்);
(மேலிடா) அஃகி ஊறும்
வெம்புனல், உறவி, ஊற்று (ஆம்);
(ஓலம் இட்டு) ஊரில் உள்ளார்
உண்பது, ஊருணி (என்று ஓதும்).
(1, 3, 3, 1 பெயர்கள்) 27

**சேறு, சேற்றிற் புள்ளி, அருவருத்த சேறு**

அள்ளல், சேதகமே, தோணி,
அளறுடன், அளக்கர், தொய்யல்,
கொள்ளமே, செதும்பு, பங்கம்,
குழையொடு, குழம்பு, காலாழ்,
(தெள்ளிய) அசறு, செய்யல்,
(ஈரேழும்) சேறு (ஆம்); சேற்றில்
புள்ளியே, குமிழ், பொகுட்டாம்;
நொதி, அருவருத்த சேறு.
(14, 2, 1 பெயர்கள்) 28

**பசும்புல் தரை, பாழ் நிலம், வெண் மணல், நுண் மணல், கரு மணல்**

(பரவு) சாட்டுவலம் (என்ப),
பசும்புல்லுத் தரையின் (பேரே);
(விரவிய) கரம்பு, பாழ் (ஆம்);
வாலுகம், வெண் மணல் (பேர்);
(மருவிய) அதரினோடே,
அயிரும், நுண் மணல் (ஆம்); (ஆற்றில்)
(கரைதனில் கொழித்த) நுண்மைக்
கருமணல், அறல் (என்று ஓதும்).
(1, 1, 1, 2, 1 பெயர்கள்) 29

**மலைசார்ந்த நிலம், வனம் சார்ந்த நிலம், நாடு சார்ந்த நிலம், கடல் சார்ந்த நிலம், படுநிலம்**

(கோடு சூழ்) மலையின் சாரல்,
குறிஞ்சி (ஆம்); வனம் சார், முல்லை;
நாடு சார், மருதம் (ஆகும்);
நற் கடல் சார்வு, நெய்தல்;
(நீடிய கொடுங்கோல் மன்னர்
நெடுங்குடைக் கீழ் வாழ்கின்ற
பாடு இலாக் குடிகள் போலப்)
படுநிலம், பாலை (ஆமே). 30

**விளை நிலம், சிறு செய்**

பழனமே, செறு, வரம்புள்,
பணை, பானல், கைதை, பண்ணை,

கழனியே, ஆலவாலம்,
(காட்டிய) தடி, புலம், செய்,
(விழைவுறு) வயலே, மாவே,
விளைநிலம் (ஈரேழ் பேராம்);
(குழைவுறு) பாத்தியோடு,
குண்டிலும், சிறுசெய் (கூறும்).
(14,2 பெயர்கள்) 31

**செந்நெல் விளையும் நிலம்,
எல்லாம் விளையும் நிலம், மருத நிலம்,
வரம்பு, வரம்பருகு**

செந்நெலே விளைவதான
(சிறப்புடை) நிலம், சலேயம்;
இன்னது என்னுமல் உண்டாம்,
உருவரை (என்ப தானே);
(மன்னிய) அகணி, பானல்,
வயல், பணை, மருதம் (நாற்பேர்);
(அந்நில) வரம்பு (தானே),
குரம்பு; (அதன்) அருகு, கங்கு.
(1, 1, 4, 1, 1 பெயர்கள்) 32

**முல்லைக்கும் குறிஞ்சிக்கும் பெயர், வன்பால்,
மென்பால், கருநிலம்**

புறவொடு, புறம்பணைப் (பேர்),
(புணர்) முல்லை குறிஞ்சிக்கும் (பேர்);
(பறையும்) வன்பால் குறிஞ்சி,
பாலையாம்; மருதம் (தானே),
(நிறையும்) மென்பால் (ஆம்); வெற்பில்
நீரினில் வெவ் வனத்தில்
கறைபடு மிகுதி தானே,
கருநிலம் (ஆகும் என்ப).
(2, 2,1 பெயர்கள்) 33

**ஊர்**

பாக்கமே, இருக்கை, பாழி,
பட்டினம், பள்ளி, முட்டம்,
பூக்கம், சம்வாகம், நொச்சி,
பூரியம், பாடி, பூண்டி,
(மாக் கிளர்) கோட்டம், வாழ்க்கை,
மடப்பமே, குடி, குடிக்காடு,
(ஆக்கமாம்) குறிச்சி, குப்பம்,
அருப்பமே, நத்தம், சம்மை. 34

**ஊர், நீரும் வயலும் சூழ்ந்த ஊர்**

அகரமே, புரமே, சேரி,
அகலுள், வைப்பு, உறையுள், வேலி,
நகரம், பக்கணம், கிராமம்,
(நவில்) கருவடம், குறும்பு,
(நிகர் இல்) வேசனமே, தாமம்,
நிவேசனம், பதியே, பேடு,
(பகர்) புரி, (எண்ணைந்து) ஊர்; நீர்
பண்ணை சூழ் ஊர், கிராமம்.
(40, 1 பெயர்கள்) 35

**சிறு கிராமம், பெருங் கிராமம், இராசதானி**

குடி நூறு பட இருந்தால்,
குறைவுள கிராமம் (ஆகும்);
(நெடியது) குடி ஐஞ்ஞூறு
நிறைந்தது, பெருங்கிராமம்;
(வடிவுடை) இராசதானி,
(மணி மதில் கோபுரங்கள்
புடைபடும் அகழால் சூழ்ந்த)
புரம், புரி, நகரமும் (பேர்).
(3 பெயர்கள்) 36

**மலை செறிந்த ஊர், மலையும் யாறும் சூழ்ந்த ஊர்,
ஐஞ்ஞூறு கிராமத்திற்குத் தலைமைக் கிராமம்,
பல தீவிற் பண்டம் விற்கும் ஊர்**

மலை செறிவதுவே, கேடம்;
மலையுடன் ஆறு சூழ் ஊர்,
(அலைவறு) கருவடங்(கள்);
ஐஞ்ஞூறு கிராமத்திற்கே
தலைமை பெற்றது, மடப்பம்;
(தாழ் கடல் தீரம் தன்னில்)
பலபல தீவில், பண்டம்
பகர்வ பட்டனம் (என்று ஆமே).
(1, 1, 1, 1 பெயர்கள்) 37

**நெல்லும் புல்லும் நிறைந்த மலையின் ஊர்,
கழியிருக்கை, சிற்றூர்.**

(மட்டறு) நெல்லும் புல்லும்
மத்தகம் தன்னில் ஏற்றுத்
(தட்டறு) மலையின் ஊரே,
சம்வாகம் (என்றும் சாற்றும்);
(தொட்ட) தோணுமுகம் (தான்),
(சூழ்) கழியிருக்கை (என்ப);
பட்டும், நொச்சியுமே, சிற்றூர்,
பள்ளியும் (அதன்பேர் பன்னும்).
(1, 1, 3 பெயர்கள்) 38

**குறிஞ்சி நிலத்து ஊர், முல்லை நிலத்து ஊர்,
நெய்தல் நிலத்து ஊர், பாலை நிலத்து ஊர்,
பாசறை**

குறிஞ்சி, சிற்றூரே, சீறூர்,
குறிஞ்சி நன்னிலத்தூர்ப் (பேர் ஆம்);
(பறித்திடு) முல்லையூரே, பாடி;
பட்டினமே, நெய்தல்;
(குறித்து எழு குறும்பர் ஊரே)
குறும்பு, பாலைக்கே (கூற்றும்).
(பறித்த) பாசறையே, தெவ்வர்-
முனைப் பதி, பாடி வீடு.
(3, 1, 1, 1, 2 பெயர்கள்) 39

**மருத நிலத்து ஊர்**

புரி, குடம், நகரம், பூக்கம்,
புரம், குடி, நிகாயம், பள்ளி,

சரணம், ஆவாசம், பாக்கம்,
தாவளம், நிகமம், தாமம்,
(பரவிய) நிலயம், கோட்டம்,
பதி, வாழ்க்கை, சேர்வு, பாழி,
மருத நன்னிலத்து ஊர், (ஈரைந்து
இரட்டியாம்) வசதியும் (பேர்).
(21 பெயர்கள்) 40

**கடாரம், காசி, சிங்களம், கருவூர், உறையூர், மதுரை, காஞ்சி, அவந்தி நகர்**

காழகம், கடாரம் (ஆம்);
வாராணசி, காசி (என்ப);
ஈழமே, சிங்களம்; (வீறு
எய்திய) கருவூர், வஞ்சி;
கோழியே, உறையூர்; (மாறன்)
கூடலே, மதுரை (ஆகும்);
(தாழ்விலாக்) காஞ்சி, கச்சி;
(சாற்றிடில்) அவந்தி, உஞ்சை.
(1, 1, 1, 1, 1, 1, 1, 1, 1 பெயர்கள்) 41

**மிதிலே, காவிரிப்பூம்பட்டினம், அயோத்தி, சிதம்பரம், திருவாரூர்**

மிதிலேயே, விதேகை (ஆம்); கா-
விரிப் பூம்பட்டினம், புகார் (ஆம்);
(விதமுறு) வினிதை, (கோலம்
மிக்க) கோசலே, சாகேதம்,
(நிதி வளர்) அயோத்தி (நாமம்);
(நிமலமாம்) புலியூர், தில்லே,
(கதிதரு) சிதம்பரப் (பேர்);
கமலேயே, திருவாரூர் (ஆம்).
(1, 1, 3, 2, 1 பெயர்கள்) 42

**மதில்**

(பெருகிய) கடகம், காப்பு,
பிராகாரம், நொச்சி, ஆரல்,
புரிசை, வேணகையே, வாரி,
(புகழ்) உவளகமே, இஞ்சி,
அரணமே, எயிலே, ஓதை,
(அரும்) சிறை, வேதி, சாலம்,
(மருவிய) அகப்பா, வேலி,
(அறு மூன்றும்) மதிலின் (நாமம்).
(18 பெயர்கள்) 43

**அகழ், மதிலுறுப்பு, மதிலுள் உயர்ந்த மேடை**

பரிகமே, கிடங்கு, கேணி,
பாம்புரி, உடுவே, ஓடை,
(விரவிய) அகழ் (ஆறே பேர்);
(மேவும்) எந்திரமே, கோசம்,
(மருவிய) நாஞ்சில், தோணி,
ஞாயில், (அம்) மதில் உறுப்பாம்;
பரிகமே, அகப்பா(வோடு),
பதணம், உள் உயர்ந்த மேடை.
(6, 5, 3 பெயர்கள்) 44

**நகர வாயில், நகர வாயிற் கதவில் விட்டுப் புகும் வழி, நகர வாயில் திண்ணே, நகர வாயிற் படிச் சுருள்**

(விரிந்த) கோபுரமே, கோட்டி,
(மிகும்) புர வாயிலின் (பேர்);
(பொருந்தும்) அக் கதவில் விட்டுப்
புகும் வழி, புதவு (தானே);
(திருந்தும்) அவ்வழிச் சார் திண்ணே,
அளிந்தம் (ஆம்); (சிறந்த) வாயில்
பரந்திடும் படிச்சுருட்குப்,
(பகர்) அத்தினகமே (நாமம்).
(2, 1, 1, 1 பெயர்கள்) 45

**அங்காடி, குதிரை வையாளி வீதி, வீதி அரசர் வீதி**

(கோது இல்) ஆவணம், அங்காடி,
கூலம், பீடிகை(யும்) (அப்பேர்);
(தீது இல்) வையாளி வீதி,
(திகழ்) செண்டு வெளி(யே என்ப),
(சாதியாம்) புரவி வட்டம்,
திருமுற்றம் (தானும் அப் பேர்);
வீதியின் (பேரே), ஔள்ளல்;
பூரியம், அரசர் வீதி.
(3, 3, 1, 1 பெயர்கள்) 46

**நெடுந்தெரு, குறுந்தெரு, கோணத்தெரு, முச்சந்தி**

நெடுந்தெரு, மன்றம், மார்க்கம்,
நிகமம், (இம் முப் பேர் செப்பும்);
(ஒடுங்கிய) குறுந்தெரு(க்கள்),
(ஓதிய) மறுகு (தானே);
(முடங்கிய) கோணந் (தன்னே),
முடுக்கு (எனல் அடுக்கும்; இப் பால்)
(அடங்கிய) முச் சந்திப் (பேர்),
அந்தி (என்று அறையலாமே).
(3, 1, 1, 1 பெயர்கள்) 47

**சந்து, நாற்சந்தி, சிரேணி, ஆயர்வீதி, சிற்பர் வீதி**

(தக்க) சந்து, (ஆம்) சதுக்கம்;
(தரும்) சிருங்காடகம் (தான்),
(ஒக்கும்) நாற்சந்தி (ஆகும்),
(ஓதிய) சதுக்கமும் (பேர்);
(திக்குறும்) வாடை, சேடி,
சிரேணி (ஆம்); ஆயர் வீதி,
(மிக்க) ஆபீனம் (ஆம்);
ஆவேசனம், சிற்பர் வீதி.
(1, 2, 2, 1, 1 பெயர்கள்) 48

**வேடர் வீதி, அம்பலம், சித்திர கூடம், அரசிருக்கை**

(பற்றிய) வேடர் வீதி,
பக்கணம் (ஆகும் என்ப);

(மற்றை) அம்பலமே, மன்றம்,
பொதி, பொது, சபையும் (ஆகும்);
தெற்றியம்பலம் (தான் ஒன்றே),
சித்திர கூட நாமம்;
(வெற்றி) அத்தாணி(யோடு),
வேத்தவை, அரசிருக்கை.
(1, 4, 1, 2 பெயர்கள்) 49

**அரசர் இல், தேவர் கோயில், அறச் சாலை, ஓதும் பள்ளி**

சாலை, மாளிகை, குலங்கள்,
(சாற்றிய) பவனம், கோயில்,
(மாலை வேல்) அரசர் இல் (பேர்);
மந்திரம், நிலையம், கோட்டம்,
ஆலயம், சினகரம், சேதிமம்,
தளி, தேவர் கோயில்;
சாலை (மற்று), அறத்தின் சாலை;
அறப்புறம், ஓதும் பள்ளி.
(5, 7, 1, 1 பெயர்கள்) 50

**ஓம மண்டபம், மன்னன் தேவி இல், வீடு, பண்ட சாலை**

(வனைதரு) சமித்தம், ஓம
மண்டபம்; மன்னன் தேவி
புனை இல்லம், கந்தவாரம்,
(போற்றும்) அந்தப்புரப் (பேர்);
மனை, இல்லம், புக்கில், மாடம்,
மந்திரம், வசதி, வீடு (ஆம்);
(புனை) கலன் இருக்கை (தானே),
(போற்றிய) பண்டசாலை.
(1, 2 , 6, 1 பெயர்கள்) 51

**வீட்டிறப்பு, முகடு, வேயுள், வேயா மாடம், முற்றம், கல்வி பயிலிடம்**

(விரவு) இறை, வீட்டிறப்பே,
வளவியும் (ஆம்); விடங்கம்,
(தரு) முகட்டின் (பேர்); வேயுள்,
வேய்தல் (ஆம்); (தகு) மண்ணீடு
(மருவிய), வேயா மாடம்;
அங்கணம், முன்றில், முற்றம்;
(கருது) கல்விக் களப் (பேர்),
கழகம், கல்லூரி (ஆமே).
(2, 1, 1, 1, 2, 2 பெயர்கள்) 52

**ஆயுதம் சூது கூத்துப் பயில் களம், வாயில், தாழ்வாரம், தூம்புவாய், சுவர், நிலாமுற்றம்**

ஆயுதம் சூது கூத்துப்
பயில் களம் அரங்கம் (என்ப);
வாயிலே, கடை, துவாரம்,
வாரி (ஆம்); சோபானம்(மே),
(தூய) தாழ்வாரம் (என்ப);
அங்கணம், தூம்புவாய் (ஆம்);
(ஆய) பித்திகை, சுவர்க்கு ஆம்;
அரமியம், நிலாமுற்றப் (பேர்).
(1, 3, 1, 1, 1, 1 பெயர்கள்) 53

**யானைக்கூடம், குதிரைப் பந்தி, பலகணி, கரந்த கற்படை**

ஆலயம், ஒளி, வாரி,
யானையின் கூடம் (ஆமே);
சாலை, மந்துரை (இரண்டும்),
வாசியின் பந்தி (தானே);
சாலகம், சாளரம், வாதாயனம்,
குறுங்கண், சாலம்,
காலதர், பலகணிப் (பேர்);
கரந்த கற்படை, சுருங்கை.
(3, 2, 6, 1 பெயர்கள்) 54

**கற்படுத்த நிலம், திண்ணை, சிற்றில், குடில், அடிச் சேரி, மடைப்பள்ளி**

குட்டிமம், படுத்த பூமி;
குறடு, வேதிகை, மண்ணீடு,
திட்டையே, திண்ணை; சிற்றில்,
கூரை (ஆம்); குடில், குரம்பை;
(தட்டு உறு) அடிச்சேரிப் (பேர்),
(தான்) அடிக் குடில் (என்று ஆமே);
அட்டிலே, பாகசாலை,
அடுக்களை, மடைப்பள்ளிப் (பேர்).
(1, 4, 1, 1, 1, 3 பெயர்கள்) 55

**அடுப்பு, ஓமகுண்டம், முனிவர் வாசம்**

(காழ் உறு) குமுதம், சுல்லி,
காமரம், அடுப்பு (முப் பேர்),
(தாழும்) உத்தானமும் (பேர்);
தடவொடு, வேள்விக் குண்டம்,
வேள்வியே, ஓம குண்டம்,
நித்தமும், வேதியும் (பேர்);
பாழி, தாபதம், கரண்டை,
பள்ளியே, முனிவர் வாசம்.
(4, 5, 4 பெயர்கள்) 56

**மட் கலம் சுடு சூளை, பண்ணும் கூடு, கூடு, குதிர்**

(மஞ்செனப் புகை சூழ்) சுள்ளை,
மட்கலம் சுடு சூளைப் (பேர்);
பஞ்சரம், பண்ணும் கூடு (ஆம்),
(பகர்) குலாயனமும் (அப்பேர்);
(குஞ்சு உறை) கட்சி, கூண்டு,
குடம்பையே, கூட்டின் (பேராம்);
(விஞ்சு நெல் முதலாம் பண்டம்
வீழ்) குதிர் , புகல் (என்று ஓதும்).
(1, 2, 3, 1 பெயர்கள்) 57

**மனிதர் துயிலிடம், விலங்கு துயிலிடம், யானை துயிலிடம்**

சட்டகம், பாயல், பள்ளி,
சயனமே, உறையுள், பாழி,
கட்சியே, அமளி, சேக்கை,
கண்படை, மனிதர் பாலாம்;
பட்டமே, போத்து, சேக்கை,
பண்ணையும், விலங்கின் பாலாம்;
(இட்ட) சேவகமே, தண்டம்
யானையின் துயிலிடப் (பேர்).
(10, 4, 2 பெயர்கள்) 58

**சுடலை, பிணம் வீழ் களம்**

சுடுகாடு, புறங்காட்டோடு, (தொடர்)
காளவனம், பிணக் காடு,
இடு காடு, பிதிர் வனத்தோடு,
ஈமமே, வனம், மயானம்,
படு காடு, சுடு நிலங்கள்
(பன்னொன்றும்) சுடலையின் (பேர்);
(கடிதாம்) செம்புலம், பிணம் வீழ்
களம், பறந்தலை(யும்) (ஆமே).
(11, 2 பெயர்கள்) 59

**பொரு களம், புற்று, ஒதுக்கிடம், ஏகாந்தம்**

(வெற்றி கொள்) களரியே, ஆகவ-
பூமி, விளாகமே, மொய்,
(செற்றிடும்) போர்க்களம், (வெஞ்)-
செருக்களம், பொருகளப் (பேர்);
புற்று, வன்மீகம் (என்ப);
(புகும்) ஒதுக்கிடமே, துச்சில்;
(உற்ற) வேறிடம், ஏகாந்தம்,
ஒருவந்தம் (என்றும் பேரே).
(6, 1, 1, 2 பெயர்கள்) 60

**பள்ளம், பழங்கொல்லை, புதுக் கொல்லை, உழவு**

இழிவு, கீழ், பயம்பு, தாழ்வே,
(ஏற்றிடும்) படுகர், ஞெள்ளல்,
குழி, உவளகம், கிழக்கு,
(கூறு) அவல், பள்ளம் (பத்தாம்);
பழையதாம் கொல்லைப் (பேரே),
(பகர்) முதைப் புனம் (ஆம் என்ப);
(விழைவுறு) புதிய கொல்லை,
இதைப் புனம்; உழவு, தொய்யல்.
(10, 1, 1, 1 பெயர்கள்) 61

**வழி**

வதி, சுரம், வட்டை, (நீண்ட)
வகுந்தொடு, வயவை, வாரி,
அதர், நெறி, செலவு, தாரி,
அயனமே, இடவை, மார்க்கம்,
பதவையே, அத்தம், செப்பம்,
பட்டமே, இயவை, பாதை,
(உதவிய) சரியே, தாரை,
ஒழுக்கமே, நடவை, ஆறு. 62

**வழி, அரு நெறி, கவர் வழி, யானை செல் வழி**

தெரு, வகிர், கிறி, (மூவொன்பான்)
(செப்பிய) வழியின் (பேரே);
அரு நெறிப் (பேர்), சுரத்தோடு,
அத்தமும், கடமும் (ஆகும்);
(கருதிய) கவலை (தானே),
கவர்ந்திடு வழிப் (பேர் என்ப);
(பெருமத) யானை செல்லும்
(பிற) வழி, தண்டம் (ஆமே).
(27, 3, 1, 1 பெயர்கள்) 63

**சிறு வழி, கற்படி, நீள்வழி, புது வரம்பின் வழி**

சிறுவழி, விடங்கர் (ஆகும்);
(சிறந்த) கற்படியின் (நாமம்),
(மறுவில்) சோபானமே,
ஆரோகணம் (தானும் அற்று ஆம்);
(நெறிபடும்) அளக்கர் (என்ப),
நீள் வழி (நாமம் தானே);
(உறுதி ஆம்) புது வரம்பின்
உறு வழி, மரிசி (என்ப).
(1, 2, 1, 1 பெயர்கள்) 64

**இடம்**

இடை, உழி, வழி, நிலம், பால்,
இல், உழை, உளி, கண், பக்கம்,
புடை, தலை, முதல், வளாகம்,
புலம், வலம், சூழல், பாங்கர்,
கடை, வயின், பட்டி, வைப்பு,
கால், களம், தேயம், பாடே,
இடம் (என்ப), முன், பின், சார், வாய்,
கீழ், மேலும் (அதுவே என்ப).
(32 பெயர்கள்) 65

**பக்கம், நடு**

பாங்கர், பாரிசம், மருங்கு,
பால், புடை, புறமே, பக்கம்,
ஞாங்கரும், சிறையும், மாடும்,
(நாட்டுப அதுவே மீட்டும்);
(நாம் கிளர்) நள்ளு, நாப்பண்,
நனந்தலை, பிரமம், மையம்,
(ஆங்குறும்) மத்தியத்தோடு,
(ஆகும்) நா, நடு (ஏழ் பேரே).
(9, 7 பெயர்கள்) 66

**இவ்விடம், இம்பர், எவ்விடம், யாங்கு, அவ்விடம், கூப்பிடு தூரம், யோசனை தூரம், காதம்**

ஈண்டே, இவ்விடம் (என் பேராம்);
இம்பரே, இவண் (எனும் சொல்);
யாண்டே, எவ்விடம் (என் பேராம்);
யாங்கு (என்ப), எவண் (எனும் சொல்);

ஆண்டே, அவ்விடம்), (என் பேர்தான்);
(ஆகும்) கூப்பிடு, குரோசம்;
(காண்டும்) யோசனை, புகை(ப் பேர்);
காவதம், காதம் (ஆமே).
(1, 1, 1, 1, 1, 1, 1, 1 பெயர்கள்) 67

**ஞாங்கர், முன்னர்**

முன்னெடு, மேலும், (மற்றும்)
(மொழியும்) (அஞ்)ஞாங்கர் (தானே);
முன்னரே, தலைத்தாள், (ஆகும்)
முதலொடு, புரமும் (அப்பேர்);
(அன்னது இவ்விடப் பேர்க்கு எட்டோடு
அறுபது விருத்தம் செய்தான்,
மன்னு சீர்க் குணபத்திரன் தாள்
வணங்கும் மண்டலவன்தானே).
(2, 3 பெயர்கள்) 68

**ஐந்தாவது**
**இடப் பெயர்த் தொகுதி முற்றிற்று**

## 6. பல்பொருட் பெயர்த் தொகுதி

**காப்பு**

(உலகு எலாம் இறைஞ்சி ஏத்த
உலகு எலாம் உணர்ந்த மூர்த்தி,
அலகிலா ஞான வாரி,
ஆறிரு குணங்களோடும்
இலகு மூ எயிலுள் யாளி,
எழில் அணை இருந்தோன் பாதம்
பலமுறை வணங்கி ஏத்தி,
பல்பொருட் பெயரும் சொல்வாம்). 1

**பொன்**

மாசை, பீதகமே, பீதம்,
மாடையே, மாடு, வேங்கை,
ஆசையே, சுவணம், காரம்,
அருத்தம், காஞ்சனமே, காணம்,
தேசிகம், கனகம், கைத்து,
செந்தாது, பொலமே, அத்தம்,
(பேசிய) சாமி, வித்தம்,
(பெரும்) தனம், உடலே, பண்டம். 2

இரணியம், நிதி, வெறுக்கை,
ஈகை, கல்யாண்ம், ஏமம்,
பொருள், உரை, சந்திரம், சாம்-
பூனதம், பூரி, ஈழம்,
திரவியம், சாதரூபம்,
செங்கொல்(லு), நிதான்ம், மாழை,
அரி, தபனியம், (ஆறேழும்)
(செம்) பொன், ஆடகமும் (ஆமே).
(43 பெயர்கள்) 3

**பஞ்சலோகம், ஏழ் உலோகம், நவமணி,**
**கடவுள் மணி, பொற் காசு**

(எதிர் இல்) பொன், வெள்ளி, செம்போடு,
இரும்பு, ஈயம், பஞ்சலோகம்;
(பொதி) கஞ்சம், தராவும், (கூட்டிப்
புகன்றிடின்) ஏழுலோகம்;
(கதிர்) நவமணியின் (பேரும்)
கடவுள் மா மணியின் (பேரும்)
நிதி, நிதானங்கள் (என்ப);
(நீண்ட) பொற்காசு, காணம்.
(5, 7, 1, 1, 1 பெயர்கள்) 4

**மணிப் பொது, தெய்வ மணிப் பொது,**
**மாணிக்கம், பதுமராகம்**

(கருதிய) மணிப் பொதுப் (பேர்),
காசொடு, மனவும் (ஆகும்);
அரதனம், சலாகை, தெய்வ
(அகன்) மணிப் பொதுப் (பேர் தானே);
(மருவு) செம்மணியே (மற்றை)
மாமணி, மாணிக்கப் (பேர்);
(பரவிய) பதுமராகம்,
கௌத்துபம் (என்று பன்னும்).
(2, 2, 2, 1 பெயர்கள்) 5

**வைடூரியம், நீலமணி, மரகதம்,**
**வைரம், முத்து**

(வரைவு அறு) வாலவாயம்,
வைடூரியத்தின் (நாமம்);
(நிரை பெறு) மணி (எனும் பேர்),
நீலமாமணியின் (பேரே);
மரகதம் அரியே, பச்சை;
வச்சிரம், வைரம்; ஆரம்,
தரளம், நித்திலமே, முத்து,
மௌத்திகம் (தானும் அப் பேர்).
(1, 1, 2, 1, 4 பெயர்கள்) 6

**பவளம், உலோகக் கட்டி**

துப்புடன், துவர், அரத்தம்,
துகிர், பிரவாளம், (ஐந்தும்)
(மெய்ப்படு) பவளம் (என்ப),
வித்துருமம் (தானும் பேர்);
(கைப்படு) தகணை, மாழை,
(காட்டும்) வங்காரம் (முப் பேர்),
(ஒப்பவே உருக்கிக் கூட்டும்)
உலோகத்தின் கட்டி (ஆமே).
(6, 3 பெயர்கள்) 7

**சங்க நிதி, பதும நிதி, பண்டாரம், உருக்கு**

சங்க நீள் நிதியத்தோடு,
தாமரை நிதியம் (தானே)
(அங்கண் மா ஞாலத்தே)
அவ் இரு உரு (ஆகும் என்ப);

(பொங்கிய) கோசம், தண்டம்,
(போற்று) பண்டாரம் (ஆகும்);
(தங்கிடும்) உருக்கின் (நாமம்),
எஃகு (எனச் சாற்றலாமே).
(2, 1 பெயர்கள்) 8

**வெள்ளி, காரீயம், செம்பு, இவற்றின் பொதுப் பெயர்**

(கருதிய) சுல்லு, தாரம்,
களதௌதம், வெண் பொன்னோடும்,
இரசதம், வெள்ளியின் (பேர்);
(ஏற்ற) காரீயம், நாகம்;
எருவையே, உதும்பரம்,
தாமிரமொடு, வடுவே, செம்பு (ஆம்);
(பொருவு அறு) சீருள், சிக்கம்,
இவைகளின் பொதுப் (பேர் ஆமே).
(5, 1, 4, 2 பெயர்கள்) 9

**ஈயம், பித்தளை, வெண்கலம், தரா, இரும்பு**

(திருந்திய) ஈயம், வங்கம்,
சீருளே, சீசமும் (பேர்);
(புரிந்த) பித்தளையே, மாயா-
புரி, ஆர கூடமும் (பேர்);
(கருங்) கஞ்சம், உறை(களே), வெண்-
கலம்; மதுகம், தரா (ஆம்);
கருங் கொல்லே, அயமே, (சொன்ன)
கரும்பொன்னும், இரும்பின் (நாமம்).
(3, 2, 2, 1, 3 பெயர்கள்) 10

**இரும்பு உள் வாங்கும் சலாகை, சந்திர கிரணத்தில் நீர் கால் சலாகை, சூரியன் ஒளியில் தீக் கால் சலாகை, காவிக் கல்**

(தொந்தமாய்) இரும்பு உள் வாங்கும்
சலாகை, சும்பகமே (என்ப);
சந்திர கிரணம் நீர் கால்
சலாகையே, சந்திர காந்தம்;
(வந்த) சூரியகாந்தம் (தான்),
(மற்று) அதன் ஒளி தீக் காலும்;
(நந்து) கைரிகமே, தாது,
(நற்) செங்கல், காவிக் கல்லே.
(1, 1, 1, 3 பெயர்கள்) 11

**பளிங்கு, பலகறை, பல பண்டம்**

(கண்ணிய) பளிங்கின் (நாமம்),
காழ், படிகம், பருக்கை;
(மண்ணிய) கவுடி, சோகி,
வராடியே, பலகறைப் (பேர்);
பண்ணியம், வளமே, கூலம்,
பண்டாரம், பண்ணிகாரம்,
(நண்ணிய) பலபண்டப் (பேர்),
நடைப் பரிகாரமும் (பேர்).
(3, 3, 6 பெயர்கள்) 12

**அரும் பண்டம், கருப்பூரம், கத்தூரி, நால்வகைச்சாந்து**

(விருப்பம் ஆம்) அரும் பண்டப் (பேர்),
(மேவிய) தாரம் (ஆகும்);
கருப்பூரம், பளிதத்தோடு,
கனசாரம், சசி (முப் பேரே);
(பிரித்த) மான்மதம், கத்தூரி;
பீதமே, கலவையோடு,
(பொருத்தும்) வட்டிகையும், (மற்றைப்)
புலி(யும்) நால்வகையிற் சாந்து.
(1, 3, 1, 4 பெயர்கள்) 13

**சாந்து, குங்குமம், மயிர்ச் சாந்து, கலவை**

கலவைச் சேறே, காலேக
வண்ணமே, களபமே, (மெய்
குலவிய) விரையே, சாந்து (ஆம்);
குங்குமப் (பேர்), செஞ் சாந்து (ஆம்);
(இலகிய) தகரம், ஏலம்,
காசறை, மயிர்ச் சாந்தின் (பேர்);
கலவையே, களபம் (என்ப),
கலம்பகம் (கண்டபேரே).
(4, 1, 3, 2 பெயர்கள்) 14

**செறிகுழம்பு, அப்பல், பூசுதல், மெய்ப் பூச்சு**

(உலப்பு இலாத்) தேய்வை, செச்சை,
செறி குழம்பு (உற்ற பேர்); (கைத்
தலத்தினின்) கொட்டல், அப்பல்
சாத்துதல், சதுர்த்தலும் (பேர்);
புலர்த்தலே, வரித்தல் (என்ப),
பூசுதலின் (பேர் தானே);
(அலைத்து) மெய்ப் பூசும் பூச்சின்
(அபிதானம்), அங்கராகம்.
(2, 3, 2, 1 பெயர்கள்) 15

**முலையினும் தோளினும் எழுது கோலம், திலகம், நெற்றிக் குறி.**

(இலகிய எழுது கோலால்)
(இளையவர்) முலையும் தோளும்
(நலம் மிக) எழுது கோலம்,
(நவின்றிடும்) தொய்யில் (என்ப);
திலகமே, சுடிகை, சுட்டி,
திலதமும் (அதன்பேர் செப்பும்);
திலகம், புண்டரங்கள் (என்ப),
(செறி) நெற்றிக் குறி(கள்) (ஆமே).
(1, 3 , 2 பெயர்கள்) 16

**சாதிலிங்கம், குங்குலியம், சிந்தூரம், பெருங்காயம், செம்பஞ்சு**

இங்குலிகம் (தான்), சாதி-
லிங்கம் (ஆம்), குலிகமும் (பேர்);
குங்குலியம் (தானே), குங்-
குலுவாம், குக்குலுவும் (அப்பேர்);

(செங் கதிர்க் கிரணம் போலும்)
சிந்தூரப் (பேர்), சேலேகம்;
இங்குவே, பெருங்காயப் (பேர்);
(எழில்) அலத்தகம், செம்பஞ்சு.
*(2, 2, 1, 1, 1 பெயர்கள்)* *17*

**அரக்கு, அரிதாரம், அக்கதம், பிரப்பு**

(பறை) அரக்கு, அரத்தம், துப்பு (ஆம்);
பழுப்பு (என்பது), அரிதாரப் (பேர்);
அறுகு வெள்ளரிசி கூட்டி
அணிவது, அக்கதம் (என்றாகும்);
குறுணி ஒவ்வொன்றதாகக்
கொள் கலம் பல்லுணுக்கள்
(பெருமுறை) பரப்பி வைப்ப,
பிரப்பு (எனப் பேசலாமே).
*(2, 1, 1, 1 பெயர்கள்)* *18*

**ஓம விறகு, நெருப்புறு விறகு, கரி, கடைக் கொள்ளி**

(வெந்திடும்) சமிதை, ஓம
விறகு (என் அறையலாகும்);
(நிந்தை செய்) ஞெகிழி, கொள்ளி,
நெருப்புறு விறகின் (பேரே);
கந்துளே, இருந்தை, நல்லம்,
கரி (என்ப); கடைக் கொள்ளிக்கு,
(முந்து பேர்) அலாதம், உற்கம்,
முளரியோடு, இராதம் (ஆமே).
*(1, 2, 3, 4 பெயர்கள்)* *19*

**சாம்பர், திருநீறு, சாணி, புழுதி, சுண்ணச் சாந்து**

அடலே, வெண்பலி, சாம்பர்ப் (பேர்)
(ஆம்); திரு நீறே, பற்பம்,
பொடியொடு, விபூதி, காப்பு (ஆம்);
புண்ணிய சாந்தம், சாணி;
பொடி, துகள், சுண்ணம், தூளி,
பூழியே, புழுதி (ஆகும்);
(சுடு) சுண்ணச் சாந்து, மண் (ஆம்),
சுதையொடு, களபமும், (பேர்).
*(2, 4, 1, 5, 3 பெயர்கள்)* *20*

**இலவம் பஞ்சு, பருத்திப் பஞ்சு, பஞ்சு, நூற்கும் பஞ்சின் தொடர் நுனி, பிசின்**

(நொய்யதோர்) இலவின் பஞ்சு,
(நுவன்ற பேர்) பூளை (தானே);
(பை எனும்) பருத்தி, பன்னல்,
பரியும் (ஆம்); தூலம், பஞ்சு (ஆம்);
(ஐய நுண்ணிடையார்) நூற்கும்
(அப்) பஞ்சின் தொடர் நுனிப் (பேர்),
துய் (எனும் நாமம் ஆகும்);
(தொடர்) பிசின், பயின் (ஒன்றே பேர்).
*(1, 2, 1, 1, 1 பெயர்கள்)* *21*

**சோறு**

அடிசில், போனகமே, மூரல்,
அமலையே, அயினி, பொம்மல்,
மடை, மிசை, உணா, புழுக்கல்,
வல்சி, பாளிதமே, அன்னம்,
(தொடு) பதம், மிதவை, பாத்து,
துற்று, உண்டி, சொன்றி, புன்கம்,
(ஒடு) சரு, அசனம், ஊண், கூழ்,
ஓதனம், புகாவே, சோறு (ஆம்).
*(26 பெயர்கள்)* *22*

**விண்ணோர் உணவு, பொதி சோறு, மிகு பொருள், எச்சில், பேருண்டி**

(மெச்சு) அமிழ்து, அவி(யினோடு),
பலி, சரு, விண்ணோர் ஊண் (ஆம்);
(அச்சம் இல்) பொதி சோறு (என்பது),
ஆற்றுணா, தோட்கோப்பும் (பேர்);
மிச்சிலோடு, எச்சம், சேடம்,
மிகு பொருள் (என்ப முப்பேர்);
உச்சிட்டம் (ஒன்றே), எச்சில்;
பிரப்பு, பேருண்டி (ஆமே).
*(4, 2, 3, 1, 1 பெயர்கள்)* *23*

**பாற் சோறு, பொரியல், பிட்டு, உக்காரி, வறையல், பிண்ணாக்கு**

(நிறைய நெய் பொதி) பாற்சோறு,
(நிகழ்த்து) பாயசம் (என்றாகும்);
(நறை இடும்) கருனை (தானே,
நாட்டிய) பொரியலின் (பேர்);
(அறைதரு) வெந்தை, பிட்டு (ஆம்);
அஃகுல்லி, உக்காரிப் (பேர்);
வறையலின் (பேரே), ஓச்சை;
மலாவகம், பிண்ணாக்கின் (பேர்).
*(1, 1, 1, 1, 1, 1 பெயர்கள்)* *24*

**மாவின் பெயர், அப்பவர்க்கம் (சிற்றுண்டி)**

(நொடிதரில்) அருப்பம், பிட்டம்,
நுவணையே, பிண்டி, மாப் (பேர்),
இடியும் (ஆம்); இலட்டுகத்தோடு,
(ஏற்ற) மோதகமே, தோசை,
அடை, நொலை, அபூபம், கஞ்சம்,
அண்டகை, அப்பவர்க்கம்;
இடையற நுகர்வோர் தங்கட்கு
இவைகள் சிற்றுண்டி (ஆமே).
*(5, 8, 8 பெயர்கள்)* *25*

**புளிங்கறி, கறி, கஞ்சி, குழம்பு, பால்**

(கூடிய) துவை (எனும் சொல்),
புளிங்கறி; (கூட்டமைத்து
நீடியே சமைப்பதாகும்)
நீடாணம், கறி(களின்) (பேர்);
காடியே, யவாகு, மோழை,
கஞ்சி; பாகே, குழம்பு (ஆம்);

*(பாடிலா) அமிழ்து, கீரம்,*
*பயசு, துத்தம், பயம், பால்.*
*(1, 1, 3, 1, 5 பெயர்கள்)* 26

**தயிர், மோர், வெண்ணெய், நெய்**

*ததி, தயிர், பெருகும் (ஆகும்);*
*தக்கிரம், காலசேயம்,*
*மதிதமோடு, அளே, அருப்பம்*
*மச்சிகை, முசரே, மோர்ப் (பேர்);*
*(விதம் உறு) ஐயங்கவீனம்,*
*நவநீதம், வெண்ணெய் (ஆம்); நெய்,*
*(இதம் உறு) கிருதம், நேயம்,*
*இழுது, ஆச்சியம், துப்பு (ஆமே).*
*(2, 7, 2, 5 பெயர்கள்)* 27

**கண்ட சர்க்கரை, சர்க்கரை, தேன்.**

*கண்டம், பாளிதங்கள் (என்ப),*
*கண்ட சர்க்கரையின் (நாமம்),*
*(கண்டதே) அயிரும், புல்ல-*
*கண்டமும் (அதற்கே கூற்றும்);*
*(விண்டு எழு) கட்டி, கன்னல்,*
*விசயமே, குளம், அக்காரம்,*
*(பிண்ட) சர்க்கரை (ஐந்தே பேர்);*
*பிரசம், தேன், மதுவும் (அப் பேர்).*
*(4, 5, 2 பெயர்கள்)* 28

**கள்**

*அரியல், பாடலி, தேன், மட்டே,*
*அரிட்டமே, சுண்டை, தொண்டி,*
*முருகு, சாயனமே, கௌவை,*
*முண்டகம், சாதி, சாலி,*
*பிரசம், மாதவமே, மேதை,*
*பிழி, சேறு, தணியல், மாரி,*
*சுரை, மது, சுமாலி, மாலி,*
*சுலோகியே, சொல் விளம்பி.* 29

**கள் (தொடர்ச்சி)**

*நறவொடு, ஆசவமே, தொப்பி,*
*நனே, இக்கு, ஞாளி, குந்தி,*
*வெறி, வெடி, சாறு, பானம்,*
*விகுணியே, சோபம், வேரி,*
*மறவி, தேம், சுவிகை, தேறல்,*
*மகரந்தம், மதிரை, ஆம்பல்,*
*(அறிவு அழி) படு, (ஆறெட்டும்)*
*கள்ளினுக்கு (அமைந்த பேரே).*
*(48 பெயர்கள்)* 30

**அமிழ்து, நஞ்சு, பானம், எண்ணெய்**

*(அரியதோர்) அமிழ்து (தானே),*
*அமரியே, சுதை, மருந்து (ஆம்);*
*கரளமே, ஆலம், காரி,*
*கடுவுடன், காளம், சிங்கி,*
*(விரவிய) ஆலகாலம்,*
*விடம் (எட்டும்), நஞ்சின் (பேரே);*
*பருகுதல், துவையே, பானம்;*
*(பகர்) நேயம், தைலம், எண்ணெய்.*
*(3, 8, 2, 2 பெயர்கள்)* 31

**உண்பன, தின்பன, இலை நுகர் விலங்குணு, பறவையொரு சார் விலங்கு ஊண்**

*(அலைவு அறு) துற்றி, உண்ப*
*(ஆம்); திற்றி, தின்ப (ஆகும்);*
*இலை நுகர் விலங்கு உணவே,*
*குளகு (என இயம்பல் ஆகும்);*
*(நலன் உறு) பறவையோடு*
*(நாட்டு) ஒரு சார் விலங்கின்*
*(உலகின்) ஊண், உண்டி, ஊட்டி,*
*உணவு, இரை, உறை(யும் ஆமே).*
*(1, 1, 1,5 பெயர்கள்)* 32

**துணைக்காரணம், இரண்டு என்னும் இலக்கம்**

*துப்புடன், ஏது (என்னும் சொல்),*
*துணைக் காரணப் (பேர்),*
*(ஒப்பவே) சாதனத்தோடு,*
*உபகரணமும் (ஆம் அப் பேர்);*
*(செப்பிய) யுகளத்தோடு,*
*(சேர்ந்திடும்) உபயம், (என்ப)*
*(அப்படி) இரண்டு (இலக்கத்து*
*அபிதானம் ஆகும் தானே).*
*(4, 2 பெயர்கள்)* 33

**கானல், சல்லி, நெல்மணி பலகறை மகிழ்விதை என்பவற்றின் பெயர், வரிசையின் பெயர்**

*(பணிவு உறு) கானல், வெண் தேர்,*
*(பாழ்த்த) பேய்த்தேரும் (ஆகும்);*
*துணி, அறை, தூக்குத் (தானே),*
*சல்லி (ஆம்); (சொல்லும்) நெல்லின்*
*மணி, பலகறையினோடு,*
*மகிழ்விதை, அலகு (என்றாகும்);*
*அணி, ஒழுங்கு, ஒளி, பந்தி,*
*நிரை, நிரல், வரிசை (ஆமே).*
*(2, 3, 1, 6 பெயர்கள்)* 34

*(மகர கேதனனை வென்ற*
*வாமற்கே தொழும்பு செய்வோன்,*
*இகல் இலாக் குணபத்திரன் தன்*
*இரு சரண் இதயம் வைத்தோன்,*
*மிகு புகழ் புனையா நின்ற*
*வீரை மண்டலவன் செய்தான்,*
*பகர்தரும் முப்பத்தைந்து*
*பல் பொருட் பெயர்க்குச் செய்யுள்).* 35

**ஆறாவது**
**பல்பொருட் பெயர்த் தொகுதி முற்றிற்று**

## 7. செயற்கை வடிவப் பெயர்த் தொகுதி

**காப்பு**

(முழுமதி முக்குடைக் கீழ்
மூர்த்திதாள் போற்றல் செய்தே
எழுவகை உலோகம் தன்னில்,
ஏற்ற மண், மரங்கள் தம்மில்,
பழுதுஅறு தோலின், நூலின்,
பற்பல விதங்களாக
வழு உறுது இடும் செயற்கை
வடிவப் பேர்த் தொகுதி சொல்வாம்). 1

**மழுப்படை, சக்கரத்தின் பெயர்**

பரசொடு, நவியம், தண்ணம்,
பாலமே, கணிச்சி, (என்ப)
(விரவிய) மழுப்படைப் (பேர்);
(மேவு) சக்கரப் பேர், நேமி,
பரிதியே, வலயம், எஃகம்,
(பகர்) சுதரிசனம், ஆழி,
(திரு மிகும்) ஒளிவட்டம்(மே),
திகிரி (ஆம்), வளையும் (அப் பேர்).
(5, 9 பெயர்கள்) 2

**வில், திருமாலின் வில், ஈசன் வில்**

தனுவொடு, சிந்துவாரம்,
தடி, சராசனம், கோதண்டம்,
(குனி) சிலை, துரோணம், சாபம்,
கொடுமரத்தோடு, வேணு,
முனி, தவர், சராரோபம், கார்முகம்,
(ஈரேழ் இவை) வில்லின் (பேர்);
(இனியதோர்) சார்ங்கம், மால் வில்;
ஈசன் வில், பினாகம் (ஆமே).
(14, 1, 1 பெயர்கள்) 3

**(வில்லின்) நாணி, அம்பு**

பூரியே, தொடையே, ஆவம்,
பூட்டே, சிஞ்சினி, நரம்பு,
நாரியே, வடம், குணம், (தான்)
நாணி (ஒன்பானே நாமம்);
(கூரிய) சரமே, வாளி,
(கொடுங்) கணை, பகழி, வண்டு,
(பாரிய) கதிரம், கங்க-
பத்திரம், அத்திரம், கோல் .
(9 பெயர்கள்) 4

**அம்பு (தொடர்ச்சி), அம்புக் கட்டு, குப்பி, குதை, மொட்டம்பு**

பாணம், ஆசுகமே, பூதை,
பத்திரி, விசிகம், புங்கம்,
தோணி, சாயகமே, பல்லம்,
தொடை, சிலீமுகம், ஏ, அம்பு (ஆம்);
(பூண் உறும்) அம்புக் கட்டு,
புதை; புழுகு (ஆகும்), குப்பி;
(கோண் இலாக்) குலையே, புங்கம்,
குதை; உதண், மொட்டம்பு (ஆமே).
(21, 1, 1, 2, 1 பெயர்கள்) 5

**அம்புக்கூடு, விற்குதை, அம்புச் சிறகு, அம்பு கட்டும் பாசம்**

ஆவமே, தூணி, ஆவ -
நாழிகை, அம்புக்கூடு (ஆம்);
(கோவை செய்) வில்லின் இட்ட
குதை (தானும்), குலை (என்று ஓதும்);
(மேவிய) உடுவே, ஈர்க்கில்,
விரவிய சிறகு (ஆம்); அம்பு
(பாவகமாகக்) கட்டும்
பாசம், பற்றுக்கை (ஆமே).
(3, 1, 2, 1 பெயர்கள்) 6

**வேலாயுதம், வச்சிராயுதம், அரிவாள்**

அயில், சத்தி, எஃகம், ஞாங்கர்,
உடம்பிடி, (ஐந்தும்) வேல் (ஆம்);
வயிரமே, குலிசம், சம்பம்,
வச்சிராயுதத்தின் (பேரே);
(சயம் உறும்) அசனி, (என்றும்)
சதகோடி (என்றும் சாற்றும்);
குயமொடு, புள்ளம், (மற்றைக்)
கொடுவாளே, அரிவாளின் (பேர்).
(5, 5, 3 பெயர்கள்) 7

**கழுக்கடை, கைவாள், சூலம், சுழல் படை, எழு**

கழுமுளே, கழுக்கடைப் (பேர்);
கைப் பிடி வாளே, கண்டம்;
கழுமுள், மூவிலைவேல், காளம்,
கழுவொடு, சத்தி, சூலம்;
சுழல் படை, வட்டம், பாரா-
வளை (எனச் சொல்லும்; இப்பால்)
எழு (என்ப), கணையத்தோடே,
பரிகமும் (என்னலாமே).
(1, 1, 5, 2, 2 பெயர்கள்) 8

**வாள், கூன் வாள்**

அசி, நவிர், ஏதி, நாட்டம்,
(ஆன) நாந்தகமே, கட்கம்,
வசி, மட்டாயுதம், தூவத்தி,
வஞ்சமே, உவணி, கோணம்,
(இசையும்) கண்டகம், வாள், வேணு,
கரவாளம் (என்றும் ஏற்கும்);
(நசை உறு) கோணம் (என்ப),
(நாட்டிய) கூன் வாள் (ஆமே).
(15, 1 பெயர்கள்) 9

**உடைவாள், பிண்டிபாலம், ஈட்டி, விட்டேறு, இருப்பு முள், நாராசம்**

(கொண்டு எழும்) உடைவாளின் (பேர்),
குறும்பிடி, சுரிகை (ஆகும்);
பிண்டி பாலத்தின் (நாமம்),
பீலித்தண்டு, எஃகமும் (பேர்);
(விண்டு அடர்) இட்டி, ஈட்டி;
விட்டேற்றின் (பேரே), கோல் (ஆம்);
(தண்டில்) தாறு, இருப்பு முள் (ஆம்);
சலாகை, நாராசம் (ஆமே).
*(2, 2,1, 1, 1, 1 பெயர்கள்)* 10

**சிறு சவளம், பெருஞ் சவளம், ஈர்வாள், தறிகை, உளி**

குந்தமே, (படையை வெல்லும்
கொடும்) சிறு சவளம் (என்ப);
குந்தம், தோமரம், (இரண்டும்)
(கொடும்) பெருஞ் சவளம் (ஆகும்);
(வந்த) வேதினமே, ஈரும்
வாள், கரபத்திரமும் (பேர்);
(உந்திய) தறிகை (தானே),
கணிச்சி (ஆம்); உளிக்கும் (பேரே).
*(1, 2, 2, 1, 1 பெயர்கள்)* 11

**கைவேல், கோடாலி, இலை மூக்கு அரி கத்தி, சுவர் அகழ் கருவி**

(கவி புகழ்) கைவேலின் (பேர்),
கப்பணம், தோமரம் (தான்);
நவியமே, மழு, கோடாலி,
(நாட்டிய) குடாரமும் (பேர்);
(குவி) இலை மூக்கு அரிந்த கத்தியே,
குளிர் (என்று ஓதும்);
சுவர் அகழ் கருவி, (நாமம்
சொன்ன பேர்) கன்னம் (ஆமே).
*(2, 3, 1, 1 பெயர்கள்)* 12

**தண்டு, கிளி கடி கருவி, குறுந்தடி, கவண்**

தடி, கதை, எறுழே, தண்டு (ஆம்);
தட்டையும், தழலும், கிள்ளை
கடி கருவிப் (பேர் ஆகும்);
குணில், குறுந்தடிப் (பேர் காட்டும்);
(கொடியது ஓர்) கவணின் (நாமம்),
குணிலொடு, கவணை(யோடே),
ஒடிசிலும், குளிரும் (என்றே
உரைத்திடல் ஆகும் என்ப).
*(3, 2 , 1, 4 பெயர்கள்)* 13

**அஞ்சனக்கோல், எழுதுகோல், ஊசி, ஊசித்துளை, எழுத்தாணி**

(ஏசு இல்) அஞ்சனக்கோல், கோல் (ஆம்);
தூலிகை, எழுதுகோலே;
சூசியே, ஊசி (என்ப);
(சொற்ற) ஊசித் துளைப் (பேர்),
பாசம் (ஆம்); ஓலை தீட்டும்
படை, கண்டத்துடனே, ஆணி,
ஊசியே, எழுத்தாணிப் (பேர்),
இலேகனி (என்றும் ஓதும்).
*(1, 1, 1, 1, 5 பெயர்கள்)* 14

**சங்கிலி, பற்றிரும்பு, கைவிடு படை, கைவிடாப் படை**

(தைத்திடும்) தொடர், துவக்கே,
இடங்கணி, சங்கிலிப் (பேர்);
(வைத்த) கற் பொறியே, அள்ளு,
(வலி பெறப்) பற்று இரும்பு (ஆம்);
அத்திரம் (என்பது அம்பே
ஆதியா) விடு படைப் (பேர்);
சத்திரம் (என்ப), (செங்)கைத்
தலம் விடாப் படையின் (நாமம்).
*(3, 2, 1, 1 பெயர்கள்)* 15

**ஆயுதப் பொதுப் பெயர், கூர்மை, படையுறை, நுனி**

படை, தானை, கழுமுளே, வேல்,
படைக்கலம், சுதனம், துப்பு,
(கடும்) ஏதி, கருவி, எஃகம்,
(கடியும்) ஆயுதப் பொதுப் (பேர்);
(அடைவாம்) வை, நிசிதம், பூ,
வள், அயில், வசி, (ஆறும்) கூர்மை;
தடறுடு, கருவிப் புட்டில்,
படையுறை; நுதி, நுனிப் (பேர்).
*(10, 6, 2, 1 பெயர்கள்)* 16

**கைக்கட்டி, தலைத்திராணம், கவசம்**

(கருதிய) கோதையே, கைக்-
கட்டி, கைப்புடை(யும் ஆகும்);
சிரகம், கீசகம், (இரண்டும்)
(செப்பிய) தலைத் திராணம்;
அரணம், சாலிகை, சடாரி,
ஆசு, கந்தளமே, கண்டம்,
பருமம், மெய்யுறையே, கச்சை,
பரம், (பத்தும்) கவசப் (பல் பேர்).
*(2, 2, 10 பெயர்கள்)* 17

**பலகை, தோற் பலகை, பரிசை**

சேடகம், கடகம், தட்டி,
(சேரும்) வேதிகையே, வட்டம்,
கேடகம், தோலினோடு,
கிடுகு, (எட்டும்) பலகையின் (பேர்);
(சூடும்) தோற் பலகை, தட்டு,
தோற்பரம், தோலும் (ஆகும்);
(நீடிய) பரிசையே, மா-
வட்டணம், நெடிய வட்டம்.
*(8, 3, 2 பெயர்கள்)* 18

**பிரம்பின் வட்டம், யானை முக படாம், யானைப் புரசை, யானை கழுத்திடு கயிறு, யானை மேல் தவிசு**

(நிலைபெறு) பிரம்பின் வட்டம்,
(நீள்) வள்ளித் தண்டை (ஆகும்);
(மலைவு இல்) மந்தனமே, சூழி,
(மத) யானை முகபடாப் (பேர்);
(கலைவிலாப்) புரசை, தூசு (ஆம்);
கழுத்திடு கயிறே, கச்சை;
இலகடம், பலகாரங்கள்,
யானை மேல் தவிசின் (நாமம்).
(1, 2, 1, 1, 2 பெயர்கள்) 19

**குதிரைக் கலணை, குதிரை அங்கவடி, குதிரைச் சம்மட்டி**

(பரியினில்) கலணையின் (பேர்),
(பகர்ந்திடின்). பரமும், பண்ணும்,
பருமமும், படையும் (பன்னும்),
பல்லணம் (தானும் ஆகும்);
(பரவிய) கச்சமோடு,
படி, அங்கவடியின் (பேரே);
(மருவு) சம்மட்டியே, கோல்,
(வாய்த்த) மத்திகையும் (அப் பேர்).
(5, 2, 2 பெயர்கள்) 20

**குதிரை வாயின் வடம், கடிவாளம், குதிரைக்கு அணி மயிர், விலங்கு**

(மறுவறு) குதிரை வாயின்
வடம், வடி கயிறு, வற்கம்;
கறுழொடு, கலியம், (கௌவும்)
கடிவாளம், கலினமும் (பேர்);
(நிறுவி மற்று) அதற்கு அணிந்த
நெடு மயிர், உளை (என்றேதும்);
(செறி) புனை, தளை, விலங்கு (ஆம்),
சிருங்கலை, நிகளமும் (பேர்).
(2, 3, 1, 4 பெயர்கள்) 21

**முடி, முடி மாலை, முடி உறுப்பு ஐந்து**

சுடிகை, சேகரம், கிரீடம்,
சூடிகை, மகுடம், மௌலி,
முடியின் (பேர் ஓர் ஆறு ஆகும்);
முடி மாலையே, கரோடி;
முடி உறுப்பு ஐந்தாம் தாமம்,
முகுடமே, பதுமத்தோடு,
(நெடிய) கோடகமே, (மற்றும்
நேர்ந்த) கிம்புரி (என்று ஆமே).
(6, 1, 5 பெயர்கள்) 22

**பதக்கம், வாகுவலயம், தோடு, குண்டலம், காதணி**

(அம் பொன்) ஆரம், பதக்கம்,
கண்டிகை, மதாணியும் (பேர்);
(செம்பொன்) அங்கதம், கேயூரம்,
(திகழ்) வாகு வலயத்தின் (பேர்);
(பம்பு) தாடங்கம், தோடு (ஆம்);
(பகர்) குழை, குண்டலப் (பேர்);
கம்பி, வல்லிகை, குணுக்கு,
கடிப்பிணை, காதணிப் (பேர்).
(3, 2, 1, 1, 4 பெயர்கள்) 23

**கங்கணம், கைவளை, பிள்ளைக் கைவளை, சுட்டி, பட்டம்**

(கருது) கங்கணத்தின் (நாமம்),
கடகமே, தொடியும் (ஆகும்);
சரி, தொடி, குருகு, வண்டு,
சங்கு, சூடகமே, கன்று,
(பெருகு) கைவளை (ஆம்;) பிள்ளைக்
கைவளை, பிடிகம் (என்ப);
(விரவிய) சுடிகை, சுட்டி;
(விட்டொளிர்) ஓடை, பட்டம்.
(2, 7, 1, 1, 1 பெயர்கள்) 24

**பாத கிங்கிணி, நூபுரம், காற்சரி, கைச்சரி, சிலம்பு, சதங்கை**

பரிபுரம், (என்ப தானே)
பாத கிங்கிணியின் (நாமம்);
(பெரிய) நூபுரம், சிலம்பின்
பேதமே (வேறொன்றில்லை);
பரியகம், காற்சரிப் (பேர்);
(பகர்ந்த) கைச்சரிக்கும் (பேரே);
அரவமே, சிலம்பின் (நாமம்)
(ஆம்); சிறுமணி, சதங்கை.
(1, 1, 1, 1, 1, 1 பெயர்கள்) 25

**பாடகம், ஓசை செய் தளை, பாதத்து அணியின் பொதுப் பெயர், ஆடவர் கொடை வீரத்தால் அணிவதன் பெயர்**

(நீடு) பாடகத்தின் (நாமம்),
(நெடும்) பாத கடகம் (என்ப);
(தேடிய) குடச்சூல், ஓசை
செய் தளை, ஞெகிழமும் (பேர்);
(பாடுறு) பாத சாலம்,
பதத்தணிப் பொதுப் (பேர் ஆகும்);
ஆடவர் கொடை, வீரத்தால்
அணிவது கழல் (என்று ஆமே).
(1, 2, 1, 1 பெயர்கள்) 26

**7 கோவை மணி, 8 கோவை மணி, 16 கோவை மணி, 18 கோவை மணி, 32 கோவை மணி**

ஏழு கோவைகளால் (சூழ்ந்த
எழில்) மணி, மேகலைப் (பேர்);
காழ் இரு நான்கே காஞ்சி;
கலாபம், ஈரெட்டுத் தாமம்;

(தாழும்) மூவாறு கோவை,
(சாற்றிய) பருமம் (என்ப);
(வீழும்) எண்ணுன்கு கோவை,
விரிசிகை (என்பதாமே).
(1, 1, 1, 1, 1 பெயர்கள்) 27

**சரிமணி, அரைப்பட்டிகை, அரை நாண், ஆபரணத் தொங்கல், செவி மலர்ப் பூ**

சரிமணி (நாமம் தானே),
(சாற்றிய) கலாபம், தோரை;
அரையினில் பட்டிகைப் (பேர்),
அத்தொடு, மனுவும் (என்பர்);
இரதனம், அரை நாணின் (பேர்);
(ஏற்றிடும்) தொங்கல், உத்தி;
(மருவிய) செவி மலர்ப் பூ,
(மன்னு) கன்னுவதஞ்சம்.
(2, 2, 1, 1, 1 பெயர்கள்) 28

**மோதிரம், மணிவடம், வயிரச் சங்கிலி, பூணு நூல்**

விரலணி, ஆழி, வீகம்,
இலச்சினை, மோதிரப் (பேர்);
சரமொடு, காழே, ஆரம்,
தாமமே, மணிவடப் (பேர்);
(மருவு) சங்கிலியே (என்ப),
வயிரச் சங்கிலியின் (நாமம்);
(உருவியல் மார்பில் இட்ட)
உபவீதம், பூணு நூலே.
(4, 4, 1, 1 பெயர்கள்) 29

**நுதலணி, தெய்வ உத்தி, தலைக் கோலம், தலைப் பாளை, கல் அழுத்தும் குழி வட்டம்**

இலம்பகம், புல்லகம், சூட்டு,
(இவை) நுதல் அணி (முப்பேரே);
(பொலம் புனை) திருவே, தெய்வ
உத்தி (ஆம்); பிஞ்ஞகம் (தான்),
(துலங்கிய) தலைக்கோலப் (பேர்);
தொய்யகம், தலைப்பாளைப் (பேர்);
(குலம் பெறு) கல் அழுத்தும்
குழி வட்டம், கேவணம் (தான்).
(3, 1, 1, 1, 1 பெயர்கள்) 30

**அணிகளின் கடைப்புணர்வு, பூண், ஆபரணம்**

அணிகளின் கடைப் புணர்ப்பே,
(அது) மடை, கயிலும் (ஆகும்);
(புணரும்) கோளகையே, தாங்கி,
வயிரம், கிம்புரி, பூண் (நாற்பேர்);
அணிகலன், வள்ளி, பூணே,
அணியொடு, கலமே, மஞ்சு,
பணி, இழை, பூடணங்கள்,
(பகரில்) ஆபரணம் (ஆமே).
(2, 4, 9 பெயர்கள்) 31

**உண்கலம், வட்டில், சிறு வட்டில், நாழிகை வட்டில், சட்டுவம்**

தட்டம், பாசனமே, தாலம்,
தளிகை, உண்கலத்தின் (பேரே);
வட்டிலே, சடகம், கோரம்,
வள்ளம் (ஆம்); சிறுவட்டில் (பேர்),
(கிட்டிய) கிண்ணம்; கன்னல்,
(கிளந்த) நாழிகை வட்டில் (பேர்);
சட்டுவம், சிலகம் (என்ப),
தவ்வியும், தருவியும் (பேர்).
(4, 3, 1, 1, 3 பெயர்கள்) 32

**கண்ணுடி, கலசப் பானை, படிக்கம்**

(விஞ்சு) தர்ப்பணமே, ஆடி,
(மிகும்) ஒளிவட்டம், (வேறு
வஞ்சியர் உருவம் காட்ட
வரும்) படிமக் கலம், (பொற்)
கஞ்சனம், முகுரம், அத்தம்,
புளகம், (எண்பேர்) கண்ணுடி;
கஞ்சனை, கலசப் பானை;
படியகம், படிக்கம் (காட்டும்).
(8, 1, 1 பெயர்கள்) 33

**நெய்த் துடுப்பு, தூபமுட்டி, தூபமணி, தாளம்**

(தொட்ட) நெய்த் துடுப்பினுக்கு,
சுருக்கொடு, சுருவம் (ஆம் பேர்);
(இட்டமாம்) தூப முட்டி,
இந்தளம், தடவும் (ஏற்கும்);
(மட்டு அமர்கின்ற) தூப-
மணியே, கைம் மணி (என்று ஆகும்);
கிட்டியே, பாண்டில், கஞ்சம்,
(கிணின் என்னும்) தாளம் (முப் பேர்).
(2, 2, 1, 3 பெயர்கள்) 34

**பெருமணி, கைம்மணி, எறி மணி, சின்னம், காளம்**

(அடிபடு) பெருமணிப் (பேர்),
(அறைந்திடும்) கண்டை (ஆகும்);
படலிகை, பரந்த வட்டம்,
கைம்மணி (பகர்ந்த பேரே);
(திடு திடு என்றிடத் தெழித்த)
சேகண்டி, எறிமணிப் (பேர்);
(கடுகிய) பீலி, சின்னம்;
காகளம், காளம் (ஆமே).
(1, 2, 1, 1, 1 பெயர்கள்) 35

**கொம்பு, பூண் கொள் கலம், பரணி, பெட்டி, பேழை**

கோடு, (உடன்) இரலை, ஆம்பல்,
கொம்பின் (பேர்), வயிரும் (கூறும்);
பீடிகை, துமானம், காண்டம்,
(பேணும்) கண்டிகை, கடிப்பம்,

கோடிகம், (இரு முப்பேர்) பூண்
கொள்கலம்; பரணி, கோயே;
(நீடு) மஞ்சிகமே, பெட்டி;
(நெடிய) மஞ்சிகையே, பேழை.
*(4, 6, 1, 1, 1 பெயர்கள்) 36*

**கமண்டலம், கெண்டி, வெண்குடை**

குண்டிகை, கரகம், (நீர் பெய்
கோலம் ஆர்) காண்டகங்(கள்),
(கண்ட நல்) கமண்டலப் (பேர்);
கடிப்பம், கோடிகமே, கெண்டி;
(கொண்ட) வெண்குடையின் (நாமம்),
குளிர், தொங்கல், கவிப்பு, பிச்சம்,
(தண்டு சேர்) கவிகை, ஆத-
பத்திரம், சத்தி, சத்திரம்.
*(3, 2, 8 பெயர்கள்) 37*

**பேரால வட்டம், சிற்றால வட்டம்**

ஆல வட்டத்தினோடும்,
(அடுத்திடும்) கால் செய் வட்டம்,
(மேலிடும்) உக்கம், தால-
விருந்தம், பேராலவட்டம்;
பீலி, வீசனம், சாந்தாற்றி,
(பெருகிய) விசிறி, (நான்கும்
சீலம் ஆம் காற்று வீசும்)
சிற்றால வட்டம் (தானே).
*(4, 4 பெயர்கள்) 38*

**இடக்கை, முழவு, படகம், கடிப்பு,**
**ஒரு கண் பறை, பேரிகை, சிறு பறை**

இடக்கையின் (பேர்), ஆமந்திரிகை,
(ஆம்); குளிர், முழா (ஆம்);
(படித்தெழு) பணவம், திண்டி,
ஆனகம், படகம் (முப்பேர்);
கடிப்பின் (பேர்), குணில் (ஆம்);
மொந்தை (தான்), ஒருகட் பறைப் (பேர்);
(அடித்த) பேரிகைப் (பேர்), நந்தி;
ஆகுளி, சிறுபறைப் (பேர்).
*(1, 1, 3, 1, 1, 1, 1 பெயர்கள்) 39*

**திமிலை, நிசாளம், பன்றிப் பறை,**
**ஒரு கண் பகுவாய்ப் பறை, கரடிப் பறை**

சல்லரி, திமிலை (என்ப);
தண்ணுமை, நிசாளம் (ஆகும்);
(பல் உள கொடிய) பன்றிப்
பறை, குடப் பறை (என்று ஆமே);
(கல்லெனும்) பகுவாய் ஆம் ஓர்
கண் பறை, பதலை (தானே);
(ஒல்லெனும்), கரடி (நாமம்
உறு) பறை, தட்டை (ஆமே).
*(1, 1, 1, 1, 1 பெயர்கள்) 40*

**குறிஞ்சிப்பறை, பாலைப் பறை, முல்லைப் பறை,**
**மருதப் பறை**

தொண்டகம், முருகியம், (போர்த்)
துடி, குறிஞ்சிப் பறைப் (பேர்);
(மிண்டிய) துடியே, பாலை
(வேடர்தம்) பறையின் (நாமம்);
(கொண்டு எழு) பம்பை, ஏறங்-
கோட் பறை, முல்லைக்கு (ஆகும்);
(கிண்டிய) மருதம் (உற்ற
கிளர்) பறை, கிணை (என்று ஆமே).
*(3, 1, 2, 1 பெயர்கள்) 41*

**நெய்தற் பறை, உவகைப் பறை, தண்ணுமை,**
**இடைசுருங்கு பறை, மார்ச்சனை**

(நிறுவு) சாப் பறையே (என்ப),
நெய்தலில் பறையின் (நாமம்);
(பெறும்) உவகைப் பறைக்குப்
(பேரே), தூரியம் (என்று ஓதும்);
(உறுமிய) தண்ணுமைப் (பேர்),
உடுக்கை (ஆம்); இடை சுருங்கு
பறையின் (பேர்), துடி; (மருங்கின்)
மார்ச்சனை, (பகரின்) மண் (ஆம்).
*(1, 1, 1, 1, 1 பெயர்கள்) 42*

**வாத்தியப் பொது**

தூரியம், முழவு, திண்டி,
துந்துபி, முருடு, தக்கை,
பேரியே, தகுணிச்சம், (போர்ப்)
பீலியே, தடாரி, பம்பை,
(வீரிய) முரசு, தண்ணம்,
(மேவு) கோடணை, இயங்கள்,
(வாரியின் அதிர்) சகண்டை,
வாச்சியப் பொது (ஈரெண்பேர்).
*(16 பெயர்கள்) 43*

**தேர், தேருருள்**

இரதமே, கொடிஞ்சி(யோடும்),
இயந்திரம், குயவு, வையம்,
அரியொடு, கூவிரம், தேர்
(ஆம்), சயந்தனமும் (அப்பேர்);
பரிதியே, சில்லி, ஆழி,
(பாரிய) காலே, நேமி,
உருளுடன், உருளி, தேரின்
உருள் (என்ப), உந்தியும் (பேர்).
*(8, 8 பெயர்கள்) 44*

**தேரின் அகத்தில் செறி கதிர், தேர் நடு,**
**தேர்ப் பலகைப் பா, தேர்க் கொடிஞ்சி,**
**தேர் மொட்டு, தேர் மரச் சுற்று.**

ஆர் (எனும் நாமம்), தேரின்
அகத்தினுள் செறி கதிர்ப் (பேர்);

தேர் நடுப் (பேரே), தட்டு,
(செப்பிய) நாப்பணும் (பேர்);
(சார்) பலகைப் பா, பார் (ஆம்);
(சார்ந்த) கூவிரம், கொடிஞ்சி;
தேர்மொட்டு, கூம்பு; தேரின்
மரச்சுற்று, கிடுகு (தானே).
(1, 2, 1, 1, 1, 1 பெயர்கள்) 45

**பரி இழுக்கும் ஊர்தி, பண்டி, பண்டி உள்ளிரும்பு**

பாண்டில், கஞ்சிகை, வையம், (போர்ப்)
பரிகள் பூண்டு ஈர்க்கும் ஊர்தி;
(தாண்டிய) சகடு, வையம்,
சாகாடே, ஒழுகை, சாடு,
(தூண்டிய) உருளிஜேடு,
சகடமும், (சொல்லும்) பண்டி;
(ஈண்டிய) பண்டி உள்ளின்
இரும்பு, கந்து, இருசும் (ஆமே).
(3, 7, 2 பெயர்கள்) 46

**முத்துச் சிவிகை, சிவிகை, இராசவாகனம்**

(விஞ்சிய) முத்தின் ஊர்தி,
(வெண்) முத்தின் சிவிகை (தானே);
(தஞ்சம் ஆம்) சிவிகை, வையம்,
தண்டிகை, அனிகம், யானம்;
கஞ்சிகை, மணிக்காற்பள்ளி,
(என்பன கதிர்வேல் மன்னர்
எஞ்சல் இல் சிறப்பின் ஏறும்)
இராச வாகனமது (ஆமே).
(1, 4, 2 பெயர்கள்) 47

**கலப்பை, தூண், யானைத் தூண், வேள்வித் தூண், குறுந்தறி**

அலம், உழுபடை, தொடுப்போடு,
ஆலமே, படைவாள், நாஞ்சில்,
கலனையே, கலப்பை (ஏழ்பேர்);
கந்து, (எழு) மதலை, தம்பம்,
(நிலைபெறு) தறி, கால், தாணு,
(நெடுந்) தூணும்; வெளில், யானைத்தூண்;
(புலை இல்) வேள்வித் தூண், யூபம்;
போதிகை, குறுந்தறிப் (பேர்).
(7, 6, 1, 1, 1 பெயர்கள்) 48

**கதவு, தாழ், யானைத் தோட்டி**

கதவின் (பேர்), அரரி, வாரி,
காப்பொடு, கவாடம், தோட்டி,
புதவும் (ஆம்); காழும், சீப்பும்,
(போற்றிய) கடிகையும், தாழ்;
(மதம் உறும்) யானை (தன்னை
வணக்கும்) அங்குசமே, தோட்டி,
(விதம் உறு) கோணம் (என்றும்
விளம்புவர் அளந்த நூலோர்).
(6, 3, 2 பெயர்கள்) 49

**அடைகுறடு, உலையாணிக் கோல், பெருங் குறடு, சம்மட்டி, கொழு**

பட்டடை, அடைகுறட்டின்
(பாலதாம்); உலையாணிக் கோல்,
சுட்டுக் கோல் (என்று நாமம்
சொல்லுப நல்ல நூலோர்);
(முட்டிய) பெருங் குறட்டை,
முருடு (என மொழிப; ஓங்கிக்
கொட்டும்) சம்மட்டி, கூடம்;
கோள், கொழு (என்று கூறும்).
(1, 1, 1, 1, 1 பெயர்கள்) 50

**மரக்கலம், மரக்கலத்தின் பாய்**

பாதையே, வங்கம், தோணி,
பாரதி, பஃறி, அம்பி,
போதமே, மதலை, யானம்,
புணை, சதா, நௌ(வே,) நாவாய்,
(பேதம் இல்) பாறு, தொள்ளை,
(பேணுறும்) மரக்கலப் (பேர்);
(வாதை தீர்) மரக்கலப் பாய்,
இதை (என வழங்கல் ஆமே).
(15, 1 பெயர்கள்) 51

**ஓடம், தோணி, தெப்பம், விசி, கட்டில்**

பகடு, அம்பி, பஃறி, ஓடம்;
(பகர் பெயர்) திமிலே, தோணி;
பகடு, பட்டிகையே, அம்பி,
படுவையே, புணையே, தெப்பம்,
(மிகைபடு) மிதவையும் (பேர்);
விசியின் (பேர்), அரி (என்று ஆகும்);
(பகர்தரு) பாரி, மஞ்சம்,
பரியங்கம், பாண்டில், கட்டில்.
(3, 1, 6, 1, 4 பெயர்கள்) 52

**தவத்தோர் பீடம், சிங்காதனம், உரல், உலக்கை**

விட்டரம், தவத்தோர் பீடம்,
(விளங்கும்) பீடிகையும் (அப்பேர்);
(இட்ட) சிங்காதனம், பத்-
திராசனம் (என்பது ஆமே);
திட்டையே, கறையே, (மற்றுச்
செப்பிய) உலூகலம் (தான்),
(முட்டிய) உரலின் (முப் பேர்);
முசலமே, தடி, உலக்கை.
(2, 1, 3, 2 பெயர்கள்) 53

**உறி, ஊஞ்சல், ஏணி, கண்ணேணி, மரக்கால்**

உறி, சிதர், சிக்கம், தூக்கோடு,
(ஓதிய) சிமிலி (நாற்பேர்);
(நிறுவிய) உஞ்சல், ஊசல்,
(நீண்ட) விண்டாண்டும் (அப் பேர்);

இறைவையே, சேணி, ஏணி;
மால்பு, கண்ணேணியின் (பேர்);
(குறைவில்) அம்பணம், தூம்போடு,
குளகம், கச்சமும், மரக்கால்.
*(4, 2, 2, 1, 4 பெயர்கள்)* 54

**நாழி, கொந்தளிப்பாய், புற்பாய், பிரப்பம்பாய், தோற்பாய், தடுக்கு, குழாய், பூந்தட்டு, பூப்பெட்டி**

(விரவிய) குஞ்சம், நாழி;
(விரிந்த) கொந்தளிப்பாய், ஆரை;
(பெருகிய) சாப்பை, புற்பாய்;
பிரப்பம்பாய், சாதிப்பாய் (ஆம்);
சருமம், தோற்பாய்; தடுக்கே,
தவிசு (ஆகும்); குழாயே, தண்டு (ஆம்);
(பெருகு) கோடிகம், பூந்தட்டே;
பெட்டியே, மூழிவாய் (ஆம்).
*(1, 1, 1, 1, 1, 1, 1, 1, 1 பெயர்கள்)* 55

**சட்டம், விளக்குத் தண்டு, முறம், புட்டில், கூடை**

சட்டமே, கிடுகு (ஆம் என்ப);
(சாற்றிய) கம்பம், தம்பம்,
(விட்டொளிர்) கௌசிகங்(கள்),
மத்திகை, விளக்குத் தண்டு (ஆம்);
தட்டொடு, சின்னம், சேட்டை,
(தரும்) முறம், முற்றிலும் (பேர்);
புட்டிலே, இறைவை (என்ப);
வட்டிகை, கூடை (ஆமே).
*(1, 4, 4, 1, 1 பெயர்கள்)* 56

**சுளகு, துடைப்பம், அகப்பை, மத்து, தயிர்கடை தறி, பாவாற்றி, நூல் நாழி**

சுளகின் (பேர்), சூர்ப்பம் (என்ப);
துடைப்பம், சோதனி, மாறும் (பேர்);
(வளம் உறும்) மூழி, மூழை,
அகப்பை (ஆம்); மத்து, மத்தம்;
வெளில், தயிர் கடை தறிப் (பேர்);
(மெச்சும்) பாவாற்றி, குச்சு (ஆம்);
(அளவில் காருகர்) நாடா,
நூனுழியே (ஆகும் என்ப).
*(1, 2, 2, 1, 1, 1, 1 பெயர்கள்)* 57

**ஆம்பி, இறை கூடை, நீர்ப்பத்தர், சூது, கவற்றில் தாயம், சாரி**

கிழார், பூட்டை, காம்பி, அம்பி,
(கிளந்த கார்) ஆம்பி (ஆகும்);
பிழார், இடார், இறை கூடைப் (பேர்);
(பெருந்) தூம்பு, அம்பணம், நீர்ப்பத்தர்;
(துழாவிய) காசு, வல்லு,
சூதின் (பேர்), கழங்கும் (ஆகும்);
(தழாது உருள்) கவற்றின் தாயம்,
ஆயம் (ஆம்); சாரி, நாய் (ஆம்).
*(4, 2, 2, 3, 1, 1 பெயர்கள்)* 58

**துண்டம், வகிர், சும்மாடு, வலை, வலைக்கயிறு, நூல்**

கடிகையே, துணியே, துண்டம்;
(காட்டிய) வகிர், வார், வள் (ஆம்);
சுடுவொடு, சுமடு, (தாங்கும்)
சுமையடை, சும்மாட்டின் (பேர்);
(வடிவுறு) வலையே, சாலம்;
மற்று அதில் கயிறும் ஆமே;
(தொடர் உறு) நூலே, தந்து,
சூத்திரம், பனுவலும் (பேர்).
*(2, 2, 3, 1, 1, 3 பெயர்கள்)* 59

**கயிறு, பசுக் கட்டும் கயிறு, காற்றுடி**

பழுதையே, தாமம், கச்சை,
பாசமே, இரச்சே, நாணே,
(வழுவு இலாத்) தாம்பே, அக்கம்,
வடம், புரி, கயிறு (அது ஆமே);
(தழுவு) தாமணியே, தாம்பு,
பசுக்கட்டும் கயிறு (தானும்);
சுழல், கறங்கே, காற்றுடி,
(சொல்லிய) கதலியும் (பேர்).
*(10, 2, 3 பெயர்கள்)* 60

**மட்டத் துருத்தி, பெருந் துருத்தி, சீப்பு, மகளிர் ஆடும் களம், செருப்பு**

பந்து, மட்டத் துருத்தி;
(பகர்) பெருந்துருத்தி, (நீரைச்
சிந்திய) சிவிறி (ஆகும்);
சீப்பு, கங்கதமே, சிக்கம்;
(பைந்தொடி) மகளிர் ஆடப்
படுங் களம், ஓரை (என்ப);
(தொந்தமாம்) பாதங் காப்பு,
கழல், தொடு தோல், செருப்பு (ஆம்).
*(1, 1, 2, 1, 3 பெயர்கள்)* 61

**மிதியடி, மிதியடியின் மேல் கொட்டை, பற் சீவும் கோல், தூண்டில், அம்மானை, பந்து, தவிடு, நொய்**

(இட்ட) பாதுகையே, பாவல்,
மிதியடி; இதன் மேல் இட்ட
கொட்டை (ஆம்), குடை; பற் சீவுங்
கோல், மெல்கோல்; வளிசம், தூண்டில்;
(பட்ட) அம்மனை, அம்மானை;
பந்து, கந்துகம் (என்று ஓதும்);
முட்டையே, தவிட்டின் (நாமம்),
முடையும் (ஆம்); நொறுங்கு, நொய்யே.
*(2, 1, 1, 1, 1, 1, 2, 1 பெயர்கள்)* 62

**உலைத் துருத்தி, கொல் உலை மூக்கு, செத்தை, பாடை, சாணைக்கல்**

(ஊதிய) உலைத் துருத்தி,
உதியும், அத்திரியும் (ஆகும்);

(கோது இலாச்) சிவையினோடு,
குருகு, கொல்லுலை மூக்கின் (பேர்);
(சோதனி சீக்கும்) காடு,
துரால், நரல், மயலே, செத்தை;
(சா துயர்ப்) பாடை, வெள்ளில்;
சிலாவட்டம், சாணைக்கல்லே.
(2, 2, 4, 1, 1 பெயர்கள்) 63

**சாடி, நீர்ச் சால், கர்ப்பரை, குடம்**

(தடம் படு) பதலை, தாழி,
தளம், சாடி, அகளமும் (பேர்);
இடங்கரே, நிறையே, வட்டம்
(ஏற்ற) நீர்ச் சால் (இம் முப்பேர்);
(கிடந்த) கர்ப்பரை, தசும்பு,
கடாகம் (ஆம்); குடத்தின் (நாமம்)
குடங்கரே, இடங்கர், தாழி,
குணம், கடம், கலசம், கும்பம்.
(4, 3, 2, 7 பெயர்கள்) 64

**மிடா, பானை, தயிர் கடை தாழி**

தடாவொடு, கரீரம், (நீரைத்
தரும்) முகை, குழிசி, (நான்கும்)
மிடா (என்ப); பானையின் (பேர்),
(மேவிய) குண்டத்தோடு,
மிடாவும் (ஆம்); (விரும்பு நல்லார்)
(வெண்) தயிர் கடையும் தாழி,
(விடாத) மந்தினியினோடு,
கர்க்கரி (விளம்பல் ஆமே).
(4, 2, 2 பெயர்கள்) 65

**கரகம், ஏற்கும் மட்கலம்**

சிரகம், கர்க்கரியே, கன்னல்,
சீகரம், (நான்கு பேரும்)
கரகத்தின் (நாமம் ஆகும்),
(கருது) வற்கரியும் (என்ப);
(திரு அறம் செய்யார்) ஏற்கும்
(தீய) மட்கலத்தின் (நாமம்),
(பரவிய) கடிஞை, ஐயம்,
பாத்திரம் (என்றும் ஏற்கும்).
(5, 3 பெயர்கள்) 66

**தகழி, குடுவை, சட்டி, அகல், கொள்கலம் யாவற்றிற்கும் பெயர்**

இடிஞ்சிலே, பாண்டில், (என்ப)
(எரிசுடர்த்) தகழி (நாமம்);
(ஒடுங்கிய) குடுவை, குண்டம்;
(ஒளி பெறு) விசளை, சட்டி;
(அடங்கு) சுத்திகையினோடு,
சராவமே, அகலின் (பேர்தான்);
இடுங்கலம், பாண்டம், (ஏற்கும்)
கொள்கலம் எவற்றிற்கும் பேர்.
(2, 1, 1, 2, 2 பெயர்கள்) 67

**புடைவை**

கோடி, கோடிகம், படாமே,
கோசிகம், கூறை, பஞ்சி,
சாடி, நீவியமே, சீரை,
சம்படம், கலை, கலிங்கம்,
சூடி, காடிகமே, புட்டம்,
தூசு, காழகமே, வட்டம்,
ஆடை, ஆவரணம், தானை,
அறுவை, அம்பரம், ஆசாரம். 68

**புடைவை (தொடர்ச்சி), துகில், நல்லாடை**

மடி, பரிவட்டம், சேலை,
வத்திரம், உடுக்கை, வாசம்,
(இடையறு) புடைவை (ஆறைந்து),
இலக்காரம் (என்றும் பேராம்);
இடையல், வேதகமே, பட்டே,
ஏடகம், (இவை) துகில் (பேர்);
(நடைபெறு) நாகம், பாரி,
நல்லாடை (இரு பேர் ஆமே).
(31, 4, 2 பெயர்கள்) 69

**பட்டு வர்க்கம், பட்டு, பட்டு விகற்பம், நற் பணித் தூசு, மயிர்ப் படாம்**

பட்டு வர்க்கத்தின் (நாமம்),
பாளிதம், கோசிகம் (பேர்);
பட்டு, நேத்திரம் (ஆம்); காம்பு
(படும்), அதன் விகற்ப (நாமம்);
(இட்ட) நற்பணித் தூசின் (பேர்),
(ஏற்றிடும்) தேவாங்கம் (தான்;)
(மட்டமாம்) முரிகம், (சூழும்)
மயிரகம், மயிர்ப்படாமே.
(2, 1, 1, 1, 2 பெயர்கள்) 70

**அத்தவாளம், சித்திரப் படாம், போர்வை, முன்றானை, மாதர் கொய்சகம், உத்தரீயம்**

அத்தவாளம் (தானே), உல்-
லாசம் (ஆம்), வடகமும் (பேர்);
புத்தகம் (என்ப), சித்திரப்-
படாம் (ஆகும்); போர்வை, மீக்கோள்;
(வைத்த) முன் தானை, தோகை;
மாதர் கொய்சகமே, நீவி;
உத்தரீயம், ஏகாசம்,
உத்தராசங்கமும் (பேர்).
(2, 1, 1, 1, 1, 2 பெயர்கள்) 71

**கம்பளிப்படாம், கச்சு, விடும் தலைப்பு, மேற் கட்டி**

கம்பலம், கம்பளங்கள்,
கம்பளிப் படாத்தின் (வர்க்கம்);
வம்பு, வார், விசிகை, கச்சு (ஆம்),
(வைத்த) பட்டிகையும் (ஆகும்),

(விம்பு) வட்டுடையும் (அப்பேர்);
(விரி) கஞ்சம், விடுந் தலைப்பு (ஆம்);
கம்பலம், படங்கு, வானி,
விதானம், மேற்கட்டி (ஆமே).
(2, 5, 1, 4 பெயர்கள்) 72

**சட்டை, இடு திரை**

கஞ்சுளி, அங்கி, (மற்றைக்)
காஞ்சுகமொடு, குப்பாயம்,
(விஞ்சு) கஞ்சுகமே, மெய்ப்பை,
(மிளிரும்) வாரணமே, சட்டை;
கஞ்சிகை, அவிடியோடு,
காண்டமே, எழினி, கண்டம்,
(தஞ்சம் ஆம்) படாம், படங்கள்,
(சடுதியில்) இடு திரைப் (பேர்).
(7, 7 பெயர்கள்) 73

**மெத்தை, தலையணை, பெருங்கொடி, விதியில் கட்டிய கொடி**

தவிசு, அணை, தளிமம், மெத்தை;
உபதானம், தலையணைப் (பேர்);
துவசமே, சத்தி, வானி,
தோகை, கேதனம், பதாகை,
(தவழ்) விலோதனம், படங்கு
(தரும்) படாம், பெருங்கொடிப் (பேர்);
(நுவலுங்கால்) வீதிக் கட்டி
நுடங்கிய கொடி, விடங்கம்.
(3, 1, 9, 1 பெயர்கள்) 74

**சிறுகொடி, தேரில் கட்டும் கொடி, துணி, சித்திரம், எழுதுதல்**

கத்திகை, சிறு கொடிப் (பேர்);
(கருது) கூவிரம், தேர்க்கட்டும்
சத்தியாம்; துணி, சிதார் (ஆம்),
(சாற்றிய) சிதவலும் (பேர்);
சித்திரம், ஓவியம், (சீர்
தீட்டும்) வட்டிகை (ஆம் என்ன)
(வைத்தனர்); பொறித்தல், தீட்டல்,
வ்ரைதலும், எழுதல் (ஆமே).
(1, 1, 2, 2, 3 பெயர்கள்) 75

**மரவுரி, உடுத்தல், இறுக்கல்**

(மற்ற) வற்கலை, இறைஞ்சி,
மரவுரி, சீரை(யும் பேர்);
சுற்றலே, உடுத்தல் (என்ப);
தற்றலே, இறுக்கல் (ஆகும்);
(குற்றம் இல் எழுபத்தாறு
தொடர் செய்தான் குணபத்திரன் தாள்
நிற்றலும் வணங்கி நீதி
நிறுத்த மண்டலவன் தானே).
(3, 1, 1 பெயர்கள்) 76

**ஏழாவது**
**செயற்கை வடிவப் பெயர்த் தொகுதி முற்றிற்று**

## 8. பண்பு பற்றிய பெயர்த் தொகுதி

**காப்பு**

(கடி மலர்ப் பிண்டி நீழல்
காவலன் சரணம் போற்றி,
வடிவினில் அளவுதன்னில்
வண்ணத்தில் காட்சி ஆகும்
நெடியது ஓர் பொருளின், மற்று
நீள் உணர்வாலே காணப்
படுபொருளின் குணப் பேர்,
பண்பதாம் தொகுதி சொல்வாம்). 1

**வட்டம்**

(நல்ல) கோளகையே, கொம்மை,
(நாட்டிய) வலயம், தட்டு,
(சொல்லிய) பரிதி, பாண்டில்,
(சூழ்ந்திடு) கடகம், நேமி,
சில்லி, மண்டலமே, ஆழி,
திகிரி, பாலிகை, விருத்தம்,
வல்லை, சக்கரம், (ஈரெட்டும்)
வட்டம் (என்றிட்ட நாமம்).
(16 பெயர்கள்) 2

**திரட்சி**

உண்டையே, குவவு, கொம்மை
(யொடு), பந்தம், புஞ்சம், சேடு,
முண்டமே, கணையே, வட்டு,
முத்தையே, துறுமல், சோகம்,
(கொண்ட) சேர்வுடனே, மாழை,
குவிதலே, தொழுதி, பூகம்,
பிண்டம், (மூவாறு பேரும்)
திரட்சி (ஆம்), பிழம்பும் (ஆமே).
(19 பெயர்கள்) 3

**கூட்டம், தகடு**

தொழுதியே, குவவு, தோடு,
தொகை, சமுதாயம், சங்கம்,
(தழுவிய) குழுவே, கோட்டி,
சமவாயம், நிகாயம், குப்பை,
குழுமலே, குவால், இராசி,
குவிதல், (மூவைந்தும்) கூட்டம்;
(அழகிய) தகட்டின் (நாமம்),
அரி, அடர், ஐம்மை (ஆமே).
(15, 3 பெயர்கள்) 4

**வளைவு, பரந்த வடிவு, குமிழ்ப்பு வடிவு, மொக்குள் வடிவு**

குடிலமே, குலாவல், கோணல்,
கோட்டம், கூன், கோண், வளாவல்,
(வடிவுள) தட்டு, வாங்கல்,
வணர் (பத்தும்), வளைவின் (பேரே);
படலையே, படர்ச்சி, பம்பல்,
பரந்திடும் வடிவின் (நாமம்);

(புடைபடு) குமிழ்ப்புத் (தானே),
புளகம் (ஆம்); மொக்குள், கொப்புள்.
(10, 3, 1, 1 பெயர்கள்) 5

**உள் துளை, துளையுடைய பொருள், சர்ச்சரை, மயிர்த்தொகுதி கதிர்த் தொகுதி போல்வன**

குழல், சுகிர், தூம்பு, நாழி,
(கூறிய) புரை, வேய், வேணு,
(ஒழுகிய) சுரை, நாளத்தோடு,
(ஒன்பதும்) உள்துளைப் (பேர்);
புழை, குழல், துளை உடைத்தாம்
பொருள்; பிணர், சர்ச்சரைப் (பேர்);
(செழு) மயிர், கதிர் போலச்
சேர்ந்திடும் தொகுதி, கற்றை.
(9, 2, 1, 1 பெயர்கள்) 6

**மிகுதி**

மதம், நனி, பெருகல், ஊக்கல்,
(மற்றைய) விதப்பு, சால,
அதிகமே, சிறப்பு, இறப்போடு,
அலை, தவ, அமலை, ஆன்றல்,
கதழ்வொடு, பிறங்கல், கூரே,
கழுமல், பூரிப்பே, ஊங்கு,
புதுமையே, உருத்தல், (மூவேழ்)
மிகுதி (ஆம்), பொங்கலும் (பேர்).
(22 பெயர்கள்) 7

**உயர்ச்சி**

(மன்னும்) மோடு, ஊக்கம், ஓங்கல்,
வார்தல், சேண், ஒழுக்கம், பொங்கல்,
(பன்னிய) நிமிர்தல், புங்கம்,
பரி, புரை, உச்சம், துங்கம்,
(மின்னிய) நிவப்பு, உகப்பு,
மிசை, மேடு, பிறங்கல், ஏந்தல்,
உன்னதம், சிகரம், (மூவேழ்)
உயர்ச்சி, உத்துங்கமும் (பேர்).
(22 பெயர்கள்) 8

**விரிவு, பரப்பு, கூடல், பருமை**

விரிவின் (பேர்), விசாலம் (ஆகும்),
விபுலமும் (ஆம்); பரப்பு,
பரவை, பப்பு, அழுவம், தாவல்,
பாய்தல் (ஆம்), ஞெமிர்தலும் (பேர்);
(மருவிய) பயினி, சங்கம்,
(மற்றிவை இரண்டும்) கூடல்;
பருமையின் (நாமம்), பீனம்,
பனம், பரூஉ (என்றும் பேரே).
(2, 6, 2, 3 பெயர்கள்) 9

**பெருமை**

பாடு, மாண், பாழி, மீளி,
பணை, பொழில், பகடு, மூரி,
மோடு, மால், தடவே, வீறு,
முடலை, கொன், கருமை, அண்ணல்,
ஈடு, மா, நளியே, மானம்,
இருமையே, கயவோடு, ஏந்தல்,
பீடு, வான், குவவு, செம்மை,
பெருமைப் (பேர் இருபத்தேழே).
(27 பெயர்கள்) 10

**நுண்மை, அற்பம்**

அணு, நுழை, முளரி, நுட்பம்,
ஆய்தல், முள், அயிர், நுணங்கு,
நுணுகொடு, நுவணை, நூழை,
நொசிவு, (ஈராறு இவை) நுண்மைப் (பேர்);
கணம், இறை, வறிது, சின்னம்,
கன்று, ஆசு, தன்னம், ஒட்டே,
(அணைதரு) கிலமே, தோகம்,
அற்பம், இட்டிடையும் (ஆமே).
(12, 11 பெயர்கள்) 11

**அகலம், செவ்வை, தூரம்**

அகறல், கண்ணறையே, பாழி,
ஆய்வொடு, படர்தல், ஆன்றல்,
அகலுளே, வியலிடங்கள்,
அகலம் (இவ்வெட்டும் ஆகும்;)
(திகழ்) செம்மை, இருசு, செப்பம்,
செவ்வன், நேர், செவ்வை (ஐந்தாம்);
(நிகழும்) சேண், சேய்மை, தூரம்,
நீளிடை (தானும் அப்பேர்).
(8, 5, 3 பெயர்கள்) 12

**நீளம், முழுவதும்**

வடிதலே, ஒழுகல், போகல்,
வரி, உறை, வார்தல், தீர்தல்,
நெடிலொடு, ஆயதமே, நேர்பு,
நெடுமை, சேண், கொடி, நீளப் (பேர்);
அடைய, எல்லாம், சமத்தம்,
அடங்கலே, அகிலம், யாவும்,
முடியவே, அனைத்து, அகண்டம்,
முழுவது ஆம், முற்றும் (அப் பேர்).
(13, 10 பெயர்கள்) 13

**குறைதல், நெருங்கல்**

குறைதலின் (பேர்), நிரப்பே,
குன்றலே, அருகல், அஃகல்,
சிறுகலே, ஈனம், ஊனம்,
சிங்கலே, எஞ்சல், தேய்வு (ஆம்);
துறுமலே, சடிலத்தோடு,
துன்னலே, கஞறல், வீங்கல்,
செறி, நளி, பொதுளல், செற்று,
திணுங்கல் (பத்தும்), நெருங்கல்.
(10, 10 பெயர்கள்) 14

**நிறைந்திடல், பாதி, பாரம்**

பிறங்குதல், திளைத்தல், ஆர்தல்,
பெருகுதல், கழுமல், மல்கல்,
நிறைந்திடல் (ஆம்), துவன்றல்,
பூரணம், கமமும் (நேரும்);
(பறைந்த) பால், பயல், அருத்தம்,
பாகம், கூறு, (ஐந்தும்) பாதி;
(அறைந்த) சீர், குரு, கனம், ஞாட்பு,
(அதி) பாரம், பொறையும் (ஆமே).
(9, 5, 5 பெயர்கள்) 15

**மென்மை, நொய்மை, சலியாது நிற்றல், பற்றுக்கோடு**

மிருதுவே, சுகுமாரம், கோமளம்,
சாயல், கயவு, மென்மை;
(மருவிய) இலகு, நொவ்வோடு,
இலேச (இசை வகுக்கும்), நொய்மை;
துருவமே, துவமே, (சற்றும்
சலியாது (தோன்றி) நிற்றல்;
(கருது) பற்றுக்கோடு, ஊற்றம்,
கந்து, தூ, தஞ்சமும் (பேர்).
(5, 3, 2, 4 பெயர்கள்) 16

**அளத்தல், அளவின்மை, மிடைதல், உள்ளது சிறத்தல்**

அளவையே, கடனே, கச்சம்,
அளத்தலின் (நாமம் முப்பேர்);
அளவின்மை அமானம், (மற்றை)
அபாரமே, அநந்தமும் (பேர்);
(வெளிபடாத்) துதைதலோடு,
ததைதலும், மிடைதல் (என்ப);
(ஒளிபெறு) கழிவும், கூர்ப்பும்,
உள்ளது சிறத்தலின் (பேர்).
(3, 3, 2, 2 பெயர்கள்) 17

**அடி, இடை, கடை**

அடி, முதல், எழுவாய், மோனை,
ஆதி, பூருவம், தலைத்தாள்;
இடை, சமன், பகலே, நாப்பண்,
(எய்து) மத்தியம், நள்ளும் (பேர்);
கடையின் (பேர்), இறுதி, அந்தம்,
(காட்டிய) பின்னே, முற்று,
முடிவு, (உடன்) எல்லை (ஆகும்),
(மொழிந்திடும்) ஈறும் (அப் பேர்).
(6, 5, 7 பெயர்கள்) 18

**அளவு, எல்லை**

தாரொடு, வரையே, மானம்,
தனை, துணை, அவதி, மட்டே,
காரொடு, பரிமாணங்கள்,
அளவின் (பேர்) (கருதில் ஒன்பான்);
(கூறிய) எல்லையின் (பேர்),
கொற்றமே, வரைப்பு, காட்டை,
(ஏறிய) பரியந்தத்தோடு,
ஏணி (இவ்வைந்தும் என்ப).
(9, 5 பெயர்கள்) 19

**வெண்மை, சிவப்பு**

குருகு, பால், தவளம், வெள்ளை,
குருத்து, வால், சுவேதம், பாண்டு,
நரை, விளர், (பத்தும்) வெண்மை,
சிதமும், சுக்கிலமும் (நாட்டும்);
குருதி, கிஞ்சுகம், இராகம்,
(குறித்திடும்) சேது, பூவல்,
அருணம், சேய், சோணம், செக்கர்,
அரத்தம், சேப்பு, (இவை) சிவப்பு (ஆம்).
(12, 11 பெயர்கள்) 20

**பச்சை, பொன்மை, புகர் நிறம், மாசு**

பாசு, பை, அரிதம், சாமம்,
பசுமை, சாமளமே, பச்சை;
(பேசு) பிங்கலம், பசப்பு,
பீதகம், பீதம், பொன்மை;
(பூசிய) குரால், புற்கோடு
புகர், கபிலமும் (ஆம் என்ப);
மாசின் (பேர்), கறை, களங்கம்,
மலினம் (ஆம்), கசடும் (அப் பேர்).
(6, 4, 3, 4 பெயர்கள்) 21

**கறுப்பு, ஒளி**

இருள், மணி, நீலம், நல்லம்,
(ஏற்ற) காழகமே, காளம்,
கருள், களம், காரி, கார், மால்,
கறை, மாயம், கறுப்பின் (பேரே);
விரியல், மின், நிலவு, வில், வாள்,
வெயில், நிழல், வாமம், நீமம்,
அரி, நகை, கிரணம், காந்தி,
(ஆம்) சோதி, ஒளி (ஈரேழ் பேர்).
(13, 14 பெயர்கள்) 22

**ஒளி செயல்**

அலங்குதல், நகல், விளங்கல்,
அவிர்தலினொடு, வயங்கல்,
இலங்குதல், மிளிர்தல், மின்னல்,
இலகுதலுடன், இமைத்தல்,
துலங்குதல், ஒளிர்தல், (எங்கும்)
சுடருதல், பிறழ்தல் (ஈரேழ்),
(நலம்கொள) ஒளிசெயல் (பேர்),
தயங்கலும் (நாட்டலாமே).
(15 பெயர்கள்) 23

**அழகு**

எழில், வண்ணம், யாணர், மாமை,
இராமம், ஏர், நவ்வி, நோக்கு,
செழுமையே, சேடு, செவ்வி,
சித்திரம், நலமே, மாதர்,

குழகொடு, பொற்பு, நன்கு,
கோலமே, மணி, வனப்பு,
(பழிபடா) விடங்கம், மாழை,
பத்திரம், தோட்டி, பாங்கு. *24*

**அழகு (தொடர்ச்சி), மழுங்கல்**

சுந்தரம், அணங்கு, மஞ்சு,
சொக்கு, தேசிகம், அம், பொன்னே,
சந்தம், காரிகை, கவின், பூ,
தளிமமே, வாமம், காமர்,
அந்தமே, மயமே, ஒண்மை,
(ஆய்ந்த ஆறேழும் தானே);
(வந்திடும்) அழகின் பேராம்;
வட்கல், புல்லெனல், மழுங்கல்.
*(42, 2 பெயர்கள்) 25*

**நிறம், கட்டழகு, பேரழகு**

வரி, புகர், சாயல், சந்தம்,
மாமை, கேழ், பசப்பு, வண்ணம்,
குரு, உரு, வருணம், மேனி,
(ஈராறும்) நிறப் (பேர் கூறும்);
(கருது) கட்டழகு, காமர்,
(கருது) அலங்காரமும் (பேர்);
(பெருகிய) விசித்திரம் (தான்),
பேரழகு (ஆகும் என்ப).
*(12, 2, 1 பெயர்கள்) 26*

**இளமை, மூப்பு, வண்ணம், வடிவு**

குருளையே, மழவு, வெண்மை,
குழவு, கோமளமே, கொம்மை,
புருவை, யௌவனமே, நாகு,
போதகம், தருணம், நவ்வி,
முருகு, இளை, இளமை (ஈரேழ்);
முற்றலே, விருத்தம், மூப்பு (ஆம்);
(மருவிய) வண்ணம், சந்தம்;
வடிவின் (பேர்), செண்ணம் (ஆமே).
*(14, 2, 1, 1 பெயர்கள்) 27*

**வலி**

மிடல், வயம், திண்மை, மைந்து,
மெய்ந் நலம், தீரம், உம்பல்,
முடலை, கொன், வாய்மை, கூளி,
மூரியே, ஊக்கம், மீளி,
அடல், விறல், ஈடே, ஏணே,
ஆண்மையே, திறலே, நோன்மை,
முடுகலே, மல்லல், பாழி,
மொய்ம்பு, உரன், முரணே, துப்பு. *28*

**வலி (தொடர்ச்சி), வீரம்**

தானமே, மதமே, தோற்றம்,
சத்துவம், தாவே, ஆற்றல்,
மானம், மல், உரமே, முன்பு,
மதுகையே, எறுழ், (எண்ணைந்தும்)
(ஊனம் இல்) வலி; வீரப் (பேர்),
(உறு) பராக்கிரமம், சூரம்,
(ஈனம் இல்) சௌரியம், வீ-
ரியமே, சேவகமும் (ஆமே).
*(40, 5 பெயர்கள்) 29*

**மாட்சிமை, குளிர், வளப்பம், கொழுமை**

(தளவு இலா) அமைதி, ஆன்றல்,
சால்பொடு, செழுமை, வாய்த்தல்,
வளம், நிறை, மாண்பு, மாண்டல்,
மாண் (பத்தும்), மாட்சிமைப் (பேர்);
நளிர், பனி, அளி, சீதம், தண்,
(நன்) மழை, சாந்தம் (ஏழும்)
குளிர்; வளப்பம், கொழுப்பு (ஆம்);
கொழுமையே, செழுமை (என்ப).
*(10, 1, 1, 1 பெயர்கள்) 30*

**அறிவு, சுத்தம்**

மேதை, ஞாபகம், தெருட்சி,
(மிகும்) மதி, உணர்வு, ஞானம்,
போதமே, தெளிவு, புந்தி,
புலன், உரன், அறிவின் (பேராம்);
(மேதகு) புனிதம், தூவே,
மேத்தியம், சௌசம், தூய்மை,
தூய்து, பாவனமே, சுத்தம்,
சுசி, பவித்திரம், துப்பும் (பேர்).
*(11, 10 பெயர்கள்) 31*

**வெற்றி, செல்வம்**

(குறைவிலா) வலனே, வென்றி,
கொற்றமே, வெற்றம், முல்லை,
விறல், சயம், வாகை, ஆடு,
விசயம், (பத்து இவை) வெற்றிப் (பேர்;);
(மறு இல்) சீர், விபவம், மாடு,
வாழ்க்கையே, விருத்தி, ஆக்கம்,
பொறி, இடம், திரு, பெருக்கம்,
(போற்றிய) வெறுக்கை, செல்வம்.
*(10, 11 பெயர்கள்) 32*

**அன்பு, அருள், எழுமையும் தொடர்ந்த அன்பு**

பரிவு, நார், வாரம், ஈரம்,
பற்று, அளி, பாசம், அன்பு (ஆம்),
புரிவு, ஆணம், நேயமும் (பேர்);
(போற்றிய) தயை, இரக்கம்,
கருணையே, கிருபை, (மற்றுக்
கருதிய) தகவு, (இவ் ஐந்தும்)
அருளின் (பேர்); உழுவல் (என்பது),
எழுமையும் தொடர்ந்த அன்பு.
*(10, 5, 1 பெயர்கள்) 33*

**மனம், குறிப்பு**

உன்னமே, அகமே, சித்தம்,
உள்ளமே, இதயம், நெஞ்சு,

முன்னம், (ஏழ்) மனத்தின் (பேர் ஆம்);
(முதிர்) சிந்தை, நினைவு, சேத்து,
(சொன்ன) இங்கிதம், கருத்து,
சூழல், எண்ணம், குறிப்பு (ஆம்),
வன்மை, நாட்டியம், தியானம்,
மதம், வினை, ஏடலும் (பேர்).
*(7, 13 பெயர்கள்)* *34*

**குறித்தல், வரையறுத்தல்**

கண்ணலே, கருதல், பேணல்,
காணலே, நுதலல், சுட்டல்,
எண்ணலே, புகறல், (எட்டும்)
குறித்திடல் (என்னலாகும்);
(நண்ணிய) கணித்தலோடு,
(நாட்டிய) குணித்தல் (எல்லாம்),
(மண்ணுளோர்) வரையறுத்தல்
(பெயர் என்ப), மதித்தலும் (பேர்).
*(8, 3 பெயர்கள்)* *35*

**நினைத்தல், ஏமாப்பு – இறுமாப்பு, வீற்றிருத்தல்**

உன்னலே, படர்தல், ஊழ்த்தல்,
உள்ளுதலொடு, சிந்தித்தல்,
முன்னலே, வலித்தல், ஊகம்,
(மொழிபவே) நினைத்தல் (எண் பேர்);
(மன்னு) செம்மாப்பு, ஏமாப்பு,
(மற்றை) ஏக்கழுத்தமும் (பேர்);
(இன்னவை) இறுமாப்பாகும்;
(இவையே) வீற்றிருத்தல் (என்ப).
*(8, 2, 2, 2 பெயர்கள்)* *36*

**உள்ளக் களிப்பு, நல்லுணர்வு**

தருக்கொடு, மலர்ச்சி, மத்தம்,
தன்கு, பாடவம், களிப்பு,
செருக்கு, அபிமானம், ஏமம்,
(திகழ்) பெருமிதம், மதர்ப்பு,
(பொருத்திடும்) மதர்வு, (ஈராறும்)
(புகலும்) உள்ளக் களிப்பு (ஆம்);
(உருத்திடு) ஞானம், சீலம்,
(ஓதும்) நல்லுணர்வின் (நாமம்).
*(12, 2 பெயர்கள்)* *37*

**இன்பம், பேரின்பம், தெளிவு, பொறை**

நகை, கடி, மகிழ்ச்சி, ஏமம்,
நயம், சுகம், தொய்யல், இன்பம்;
(மகிழும்) ஆனந்தம் (ஒன்றே),
(மன்னு) பேரின்பம் (என்ப);
(திகழ்) நனவு, உணர்வு, தேறல்,
தேற்றம், (நல்) தெளிவு (நாற்பேர்);
(புகழ் பெறு) கமித்தல், நோன்றல்,
சகித்திடல், பொறை (முப் பேரே).
*(7, 1, 4, 3 பெயர்களா)* *38*

**நன்று, தருமம், ஊழ்**

நறுமையே, விழுமம், சேடு,
நயம், நன்றி, யாணர், நன்னர்,
(உறுதியாம்) கடவுள், ஒண்மை,
உத்தமம், (பத்தும்) நன்று (ஆம்);
அறம் (என்ப), தருமம் (தானே)
(ஆகும்); ஊழின் (பேர்), தெய்வம்,
(நிறுவிய) விதியே, உண்மை,
வரன்முறை, நியதியும் (பேர்).
*(10, 1, 5 பெயர்கள்)* *39*

**தவம், உவகை, கண்ணோட்டம், நிலையுடைமை**

தவம் (என்ப), விரதம், நோன்பு (ஆம்),
உவவொடு, தவசும் (ஆகும்);
உவகை, மாராயம், (மற்றை)
ஓகையே, பிரியமும் (பேர்);
(நவமதாம்) கேண்மை, கண்ணே,
நாகரிகம், கண்ணோட்டம்,
(இவை) நயப்புணர்வும் (ஆமே);
ஏண், நிலையுடைமை (என்ப).
*(4, 3, 4, 1 பெயர்கள்)* *40*

**நட்பு, உள்ளத்தின் மிகுதி, கூறுபாடு, இலாபம்**

(தூக்கிய) கேண்மையே, கேள்,
தொடர்பு (என்ப), நட்பு (முப் பேர்);
ஊக்கமே, உரன், (இரண்டும்)
உள்ளத்தின் மிகுதி (என்ப);
(நீக்கிலா) வகை, திறங்(கள்)
(நிகர் இலாக்) கூறுபாடே;
ஆக்கமே, பலன், பயம், பேறு,
அதிகம், ஊதியம், இலாபம்.
*(3, 2, 2 , 6 பெயர்கள்)* *41*

**அவாவின்மை, அமையுமென்றல், துறத்தல், வெட்கம்**

வெறுப்பொடு, முனிவு, ஒல்லாமை,
வேண்டாமை, உவர்ப்பே, மாவே,
அறுத்திடல், அவாவின்மைப் (பேர்);
அலம் (என்பது), அமையும் என்றல்;
துறத்தல், சார்பறுத்தலோடு,
துறவியே, விரத்தி (முப் பேர்);
மறுத்தல், நாண், சமழ்ப்பு, வெள்கல்,
வட்கல், உட்கு, இலச்சை, வெட்கம்.
*(7, 1, 3, 7 பெயர்கள்)* *42*

**ஒற்றுமை, சகாயம், நிலைபெறுதல், ஏவல்**

ஒருமை, தொட்டிமை, குறிப்போடு,
ஒற்றுமை (என்ப முப்பேர்);
(தரு பெருந்) துணையே, துப்பு,
சகாயமே, இணை(யும் பேர் ஆம்);
(பெருகிய) மன்னல், துஞ்சல்,
திதி, நிலைபெறுதல் (முப்பேர்),

(விரவிய) தாணுவும் (பேர்);
(மேவிய) ஆணை, ஏவல்.
(3, 3, 4, 1 பெயர்கள்) 43

**ஒழுக்கம், நீதி, அழுக்கின்மை**

செயல், முறை, நடை, ஆசாரம்,
செய்தி, கையறையே, கையே,
இயல்பு, மஞ்சரியே, (நீள்)
சாரித்திரம், ஒழுக்கம் (பத்தாம்);
(மயல் அறும்) நெறி, நியாயம்,
மரியாதை, நீதி (முப்பேர்);
(வியன் உறும்) அழுக்கின்மைக்கு,
விமலமும், அமலமும் (பேர்).
(10, 3, 2 பெயர்கள்) 44

**பழமை, புதுமை**

தொல்லே, முன், பண்டு, முந்தை,
தொன்று, பூருவம், புராணம்,
ஒல்லேயே, புராதனத்தோடு,
(உற்ற) ஊழ், பழமை (பத்தாம்);
(நல்ல) நூதனம், விருந்து,
நவம், கடி, புத்தேள், கோடி,
(புல்லிய) யாணர், வம்பு,
புனிறு, (ஒன்பான்) புதுமையின் (பேர்).
(10, 9 பெயர்கள்) 45

**பொலிவு, நிச்சயம், ஆக்கம், பெயர்**

(நீக்கிலாத்) துப்பு, மல்லல்,
(நெடிய) மங்கலமே, பூவே,
போக்கமே, மலர்ச்சி, பொம்மல்,
பொற்பு, (இவை) பொலிவு எண் (பேர் ஆம்);
தீர்க்கமே, தரிப்பு, மன்ற,
தேறு, (இவை) நிச்சயப் (பேர்);
ஆக்கமே, நந்தல் (என்ப);
அபிதானம், நாமம், பேர் (ஆம்).
(8, 4, 1, 2 பெயர்கள்) 46

**உரித்து, கணிதம், நிலே நீங்காமை, முறைமை**

பாங்கொடு, காணி, தாயம்,
பால், கெழுதகைமை, ஆட்சி,
(ஈங்கு இவை) உரித்தின் (நாமம்);
எண்ணமே, கணிதம் (என்ப);
நீங்கரு நிலே, தண்டாமை,
(நிகர் இல்) ஆளுமையும் (பேர்);
(பாங்குறும்) மரபு, பாரம்-
பரியமே, முறைமை (ஆகும்).
(6, 1, 2, 2 பெயர்கள்) 47

**அதிசயம், காரணம், பின்**

வியப்பு, விம்மிதத்திஞேடு,
விசித்திரம், இறும்பூது, (இன்ன)
(மயக்கு இலா) அதிசயப் (பேர்),
(மற்றை) அற்புதமும், (ஆகும்);
(செயத்தகு) காரணப் (பேர்),
திறம், ஏது, பொருட்டு, வாயில்,
(நயத்தகு) நிமித்தமும் (பேர்);
(நாடுங்கால்) வழியே, பின் (ஆம்).
(5, 5, 1 பெயர்கள்) 48

**வருவாய், பொருந்தல், பற்பல முறை, குடி, வெகுவிதம்**

மல்லொடு, வளமே, வாரி,
பகுதியும், வருவாயின் (பேர்);
புல்லுதல், கெழுமல், (என்ப)
பொருந்தலே, அமைவும் (அப் பேர்);
பற்பல முறையின் (பேரே),
பரியாயம்; திணை, குடிப் (பேர்);
(நல்லதாம்) வெகுவிதம்,
நாநாவிதம், விவிதம் (ஆமே).
(4, 3, 1, 1, 2 பெயர்கள்) 49

**அறிவுடைப் பொருள், அறிவு இல் பொருள், அறிந்தும் அறியார் போலுதல்**

அறிந்திடும் பொருள் (பேர்), சித்து,
சேதனம் (என்பர் ஆய்ந்தோர்);
அறிந்திடாப் பொருள், அசித்தோடு,
அசேதனம், சடமும் (ஆகும்);
(சிறந்திட உயிர்கள் ஈசன்
செய்திடும் சில நூலே)
அறிந்தும் (அஃது) அறியாதாரைப்
போறலே, அறிமடம் (தான்).
(2, 3, 1 பெயர்கள்) 50

**அறிவின்மை, பேரறிவு, அழிவின்மை, உறவு, நிறைவேறல்**

அறிவின்மை, மடம், எய்யாமை,
மருட்சி, பேதைமை (என்ருகும்);
(பெறும்) முதுக்குறைவு (தானே),
பேரறிவு (என்று கூறும்);
(குறைவு இலாக்) கோணை, கன்னி,
குமரியே, அழிவின்மைப் (பேர்);
உறவியே, உறவின் (பேராம்);
நிறைவேறல், சபலம் (ஆமே).
(4, 1, 3, 1, 1 பெயர்கள்) 51

**கழி பிறப்பு, வரு பிறப்பு, இப் பிறப்பு, ஒரு பிறப்பு, எப்பிறப்பும், எழு பிறப்பு**

உம்மையே, கழி பிறப்பு (ஆம்);
(ஒழிந்திடு) வருபிறப்பிற்கு,
அம்மையும், மறுமையும் (பேர்);
(ஆன) இப்பிறப்பின் (நாமம்),
இம்மை (ஆம்); ஒருபிறப்பே,
(இயம்பிடில்) ஒருமை (தானே);
எம்மை, எப்பிறப்பும் (என்ப);
ஏழ் பவம், எழு பிறப்பு (ஆம்).
(1, 2, 1, 1, 1, 1 பெயர்கள்) 52

**மணம், மிகு மணம், நாறுதல், துர்க்கந்தம்**

*முருகு, தேன், கடி, ஆமோதம்,*
*மோதவம், கந்தம், வேரி,*
*விரை, நறை, மன்றல், வம்பு,*
*வெறி, மரு, மணம் (பன் முப்பேர்);*
*பரிமளம், மிகுமணப் (பேர்);*
*(பரவி) நாறுதல், கந்தித்தல்,*
*(விரவிய) கமழ்தலும் (பேர்);*
*(மேவு) துர்க்கந்தம், பூதி.*
*(13, 1, 2, 1 பெயர்கள்) 53*

**இனிமை, தித்திப்பு, கைத்தல், புளிப்பு, கார்ப்பு**

*(தூய) சேறு, அமுது, சாரம்,*
*சுவை, தீம், தேம், இனிமையின் (பேர்);*
*(தீய) தேம், கனி, தித்திப்பு (ஆம்),*
*மதுரமும் (ஆகும்); தித்தம்*
*(ஆயது), கைத்தலின் (பேர்);*
*ஆமிலம், புளிப்பதாகும்;*
*காயமே, கடுகம், காழ்ப்பு,*
*கரில், காரம், கடு, கார்ப்பு (ஆமே).*
*(6, 3, 1, 1, 5 பெயர்கள்) 54*

**அச்சம், கலக்கம்**

*வெருவு, சூர், பீர், வெறுப்பு,*
*வெறி, வெடி, கவலை, பீதி,*
*உருவு, பேம், விறப்பு, கொன்னே,*
*உட்கு, நாம், பனிப்பு, அணங்கு,*
*(தரு) புலம்பு, அதிர்ப்பு, அடுப்பு,*
*தரம், பயம், உரும், அச்சப் (பேர்);*
*துரிதமே, பிரமம், (வந்து*
*சூழ்) கதனம், கலக்கம்.*
*(22, 3 பெயர்கள்) 55*

**அச்சக் குறிப்பு, தாழ்வு**

*(நிலை பெறுது) ஓடல், தேங்கல்,*
*ஞெரேலெனல், கூசல், திட்கல்,*
*உலமரல், அளுக்கல், ஞொள்கல்,*
*(ஒடு) துடுக்கெனலே, துட்கல்,*
*குலைதல், வெய்துறலே, அச்சக்*
*குறிப்பு, துண்ணெனலும் (கூறும்);*
*தலையிழிபுடனே, சாய்ப்பு,*
*தஞ்சமே, தண்மை, தாழ்வு.*
*(13, 4 பெயர்கள்) 56*

**நடுக்கம், எளிமை, புல்லறிவு**

*விதிர்ப்பொடு, விதப்பு, கம்பம்,*
*விதலை, கம்பிதம், பனிப்பு,*
*பொதிர்ப்பு, உலைவு, (இவை) நடுக்கம்;*
*(பொருந்திடும்) எளிமை, எண்மை,*
*(மதிப்பிலாப்) பரிபவங்கள்,*
*(மற்று) இழிதகவும் (ஆகும்);*
*(பிதற்று) சிற்றறிவு, வெண்மை,*
*வெளிறு, புல்லறிவின் (பேரே).*
*(8, 3, 3 பெயர்கள்) 57*

**குற்றம்**

*ஆசு, தோம், பிழையே, போக்கே,*
*அரில், கரில், பழி, அரிப்பு,*
*காசு, மை, தவறே, மானம்,*
*கறை, குறை, மிறை, கழிப்பு,*
*மாசொடு, துகளே, தப்பு,*
*மறு, நவை, வசை, கொழிப்பே,*
*ஏசொடு, புரையே, கோதே,*
*ஏதம், (மூவொன்பான்) குற்றம்.*
*(27 பெயர்கள்) 58*

**மறத்தல், இழிவு, தளர்ச்சி, இரக்கம்**

*வழுக்கொடு, மறவி, புன்மை,*
*மறலொடு, பொல்லாங்கே, கீழ்,*
*இழுக்கொடு, சோர்வு, பொச்சாப்பு,*
*இகழ்ச்சியும், மறத்தலின் (பேர்);*
*(பழித்திடும்) துவ்வும், மன்னும்,*
*(பகர்ந்திடும்) இழிவு (தானே);*
*(இழைத்திடும்) தளர்ச்சி, ஏட்டை,*
*அசாவும் (ஆம்); இனைவு, இரக்கம்.*
*(10, 2, 1, 1 பெயர்கள்) 59*

**உட்டிணம், கொடுமை**

*(கடுகிய) வெம்மை, கோரம்,*
*கருமையே, உருமம், வெப்பம்,*
*(உடன்) அழல், அழனம், தாபம்,*
*உருப்பம், உட்டிணப் (பேர் ஒன்பான்);*
*கொடுமையின் (பேரே), சண்டம்,*
*கோடணை, கடினம், கோரம்,*
*கடுமை, உக்கிரம், உறைப்பு,*
*கலாம், சடம், வஞ்சம், பூதி.*
*(9, 11 பெயர்கள்) 60*

**வறுமை, பகை**

*குறை, இலம்பாடு, மிச்சை,*
*குறுவாழ்க்கை, மிடி, நிரப்பு,*
*சிறுமையே, ஒற்கம், இன்மை,*
*(தீய) நல்குரவே, அல்கல்,*
*வறுமையின் (பெயர்) பன்னொன்றும்,*
*(வரு) தரித்திரமும் (ஆகும்);*
*மறல், இகல், முனை, முரண், தா,*
*மடி, தெவ்வோடு, அரி, பகைப் (பேர்).*
*(12, 8 பெயர்கள்) 61*

**கோபம், கோபக் குறிப்பு**

*வெறுத்தலே, சினம், குரோதம்,*
*வெகுளி, (மற்று) அரிப்பு, சீற்றம்,*
*(செறித்திடும்) கலாம், கதங்கள்,*
*செயிர் (ஒன்பான்) கோபத்தின் (பேர்);*

கறுப்பொடு, சிவப்பே, (போதக்)
கன்றலே, புழுங்கல், (சீறிக்
குறித்திடும்) புகைதல், (பொங்கிக்)
கொதித்தல், கோபக் குறிப்பு (ஆம்).
(9, 6 பெயர்கள்) 62

**முன் கோபம், பெருங் கோபம், வைரம்**

(குருத்த) முன் கோபம், வெம்பல்,
கொந்தலே, கனிதல், கோம்பல்;
பெருத்த கோபம், விடைத்தல்,
(பெருகிய) முனைதல், சீறல்,
உருத்தலே, உலறல், காய்தல்,
உடற்றல், தீவிரமும் (ஆகும்);
(தரித்திடும்) வயிரம், செற்றம்,
சலம், பவம், தொந்தம், வேரம்.
(4, 8, 5 பெயர்கள்) 63

**வருத்தம், மேன்மை**

உயவு, அனுக்கம், கவற்சி,
உயங்குதல், கசிவு, அணங்கே,
அயர்வொடு, நொசிவே, நோவே,
ஆய்வொடு, மிறை, சமழ்த்தல்,
வயாவொடு, ஆகுலம், அழுங்கல்,
வருத்தம் (மூவைந்தும் வைக்கும்);
(வியல் மிகும்) ஏற்றம், ஞெள்ளல்,
சாலூரம், மேதை, மேன்மை.
(15, 4 பெயர்கள்) 64

**வேறுபாடு, தனிமை**

வீற்றொடு, விகிர்தம், பின்னம்,
விபரீதம், விரூபம், விள்ளல்,
வேற்றுமை, திரிபு, பேதம்,
விகடம், (ஈரைந்தும் தானே)
(ஏற்றிய) வேறுபாட்டுக்கு
(இயம்பிய நாமம் ஆகும்);
(போற்றிய) தனிமை, ஏகம்,
புல்ம்பு, கேவலமும் (ஆமே).
(10, 3 பெயர்கள்) 65

**மயக்கம்**

இருள், உணராமை, மத்தம்,
இளமை, மாழாத்தல், பித்தம்,
வெருள், களி, கழுமல், மோகம்,
(மேவும்) உன்மத்தம், மாழ்கல்,
(கருதிய) அனந்தர், ஏமம்,
களன், பேது, மையல், மைந்து,
மருள், மறல், மான்றல், (மூவேழ்)
மயக்கம் (ஆம்), மயர்வும் (அப் பேர்).
(22 பெயர்கள்) 66

**தீது, சோம்பு**

தீங்கு, கோள், அந்தராயம்,
(செப்பு) விக்கினம், முட்டுப்பாடு,
(ஓங்கிய) அலாபம், தட்டே,
ஊறே, அந்தரமும், தீது (ஆம்);
(ஆங்குள) அலேசல், ஆஞ்சி,
அழுங்கலே, மடியே, ஞொள்கல்,
தூங்கலே, அசைவே, மந்தம்,
சோகம், ஆலசியம், சோம்பு (ஆம்).
(9, 10 பெயர்கள்) 67

**வஞ்சம், குணம் இன்மை, தாமதம்**

குடிலம், புள்ளுவமே, கூடம்,
குத்திரம், மாயை, குய்யம்,
படிறு, சாட்டியமே, வஞ்சம்,
பட்டிமை (தானும்) (அப்பேர்);
செடி, சீத்தை, சிதம்பினோடு,
சீரணம், குணம் இன்மைப் (பேர்);
(மிடி தரும்) தாமதப் (பேர்),
விளம்பனம், விளம்பம் (தாமே).
(9, 4, 2 பெயர்கள்) 68

**கேடு, இகழ்ச்சி, அருவருப்பு**

இழிவொடு, திரிதல், நந்தல்,
இறுதலே, முறிதல், கந்தல்,
வழு, கயம், சிதைவு, அழுங்கல்,
மடி, சுதம், கேடு (ஆம்); நிந்தை,
இழிவு, எள்ளல், நகல், ஒல்லாமை,
இகழ்ச்சி (ஆம்), உவர்ப்பும் (அப் பேர்);
(குழைவுறு) அருவருப்பு,
குற்சிதம், பயிர்ப்பும் (ஆமே).
(12, 6, 2 பெயர்கள்) 69

**பாவம், பயனிலாமை, சந்தேகம், ஒருதலைக் காமம்**

மறம், அகம், கலுடம், பங்கம்,
(வரும்) செடி, துரிதம், பாவம்;
வறிது, கொன், வீண், விருதா,
(மன்னிய) பயனிலாமை;
(அறைதரு) சந்தேகப் (பேர்),
அயிர்ப்பு, ஐயம், கடுத்தல், சங்கை;
(கறை இல்) ஓர்தலைக் காமப் (பேர்),
கைக்கிளை (ஆகும் என்ப).
(6, 4, 4, 1 பெயர்கள்) 70

**பிறப்பு, சூதகம், ஈன்றணிமை, தோகைமார் தொடாப் பொருட்டு**

(சிறந்திடும்) சன்மம், தோற்றம்,
செனனமே, பவம், சனிப்பு,
பிறந்தை, உற்பவம், (என்றேழும்)
பிறப்பாம், உற்பத்தியும் (பேர்);
(அறைந்த) சூதகம், ஆசௌசம்;
புனிறே, ஈன்றணிமையின் (பேர்);
(துறந்த) வாலாமை, பூப்பு,
தோகைமார் தொடாப்பொருட்டே.
(8, 1, 1, 2 பெயர்கள்) 71

**அதிசயமுற இரங்கல், மனக்கோட்டம், அழுக்காறு**

அன்னே(வோடு,) அந்தோ, ஆ, ஓ,
அத்தோ(வோடு), அச்சோ, ஐயோ,
என்னே, எற்று, எவன் (எனும் சொல்)
அதிசயம் உற இரங்கல்;
(மன்னும்) ஔவியமே (என்ப),
மனக்கோட்டம்; அழுக்காற்றின் (பேர்),
(சொன்ன) நோனுமை, கூரம்,
(சூழ்ந்திடும்) பொறாமை (முப் பேர்).
(10, 1, 3 பெயர்கள்) 72

**துன்பம்**

அல்லலே, அலக்கண், மம்மர்,
அரந்தை, கோட்டாலே, பீழை,
செல்லல், கேதம், கலக்கம்,
சிறுமை, சூர், உறுகண், புன்கண்,
(சொல்லும்) இட்டளம், இன்னுவே,
துனி, பருவரலே, துக்கம்,
(ஒல்லும்) நோ, அழுங்கல், பீடை,
உலமரல், அல்லகண்டம். 73

**துன்பம் (தொடர்ச்சி)**

கவ்வை, யாதனே, பழங்கண்,
கையாறு, நடலே, பையுள்,
எவ்வம், ஏதம், வெறுப்பே,
இடும்பையே, இடுக்கண், இன்னல்,
(வவ்விய) படர், பனித்தல்,
வறுமை, வெய்துறவே, பைதல்,
(வெவ்விய) கவலே, (தீய)
விழுமம், (ஆறேழும்) துன்பம்.
(42 பெயர்கள்) 74

**ஆசை**

மாதர், நச்சு, இச்சை, ஏடை,
வயா, நம்பு, நசை, நயப்பு,
காதல், வெப்பம், விருப்பம்,
காமமே, இராகம், பற்றே,
ஆதரம், பெட்பு, வேட்கை,
ஆர்வமே, மேவல், வெஃகல்,
(ஓதிய) விழைவு, (மூவேழ்
உறு பெயர்) ஆசை (ஆமே).
(21 பெயர்கள்) 75

**வேட்கைப் பெருக்கம், காமநோய்**

(சூழ்தரும்) மோகம், நம்பல்,
(சொற்றிடும்) இரதி, வெஃகல்,
தாழ்தலே, கவர்தல், பெட்டல்,
சார்புடன், இவறல், வேண்டல்,
வீழ்தல், வேணவா, (ஈராறும்)
வேட்கையின் பெருக்கம் (என்ப);
(மாழ்கிய) விரகம், காமம்,
மதனமே, காமநோய் (ஆம்).
(12, 3 பெயர்கள்) 76

**நோய், வேதனே பண்ணும் நோய், நரக நோய்**

மாரி, ஆமயமே, புன்கண்,
மடி, நிழல், மடங்கல், பையுள்,
சூர், பிணி, உரோகம், குந்தம்,
(சூழ்) அணங்கு, (ஈராறும்) நோய்;
(பாரிய) வாதை, பீதி,
வேதனே பண்ணும் நோய் (ஆம்);
(ஒரும்) யாதனே, (கொல்லா
நோன்புறுர் உறும்) நரக நோயே.
(12, 2, 1 பெயர்கள்) 77

**உவமை**

அன்ன(வே), அனேய, செத்தே,
ஆங்கு, ஒப்ப, புரைய, போல,
என்ன(வே), பொருவ, எள்ள,
இகல(வே),கடுப்ப, மான,
(சொன்ன) கேழ், தகவு, தூக்கு,
துணே, இணே, நிகர, நேர,
(மன்னும்) வீழ்வு, உறழ, அற்றே,
மலேவு, (எண் மூன்று) உவமைப் (பேரே).
(24 பெயர்கள்) 78

**குணம், பண்பு**

மாலே, நீர், தகவு, பெற்றி,
மரபொடு, கிழமை, வண்மை,
சால்பொடு, தகுதி, பான்மை,
தகைமையே, இயல்பு, தன்மை,
பால், விதி, கொள்கை, பண்பு,
படி, முறை, பரிசு, (இவ்வெல்லாம்)
(கோலம் ஆர்) குணம் (நாலேந்தாம்);
குணம், நிறம் (இரண்டும்) பண்பாம்.
(20, 2 பெயர்கள்) 79

**கை ஒழியாமை, ஒழுக்கம், செயல் அறல், அடைக்கலம், உரிமை**

கை யொழியாமை, கை தூவாமை
(ஆம்); கை, ஒழுக்கம்;
கையறல், செயலறற் (பேர்);
கையடை, அடைக்கலப் (பேர்);
(மை இலா) உரிமையின் (பேர்),
(வரு) கெழுதகைமை(யோடு),
(பொய்யிலாக்) கிழமை, (மற்றை)
உரித்து (எனப் புகலலாமே).
(1, 1, 1, 1, 3 பெயர்கள்) 80

**ஒருபலம், காற்பலம், தூக்கு, நூறுபலம், ஒன்று, பத்து, நூறு, ஆயிரம்**

தொடி, ஒரு பலம் (ஆம்); கஃசு,
(சொற்ற) கால் பலம் (ஆம்); தூக்கு,

(நெடிய) கா, துலாங்கள் (என்ப);
நிறை, நூறு பலமே (ஆகும்);
(படியில்) ஒன்று, ஏகம் (என்ப);
பத்து (என்ப), தசம் (ஆம்); நூறு,
(நொடிதரின்) சதம் (என்று ஆகும்);
ஆயிரம், நூற்றுப்பத்தே.
(1, 1, 2, 1, 1, 1, 1, 1 பெயர்கள்) 81

(தேங்கிய புகழான் குன்றைக்
குணபத்திரன் திருத்தாள் போற்றி,
வீங்கு நீர்ப் பழனம் சூழ்ந்த
வீரை மண்டலவன் செய்தான்,
பாங்கினுல் விளங்கு பண்பு
பற்றிய பெயரின் ஈட்டம்
ஓங்கிய கவிதை எண்ணில்
ஒன்பதிற்றென்பது ஒன்றே). 82

எட்டாவது
பண்பு பற்றிய பெயர்த் தொகுதி முற்றிற்று

## 9. செயல் பற்றிய பெயர்த் தொகுதி

### காப்பு

(வியன் மிக்க வைரத்தால் வேர்
வீழ்த்து, பொற் கவடு கொண்டு,
மயம் மிக்க மரகதத்தால் வண்
தழை பொதுளி, பூந் தொத்து
இயல் உற்ற பதுமராகம்
எதிர் பிண்டி இறை தாள் போற்றி,
செயல் பற்றும் பெயர்க் கூட்டத்தைச்
செப்புவம்; இப்பாற் கேண்மின்). 1

### செய்தொழில், செய்தல், பிறப்பித்தல்

செயல், விதி, கருமம், கன்மம்,
செய்தொழில், வினை(யும் அப்பேர்);
அயர்தலே, வனைதல், ஆற்றல்,
குயிறலோடு, இழைத்தல், செய்தல்;
நியமித்தல், விதித்தல், (மற்றும்)
நிருமித்தலொடு, சிட்டித்தல்,
(பயன் உறப்) படைத்தலோடு,
பாரித்தல், பிறப்பித்தல் (பேர்).
(5, 5, 6 பெயர்கள்) 2

### மகளிர் விளையாட்டு, பொழுது போக்கல், மெச்சல்

தொடலை, உண்டாட்டு, பொய்தல்,
(சூழ்) விலாசனையே, வண்டல்,
கெடவரல், பண்ணை, உப்பு,
கிரீடையே, கேளி, ஓரை,
(புடை) முலையார் ஆடல் (பேர்);
பொழுது போக்கே, விநோதம்;
(படி) பாராட்டுதல், குலாவல்,
(பரிந்து) கொண்டாடல், மெச்சல்.
(11, 1, 3 பெயர்கள்) 3

### விவாகம், உற்சவம்

வதுவை, கைப்பற்றலே, தீ-
வலம் செய்தல், மணம், கல்யாணம்,
விதியுளி, வேட்டல், மன்றல்
விவாகம் (எண் பேர் விளங்கும்);
(புது) விழா, முருகு, சாறு,
(புத்தேள்) உற்சவம் (ஆம்), சேறு,
(துதை மலர் கொண்டு போற்றும்)
துணங்கறல் (இரண்டும் அப் பேர்).
(8, 5 பெயர்கள்) 4

### ஒப்பனை, சூடுதல், சொருகுதல்

புனைதல், கை செய்தல், வேய்தல்,
பொற்பு(டன்), அலங்கரித்தல்,
வனைதலே, அணிதல், பூசல்,
மண்ணல், ஒப்பனை (ஒன்பானும்);
(வன மலர்) மிலைதல், வேய்தல்,
மலைதல், சூடுதல் (இம் முப் பேர்);
(சினை மலர்) அடைச்சலோடு,
செருகுதல், சொருகுதல் (பேர்).
(9, 3, 2 பெயர்கள்) 5

### உண்ணல், விழுங்கல்

அருந்திடல், துய்த்தல், மாந்தல்,
அயிறலே, அமுது செய்தல்,
(பொருந்தவே) (தாம்) கை தொட்டல்,
புசித்தல், போசனமே, ஆர்தல்,
(பரிந்தனர்) நுகர்தல், தின்றல்,
பாரணம், மிசைதல், துற்றல்,
(இருந்து) உணல் (பேர்); விழுங்கல்
(இசைதரு) நொண்டல், நுங்கல்.
(14, 2 பெயர்கள்) 6

### நித்திரை, நிரம்பாத் தூக்கம், எழுப்பல்

துயிலல், கண் வளர்தல், பள்ளி,
துயிறலே, உறங்கல், துஞ்சல்,
(பயிலும்) கண்படை, அனந்தர்,
படை, கனவோடு (பத்தும்),
(இயலும்) நித்திரையாம்; தூங்கல்,
(என்பது) நிரம்பாத் தூக்கம்;
(அயலவர்) எடுத்தல், எற்றல்,
(ஆங்கு அவை) எழுப்பல் (ஆமே).
(10, 1, 2 பெயர்கள்) 7

### அழுதல், காண்டல், கடைக்கணித்தல்

(விரவிய) அழுதலின் (பேர்),
விம்மலே, கலுழ், கலக்கம்,
பொருமுதல், கசிவே, ஏங்கல்,
உரோதனம், இரங்கல் (எட்டாம்);

தெரிசனம், பார்வை, நோக்கம்,
(சிறப்பின்) கண்ணுறல், காண்டற் (பேர்);
(அருமையின்) சிறக்கணித்தல்,
அபாங்கமே, கடைக் கணித்தல்.
*(8, 4, 2 பெயர்கள்)* *8*

**கொடை**

புரவு, தானம், பகுத்தல்,
பொழிதலே, உதவல், நீட்டல்,
(விரவு) உபகாரம், வேள்வி,
விதரணம், கவிகை, வண்மை,
அருளல், வேளாண்மை, ஈகை,
அளித்தலே, உதாரம், வீசல்,
தருதலினொடு, தியாகம்,
கொடை, கடப்பாடும் (சாற்றும்).
*(20 பெயர்கள்)* *9*

**வரையாது கொடுத்தல்**

(படை மயக்குற்ற போதும்
படை மடம் ஒன்றிலாதான்,
மடைசெறி கடகத் தோளான்,
மதிக்குடை மன்னர் மன்னன்,
கெடிமன்னர் வணங்கும் தாளான்,
கிருட்டிண ராயன் கை போல்)
கொடை மடம், (என்று சொல்ப)
வரையாது கொடுத்தல் (ஆமே).
*(1 பெயர்)* *10*

**பிச்சை, இரத்தல், கரத்தல்**

(போற்றிய) பயிக்கம், பாகம்,
(பொருந்திய) பலியே, பிண்டம்,
(சாற்றிய) பிடிதம், ஐயம்,
சரிதை, (ஏழ்) பிச்சையின் (பேர்);
ஏற்றலே, குறைகோள், (பின் சென்று)
இரத்தலே, வேண்டலும் (பேர்);
மாற்றலே, கரத்தல் (ஆகும்),
மறுத்தலும், நிறுத்தலும் (பேர்).
*(7, 3, 3 பெயர்கள்)* *11*

**எழுதுதல், எழுத்து, அரக்குதல், தூய்தாக்கல்**

தெரித்தலே, வரைதலோடு,
தீட்டுதல், பொறித்தல், கீறல்,
வரித்தலே, எழுதுதல் (பேர்);
வரி, பொறி, கணக்கு, இரேகை,
(விரித்த) அக்கரம், எழுத்து (ஆம்);
(விரகொடு) சிதைத்தல், தேய்த்தல்,
அரக்குதல், கீழ்தலும் (பேர்);
(அடைவே) தூய்தாக்கல், சீத்தல்.
*(6, 5, 3, 1 பெயர்கள்)* *12*

**பூசை, யாகம், மீதூரல்**

அர்ச்சனை, வழிபாடே,
ஆராதனை, (மூன்றும்) பூசை;
எச்சமே, கிரது, வேள்வி,
இட்டியே, அசனம், ஓமம்,
(மெச்சிய) மகமே, யூபம்,
விதியுளி, யாகம் (ஆகும்);
(நிச்சயம்) மீதூரல் (பேர்),
இடங்கழி, நெருங்கலும் (பேர்).
*(3, 9, 2 பெயர்கள்)* *13*

**வேர்வு, வருத்தம் தீர்தல், வடுப்படல், விடுதல், அடங்கல், சோர்வு, வழு**

வியர்த்தலே, சுவேதம், வேர்வு (ஆம்),
கசிவும் (ஆம்); அயாவுயிர்த்தல்,
(மயக்கு அற) வருத்தம் தீர்தல்;
வடுப்படல், கதுவாய் (ஆமே);
உயிர்த்தலே, விடுதல் (என்ப);
ஒருங்கு (என்ப), அடங்கல் (தானே);
கயக்கு, சோர்வு (ஆம்); பிறக்கு,
(காட்டிய) வழுவின் (பேரே).
*(3, 1, 1, 1, 1, 1, 1 பெயர்கள்)* *14*

**மூடுதல், பரத்தல், மஞ்சனம், குளித்தல், பிறகிடல்**

மூடுதல், கவித்தல், மூய்தல்;
(முடியவே) பரத்தல், ஊர்தல்;
(நீடிய) நானம் (என்ப),
(நிகழ்த்து) மஞ்சனத்தின் (நாமம்);
ஆடலே, படிதல், தோய்தல்,
(ஆம் இவை) குளித்தல் (என்ப);
(பீடு அறப்) பிறகிடல் (பேர்),
பிறக்கிடல், பின்றல் (ஆமே).
*(2, 1, 1, 3, 2 பெயர்கள்)* *15*

**அடக்கம், தங்கல், பாந்தல், தேய்த்தல்**

முடக்கமே, மடங்கல், குத்தி,
முணங்கொடு, நொறில், ஒடுக்கம்,
அடக்கம் (ஆம்); வதிதல், வைகல்,
அல்கலே, இறுத்தல், தாழ்தல்,
விடுத்தல், (ஆறும்) தங்கல் (பேர்);
வசித்தலோடு, இறையும் (அப் பேர்);
ஒடுக்கமே, பதுங்கல், பாந்தல்;
உரைத்தலே, உரிஞ்சல், தேய்த்தல்.
*(6, 8, 2, 2 பெயர்கள்)* *16*

**காதலோர் கூட்டம், புலத்தல், புலவி நீட்டம்**

(மெலிவு இல்) மைதுனம், புணர்ச்சி,
விழைச்சொடு, விழைவு, தல்லே,
கலவியே, கிரீடை, ஆடல்,
காதலோர் கூட்டம் (எண் பேர்);
புலவியே, புலத்தல் (என்ப),
ஊடலும் (அதன் பொருட்டே);
(நலம் மிகு) துனி (எனும் சொல்),
(நாட்டிய) புலவி நீட்டம்.
*(8, 2, 1 பெயர்கள்)* *17*

**கூடியும் கூட்டமின்மை, நணுகாராகி உரை மறுத்திருத்தல், ஆடவர் நீங்க உள்ளே அடைத்திருத்தல், ஊடலைத் தீர்த்தல்**

கூடியும் கூட்டம் இன்மை,
(குலவிய) புலவி (என்ப);
ஊடலே, நணுகாராகி
உரை மறுத்திருத்தல் (ஆகும்);
ஆடவர் நீங்க உள்ளே
அடைத்துறல், துனி(யே என்பர்);
ஊடலைத் தீர்த்தலின் (பேர்),
உணர்த்தல், ஒல்லல் (ஆகும்).
(1, 1, 1, 2 பெயர்கள்) 18

**தண்டனிடல், ஆலிங்கனம், கும்பிடல்**

வந்தனம், பணிதல், காணல்,
வழிபடல், பணிவு, இறைஞ்சல்,
(தம் தலை) வணங்கல், பார்த்தல்,
தாழ்தல், (ஒன்பானும்) தண்டன்;
(முந்திய) தழுவல், விள்ளல்,
முயங்கல், ஆலிங்கனப் (பேர்);
(அந்தமாத்) தொழல், கை கூப்பல்,
அஞ்சலி, கும்பிடல் (பேர்).
(9, 3, 3 பெயர்கள்) 19

**சாவு**

துஞ்சலே, வீடல், மாளல்,
(சொற்றிடும்) விளிவு, வீவு,
முஞ்சலே, உலத்தல், பொன்றல்,
முடிதலே, துவன்றல், மாய்தல்,
(எஞ்சிய) மரணம், வியோகம்,
இல்லெனல், கழிவு, இறத்தல்,
(அஞ்சிய) தபுதல், சாவின்
(அபிதானம் பன்னேழ் ஆமே).
(17 பெயர்கள்) 20

**முறிதல், சாய்தல்**

பரிதலே, ஞெமிர்தல், (பற்றுது)
ஒடிதலே, இடிதல், (சால)
முரிதலே, இறுதல், (ஆறும்)
முறிதலே, ஒசிதலும் (பேர்);
இரிதலே, நெரிதல், சோரல்,
இடைதலே, உடைதலோடு,
சரிதலே, கெடுதல், (ஏழும்)
சாய்தலின் (நாமம் ஆமே).
(7, 7 பெயர்கள்) 21

**முறித்தல், துவளல், இசைப்பு**

ஒசித்தலே, அகைத்தல், கோடல்,
ஒடித்தலே, முறித்தலின் (பேர்),
இசித்தலே, ஞெமிர்த்தலோடே,
இறுத்தலும் (அதன் பேர் என்ப);
ஒசிந்திடல், அசைதல், (சாய்ந்தே)
உவளலும், துவளல் (ஆமே);
இசைப்பின் (பேர்), புணர்ச்சி, (மற்றை)
இசைவும் (ஆம்), இயைபும் (ஆமே).
(7, 3, 3 பெயர்கள்) 22

**வளைத்தல், பிடித்தல், கட்டல்**

(வசப்பட) வலித்தல், சூழ்தல்,
வளாகமும், வளைத்தல் (முப் பேர்);
(இசைத்திடின்) பிடித்தலின் (பேர்),
தொடல், பற்றல் (இரு பேர் ஆகும்);
விசித்தலே, தொடுத்தல், பந்தம்,
வீக்குதல், சிமிழ்த்தல், யாப்பே,
அசைத்தலே, பிணித்தல், ஆர்த்தல்,
(ஒன்பதும்) கட்டல் (ஆமே).
(3, 2, 9 பெயர்கள்) 23

**அரிதல், வெட்டல்**

அரிதலின் (பேர்), சேதித்தல்,
அறுத்திடல், விடுவாய் செய்தல்,
(விரிவுறச்) சூலல், கொய்தல்,
(விதியுளி) ஈர்தல் (ஆறும்);
பரிதல், கண்டித்தலோடு,
பகுத்திடல், தடிதல், எற்றல்,
(தரம் உறத்) துமித்தல் (ஆறும்)
வெட்டல் (ஆம்), தறித்தலும் (பேர்).
(6, 7 பெயர்கள்) 24

**கீறல், கிளைத்தல், கொழித்தல், வழிப் பறித்தல்**

கீறலே, கீளல், கீண்டல்,
கிழித்திடல், கீன்றல், கீழ்தல்,
பீறல் (ஆறும் பேர்); (மற்றுப்)
பிளிறலே, ஞெண்டல், கிண்டல்,
(மாறிடக்) கிளைத்தல் (முப் பேர்);
வரன்றல், தெள்ளுதல், கொழித்தல்;
ஆறலை, வழிப்பறித்தல்,
அதர்கோளும் (அப் பேர் ஆமே).
(6, 3, 2, 2 பெயர்கள்) 25

**பறித்தல், கத்தரித்தல், குட்டல், தோண்டுதல், தடுத்தல்**

கட்டலே, களைதல், குற்றல்,
பறித்தல்; கத்தரித்தல், கொய்தல்;
குட்டலே, தகர்த்தல் (ஆகும்),
உடைத்தலும் (கூறும் அப் பேர்);
தொட்டலே, அகழ்தலோடு,
தொடுதல், தோண்டுதலின் (பேராம்);
தட்டல், வாரித்தல், ஆணை,
தகைதலே, தடுத்தலின் (பேர்).
(3, 1, 2, 3, 4 பெயர்கள்) 26

**ஐம்பொறி நுகர்வு, விடுத்தல், அடுக்குதல், ஒழிதல், தாழ்தல்**

(அடுத்த) துப்புரவும், துவ்வும்,
ஐம்பொறி நுகர்வ (ஆகும்);

விடுத்தல், மோசனமே, மோக்கம்,
வீதமாம், தீர்தலும் (பேர்);
அடுக்குதல் (பேரே), ஏற்றல்;
(ஆம்) ஓவல், ஒழிதல் (என்ப);
(நடுக்குறத்) தாழ்தலின் (பேர்),
குரங்குதல், குனிவும் (நாட்டும்).
*(2, 4, 1, 1, 2 பெயர்கள்)* *27*

**முடைதல், மாற்றல், மிசை, நிலைப்படச் செய்தல், நிறுத்தல், சொலித்திடல், வகிர்தல்**

வலத்தலே, நிணத்தல் (என்ப),
முடைதல் (ஆம்); மாற்றலின் (பேர்),
விலக்கல் (ஆம்); மிசையின் (பேரே),
மீமிசை(யாம்); தாபித்தல்,
நிலைப்படச் செய்தலின் (பேர்);
நிறுத்தலே, நோன்றல் (என்ப);
சொலித்திடல், இடத்தல் (ஆகும்);
துவர்தலே, வகிர்தல் (என்ப).
*(2, 1, 1, 1, 1, 1, 1 பெயர்கள்)* *28*

**சிந்தல், வீசுதல், முட்டல், அவித்தல்**

சிதர்த்தலே, உகுத்தல், தூவல்,
சிந்தலே, உளர்தலும் (பேர்);
(எதிர்த்து) வீசுதலே, ஓச்சல்,
செலவிடல், எறிதல் (முப் பேர்);
(இதத்தொடு) பொருத்தல், மாட்டல்,
(இரு பெயர்) மூட்டல் (என்ப);
நதுத்தலே, நொதுத்தலோடு,
நவித்தலும், அவித்தல் (பேரே).
*(4, 3, 2, 3 பெயர்கள்)* *29*

**குத்தல், அடித்தல், வசமாக்கல், முண்டிதமாக்கல்**

புடைத்தலே, எறிதல், எற்றல்,
(பொத்தெனக்) குத்தல் (முப் பேர்);
அடித்தலே, கொட்டல், மொத்தல்,
அறைதலே, அகைத்தல், எற்றல்,
(பிடித்தனர்) அதுக்கல், மோதல்,
(பேசிய) வழுக்கல் (என்ப);
வடித்தலே, வசமாக்கல் (பேர்);
மழித்தல், முண்டிதமே ஆக்கல்.
*(3, 8, 1, 1 பெயர்கள்)* *30*

**செறித்தல், துளைத்தல், வாருதல், கொள்ளை**

அளித்தல், பாதிடு, பெய்தல்,
(ஆம் முப் பேர்) செறித்தல் (என்ப);
துளைத்தலின் (பேர்), திளைத்தல்,
குயிறல் (ஆம்), தொள்ளலும் (பேர்);
வளைத்தலே, கவர்தல், வெள்வல்,
வாருதல், கொளலும் (ஆகும்);
(கிளத்துங்கால்) சூறை, கொண்டி,
(கேடுறும்) கொள்ளை (ஆமே).
*(3, 3, 4, 2 பெயர்கள்)* *31*

**தடவல், பரத்தல், முகத்தல், தூவல், அசைதல்**

வருடல், தைவரலே, நீவல்,
(வரும் முப்பேர்) தடவல் (ஆகும்);
விரியலே, பரத்தல் (என்ப),
(விளம்பு) பாரித்தலும் (பேர்);
(தெரியவே) தோண்டல், நோண்டல்,
(சேரவே) முகத்தலின் (பேர்);
சொரிதலே, பொழிதல், தூவல்;
துயல்வரல், அசைதலின் (பேர்).
*(3, 2, 2, 2, 1 பெயர்கள்)* *32*

**காத்தல், காவல், பாதுகாத்தல்**

திதி, நிலை பெறுத்தல், நோக்கல்,
(சிறப்பொடு) புரத்தல், (நான்கும்)
(விதமுடன்) காத்தலின் (பேர்);
வேலியே, ஏமம், சேமம்,
கதவு, அரண், காப்பு, தட்டி,
கடி, (எட்டும்) காவல் (பேரே);
(பதம் உற) ஓம்பல், போற்றல்,
பாதுகாத்தல் (பேராகும்).
*(4, 8, 2 பெயர்கள்)* *33*

**பகுத்தல், விரித்தல், பொதிதல், புதைத்தல், குற்றல், நெரித்தல்**

பகுத்தலே, பாத்து, பாகம்,
பங்கீடு, பாதியும் (பேர்);
இகுத்தலே, விரித்தலின் (பேர்);
(ஏற்றிடும்) பொதிதல், வீக்கம்;
(மிகைப்படப்) புதைத்தலின் (பேர்),
தணித்தல், சேமித்தல் (என்ப);
(திகைக்கவே) அவைத்தல், குற்றல்;
தெறுதல் (என்பது), நெரித்தல்.
*(4, 1, 1, 2, 1, 1 பெயர்கள்)* *34*

**கொலை செய்தல், கொலை, வேட்டை**

எருக்கல், காதுதல், சவட்டல்,
எற்றுதல், ஒழித்தல், கோறல்,
முருக்கல், வீட்டுதல், படுத்தல்,
(முதிர்) கொலை செய்தல் (ஒன்பான்),
(உரைத்த) மாரணமும் (அப் பேர்);
ஊறு, கோள், அணங்கு, வேட்டம்,
(வரித்திடின்) கொலையின் (நாற் பேர்);
வேட்டை, பாபத்தி (என்ப).
*(10, 4, 1 பெயர்கள்)* *35*

**மெய்கோட்டிக் கை குவித்தல், தேடல், துவட்டல், தொடுதல்**

குடமே, மெய்கோட்டிக் கையைக்
குவித்தலின் (நாமம் தானே);
(கடுகிய) நாடல், நேடல்,
கையரிக் கொளலே, தேடல்,
(தொடர்புறு) துருவும் (ஆகும்);
துவட்டலே, நுடக்கல் (என்ப);

தொடுதலே, திவளல், ஊறு,
பரிசனம், துவளலும் (பேர்).
(1, 4, 1, 4 பெயர்கள்) 36

**நடத்தல்**

கடத்தலே, படர்தல், சேறல்,
கழிதலே, இவறல், ஏகல்,
விடுத்திடல், இறத்தல், போகல்,
(மெல்லென) வழங்கல், நீங்கல்,
(தடத்தினில்) செலவே, இல்லல்,
தணத்தலே, இயங்கல், தீர்தல்,
நடத்தலின் (பேர் ஈரெட்டாம்),
ஒதுங்கலும் (நாட்டும் அப் பேர்).
(17 பெயர்கள்) 37

**குதித்தல், எழுச்சி**

மிதித்திடல், உகளல், பாய்தல்,
(விரைவுடனே) உறுக்கல்,
குதித்தலின் (பேரே நான்காம்),
குப்புறல் ( இதுவும் அப்பேர்);
கதித்தலே, அகைத்தல், பம்பல்,
கஞுறலே, பொலிவு, பாய்ச்சல்,
(இதத்துடன்) ஒதுக்கல், ஏர்பு, (என்று
எட்டுமே) எழுச்சியின் (பேர்).
(5, 8 பெயர்கள்) 38

**கடுப்பு, விரைவு**

கடுமையே, கதழ்வு, வல்லே,
கதனமே, துரிதம், ஒல்லே,
(அடைவுள) நொறில், (என்று ஏழும்)
கடுப்பு (என அறையலாகும்);
முடுகலே, விசையே, தாரை,
(முந்திய) கவனம், வேகம்,
சடிதி, சீக்கிரமே, ஈண்டே,
விரைவின் (பேர்), விதுப்பும் (சாற்றும்).
(7, 9 பெயர்கள்) 39

**விரைவுக் குறிப்பு, மந்தம்**

ஐயெனலொடு, பொள்ளென்றல்,
(ஆன) குத்திரமே, சண்டம்,
நொய்தென்றல், கதுமென்றிட்டல்,
(நொடியினில்) பொருக்கென்றிட்டல்,
வெய்தென்றல், ஞெள்ளல், கோரம்,
விரைவினில் குறிப்பு (பத்தாம்);
மெய்யெனலோடு, மெல்லென்றல்,
பையெனல், தாழ்த்தல், மந்தம்.
(10, 4 பெயர்கள்) 40

**சுழலல், கடத்தல்**

தெருமரல், மறுகலோடே,
அலமரல், திரிதல், கொட்கல்,
சொரிதலே; சூர்த்தலோடு,
பிரமரி, சுழலல் (எட்டாம்);
பரிகரி, தாவல், சேறல்,
பாறுதல், ஓவல், மீளல்,
(வரிசையில்) தாண்டல், தத்தல்,
வாவல், தாவுதல், கடத்தல்.
(8, 10 பெயர்கள்) 41

**ஓடல், நேரோடல், மண்டலமாக ஓடல், உலாப் போதல்**

(நீதியில்) பாறல், ஓடல்
நிமிர்தல், நீளுதலும் (அப்பேர்);
ஆதி(யே), வீதி, (என்ப)
(இரு பெயர் இவை) நேர் ஓடல்;
மாதி, சாரிகையே, சுற்று,
வாளி, மண்டலமா ஓடல்;
(ஓதிய) பவனி (ஒன்றே),
உலாப் போதல் (ஆகும் என்ப).
(3, 2, 4, 1 பெயர்கள்) 42

**கிட்டுதல், நீங்குதல், உலாவல்**

மருவுதல், நண்ணல், சார்தல்,
(மற்றைய) அணுகல், புல்லல்,
அருகுறல், சிவணல், துன்னல்,
அண்ணல், (ஒன்பான் பேர்) கிட்டல்;
ஒருவுதல், துறத்தல், வல்லி,
உணர்வொடு, தணப்பு, நீங்கல்;
(வருமுறை) உலாவலின் (பேர்),
வழங்கலோடு, அசைதல் (ஆமே).
(9, 5, 2 பெயர்கள்) 43

**செலுத்தல், உராய்ப்போதல், குழைவு**

நடவலே, உகைத்தல், ஒய்தல்,
(நலமொடு) தூண்டல், ஊர்தல்,
கடவலே, அகைத்தல், உய்த்தல்,
(கடிது) ஓட்டல், செலுத்தல் (ஒன்பான்);
(உடன்) உராய்ப் போதலின் (பேர்),
உரிஞ்சலோடு, உரோஞ்சல் (ஆகும்);
(படியவே) நெகிழ்தல், ஒல்கல்,
(இரு பெயர்) குழைவின் (பாலாம்).
(9, 2, 2 பெயர்கள்) 44

**வலியழித்தல், வழிப்படுத்தல், எதிர் கொண்டு போதல், உழக்கல்**

ஆற்றறுத்திடுதல் (தானே),
(ஆம்) வலி அழித்தலின் (பேர்);
(ஆற்றிய) வழிப்படுத்தல் (பெயர்),
ஆற்றுப்படை (என்றாகும்);
ஏற்றல், போதரல் (எனும் சொல்),
எதிர் கொடு போதல் (என்ப);
(மாற்றிய) உழுதலோடு,
மடித்தலே, உழக்கல் (ஆகும்).
(1, 1, 2, 2 பெயர்கள்) 45

**போர்**

முரண், வினை, சமரே, ஆர்ப்பு,
மொய், தும்பை, ஞாட்பு, தாக்கு,
செரு, மறல், காளபங்கள்,
சினவலே, அமர், மலைப்போடு,
இரணம், ஆகவம், நிகர்த்தல்,
இகலே, (வெஞ்) சமம், உடன்றல்,
பொருதல், சங்கிராமம், தெவ்வு,
பூசல், ஆயோதனம், போர்.
*(25 பெயர்கள்)* *46*

**எதிர்தல், ஒட்டலர் நாடழித்தல், ஒட்டுநர் மேற் சாராமை**

முட்டுதலுடனே, தாக்கல்,
தலைப்படல், முடுகல், ஏற்றல்,
கிட்டலே, எதிர்தல் (ஆகும்),
கிடைத்தலும் (அதன் பேர் தானே);
ஒட்டலர் நாடு அழித்தல்,
(உற்ற பேர்) கொற்றவள்ளை;
ஒட்டுநர் மேல் சாராமை,
(உரைத்த பேர்) தழிஞ்சி (ஆமே).
*(7, 1, 1 பெயர்கள்)* *47*

**கூத்து, ஆடல்**

நடம், நட்டம், நடனம், வாணி,
நாடகம், நிருத்தம், தூக்கு,
படிதம், நாட்டியமே, கண்ணுள்,
(பத்தும்) தாண்டவமும், கூத்து (ஆம்),
நடையும், நட்டணமும், (அப்பேர்);
நடித்திடல், பெயர்தல், ஆலல்,
(அடைவிலே) அகவல், தூங்கல்,
அசைவொடு, (ஆறு இவை) ஆடல் (பேர்).
*(13, 6 பெயர்கள்)* *48*

**கூத்தின் விகற்பம், சிரமம் செய்தல், பழகல்**

பிரமரி, வீரட்டானம்,
(பேசில்) உப்பிதம், மலைப்பு,
புரியமே, இலயம், (மற்றும்)
(போற்றும்) உள்ளாளனம்மே,
கரணமே, பரதம், (ஒன்பான்)
(கருது) கூத்தின் விகற்பம்;
பருமித்தல், சிரமம் செய்தல்;
பழகலே, உழத்தல் (என்ப).
*(9, 1, 1 பெயர்கள்)* *49*

**சிவன் நிருத்தம், திருமகள் ஆடல், கொண்டல் வண்ணன் கூத்து, குமரன் ஆடல்**

கொடுகொட்டி, பாண்டரங்கம்,
(கூறு) காபாலம், (மூன்றும்)
(பொடி அணி) சிவன் நிருத்தம்;
(போற்றிய) பரவை, செய்யாள்;
குடம், மல்லோடு, அல்லியம் (தான்),
கொண்டல் வண்ணன் தன் கூத்து (ஆம்);
குடையொடு, துடி, (இரண்டும்)
குமரனது ஆடல் (ஆமே).
*(3, 1, 3, 2 பெயர்கள்)* *50*

**எழுவகை மாதராடல், அயிராணியாடல், துர்க்கை ஆடல், காமன் ஆடல்**

துடி (என்பது), எழுவர் மாதர்
தூங்கலின் (நாமம் ஆகும்);
கடையமே, அயிராணிக்குக்
(காட்டிய நாட்டியப் பேர்);
(வடிவு அமை) துர்க்கை தூக்கு,
(மற்று அது) மரக்கால் (என்ப);
(நெடிய) காமன் (கொண்டு) ஆடும்
நிருத்தமே, (விதித்த) பேடு (ஆம்).
*(1, 1, 1, 1 பெயர்கள்)* *51*

**வெறியாட்டு, கை கோத்து ஆடல், முடக்கிய இரு கை பழுப்புடையொற்றியாடல்**

(அடுத்திடும்) வெறி, கழங்கோடு,
அணங்கு, (இவை) வெறியாட்டின் (பேர்);
(தொடுத்த) கைகோத்தாடல் (பேர்),
(சொல்லிய) குரவை (என்ப);
முடக்கிய இருகை (தானும்)
பழுப்புடை முறையே ஒற்றித்
துடக்கிய நடையின் (நாமம்),
துணங்கை (என்று இயம்பல் ஆமே).
*(3, 1, 1 பெயர்கள்)* *52*

**கை கூப்பி மெய் கோட்டி நிற்றல், குடங்கையைக் குவித்துக் கொட்டல், வாய்கையாற் கொட்டல், குந்தி நிற்றல்**

குடந்தம், கைகூப்பி மெய்யைக்
(கோப்பொடு) கோட்டி நிற்றல்;
குடங்கையைக் குவித்துக் கொட்டல்,
கொம்மை, கொட்டுதல் (என்றாகும்);
(அடர்ந்து) வாய் கையால் கொட்டல்,
ஆவலங் கொட்டல் (என்ப);
(படம்) குந்தி நிற்றலின் (பேர்),
(பகரின்) குஞ்சித்தல் (ஆமே).
*(1, 2, 1, 1 பெயர்கள்)* *53*

**தாளம் போடல், தாள ஒற்று**

வட்டித்தல், ஒற்றறுத்தல்,
வட்டணையுடனே, (மற்றும்)
தட்டல், (என்று இந்த நான்கும்)
தாளம் போடுதலின் (பேரே);
(கிட்டிய) தாளவொற்றுக்
(கிளர்ந்த பேர்) சதியே, சீர் (என்று)
(இட்ட பேர் இரண்டும் ஆம் என்று
இயம்பினர் வியந்த நூலோர்).
*(4, 2 பெயர்கள்)* *54*

**தூய்மை செய்தல், ஏறுதல், இறங்குதல், மௌனம்**

உவளித்தல், தூய்மை செய்தல்,
உபலாளனமும் (அப்பேர்);
இவர்தலே, மீக்கோள், (என்ப)
(இரண்டும்) ஏறுதலின் (நாமம்);
அவா, (மற்றும்) இறங்குதல் (பேர்),
சுதம், அவதாரம் (ஆகும்);
மவுனப் (பேர்) மூகம், மோனம்,
வாளா, கேளா (என்று ஆமே).
(2, 2, 3, 4 பெயர்கள்) 55

**அரசிறை, குடியிறை, சுங்கவிறை, உடன்பாடு**

திறை, மிறை, கப்பமே, பாகுடம்,
அரசிறைப் (பேர் செப்பும்);
கறை, கடன், வரி, இறுப்பு,
கரம், குடியிறை (ஐந்தே பேர்);
(துறைபடும்) உல்கே, ஆயம்,
சுங்கம், சாரிகை(யும் ஆகும்);
(நெறியொடு) வலித்தல், ஒட்டல்,
நேரலே, உடன்பாடு (என்ப).

(4, 5,3, 3 பெயர்கள்) 56

**உற்சாகம், மிக்க செயல், அருமை செய்தல்**

முயற்சி, தாளாண்மை, ஊக்கம்,
(முந்து) தாள், உத்தியோகம்,
இயற்றலே, உஞற்று, உழப்போடு,
ஆள்வினை, (இவை) உற்சாகம்;
(வியக்கும்) ஊராண்மை (ஒன்றே),
மிக ஓங்கிச் சேறல் (ஆகும்);
(நயக்கும்) பேராண்மை (ஒன்றே),
(நாட்டிய) அருமை செய்தல்.
(9, 1, 1 பெயர்கள்) 57

**களவு, சித்து**

கரப்பொடு, கட்டல், பட்டி,
கரவடம், கயவு, கள்ளம்,
திருட்டொடு, படிறு, சோரம்,
தேயமும், களவு (ஈரைந்தாம்),
(விரித்திடும்) தேனுவோடு,
சௌரியம் (ஈண்டும் அப் பேர்);
(தரித்த) சம்பிரதம் (என்ப),
(தக்கதாம்) சித்தின் (பேரே).
(12, 1 பெயர்கள்) 58

**சுமத்தல், அருவல், நீக்கல், மாறுபாடு, தைத்தல்**

தரித்தலே, பொறுத்தலோடு,
தாங்குதல், சுமத்தலின் (பேர்),
பரித்தலும் (ஆகும் என்ப);
பருவரல், அருவலின் (பேர்);
(தெரித்து ஒன்றை) வரைவே, நீக்கல்;
தெற்றலே, மாறுபாடு (ஆம்);
(விரித்திடும்) தைத்தல், அத்து,
(மேவிய) பொல்லம், துன்னம்.
(4, 1, 1, 1, 3 பெயர்கள்) 59

**சுடல், மறைப்பு, அழுந்துதல், உலைப்பு**

(சுறுக்கெனச்) சுடல், சந்தாபம்,
தூபிதம் (இரு பேர் சொல்லும்);
மறைப்பே, ஆவரணம் (ஆகும்),
மாய்த்தலும் (அப்பேர் தானே);
(நெறிப்பட) அழுந்துதல் (பேர்),
ஞெமுங்குதல் (என்று கூறும்);
மிறைத்தலே, அகைத்தல், (சால)
வேதனை, உலைப்பு (முப் பேர்).
(2, 2, 1, 3 பெயர்கள்) 60

**இளைத்தல், ஒடுங்கல், மேற்கோள்**

நாம்பலே, பழங்கணோடு,
(நாட்டிய) மெலிவு, ஞொள்கல்,
தேம்பலே, கிருசம், (போதச்)
சிக்கல், (ஏழ்) இளைத்தலின் (பேர்);
சாம்பலே, கூம்பல் (என்ப)
(இருபெயர்), ஒடுங்கல் (சாற்றும்);
(மேம்படச் சொல்லுகின்ற)
மேற் கோளே, பூட்கை (என்ப).
(7, 2, 1 பெயர்கள்) 61

**வற்புறுத்தல், முளைத்தல், அலர்தல், தள்ளல்**

வருட்டலே, தெருட்டல், (இன்ன)
வற்புறுத்தல் (பேர் தானே);
உருத்தலே, நாறல், தோற்றல்,
முளைத்தல் (ஆம்), பொடித்தலும் (பேர்);
விரித்திடல், எதிர்தல், விள்ளல்,
அவிர்தலே, அலர்தல் (ஆகும்);
(தரிப்பற) நூக்கல், ஊன்றல்,
நோன்றலும், தள்ளல் (முப் பேர்).
(2, 4, 3, 3 பெயர்கள்) 62

**சிரித்தல், அவமதிச் சிரிப்பு, விடல், கூடல், பிணக்கு**

முறுவலே, நகையே, ஆர்ப்பு,
மூரலே, இளியே, ஆசம்,
(அறிவொடு) சிரித்தல் (ஆறே);
அசி, அவமதிச் சிரிப்பு (ஆம்);
(குறியொடு) விடல், வியோகம்;
கூடலே, யோகம் (என்ப);
மறல், அரில், அபரமோடு,
(வரும்) துவக்கு, (இவை) பிணக்கு (ஆம்).
(6, 1, 1, 1, 4 பெயர்கள்) 63

**விற்றல், ஒற்றுமை, ஒற்று, தலைக்காவல், கிடைத்தல்**

விற்றல் (பேர்), பகர்தல், கூறல்,
விலை, நொடை, மாறல் (ஐந்தாம்);
ஒற்றுமை, குறிக்கோள் (என்ப);
ஒற்று, வேய் (சொற்ற பேரே);
(இற்று இவை நிற்க, மற்றை)
இளை, தலைக்காவல் (பேரே);
பெற்றிடல், பயத்தல், வாய்த்தல்,
கிடைத்தல் (ஆம் பேசும் முப் பேர்).
(5, 1, 1, 1, 3 பெயர்கள்) 64

**காய்தல், கொப்பளித்தல், மறைபுகல், ஏவல், வறுமை எய்தல்**

முளிதலே, வறத்தலோடு,
முதிர்ந்திடல், உலரல், காய்தல்;
பிளிற்றலே, பில்கல், காலல்,
உமிழ்தல், கொப்பளித்தல் (பேரே);
(தளர்ச்சியாம்) மறைபுகல் (பேர்),
சரண் புகல் (ஆகும் என்ப);
(விளக்கிய) வியங்கோள், ஏவல்;
வீதலே, வறுமை எய்தல்.
(4, 4, 1, 1, 1 பெயர்கள்) 65

**அலையல், சொறி, துழாவல்**

அலைசலே, ஞெகிழ்தல், ஞொள்கல்,
அலையலே, ஆஞ்சியும் (பேர்);
(உலைவுறு) சொறி, கண்டுதி,
தினவு (என இரு பேர் ஓதும்);
கலவலே, அளாவலோடு,
கலம்பகமே, கலாவல்,
(துலைபெறுகின்ற) சங்கீரணம்,
(ஐந்தும்) துழாவலின் (பேர்).
(4, 2, 5 பெயர்கள்) 66

**சத்தி செய்தல் (வாந்தி எடுத்தல்), மூச்சு, கொட்டாவி**

(விம்மியே) உமிழ்தல், கான்றல்,
(மேவும்) உற்காரம், சத்தி;
தும்மலே, சுவாசம், மூச்சு (ஆம்);
கொட்டாவியே, ஆவித்தல்;
(அம்ம இச் செயல் பற்றும் பேர்க்கு
அறுபத்தேழ் விருத்தம் செய்தான்,
மைம் முகில் குணபத்திரன் தாள்
வணங்கும் மண்டலவன்தானே).
(3, 2, 1 பெயர்கள்) 67

**ஒன்பதாவது**
**செயல் பற்றிய பெயர்த் தொகுதி முற்றிற்று**

## 10. ஒலி பற்றிய பெயர்த் தொகுதி

**காப்பு**

(வலி உற்ற வெவ்வினைப் பேர்
மாற்றியே, அநந்த ஞானம்
பொலிவுற்ற கேவலப் பெண்
புணர்ந்து, வீற்றிருந்த போதன்,
மலர் உற்று நடந்த வாமன்
மரை புரை பாதம் போற்றி,
ஒலி பற்றும் பெயர்க் கூட்டத்தை
உணர்த்துவம்; இப்பாற் கேண்மின்). 1

**சொல்**

மாற்றமே, மொழியே, கிரே,
வாணியே, கதை, எதிர்ப்பு,
கூற்று, உரை, பனுவல், செப்பு,
குயில், வினு, கிளவி, காதை,
(ஏற்றிடும்) நொடி, இயத்தோடு,
இசை, பறை, வாக்கு, பாணி,
(தோற்றமாம்) நுவலினோடு,
(மூவேழும்) சொல்லின் (பேரே).
(21 பெயர்கள்) 2

**வாசகம், பதம், இயம்புதல், பல்கால் விளம்புதல்**

வசித்தல், பாசுரமே, வார்த்தை,
வாசகம், (வசனமும் (பேர்);
(திசைப்படும்) உரையே, பாழி,
(சிதைவிலாப்) பதம் (என்று ஓதும்);
இசைத்தலே, பிதற்றல், பேசல்,
இயம்புதல், இறுத்தலும் (பேர்);
(விசைப்பின்) மீதுரையே, பல்கால்
விளம்புதல் (ஆகும் என்ப).
(4, 2, 4, 1 பெயர்கள்) 3

**வாழ்த்தல், வாழ்த்து, பழித்தல்**

பழிச்சல், ஏத்துதல், துதித்தல்,
பரசுதல், பரவல், போற்றல்,
வழுத்தல், தோத்திரமே, மெச்சல்,
வாழ்த்தல் (ஆம்), துதியும் (ஏற்கும்);
(அழிப்பிலா) ஆசி, வாழ்த்தே,
ஆசிடை (என்றும் கூறும்);
பழிச்சொலே, சிறு சொல், தீச் சொல்,
பரிவாதம், பழித்தல் (என்ப).
(10, 2, 4 பெயர்கள்) 4

**சொல்லல்**

விரித்தலே, கதைத்தலோடு,
மிழற்றுதல், விளம்பல், கூறல்,
உரைத்தலே, நொடித்தல், சாற்றல்,
ஓதுதல், குயிறல், சொற்றல்,

தெரித்தலே, நவிலலோடு,
வலித்திடல், செப்பல், ஆடல்,
(பரப்புடன்) மொழிதலோடு,
பணித்தல், (பன்னெட்டும்) சொல்லல்.
(18 பெயர்கள்) 5

**மெய், பொய்**

சாதம், வாய், வாய்மை, ஆணை,
சத்தியம், திடம், வேளாண்மை,
(நீதியாம்) நிலைமை, உண்மை,
நிச்சயம், சரதம், மெய்ப்(பேர்);
(வாதையாம்) மிச்சை, தள்ளல்,
வலக்காரம், வழுது, பெட்டு,
சாதனை, மாயம், வஞ்சம்,
சடம், பிசி, படிறு, பொய்ப் (பேர்).
(11, 11 பெயர்கள்) 6

**படித்தல், விடாது பேசல், மறைத்த சொல், உறுதிச் சொல்**

படித்தல், வாசித்தல், ஓதல்,
பாடல், அத்தியயனமும் (பேர்);
(பிடித்து ஒன்றை) விடாது பேசல்,
பிதற்றுதல் (என்று பேரே);
இடக்கரே, மறைத்த சொல் (பேர்
என்ப), கூகனமும் (ஆமே);
இடித்தலே, கழறல், (என்ப)
(இருபெயர்) உறுதிச் சொல்லே.
(4, 1, 2, 2 பெயர்கள்) 7

**பழிமொழி, சிலர் அறிந்து புறங்கூறல், பலரும் தூற்றல், பலர் அறி சொல்**

அம்பலே, கௌவை, ஏசல்,
அலர், பழிமொழி (நாற்பேரே);
அம்பலே, சிலர் அறிந்திட்டது
புறங்கூறல் (ஆகும்);
(அம்புவிப்) பலரும் தூற்றும்
(அம்)மொழி, அலரே (என்ப);
(வெம்பிய) பெருஞ் சொல், (என்ப)
(மிகப்) பலர் அறி சொல் (ஆமே).
(4, 1, 1, 1 பெயர்கள்) 8

**நிரம்பா மென் சொல், புறங் கூறல்**

மிழலையே, குதலை, கொஞ்சல்,
(வினவும்) உல்லாபம், (உற்ற)
மழலையே, (ஒற்று நீங்கி
வழுப்பட) நிரம்பா மென்சொல்;
(பிழைபடும்) கொடுவாய், குஞ்சம்,
பிசுனம், கொண்டியம், தொடுப்பு,
(விழைவிலாக்) குறளை, (ஆறும்)
(வெறும்) புறங்கூற்றின் (பேரே).
(5, 6 பெயர்கள்) 9

**சத்தியம், மூதுரை, பழமொழி, கதை**

(வழுவிலாச்) சபதம், ஆணை,
வஞ்சினமொடு, வட்டித்தல்,
(தழுவிய) பிரமாணம், சூள்,
சத்தியம், விரதமும் (பேர்);
மொழிமை, மூதுரை, முன்சொல்லும்,
முதுசொல்லும், பழஞ் சொல்லும் (பேர்);
பழமொழி, முதுமை (ஆகும்);
(படுங்)கதை , காரணச் சொல்.
(7, 4, 1, 1 பெயர்கள்) 10

**திசைச் சொல், நன்னிமித்தம், பொர அழைத்தல், முகமன்**

(தரித்திடும்) திசைச் சொல் (என்ப),
(சாரும்) தேசிகம் (என்றாகும்);
விரிச்சியே, வாய்ப்புள், (என்ப)
(மிக்க) நற்சொல் நிமித்தம்;
(அரிப்புறப்) பொர அழைத்தல்,
அறைகூவல் (ஆகும் என்ப);
(உரைத்திடும்) முகமனின் (பேர்),
உபசாரம், நயம், சம்மானம்.
(1, 2, 1, 3 பெயர்கள்) 11

**வினவல், எதிர்மொழி, வினாவிடை கூடிய பொருள், தன் மேம்பாட்டைத் தானே கூறல், அசதியாடல்**

வினவலே, கடாவல் (ஆகும்);
விடை, (அதற்கு) எதிர்மொழிப் (பேர்);
வினவொடு விடையும் கூடி
விரும்பிய பொருள், சல்லாபம்;
தனது மேம்பாட்டுரைப் (பேர்),
(தான்) நெடுமொழி (என்று ஆமே);
(இள)நகை, நயச்சொல் (என்ப),
(எய்துமே) அசதியாடல்.
(1, 1, 1, 1, 2 பெயர்கள்) 12

**தேற்றம், பொருளின்மை, கேளா என்பது, கூறியது கூறல்**

கடைப்பிடி, ஓர்ப்பு, (வேறு)
(காட்டிய) குறிக்கோள், தேற்றம்;
(அடுத்த நற்) பொருள் இலாமை,
அநர்த்தமே (ஆகும் என்ப);
(எடுத்த) வாளா (எனும் சொல்),
(இது) கேளா (ஆகும் என்ப);
(கொடுத்திடும்) புனருத்தி(ப் பேர்),
கூறிய கூறலாமே.
(3, 1, 1, 1 பெயர்கள்) 13

**அழைத்தல், கீழறுத்தல்**

கூவலே, உளைத்தலோடு,
(குறுகவே) இகுத்தல், கேதல்,
வாவெனல், கரைதலே,
ஆகருடணமொடு, விளித்தல்,

(மேவும் மற்று) அகவல், (ஒன்பான்)
(விளுவியே) அழைத்தல் (பேரே);
(ஆவலால்) கீழ் அறுத்தல்,
அறைபோதல் (ஆகும் என்ப).
(11, 1 பெயர்கள்) 14

**சொல்மாலே, ஏற்றம், மேம்பாடு, புகழ், மிகு புகழ்**

தோற்றம், சீர், சுலோகம், மெய்ப்பே,
சொன்மாலே (நாற்பேர் சொல்லும்);
ஏற்றமே, கியாதி (என்ப);
(இயன்ற) மேம்பாட்டின் (நாமம்),
ஊற்றம் (ஆம்); சீர்த்தி, கீர்த்தி,
ஒளி, புகழ், மீக்கூற்றும் (பேர்);
(மேல் திகழ்) சீர்த்தி, கீர்த்தி,
மிகுபுகழ் (இரு பேர் ஆமே).
(4, 1, 1, 4, 2 பெயர்கள்) 15

**முன்னிலேயசைச் சொல், அசைச் சொல், உடன் நிகழ்ச்சி இடைச்சொல்**

இக, மியா, மதி, மோ, வாழி,
இகும், சின், முன்னிலேயசைச் சொல்;
இக, மியா, அரோ, போ, மாதோடு,
இருந்து, ஓரும், (ஏழ்) அசைச் சொல்,
(புகலுங்கால் ஒப்பிலாத)
போலும் (அப்பொருட்டே ஆகும்);
(நிகர் இலா) ஒடுவும், ஓடும்,
(நேருமே) உடனிகழ்ச்சி.
(7, 8, 2 பெயர்கள்) 16

**இடைச்சொல், சாரியை**

அம்(மோடு), ஆம், தம், நம், நும், ஏ,
அல், ஆல்; வான், பாக்கு, தில்லே,
எம்(மோடு), ஏம், மன்னே, பானே, உம்,
(ஈரெட்டு) இடைச் சொல் (என்ப);
அம்(மோடு), இற்று, அற்றே, அத்தே,
அல், இல், அன், ஆனே, ஐ(யே),
தம், நும்(மே), அ(வ்வே), கு(வ்வே)
சாரியை (பன்மூன்று என்ப).
(16, 13 பெயர்கள்) 17

**எழுத்தின் சாரியை, வேற்றுமையுருபு**

கரமொடு, கானே, காரம்,
(காட்டிய) அ(கரம்) என்ப
(தரம் உற) எழுத்துக்கு ஏற்ற
சாரியை (நான்கே சாற்றும்);
(கருதிடில்) ஐயே, ஆலே,
கு(வ்வொடு), இன், அது(வே), கண்ணே,
(விரவிய ஆறும்தானே)
வேற்றுமையுருபின் (நாமம்).
(4, 6 பெயர்கள்) 18

**ஐயச் சொல், சுட்டு, இடத்து ஐயச் சொல், இகழ்ச்சிச் சொல்**

என்னே, கொல், எவனே, யாதே,
(இவை) ஐயக் கிளவி (நாற்பேர்);
(உன்னிடில்) அ(வ்வே), இ(வ்வே),
உ(வ்வொடு), (மூன்றும்) சுட்டு (ஆம்);
(மன்னிய) யாண்டும், யாங்கும்,
(மற்று) இடத்து ஐயுறற் சொல்;
என், இளி, ஏயே, சீச்சீ,
ஏளனம், இகழ்ச்சி (ஆமே).
(4, 3, 2, 5 பெயர்கள்) 19

**கல்வி, கற்றல், ஓதல்**

(உலவிய) விஞ்சை, வித்தை,
ஊதியம், சாலம், ஓதி,
கலே(யுடன்), உறுதி, கேள்வி,
(இருநான்கும்) கல்வியின் (பேர்);
(நலமுறக்) கெழுமல், கற்றல்,
நவிலலே, பயிலலும் (பேர்);
(பலம் உற) ஓதலின் (பேர்),
பாடம், மையாடல் (ஆமே).
(8, 3, 2 பெயர்கள்) 20

**வேதம், வேத நூற் பொருள்**

ஆதி நூல், எழுதாக் கேள்வி,
ஆரணம், ஒத்து, சாகை,
(ஏதம் இல்) சுருதி, (தன்னேடு)
இருக்கு, (இவை ஏழும்) வேதம்;
வேத நூற் பொருளின் (நாமம்),
(விதித்திடும்) ஞான பாகை,
(ஆதியாம்) கரும பாகை,
அருத்த பாகையும் (ஆம் என்ப).
(7, 3 பெயர்கள்) 21

**வேதத்தின் ஞான பாகை, வேதத்துட் பொருள், வேத மார்க்கம், ஆதி வேதம்**

(மெய் தெரி) ஆரணம் (தான்),
வேதத்தின் ஞான பாகை;
(மை இல்) உட்பொருளின் (நாமம்),
(மற்று) உபநிடதம் (என்ப);
வைதிகம், வேதம் உற்ற
மார்க்கமே; (பார்க்குங்காலே)
(ஐயம் இல்) இருக்கினேடு,
பௌடிகம், ஆதி வேதம்.
(1, 1, 1, 2 பெயர்கள்) 22

**இரண்டாம் வேதம், மூன்றும் வேதம், நான்காம் வேதம்**

(ஏமம் ஆம்) இரண்டாம் வேதம்,
(இசை) தைத்திரியத்தோடு,
(தோம் இலா) யசு(வாம்) (என்று
சொல்லுவர் நல்ல நூலோர்);

சாமமே, மூன்றும் வேதம்,
(தகைபெறு கீதம் சாரும்);
(வாமம் ஆர்) நான்காம் வேதம்,
அதர்வம் (ஆம் வகுக்குங்காலே).
(2, 1, 1 பெயர்கள்) 23

**பாயிரம், நூல்**

தந்துரை, புனைந்துரைத்தல்,
(சார்) முகவுரை(யினோடு)
(முந்திய) பதிகமே, நூன்-
முகம், (இவை) பாயிரப் (பேர்);
(அந்தம் ஆம்) ஆகமத்தோடு,
ஆரிடம், பிடகம், (மற்றுத்)
தந்திரம், பனுவலோடு,
சமயம், சூத்திரமும், நூல் (பேர்).
(5, 7 பெயர்கள்) 24

**நூல் முடிபு, சூத்திர யாப்பு**

படலமே, சருக்கம், காண்டம்,
பரிச்சேதம், அத்தியாயம்,
(இடர் அறும்) இலம்பகங்கள்,
நூன்முடிபு (இரு முப்பேரே);
(தொடை அடி வரை இன்றிச்)
சூத்திரம் (குறித்த) யாப்பு (ஆம்),
(படி புகழ்கின்ற) நூற்பா
அகவலைப் (பகருங்காலே).
(6, 1 பெயர்கள்) 25

**ஒத்து, படலம்**

நேரின மணியை ஓர்ந்து
நிரல்பட வைத்திட்டாங்கே
ஓரினப் பொருளை ஆய்ந்திட்டு
ஒரு வழி வைப்பது, ஒத்தாம்;
ஆரும் ஓர் நெறியே அன்றி
அருத்தங்கள் விராய்ச் சிறந்த
பாரிய பொதுச் சொல் (தானே)
படர்வது, படலம் (என்ப). 26

**வேற்றிசைப்பா, உரைப்பொருள், பொழிப்பு**

சருக்கத்தின் முடிவில், (மற்றுச்
சார்) இலம்பகத்தின் ஈற்றில்,
விருத்தமாம் நடையே ஆகும்,
வேற்றிசைப்பாவின் (நாமம்);
விரித்துரை, (அதனினோடு)
மெய்யுரை, உரைப் பொருட் (பேர்);
(பெருத்திடும்) பொழிப்பு (எனும் சொல்),
பிண்டமாக் கொண்டு கூறும்.
(2 பெயர்கள்) 27

**பதிகம், உதாரணம், அரும் பொருள்**

(பலத்தினைத் தருவதாய)
பதிகம், பல்வகைப் பொருட்கள்
துலக்கமே ஆகிக் காணத்
தொகுதி செய்திடுவது (ஆகும்);
இலக்கியம், எடுத்துக் காட்டல்,
இதிகாசம், உதாரணப் (பேர்);
(அலக்கண் தீர்) ஞாபகம் (தான்),
அரும் பொருள் பிசியும் (ஆமே).
(3, 2 பெயர்கள்) 28

**பாட்டு, வெண்பா, அகவல், கலிப்பா, அராகம்**

(காட்டிய) யாப்பு, தூக்கு,
கவி, செய்யுள், கவிதை, பாவே,
பாட்டு (எனப்படும்); வெண்பாவில்
(படும் பெயர்), வெள்ளை, முற்பா;
(சூட்டிய) அகவல் (பேர்),
ஆசிரியமே, தொகை; கலிப்பா,
(மூட்டிய பேர்) முரற்கை;
முடுகியல், அராகம் (ஆமே).
(6, 2, 2, 1, 1 பெயர்கள்) 29

**குளகம், சந்தப்பாட்டு, தாண்டகம்**

குற்றெழுத்துத் தொடர்ந்த
செய்யுளே, குளகம் (என்ப);
(இற்றென) இருபத்தாறே
எழுத்து நான்கடியும் ஆகி
உற்றது, சந்தப்பாட்டு (ஆம்);
அதின் மிகல் உவந்த நாமம்
(சற்றெனும் மருங்கு நல்லாய்)
தாண்டகம் (என்பதாமே). 30

**கணக்கு, எண், எழுத்து, ஒற்று**

(கற்று அறி) எழுத்தும், எண்ணும்,
கணக்கு (எனச் சொல்லும் நாமம்);
(சொற்றிடும்) கரண மோடு,
(சூழ்ந்திடும்) கணிதம் எண் (ஆம்);
(மற்று உறு) பெயரெழுத்து,
வடிவு, தன்மையில், எழுத்து (ஆம்);
ஒற்றின் (பேர்), உடல், உடம்போடு,
உறுப்பு, மெய், புள்ளி (ஆமே).
(2, 2, 3, 5 பெயர்கள்) 31

**இசைப்பாட்டு, நாற்பண்**

வரி, இராகம், பண், கேயம், (மன்)
விளி, கொளை(யினோடு)
(பரவு) காந்தருவம், கீதம்,
பாணி, காமரம், இசைப்பாட்டு;
(உரவிய) பாலையாழே,
(உலாவிய) குறிஞ்சியாழே,
மருதம், செவ்வழி யாழ் (என்ன),
(வகுத்த நாலிசையும்) நாற் பண்.
(10, 4 பெயர்கள்) 32

**பாலை யாழ்த் திறங்கள், குறிஞ்சி யாழ்த் திறங்கள்**

(நிறைந்திடும்) அராகத்தோடு,
நேர் திறம், உறுப்பு, (மற்றைக்)
குறுங்கலி, ஆசான், (ஐந்தும்)
(குறித்த) பாலைத் திறங்கள்;
(பறைந்த) நைவளம், காந்தாரம்,
படுமலை, மருள், அயிர்ப்பு,
(செறிந்த) பஞ்சுரம், மெய், ஆற்றுச்
செந்திறம், குறிஞ்சி (என்ப).
(5, 8 பெயர்கள்) 33

**மருதயாழ்த்திறம், முல்லையாழ்த் திறம், நெய்தல் யாழ்த் திறம்**

(பெரு) நவிர், படு, குறிஞ்சி,
பியந்தை, (என்று இந்த நான்கும்)
மருத யாழ்த் திறனே (ஆகும்);
(வகுக்கும்) நேர் திறத்திஞேடு,
(தரு) பெயர் திறமே, யாமை,
சாதாரி, (நான்கும்) முல்லை;
(விரவிய) திறனில் யாழும்,
விளரியும், நெய்தல் (ஆமே).
(4, 4, 2 பெயர்கள்) 34

**நால்வகை யாழ், ஏழிசை**

(தளர்வறு) பேரியாழே,
சகோடயாழ், மகர யாழே,
(வளையும்) செங்கோட்டியாழே,
(மற்றை) நால் வகை யாழ்ப் (பேர் ஆம்);
(கலை அறு) குரலே, துத்தம்,
கைக்கிளை, உழையிஞேடே,
இளியொடு, விளரி, தாரம்,
(என்ப) ஏழிசையின் (நாமம்).
(4, 7 பெயர்கள்) 35

**ஏழிசைக்குப் பிறப்பிடங்கள்**

குரல், மிடறு (ஆகும்); துத்தம்,
(கூறு) நா; கிளையே, அண்ணம்;
சிரம், உழை; இளியே, நெற்றி;
(சேர்ந்திடும்) விளரி, நெஞ்சாம்;
(தரம் உள) தாரம், நாசி;
(தனித்தனிப் பிறக்கும் என்னப்
பொருவிலா ஆதிமூர்த்தி
புலவருக்கு உரைத்தவாறே).
(7 பெயர்கள்) 36

**ஏழிசைக்கு மாத்திரைகள், ஏழிசை அக்கரங்கள்**

நான்கொடு, நான்கும், மூன்றும்,
(நலம் பெறும்) இரண்டிஞேடு,
நான்கு, மூன்று, இரண்டிஞேடு,
(நல்ல) மாத்திரைகள் (ஆகும்);
(ஆங்குள) ஆ ஈ ஊ ஏ
ஐ ஓ ஔ (என்னும் ஏழும்)
(தீங்கிலா) அக்கரங்கள்
(செப்பும்) ஏழிசைக்கும் (தானே).
(7, 7 பெயர்கள்) 37

**ஏழிசைக்கும் உரிய மணங்கள், சுவைகள்**

(கால் கிளர்) மௌவல், முல்லை,
கடம்பொடு, வஞ்சி, நெய்தல்,
(மேலுள) வீரை, புன்னை,
(விரும்பிய) மணங்கள் ஏழாம்;
பாலொடு, தேன்(கள் தாமே)
(பகர்) தயிர், நெய்யிஞேடே,
ஏலமே, வாழையே,
தாடிமக்கனி, ஏழ் சுவைக்கு (ஆம்).
(7, 7 பெயர்கள்) 38

**ஏழிசையோசை, ஏழிசையீசர்**

வண்டொடு, கிள்ளை, வாசி,
(மத) யானை, தவளை, தேனு,
(ஒண் திறல்) ஆடு (என்று ஏழும்)
(ஓதும்) ஏழிசையில் ஓசை;
(திண் திறல்) விசுவாமித்திரன்,
யமன், அங்கி, திங்கள், வெய்யோன்,
(கண்ட சொல்) கௌதமன், (சீர்க்)
காசிபன் ஈசர் (ஆமே).
(7, 7 பெயர்கள்) 39

**மந்தவோசை, சமனிசை, வல்லிசை, குரலினுக்குரிய படுமலைப் பாலை முதலிய திறமேழும் பாலையாழ்த் திறன்**

(கருது) மந்தரத்திஞேடு,
காகுளி, மந்த ஓசை;
(மருவிய) மந்தத்தோடு,
மத்திமம், சமனிசைப் (பேர்);
(உரன் உறு) தாரம், (நீண்ட)
உச்சமே, வல்லிசைப் (பேர்);
குரலினுக்கு உரித்தாய் நின்ற
(கூறும்) ஆசான் திறங்கள்.
(2, 2, 2 பெயர்கள்) 40

**துறையிரண்டு, பண், திறம், யாழின் எழும் இன்னிசை**

துறை இரண்டு (என்ப), வெள்ளை,
(தோற்றும்) செந்துறைகள் (ஆகும்);
நிறை நரம்பதுவே (கூடல்),
(நிகழும்) பண்ணுகும் (என்ப);
குறை நரம்பது, திறங்கள்
(என்பது கூறும்); யாழின்
உறையும் இன்னிசை, எழாலே;
(ஓதிய நூலின் பண்பாம்).
(2, 1 பெயர்கள்) 41

**இன்னிசைக் குழல், வீணை, யாழ்**

இன்னிசைக் குழலின் (நாமம்),
(ஏற்ற) வங்கியமே; வாரி,

கின்னரம், வீணையின் (பேர்),
(கிளத்திய) தண்டும் (ஆகும்);
(மன்னிய) யாழ்ப் (பேர்), கோட-
வதி(யொடு), விபஞ்சி (ஆகும்),
(முன்னிய) கருவி(யோடு),
(மொழிந்திடும்) கலமும் (அப்பேர்).
(1, 3, 4 பெயர்கள்) 42

**யாழ்வலிக்கட்டு, முறுக்காணி, நரம்பு**

(வரும் பிரமாணம் தன்னில்)
வலிக்கட்டு, திவவு (என்று ஓதும்);
(திரும்பிய) முறுக்காணிப் (பேர்),
(தேரின்) மாடகம் (என்று ஆமே);
நரம்பின் (பேர்), குரலே, கோலே,
துயரியே, (நாடின் முப்பேர்),
(புரிந்த) தந்திரியும் (அப் பேர்);
(போதன் முன் புகன்றவாறே).
(1, 1, 4 பெயர்கள்) 43

**ஒலி**

அரவமே, களனே, ஓதை,
ஆகுலம், ஆரவாரம்,
சுருதி, கோடணை, புலம்பு,
தொனி, இயம், துழனி, ஓசை,
உரை, இசை, இடியே, நாதம்,
(உரைத்த) கோசணையே, பாடே,
இரை, சும்மை, வகுணி, (மூவேழ்
இவைகளே) ஒலியின் (நாமம்).
(21 பெயர்கள்) 44

**எடுத்தலோசை, அசையுஞ் சிலையானும் இலையானும் எழும் ஒலி**

தெளிறலே, முரலல், முக்கல்,
சிரற்றுதல், பயிலல், (வேறு)
குளிறலே, நரலலோடு,
குருமித்தல், நெளிர்தல், (சாலப்)
பிளிறலே, உலையும், (போதப்)
பிரற்றலும், எடுத்தலோசை;
(வளியினால்) அசையும் சீலை,
இலையொலி, மருமராஞ்சம்.
(12, 1 பெயர்கள்) 45

**ஒலித்தல்**

சிரற்றலே, தொனித்தலோடு,
தெழித்தலே, குமிறல், விம்மல்,
உரற்றலே, அரற்றல், (வேறும்)
உரைத்தலே, உலைத்தல், ஏங்கல்,
இரைத்தலே, இரட்டல், (சால)
இடித்தலே, இமிழ்த்தல், (மற்றைக்)
குரைத்தலே, முழக்கல், (வீசிக்)
குளிறலே, இசைத்தலோடு. 46

சிலம்பலே, இயம்பலோடு,
சிலைத்தலே, துவைத்தல், (கூடி)
அலம்பலே, கறங்கல், (சீறி)
அழுங்கலே, தழங்கலோடு,
சிலும்பலே, கலித்தல், (போதத்)
தெவிட்டலே, கனைத்தலோடே,
உலம்புதல், புலம்பல், (எண்ணான்கு
இவை) ஒலித்தலின் (பேர் என்ப).
(32 பெயர்கள்) 47

**அனுகரண ஓசை**

இம்மெனல், கல்லென்றிட்டல்,
இழுமெனல், வல்லென்றிட்டல்,
பொம்மெனல், ஒல்லென்றிட்டல்,
பொள்ளெனல், நெரேலென்றிட்டல்,
கொம்மெனல், விடேலென்றிட்டல்,
(குறிப்பொடு) முகேரென்றிட்டல்,
அம்மெனல், சரேலென்றிட்டல்,
அனுகரணத்தின் ஓசை.
(13 பெயர்கள்) 48

**உபய ஓசை**

படபட (என்றொலித்தல்), (சாலப்)
பத பத, கள கள (என்றல்),
மொடு மொடு (என்றிட்டல்), (வேறு)
மொக மொக, கொள கொள (என்றல்),
திடு திடு (என்றிட்டலோடு),
நெட நெட, நெறு நெறு (என்றல்),
கட கட, கல கல (என்றல்),
(கருதிய) உபய ஓசை.
(11 பெயர்கள்) 49

**ஒன்று அல்லாத பேரொலி**

பூசலே, தமரம், (மற்றுப்
பொருந்திய) குமுறல், ஆர்ப்பு,
கோசணை, உலம்பலோடு,
கோடணை, கோலாகலம்,
(வீசிய) கலகம், (வேறு
மிக) உளறுதல், தெழித்தல்,
(பேசும்) ஆகுலம், ஒன்று அல்லாப்
பேரொலி (ஈராறும் பேர்).
(12 பெயர்கள்) 50

**பேரொலி, கமையிலாது அழைத்தல், அதட்டல்**

திமிர்தலே, (எடுத்து வந்த)
திமிலமே, களகளங்கள்,
குமுதமே, பேரொலிப் (பேர்);
கூப்பிடல், அலறல், கத்தல்,
கமை இலாது அழைத்தல் (ஆகும்),
கதறலும் (ஆம்); தெழித்தல்,
(அமை வர) உரப்பல், (சீறி)
அதிர்த்திடல், அதட்டலின் (பேர்).
(4, 4, 3 பெயர்கள்) 51

(இறந்ததும் நிகழ்வும் மற்றை
எதிர்வும் ஆம் புராணம் செய்தோன்,
அறம் தரு குணபத்திரன் தாள்
அரண் எனச் சரணம் ஆனேன்,
மறம் தலைப்படாத வீரை
மன்னன், மண்டலவன் செய்தான்,
சிறந்திடும் ஒலி பற்றும் பேர்ச்
செய்யுள் ஐம்பத்திரண்டே). 52

**பத்தாவது**
**ஒலி பற்றிய பெயர்த் தொகுதி முற்றிற்று**

## 11. ஒரு சொற் பல்பொருட் பெயர்த் தொகுதி

**காப்பு**

(முடிவு இல் இன்பத்து மூவா
முதல்வனைப் போற்றி செய்தே,
அடிதொறும் இரண்டும் ஒன்றும்
ஆதியில் பொருள் அடக்கி,
நடைபெறு ககரமாதி
னகர வீறு எதுகையாகப்
படியில் ஓர் சொல் பல்பொருள்
பல்விதத் தொகை பகரல் உற்றும்). 1

**ககரவெதுகை**
**பகவன், பகல், மகரம், வசி, அகம்**

பகவனே, ஈசன், மாயோன்,
பங்கயன், சினனே, புத்தன்;
பகலே, நாள், ஒரு முகூர்த்தம்,
பகலவன், நடுவே, தேசு;
மகரமே, சுறா, பூந்தாது ஆம்;
வசி, கூர்மை, வசியம், வாளே;
அகம், மனம், மனையே, பாவம்;
அகலிடம், உள்ளும் (ஆமே).
(5, 5, 2, 3,5 பெயர்கள்) 2

**சிகரி, சிகழிகை, சிகரம், மகம், மாய்வு**

சிகரி, கோபுரமே, வெற்பு,
(சீறு) எலி, கருநாரைப் (பேர்);
சிகழிகை, மயிர்முடிப் (பேர்),
(சிறந்த) வாசிகை, தேமாலை;
சிகரமே, மலையின் உச்சி,
திரை, சென்னி, திவலை, வெற்பு (ஆம்);
மகம், யாகம், ஓர் நாள் (என்ப);
மாய்வு (என்ப), மறைவும், சாவும்.
(4, 3, 5, 2, 2 பெயர்கள்) 3

**இகல், இகுளை, புகர், நகம், நகை, ககனம், கடவுள்**

இகல், பகை, வலி, போர் (முப் பேர்);
இகுளையே, தோழி, நட்பாம்;
புகர் (என்ப), மழைக்கோள், குற்றம்,
புற்கெனும் (நிறமும் முப் பேர்);
நகம், மலை, உகிர், மரப்(பேர்);
நகை, மகிழ்வு, ஒளி, சிரிப்பு (ஆம்);
ககனம், விண், படை, காடு (என்ப);
கடவுள், தே, முனி, நன்மைப் (பேர்).
(3, 2, 3, 3, 3, 3, 3 பெயர்கள்) 4

**சாகம், பாகல், யூகம், நாகம்**

சாகம், சாகினி, வெள்ளாடு,
தேக்கெனும் தருவும் (ஆமே);
பாகலே, காரவல்லி,
பலா (என்றும் பகரலாமே);
யூகமே, கருங்குரங்கோடு,
உட்பொருள் உணர்தல், தர்க்கம்;
நாகம், விண், குரங்கு, புன்னை,
நற்றூசு, மலை, பாம்பு, யானை.
(3, 2, 3, 7 பெயர்கள்) 5

**திகிரி, சிகி, ஞெகிழி, எகினம்**

திகிரியே, மூங்கில், வட்டம்,
தேர், உருள், ஆழி, வெற்பு (ஆம்);
சிகி, (என்ப) மஞ்ஞை, தீயாம்,
(தீதுறு) கேதுவும் (பேர்);
ஞெகிழியே, சிலம்பின் (நாமம்),
(நெருப்புறு) கொள்ளிக்கும் (பேர்);
எகினமே, புளிமா, ஞாளி,
கவரிமா, நீர்நாய், அன்னம்.
(6, 3, 2, 5 பெயர்கள்) 6

**ஆகு, யோகம், போகி, போகில்,**
**கோகிலம், குடங்கர்**

ஆகு(வே), எலியின் (நாமம்),
(ஆம்) பெருச்சாளி(க்கும் பேர்);
யோகமே, தியானம், கூட்டம்,
உபாயம் (ஆம்), உயர்ச்சி(க்கும் பேர்);
போகி, இந்திரன், பாம்பு (என்ப);
போகில், புட்பொது, பூ மொட்டு (ஆம்);
கோகிலம், குயில், பல்லிப் (பேர்);
குடங்கரே, குடிசை, கும்பம்.
(2, 4, 2, 2, 2, 2 பெயர்கள்) 7

**பொகுட்டு, இகுத்தல், புகை, அகைத்தல்**

பொகுட்டு, தாமரைப் (பூங்) கொட்டை,
பொருப்பு, சேற்றெழுந்த கொப்புள்;
இகுத்தலே, செகுத்தல், வீழ்த்தல்,
இரித்தலோடு, அழைத்தல், ஈதல்;
புகைக்கிடும் (நாமம்), தூமம்,
(போற்றும்) யோசனைக்கும் (பேரே);
அகைத்தல், வேதனை, ஒடித்தல்,
அறுத்திடல், உயர்த்தல் (ஆமே).
(3, 5, 2, 4 பெயர்கள்) 8

**சிக்கம், கொக்கு, வக்கிரம், சக்கிரி**

சிக்கமே, குடுமி (நாமம்),
சிப்பு, (உடன்) உறியும் (ஏற்கும்);
கொக்கு, மாமரமே, செந்நாய்,
குரண்டமே, குதிரை, மூலம்;
வக்கிரம், கொடுமை, மீளல்,
மடங்குதல் (உடனே), வட்டம்;
சக்கிரி, குயவன், செக்கான்,
தராபதி, நெடுமால், பாம்பு.
*(3, 5, 4, 5 பெயர்கள்)* 9

**தூக்கு, பாக்கு, மேக்கு, மெய், ஊக்கம்**

தூக்கு (என்ப), பாட்டும், கூத்தும்,
துலாமும், ஆராய்தலும் (பேர்);
பாக்கு, (என்பது) எதிர்காலத்தைப்
பகர் இடைச்சொல், துவர்க்காய்;
மேக்கு, மேற்றிசை, மேலும் (பேர்);
மெய், உண்மை, உடலும் (ஆமே);
ஊக்கமே, வலி, உற்சாகம்,
உள்ளத்தின் மிகுதி(க்கும் பேர்).
*(4, 2, 2, 2, 3 பெயர்கள்)* 10

**பகடு, தகடு, தபனன், அகடு, அருள், மகரந்தம்**

பகடு, இபம், பெருமை, ஏறு,
பஃறி, ஆண் மேதி (ஐம் பேர்);
தகடு, இலை, ஐம்மை, (என்ப);
தபனனே, இரவி, தீ (ஆம்);
அகடு (என்ப), நடுவே, குக்கி;
அருள் (என்ப), கருணை, சத்தி;
மகரந்தம், கள்ளும், தேனும்,
மலர்த் தாதும் (வழங்கும் முப்பேர்).
*(5, 2, 2, 2, 2, 3 பெயர்கள்)* 11

**சகுந்தம், சடை, சிகண்டி, சகுனி, சமம், சகுனம்**

சகுந்தம், புட்பொதுவே, கங்கம்;
சடை (என்ப), வேணி, வேர் (ஆம்);
சிகண்டியே, பாலையாழின்
திறத்திசை, மயில், அலிப் (பேர்);
சகுனி, புள், நிமித்தம் பார்ப்போன்;
சமம் (என்பது), அமர், ஒப்பு (ஆகும்);
சகுனமே, கிழங்கு, புள்ளின்
சாதியும், நிமித்தமும் (பேர்).
*(2, 2, 3, 2, 2, 3 பெயர்கள்)* 12

**சக்கரம், பக்கம், நக்கன்**

சக்கரம், பெருமை, ஓர் புள்,
தரணியே, பிறப்பு, வட்டம்,
(மிக்க) தேர் உருளே, ஆழி,
வரை (என விளம்பும் எண்பேர்);
பக்கம், புள் சிறகு, நட்பு,
(பகர்) திதி, அருகும் (ஆகும்);
நக்கனே, அருகன், சம்பு,
நிருவாணி (நாட்டும் முப் பேர்).
*(8, 4, 3 பெயர்கள்)* 13

**பூகம், புன்கண், வாகு, மாசி, பாகம், பயோதரம், வாகை**

பூகமே, திரளை, பூகம்;
புன்கண் (என்பது), நோய், துன்பம்;
வாகுவே, அழகு, தோள் (ஆம்);
மாசியே, மகம், ஓர் மாதம்;
பாகமே, பிச்சை, பங்கு (ஆம்);
பயோதரம், புயலே, கொங்கை;
வாகை, பண்பு, ஒழுக்கம், வெற்றி,
தவம், தொழில், வழங்கல், மிக்கு (ஆம்).
*(2, 2, 2, 2, 2, 2, 7 பெயர்கள்)* 14

**நோக்கு, நுதல், சேக்கை, பூக்கம், புலிங்கம், ஆக்கம், அறல்**

நோக்கு (என்பது), அழகு, பார்வை;
நுதல் (என்ப), புருவம், நெற்றி;
சேக்கையே, மிருகம் துஞ்சும்
இடம், முலை, (சிறந்த) பாயல்;
பூக்கமே, கமுகு, ஊர் (என்ப);
புலிங்கம், தீப் பொறி, ஊர்ப் புள் (ஆம்);
ஆக்கம், பூ மகள், செல்வப் (பேர்);
அறல், கருமணல், நீர் (ஆமே).
*(2, 2, 3, 2, 2, 2, 2, பெயர்கள்)* 15

**சீகரம், சாகரம், காகுளி, ஈகை, இரவி**

சீகரம், கரகம், வீசும்
கவரியும், திவலையும் (பேர்);
சாகரம், துயிலொழித்தல்,
சமுத்திரம் (இருபேர் சாற்றும்);
காகுளி, தவிசு, கண்டத்து
எழும் ஒலி, இசையும் (காட்டும்);
ஈகை, பொன், கொடை, ஈங்கைப் (பேர்);
இரவியே, மலை, ஆதித்தன்.
*(3, 2, 3, 3, 2 பெயர்கள்)* 16

**தகை, அகி, அரிட்டம், ககம், கடுத்தல், அகவல், அந்தம்**

தகை (என்பது), அழகு, பண்பு,
தயை(யொடு), பெருமை (நாற்பேர்);
அகி (என்பது), அரவு, இரும்பு (ஆம்);
அரிட்டமே, கள்(ளு), காக்கை;
ககம் (என்பது), அம்பு, புள்(ளாம்);
கடுத்தல், ஒப்பு, ஐயம், வேகம்;
அகவல், பா, மயிற்குரல், கூத்து;
அந்தமே, அழகு, ஈறு (என்ப).
*(4, 2, 2, 2, 3, 3, 2 பெயர்கள்)* 17

**அக்கு, நக்கல், ஞாட்பு, இக்கு, ஈரம், மக்கள், வரைதல்**

அக்கு, என்பு, விடை முரிப்பும்,
(அணி) சங்கு மணியும் (ஆகும்);
நக்கலே, நகை, உண்டல் (பேர்);
ஞாட்பு, அமர், பாரம், கூட்டம்;
இக்கு (என்ப), கரும்பு, கள்(ளாம்);
ஈரமே, குளிர்ச்சி, அன்பு;
மக்கள், மானுடர், சிறுர் (பேர்);
வரைதலே, கொள்ளல், நீக்கல்.

*(3, 2, 3, 2, 2, 2, 2 பெயர்கள்)* *18*

**கேகயம், தோகை, போகம், போகுதல்**

கேகயம், மஞ்ஞை, ஓர் பண்,
அசுணமா (கிளத்தும் முப்பேர்);
தோகையே, மயில்வால், மஞ்ஞை,
விலங்கின் வால் (சொல்லும் முப்பேர்);
போகமே, பாம்பின் மெய்யும்,
போகத்தின் விகற்பும் (ஆகும்);
போகுதல், நெடுமை, நேர்மை;
போகுதல் (எனும் முப் பேரே).

*(3, 3, 2, 3 பெயர்கள்)* *19*

**கைக்கிளை, சுக்கை, சூத்திரம், எக்கர், மொக்குள்**

கைக்கிளை, இசை விகற்பம்,
ஒருதலைக் காமமும் (பேர்);
சுக்கை, தாரகை, மாலைப் (பேர்);
சூத்திரம், பொறி, நூல், நூற்பா;
எக்கரே, சொரிதலோடு,
குவிதலும் (இருபேர் என்ப);
மொக்குளே, குமிழி, பூவின்
முகிழ் (என மொழியலாமே).

*(2, 2, 3, 2, 2 பெயர்கள்)* *20*

**ஙகர எதுகை**
**புங்கம், திங்கள், சித்திரன், கங்கு, தொங்கல்**

புங்கமே, உயர்ச்சி, அம்பு,
(பொரும்) அம்பின் குதை (முப் பேரே);
திங்கள், அம்புலி, மாதப்(பேர்);
சித்திரன், ஓவன், தச்சன்;
கங்கு (என்ப), வரம்பின் பக்கம்,
கருந் தினை, பருந்தும் (ஆமே);
தொங்கலே, பீலிக் குஞ்சம்,
தூக்கொடு, தொடுத்த மாலை.

*(3, 2, 2, 3, 3 பெயர்கள்)* *21*

**சங்கம், பங்கு, வங்கம், அங்கணம்**

சங்கமே, கணைக்கால், ஓர் எண்,
சபை, சங்கு, புலவர், நெற்றி;
பங்கு (என்ப), முடமே (ஆகும்),
பாதியும், சனியும் (ஏற்கும்);
வங்கமே, வெள்ளி, நாவாய்,
வழுதலை, ஈயம் (ஆமே);
அங்கணம், சேறு, முற்றம்,
(ஆம்), சலதாரை(க்கும் பேர்).

*(6, 3, 4, 3 பெயர்கள்)* *22*

**ஞாங்கர், தூங்கல், வாங்கல், வை, வேங்கை, வீ**

ஞாங்கர், வேல், பக்கம், முன்பு,
மேல் (என நான்கும் ஆகும்);
தூங்கலே, நிருத்தம், யானை,
துயில், சோம்பு, தராசு, தாழ்தல்;
வாங்கலே, வளைத்தல், கொள்ளல்;
வை, (என்ப) கூர்மை, வைக்கோல்;
வேங்கை, பொன், புலி, மரப்(பேர்);
வீ, நீக்கம், பூ, புள், சா (ஆம்).

*(4, 6, 2, 2, 3, 4 பெயர்கள்)* *23*

**மங்குல், மருந்து, பங்கி, அங்கதம், பங்கம்**

மங்குல், கார், இருள், விண் (முப்பேர்);
மருந்து, அமுதொடு, மருந்து (ஆம்);
பங்கியே, பிறமயிர்(க்கும்),
(பகரும்) ஆண் மயிர்(க்கும் பேர் ஆம்);
அங்கதம், பன்னகம், தோள்
அணி (உடன்), வசைச் சொல் (ஆகும்);
பங்கமே, சேறு, தூசு,
பழுதொடு, பின்னம் (ஆமே).

*(3, 2, 2, 3, 4 பெயர்கள்)* *24*

**அங்கம், பிங்கலம், பொங்கர், பொங்கல், பொச்சாப்பு**

அங்கமே, உடல், உறுப்பு, என்பு,
ஆறு அங்கம், கட்டில் (ஐம் பேர்);
பிங்கலம், பொன்னும், பொன்னின்
நிறத்தையும் (பேசல் ஆகும்);
பொங்கரே, மரத்தின் கோடு,
பொருப்பு, (உயர்) இலவு (முப்பேர்);
பொங்கலே, கொதித்தல், மிக்கு (ஆம்);
பொச்சாப்பு, மறவி, தீது (ஆம்).

*(5, 2, 3, 2, 2 பெயர்கள்)* *25*

**சகர எதுகை**
**பாசனம், வாசம், கோசம், தேசிகன்**

பாசனம், (என்ப) சுற்றம்,
பாண்டம், உண்கலமும் (பன்னும்);
வாசமே, இருப்பிடம், பூ-
மணம், புள்ளின் சிறகு, தூசு (ஆம்);
கோசமே, மதில் உறுப்பு, ஆண்-
குறி, முட்டை, முறை, பண்டாரம்;
தேசிகன், வணிகன், தேசாந்-
தரியொடு, குருவும் (ஆமே).

*(3, 4, 5, 3 பெயர்கள்)* *26*

**மூசல், முடலை, கீசகம், கேழ், வீசல், வெம்மை, கேசரம், கிருட்டி**

மூசல், மொய்த்திடல், சா (என்ப);
முடலையே, திரட்சி, உண்டை;
கீசகம், குரங்கு, வேய் (ஆம்);
கேழ், நிறம், ஒளி, ஒப்பு (ஆகும்);
வீசலே, எறிதல், ஈவு (ஆம்);
வெம்மை, உட்டணம், விருப்பம்;
கேசரம், மகிழ், பூந்தாது (ஆம்);
கிருட்டி, ஓர் ஈற்று ஆ, பன்றி.
(2, 2, 2, 3, 2, 2, 2, 2 பெயர்கள்) 27

**அசி, நிசி, நீர், பிசி, சுசி, சுடர்**

அசி, படைக்கலமே, வாளே,
அவமதிச் சிரிப்பு (முப் பேர்);
நிசி, இரா, மஞ்சள், பொன் (ஆம்);
நீர், புனல், குணம், பூராடம்;
பிசி (என்ப), பொய்யும், சோறும்,
(பேசு) அரும் பொருளும் (முப் பேர்);
சுசி, கோடை, சுத்தம், தீ (ஆம்);
சுடர், விளக்கு, இரவி, அங்கி.
(3, 3, 3, 3, 3, 3 பெயர்கள்) 28

**ஆசு, காசு, ஆசினி, தேசிகம்**

ஆசு (என்ப), விரைவு, குற்றம்,
அற்பம், மெய்க் கவசம் (நாற்பேர்);
காசு (என்ப), கோழை, குற்றம்,
கதிர் விடும் மணி (முப் பேரே);
ஆசினி, பலா விசேடம், மர-
வுரி, மரக் காழ், விண் (ஆம்);
தேசிகம், அழகு, காந்தி,
திசைச் சொல், ஓர் கூத்து, செம்பொன்.
(4, 3, 4, 5 பெயர்கள்) 29

**பச்சை, கச்சை, செச்சை, திகை, மிச்சை**

பச்சையே, மரகதம், தோல்,
பரிமளப்புதல், மால், புந்தி;
கச்சை (என்பது), தழும்பு,
கயிறொடு, கவசம் (முப் பேர்);
செச்சை, மை, வெட்சி, தேய்வை;
திகை (என்ப), திசை, சுணங்கு (ஆம்);
மிச்சையே, பொய்த்தல் (ஆகும்),
மிடித்தல், அஞ் ஞானம் (முப் பேர்).
(5, 3, 3, 2, 3 பெயர்கள்) 30

**பிச்சம், கச்சம், எச்சம், இபம், அச்சம்**

பிச்சம், ஆண்மயிரும், பீலிக்-
குடையும், வெண்குடையும் (ஆகும்);
கச்சம், யானைக் கழுத்தின்
கயிறு, அளவொடு, மரக்கால்;
எச்சமே, குறை, சேய், யாகம்;
இபம் (என்ப), மரக் கோடு, யானை;
அச்சமே, அகத்தி, ஐம்மை,
அஞ்சல் (இம் முப் பேர் ஆமே).
(3, 3, 3, 2, 3 பெயர்கள்) 31

**ஆசை, ஆகுலம், காசை, காமர், பாசம், தூசு**

ஆசையே, திசை, பொன், அன்பு (ஆம்);
ஆகுலம், வருத்தம், ஓசை;
காசையே, காயா, நாணல்;
காமர் (தான்), அழகு, காதல்;
பாசமே, கயிறு, கூளி,
(பகர்) ஊசித் துளை, அன்பு (ஆகும்);
தூசு (என்பது), ஆடை, யானைப்-
புரசை, தூசிப் படைப்(பேர்).
(3, 2, 2, 2, 4, 3 பெயர்கள்) 32

**தாசி, தளி, வேசரி, ஆசுகம், அந்தரி, கோசிகம்**

தாசியே, பரணி, சூளை;
தளி (என்ப), துளியே, கோயில்;
வேசரி, கழுதையே, கோவேறு-
வேசரியும் (ஆகும்);
ஆசுகம், பகழி, காற்று (ஆம்);
அந்தரி, உமையே, துர்க்கை;
கோசிகம், சாமவேதம்,
(கூறு) பட்டு, ஆடை(க்கும் பேர்).
(2, 2, 2, 2, 2, 3 பெயர்கள்) 33

**பசு, பாரதி, வசு, அசம், அணை, சசி**

பசு, ஏறு, சீவன், ஆ (ஆம்);
பாரதி, வாணி, தோணி;
வசுவே, ஆன் கன்றும், பொன்னும்,
வசுக்களும், தீயும் (நாற் பேர்);
அசம், மூ ஆண்டு உறு நெல், ஆடு (ஆம்);
அணை (என்ப), கரையே, மெத்தை;
சசி (என்ப), கர்ப்பூரம்,
சந்திரன், அயிராணி (முப் பேர்).
(3, 2, 4, 2, 2, 3 பெயர்கள்) 34

**விசும்பு, தசும்பு, சாத்தன், இசை, ஏங்கல், பிசுனன்**

விசும்பு, பொன்னுலகு, மேகம்,
விண்ணொடு, திசையும் (நாற் பேர்);
தசும்பு, (நற்) குடம், மிடா (ஆம்);
சாத்தனே, அருகன், ஐயன்;
இசை, புகழ், கிளவி, பாட்டு (ஆம்);
ஏங்கலே, ஒலி, இரங்கல்;
பிசுனனே, கோளன், பொய்யன்,
உலோபனும் (பேசும் முப் பேர்).
(4, 2, 2, 3, 2, 3 பெயர்கள்) 35

**வச்சிரம், நொச்சி, தச்சன், உச்சி, உறுப்பு**

வச்சிரம், சதுரக்கள்ளி,
வைரமே, குலிசம் (முப்பேர்);

நொச்சியே, சிந்துவாரம், மதில்,
சிற்றூர் (நுவலல் ஆமே);
தச்சனே, சித்திரைப் (பேர்),
தபதியன் (தானும் ஆகும்);
உச்சி, நண்பகல், உச்சி(ப் பேர்);
உறுப்பு, அவயவம், உடம்பு (ஆம்).
(3, 3, 2, 2, 2 பெயர்கள்) 36

**பாசு, பப்பு, மாசு, கேசம், வாசி**

பாசு (என்ப), பசுமை, மூங்கில்;
பப்பு (என்ப), பரப்போடு, ஒப்பு (ஆம்);
மாசு (என்ப), சிறுமை, குற்றம்,
மழை, அழுக்கொடு (நாற் பேரே);
கேசம், பெண் மயிர்க்கும், ஆண்பால்
மயிருக்கும் (கிளத்தல் ஆகும்);
வாசியே, குழல், முன் நாள், மா,
வாசி என் ஏவல் (நாற் பேர்).
(2, 2, 4, 2, 4 பெயர்கள்) 37

**மிசை, விசயம், முசலி, வசதி, வரன்**

மிசை (என்பது), உணவு, மேடு,
மீமிசைச் சொல்லு (முப்பேர்);
விசயமே, வென்றி, வெல்லம்,
வெங் கதிர் மண்டலப் (பேர்);
முசலியே, உடும்பு, தாழை,
முந்திய இராமன், ஓந்தி;
வசதி, நல்லிடம், ஊர், வீடு (ஆம்);
வரன், அயன், பரமன், காந்தன்.
(3, 3, 4, 3, 3 பெயர்கள்) 38

**ஞகர வெதுகை**
**துஞ்சல், பஞ்சரம், பரதர், கஞ்சம், குஞ்சம்**

துஞ்சலே, நிலைபெறு (ஆகும்),
துயில், சோம்பு, சாவும் (ஆகும்);
பஞ்சரம், செருந்தி, கூடு (ஆம்);
பரதரே, கழியர், நாய்கர்;
கஞ்சமே, தாளம், குல்லை,
கமலம், வெண்கலம், (வட்டு) அப்பம்;
குஞ்சம், ஈயோட்டி, நாழி,
குறள், குன்றி, குறளைச் சொல்லே.
(4, 2, 2, 5, 5 பெயர்கள்) 39

**நெஞ்சு, நிழல், மஞ்சு, வஞ்சி, தஞ்சம்**

நெஞ்சு (என்ப), மனம் , மார்பின் (பேர்);
நிழல், செல்வம், குளிர்ச்சி, சாயை;
மஞ்சு, பூண், வலி, வனப்பு,
மழை, யானை முதுகு (இவ்வைந்தே);
வஞ்சி, மேற் செலவு, ஓர் ஊர், பா,
வல்லி, (மென்மருங்குல்) பெண்ணும்;
தஞ்சமே, எளிமை (என்ப),
(தரு) பற்றுக் கோடும் (ஆமே).
(2, 3, 5, 5, 2 பெயர்கள்) 40

**அஞ்சனம், மஞ்சரி, அஞ்சலி, இஞ்சி, எறுழ்**

அஞ்சனம், கறுப்பு, மை, திக்-
கானையில் ஒன்று (முப் பேர்);
மஞ்சரியே, பூங் கொத்து,
மாலை, செந்தளிரும் (ஆகும்);
அஞ்சலி, வணங்கல், வாவல்-
பறவையும் (ஆகும் என்ப);
இஞ்சியே, புரிசை, இஞ்சி;
எறுழ் (என்ப), வலி, தண்டு (ஆமே).
(3, 3, 2, 2, 2 பெயர்கள்) 41

**கிஞ்சுகம், கிருட்டிணன், கஞ்சனம், பஞ்சம், பகழி, வஞ்சனை, மாயன்**

கிஞ்சுகம், முருக்கு, செம்மை;
கிருட்டிணன் (தான்), மால், பார்த்தன்;
கஞ்சனமே, கண்ணுடி,
கரிக் குருவிக்கும் (பேரே);
பஞ்சமே, சிறுமை, ஐந்து (ஆம்);
பகழி, அம்பு, இதன் குதைப் (பேர்);
வஞ்சனை, மாயை, பொய் (ஆம்);
மாயன், மால், கருநிறத்தோன்.
(2, 2, 2, 2, 2, 2, 2 பெயர்கள்) 42

**குஞ்சி, வஞ்சம், மாயம், கஞ்சன், களங்கம், கஞ்சிகை**

குஞ்சி, ஆண் மயிர், புட்பார்ப்பு,
குன்றியின் கொடி (முப் பேரே);
வஞ்சமே, கபடம், வாள் (ஆம்);
மாயம், வஞ்சனை, பொய் (என்ப);
கஞ்சனே, குறளன், வேதன்;
களங்கம் (தான்), அழுக்கு, குற்றம்;
கஞ்சிகை, சிவிகை, ஆடை,
(கட்டு) இடு திரை(யும் ஆமே).
(3, 2, 2, 2, 2, 3 பெயர்கள்) 43

**டகர எதுகை**
**நடலை, மடல், படர், குடம்**

நடலை, வஞ்சனை, பொய் (என்ப),
(நடுங்கிய) நுடக்கம் (முப் பேர்);
மடல், பனையேடு போல்வ,
மலர் இதழ், ஓர் நூற்கும் பேர்;
படர், நடை, நினைப்பு, நோவாம்,
(பகர்ந்திடில்) வீரர்(க்கும் பேர்);
குடம், நகர், பசு, ஓர் கூத்து,
கும்பமே, கரும்பின் கட்டி.
(3, 3, 4, 5 பெயர்கள்) 44

**மாடம், மழை, கூடம், சேடன், கேடகம்**

மாடமே, உழுந்தோடு, இல்(லாம்);
மழை (என்ப), குளிர்ச்சி, மேகம்;
கூடம், இல், மறைவு, கொல்லன்-
சம்மட்டி, குவட்டின் உச்சி;

சேடன், ஓர் சாதி, பாங்கன்,
(செகம் தாங்கும்) அனந்தன் (என்ப);
கேடகம், பரிசை, வேறு ஓர்
கேடு இல் ஊர், பலகை (முப் பேர்).
*(2, 2, 4, 3, 3 பெயர்கள்)* 45

**இடங்கர், முடங்கல், படங்கு, விடங்கம், மிதவை**

இடங்கரே, முதலே, தூர்த்தர்,
குடங்கர் (இம் முப் பேர் என்ப);
முடங்கரே, மடங்கல், கைதை,
மூங்கில், நோய், ஓலை (ஐம்பேர்);
படங்கு, மேற்கட்டி (என்ப),
(பகர்) பெருங்கொடி(யும் ஆகும்);
விடங்கம், ஏர், கொடி, கொடுங்கை;
மிதவையே, தெப்பம், சோறு (ஆம்).
*(3, 5, 2, 3, 2 பெயர்கள்)* 46

**குடிஞை, தடி, தொடி, மடி**

குடிஞை, புட் பொதுவும், யாறும்,
கூகையும் (ஆகும் என்ப);
தடி, வயல், உலக்கை, வில்லு,
தண்டு, மின், தசை, உடும்பு (ஆம்);
தொடி, வளை, ஒரு பலப் (பேர்),
(சூழ்ந்த) க்ங்கணமும் (ஆகும்);
மடி, அடங்குதலே, சோம்பு,
வயிறு, நோய், புடைவை, தாழை.
*(3, 7, 3, 6 பெயர்கள்)* 47

**படிவம், பந்தம், வெடி, துடி, தூ, கொடிறு, குரவை**

படிவமே, வடிவம், நோன்பு (ஆம்);
பந்தமே, கிளையும், கட்டும்;
வெடி, அச்சம், பரிமளிக்கும்
மென்புகை, வெளி (இம் முப் பேர்);
துடி, ஏலம், பறை, காலப் பேர்;
தூ, தூய்து, ஊன், பற்றுக்கோடு (ஆம்);
கொடிறு, பூசம், கதுப்பு (ஆம்);
குரவையே, கடல், ஓர் கூத்து.
*(2, 2, 3, 3, 3, 2, 2 பெயர்கள்)* 48

**கடிகை, படிறு, பகர்தல், சுடிகை, இடி**

கடிகை, நாழிகையே, துண்டம்,
கதவு இடு தாழே (முப் பேர்);
படிறு, பொய், களவு (இரண்டு ஆம்);
பகர்தலே, விற்றல், பேசல்;
சுடிகையே, மகுடம், உச்சி,
சுட்டியும் (இட்ட பேரே);
இடி, இடிப் பேரே, நெல் மா,
(ஏற்றிடும்) உறுதிச் சொல்லே.
*(3, 2, 2, 3, 3 பெயர்கள்)* 49

**நாடி, நந்தல், பாடி, கோடிகம், குடம்பை, கோடி, குடுமி**

நாடி, நாழிகை, நரம்பு ஆம்;
நந்தல், கேடு (உடனே), ஆக்கம்;
பாடியே, நகரம், நாடு,
பாசறை, ஆயர் ஊர்ப் பேர்;
கோடிகம், துகில், பூந் தட்டு (ஆம்);
குடம்பையே, முட்டை, கூடு;
கோடி, எண், புதுமை, தூசு (ஆம்);
குடுமியே, வெற்றி, உச்சி.
*(2, 2, 4, 2, 2, 3, 2 பெயர்கள்)* 50

**உடு, கடு, படு, படுதல்**

உடு, விண் மீன், கிடங்கு, நாவாய்
ஓட்டும் கோல், அம்பில் ஈர்க்காம்;
கடு, விடம், முள்ளு (தானே),
அரிதகி, கசப்பு (நாற்பேர்);
படு, மரக் குலையே, கள்ளு,
(பரவும்) நீர் நிலை, நன்மைப் (பேர்);
படுதலே, ஒலி, இன்றுதல்,
(பகரில்) உண்டாதல், பூத்தல்.
*(4, 4, 4, 4 பெயர்கள்)* 51

**மாடு, வைகல், சேடு, பாடு, பட்டு, ஈடு**

மாடு, பொன், பக்கம், செல்வம்;
வைகல், வைகறை, நாள், தங்கல்;
சேடு (என்ப), பெருமை, நன்மை,
திரட்சியே, அழகு (நாற்பேர்);
பாடு, இடம், பெருமை, ஓசை;
பட்டே, பட்டாடை, சிற்றூர்;
ஈடு (என்ப), குழைவே, ஒப்பே,
வலி(யொடு), பெருமை(யும் பேர்).
*(3, 3, 4, 3, 2, 4 பெயர்கள்)* 52

**மடை, படை, இடை, மடம்**

மடை (என்ப), மதகு, சோறு,
மணிப் பணிக் கடைப் பூட்டும் (பேர்);
படை, படைக்கலம், கலப்பை,
படுக்கை, பல்லணமே, தானை;
இடை, நடு (என்ப, மற்றும்)
இடப்பெயர், நுசுப்பும் (ஆமே);
மடம், அறியாமை, சத்திரம்,
(மன்னிய) முனி வாசப் (பேர்).
*(3, 5, 3, 3 பெயர்கள்)* 53

**வாடை, ஆடு, அல்கல், கோடை, ஓடை**

வாடை (என்பது தான்), வீதி,
வடகாற்றுத் (தானும் ஆமே);
ஆடு, மேழகம், வெற்றிப் (பேர்);
அல்கல், நாள், சுருங்கல், வைகல்;

கோடை, மேல் காற்றினோடு,
குதிரை, வெண்காந்தள் (என்ப);
ஓடை, நீர்நிலை, கிடங்கே,
ஒருமரம், வல்லி, பட்டம்.
(2, 2, 3, 3, 5 பெயர்கள்) 54

**அடுப்பு, வடு, மத்தகம், இடக்கர், கடைப்பிடி**

அடுப்பு (என்ப), பரணி நாளே,
அச்சமே, சுல்லி (முப்பேர்);
வடு, செம்பு, தழும்பு, வண்டு (ஆம்);
மத்தகம், நெற்றி, சென்னி;
இடக்கரே, மறைத்த வார்த்தை,
கும்பமும் (என்ப நூலோர்);
கடைப்பிடி, மறப்பிலாமை,
(கருதிய) தேற்றம் (ஆமே).
(3, 3, 2, 2, 2 பெயர்கள்) 55

**பட்டம், புட்டம், குட்டம், வட்டம்**

பட்டமே, ஓடை, தூசு,
பதவி, வாள், கவரிமா(வாம்);
புட்டமே, காகம் (ஆகும்),
புடைவையும், நிறைவும் (முப் பேர்);
குட்டமே, தொழுநோய், ஆழம்,
குளம் (எனப் பெயர் முப் பாற்றே);
வட்டமே, பரிசை, நீர்ச் சால்,
வலயம், கைம் மணி, தூசு, ஊர்கோள்.
(5, 3, 3, 6 பெயர்கள்) 56

**திட்டை, தட்டை, கிட்டி, கட்டளை**

திட்டையே, உரலும், மேடும்,
திண்ணையும் (நண்ணும் முப் பேர்);
தட்டை, வேய், தினைத்தாள், கிள்ளை
(தனைக்) கடி கோலே, முண்டம்;
கிட்டியே, தலை ஈற்று ஆ (ஆம்),
கிருட்டி(ஆம்), தாளம் (முப் பேர்);
கட்டளை, நிறை கல், ஒப்பே,
இட்டிகை இயற்றல், ஆணி.
(3, 4, 3, 4 பெயர்கள்) 57

**நாட்டம், நாகு, ஓட்டம், உயிர், கோட்டம், தோட்டி, துளை**

நாட்டம், கண், ஓர் பண், வாள் (ஆம்);
நாகு, சங்கு, இளமை, நத்தை;
ஓட்டம், மேல் உதடே, தோல்வி;
உயிர் (என்ப), காற்றே, சீவன்;
கோட்டம், கோண், படப்பை, நாடு,
கோயில், அவ்வியம், ஆன் கொட்டில்;
தோட்டி, அங்குசம், கபாடம்;
துணை (என்பது), அளவும், ஒப்பும்.
(3, 3, 2, 2, 6, 2, 2 பெயர்கள்) 58

**தடம், அடல், அருத்தம், உடல், ஓங்கல், விடபம்**

தடம், மலை, பெருமை, கோணல்,
சரி, கரை, அகலம், வாவி;
அடல், கொலை, வலி, போர் (ஆகும்);
அருத்தமே, பொருள், பொன், பாதி;
உடல், பொருள், ஆகம் (என்ப);
ஓங்கல், வெற்பு, உயரம், மூங்கில்;
விடபமே, இடப ராசி,
விடை, மரக் கொம்பு (முப் பேர்).
(7, 3, 3, 2, 3, 3 பெயர்கள்) 59

**கடகம், வடகம், வலம், படுவி, பரம், நொடி, நூனம்**

கடகமே, சேனை, வட்டம்,
கை வளை, மதில் (நாற்பேரே);
வடகம், தோல், அத்தவாளம்;
வலம் (என்பது), இடமே, வெற்றி;
படுவி, கள் விற்பாள், குண்டம்;
பரம் (என்ப), கவசம், மெய் (ஆம்);
நொடி, பிதிர், கிளவி (ஆகும்);
நூனம், நிச்சயமே, குன்றல்.
(4, 2, 2, 2, 2, 2, 2 பெயர்கள்) 60

**கடம், மடங்கல், படம்**

கடம், கயிறு, உவாக்கதுப்பு,
கான், சுரம், உடம்பு, நீதி,
குடம், கடாம், ஈமம், யானைக்
குழாம், கடன், முழவு (ஐந்து ஏழாம்);
மடங்கலே, அசனி, சீயம்,
மறலி, நோய், யுகம், ஊழித்தீ;
படம், கரி முக படாம், நல் துகில்,
பாம்பின் பணம் (முப் பேரே).
(12, 6, 3 பெயர்கள்) 61

**ஆடல், பாடலம், கோடரம், ஆடவர்**

ஆடலே, பெண் ஆண் கூடல்,
வார்த்தை, கூத்தாடல், வென்றி;
பாடலம், சிவப்பினோடு,
பாதிரி, குதிரை (முப் பேர்);
கோடரம், குரங்கு, சோலை,
கொம்பொடு, குதிரை (ஆகும்);
ஆடவர், புருடநாமம்,
(ஆம்) இளையவர்க்கும் (பேரே).
(4, 3, 4, 2 பெயர்கள்) 62

**கடி, வடுகு, வடவை**

கடி, மணம், விரைவு, கூர்மை,
காலம், பேய், விளக்கம், காப்பு,
வடிவு, அச்சம், வாசம், ஐயம்,
வரைவு, விம்மிதம் (ஏழ் ஆறு ஆம்);
வடுகே, இந்தள ராகப் (பேர்),
மருதயாழ்த் திறனும் (ஆமே);
வடவையே, குதிரைப் பெட்டை,
உவாப் பிடி, வடவைத் தீ (ஆம்).
(13, 2, 3 பெயர்கள்) 63

**கோடு, மோடு, முறுவல், ஆடி**

கோடு, சங்கு, ஊதுகொம்பு, மரக்-
 கொம்பு, விலங்கின் கொம்பு,
(நீடு செய்) வரம்பு, குன்றின் முகடு,
 நீர்க் கரை (ஏழ் பேர் ஆம்);
மோடு, மேடு, உதரம் (ஆகும்);
 முறுவலே, நகைத்தல், பல் (ஆம்);
ஆடியே, ஓர் மாதம், கண்-
 ணுடி, உத்தராடம் (ஆமே).
(7, 2, 2, 3 பெயர்கள்) 64

**தட்டு, செட்டி, செப்பு, மட்டு, மார்க்கம், பட்டிகை**

தட்டு, தேர் நடுவு, குற்றம்,
 தட்டொடு, பரிசை, முட்டு (ஆம்);
செட்டி, வாணிகன், செவ்வேள் (ஆம்)
 செப்பு, உரை, கரண்டகப் (பேர்);
மட்டு, (என்பது) எல்லை, கள் (ஆம்);
 மார்க்கமே, சமயம், வீதி;
பட்டிகை, (என்ப) கச்சு,
 பகட்டுடன், இரதனம் (ஆமே).
(5, 2, 2, 2, 2, 3 பெயர்கள்) 65

**கடை, களேவரம், உடை, உடுக்கை, அடை, நடை, நார்**

கடை, முடிவு, இடம், வாயில் (பேர்);
 களேவரம், பிணம், உடம்பாம்;
உடை, துகில், செல்வம் (என்ப);
 உடுக்கை, தண்ணுமை, துகில் (பேர்);
அடை, இலை, கனமே, அப்பம்,
 அடுத்தல், செல்வழி (ஐம்பேர் ஆம்);
நடை, வழி, ஒழுக்கம், செல்வம்;
 நார் (என்ப), கயிறு, அன்பு (ஆமே).
(3, 2, 2, 2, 5, 3, 2) 66

**விடை, கிடை, கீதம், படி, குடி, கொடி**

விடை, எதிர்மொழியும், ஏறும்,
 விடுத்தலும் (விளம்பும் முப் பேர்);
கிடை, சடை, உவமை, நெட்டி;
 கீதமே, இசையும், வண்டும்;
படி, அங்கவடி, சோபானம்,
 பகை, குணம், உவமை, பார் (ஆம்);
குடி, குலம், புருவம், ஊர் (ஆம்);
 கொடி, வல்லி, துவசம், காக்கை.
(3, 3, 2, 6, 3, 3 பெயர்கள்) 67

**நட்டம், நகர், தொட்டல், தட்டல், தை, கட்டல்**

நட்டமே, நடனம், கேடு (ஆம்);
 நகர் (என்ப), மனையும், ஊரும்;
தொட்டல் (என்பதுவே), உண்டல்,
 தோண்டல், கை தீண்டல் (முப்பேர்);
தட்டலே, தடை, கிட்டல் (பேர்);
 தை, ஒரு மாதம், பூசம்;
கட்டல் (என்பது), தடுத்தல்,
 களைதல், பந்தித்தல், கள்ளல்.
(2, 2, 3, 2, 2, 4 பெயர்கள்) 68

**புட்கரம், வெட்சி, பெட்பு, பிரசம்**

புட்கரம், நிறைவு, பாண்டமுகம்,
 தீர்த்தம், புனல், வான், சேனம்,
கட்கம், பங்கயமே, யானைக்-
 கைந் நுனி, குருகு (ஈரைந்து ஆம்);
வெட்சி (என்பதுவே), செச்சை,
 (மிகு) நிரை கவர்தல் (என்ப);
பெட்பு (என்ப), பெருமை, அன்பு (ஆம்);
 பிரசம், தேன், மது, வண்டு (ஆமே).
(10, 2, 2, 3 பெயர்கள்) 69

**அடுதல், சடிலம், படலை, கிடுகு**

அடுதலே, அட்டல் (என்ப),
 அடர்தலும், கொலையும் (முப் பேர்);
சடிலமே, நெருங்கலோடு,
 சடை, குதிரையும் (முப் பேரே);
படலையே, படர்தல், மாலை,
 பதலையே, வாசிக் கோவை;
கிடுகு, தேர்மரச் சுற்றின் (பேர்),
 பரிசை(க்கும்) (கிளத்தல் ஆமே).
(3, 3, 4, 2 பெயர்கள்) 70

**படலிகை, கொடியன், குண்டு, தொடு, முடி**

படலிகை, பீர்க்கு, வட்டம்,
 (பரந்த) கைம் மணி, பூந் தட்டு (ஆம்);
கொடியனே, கொடியன், கேது (ஆம்);
 குண்டு, ஆழம், தாழ்வு, ஆண் மாவே;
தொடு (என்ப), மருதப் பூமி,
 தோட்டம், கைதவம் (முப் பேரே);
முடி, மயிர் முடியே, சென்னி,
 மகுடமும் (மொழியலாமே).
(4, 2, 3, 3, 3 பெயர்கள்) 71

**ஆடகம், அஞர், கோடகம், பீடிகை, தோடு**

ஆடகம், துவரை, பொன்(ஆம்);
 அஞர், அறிவிலரே, துக்கம்;
கோடகம், முடியுறுப்பும்,
 குதிரையும், புதுமையும் (பேர்);
பீடிகை, ஆவணம், பூந்-
 தட்டொடு, பீடம் (முப்பேர்);
தோடு, பூவிதழே, பெண்ணை
 மடல் போல்வ, தொகுதி(க்கும் பேர்).
(2, 2, 3, 3, 3, 3 பெயர்கள்) 72

**அடர், விடர், விடலை, அடி**

அடர் (என்ப), நெருங்குதல் (பேர்),
 ஐம்மையின் வடிவும் (ஆகும்);

விடர், முனி இருப்பு, தூர்த்தர், கமர்,
வெற்பின் முழை, காடு (ஐம் பேர்);
விடலையே, தலைவன் (பேரும்),
விறலோன் (தன் பேரும் ஆகும்);
அடி, செண்டு வெளி, தாள்,
ஆதி, கவிதையின் பாதம் (ஆமே).
(2, 5, 2, 4 பெயர்கள்) 73

**ணகர எதுகை**

**புணர்வு, பொழில், உணர்வு, குணம், கணம்**

புணர்வு, தோய்ந்திடல், இசைப்பு (ஆம்);
பொழில், புவி, பெருமை, சோலை;
உணர்வு (என்ப), தெளிவே,
ஊடலொழிதலே, அறிவும் (ஆகும்);
குணம் (என்ப), கயிறு, பண்பு,
கும்பம், வில்நாணி (நாற் பேர்);
கணம், உடு, நோய், திரட்சி,
காலநுட்பம், பேய், வட்டம்.
(2, 3, 3, 4, 6 பெயர்கள்) 74

**ஆணம், அலம், ஓணம், ஊதியம், காணம், கோணல்**

ஆணமே, குழம்போடு, அன்பு (ஆம்);
அலம், நாஞ்சில், அமையும் என்றல்;
ஓணம், மாயோன் நாள், ஆறு (ஆம்);
ஊதியம், இலாபம், கல்வி;
காணமே, பரி ஊண், செக்கு, ஓர்
காணம், பொற் காசு (நாற்பேர்);
கோணலே, மாறுபாடும்,
கூனும் (ஆம்), வளைவும் (ஆமே).
(2, 2, 2, 2, 4, 3 பெயர்கள்) 75

**குணில், குல்லை, மணி, துணி, துளி, பிணிமுகம், பிசிதம்**

குணில், குறுந்தடி, கடிப்பு (ஆம்);
குல்லையே, துளவு, வெட்சி;
மணி, நவமணியே, கண்டை,
வனப்பொடு, கருமை, நன்மை;
துணி ,சோதிநாளே, துண்டம்;
துளி, மழைத் துளி, பெண் ஆமை;
பிணிமுகம், மயில், புள் (பேர் ஆம்);
பிசிதம், நீர், இறைச்சி, வேம்பு.
(2, 2, 5, 2, 2, 2, 3 பெயர்கள்) 76

**நாண், தோணி, வாணி, ஏணி**

நாண், இலச்சைப் (பேர் தானே),
கயிறு (என்றும் நாட்டல் ஆகும்);
தோணியே, கடைநாள், வங்கம்,
தொடு கணை, தெப்பம், சேறு;
வாணியே, ஓர் கூத்தின் (பேர்),
வாக்கு, நாமகளும் (ஆமே);
ஏணியே, உலகோடு, எல்லை,
இறைவை, மான் (என்றும் சொல்லும்).
(2, 5, 3, 4 பெயர்கள்) 77

**திணை, செவி, பிணை, பிலவங்கம், கணை, கட்சி, பணை**

திணை, நிலம், குலம், ஒழுக்கம்;
செவி (என்ப), காது, கேள்வி;
பிணை, ஆசை, விலங்கின் பெண் பேர்;
பிலவங்கம், குரங்கு, தேரை;
கணை, அம்பு, திரட்சியும் (பேர்);
கட்சியே, காடும், கூடும்;
பணை, வயல், பரியின் பந்தி,
பருத்தல், வேய், அரசு, பீடு (ஆம்).
(3, 2, 2, 2, 2, 2, 6 பெயர்கள்) 78

**யாணர், பாணம், சேண், ஆணை**

யாணரே, புதுமை, தச்சர்,
(எய்திய) வனப்பு, நன்மை;
பாணம் (தான்), மேகவண்ணக் குறிஞ்சி,
(எய்)கணை, (பூம்) பட்டு (ஆம்);
சேண் (என்பது), அகலம், நீளம்,
(செப்பிடில்) உயரம் (முப்பேர்);
ஆணை, மெய்(யுடனே), வென்றி,
சூள், ஏவல் (ஆக நாற் பேர்).
(4, 3, 3, 4 பெயர்கள்) 79

**அண்டம், அயில், துண்டம், கண்டம், முண்டகம்**

அண்டம், ஆகாயம், முட்டை;
அயில் (என்ப), வேலே, கூர்மை;
துண்டமே, சாரைப்பாம்பு,
துணி(யொடு), வதனம், மூக்கு (ஆம்);
கண்டமே, கவசம், வெல்லம்,
கழுத்து, இடு திரை, வாள், துண்டம்;
முண்டகம், தாழை, கள்ளு,
முளரி, மத்தகம், முள் மூலம்.
(2, 2, 4, 6, 5 பெயர்கள்) 80

**அண்டர், சுண்டன், கண்டல், கரைதல், பண்டம், பாகு**

அண்டரே, பகைவர், வானோர்,
ஆயர் (என்று ஆகும் முப் பேர்);
சுண்டனே, சதயநாளும்,
சூறனும் (வேறு காட்டும்);
கண்டல், கேதகை, முள்ளிப் பேர்;
கரைதலே, விளித்தல், ஓசை;
பண்டம், பொன், பணிகாரப் பேர்;
பாகு, பால், குழம்பு, பாக்கு (ஆம்).
(3, 2, 2, 2, 2, 3 பெயர்கள்) 81

**விண்டு, தொண்டு, தண்டு, வண்டு**

விண்டு (என்ப), மாயோன், வெற்பு,
மேகமே, மூங்கில், காற்று (ஆம்);
தொண்டு (என்ப), பழமை, ஒன்பான்,
தொழும்பொடு, வழிபாடு (ஆமே);

தண்டு (என்ப), குழாயே, வீணை,
தடி, படை, மிதுனம், ஓந்தி;
வண்டு (என்ப), சங்கு, குற்றம்,
வளை, அளி, வாளி (ஐம்பேர்).
(5, 4, 6, 5 பெயர்கள்) 82

**உண்டை, தொண்டை, கொண்டை, கண்டிகை**

உண்டையே, திரளை (ஆகும்),
(உறு) படை வகுப்பும் (என்ப);
தொண்டை, ஆதொண்டை, கொவ்வை,
(தூங்கும்) யானைத் துதிக்கை;
கொண்டையே, மயிர் முடி(க்கும்),
இலந்தையின் கனி(க்கும் கூற்றும்);
கண்டிகை, பதக்கம், வாகு-
வலயமே, கலன் பெய் செப்பு.
(2, 3, 2, 3 பெயர்கள்) 83

**தண்ணம், வண்ணம், மறை, பண், மண்**

தண்ணம், ஓர் கட்பறைப் (பேர்),
(தறித்திடும்) மழுவும் (ஆகும்);
வண்ணம், ஏர், சந்தம், பண்பு (ஆம்);
மறை, இராசியமே, வேதம்;
பண் (என்ப), பாட்டும், பண்ணும்,
பரிமாவின் கலணையும் (பேர்);
மண், அணு, ஒப்பனைப் (பேர்),
(முழவின்) மார்ச்சனை(யும் ஆமே).
(2, 3, 2, 3, 3 பெயர்கள்) 84

**அணங்கு, துணங்கை, குணுங்கர், துணங்கறல், தோன்றல்**

அணங்கு, நோய், அழகு, தெய்வம்,
ஆசை, பெண், கொலை, வருத்தம்;
துணங்கையே, விழா, பேய், கூத்து (ஆம்),
ஆதிரை நாளும் (சொல்லும்);
குணுங்கர், தோற்கருவி மாக்கள்,
குயிலுவர், இழிஞர் (முப்பேர்);
துணங்கறல், இருள், விழா (ஆம்);
தோன்றலே, சுதன், நாதன் (பேர்).
(7, 4, 3, 2, 2 பெயர்கள்) 85

**புணரி, பணிலம், கணி, பணி**

புணரியே, வாரி, (நீரின்
பொரு) திரை, கரை (முப் பேராம்);
பணிலமே, சலஞ்சலம், சங்கு,
(இருபெயர் பகரலாமே);
கணி, வேங்கை மரம(தாகும்),
(கழனி சூழ்) மருதமும் (பேர்);
பணியே, தோற்கருவி, வார்த்தை,
பாம்பு, செய்தொழிலும் (ஆமே).
(3, 2, 2, 4 பெயர்கள்) 86

**பாணி, தாணு, வேணி, வியாளம்**

பாணி, ஊர், நீர், கை, ஓசை,
பற்று, கான், போது, நாடு,
(சேண் உறு) சோலை, பண்டம்,
(சிறந்த) பல்லியம் (பன்னொன்றும்);
தாணுவே, சைலம், குற்றி,
சங்கரன், நிலை, தூண் (ஐம்பேர்);
வேணியே, சடை, விசும்பு (ஆம்);
வியாளமே, புலியும், பாம்பும்.
(11, 5, 2, 2 பெயர்கள்) 87

**குண்டலம், குபேரன், மண்டலம், மந்தி, கொண்டல், கோட்டி, மண்டலி**

குண்டலம், குழை, விசும்பு (ஆம்);
குபேரனே, தனதன், சோமன்;
மண்டலம், பரி, ஊர், வட்டம்;
மந்தியே, ஊகம், வண்டு;
கொண்டலே, முகில், கீழ் காற்று (ஆம்);
கோட்டியே, வாயில், கூட்டம்;
மண்டலி, பூனை, பாம்பு,
மண்ணெடு, நாயும் (ஆமே).
(2, 2, 3, 2, 2, 2, 4 பெயர்கள்) 88

**புண்டரீகம், தண்டம், பிண்டி, பிதா, கண்டகம், களவு**

புண்டரீகம், திக்கானை,
புலி, வண்டு, கழுகு, கஞ்சம்;
தண்டமே, யானை செல்லும் வழி,
தண்டாயுதம், குடைக் கால்;
பிண்டி, நென்மா, அசோகு (ஆம்);
பிதா, சிவன், பிரமன், நாரை;
கண்டகம், சுரிகை, முள், வாள்;
களவு (என்ப), களா, சோரப் (பேர்).
(5, 3, 2, 3, 3, 2 பெயர்கள்) 89

**பண்ணவன், தண்ணடை, வண்மை, ஒண்மை**

பண்ணவன், முனிவன், தேவன்,
(பகர்) குரு, அருகன் (நாற்பேர்);
தண்ணடை, மருதம் சார் ஊர்,
நாடு (என இருபேர் சாற்றும்);
வண்மையே, வழங்கல், வாய்மை,
வளம், புகழ், வலி (ஆம் என்ப);
ஒண்மையே, மிகுதி, நன்மை,
ஒழுங்கு, அறிவு, அழகு (ஐம் பேரே).
(4, 2, 5, 5 பெயர்கள்) 90

**எண், கண், காஞ்சி, விண், விபுலம், பண்ணை**

எண், வலி, எள், இலக்கம்,
எளிமை, சோதிடம், விசாரம்;
கண், இடம், கணு, வேய்க் கண் (ஆம்);
காஞ்சி, மேகலை, ஓர் பண் (ஆம்);

விண், முகில், சுவர்க்கம், வான் (ஆம்);
விபுலம், பார், விரிவு, பீடு;
பண்ணையே, வயல், நீர்த் தாழ்வு,
மருதம், மா துயிலும் பாழி.
*(6, 3, 2, 3, 3, 4 பெயர்கள்) 91*

**காண்டம், பாண்டில், ஈண்டு**

காண்டமே, திரை, காடு, அம்பு,
கமண்டலம், கலன் பெய் செப்பு,
(நீண்ட) கோல், முடிவு, தூசு,
நீர், படைக்கலம் (ஈரைந்தாம்);
பாண்டில், ஏறு, ஊர்தி, வட்டம்,
பணை, கட்டில், விளக்கு, தாளம்;
ஈண்டு (என்பது), இவ்விடத்தோடு,
இப்படி, சடிதியும் (பேர்).
*(10, 7, 3 பெயர்கள்) 92*

**அண்டசம், சண்டன், தாள், சுண்டை, சொர்க்கம்**

அண்டசம், முதலை, ஓந்தி,
அரணை, புள், உடும்பு, பல்லி,
நண்டு, மீன், தவளை, ஆமை,
நாகம், இப்பியும் (ஈராறும்);
சண்டன், கூற்று, அலி, வெய்யோன் (ஆம்);
தாள், கதவு உறு தாள், பாதம்;
சுண்டையே, சுண்டை, கள் (ஆம்);
சொர்க்கமே, சுவர்க்கம், கொங்கை.
*(12, 3, 2, 2, 2 பெயர்கள்) 93*

**பணம், மணம், பணவை, பையுள், நுணவை, நுனி**

பணம் (என்பது), அரவின் பையும்,
பாம்பும், பொற்காசும் (முப்பேர்);
மணம் (என்ப), வாசம், கூட்டம்,
வதுவையும் (ஆகும் என்ப);
பணவையே, பரணும், பேயும்;
பையுளே, சிறுமை, நோய் (ஆம்);
நுணவை, எண்ணெலை, பிண்டி;
நுனி (என்ப), நுதி, நுண்மை(ப் பேர்).
*(3, 3, 2, 2, 2, 2 பெயர்கள்) 94*

**தகர எதுகை**
**மதலை, சிதலை, சீதம், பதலை, கதலி**

மதலையே, கொன்றை, பிள்ளை,
மரக்கலம், கொடுங்கை, தூண் (ஆம்);
சிதலை, நோய், துணி, செல் என்ப;
சீதம், நீர், குளிரே, மேகம்;
பதலை, ஓர் கட்பறை(ப் பேர்),
(பரு)வரை, தாழி(க்கும் பேர்);
கதலியே, வாழை, தேற்று,
காற்றாடி, துவசம் (நாற்பேர்).
*(5, 3, 3, 3, 4 பெயர்கள்) 95*

**இதழ், கதழ்வு, களி, மதுகம், சிதடன், திதி**

இதழ், பனையேடு, பூவின்-
இதழ், உதடு (என இம் முப்பேர்);
கதழ்வு, வேகம், சிறப்பு (ஆம்;)
களி, செருக்கொடு, குழம்பு;
மதுகமே, இருப்பை, எட்டி,
மதுரம் (ஆம்), தராவும் (ஆமே);
சிதடன், அந்தகன், மூடன் (பேர்);
திதி, பக்கம், நிலை பேறும் (பேர்).
*(3, 2, 2, 4, 2, 2 பெயர்கள்) 96*

**ஆதன், அங்கி, போதகம், ஏதம், ஈமம், சூதன், சுவேதம்**

ஆதன் (ஆர்), உயிர், ஓர்வு இல்லான்;
அங்கி (என்பது), தீ, சட்டை;
போதகம், யானைக் கன்று,
(போற்றிய) இளமை(க்கும் பேர்);
ஏதம், துன்பம், குற்றப் (பேர்);
ஈமமே, மயானம், காட்டம்;
சூதன் , தேர்ப் பாகன், சூதன்;
சுவேதமே, வெயர்வு, வெண்மை.
*(2, 2, 2, 2, 2, 2, 2 பெயர்கள்) 97*

**சூதம், சூதகம், பூதம், மாதவம், வாதம்**

சூதம், மாமரமே, வண்டு,
சூதுடன், இரதம், தோன்றல்;
சூதகமே, ஆசௌசம்,
(தோகைமார் தோயாப்) பூப்பு (ஆம்);
பூதம், ஆல், இறந்த காலம்,
புனிதம், ஐம் பூதம், சீவன்;
மாதவம், தவம், வசந்தம்;
வாதமே, தருக்கம், காற்று (ஆம்).
*(5, 2, 5, 2, 2 பெயர்கள்) 98*

**மதன், வலித்தல், பதங்கம், பலி, சிதம், நிதம்பம்**

மதன், வலி, வேள், வனப்பு (ஆம்);
வலித்தலே, வளைத்தல், பேசல்;
பதங்கம், புட்பொது, விட்டில் (பேர்);
பலி, பூசை, பிச்சை, நீறு (ஆம்);
சிதம், விண்மீன், ஞானம், வெள்ளை,
செயம் உறப்பட்டது (ஆமே);
நிதம்பமே, அல்குல் (என்ப),
(நெடு) மலைப் பக்கமும் (பேர்).
*(3, 2, 2, 3, 4, 2 பெயர்கள்) 99*

**சதி, விதி, வேட்டுவன், பதி, பதுக்கை, பிதிர், பிண்டம்**

சதி, உரோகிணி, கற்பாட்டி,
வஞ்சனை, தாளவொத்து;

விதி (என்ப), வினை, அயன் (பேர்);
வேட்டுவன், மகநாள், வேடன்;
பதி, இறை, கேள்வன், ஊர் (ஆம்);
பதுக்கையே, பாறை, தூறு;
பிதிர், கதை, நொடி, தூவல் (பேர்);
பிண்டமே, திரளை, பிச்சை.
*(4, 2, 2, 3, 2, 3, 2 பெயர்கள்)* 100

**ஆதி, பூதியம், பொம்மல், பாதிரி, ஏதி, இழை**

ஆதியே, முதல், நேரோடல்,
அருகன், மால், ஈசன், வேதன்;
பூதியம், புவி, உடல் (பேர்);
பொம்மலே, பொலிவும், சோறும்;
பாதிரி, பாடலப் (பேர்),
(பணைத்து எழும்) மூங்கிற்கும் (பேர்);
ஏதி, ஆயுதம், வாள் (என்ப);
இழை, நூல், ஆபரணம் (ஆமே).
*(6, 2, 2, 2, 2, 2 பெயர்கள்)* 101

**சாதி, போதம், புகல், ஓதி, ஓதிமம், உருத்தல்**

சாதியே, பிரம்பு, கள், ஓர்-
தரு, சிறு சண்பகப் (பேர்);
போதம், ஞானம், தோணி(ப் பேர்);
புகல், குதிர், உடல், சொல், வெற்றி;
ஓதி, பெண் மயிரே, பூனை,
ஓந்தி, மெய்ஞ்ஞானம், வெற்பு (ஆம்);
ஓதிமம், அன்னம், வெற்பு (ஆம்);
உருத்தலே, தோற்றல், கோபம்.
*(4, 2, 4, 5, 2, 2 பெயர்கள்)* 102

**சுதை, புதை, மது, கதை**

சுதை, மகள், கறவாத் தேனு,
சுண்ணச்சாந்து, அமுது (நாற்பேர்);
புதை (என்ப), கணையின் கட்டும்,
புதுமையும், மறைவும் (முப் பேர்);
மது என்ப), நறவும், தேனும்,
வசந்தகாலமும் (ஆம் என்ப);
கதை, தண்டாயுதமே, வார்த்தை,
காரணம் (இம் முப்பேரே).
*(4, 3, 3, 3 பெயர்கள்)* 103

**சீதை, மேதை, கோதை, ஓதை, உக்கம்**

சீதையே, பொன்னுங்காணி,
படைச்சால், சீராமன்தேவி;
மேதை, தோல், புதன், இறைச்சி,
(மிக்க) பேர் அறிவு, கள் (ஆம்);
கோதை, முன்கைத் தோற்கட்டி,
குழல், தார், காற்று, ஒழுங்கு, சேரன்;
ஓதை, பேரொலி, மதில் (பேர்);
உக்கம், தீ, இடை, ஆன், ஏறு.
*(3, 5, 6, 2, 4 பெயர்கள்)* 104

**அத்தம், புத்தகம், நத்தம், துத்தம்**

அத்தம், பொன், பாதி, கை, கண்-
ணாடி, சொற்பொருள், காடு, ஓர்நாள்;
புத்தகம், கோசம் (என்ப),
சித்திரப் படாமும் (ஆமே);
நத்தமே, இருளும், ஊரும்,
நந்துடன், இரவு (நாற்பேர்);
துத்தம், ஓர் இசை, நாய், பாலே,
வயிறு, கண் மருந்தும் (சொல்லும்).
*(7, 2, 4, 5 பெயர்கள்)* 105

**அத்து, தொத்து, தூம்பு, தத்தை, தழல், உத்தரம்**

அத்து (என்ப), அரை ஞாண், செம்மை,
அசைச் சொலோடு, இசைப்பு (நாற்பேர்);
தொத்து, பூங்கொத்து, தொண்டாம்;
தூம்பு, வேய், துளை, மரக்கால்;
தத்தை, மூத்தாள், கிளிக்கு (ஆம்);
தழல், கிளி கடி கோல், செந் தீ;
உத்தரம், ஊழித் தீ, மேல்
(ஒடு), மறு மொழி, வடக்கு (ஆம்).
*(4, 2, 3, 2, 2, 4 பெயர்கள்)* 106

**கூத்தன், கலம், ஊழ்த்தல், பாத்து, தீர்த்தம், தீர்த்தன்**

கூத்தனே, உயிர், நடன் (பேர்);
குலம், குடி, கோயில், கூட்டம்;
ஊழ்த்தலே, நினைத்தல், செவ்வி,
(உறு) பதன் அழிவு (முப் பேர்);
பாத்து (என்ப), கஞ்சி, சோறு,
பகுத்திடல் (வகுத்த முப்பேர்);
தீர்த்தமே, விழாவும், நீரும்;
தீர்த்தனே, அருகன், ஆசான்.
*(2, 3, 3, 3, 2, 3 பெயர்கள்)* 107

**குத்தி, கோணம், பத்தி, அத்தி, சத்தியம், தபுதல்**

குத்தி, மண், அடக்கம் (என்ப);
கோணம், வாள், குதிரை, மூக்கு (ஆம்);
பத்தியே, முறை, ஒழுக்கம்,
(பகர்) வழிபாடு (முப் பேர்);
அத்தி, ஆர்கலியே, யானை,
அதவு, எலும்பு (ஆக நாற்பேர்);
சத்தியம், சபதம், (மெய்(ஆம்);
தபுதலே, சாவும், கேடும்.
*(2, 3, 3, 4, 2, 2 பெயர்கள்)* 108

**பித்திகை, கத்திகை, உத்தி, துத்தி**

பித்திகை, கருமுகை(க்குப்
பெயர்), சுவர்த்தலமும் (ஆகும்);
கத்திகை, தொடை விகற்பம்,
துவசமே, (கமழ்) வாசந்தி;

உத்தி, செந்திரு உறுப்பு,
சுணங்கு, உரையாடல் (முப் பேர்);
துத்தியே, சுணங்கு, பாம்பின்
சுடர்ப் பொறி, புதல் ஒன்று (ஆமே).
*(2, 3, 3, 3 பெயர்கள்)* *109*

**சித்திரபானு, பத்திரம், சித்திரம், சத்திரம்**

சித்திரபானு, செந் தீ,
திவாகரன், ஆண்டு ஒன்றின் (பேர்);
பத்திரம், இலை, வனப்பு,
படை, நன்மை, சிறகே, பாணம்;
சித்திரம், அழகு, ஓர் பாடல்,
(சிறந்த) விம்மிதம், ஏரண்டம்;
சத்திரம், குடையே, அன்ன-
சாலை, கை விடா வேல், வேள்வி.
*(3, 6, 4, 4 பெயர்கள்)* *110*

**காத்திரம், நேத்திரம், நீலி, கோத்திரம், பாத்தி**

காத்திரம், கனம், மெய், சீற்றம்,
களிற்றின் முன் காலே, கிரி;
நேத்திரம், கண், பட்டாடை;
நீலியே, கருமை, துர்க்கை;
கோத்திரம், புடவி(தானே),
குலமொடு, மலையும் (ஆமே);
பாத்தியே, சிறு செய், இல்லம்,
பகுத்தலும் (வகுத்த நாமம்).
*(5, 2, 2, 3, 3 பெயர்கள்)* *111*

**சதம், சத்தம், கதவம், கழங்கு, பதம், மதி**

சதம், இலை, இறகு, நூறு;
சத்தமே, ஓசை, ஏழ் (ஆம்);
கதவமே, கதவு, காப்பு (ஆம்);
கழங்கு, பேய் நடம், கழற்சி;
பதம், மூரல், இன்பம், செவ்வி,
பதவி, தாள், வரிசை, வார்த்தை;
மதி, ஓர் முன்னிலை அசைச்சொல்,
மாதம், அம்புலி, புத்தி(ப் பேர்).
*(3, 2, 2, 2, 7, 4 பெயர்கள்)* *112*

**பீதகம், சாதகம், சேதகம், தேயம், மாதர்**

பீதகம், சாந்து, பொன்மை,
பெருந் தனம், இரு வேலி(ப் பேர்);
சாதகம் வானம்பாடி,
சனனம், பாரிடம் (முப் பேரே);
சேதகம், சேறு, செம்மை;
தேயம் (தான்), உடம்பு, நாடு (ஆம்);
மாதர், ஓர் இடைச்சொல், காதல்,
வனப்பொடு, மகளிர் (ஆமே).
*(4, 3, 2, 2, 4 பெயர்கள்)* *113*

**சோதி, பூதி, வீதி, மேல், மாதிரம்**

சோதி, மால், அருகன், பானு,
சுடர், விளக்கு, ஈசன், ஓர்நாள்;
பூதியே, நரகம், செல்வம்,
துர்க்கந்தம், புழுதி, நீறு (ஆம்);
வீதியே, தெரு, நேரோடல்;
மேல் (என்பது), இடம், விண், மேற்கு (ஆம்);
மாதிரம், திசை, ஆகாயம்,
மலை, யானை, நிலம் (ஐம்பேரே).
*(7, 5, 2, 3, 5 பெயர்கள்)* *114*

**தாது, வேதிகை, வெதிர், கேது, கிள்ளை**

தாது, பொன் முதலாம் ஏழும்,
சடம் உறு தாது ஓரேழும்,
பூதம் ஓர் ஐந்தும், காவிக்
கல்(லுடன்) (புகலும் நாற்பேர்);
வேதிகை, பலகை, திண்ணை;
வெதிர் (என்ப), செவிடு, வேணு;
கேதுவே, சிகி, பதாகை;
கிள்ளை (தான்), குதிரை, தத்தை.
*(4, 2, 2, 2, 2 பெயர்கள்)* *115*

**கதுப்பு, விதப்பு, வித்தம், அதிர்ப்பு, அகப்பா, ஒதுக்கம், ஒருத்தல்**

கதுப்பே, ஆண் மயிரும், பெண்பால்
மயிரொடு, கவுளும் (முப்பேர்);
விதப்பே, கம்பிதம், மிக்கு (ஆகும்);
வித்தம், பொன், பழிப்பு, ஞானம்;
அதிர்ப்பு, ஒலி, நடுக்கம் (என்ப);
அகப்பாவே, புரிசை, மேடை;
ஒதுக்கமே, நடை, மறைப்பு (ஆம்);
ஒருத்தல், ஆண் விலங்கு, வேழம்.
*(3, 2, 3, 2, 2, 2, 2 பெயர்கள்)* *116*

**பத்திரி, அத்திரி, சத்தி, சுத்தி**

பத்திரி, பறவை, காளி,
பரி, இலை, பாணம் (ஐம்பேர்),
அத்திரி, கழுதை, விண், ஒட்-
டகம், பரி, அசலம், அம்பு (ஆம்);
சத்தியே, உமை, வேல், கான்றல்,
குடை, வலி, துவசம் (தானும்);
சுத்தியே, அகல், வெண் சங்கம்,
சுத்தம், ஓர் கருவிக்கும் (பேர்).
*(5, 6, 6, 4 பெயர்கள்)* *117*

**புத்தன், பூழில், புத்தேள், பூட்கை, தைத்தல், சாறு, முத்தம்**

புத்தன், மால், அருகன், சாத்தன்;
பூழில் (தான்), அகில், பூமி(ப் பேர்);
புத்தேளே, புதுமை, தே (ஆம்);
பூட்கை, தோல், மேற்கோள், யாளி;
தைத்தல், துன்னம், கைத்தல் (பேர்);
சாறு, கள், விழவு, தாறு (ஆம்);
முத்தமே, பிரியம், ஒட்டம்,
மருத (நன்)னிலம், முத்து (ஆமே).
*(3, 2, 2, 3, 2, 3, 4 பெயர்கள்)* *118*

**அத்தன், சித்தம், சேகரம், கைத்தல், கனுறல், சித்து, செய்**

அத்தனே, மூத்தோன், தந்தை,
அரனொடு, குருவும் (நாற்பேர்);
சித்தமே, திடம், உள்ளம் (பேர்);
சேகரம், தலை, மா, ஏர் (ஆம்);
கைத்தலே, சினம், கைப்பு (ஆகும்);
கனுறலே, பொலிவு, கன்றல்;
சித்து (என்ப), சயமே, ஞானம்;
செய் (என்ப), நிலம், ஏவல் (பேர்).
*(4, 2, 3, 2, 2, 2, 2 பெயர்கள்)* *119*

**உத்தரம், பைத்தல், மத்திகை, மத்து**

உத்தரம், (சித்திரம் சேர்ந்து
ஒளிரும்) இல் உறுப்போடு, ஓர் நாள்;
பைத்தலே, முனிவினோடு,
பசுத்தலும் (பகரல் ஆகும்);
மத்திகையே சம்மட்டி,
சுடர் நிலைத் தண்டு, மாலை;
மத்து (என்ப), தயிர் மத்தோடு,
மத்தமும் (இரு பேர் ஆமே).
*(2, 2, 3, 2 பெயர்கள்)* *120*

**மதர்வு, புதவு, புணர்ச்சி, சிதர், அதர்**

மதர்வு, மேவுதல், வனப்பு,
வலி, இடம், மிகுதி (ஐம்பேர்);
புதவு (என்ப), கதவு, ஓர் புல்(லாம்);
புணர்ச்சியே, கலவி, கூடல்;
சிதர், உறி, திவலை, வண்டு,
சீலையின் துணி (நாற்பேரே);
அதர், வழி, புழுதி, ஆட்டின்
அதரும், நுண் மணலும் (ஆமே).
*(5, 2, 2, 4, 4 பெயர்கள்)* *121*

**முதலை, அதம், கதி, மதம், மாயை**

முதலை, செங்கிடை, இடங்கர்,
முருந்து (என மொழியல் ஆகும்);
அதம், இறங்குதல், பாதாளம்,
கீழும் (என்று அறையும் முப்பேர்);
கதி, நடை, விரைவே, நான்கு
கதியொடு, கதியும் (காட்டும்);
மதம், இப மதம், செருக்கு (ஆம்);
மாயையே, மாயம், சத்தி.
*(3, 3, 4, 2, 2 பெயர்கள்)* *122*

**பீதம், பேதை, வாதுவர், மூதிரை**

பீதமே, சாந்து, மஞ்சள்,
பிங்கலத்தொடு, பொன்மைப் (பேர்);
பேதை, ஓர் பருவம், மூடன்,
பெண், தரித்திரனே (நாற் பேர்);
வாதுவர், யானைப் பாகர்,
(வயப்) பரிமா வடிப்போர்;
மூதிரை, ஆதிரைப் (பேர்),
முக்கணன் (பேரும் ஆமே).
*(4, 4, 2, 2 பெயர்கள்)* *123*

**தாதி, போது, போர்வை, சாதம், தகைமை, வீதல்**

தாதியே, பரணி நாளும்,
அடிமையும் (இரு பேர் சாற்றும்);
போது (தான்), காலம், பூ (ஆம்);
போர்வை, தோல், கவசம், மீக்கோள்;
சாதமே, திடம், பதப்(பேர்);
தகைமை, ஏர், இயல்பு, பீடு (ஆம்);
வீதலே, கெடுதல், சாவே,
இலம்பாடும் (விளம்பும் முப்பேர்).
*(2, 2, 3, 2, 3, 3 பெயர்கள்)* *124*

**நகர எதுகை**

**இந்தனம், சந்தம், கந்தம், மந்திரம்**

இந்தனம், மிசையே, காட்டம்,
(எரி இடு) கனலும் (ஆகும்);
சந்தமே, நிறம், வனப்பு,
(சாற்றிய) கவிதை, சாந்தம்;
கந்தம், இந்தியம், பகுத்தல்
கழுத்தடி, கிழங்கு, நாற்றம்;
மந்திரம், விசாரம், கோயில்,
வாசியின் குழாம், வீடே, கள்.

*(3, 4, 5, 5 பெயர்கள்)* *125*

**அந்தில் - ஆங்கு, அணவல், சந்தி, நந்தி, உந்தி**

அந்தில் - ஆங்கு, அசை, இடப்(பேர்);
அணவலே, அணுகல், புல்லல்;
சந்தியே, அந்தி, மூங்கில்,
சதுக்கமும், இசைப்பும் (அப் பேர்);
நந்தியே, சிவனும், ஏறும்,
நந்தியீச்சுரனும் (முப்பேர்);
உந்தி, தேருருளே, யாறே,
உவரி, நீர்ச் சுழியே, கொப்பூழ்.
*(2, 2, 2, 4, 3, 5 பெயர்கள்)* *126*

**கந்து, கந்துகம், கனம், பந்து, குந்தளம்**

கந்து, பண்டியுள் இரும்பும்,
கம்பமும், யாக்கை மூட்டும்;
கந்துகம், குதிரை, பந்து (ஆம்);
கனம், (என்ப) புயல், பாரப்(பேர்);
பந்து, கந்துகமும், மட்டுப்
பட நீர் தூம் துருத்தியும் (பேர்);
குந்தளம், மாதர் ஓதி,
குழல் கொத்து, குருளை (முப் பேர்).
*(3, 2, 2, 2, 3 பெயர்கள்)* *127*

**வேந்தன், காந்தாரம், காழகம், ஏந்தல், எஃகு, கூந்தல், குவலயம்**

வேந்தனே, அரசன், திங்கள்,
வியாழன், இந்திரன், ஆதித்தன்;
காந்தாரம், இசை, காடு (என்ப);
காழகம், கருமை, தூசு (ஆம்);
ஏந்தலே, பெருமை, மேடு (ஆம்);
எஃகு, உருக்கொடு, வேல், கூர்மை;
கூந்தல், பெண் மயிர், பீலிப்(பேர்);
குவலயம், குவளை, பூமி.
*(5, 2, 2, 2, 3, 2, 2 பெயர்கள்)* *128*

**அந்தரம், கந்தரம், மந்தாரம், சிந்துரம்**

அந்தரம், முடிவு, பேதம்,
அண்டமோடு, இடை (நாற்பேரே);
கந்தரம் (என்ப), மேகம்,
கழுத்தொடு, மலை முழை(ப் பேர்);
மந்தாரம், தருமரம், செவ்-
வரத்தமும் (ஆகும் என்ப);
சிந்துரம், புளியே, யானை,
செங்குடை, திலகம், செம்மை.
*(4, 3, 2, 5 பெயர்கள்)* *129*

**கந்தருவம், கவந்தம், குந்தம், செந்து, சிந்து**

கந்தருவம், பண், வாசி;
கவந்தம் (என்பது), நீர், மட்டை;
குந்தமே, ஒரு வியாதி,
குருந்தொடு, குதிரை, கைவேல்;
செந்து, ஓர் நரகம், ஓரி,
சீவனோடு, அணுவும் (நாற்பேர்);
சிந்து, நீர், முச் சீர், ஆறு,
கடல், குறள், ஒரு தேசப் (பேர்).
*(2, 2, 4, 4, 6 பெயர்கள்)* *130*

**அந்தி, நந்து, நாறுதல், மைந்தன், வசந்தம், வந்தியர்**

அந்தி, முச் சந்தி, பாலை-
யாழிசை, இரவு, மாலை;
நந்து (என்ப), நத்தை, சங்கு (ஆம்);
நாறுதல், மணம், உண்டாதல்;
மைந்தனே, திறலோன், சேய் (ஆம்);
வசந்தமே, வேனில், வாசம்;
வந்தியர், புகழ்வோர் (பேரும்),
மலடிகள் (பேரும் ஆமே).
*(4, 2, 2, 2, 2, 2 பெயர்கள்)* *131*

**விந்தம், விருத்தம், அந்தணர், அணி, அந்தகன், அங்காரகன், மந்தன்**

விந்தம், ஓர் எண்ணும், வெற்பும்;
விருத்தமே, வட்டம், மூப்பு (ஆம்);
அந்தணர், அறவோர், பார்ப்பார்;
அணி ,படைவகுப்பு, அணிப்(பேர்);
அந்தகன், குருடன், கூற்று (ஆம்);
அங்காரகன், தீ, செவ்வாய்;
மந்தன், சனி, கூர்ப்பு இல்லா
மனுடனும் (இரு பேர் ஆமே).
*(2, 2, 2, 2, 2, 2, 2 பெயர்கள்)* *132*

**பகர எதுகை**

**உப்பு, செப்பம், துப்பு, கப்பணம்**

உப்பு, மெல்லியலார் ஆடல்,
உவர், கடல், இனிமை (நாற்பேர்);
செப்பமே, நடுநிலைப் பேர்,
செருவொடு, நெஞ்சும் (ஆகும்);
துப்பு, அரக்கு, ஊற்றம், தூய்மை,
துகிர், பகை, அனுபவப் (பேர்);
கப்பணம், இரும்பிற் செய்த
நெருஞ்சில் முள், கை வேல் (ஆமே).
*(4, 3, 6, 2 பெயர்கள்)* *133*

**தாபரம், நீபம், யூபம், சாபம், தளிமம்**

தாபரம், மலைபோல் நிற்றல்,
சடமொடு, தருவும் (முப்பேர்);
நீபம், உத்தரட்டாதிப்(பேர்),
நிமித்தம், நீர்க் கடம்பும் (ஆகும்);
யூபமே, கவந்தம், வேள்விக்கு
உறு தம்பம், படை வகுப்பு (ஆம்);
சாபமே, சபித்தல், வில் (ஆம்);
தளிமமே, அழகு, மெத்தை.
*(3, 3, 3, 2, 2 பெயர்கள்)* *134*

**சீப்பு, நாப்பண், காப்பு, யாப்பு, இறுல்**

சீப்பு (என்ப), கதவின் தாழும்,
சீவு கங்கமும் (ஆம் என்ப);
நாப்பண் (என்பது), தேர்த் தட்டும்,
நடுவும், யாழுறுப்பும் (முப்பேர்);
காப்பு (என்ப), காவலோடு,
கதவும், வெண்ணீறும் (ஆகும்);
யாப்பு (என்ப), கவிதை, கட்டு (ஆம்);
இறுல், தேன் கூடு, எருது, மீனே.
*(2, 3, 3, 2, 3 பெயர்கள்)* *135*

**மகர எதுகை**

**சமன், சலம், கமலம், கலாம், குமரி, ஞமலி, நனை**

சமன், யமன், நடுவும் (ஆகும்);
சலம் (என்ப), வயிரம், நீர், பொய்;
கமலம், நீர், வனசமும் (பேர்);
கலாம், சினம், கொடுமை (ஆகும்);
குமரி, கற்றாழை, கன்னி,
கொற்றவை, காளி(க்கும் பேர்);
ஞமலி, நாய், மயில், கள் (என்ப);
நனை, கள்ளு, மலர் மொட்டும் (பேர்).
*(2, 3, 2, 2, 4, 3, 2 பெயர்கள்)* *136*

**சாமம், வாமம், பூ, ஏமம்**

சாமம், ஓர் வேதம், பச்சை,
சாமமே, கருமை (நாற்பேர்);
வாமமே, குறள், இடப்பால்,
வனப்பொடு, தொடையும் (ஆமே);
பூ, மலர், வனப்பு, கூர்மை,
பொலிவொடு, பிறப்பு, பூமி;
ஏமமே, சேமம், காவல்,
இன்பம், பொன், இரவே, மையல்.
*(4, 4, 6, 6 பெயர்கள்) 137*

**உம்பர், வம்பு, கும்பம், தும்பு, சுகம்**

உம்பரே, தேவர் (ஆகும்),
உயர்நிலமுடன், மேலும் (பேர்);
வம்பு (என்ப), புதுமை, கச்சு,
மணம், நிலையின்மை (நாற்பேர்);
கும்பமே, குடம், இராசி,
கும்பி மத்தகமும் (ஆகும்);
தும்பு (என்ப), சிம்பு, தோடு (ஆம்);
சுகம் (என்ப), கிளியே, இன்பம்.
*(3, 4, 3, 2, 2 பெயர்கள்) 138*

**ஆம்பல், சாம்பல், தமிழ், தாம்பு, காம்பு**

ஆம்பல், வேய், கள்ளு, கவ்வை,
அல்லி, வங்கியமே, யானை;
சாம்பல், கூம்புதல், பழம் பூ;
தமிழ் (என்பது), இனிமை, நீர்மை;
தாம்பு (என்ப), கயிறு (தானே),
தாமணி (தனக்கும் பேராம்);
காம்பு, வேய், மலர்த் தாள், பட்டே,
(கடி) மலர்க் கொம்பு (நாற்பேர்).
*(6, 2, 2, 2, 4 பெயர்கள்) 139*

**அம்மை, சும்மை, செம்மை, திரிதல்,
கொம்மை**

அம்மையே, வரு பிறப்பும்,
அழகும் (ஆம்), தாயும் (ஆகும்);
சும்மை (என்பதுவே), நெற்போர்,
நாடு, ஒலி, சுமையும் (சொல்லும்);
செம்மை, செவ்வையும், சிவப்பும்;
திரிதலே, உலாவல், கேடு (ஆம்);
கொம்மையே, இளமை, வட்டம்,
கொங்கை, கை குவித்துக் கொட்டல்.
*(3, 4, 2, 2, 4 பெயர்கள்) 140*

**அம், அழனம், கம், செம்மல், கம்மியர்**

அம், அழகு, அசைச் சொல், நீர் (ஆம்);
அழனம், தீ, பிணமும் (ஆகும்);
கம் (என்ப), தலை, ஆகாயம்,
கனம், கால், நீர், விதி, வெளுப்பு;
செம்மலே, பழம் பூ, ஈசன்,
சினேந்திரன், சிறந்தோன், மைந்தன்;
கம்மியர், கை வினைப் பேர்,
கண்ணுளர் (தாமும் ஆமே).
*(3, 2, 7, 5, 2 பெயர்கள்) 141*

**வாமனம், காமரம், நேமி, தேம்**

வாமனம், குறள், புராணம்,
மாதிரக் கயத்தில் ஒன்று (ஆம்);
காமரம், அத்தநாளோடு,
அடுப்பு, இசைப் பொதுவும் (காட்டும்);
நேமி, சக்கரம், பார், வட்டம்,
நேமிப் புள், கடல் (ஐம்பேரே);
தேம் (என்பது), இடம், தித்திப்பு,
தேன், நாற்றம், திசை, தேசப்(பேர்).
*(3, 3, 5, 6 பெயர்கள்) 142*

**தாமம், சோமன், சுரும்பு, சாமி**

தாமம், வெற்பு, ஒழுங்கு, கொன்றை,
சாந்து, ஒளி, நகரம், தாம்பு,
பூ, மணிக்கோவை, மாலை,
பொரு களம், கரி (ஈராறும்);
சோமன், ஓர் வள்ளல், இந்து;
சுரும்பு (என்ப), மலையும், வண்டும்;
சாமியே, முதல்வன், செவ்வேள்,
தலைவி, ஆசான், வெறுக்கை.
*(12, 2, 2, 5 பெயர்கள்) 143*

**குமுதம், சிமயம், தீ, அமறல், அரில், சிமிலி**

குமுதமே, அடுப்பு, ஓர் திக்கின்
குஞ்சரம், ஒலி, வெண்ணெய்தல்;
சிமயமே, மலை, வெற் புச்சி;
தீ, தீயே, நரகு, தீங்கு (ஆம்);
அமறலே, பொலிவு, துன்னல்;
அரில், தூறு, பிணக்கம், மாசு;
சிமிலியே, குடுமி, சிக்கம்,
சிள் வீடு (தானும் ஆமே).
*(4, 2, 3, 2, 3, 3 பெயர்கள்) 144*

**சம்பு, தும்பி, துன்னல், கம்புள்,
அம்பரம், அண்ணல்**

சம்புவே, இரவி, நாவல்,
சங்கரன், அயன், மால், ஓரி;
தும்பியே, களிறு, வண்டு (ஆம்);
துன்னலே, செறிதல், சேர்தல்;
கம்புளே, சங்கு, சம்பங்-
கோழி (என்று இருபேர் காட்டும்);
அம்பரம், கடல், விண், தூசு (ஆம்);
அண்ணலே, தலைவன், பீடு.
*(6, 2, 2, 2, 3, 2 பெயர்கள்) 145*

**கிம்புரி, கேட்டை, கும்பி, குலை,
உம்பல், அம்பல்**

கிம்புரி, முடி, தந்தப் பூண்;
கேட்டை (தான்), முகடி, ஓர்நாள்;

கும்பி, சேறு, ஆனை, பூதி;
குலை (தான்), செய் கரை, காய்க் கொத்து (ஆம்);
உம்பல், ஆண் விலங்கு, வேழம்,
உயர் குலம், எழுச்சிக்கும் (பேர்);
அம்பலே, பழிச் சொல், சில்லோர்
அறிந்து அலர் தூற்றல் (ஆமே).
(2, 2, 3, 2, 4, 2 பெயர்கள்) 146

**கம்பலை, செம் புலம், தம்பம், சமழ்த்தல், கம்பம், கந்தன்**

கம்பலை, அச்சம், ஓசை,
கம்பிதம், துன்பம் (நாற்பேர்);
செம்புலம், பாலை சேரும்
திணை, செருக் களம் (இரண்டாம்);
தம்பமே, கவசம், தூண் (ஆம்);
சமழ்த்தலே, வருத்தம், நாணம்;
கம்பமே, நடுக்கம், தம்பம்;
கந்தனே, அருகன், செவ்வேள்.
(4, 2, 2, 2, 2, 2 பெயர்கள்) 147

**அமரர், அவந்தி, அமுது, அமலை, தமம், சார்ங்கம்**

அமரரே, விபுதர், தெவ்வர்;
அவந்தி (தான்), கிளி, ஓர் ஊர் ஆம்;
அமுது, பால், தேவர் உண்டி,
(ஆகும்) இன் சுவையும் (முப் பேர்);
அமலையே, ஆரவாரம்,
அயினியோடு, உமையும் (முப் பேர்);
தமம், இருள், இராகு(வின் பேர்);
சார்ங்கம், விற்பொது, மால் வில் (ஆம்).
(2, 2, 3, 3, 2, 2 பெயர்கள்) 148

**ஆம்பிரம், சாம்பு, தாண்டவம், பாம்பு, பை, ஆம்பி, அயிராணி**

ஆம்பிரம், புளி மா, தே மா,
(ஆம்), புளிப்பினுக்கும் (அப்பேர்);
சாம்பு, பொன், பறை (ஆம் என்ப);
தாண்டவம், கூத்தே, தாவல்;
பாம்பு (என்ப), கரை, மராளம்;
பை, அராப் படமே, பச்சை;
ஆம்பியே, ஒலி, காளான் (ஆம்);
அயிராணி, உமை, இந்திராணி.
(3, 2, 2, 2, 2, 2, 2 பெயர்கள்) 149

**காமன், காமம், கணிச்சி, பூமன், புரையோர், சேமம், தெக்கிணம்**

காமனே, வாசவன், வேள்,
கழுதும், திப்பிலியும் (ஆகும்);
காமமே, விரகம், ஆசை;
கணிச்சி (தான்), மழுவே, தோட்டி;
பூமனே, பிரமன், செவ்வாய்;
புரையோரே, கீழோர், மேலோர்;
சேமமே, காவல், இன்பம்;
தெக்கிணம், வலம், தெற்கு (ஆகும்).
(4, 2, 2, 2, 2, 2, 2 பெயர்கள்) 150

**காமுகன், காது, கோமளம், கலித்தல், மாமை, மலயசம்**

காமுகன், விடன், வேள், மால் (ஆம்);
காது (என்ப), கொலையும், காதும்;
கோமளம், பசு, வனப்பு,
(கூறிய) இளமைக்கும் (பேர்);
(நாமம் ஆம்) கலித்தல், மிக்கு,
நற்பொலிவு, எழுச்சி, ஓசை;
மாமையே, நிறம், வனப்பு (ஆம்);
மலயசம், சந்து, (அம்) தென்றல்.
(3, 2, 3, 4, 2, 2 பெயர்கள்) 151

**யகர எதுகை**

**காயம், நேயம், நிறம், ஆயம், சாயல்**

காயம், மெய், விண், வெண் காயம்,
பெருங் காயம், கறி, கரித்தல்;
நேயம், நெய், எண்ணெய், அன்பு (ஆம்);
நிறம் (என்ப), மருமம், காந்தி;
ஆயமே, கவற்றின் தாயம்,
ஆதாயம், மாதர் கூட்டம்;
சாயல் (என்பது), மேம்பாடு,
(தரும்) அழகுடனே, மென்மை.
(6, 3, 2, 3, 3, பெயர்கள்) 152

**வயம், வயல், சயம், சடம், நியமம், இயம்**

வயம், நீர், புட் பொது, வலிப்(பேர்);
வயல், வெளி, பழனமும் (பேர்);
சயம், வெற்றி, சருக்கரைப் (பேர்);
சடம், உடல், வஞ்சம், பொய் (ஆம்);
நியமமே, நியதி, வீதி,
நிச்சயம், நகரம், கோயில்;
இயம் (என்ப), ஒலியே, வார்த்தை,
வாச்சியம் (இம் முப் பேரே).
(3, 2, 2, 3, 5, 3 பெயர்கள்) 153

**அயம், கயம், பயம், அயனம்**

அயம் (என்ப), நீர், தடாகம்
ஆடு, (வெம்)பரி, இரும்பு (ஆம்);
கயம், மென்மை, குளமே, ஆழம்,
களிறு, கீழ், பெருமை, தேய்வு (ஆம்);
பயம் (என்ப), சுதை, நீர், அச்சம்,
பாலொடு, பயன் (பேர் ஐந்தே);
அயனமே, வழி(யின்) நாமம்),
ஆண்டினில் பாதி(க்கும் பேர்).
(5, 7, 5, 2 பெயர்கள்) 154

**பயிர், கயினி, வயிரம், கயில்**

பயிர், ஒலி, பயிலே, பைங்கூழ்,
(பறக்கும்) புட்குரல் (இந்நாற்பேர்);

கயினியே, அத்தநாளும்,
கைம்மையும் (இரு பேர் காட்டும்);
வயிரமே, செற்றம், கூர்மை,
வச்சிரம், ஓர் மணியே, சேகு;
கயில், பிடர்த்தலையே, பூணின்
கடைப்புணர்வு (இரு பேர் தானே).
*(4, 2, 5, 2 பெயர்கள்)* *155*

**ஐயம், ஐயன், தொய்யல், மொய்**

ஐயமே, பிச்சை ஏற்கும் ஓடு,
அனுமானம், பிச்சை;
ஐயனே, மூத்தோன், சாத்தன்,
அப்பன், ஈச்சுரன் (நாற்பேரே);
தொய்யலே, உழவும், சேறும்,
துயரமும், மகிழ்ச்சியும் (பேர்);
மொய், செருக் களம், போர், யானை,
மூசல், வண்டொடு, திரட்(பேர்).
*(3, 4, 4, 6 பெயர்கள்)* *156*

**வயவன், குயிறல், வயின், வயா, மயல், மறவர்**

வயவனே, வீரனோடு,
வலியான், காதலனும் (ஆகும்);
குயிறலே, செறிதல், கூவல்,
குடைதல், பண்ணுதல் (நாற்பேரே);
வயின், இடம், உதரம், வீடு (ஆம்);
வயா, கரு, வருத்தம், காதல்;
மயல், செத்தை, மயக்கம், பேய் (ஆம்);
மறவரே, வயவர், வேடர்.
*(3, 4, 3, 3, 3, 2 பெயர்கள்)* *157*

**குயில், வய மா, வியல், வேய், மயிலை**

குயிலே, கோகிலமும், சொல்லும்,
கொண்மூவும், துளையும் (நாற்பேர்);
வய மாவே, குதிரை, சிங்கம்,
மத கரி, புலியும் (ஆகும்);
வியல் (என்ப), விசாலம், பீடு (ஆம்);
வேய், துளை, ஒற்று, மூங்கில்;
மயிலையே, மீன ராசி,
மீன், இருவாட்சி (முப்பேர்).
*(4, 4, 2, 3, 3 பெயர்கள்)* *158*

**சயிந்தவம், குயம், நயந்தோன், நலம், பயம்பு**

சயிந்தவம், குதிரையோடு,
தலையும், இந்துப்பும் (ஆகும்);
குயம், தனம், இளமையோடு,
(கூர்) அரிவாளும் (முப் பேர்);
நயந்தோனே, நண்பன், கொண்கன்;
நலம், விருச்சிகமே, நன்மை;
பயம்பு (என்ப), யானை வீழும்
படுகுழி, பள்ளம் (ஆமே).
*(3, 3, 2, 2, 2 பெயர்கள்)* *159*

**இயல், ஏல்வை, குய், செயிர், சேடி, உயவை**

இயல், நடை, தமிழ், சாயல் (பேர்);
ஏல்வையே, பொழுது, வாவி;
குய் (என்ப), கறி கரித்தல்,
(குளிர்) நறும் புகை (இரண்டாம்);
செயிர் (என்ப), சினம், குற்றப் (பேர்);
சேடி, விஞ்சையர் ஊர், பாங்கி;
உயவை, காக்கணமே, முல்லை,
(உற்ற) கான்யாறும் (ஆமே).
*(3, 2, 2, 2, 2, 3 பெயர்கள்)* *160*

**செய்யல், நெய்தல், வெய்யோன், ஐயை**

செய்யலே, ஒழுக்கம், காவல்,
சேறு, செய் வினை (நாற் பேரே);
நெய்தலே, கடல் சார் பூமி,
நெய்தற் பூ, சாப்பறைப் (பேர்);
வெய்யோன், ஆதவனே, தீயோன்,
விரும்பினன் (தனக்கும் அப்பேர்);
ஐயையே, உமையாள், துர்க்கை,
மகள், அருந் தவப் பெண், ஆசாள்.
*(4, 3, 3, 5 பெயர்கள்)* *161*

**ஐ, மை, கை, வையம்**

ஐ, அழகு, இடைச்சொல், கோழை,
அரசனோடு, இருமல், சாமி;
மை (என்பது), அஞ்சனம், கார்,
மலடு, இருள், ஆடு, மாசு (ஆம்);
கை, இடம், படையுறுப்பு, ஒப்பனை,
(செங்)கை, சிறுமை, சீலம்;
வையம், தேர், ஏறு, உரோணி,
வசுந்தரை, சிவிகை, ஊர்தி.
*(6, 6, 6, 6 பெயர்கள்)* *162*

**சேய், வாய், மாருதி, ஆய்தல், ஆறு, வேய்தல், விநாயகன்**

சேய், குகன், இளமை, தூரம்,
செம்மை, சேண், சிறுவன், செவ்வாய்;
வாய், குழல், இடம், வாய்மை(ப் பேர்);
மாருதி, அனுமன், வீமன்;
ஆய்தலே, நுணுக்கம், தேர்தல்;
ஆறு (என்ப), வழி, நதிப்(பேர்);
வேய்தல், சூடுதல், மூடல் (பேர்);
விநாயகன், அருகன், முன்னோன்.
*(7, 3, 2, 2, 2, 2, 2 பெயர்கள்)* *163*

**அயிர், செயல், தெய்வம், நயம், பெயர்**

அயிர், கரும்பின் தேம் கட்டி,
(ஆன்ற) நுண் மணலே, நுண்மை;
செயல், தொழில், ஒழுக்கம் (என்ப);
தெய்வமே, கடவுள், ஊழ் (ஆம்);
நயம் (என்ப), மகிழ்ச்சி, இன்பம்,
நன்மை, நற்பயன் (நாற் பேரே);

பெயர் (என்ப), பெருமை, கீர்த்தி,
(பேசும்) நாமப்(பேர் ஆமே).
*(3, 2, 2, 4, 3 பெயர்கள்)* ***164***

**ரகர எதுகை**

**சிரகம், கரகம், மரபு, மறல், சரபம்**

சிரகமே, கரகம், (ஆகும்);
சென்னியின் சோடும் (அப்பேர்);
கரகமே, ஆலங்கட்டி,
கமண்டலம், துளி, நீர், கங்கை;
மரபு (தான்), முறைமை, தொன்மை;
மறல் (என்ப), பிணக்கும், கூற்றும்;
சரபம், எண்கால் புள் (என்ப);
வரையாடு (தானும் ஆமே).
*(2, 5, 2, 2, 2 பெயர்கள்)* ***165***

**இரதம், அரணம், கரணம், சரணம், தன்னம்**

இரதமே, புணர்ச்சி, சூதம்,
இன்சுவை, அரை ஞாண், பொன் தேர்;
அரணமே, கவசம், காடே,
அணி மதில், வேலி (நாற்பேர்);
கரணம், எண், மனுதி, கூத்து,
கலவி, காரணம் (ஐம் பேரே);
சரணம், தாள், மறை புகல் (பேர்);
தன்னம், ஆன் கன்றே, அற்பம்.
*(5, 4, 5, 2, 2 பெயர்கள்)* ***166***

**உரம், சிரம், புரம், புரவலன், கரம்**

உரம் (என்ப), வலியே, ஞானம்,
ஊக்கமே, மார்பு (நாற்பேர்);
சிரம் (என்ப), நெடுங் காலப் (பேர்),
சென்னியும் (அன்னதேயாம்);
புரம் (என்ப), புரி, முன், மெய்(ப் பேர்);
புரவலன், வள்ளல், வேந்தன்;
கரம் (என்ப), கிரணம், (செங்)கை,
கழுதை, நஞ்சு, இறுத்தலும் (பேர்).
*(4, 2, 3, 2, 5 பெயர்கள்)* ***167***

**அரவம், ஆய்வு, பரவை, இரலை,**
**அரசு, அம்பி**

அரவம், நூபுரம், பாம்பு, ஓசை;
ஆய்வு (என்ப), வருத்தம், ஆய்தல்;
பரவை, வாரிதி, பரப்பு,
பங்கயமாதின் கூத்தே;
இரலையே, கலை, ஊதுங்கொம்பு,
(இரண்டுடன்) முதல் நாள் (என்ப);
அரசு, மன், இராச்சியப்(பேர்);
அம்பி, நாவாயே, தெப்பம்.
*(3, 2, 3, 3, 2, 2 பெயர்கள்)* ***168***

**அரம்பை, ஆணு, சரம், நரந்தம், சுருங்கை**

அரம்பை, தெய்வப் பெண், வாழை;
ஆணுவே, இரதம், நன்மை;
சரம், (தனி) மணிவடம், போர்,
சாயகம், நாணற் புல் (பேர்);
நரந்தம் (என்பது), நாரத்தை,
(நாறுங்) கத்தூரிக்கும் (பேர்);
சுருங்கையே, கரந்து பண்ணும்
கற்படை, நுழை வாயில் (பேர்).
*(2, 2, 4, 2, 2 பெயர்கள்)* ***169***

**ஆரம், வாரம், தாரம், கோரம்**

ஆரமே, பதக்கம், முத்தம்,
ஆத்தி, சந்தனமே, மாலை;
வாரம், நீர்க்கரையே, அன்பு,
மலைச்சாரல், கிழமை, பங்கு (ஆம்);
தாரம், வல்லிசை, நா, வெள்ளி,
தலைவி, ஓர் இசை, கண் (என்ப);
கோரம், சோழன் மா, வட்டில்,
கொடுமை, பூ மொட்டு, வாசி.
*(5, 5, 6, 5 பெயர்கள்)* ***170***

**இராசியம், இறப்பு, பராகம், துரோணம்,**
**இராகம்**

இராசியம், மறைவே, யோனி;
இறப்பு (என்ப), மிகுதி, போக்கு (ஆம்);
பராகமே, இரேணு (ஆகும்);
(பரிமள) மலர்த் தூளும் (பேர்);
துரோணமே, சிம்புள், காக்கை,
தும்பை, வில்லொடு, பதக்கு (ஆம்);
இராகமே, கீதம், செம்மை,
இச்சையே, நிறமும் (ஏற்கும்).
*(2, 2, 2, 5, 4 பெயர்கள்)* ***171***

**பரி, புரி, பரிதல், வரி**

பரி, பரி, சுமத்தல், வேகம்,
பாதுகாத்திடல், வருத்தம்;
புரி, வளை, விரும்பல், செய்தல்,
புரத்தொடு, கயிறு, கட்டு (ஆம்);
பரிதலே, அறுத்தல், அன்பு,
(பகர்ந்திடில்) இரங்கலும் (பேர்);
வரி, சுணங்கு, எழுத்து, பாட்டு,
வாரிதி, இறையே, நெல்லு.
*(5, 6, 3, 6 பெயர்கள்)* ***172***

**சரி, சராவம், கரியவன், பரிகம்,**
**கரில், காதை**

சரி, கரவளை, வழி(ப் பேர்);
சராவமே, அகல், சலாகை;
கரியவன், சனி(யின் பேர் ஆம்),
கண்ணன், இந்திரனும் (ஆமே);
பரிகமே, கிடங்கு, மேடை,
(பகர்) மதில், கணையம் (நாற்பேர்);
கரில், குற்றம், காழ்த்தலும் (பேர்);
காதை, சொல், கதை(யும் ஆமே).
*(2, 2, 3, 4, 2, 2 பெயர்கள்)* ***173***

**மூரி, வாரி, நாரி, பாரி**

மூரி, ஏறு, எருமை, ஆற்றல்,
முறை, பீடு, நெரிவும் (ஆமே);
வாரி, நீர், கதவு, வெள்ளம்,
மதில், கடல், வருவாய், வட்டை;
நாரி, பன்னுடை, பெண்ணே,
நறவு, வில் நாணி (நாற்பேர்);
பாரி, ஓர் வள்ளல், கட்டில்,
பாரி, கள், தூசு, முந்நீர்.
(6, 7, 4, 6 பெயர்கள்) 174

**அருகல், அமுதம், பொருள், குரு, அருணம்**

அருகலே, சுருங்கல், சார்தல்;
அமுதமே, சுதை, நீர், மோக்கம்;
பொருளே, சொற்பொருள், பல் பண்டம்,
பொன், பண்பு, பிள்ளை, வாய்மை;
குரு, நிறம், ஓர் நோய், தேயம்,
குரவன், பாரம், வியாழன்;
அருணம் (என்பது), மான், செம்மை,
ஆடு, எலுமிச்சை (நாற்பேர்).
(2, 3, 6, 6, 4 பெயர்கள்) 175

**முருகு, மருமான், இருசு, கருமை**

முருகு, கள், இளமை, நாற்றம்,
முருகவேள், விழா, வனப்பு (ஆம்);
மருமானே, மருமகன் (பேர்),
வழித் தோன்றல் (பேரும் ஆமே);
இருசு, பண்டியுள் இரும்பு,
செவ்வை (என்று இருபேர் என்ப);
கருமையே, பெருமை (ஆகும்),
கறுப்பொடு, வலியும் (ஆமே).
(6, 2, 2, 3 பெயர்கள்) 176

**கிருத்திமம், விருத்தி, துருத்தி, அரத்தம்**

கிருத்திமம், தோலே, பண்ணல்,
(கெட்ட) பொய், (விட்ட) பூதம்;
விருத்தியே, தொழில், இலாபம்,
விரி பொருள், வளர்ச்சி(க்கும் பேர்);
துருத்தி, ஆற்றிடைக் குறை(ப் பேர்),
தோலும், (ஆம்) துட்டைக்கும் (பேர்);
அரத்தமே, இரத்தம், செம்மை,
அரக்கொடு, உற்பலம், கடம்பு.
(4, 4, 3, 5 பெயர்கள்) 177

**சீர், தார், சூர், கார்**

சீர், செல்வம், தாளவொத்து,
சீர்த்தி, கா, தண்டே, பாரம்;
தார், கொடிப்படை, பூ, தண்டு,
தாமம், கிங்கிணியின் கோவை;
சூர் (என்ப), நோயே, அச்சம்,
அஞ்சாமை, அணங்கும் (சொல்லும்);
கார், நீர், வெள்ளாடு, மேகம்,
கறுப்பு, இருள், மாரிக்காலம்.
(6, 5, 4, 6 பெயர்கள்) 178

**ஆர், பீர், வார், நேர்**

ஆர், கூர்மை, ஆத்தி, தேரின்
அகத்துறு கதிரும் (ஆகும்);
பீர் (என்ப), முலையிற் பாலும்,
பீர்க்கொடு, பசலைக்கும் (பேர்);
வார் (என்ப), நெடுமை, கச்சு,
(மன்னு) நீர், நேர்மை (நாற்பேர்);
நேர், சமம், ஈதல், பாதி,
நெடில், உடன்பாடு, நுட்பம்.
(3, 3, 4, 6 பெயர்கள்) 179

**அருணன், வருணம், மகன், தரணி, தையல், கரிணி**

அருணன், சூரியன் தேர்ப்பாகன்,
ஆதித்தன், புதன் (முப் பேரே);
வருணமே, குலம், நீர் (ஆகும்);
மகன் (என்ப), சிறந்தோன், மைந்தன்;
தரணி, பார், இரவி, வெற்பு (ஆம்);
தையல், பெண், அழகும் (ஆகும்);
கரிணியே, முழையும், வெற்பும்,
களிற்றொடு, பிடியும் (காட்டும்).
(3, 2, 2, 3, 2, 4 பெயர்கள்) 180

**மாரி, ஓரி, காரி, தூரியம்**

மாரியே, விளிவு, கள்ளு,
வடுகி, நோய், மேகம் (ஐம்பேர்);
ஓரி, ஆண் மயிர், ஓர் வள்ளல்,
முது நரி, முசு (என்றோதும்);
காரி, ஓர் வள்ளல், ஐயன்,
கடு, சனி, வடுகன், காக்கை;
தூரியம், இடபம், ஆடை,
துந்துபி, எழுது கோலே.
(5, 4, 6, 4 பெயர்கள்) 181

**பிரமம், அரசன், அம்பணம், குரல்**

பிரமமே, வேதம், வேள்வி,
மந்திரம், பிரமன், மாலோடு,
இரவி, தீ, முனிவர், முத்தி,
ஈசன், அம்புலி (பன்னொன்றே);
அரசனே, வியாழன், மன் (ஆம்);
அம்பணம், தோணி, ஆமை;
குரல், கதிர், சிறகு, மாதர்–
கூந்தல், யாழ் நரம்பு (நாற்பேர்).
(11, 2, 2, 4 பெயர்கள்) 182

**தோரை, ஆரை, அகலுள், ஓரை, தாரை**

தோரை, நெல் விகற்பம், மூங்கில்
அரிசி, கை வரை (சொல் முப் பேர்);

ஆரையே, மதில், புற்பாய் (ஆம்);
அகலுளே, பரப்பு, ஊர், நாடே;
ஓரையே, மாதர் கூடி
விளையாடலுடன், இராசி;
தாரை, கண், மழை, நேரோடல்,
தாரகை, வழியே, கூர்மை.
*(3, 2, 3, 2, 6 பெயர்கள்) 183*

**ஊர்தி, ஆர்வம், அகலம், ஆர்வலர், அணு, ஆர்தல், அகளம்**

ஊர்தி, தேர், விமானம், பாண்டில்,
உம்பலே, சிவிகை, பாய் மா;
ஆர்வம், ஓர் நரகம், அன்பு (ஆம்);
அகலம், மார்பொடு, விசாலம்;
ஆர்வலர், கொண்கர், அன்பர்;
அணு (என்பது), உயிர், நுண்மைப் (பேர்);
ஆர்தலே, நிறைதல், உண்டல்;
அகளம் (தான்), மிடா, (நல்) தாழி.
*(6, 2, 2, 2, 2, 2, 2 பெயர்கள்) 184*

**பாரம், சூரன், துகள், சாரங்கம்**

பாரமே, கவசம், தோணி,
பல்லணம், பொறையினோடு,
நீர் உறு கரை, வன் பாரம்,
நிறை, தரை (நிகழ்த்தும் எண் பேர்);
சூரனே, இரவி, தீ, நாய்;
துகள் (என்ப), குற்றம், தூள் (ஆம்);
சாரங்கம், மானும், வண்டும்,
சாதகப் புள்ளும் (ஆமே).
*(8, 3, 2, 3 பெயர்கள்) 185*

**ஆரல், சாரல், மூரல், முரம்பு, கூரல்**

ஆரல், கார்த்திகை நாள், செவ்வாய்,
அரண் உறுப்பு, ஒரு மீன் (நாற்பேர்);
சாரலே, மருத யாழின்
இசையொடு, சைலப் பக்கம்;
மூரலே, நகை, பல், சோறு (ஆம்);
முரம்பு (என்ப), மேடு, பாறை;
கூரல், புட் சிறகும், மாதர்
ஓதியும் (இரு பேர் கூறும்).
*(4, 2, 3, 2, 2 பெயர்கள்) 186*

**சாரிகை, காரிகை, வாரணம், பூருவம்**

சாரிகை, பூவை, சுங்கம்,
சுழல் காற்று (தானும் ஆகும்);
காரிகை, அழகு, பெண்ணே,
கலித் துறை, ஓர் நூற்கும் (பேர்);
வாரணம், கவசம், கோழி,
தடை, சங்கு, வாரி, கைம் மா;
பூருவம், முதுமை, முன்பு,
கிழக்கு (என்றும் புகலல் ஆமே).
*(3, 4, 6, 3 பெயர்கள்) 187*

**ஏர், இராசி, பார், பயல், போர், பீரு**

ஏர், அழகு, உழு பெற்றப் (பேர்);
இராசி (தான்), ஓரை, கூட்டம்;
பார், உலகம், தேர்ப் பார் (ஆம்);
பயல், பள்ளம், பாதி, சிற்றுள்;
போர், அமர், சதயத்தோடு,
(புகலும்) நெல் முதலாம் சும்மை;
பீருவே, அச்சம் உள்ளோன்
(பெயரொடு), புருவம் (ஆமே).
*(2, 2, 2, 3, 3, 2 பெயர்கள்) 188*

**அருப்பம், மரக்கால், நிரப்பு, நிறை, துருக்கம்**

அருப்பம், ஆர் இடம், நோய், காடு (ஆம்),
அரணுடன், ஊரும் (அப் பேர்);
மரக்கால், ஆயிலியம், சோதி,
மாயவன் ஆடல் (முப் பேர்);
நிரப்பு (என்ப), மிடி, நிறைப்(பேர்);
நிறை, அழியாமை, நீர்ச் சால்;
துருக்கமே, அரண், கத்தூரி,
குங்கும மரமும் (சொல்லும்).
*(5, 3, 2, 2, 3 பெயர்கள்) 189*

**குருதி, பரிதி, சுருதி, சுரம், இரதி**

குருதியே, சிவப்பு, இரத்தம்,
குசன் (எனக் கூறும் முப் பேர்);
பரிதியே, ஊர்கோள், வட்டம்,
பாற்கரன், நேமி (நாற்பேர்);
சுருதியே, ஒலி, வேதப் (பேர்);
சுரம், அருநெறி, கான், மார்க்கம்;
இரதி, பித்தளை, பெண் யானை,
மதன் தேவி, இச்சை (நாற் பேர்).
*(3, 4, 2, 3, 4 பெயர்கள்) 190*

**புரை, விரை, வீரை, நரை, சுரை, துளும்பல்**

புரை, குற்றம், உவமை, இல்லம்,
புழை, உயர்ச்சி(யும் ஐம் பேரே);
விரை, மணம், சாந்து, தூபம்;
வீரை (தான்), துயரம், வாரி;
நரை, வெள்ளை இவுளி, வெண்மை,
நந்தி, (நற்) சவரி, நாரை;
சுரை, கள், ஆன் முலை, துளைப்(பேர்);
துளும்பலே, திமிறல், துள்ளல்.
*(5, 3, 2, 5, 3, 2 பெயர்கள்) 191*

**மருள், இருள், பொருநர், இரு பிறப்பு**

மருள் (என்ப), குறிஞ்சியாழின்
திறத்தொடு, மயக்கமும் (பேர்);
இருள், ஒரு நரகம், மையல்,
இருளொடு, கருமை (என்ப);
பொருநர், போர்த் தலைவர், கூத்தர்,
புரவலர், பாணர், வீரர்;

இரு பிறப்பு, எயிறும், பார்ப்பும்,
இந்துவும், புள்ளும் (ஆமே).
(2, 4, 5, 4 பெயர்கள்) 192

**மருதம், எருவை, தரும ராசன், கரி**

மருதமே, ஒரு மரம், செய்,
மருதம், அந் நிலப் பாடல் (பேர்);
எருவையே, கொறுக்கை, கோரை,
கழுகு, செம்பு, இரத்தம் (என்ப);
தருமராசன் (தான்), புத்தன்,
சண்டனேடு, அருகன் (தான் ஆம்);
கரி (என்பது), இருந்தை, சான்று,
கறையடி, சேகு (நாற்பேர்).
(4, 5, 3, 4 பெயர்கள்) 193

**கருவி, சுரிகை, துவை**

கருவி, பல்லியம், துணைக்காரணங்கள்,
யாழ், கவசம், ஈட்டம்,
(பொரு) படைக்கலம், தொடர்ச்சி,
புயல், பல வினைப் பேர், கூட்டம்,
பரியின் பல்லணமே, ஆடை,
கசை (பதின் முப்பேர் பன்னும்);
சுரிகையே, கவசம், வாள் (ஆம்);
துவை, பிண்ணுக்கு, இறைச்சி, ஓசை.
(13, 2, 3 பெயர்கள்) 194

**குருகு, முரசு, தரளம், சார்வு**

குருகு, புள், இளமை, நாரை,
கொல் உலை மூக்கு, கோழி,
சரி, வெள்ளை, மூல நாள், வா-
சந்தி (ஒன்பான் பேர் சாற்றும்);
முரசே, உத்தரட்டாதிப் (பேர்),
இயம் (என்றும் மொழியலாமே);
தரளமே, உருட்சி, முத்து (ஆம்);
சார்வு (என்பது), இடமும், பற்றும்.
(9, 2, 2, 2 பெயர்கள்) 195

**முரண், மொய்ம்பு, உரை, உவா, ஞெரேல்,**
**நிதி, உரு, ஓதனம்**

முரண், வலி, பகை (ஆம் என்ப);
மொய்ம்பு, தோள், வலியும் (ஆகும்);
உரை (என்ப), கிளவி, தேய்வு (ஆம்);
உவா, தந்தி, இளையோன், பௌவம்;
ஞெரேல், ஒலி, விரைவும் (ஆகும்);
நிதி, இருநிதி, பொன் (என்ப);
உரு, நிறம், வடிவு, அட்டைப் (பேர்);
ஓதனம், சோறே, உண்டி.
(2, 2, 2, 3, 2, 3, 3, 2 பெயர்கள்) 196

**அரி**

அரி, கிளி, புணரி, மால், தேர்,
ஐம்மை, இந்திரன், கால், காந்தி,
பரி, புகர், பன்றி, சிங்கம்,
பகை, புகை, பாயல், சோலை,
வரி, மதி, சேகு, தேரை,
வானரம், இயமன், மூங்கில்,
எரி, புரை, நிறம், பொன், பாந்தள்,
இரவி, கண் வரி, தார், பச்சை. 197

**அரி (தொடர்ச்சி), அரிதம், ஆர்ப்பு**

அரிசி, நெற் கதிர், கள், கூர்மை,
அளி, படைக்கலமே, ஈர் வாள்,
அரிதலே, சயனம், நேமி,
அடல், விசி, பறை, அரித்தல்,
பரிபுரம் அதனுட் பெய்த
பரலோடு (இவ் ஆறேழைந்தாம்);
அரிதமே, பசுமை, திக்கு (ஆம்);
ஆர்ப்பு, ஒலி, சிரித்தல் (பேரே).
(47, 2, 2 பெயர்கள்) 198

**அருவி, அரலை, கரடம், சுரியல்**

அருவியே, மலைச்சார்வு ஆறும்,
(அரி) தினைத் தாளும் (ஆகும்);
அரலையே, கனி, வித்து,
ஆழி, மரல், கழலையும் (ஆம் என்ப);
கரடமே, மதம் பாய்கின்ற
சுவட்டொடு, காக்கை (ஆகும்);
சுரியல் (தான்), பெண் மயிர்(க்கே),
(சொல்லும்) ஆண் மயிர்(க்கும் பேராம்).
(2, 5, 2, 2 பெயர்கள்) 199

**திரு, பரிவு, கரை, கைத்து, சுரகுரு**

திரு (என்ப), கமலை, செல்வம்,
சிறப்பொடு (முப்பேர் செப்பும்);
பரிவு (என்ப), துன்பம், இன்பம்,
(பகரும்) அன்பிற்கும் (அப் பேர்);
கரையே, நீர்க் கரை, சேர்வு (ஆகும்);
கைத்து, (நீள்) நிதி, வெறுப்பு (ஆம்);
சுரகுரு, மகவான், தேவ
மந்திரி (இரு பேர் சொல்லும்).
(3, 3, 2, 2, 2 பெயர்கள்) 200

**அரற்றல், ஐது, இரத்தம், இலாங்கலி, அரக்கு,**
**அருச்சுனம், அறிக்கை**

அரற்றலே, அழுகை, ஓசை;
ஐது (என்ப), விரைவு, நொய்து (ஆம்);
இரத்தம், செந்நீர், சிவப்பு (ஆம்);
இலாங்கலி, அலம், தென், காந்தள்;
அரக்கு (என்ப), மெழுகு, கள்ளின்
விகற்பமும், சிவப்பும் (ஆகும்);
அருச்சுனம், மருது, வெண்மை;
அறிக்கை (தான்), அறிவு, பற்று (ஆம்).
(2, 2, 2, 3, 3, 2, 2 பெயர்கள்) 201

**அரந்தை, அருந்தல், அளித்தல், அரங்கம், அரங்கு**

அரந்தை (என்பது), குறிஞ்சி-
யாழிசை, துன்பம் (ஆகும்);
அருந்தலே, அருமை, உண்டல்;
அளித்தல் (தான்), கொடுத்தல், காத்தல்;
அரங்கம், ஆற்றிடைக் குறைப்(பேர்),
ஆடிடம், சபை(யும் அப் பேர்);
அரங்கு, போரிடம், வட்டாடும்
இடம், சபை, மனைவி கற்பு (ஆம்).
*(2, 2, 2, 3, 4 பெயர்கள்)* 202

**முருந்து, விருந்தம், குரங்கு, எருந்து, இடம்**

முருந்து (என்ப), மயிலின் தோகை
முதல் முள்ளு, தவளம் (ஆகும்);
விருந்தமே, கிளியின் கூட்டம்,
விலங்கின் கூட்டமும் (என்றாகும்);
குரங்கு, வானரம், விலங்கின்
பொது, (மிகு) கோணல் (ஆகும்);
எருந்து, உரல், கிளிஞ்சில் (என்பர்);
இடம், செல்வம், விசாலம், வாமம்.
*(2, 2, 3, 2, 3 பெயர்கள்)* 203

**ஆரியர், ஆன், ஆரி, காருகர், தாரகாரி**

ஆரியர், மிலேச்சர், நல்லோர்;
ஆன் (என்பது), இடைச்சொல், ஆ(வாம்);
ஆரியே, கதவு, சோழன்,
அழகொடு, மேன்மை(க்கும் பேர்);
காருகர், தந்துவாயர்,
(கடுங்)கொலையாளர், வண்ணார்;
தாரகாரி (என்ப), காளி,
சண்முகன் (தானும் ஆமே).
*(2, 2, 4, 3, 2 பெயர்கள்)* 204

**சார், சான்றோன், வேர், விழைச்சு, பாராவாரம், சாரணர்**

சார், கூடல், ஒரு தாரு(ப் பேர்);
சான்றோன், மான் தலை நாள், பானு;
வேர் (என்ப), மர வேர், வேர்வு (ஆம்);
விழைச்சு, (நல்) இளமை, போகம்;
பாராவாரம் (தான்), வாரி,
கடற் கரை (இரு பேர் பன்னும்);
சாரணர், ஒற்றர் (என்ப),
சமண் முனிவர்க்கும் (பேர் ஆம்).
*(2, 2, 2, 2, 2, 2 பெயர்கள்)* 205

**அராகம், கரேணு, கிராணம், கரீரம்**

அராகமே, செந்நிறமே, பாலை-
யாழ், முடுகியற்பாட்டு, ஆசை;
கரேணுவே, பிடி யானைக்கும்,
(கடுங்) கொலை யானைக்கும் (பேர்);
கிராணமே, கிராணம், மூக்கு (ஆம்),
(கிளர்) சிறுவட்டிலும் (பேர்);
கரீரமே, மிடா, அகத்தி,
கரியின் பல்லடி, முளை(ப் பேர்).
*(4, 2, 3, 4 பெயர்கள்)* 206

**லகர எதுகை**

**புலவர், வலவன், அலகு, அலரி**

புலவர், பாடுநரே, கூத்தர்,
புதன், உம்பர், கவிகள், ஓவர்;
வலவனே, வெற்றியாளன்,
(மருவும்) தேர்ப்பாகன், மாயோன்;
அலகு, நெற்கதிரே ஆதி,
பலகறை, நுளம்பு, எண், ஏதி;
அலரி, கண் வரி, அருக்கன்,
அழகு, ஒரு மரம், பூ (ஆமே).
*(6, 3, 5, 5 பெயர்கள்)* 207

**ஆலம், மூலம், சீலம், சாலம்**

ஆலமே, வட விருக்கம்,
(அடு)நஞ்சோடு, அலர் பூ, நீர் (ஆம்);
மூலம், வேர், முதலே, ஏது,
(முதிர்வுறு) கிழங்கு, ஓர் நாள் (ஆம்);
சீலமே, குணம், தண்டித்தல்,
(திகழ்) சரித்திரம் (முப் பேரே);
சாலமே, வலை, சாலேகம்,
மராமரம், சபை, மதில் (பேர்).
*(4, 5, 3, 5 பெயர்கள்)* 208

**காலம், கலம், சாலகம், தாலம், ஆலல், அறுவை**

காலம், வைகறை, காலப் (பேர்);
கலம், அலம், யாழ், பூண், நாவாய்;
சாலகம், காலதர்(ப் பேர்)
(தானே), பூ மொட்டும் (ஆகும்);
தாலம், உண்கலமே, நாவே,
தராதலம், பனையே (நாற்பேர்);
ஆலல், ஆடுதல், ஒலி(ப் பேர்);
அறுவை, சித்திரை நாள், ஆடை.
*(2, 4, 2, 4, 2, 2 பெயர்கள்)* 209

**இலம்பகம், இலஞ்சி, பலம், அலங்கல்**

இலம்பகம், அத்தியாயம், நுதற்-
சூட்டு (என்று இரு பேர் ஆமே);
இலஞ்சி, மா, வாவி, கொப்பூழ்,
எயில், குணம், மகிழே, ஏரி;
பலம், கனி, பயன், காய், சேனை,
பலம், கிழங்கு (அறுபேர் ஆகும்);
அலங்கல் (என்பது), பூ மாலை,
அசைவொடு, தளிர், இலங்கல்.
*(2, 7, 6, 4 பெயர்கள்)* 210

**ஒலி, ஒலியல், கலுழி, கலை**

ஒலி (என்பது), இடியே, காற்றே,
ஓசை (என்று ஆகும் முப்பேர்);
ஒலியலே, ஆறும், தோலும்,
(உடுத்த) ஆடையும், பைந் தாரும்;
கலுழியே, கான் யாறு (என்ப),
கலங்கிய நீரும் (ஆமே);
கலை, மதிப் பங்கு, தூசு,
கல்வி, நூல், இரலை, காஞ்சி.

*(3, 4, 2, 6 பெயர்கள்)* *211*

**பீலி, பாலிகை, வேலி, மெத்தை, தோல்**

பீலியே, ஆலவட்டம்,
பெருவரை, கலாபி, தோகை;
பாலிகை, உதடு, வட்டம்,
படைவாளின் முட்டி(யும் பேர்);
வேலி, ஊர், மதில், காவற் (பேர்);
மெத்தை, மெல்லணையே, சட்டை;
தோல், இபம், வனப்பு, வார்த்தை,
துருத்தி, தோற்பலகை(ஐம் பேர்).

*(4, 3, 3, 2, 5 பெயர்கள்)* *212*

**பாலை, வேலை, மாலை, சாலை**

பாலை, ஓர்மரம், நிலம், அந்-
நிலத்தினிற் பாடலும் (பேர்);
வேலையே, கடல், அதற்கு
மேவிய கரையே, காலம்;
மாலையே, இரவோடு, அந்தி,
மாலிகை, ஒழுங்கு (நாற்பேர்);
சாலையே, குதிரைப் பந்தி,
அறப்புறம் (தானும் ஆமே).

*(3, 3, 4, 2 பெயர்கள்)* *213*

**அல்லி, அல், ஆகம், சில்லி, வல்லி**

அல்லி, வெள்ளாம்பல், காயா,
அகவிதழ் (ஆக முப்பேர்);
அல், இரா, இருளே (என்ப);
ஆகம், மார்பு, உடலும் (ஆமே);
சில்லியே, வட்டம், கீரை,
தேர் உருள், சிள் வீடு (என்ப);
வல்லி, ஆய்ப்பாடி, வள்ளி,
வரைவொடு, நிகளம் (ஆமே).

*(3, 2, 2, 4, 4 பெயர்கள்)* *214*

**இல், மல், சில்லை, ஒல்லை**

இல், இல்லாள், இல்லையென்றல்,
இராசி, சா, இடம், வீடு (ஆறே);
மல், வளம், வலியினேடு,
மாயவன் ஆடல் (முப்பேர்);
சில்லை (என்பது), பிரண்டை,
சிள் வீடு, தூர்த்தை(க்கும் பேர்);
ஒல்லையே, விரைவு, தொல்லை,
கடுப்புடன், சிறுபோது (ஆமே).

*(6, 3, 3, 4 பெயர்கள்)* *215*

**வில், வல், மலர்தல், புல், கொல்**

வில் (என்ப), மூலநாள் (ஆம்),
வெஞ்சிலை, ஒளி(யும் அப்பேர்);
வல், வலி, விரைவு, சூது (ஆம்);
மலர்தலே, எதிர்தல், தோன்றல்;
புல், புலி, புணர்ச்சி, புன்மை,
புதல், பனை, அனுட நாள் (ஆம்);
கொல் (என்பது), அசைச்சொல், ஐயம்,
கொலை ஏவல், வருத்தம் (நாற்பேர்).

*(3, 3, 2, 6, 4 பெயர்கள்)* *216*

**மால், ஆல், அல், வால், வசந்தன், சால்பு**

மால், புதன், பெருமை, மேகம்,
மாயவன், மயக்கம், காற்றே;
ஆலோடு அல் (இரண்டு சொல்லும்)
ஆம் (என்பது), அல்லவும் (பேர்);
வால், வெண்மை, மிகுதி, தூய்து (ஆம்);
வசந்தனே, தென்றல், காமன்;
சால்பு, மாட்சிமை, சான்றாண்மை
(சாற்றிய இரு பேர் தானே).

*(6, 1, 1, 3, 2, 2 பெயர்கள்)* *217*

**வலம்புரி, புலம்பு, பொய், சிலம்பு, செருந்தி, விலங்கு**

வலம்புரி, சங்கு, நந்தியா-
வர்த்தம், ஓர் மரம் (முப்பேரே);
புலம்பு, ஒலி, தனிமை, அச்சம்;
பொய் (என்ப), பொக்கம், பொந்து (ஆம்);
சிலம்பு, ஒலி, ஞெகிழி, குன்று (ஆம்);
செருந்தி, பஞ்சரம், வாட் கோரை;
விலங்கு, கால் தளை, குறுக்கு,
மிருகத்தின் பொது(வும் ஆமே).

*(3, 3, 2, 3, 2, 3 பெயர்கள்)* *218*

**உலகம், அலவன், இலயம், வலவை, வருடை**

உலகமே, திசை, விண், பூமி,
உயர்குணம், சனம், உயர்ந்தோர்;
அலவனே, ஞெண்டு, பூனை,
அம்புலி, கடக ராசி;
இலயமே, கூத்தும், கூத்தின்
விகற்பமும் (இரு பேர் என்ப);
வலவை, வஞ்சப் பெண், வல்லோன்;
வருடை (தான்), சிம்புள், ஆடு (ஆம்).

*(6, 4, 2, 2, 2 பெயர்கள்)* *219*

**கலாபம், சிலீமுகம், சலாகை, விலோதம், விடம்**

கலாபமே, மணி வடம், மே-
கலை, மயிலிறகு (முப் பேர்);

வாவல், அஞ்சலிகைப் புள்ளும்,
தாவலும் (வகுக்கலாமே).
*(3, 2, 2, 2, 3, 2 பெயர்கள்)* *238*

**சுவல், கவி, கழி, நவிர், நாஞ்சில், கவிகை, கடிப்பம்**

சுவல், பிடர், தோள்மேல், மேடு,
துரகதக் குசை (நாற்பேரே);
கவி, மந்தி, புலவன், சுங்கன்;
கழி (என்ப), மிகுதி, காயல்;
நவிர், உளை, மருத யாழ், வாள்;
நாஞ்சில், எந்திரம், கலப்பை;
கவிகையே, குடை, கொடைப் (பேர்);
கடிப்பம், காதணி, பூண் செப்பு (ஆம்).
*(4, 3, 2, 3, 2, 2,2 பெயர்கள்)* *239*

**மா, கோ**

மா, வண்டு, பெருமை, பிண்டி,
வாசி, கூப்பிடல், வெறுத்தல்,
(காவுறு) விலங்கு, செல்வம்,
கரு நிறம், கமலை (பத்தாம்);
கோ, விழி, பசு, நீர், திக்கு,
குலிசம், விண், கிரணம், பூமி,
ஏ, உரை, சுவர்க்கம், வேந்தன்,
இரங்கல், வெற்பு (ஈரேழ் ஆமே).
*(10, 14 பெயர்கள்)* *240*

**ஆவி, கூவிரம், குவடு, காவி, நாவிதன்**

ஆவியே, வாவி, நாற்றம்,
(ஆர்) உயிர், புகை, மூச்சு (ஐம்பேர்);
கூவிரம், தேர், தேர்மொட்டு (ஆம்);
குவடு, (நீள்) மலை, வெற்பு உச்சி;
காவியே, குவளை, காவிக்
கல்லொடு, கள்ளு (முப்பேர்);
நாவிதன், மஞ்சிகன், கார்த்-
திகை, பூர நாளும் (ஆமே).
*(5, 2, 2, 3, 3 பெயர்கள்)* *241*

**ஆ, கா, பா, தா**

ஆ (என்பது), இரக்கம், பெற்றம்,
ஆச்சாவோடு, இசை, வியப்பு (ஆம்);
கா (என்ப), துலாம், பூஞ்சோலை,
காத்தல், தோட்சுமை (நாற்பேரே);
பா (என்ப), பனுவல், நூற்பா,
பரவுதல், பரப்பும் (ஆகும்);
தா (என்ப), பகை, வருத்தம்,
தாண்டுதல், வலி, கேடு (ஐம்பேர்).
*(5, 4, 4, 5 பெயர்கள்)* *242*

**கவ்வை, பவ்வம், தவ்வை, நவ்வி, நன்று**

கவ்வையே, பழிச்சொல், துன்பம்,
கள், ஒலி, எள்ளிளங்காய்;
பவ்வமே, குமிழி, வாரி,
(பரு) மரக் கணு, உவா (ஆம்);
தவ்வை, முன்பிறந்தாளோடு,
தாயும், மூதேவி(யும் பேர்);
நவ்வியே, தோணி, மான் (ஆம்);
நன்று (என்ப), பெருமை, நன்மை.
*(5, 4, 3, 2, 2 பெயர்கள்)* *243*

**அவல், செவிலி, கவுடம், சுவடு, சுபம்**

அவலே, சிற்றுண்டி, பள்ளம்,
நீர்நிலை (ஆகும் முப் பேர்);
செவிலியே, வளர்த்த கைத்தாய்,
முன் பிறந்தவளும் (செப்பும்);
கவுடம், ஓர் கொடி, ஓர் தேசம்
(இரு பெயர் கழறலாமே);
சுவடு, வச்சிராங்கி, ஓர் எண்;
சுபம் (என்பது), அழகு, வெண்மை.
*(3, 2, 2, 2, 2 பெயர்கள்)* *244*

**பவம், பாவம், சவுரியம், தண்மை, யவம், யவனர்**

பவம் (என்ப), சனனம், பாவம்;
பாவம் (தான்), வினை, தியானம்;
சவுரியம், களவு, வீரம்;
தண்மை (தான்), குளிர்ச்சி, தாழ்வு;
யவம், ஒரு தானியப் (பேர்),
(என்ப), நெல்(லிற்கும் அப் பேர்);
யவனர் , சோனகர், கண்-
ணுளர், சித்திரகாரர் (என்ப).
*(2, 2, 2, 2, 2, 3 பெயர்கள்)* *245*

**ஆவரணம், ஏவல், ஓவியர், ஓ**

ஆவரணம் (தான்), சட்டை,
தடை, மறைப்பு, அரணம், ஆடை;
ஏவலே, வியங்கோள் (என்ப),
(எய்திய) வறுமை(க்கும் பேர்);
ஓவியர், சிற்ப நூலோரொடு,
சித்திரகாரரும் (பேர்);
ஓ, இரக்கச் சொல், நீக்க-
மோடு, நீர் தகை கபாடம்.
*(5, 2, 2, 3 பெயர்கள்)* *246*

**அவ்வை, செவ்வி, தெவ், தீவினை, சைவம்**

அவ்வையே, தாயின் (பேரும்),
ஔவை(யோடு இரு பேர் ஆமே);
செவ்வி, ஏர், பொழுதினோடு,
(செப்பிய) பருவம் (ஆகும்);
தெவ் அமர், பகை (இரண்டாம்);
தீ வினை, கொடுமை, பாவம்;
சைவம், ஓர் புராணம், ஈசன்
சமயத்தின் விகற்பும் (ஆமே).
*(2, 3, 2, 2, 2 பெயர்கள்)* *247*

**தொழுதி, தொறு, கெழுவுதல், கீலாலம், குழல், அழிவு, அவி**

தொழுதி, புள்ளொலி, கூட்டப் (பேர்);
தொறு, நிரை, அடிமை, கூட்டம்;
கெழுவுதல், மயக்கம், பற்று (ஆம்);
கீலாலம், கறை, நீர், காடி;
குழல், துளையுடைப் பொருள் (பேர்),
மயிர், இசைக் குழல் (முப் பேரே);
அழிவு (என்ப), வீதல், கேடு (ஆம்);
அவி, நெய், சோறு, அமரர் உண்டி.
*(2, 3, 2, 3, 3, 2, 3 பெயர்கள்)* 257

**ளகர எதுகை**

**குளம், களம், வளமை, வாருணம், விளவு, விம்மல்**

குளம், நுதல், கரும்பின் கட்டி,
குட்டமும் (இட்ட நாமம்);
களம், அமர்க்களமே, கண்டம்,
களா, விடம், கறுப்பே, இல்லாள்;
வளமை, மாட்சிமை, கொழுப்பு (ஆம்);
வாருணம், கடலும், மேற்கும்;
விளவு (என்ப), கமர், விளா (ஆம்);
விம்மல், ஏங்குதல், ஒலித்தல்.
*(3, 6, 2, 2, 2, 2 பெயர்கள்)* 258

**முளரி, விளர், களபம், உளர்தல்**

முளரியே, விறகு, செந் தீ,
முண்டகம், சிறுமை, காடு (ஆம்);
விளர் (என்பது), இளமை (தானே),
வெளுப்பொடு, கொழுப்பும் (ஆகும்);
களபமே, யானைக் கன்று,
(கமழ்) சாந்து, கலவை (முப் பேர்);
உளர்தலே, சிதறல் (ஆகும்),
தடவலும் (உரைக்கற் பாற்றே).
*(5, 3, 3, 2 பெயர்கள்)* 259

**குளிர், நளிர், ஒளி வட்டம், இளி**

குளிர், மழு, நண்டு, இருத்தல்,
குளிர், கவண், முழா, மீன் தாரை;
நளிர், குளிர், பெருமை, ஞெண்டு,
(நாட்டிய) செறிவு (நாற் பேர்);
ஒளி வட்டம் (தான்), கண்ணடி,
சக்கரம் (இரு பேர் ஓதும்);
இளி, இசை, இசித்தல், எல்லே,
இணங்குதல், உரித்தற்கும் (பேர்).
*(7, 4, 2, 5 பெயர்கள்)* 260

**பளிதம், வெளில், களிறு, ஒளி**

பளிதம் (என்பது), கர்ப்பூரம்,
பல்லம் என் கணக்கும் (ஆகும்);
வெளில், அணில், வேழத் தம்பம்,
(வெண்) தயிர் கடை தறி(ப் பேர்);
களிறு (என்ப), அத்த நாளே,
கறையடி, சுறவு, பன்றி;
ஒளி, இரு சுடரே, தீயே,
ஒளிப்பிடம், புகழும் (ஆமே).
*(2, 3, 4, 5 பெயர்கள்)* 261

**பாளிதம், ஒளி, கோளி, மீளி**

பாளிதம், சோறு, கண்ட-
சருக்கரை, குழம்பு, பட்டு (ஆம்);
ஒளியே, யானைக் கூடம்,
ஒழுங்கு (என்றும் வழங்கும் நூலே);
கோளி, தொன் மரமே, அத்தி,
கொள்வோனும், கொழிஞ்சியும் (பேர்);
மீளி, திண்ணியன், வலிப்(பேர்),
மேன் மகன், பெருமை(க்கும் பேர்).
*(4, 2, 4, 4 பெயர்கள்)* 262

**அளை, அசனி, உளை, கிளை, இளை**

அளை, தயிர், முழை, புற்று (ஆகும்);
அசனியே, உருமு, வச்ரம்;
உளை, பரி மீது கட்டு
மயிர், பிற மயிரும் (ஓதும்);
கிளை (என்பது), ஓர் பண், மூங்கில்,
கேளொடு, கிளைத்தலும் (பேர்);
இளை, புயல், இளமை, வேலி,
தலைக் காவல் (இவை நாற் பேரே).
*(3, 2, 2, 4, 4 பெயர்கள்)* 263

**உள்ளல், உழப்பு, ஞெள்ளல், எள்ளல், யாமம், ஞொள்கல்**

உள்ளலே, நினைவு, உள்ளான் (பேர்);
உழப்பு (என்ப), வலி, உற்சாகம்;
ஞெள்ளலே, பள்ளம், மேன்மை,
(நீண்ட) வீதியும் (முப் பேரே);
எள்ளலே, நகை, இழிப்பு (ஆம்);
யாமம், தெற்கு, இரவு, சாமம்;
ஞொள்கல், சோம்பு, இளைத்தல், அச்சக்
குறிப்பு (என்று நுவலற் பாலாம்).
*(2, 2, 3, 2, 3, 3 பெயர்கள்)* 264

**வள், வெள்ளை, கள்வன், பள்ளி**

வள் (என்ப), காது, கூர்மை,
வலி, வளம், வாளே, வார் (ஆம்);
வெள்ளையே, முசலி, சங்கு,
வெளிறு, வெள்ளாடு, வெண்பா;
கள்வனே, முசு, ஞெண்டு, யானை,
கருநிறத்தவனே, சோரன்;
பள்ளி, ஊர், சிற்றூர், கோயில்,
பாயல், கண் படை, நீத்தோர் ஊர்.
*(6, 5, 5, 6 பெயர்கள்)* 265

**விளக்கு, வேள்வி, அளக்கர், திளைத்தல், இளைத்தல், என்றூழ்**

விளக்கு, ஒளி, சோதி நாள் (ஆம்);
வேள்வியே, மகம், நாள், ஈதல்;
அளக்கரே, புடவி, சேறு,
உப்பளம், கடல், கார்த்திகைப் (பேர்);
திளைத்தலே, அனுபவித்தல்,
செறிதலே, நிறைதல் (முப் பேர்);
இளைத்தலே, இளைப்பு, இரங்கல்;
என்றூழே, இரவி, வெய்யில்.
*(2, 3, 5, 3, 2, 2 பெயர்கள்)* *266*

**பிள்ளை, பெட்டல், மள்ளர், உள்ளம், உஞற்று, வள்ளி**

பிள்ளையே, வடுகன், காக்கை;
பெட்டல் (தான்), விரும்பல், வேண்டல்;
மள்ளரே, மள்ளர், வீரர்,
மறவர்(க்கும்), குறவர்(க்கும் பேர்);
உள்ளமே, முயற்சி, நெஞ்சு (ஆம்);
உஞற்று, இழுக்கொடு, தாளாண்மை;
வள்ளியே, வல்லி, (செங்) கை
வளை, புனை இழை (முப் பேரே).
*(2, 2, 4, 2, 2, 3 பெயர்கள்)* *267*

**காளம், வேள், விபூதி, கோள், ஞாளி, நான்முகன்**

காளமே, ஊது கொம்பு,
கழு, நஞ்சு, கருமை (நாற்பேர்);
வேள், அறுமுகன், காமன் (பேர்);
விபூதி, ஊன், கொடுமை, செல்வம்;
கோள், இடையூறு, ஒன்பான் கோள்,
கொலை, குணம், வலி, பொய், கொள்கை;
ஞாளியே, சுணங்கன், கள் (ஆம்);
நான்முகன், அருகன், வேதா.
*(4, 2, 3, 7, 2, 2 பெயர்கள்)* *268*

**களர், தளம், அளகம், தளை**

களர் (என்ப), மிடறு, கோட்டி,
களர்நிலம், கருமை (நாற்பேர்);
தளம், இலை, படையே, சாந்து,
தாழி, பூவிதழே, மேடை;
அளகமே, மாதர் ஓதி,
அறல், மயிர்க் குழற்சி (முப் பேர்);
தளை, விலங்கொடு, தொடர்ச்சி,
(தாள்) சிலம்பு, ஆண் மயிர்(ப் பேர்).
*(4, 6, 3, 4 பெயர்கள்)* *269*

**புள், புளகம், கள், கனலி, அள், வெள்ளம், வேணு**

புள்ளு, வண்டு, அவிட்டம், புட் பேர்;
புளகம், தர்ப்பணம், குமிழ்ப்பு (ஆம்);
கள் (என்ப), களவு, கள் (ஆம்);
கனலி, தீ, இரவி, பன்றி;
அள், உரம், செறிவு, காதோடு,
அயிலும், பற்று இரும்பும் (ஆகும்);
வெள்ளம், எண், மிகுதி, முந்நீர்;
வேணுவே, மூங்கில், வில், வாள்.
*(3, 2, 2, 3, 5, 3, 3 பெயர்கள்)* *270*

**வாள், வல்லரி, கூளி, தோள், சுந்தரி, தேள்**

வாள் (என்பது), ஒளி, கட்கப் (பேர்);
வல்லரி, தளிர், பைங்காய் (ஆம்);
கூளி, பேய், தமர், ஏறு, ஆசு,
குறள், படைத் தலைவன், கூட்டம்;
தோள் (என்ப), புயம், கை (ஆகும்);
சுந்தரி, உமையே, சுண்டன்;
தேள் (என்பது), அனுடநாளே,
விருச்சிகம், தெறுக்காலும் (பேர்).
*(2, 2, 7, 2, 2, 3 பெயர்கள்)* *271*

**அளி, அளவை, ஆசாரம், விளரி, வளம்**

அளி (என்ப), நறவும், வண்டும்,
அன்பொடு, கொடையும் (நாற் பேர்);
அளவையே, எல்லை, நாள் (ஆம்);
ஆசாரம், துகில், தூ, மாரி;
விளரியே, இளமை, யாழில்
ஓர் நரம்பு, யாழ், நீள் வேட்கை;
வளம் (என்ப), பதவியும், பல்
பண்டமும், வனப்பும் (ஆகும்).
*(4, 2, 3, 4, 3 பெயர்கள்)* *272*

**வள்ளம், வள்ளூரம், அள்ளல், அம்பு, வெள்ளில், வேலன்**

வள்ளமே, மரக்கால், வட்டில்,
கடிகை வட்டிற்கும் (அப் பேர்);
வள்ளூரம், பசு இறைச்சி,
(வரைந்த) ஊன் பொது(வும் ஆகும்);
அள்ளலே, நரகம், சேறு (ஆம்);
அம்பு, நீர், புயல், வேய், ஏ (ஆம்);
வெள்ளிலே, விளா, பாடைப்(பேர்);
வேலன், வேள், வெறியாட்டாளன்.
*(3, 2, 2, 4, 2, 2 பெயர்கள்)* *273*

**காளை, கூளியர், கோளகை, கேள்வி, கிடங்கு**

காளையே, எருது, பாலைக்கு
அதிபன், (நல்) இளமையோன் (பேர்);
கூளியர், நண்பர், பூத
கண வீரர், கொலைத் திறத்தோர்;
கோளகை, வட்டமோடு,
மண்டலிப் பாம்பும் (கூறும்);
கேள்வியே, செவி, கல்வி(ப் பேர்);
கிடங்கு, அகழ், வாவி (ஆமே).
*(3, 3, 2, 2, 2, 2 பெயர்கள்)* *274*

**இளமை, அளறு, அக்காரம், கிளர், களரி**

இளமையே, தன்மை, காமம்,
இளமையின் பருவம் (முப் பேர்);
அளறு (என்ப), நரகம், சேறு (ஆம்);
அக்காரம், புடைவை, வெல்லம்;
கிளர் (என்ப), கிரணத்தோடு,
(கிளர் கோட்டு மலர்ப்) பூந் தாது (ஆம்);
களரி, போர்க் களம், காடு (என்ப),
கருமம் செய் இடமும் (ஆமே).
*(3, 2, 2, 2, 3 பெயர்கள்)* 275

**றகர எதுகை**

**இறைவை, கூர், குறடு, கொண்மூ, புறவம், புறணி**

இறைவையே, புட்டில், ஏணி
(என்ப); கூர், மிகுதி, கூர்மை;
குறடு (என்ப), பலகை, திண்ணை;
கொண்மூ (என்பது), விண், மேகம்;
புறவம், ஓர் புள்ளும், காடும்,
முல்லை (நல்) நிலனும் (போற்றும்);
புறணியே, குறிஞ்சி, முல்லை
நிலத்தொடு, புறமும், தோலும்.
*(2, 2, 2, 2, 3, 4 பெயர்கள்)* 276

**மறம், குறிஞ்சி, பிறங்கல், குறும்பொறை**

மறம், சினம், பிணக்கு, கூற்று (ஆம்),
(மலைந்த) சேவகமும் (ஆகும்);
குறிஞ்சி, ஓர் இசை, ஓர் பண்ணே,
குறிஞ்சி, செம்முள்ளி(க்கும் பேர்);
பிறங்கலே, மிகுதி, வெற்பு,
நிறைவு, ஒலி, பெருமை (ஐம்பேர்);
குறும்பொறை, குன்று, காடு,
குறிஞ்சி (நல்) நிலத்து ஊர் (முப் பேர்).
*(4, 4, 5, 3 பெயர்கள்)* 277

**தாறு, சேறு, ஊறு, ஏறு**

தாறு, வில் குதையே, எல்லை,
(தாழ்) மரக் குலை, முட் கோல் (ஆம்);
சேறு (என்ப), கும்பி, சாரம்,
தித்திப்பு, விழவு, கள்ளே;
ஊறு (என்ப), தீமை, தீண்டல்,
உயிர்க்கொலை, இடையூறு (என்ப);
ஏறு, இடி, முதல்நாள் (ஆகும்),
இடபமோடு, எருதும் (அப் பேர்).
*(4, 5, 4, 4 பெயர்கள்)* 278

**சிறை, கறை, முறை, பிறழ்தல்**

சிறையே, வேறிடம், (ஆம்) புள்ளின்
சிறகொடு, காவலும் (பேர்);
கறை, இறுத்திடல், இரத்தம்,
கறுப்பு, உரல், விடம் (பேர் ஐந்தே);
முறை (என்ப), கோசமே, ஊழ்,
முறைமை (இம் முப் பேர் என்ப);
பிறழ்தலே, நடுக்கம், வேறு
பெயர்தலோடு, ஒளிவிடல் (பேர்).
*(3, 5, 3, 3 பெயர்கள்)* 279

**ஏற்றல், ஆற்றல், தோற்றல், போற்றல், புறம்**

ஏற்றலே, கோடல் (என்ப),
எதிர்ந்து போர் செய்தலும் (பேர்);
ஆற்றலே, பொறை, முயற்சி,
அதிகமே, வலியே, ஞானம்;
தோற்றலே, வலி, பிறப்பு,
தோன்றுதல், புகழே (நாற்பேர்);
போற்றலே, புகழ்தல், ஓம்பல்;
புறம் (என்ப), முதுகு, வீரம்.
*(2, 5, 4, 2, 2 பெயர்கள்)* 280

**அற்றம், குற்றல், குரை, எற்று, கொற்றி**

அற்றமே, மறைவும், சோர்வும்,
அவகாசம் (தானும் ஆகும்);
குற்றல், குற்றுதல், பறித்தல்;
குரை (என்பது), இடைச்சொல், ஓசை;
எற்று (என்பது), இரக்கம், ஒத்தல்,
எறிதல், எத்தன்மைத்து (என்றல்);
கொற்றியே, துர்க்கை (நாமம்),
கோ இளங்கன்றும் (கூறும்).
*(3, 2, 2, 4, 2 பெயர்கள்)* 281

**உறழ்வு, உறவி, உறுகண், உறுவன், உலக்கை**

உறழ்வு (என்ப), புணர்வு, காலம்,
செறிவு, இடையீடு, ஒப்பு (ஐம் பேர்);
உறவியே, எறும்பு, நீர் ஊற்று,
உலைக்களம், உறவு, உயிர்ப் பேர்;
உறுகண் (என்பதுவே), துன்பம்,
(உறு) பயம், மிடி, நோய் (நாற்பேர்);
உறுவனே, முனி, புத்தன் (பேர்);
உலக்கையே, உரோங்கல், ஓணம்.
*(5, 5, 4, 2, 2 பெயர்கள்)* 282

**விறப்பு, பொறுத்தல், புந்தி, இறுத்தல், கறுப்பு, கன்று**

விறப்பு (என்ப), செறிவு, வெற்றி,
வெருவுதல், பொருதல் (நாற் பேர்);
பொறுத்தலே, பொறை, தாங்கல் (பேர்);
புந்தி (தான்), புதனே, புத்தி;
இறுத்தலே, ஒடித்தல், தங்கல்,
இயம்புதல் (முப் பேர் என்ப);
கறுப்பு, இருள், சினக்குறிப்பு (ஆம்);
கன்று, கைவளை, கன்று (ஆமே).
*(4, 2, 2, 3, 2, 2 பெயர்கள்)* 283

**பொறி, வெறி**

பொறி, மரக்கலமே, செல்வம்,
பூ மகள், எந்திரங்கள்,
அறிவு, இலாஞ்சனே, எழுத்தோடு,
ஐம்பொறி, வரி (ஒன்பான் பேர்);
வெறி, வெருவுதல், கலக்கம்,
வெறியாட்டு, வட்டம், நாற்றம்,
(குறிய) பேய், துருவை, கள்ளு,
(கூறு) நோய் (ஒன்பது ஆமே).
(9, 9 பெயர்கள்) 284

**உறை, அறை**

உறை, பொருள், மருந்து, வாழ்நாள்,
உணவு, வெண்கலமே, காரம்,
(எறி) படைக்கலத்தின் கூடே,
எண் குறித்து இறுதி பெய்தல்,
(நறிய) பால் பிரை, இடைச்சொல்,
நகரம், நீர்த் துளி (ஈராறு ஆம்);
அறை, முழை, மோதல், பாறை,
திரை, சிற்றில், மொழி (ஆறு ஆமே).
(12, 6 பெயர்கள்) 285

**இறை, உறையுள், உறுதி, பொறை**

இறை , சிவன், கடன், வேந்தன்,
கையிறை, இறுப்பிறை, சிறந்தோன்,
சிறுமை, புள்ளிறகு, தங்கல்,
சென்னி, கூன், இறப்பு (ஈராறே);
உறையுள் (என்பது), நாடு, ஊர் (ஆம்);
உறுதியே, நன்மை, கல்வி;
பொறை, மலே, துறுகல், பாரம்,
பொறை, சுமை, கருப்பம், பூமி.
(12, 2, 2, 7 பெயர்கள்) 286

**இறும்பு, இறும்பூது, கறங்கல், கதிர், பறம்பு, பாய்மா**

இறும்பு, தாமரையின் பூவே,
மலே, குறுங்காடும் (ஏற்கும்);
இறும்பூது, தகைமை, வெற்போடு,
அதிசயம், குழை, தூறு (என்று ஆம்);
கறங்கலே, சுழலல், ஓசை;
கதிர் (என்பது), இரவி, சோதி;
பறம்பு, (உயர்) மலே, முலே(ப் பேர்);
பாய்மாவே, குதிரை, வேங்கை.
(3, 5, 2, 2, 2, 2 பெயர்கள்) 287

**கூற்று, கோமான், நாற்றம், நனவு, ஊற்று, நோற்றல், நுணங்கு**

கூற்று (என்பது), இயமன், சொல் (ஆம்);
கோமானே, மூத்தோன், பன்றி;
நாற்றம், நாறுதல், தோன்றல் (பேர்);
நனவு (என்பது), அகலம், தேற்றம்;
ஊற்று (என்பது), ஊன்று கோலும்,
உறவியும் (இரு பேர் ஓதும்);
நோற்றலே, பொறை, தவப்(பேர்);
நுணங்கு (என்ப), நுண்மை, தேமல்.
(2, 2, 2, 2, 2, 2, 2 பெயர்கள்) 288

**கற்பம், பொற்பு, பற்பம், பழங்கண், உற்கை, உண்டி**

கற்பமே, பிரமன் வாழ்நாள்,
கற்பக தரு, சுவர்க்கம்;
பொற்பு (என்பது), அழகினேடு,
பொலிவும், ஒப்பனேயும் (ஆகும்);
பற்பமே, பதுமம், தூள் (ஆம்);
பழங்கணே, துன்பம், ஓசை;
உற்கை, தாரகை, தீக்கொள்ளி;
உண்டி (தான்), புசித்தல், சோறே.
(3, 3, 2, 2, 2, 2 பெயர்கள்) 289

**முற்றல், நெற்றி, கொற்றம், எற்றுதல்**

முற்றல், காழ்கோடல், மூப்பு,
முடிவுடன், வளேத்தல் (நாற்பேர்);
நெற்றியே, நுதலின் (பேரும்),
(நெடும்) படையுறுப்பும் (ஆகும்);
கொற்றமே, வன்மை, வெற்றி,
(கோ) அரசியல் (முப்பேரே);
எற்றுதல், புடைத்தலோடே,
எறிதலும் (இரு பேர் ஆமே).
(4, 2, 3,2 பெயர்கள்) 290

**அறுகு, வறிது, மறலி, மறவி, குறள்**

அறுகு (என்ப), சிங்கம், ஓர் புல்,
யாளி(யும் ஆகும் முப்பேர்);
வறிது (என்பது), அருகலே, சற்று,
அறியாமை, பயன் இல் வார்த்தை;
மறலியே, மயக்கம், கூற்று (ஆம்);
மறவி, கள், மறதி, ஈனம்;
குறள் (என்ப), குறளும், பேயும்,
குறுமையும் (கூறும் முப்பேர்).
(3, 4, 2, 3, 3 பெயர்கள்) 291

**விறல், விழைந்தோன், நொறில், நெறி, நிருமித்தல், பறை**

விறல் (என்ப), வலி, வென்றிப் (பேர்);
விழைந்தோனே, நண்பன், வேட்டோன்;
நொறில் (என்ப), விரைவினேடு,
நுடக்கமும் (இரு பேர் ஆமே);
நெறி, வழி, நீதி (என்ப);
நிருமித்தல், படைப்பு, ஆராய்தல்;
பறை, பறை, வசனத்தோடு,
(பறக்கும்) புள் இறகு (முப் பேர்).
(2, 2, 2, 2, 2, 3 பெயர்கள்) 292

**னகர எதுகை**

**மனவு, வரை, தனி, சாந்தம், முனை, முளை, இனம், எழில்**

மனவு, (நன்) மணி, சங்கு, அக்கு (ஆம்);
வரை, மலை, இறை, வேய், மட்டு (ஆம்);
தனி, தமி, ஒப்பின்மைப் (பேர்);
சாந்தமே, கமையும், சாந்தும்;
முனை, பகை, நுனி, வெறுப்பு (ஆம்);
முளை, வேய், அங்குரமே, பிள்ளை;
இனம், (இருங்) கிளை, அமைச்சு (ஆம்);
எழில், வண்ணம், இளமை(க்கும் பேர்).
*(3, 4, 2, 2, 3, 3, 2, 2 பெயர்கள்)* 293

**ஆனகம், மானம், பானல், பாங்கர், மானல், வருடம்**

ஆனகம், படகத்தின் (பேர்),
(ஆகும்) துந்துபி(யும் அப் பேர்);
மானமே, அளவு, இலச்சை,
விமானமே, பெருமை, குற்றம்;
பானலே, பழனம், நெய்தல்;
பாங்கரே, இடம், பக்கப் (பேர்);
மானலே, மயக்கம், ஒப்பு (ஆம்);
வருடமே, மழையும், ஆண்டும்.
*(2, 5, 2, 2, 2, 2 பெயர்கள்)* 294

**தானம், பீனம், பேடு, நானம், வானம்**

தானமே, மதம், நீராட்டு,
(தரு) கொடை, சுவர்க்கம் (நாற்பேர்);
பீனமே, பருமை, பாசி;
பேடு (என்ப), பேடி, ஊரே;
நானமே, பூசும் பூச்சு,
நானமும், குளிக்கும் நீரும்;
வானம், ஆகாயம் (என்ப),
மழை, உலர் மரமும் (ஆமே).
*(4, 2, 2, 3, 3 பெயர்கள்)* 295

**வானி, ஆனி, ஏனை, ஆனியம், அனந்தை**

வானி, மேற்கட்டி, சேனை,
(வண்) துகிற்கொடி (முப்பேரே);
ஆனி, உத்தராடம், மூலம்,
சேதம், ஓர் மாதம் (என்ப);
ஏனையே, ஒழிபு, மற்றை
எனும் இடைச்சொற்கும் (அப் பேர்);
ஆனியம், பொழுது, நாள் (ஆம்);
அனந்தை, ஓர் சத்தி, பூமி.
*(3, 4, 2, 2, 2 பெயர்கள்)* 296

**முன்னல், முன்னம், கன்னல், மன்னன், கின்னரம், கிடக்கை**

முன்னலே, நினைவு, நெஞ்சு (ஆம்);
முன்னம், சீக்கிரி(யோடு), எண்ணம்;
கன்னல், சர்க்கரை, கரும்பு,
கரகம், நாழிகை, வட்டில் (பேர்);
மன்னன், உத்தரட்டாதிப் (பேர்),
மன்னவன் (தானும் ஆகும்);
கின்னரம், நீர்ப் புள், யாழ் (ஆம்);
கிடக்கை, பூதலம், பாயல் (பேர்).
*(2, 2, 5, 2, 2, 2 பெயர்கள்)* 297

**பின்னை, கொன், பொன், மன், வாழி**

பின்னையே, பின்றை, தங்கை,
(பெரிய) மாற்கு உரிய தேவி;
கொன், பயனிலாமை, காலம்,
(கூறிய) பெருமை, அச்சம்;
பொன் (என்ப), வனப்பு, இரும்பு,
பூ மகள், வியாழன் (நாற் பேர்);
மன், நிலை, மிகுதி, வேந்தே;
வாழி, வாழ்கெனல், இடைச்சொல்.
*(3, 4, 4, 3, 2 பெயர்கள்)* 298

**வன்னி, சென்னி, சீருள், கன்னி, தென்**

வன்னியே, பிரமசாரி,
(வளர்) கிளி, சமி, செந்தீ (ஆம்);
சென்னி, கம், பாணன், சோழன்;
சீருள், ஈயம், செம்பு (ஆகும்);
கன்னி, பெண், அழிவிலாமை,
கட்டிளமை(க்கும் பேரே);
தென், இசை, வனப்பு, தாழை,
தெற்கொடு, கற்பும் (ஆமே).
*(4, 3, 2, 3, 5 பெயர்கள்)* 299

**குன்று, அன்றில், மன்றம், மன்றல்**

குன்று, வேதண்டம் (ஆகும்),
குறைவொடு, சதயம் (முப் பேர்);
அன்றில், ஓர் புள்ளும், மூல
நாள் (என ஆம் இரண்டே);
மன்றமே, வெளி(யின் நாமம்),
வாசம், அம்பலமும் (அப் பேர்);
மன்றலே, பரிமளப் (பேர்),
(மருவு) கல்யாணமும் (பேர்).
*(3, 2, 3, 2 பெயர்கள்)* 300

**தனம், கனவு, கலிங்கம், கனை, கவரி, பனுவல், படப்பை**

தனம், முலை, பொன், ஆன் கன்று,
சந்தம், முத்தனம் (ஐம் பேராம்);
கனவு, நித்திரை, மையல் (பேர்);
கலிங்கம், சாதகப்புள், ஆடை;
கனை, செறிவு, ஒலி (ஆம் என்ப);
கவரியே, சவரி, மேதி;
பனுவலே, கிளவி, நூல் (ஆம்);
படப்பை, ஊர்ப்புறமே, தோட்டம்.
*(5, 2, 2, 2, 2, 2, 2 பெயர்கள்)* 301

**அனந்தன், அனந்தம், அனங்கம், தனஞ்சயன்**

அனந்தனே, சிவன், மால், சேடன்,
அலாயுதன், அருகன் (ஐந்தே);
அனந்தமே, முடிவிலாமை,
ஆடகம், விண் (முப் பேரே),
அனங்கமே, இருவாட்சிப் (பேர்)
(ஆகும்), மல்லிகை(க்கும் அப் பேர்);
தனஞ்சயன், பார்த்தனே, செந்-
தழல், ஒரு காற்றும் (ஆமே).
*(5, 3, 2, 3 பெயர்கள்)* *302*

**சானகி, தனு, சானு, சோனே, கானல்**

சானகி, சீதை, மூங்கில்;
தனு (என்பது), உடல், வில், அற்பம்;
சானுவே, மலே, முழந்தாள்,
மலேப்பக்கம் (தானும் ஆகும்);
சோனேயே, ஓணநாளும்,
விடாமழை சொரிதலும் (பேர்);
கானலே, மலேச் சார் சோலே,
கடற்கரைச் சோலே, பேய்த் தேர்.
*(2, 3, 3, 2, 3 பெயர்கள்)* *303*

**வான், தானே, கானம், ஏனல்**

வான் (என்ப), விசும்பு, மேகம்,
மழை(யொடு), பெருமை (நாற் பேர்);
தானேயே, சேனே, ஆடை,
படைக்கலம் (தானும் ஆகும்);
கானம், தேர், இசையே, பேதை,
காடு, தற்பாடி (ஐம்பேர்);
ஏனலே, செந்தினேப் (பேர்),
தினேப் புனம் (என்றும் ஆமே).
*(4, 3, 5, 2 பெயர்கள்)* *304*

**முனி, துனி, பனி, சினே**

முனி (என்பது), யானேக் கன்று,
முனிவன், வில், அகத்தி (நாற்பேர்);
துனி (என்ப), புலவி நீட்டம்,
துன்பம், நோய், ஆறு, கோபம்;
பனி (என்ப), நடுக்கம், துன்பம்,
பயம், குளிர், இமம் (ஐம் பேரே);
சினே (என்ப), முட்டை, பீள் (ஆம்),
மரக்கொம்பும் (செப்பும் அப் பேர்).
*(4, 5, 5, 3 பெயர்கள்)* *305*

**மான், கான், கல்லி, ஏனுதி, மீன்**

மானே, சாரங்கம், மாவின்
பொது(வொடு), மகர ராசி;
கானே, (நன்) மணம், காடு (என்ப);
கல்லி, ஊர்க்குருவி, ஆமை;
ஏனுதி, மஞ்சிகன், மந்திரி-
(யும் தந்திரி(யும் என்ப);
மீனே, சித்திரை நாள், வான் மீன்,
மயிலேயும் (மேவும் அப் பேர்).
*(3, 2, 2, 3, 3 பெயர்கள்)* *306*

**ஞானம், யானம், ஏனம், மேனி**

ஞானமே, அறிவு, கல்வி,
(நல்ல) தத்துவ நூல் (முப்பேர்);
யானமே, மரக்கலத்தோடு,
(எழில்) ஊர்தி விகற்பு (இரண்டாம்);
ஏனம், ஓலேக் குடை(ப் பேர்),
எறுழியும், மறமும் (அப் பேர்);
மேனியே, வடிவம் (என்ப),
நிறத்தை(யும் விளம்பல் ஆமே).
*(3, 2, 3, 2 பெயர்கள்)* *307*

**அன்னே, அன்னம், ஆகாரம், தன்மை, பன்னல்**

அன்னேயே, முன் பிறந்தாள்,
தோழி, தாய் (ஆகும் என்ப);
அன்னம், ஓதிமமே, சோறு (ஆம்);
ஆகாரம், உடல், நெய், உண்டி;
தன்மை, ஏர், இயல்பினேடு,
தன்மையின் இடமும் (சாற்றும்);
பன்னலே, நெருக்கம், வார்த்தை,
பருத்தி(யின் பேரும் ஆமே).
*(3, 2, 3, 3, 3 பெயர்கள்)* *308*

**வனம், மனு, மண்ணே, புனே, மனே, வதுவை**

வனமே, நீர், மிகுதி, காடு,
(வளர்) சோலே, துளசி, ஈமம்;
மனுவே, மந்திரம், ஓர் நூல் (ஆம்);
மண்ணே, பேய், இளமை, மூடன்;
புனே (என்பது), அழகினேடு,
பொலிவும், ஒப்பனேயும் (ஆகும்);
மனே (என்ப), மனேவி, வீடு (ஆம்);
வதுவையே, மணம், கல்யாணம்.
*(6, 2, 3, 3, 2, 2 பெயர்கள்)* *309*

**அன், கனேத்தல்**

அன், வினேயொடு, பெயர்க்கும்
விகுதி, சாரியையும் (ஆகும்);
(மன்னிடும்) கனேத்தல் (என்பது),
இருள், ஓசை (இரு பேர் வைக்கும்);
(இன்னன ஒரு சொல் பல் பேர்க்கு
இயற்கவி முந்நூற்றென்பான்
சொன்னவன் குணபத்திரன் தாள்
சூடும் மண்டலவன் தானே).
*(3, 2 பெயர்கள்)* *310*

**பதினேராவது**
**ஒரு சொற் பல்பொருட் பெயர்த் தொகுதி முற்றிற்று**

## 12. பல் பெயர்க் கூட்டத்து ஒரு பெயர்த் தொகுதி

**காப்பு**

(சொல் வகை எழுத்து, எண் எல்லாம்
தொல்லை நாள் எல்லையாக
நல்வகை ஆக்கும் பிண்டி
நான்முகன், நாளும் தீமை
வெல்வினை தொடங்கச் செய்து
வீடு அருள்வோன் தாள் போற்றி,
பல்வகைப் பெயர்க் கூட்டத்தின்
ஒரு பெயர் பகரல் உற்ரும்). *1*

**ஒன்று**

(கூறிய கூறினும்
குற்றம் ஒன்றிலை, அருத்தம்
வேறு உளதாயின் என்று
விதித்தலின், விரித்து முன்னம்
ஊறு இலாச் சிறப்பு வர்க்கம்
உரைத்து, இவண் பொதுவர்க்கத்தில்
ஏறிய ஊழும் சொல்வாம்);
ஏகமே, வீடு பேறு.
*(1 பெயர்) 2*

**இருமை, இருவினை, இருவகைத் தோற்றம், இருசுடர்**

இருமையே, இம்மை(யோடு),
மறுமை; நல் வினை(யினேடு),
(மருவு) தீ வினைகள் (என்ப),
(மற்று) இரு வினையின் (நாமம்);
இருவகைத் தோற்றம் (என்றே),
(இடும்) சர, அசரங்கள் (என்ப);
இரு சுடர், மதியம், (மற்றை)
இரவி (என்று இயம்பலாமே).
*(2, 2, 2, 2 பெயர்கள்) 3*

**இரு மரபு, இரு வகைக் கந்தம், இருவகையறம், இரு வகைப் பொருள்**

இரு மரபு அன்னை, தந்தை
(எய்திய) வழி (ஆம்); கந்தம்
இருவகை, நற் கந்தங்கள்,
(ஏற்ற) துர்க்கந்தம் (என்ப);
இரு வகை அறங்கள் (என்ப),
இல்லறம், துறவறங்கள்;
இருவகைப் பொருள்கள் கல்வி,
(ஏற்ற) செல்வங்கள் (ஆமே).
*(2, 2, 2, 2 பெயர்கள்) 4*

**இருவகைக் கூத்து, முப் பழங்கள், மூவகைப் பாவ புண்ணிய வழக்கம்**

இரு வகைக் கூத்துத் (தானே),
(இயன்ற) தேசிகமே, மார்க்கம்;
(கருது) முப் பழங்களின் பேர்,
கதலி, மா, பலா (என்று ஆமே);
(விரைவொடு) செய்தலே,
செய்வித்தலே, உடம்பாடு (என்ன)
(வருமுறை) பாவமொடு
புண்ணிய வழக்கம் (ஆமே).
*(2, 3, 3 பெயர்கள்) 5*

**மும்மை, முப் பொறி, முக் காலம், முச் செய்கை**

மும்மையே, உம்மை, இம்மை,
(மொழிந்திடும்) மறுமை (என்ப);
(செம்மையாம்) வாக்கு, காயம்
(திகழ்) மனம், முப் பொறிப் பேர்;
மும்மையாம் காலப்பேரின்
(மொழி) இறப்பு, எதிர், நிகழ்ச்சி;
மும்மையாம் செய்கை, பண்ணல்,
(முறை) காத்தல், சிதைத்தல் (ஆமே).
*(3, 3, 3, 3 பெயர்கள்) 6*

**மூன்று இடம், முந் நிலங்கள், முக் குற்றம், முச் சுடர்**

மூன்றிடம் (என்ப), தன்மை,
முன்னிலை, படர்க்கை (ஆகும்);
(ஆன்ற) முந் நிலங்கள், பூமி,
அந்தரம், சுவர்க்கம் (என்ப);
மூன்று குற்றங்கள், காமம்,
(முதிர்) சினம், மயக்கம் (தானே);
மூன்று செஞ்சுடரே, திங்கள்,
(முளைத்தெழு) பரிதி, அங்கி.
*(3, 3, 3, 3 பெயர்கள்) 7*

**மூவகை மொழி, மூவகை வேதத் தீ, மூவகை உயிர்த் தீ**

பழித்திடல், புகழ்தல், மெய்ம்மை,
(பயக்கும்) மும் மொழிப் பேர் (ஆகும்);
(கழிப்பு இல்) வேதத்தின் முத் தீ,
காருக பத்தியத்தோடு,
(அழிப்பு இலாத்) தெற்கில் அங்கி,
ஆகவ நீயம் (என்ப);
(ஒழிப்பு இலா) உயிரில் அங்கி,
உதரம், விந்து, (உறு) சினத் தீ.
*(3, 3, 3 பெயர்கள்) 8*

**முக்குணம், சாத்துவிகச் செயல்**

(ஏற்ற) சாத்துவிகத்தோடே,
இராசதம், தாமதங்கள்,
(ஆற்று) முக் குணங்கள் (ஆகும்);
(அதிற்) சாத்துவிகமே, ஞானம்,
(சாற்றிய) தவமே, மெய்ம்மை
சால்பு, நல்லருள் உண்டாதல்,
(போற்றிய) (ஆமை போல்) ஐம்-
புலன் அடக்குதலும் (ஆமே).
*(3, 6 பெயர்கள்) 9*

**இராசதச் செயல்**

தானமே, தவமே, மெய்ம்மை,
தருமம் பேணுதலினேடு,
ஞானமே, கல்வி, கேள்வி,
(நலன் இவை தெரிதல் தாமே;
ஈனம் ஒன்றில்லார் வைத்த)
இராசத குணங்கள் (என்ப);
(ஊனம் இல் உறுவன் முன்னாள்
உரைத்திடும் முறைமை தானே).
(7 பெயர்கள்) 10

**தாமதச் செயல்**

தாமதம், (நிறை) பேருண்டி,
சாம்புதல், சோம்பு, மூரி,
காமமே, நீதி கேடு,
கண்ணுறக்கம், பொச்சாப்பு,
(நாமம் ஆம்) சலமே, வஞ்சம்;
(நாட்டிய) (இம்) முப்பாலும்
(மா) மலிவுடனே, (மற்றை)
மெலிவொடு, சமனும் (ஆமே).
(10, 3 பெயர்கள்) 11

**மூவகைத் தானம், உத்தம தானத்தின் இயல்பு**

(மறுவறு) தானம் மூன்று
வகை (தமில்) உத்தமம் (தான்)
பெறு முறை ஓம்பி வைத்துப்
பேணிய பொருளைத்தானே
குறுகியே பெறுக என்று
குறை இரந்து அடங்கி நோற்கும்
உறுதவர்க்கு உவந்து தாழ்ந்தே
உபகாரம் செய்தல் (ஆமே).
(3 பெயர்கள்) 12

**மத்திமதானம், அதம தானம்**

(சீர்) உறுப்பில்லார், மாதர்,
சிதடர், ஆதுலர்க்கு நல்கல்
(வார் உறு கொங்கை நல்லாய்)
மத்திம தானம் (என்ப);
ஆர்வமே, புகழ், கண்ணேட்டம்,
அச்சம், கைம்மாறு, மற்றைக்
காரணம் இன்ன எல்லாம்
கடைப்படு தானம் (ஆமே). 13

**திரி கடுகம், திரிபலை, திரிபுரம், அருக்கன் (சூரியன்) விதி**

திரிகடுகம், சுக்கோடு,
திப்பலி, மிளகு (செப்பும்);
திரிபலை (என்பதானே),
(திகழ்) கடு, நெல்லி, தான்றி;
புரம் மூன்று, செம்பொன், வெண்பொன்,
(போற்றிய) கரும்பொன் (என்ப);
(விரவிய) மேடம், ஏறு,
மிதுனமே, அருக்கன் வீதி.
(3, 3, 3, 3 பெயர்கள்) 14

**நால்வகை நிலம், நாற்கதி, நால் வகையங்கம்**

முல்லையே, குறிஞ்சி, நெய்தல்,
(மொழிந்திடும்) மருதம் (என்ப),
(நல்ல) நானிலம் (என்று ஓதும்);
நாற்கதி, உம்பர், மக்கள்,
(சொல்லிய) விலங்கினேடு,
நரகர்; சாதுரங்கம் (என்ப),
(வெல்லும் மால்) யானை, தேரே,
(வெம்) பரி, காலாள் (ஆமே).
(4, 4, 4 பெயர்கள்) 15

**நால் வகை இழி சொல், நால் வகை வேதம்**

குறளை, பொய், கடுஞ் சொல்லோடு,
(கூறிய) பயன் இல் வார்த்தை,
(நறுநுதல் கேட்டி மற்றை)
நால்வகை இழி சொல் (ஆகும்);
(மறு இலா) இருக்கினேடு,
(வளம் மிகும்) யசுவே, சாமம்,
(அறைதரும்) அதர்வம் (என்ப-
வாம் இவை) வேதம் நான்கே.
(4, 4 பெயர்கள்) 16

**நாற்பொருள், நால்வகைக் கேள்வி, நால்வகை அரண், ஆடவர்க்குரிய நால்வகைக் குணம்**

அறமொடு, பொருள், இன்பம், வீடு,
(ஆன) நாற்பொருள்கள் (ஆகும்);
உறும் இவை தம்மைக் கேட்டல்,
(ஒத்த) நால்வகைக் கேள்விப் (பேர்);
(செறி)கடம், வெற்பு, நீரே,
(திணி) மதில், அரணம் நான்கு (ஆம்);
அறிவொடு, நிறையே, ஓர்ப்பு,
கடைப்பிடி, குணம் நான்கு (ஆமே).
(4, 4, 4 பெயர்கள்) 17

**மகளிர் நாற்குணம், நால்வகைப் புண்ணியத் தோற்றம்**

நாணமே, மடமே, அச்சம்,
(நாட்டிய) பயிர்ப்பு, (நான்கும்
மாணிழை) மடநல்லார்க்கு
வைத்த நாற்குணங்கள் (ஆகும்);
(பேணிய) தவம், ஒழுக்கம்,
(பெருங்) கொடை, கல்வி, (நான்கிற்
பூணு நற்பொருள்கள்) நான்கும்
புண்ணியத் தோற்றம் (ஆமே).
(4, 4 பெயர்கள்) 18

**நால்வகைப் பொன், நால்வகைப் பூ**

(சொல்லிய) சாதரூபம்,
கிளிச்சிறை, (துலங்குகின்ற)
(நல்ல) ஆடகமே, சாம்பூ-
நதம், (இவை) நால்வகைப் பொன்;
(மெல்லிய) கொடிப் பூ, கோட்டில்
விளங்கும் பூ, நீர்ப் பூ, (வேறு)
(புல்லிய) புதற் பூ, (என்னப்
பொருந்து) நால்வகையிற் பூவாம்.
(4, 4 பெயர்கள்) 19

**நால்வகை உண்டி, நான்கு ஊறுபாடு, உபாயம் நான்கு**

(நடைபட) உண்ப, தின்ப,
நக்குப, பருகல் நான்காம்;
எறிதலே, குத்தல், வெட்டல்
எய்தல், நான்கு ஊறுபாடாம்;
(முறைபடு) சாமம், பேதம்,
(முந்திய) தானம், தண்டம்,
(நெறிபடும்) உபாயம் நான்கும்
(நிருபர்தம் முறைமை ஆமே).
(4, 4, 4 பெயர்கள்) 20

**நால்வகை உயிர்த் தோற்றம், நால்வகைப் புலவர்**

(துவமதாம்) குடல் போர்வைக்குள்,
(தொடர்புறு) முட்டை தன்னில்,
(நவையறு) நிலத்தில், வேர்வில்,
(நல்) உயிர்த் தோற்றம் நான்காம்;
கவியொடு, கமகன், வாதி,
(காசு இலா) வாக்கி, (என்ப)
(புவியின் மேல்) நால்வகைத்தாம்
புலமையர் (இயல்புதானே).
(4, 4 பெயர்கள்) 21

**கவி, கமகன்**

(நீட்டிய) ஆசிஞேடு, மதுரம்,
சித்திரம், வித்தாரப்
பாட்டிவை, யாரும் மெச்சப்
பாடுவோன் கவி (என்ருகும்);
(நாட்டிய) அரும்பொருட்கள்
செம்பொருள் நடையவாகக்
காட்டியே விவகரிப்போன்,
கமகன் (என்று அறையலாமே). 22

**வாதி, வாக்கி**

ஏதுவும் மேற்கோளும் தான்
எடுத்து உடன் காட்டி, ஆங்கே
வாதினில் பிறன்கோள் எல்லாம்
மறுப்பவன் வாதி (என்ப);
(ஓதிய) அறம், பொருட்கள்,
(உற்றிடும்) இன்பம், வீடு,
கோது இன்றிக் கேட்க வேட்கக்
கூறுவோன், வாக்கி (ஆமே). 23

**ஆசுகவி**

கொடுத்திடும் பொருளின், (மற்றுக்)
கூறிய இனத்திற் கோட்டி
அடுத்திடும் எப்போது அப்போது
அசைவின்றி யாரும் மெச்ச
எடுத்து இயல்பாகப் பாடும்
எவன் அவன், ஆசு (சொல்வான்),
(வடுப் பிளவு அனைய ஒண் கண்
மடமொழி வல்லி நல்லாய்). 24

**மதுர கவி**

பொருளினில் பொலிவும் சொல்லில்
பொருந்திய பொலிவும் மற்றைத்
தரு தொடை தொடை விகற்பும்
தாம் துதைந்து அமிர்தம் ஊற
உருவகம் முதலா வைத்தே
ஓதிய அலங்காரத்தோடு
இருள் அற ஓசை தோன்றி
இருந்தது மதுரம் (ஆமே). 25

**சித்திர கவி**

சொற்றிடும் மாலைமாற்றே,
சுழிகுளம், ஏகபாதம்,
(குற்றம் இல்) சக்கரத்தின்
(கூறு), எழு கூற்றிருக்கை,
(கற்றிடும்) அடி மயக்கு,
(காட்டும்) பாவின் புணர்ப்போடு,
(ஒற்று எழுத்து யாவும் தீர்ந்த)
ஒரு பொருட் பாட்டிஞேடும். 26

**சித்திர கவி (தொடர்ச்சி)**

சித்திரப் பாவே, (மற்ற) வி-
சித்திரப் பா, விஞவோடு
உத்தரம், (குற்றம் இல்லா)
ஓரெழுத்தினத்திற்பாட்டே,
(வைத்திடும்) காதைதன்னை
மறைப்பது, கரந்துறைப் பா,
(தைத்த) கோமூத்திரி, கூட
சதுர்த்தம் (என்று இசைத்த பாட்டு). 27

சருப்பதோபத்திரங்கள்,
(சார்ந்திடும்) எழுத்திஞேடு,
வருக்கமும், வடநூல் வைத்து
வரும் (உதாரணமும், நோக்கி
விரித்திட இசைத்து வைத்த)
மிறைக்கவிப் பாட்டு (மற்றும்)
தெரித்தது பாட வல்லோன்
சித்திரகவி (என்று ஆமே).
(19 பெயர்கள்) 28

**வித்தார கவி**

(தெரித்த) மும்மணியின் கோவை,
(செப்பு) பன்மணியின் மாலை,

(வருத்தம் தீர்) மடலையூர்தல்,
மறத்தொடு, கலி வெண்பாவே,
(உருத்த) பாசண்டம், (மற்றும்)
(உறும்) இயல், இசையே, கூத்து,
(விரித்துறப்) பாடவல்லோன்,
வித்தார கவி (என்று ஆமே).
(9 பெயர்கள்) 29

**வில்வீரர் நிற்கும் நால்வகை நிலை, பைசாசம்**

(வரி) சிலை இயற்றுவோர்க்கு
வகுத்த நால்வகையே நிற்றல்;
(பரவு) பைசாசம், (மற்றும்)
(பகர்ந்த) ஆலீடத்தோடு,
(பெருகிய) மண்டலம் (தான்),
பிரத்தியாலீடம் (ஆகும்);
ஒருகால் நின்று ஒருகால் தன்னை
முடக்கல், பைசாசம் (என்ப).
(4 பெயர்கள்) 30

**ஆலிடம், மண்டலித்தல், பிரத்தியாலீடம்**

வலப்பதம் மண்டலித்து
வாமபாதம் தான் முந்து
நிலைப்பெயரே, ஆலீடம்;
(நின்ற) மண்டலத்தின் நாமம்,
இலக்கணத்தோடே கூட
இருகாலும் மண்டலித்தல்;
வலப்பதம் முந்திப் பிற்கால்
மண்டலம், பிரத்தியாலீடம். 31

**ஐவகைத் தானப் பொருத்தம்**

பாலனே, குமரன், மன்னன்,
(படு முதிர்) கிழவன், சாவு,
கோலும் தன் பேர் எழுத்துக்
குறித்து அது முதலாக் கொள்க;
ஏலும் முன் எழுத்து மூன்றும்
இன்பம்; பின் இரண்டும் தீது ஆம்;
(சாலும்) மூவகைச் சீர்தானே
சாற்றிய கவிதைக்கு இன்பம். 32

**பஞ்சபட்சி, அவற்றுக்குரிய எழுத்து, தொழில்**

அகரமே ஆதியாக
ஐந்து குற்றெழுத்தும் (தானே)
(புகல்) வல்லூறு, ஆந்தை, காக்கை,
(போர்க்) கோழியொடு, கலாபி;
(தொகும்) உண்டி, போக்கு, வேந்து,
துயில், சாவு தொழில்கள் (ஆகும்);
பகரும் ஐந்தெழுத்துள் யாது
பற்றினும் அதுவே முன் ஆம்.
(5, 5, 5 பெயர்கள்) 33

**பஞ்சபட்சிகளும் தொழில்களும் இருபக்கத்திலும் அமையும் முறை**

பிற்பக்கம் ஆகில், வேறு
பேதிக்கும்; யாதோ என்னில்,
(அற்புத) உண்டி, சாவே,
(அறி) துயில், அரசு, போக்கு;
(பொற்பு அறு) மரணம், தூக்கம்,
இல்லாத பொழுதை ஓர்ந்து
பற்பல செய்யுள்தானே
பகர்ந்திடின் மிகுந்த நன்மை. 34

**ஐம்புலன்களால் உயிர் இழப்பன**

சுவையின், மீன்; அளி, நாற்றத்தின்;
தும்பியே, பரிசம் தன்னில்;
(நவை இலா) அசுணம் தானே,
(நல்) இசைதனில்; பதங்கம்,
(உவகையாம்) ஒளியை வேட்டே
உயிரினை இழக்கும் ஐந்தாம்;
(இவை எலாம் உடையோர் தம்பால்
ஆர் உயிர் இழந்திடாதார்).
(5 பெயர்கள்) 35

**ஐந்திணை, பஞ்சவாசம்**

(கோலிய) ஐந்திணைப் (பேர்)
குறிஞ்சியே, (செறிந்த) முல்லை,
பாலையே, நெய்தலோடு,
(பரவிய) மருதம் (ஆமே);
ஏலம், தக்கோலம், (மற்றை)
இலவங்கத்தொடு, சாதிக்காய்,
(சாலும்) கர்ப்பூரம் (ஐந்தும்
சாற்றிய) பஞ்ச வாசம்.
(5, 5 பெயர்கள்) 36

**ஐவகை விரை, ஐவகை அகிற்கூட்டு**

சந்தனம், அகிலினோடு,
தகரம், குங்குமமே, கோட்டம்,
(இந்த) ஐந்து (என்று சொல்லும்
எய்திய) விரைகளின் (பேர்);
(உந்து) சந்தனம், கர்ப்பூரம்,
(உடன்) எரிகாசு, (செந்)தேன்,
(அந்த) ஏலங்கள் (என்ப),
அகில் கூட்டு ஓர் ஐந்தும் (தாமே).
(5, 5 பெயர்கள்) 37

**அரசன் ஐம்பெருங் குழு, ஐம்பெருஞ் சுற்றம்**

(தடுக்கும்) மந்திரி, புரோகிதன்,
(தொழில்) தூதன், ஒற்றன்,
(எடுத்து வந்து இருந்த) சேனைக்கு
இறைவன், ஐங்குழு (என்று ஆகும்);
படைத்தொழிலோர், நிமித்தம்
பார்ப்பவர், ஆயுள்வேதர்,
(அடுத்த) நட்பாளர், பார்ப்பார்,
ஐவகை உறுதிச் சுற்றம்.
(5, 5 பெயர்கள்) 38

**ஐவகைக் குரவர், ஐம்பால்**

அரசனே, உபாத்தியாயன்,
அன்னையே, ஐயன், மூத்தோன்,
குரவர் ஓர் ஐவர் (என்றே)
(கூறினர் வேறு நூலோர்);
ஒருவனே, ஒருத்தி, (மற்றும்)
(உரைத்திடும்) பலரே, ஒன்று,
(விரவிய) பல (என்று ஐந்தும்),
(மேவிய) ஐம்பால் (ஆமே).

(5, 5 பெயர்கள்) 39

**பஞ்சாங்கம், பஞ்சபாதகம்**

பஞ்சாங்கம், திதியே, வாரம்,
(பகர்ந்த) நாள், யோகத்தோடு,
(துஞ்சாத) கரணம் (என்ப);
(சூழ்) கொலை, களவு, பொய்யே,
(அஞ்சாத) கள் அருந்தல்,
(ஆர்) குரு நிந்தை, (என்ப),
(பஞ்சார் மெல்லடி நல்லாய் கேள்)
பஞ்ச பாதகத்தின் (பேரே).

(5, 5 பெயர்கள்) 40

**பஞ்ச சயனம், கூந்தலின் ஐவகைப் பகுதி**

மயில் தூவி, இலவின் பஞ்சு,
(மற்றைச்) செம்பஞ்சு, வெண்பஞ்சு,
(அயிர்ப்பு இலா) அன்னத் தூவி,
(ஆம்) பஞ்ச சயனத்தின் (பேர்);
(வியக்கும்) ஐம்பால் (வகைப்பேர்),
(மேவிய) முடியே, கொண்டை,
(குயிற்றிய) குழல், பனிச்சை,
(கோல வார்) சுருளும் (கூறும்).

(5, 5 பெயர்கள்) 41

**ஐவகைத் துரக (குதிரை) கதி,**
**ஐவகை உணவு**

மல்லமே, மயூரம், (மற்றை)
வானரம், வல்லியம்(மே),
(சொல்லிய) சரமே (என்ப),
துரகத கதிகள் ஐந்து ஆம்;
(பல்லினால்) கடித்தல், நக்கல்,
பருகலே, விழுங்கல், (மற்றும்)
(மெல்லவே) சுவைத்தல் (ஆகும்),
(வினவில்) ஐந்து உணவு (தானே).

(5, 5 பெயர்கள்) 42

**ஐவகை வினா, ஐம்பூதம்**

அறியாதான் வினாவல், (பின்னை)
அறிவு ஒப்புக் காண்டலோடு,
(குறியுடன்) ஐயம் தீர்தல்,
(குறித்து) அவன் அறிவு கோடல்,
(கறை அற) மெய் அவர்க்குக்
காட்டல், ஐவகை வினா (ஆம்);
(பெறு) நிலம், நீர், தீ, காற்றே,
(பெரு) விசும்பு, ஐந்து பூதம்.

(5, 5 பெயர்கள்) 43

**ஈசுரன் ஐம்முகம், ஐவகை இசைக்கருவி**

தலைவன் ஐம்முகங்கள் (ஆவ),
சத்தியோசாதம், வாமம்,
(புலன் உறும்) அகோரமே, தற்-
புருடம், ஈசானம் (என்ப);
(குலவு) தோல், துளை, நரம்பு,
(கூறிடும்) கஞ்சம், கண்டம்,
(இலகும் இவ் ஐந்தால் ஆகும்)
இசைக் கருவிகள் ஐந்து (ஆமே).

(5, 5 பெயர்கள்) 44

**ஐவகை வேள்வி, ஐவகைத் தாயர்**

தெய்வமே, பிரமம், பூதம்,
தென்புலத்தோர், மனித்தர்,
(ஐவகையோரை) ஓம்பல்
ஐவகை வேள்வி (ஆமே);
(உய்வகை) பாராட்டும் தாய்,
ஊட்டும் தாய், முலைத்தாய், கைத்தாய்,
(செய்வகை அறிந்து போற்றும்)
செவிலித்தாய், ஐவர் தாயர்.

(5, 5 பெயர்கள்) 45

**ஐவகைத் தொழில், உடம்பின் ஐவகை அவத்தை**

(இலகிய) எண்ணல், (ஊசி)
எழுதலே, இலையைக் கிள்ளல்,
மலர் தொடுத்திடுதலே, யாழ்
வாசித்தல், தொழில் ஐந்தாகும்;
(குலவு) கொட்டாவி, நெட்டை,
குறுகுறுப்பே, மூச்சீடே,
(அலமர ஒடுங்கி) நட்டு
விழுதல், மெய் அவத்தை ஐந்தே.

(5, 5 பெயர்கள்) 46

**காடுபடு திரவியம் ஐந்து, கடல்படு**
**திரவியம் ஐந்து**

அரக்கு, இருல், (இனிய) தேனே,
(ஆய்) மயிற் பீலி, நாவி,
(நெருக்கிய) காட்டில் உற்ற
நெடுந் திரவியங்கள் ஐந்தாம்;
திரைக்கடற் படுவ, உப்பு,
(செய்ய ஒண்) பவளம், (வெண்) முத்து,
(இரைத்து எழு) சங்கு, ஓர்க்கோலை,
இவ்வைந்தும் (என்னலாமே).

(5, 5 பெயர்கள்) 47

**நாடு படு திரவியம் ஐந்து, நகர் படு**
**திரவியம் ஐந்து**

செந்நெல், செவ்விள நீர், (மற்றைச்)
சிறு பயறுடனே, வாழை,

கன்னல், இவ்வைந்தும் நாட்டிற்
கருதிய திரவியப் பேர்;
(மின்னு) கண்ணுடி, பித்தன்,
(வெந்திறல்) மந்தி, யானே,
மன்னவன், நகர் இயைந்து
வரும் திரவியங்கள் (என்ப).
*(5, 5 பெயர்கள்)* 48

**மலேபடு திரவியம் ஐந்து, ஐம்புலன்**

கறியொடு, கோட்டம், (மிக்க)
(கார்) அகிலொடு, தக்கோலம்,
(நறிய) குங்குமம், ஐந்து (என்ப)
நன்மலேத் திரவியப் பேர்;
(துறையில்) ஐம்பொறி நுகர்ச்சி,
சுவை, ஒளி, ஊறே, ஓசை,
(அறையும்) நாற்றங்கள் (என்னும்)
(அடைவு இவையாகும் அன்றே).
*(5, 5 பெயர்கள்)* 49

**மன்மத பாணம் ஐந்து, அவற்றின் பெயர் ஐந்து**

(அசைவிலா) வனசம், சூதம்,
அசோகமே, முல்லே, நீலம்,
(ஒசியும்) வேள் கணேகள் (ஆகும்);
உன்மத்தம், மதனம், மோகம்,
(வசை இல்) சந்தாபத்தோடு,
வசீகரணம், கணேப் பேர்;
(இசையும் மற்று இவைகள் செய்தே
இடும் அவத்தையும் மேற்சொல்வாம்).
*(5, 5 பெயர்கள்)* 50

**ஐங்கணே அவத்தை, சுப்பிரயோகத்தின் தன்மை, விப்பிரயோகத்தின் தன்மை**

(பெருகு) சுப்பிரயோகம், (பின்
பிறந்த) விப்பிரயோகம், (மேல்)
(மருவிய) சோகம், மோகம்,
மரணமும் (முறையே செய்யும்);
(பெருகு) சுப்பிரயோகம் (தான்)
பேச்சொடு நிணேவும் (ஆகும்);
(விரவு) விப்பிரயோகம் (தான்)
வெய்துயிர்த்து இரங்கல் (ஆமே).
*(5, 2, 2 பெயர்கள்)* 51

**சோகத்தின் தன்மை, மோகத்தின் தன்மை, மரணத்தின் தன்மை**

சோகமே வெதுப்பினேடு,
துய்ப்பவை தெவிட்டல் (செய்யும்);
மோகமே, அழுதலோடு,
மொழி பல பிதற்றல் (என்ப);
(வேகமாம்) மரணம் (தானே)
(மிகு) மயக்கோடு, அயர்ப்பு (ஆம்);
(பாகு அடர் சொல்லின் நல்லாய்
பகரும் நூல் இயல்பு இதாமே).
*(2, 2, 2 பெயர்கள்)* 52

**அந்தணர்க்குரிய ஆறு தொழில், அரசர்க்குரிய ஆறு தொழில்**

ஓதலே, ஓதுவித்தலுடன்,
வேட்டல், வேட்பித்திட்டல்,
ஈதலே, ஏற்றல், ஆறும்
(ஏற்கும்) அந்தணர் தொழிற் பேர்;
ஓதலே, வேட்டல், ஈதல்,
உலகு ஓம்பல், படைபயிற்றல்,
(மேதகு) போர் செய்து ஈட்டல்,
வேந்தர் செய் தொழில்கள் ஆமே.
*(6, 6 பெயர்கள்)* 53

**அரசர்க்குரிய ஆறு அங்கம், வைசியர்க்குரிய ஆறு தொழில்**

படை, குடி, கூழ், அமைச்சு,
(பற்றிய) நட்பினேடு,
(நெடு) மதில், அரசியற்கு
நிகழ்த்திய ஆறு பேதம்;
(மிடை அற) ஓதல், வேட்டல்,
வேளாண்மை, வாணிகத்தின்
(உடன்), நிரை காத்தல், ஏரை
உழல், ஆறும் வசியர்க்கு (ஆமே).
*(6, 6 பெயர்கள்)* 54

**சூத்திரர்க்குரிய ஆறு தொழில்**

(வசியர்தம் தொழில்கள் ஆறுள்
வகுத்த முத்தொழில்களான)
பசு ஓம்பல், பொருளே ஈட்டல்,
பயிரிடல், புராணம் ஆதி
(நசையுற) ஓதல், ஈதல்,
(நண்ணும்) அந்தணர் முன்னேர்க்கு
வசை தவிர் அநுகூலம் ஆம்
வகைத்தொழில், சூத்திரர்க்கு ஆம். 55

**மன்னவர்கள் ஆறு**

அரிச்சந்திரன், நளனே, (வெற்றி
ஆம்) முசுகுந்தனேடு,
(பொருப்புறப் புகழை வைத்த)
புருகுச்சன், புரூரவாவே,
(விரித்த பூந் தாமக்) கார்த்த
வீரியன், (என்று இன்னேரே)
(தெரித்து முன் எடுத்து வைத்த)
திகிரி மன்னவர்கள் ஆமே.
*(6 பெயர்கள்)* 56

**வேதாங்கம் ஆறு, உட்பகை ஆறு**

ஆறு அங்கம், சிக்ஷை, கற்பம்,
(ஆம்) வியாகரணம், (மற்றும்)
(வீறிய) நிருத்தம், சந்தோ-
விசிதம், சோதிடம் (என்று ஆகும்);
(கூறிடும் கொடிய) காமம்,
குரோதமே, உலோபம், மோகம்,

(பாறிய) மதங்களே, மாற்சரியம்,
உட்பகை ஆறு (என்ப).

(6, 6 பெயர்கள்) 57

**ஆறு வகைத் தானே,**
**ஆறு வகைப் படை, ஆறு சுவை**

(ஒத்த) வில், வேல், வாள், யானை,
(உயர்) பரி, தேரோடு ஆறே;
(சுத்த) மூலம், கான், கூலி,
துணை, பகை, நாடு (என்று) ஆறே;
தித்தித்தல், புளித்தல், கூர்த்தல்,
(சேரவே) துவர்த்தல், காழ்த்தல்,
கைத்தலே அறு சுவை(க்குக்)
(காட்டிய அபிதானங்கள்).

(6, 6, 6 பெயர்கள்) 58

**ஆறு வகை அகச் சமயம்**

(அரிய) உட்சமயம் ஆறே,
(ஆவன) சைவம், (தூய்மை
பெருகு) பாசுபதத்தோடு,
(பிறங்கு) மாவிரதம், (மற்றும்)
(கருதிய வீடு பேறு காட்டு)
காளாமுகம், (தான்)
(மருவிய) வாமம், (மிக்க)
வைரவம் (என்னலாமே).

(6 பெயர்கள்) 59

**ஆறு வகைப் புறச் சமயம்**

அறு புறச் சமயம் (தானே),
(அறை) உலோகாயதம், (பின்)
(உறைதரு) பௌத்தமே,
ஆருகதம், மீமாஞ்சமோடு,
(குறி பெறு) மாயா வாதம்,
(கூறிய) பாஞ்சராத்ரம்;
(நெறி பெறும் இவையே என்ன
நிகழ்த்துவர் நூல் வல்லோரே).

(6 பெயர்கள்) 60

**நாட்டின் ஆறு வகைச் சிறப்பு,**
**அறுவகை அரசியல்**

செல்வமே, விளைவு, (மிக்க)
(செழு)வளம், செங்கோல் உண்மை,
(ஒல்கு) நோய், குறும்பு இலாமை,
(உற்ற) நாட்டு அமைதி ஆறு ஆம்;
(நல்) அறம், மறம், (தான் மேலே)
(நாட்டிய) அறம், பொருட்கள்,
(ஒல்லும்) இன்பங்கள் ஆறும்,
(ஓங்கு) அரசியலின் பேதம்.

(6, 6 பெயர்கள்) 61

**அறநிலையறம், மறநிலையறம்**

தந்தமின் வருணக்காப்பின்
தரும் பொருளாலே பேணல்
(அந்த ஆறு இயற்கை தம்முள்)
அறநிலை அறம் (என்று ஆகும்);
(முந்து) இகல் அறுத்தல், செஞ்சோற்று
உதவி இல்லோர்ச் செகுத்தல்,
(வந்த) ஆனிரையை மீட்டல்,
மறநிலையறம் (என்று ஆமே).

(1, 3 பெயர்கள்) 62

**அறநிலைப் பொருள், மறநிலைப் பொருள்**

நெறிவழி நின்று தத்தம்
நிலையினால் உழந்து உழந்து
பெறு பொருள், அறநிலைக்குப்
பேசிய முறைமை (ஆகும்);
செறுநர்தம் பொருளும், (மற்றத்)
தெண்டத்தின் பொருளும், சூதின்
மறுகிய பொருளும், (அம்ம)
மறநிலைப் பொருளின் பேரே.

(1, 3 பெயர்கள்) 63

**அறநிலையின்பம், மறநிலையின்பம்**

(கூறும் ஓர்) பருவம், நல்ல
குலம், ஒத்ததாகத் தீ வேட்டு
ஆறிய) இல்லிருத்தல்,
அறநிலை இன்பம் (ஆகும்);
ஏறுதான் தழுவல், வில்லால்
இலக்கம் எய்திடுதல், எல்லாம்
மாறுடை நெறியிற் கூட்டம்,
மறநிலை இன்பம் (ஆமே).

(1, 3 பெயர்கள்) 64

**கரும பூமிக்குரிய ஆறு தொழில்**

வரைவொடு, தொழிலே, வித்தை,
வாணிகம், உழவே, சிற்பம்,
(உரைசெயும் போக பூமி
ஒழிவினில் ஆதிகாலம்
விரை செறி பிண்டி வேந்தன்
விதித்தலின் அஃதே அம்ம)
கரும பூமி (என்னும் பேர்
கண்டதொன்று உண்டு நூலின்).

(6 பெயர்கள்) 65

**போக பூமி**

விதியுளி பதினாறுண்டு
மேவிய பன்னீராண்டு
பதியொடு மனைவி தெய்வப்
பத்துப் பூந்தருவும் வேண்டும்
புதிய போகம் கொடுப்பப்
புணர்ந்து தாம் பிரியார் ஆகி,
மதியொடு மறுவும் என்ன
வாழ்வது போக பூமி. 66

**அறுவகைப் போக பூமி**

(வரும்) ஆதியரி வஞ்சம், (பார்
மதித்த) நல்லரிவஞ்சம், (பைம்

பொருள் ஆர்) ஏமத வஞ்சம், (மேல்
புகழ் பெறும்) ஏம வஞ்சம்,
(ஒரு) தேவ குருவத்தோடே,
உத்தர குருவம், (என்ன
வரு) போக பூமி ஆறு
வகை(ப்படும் இயல்பதாமே).
(6 பெயர்கள்) 67

**ஏழுவகை மாதர்கள், ஏழு வகைத் தாது**

(வரு நல்) அபிராமி, (மற்றை)
மகேச்சுவரியொடு, கௌமாரி,
(மருள் தீர்) வைணவி, வராகி,
மகேந்திரியொடு, சாமுண்டி,
(இருமை) ஏழ் திருக்கள் (பேர் ஆம்);
இரதமே, உதிரம், என்பு,
(பரவு) தோல், இறைச்சி, மூளை,
(பற்று) சுக்கிலம், தாது ஏழே.
(7, 7 பெயர்கள்) 68

**மன்னர்க்குரிய ஏழுவகைப் பேறு,**
**எழு வகைப் பிறப்பு**

அறமொடு, பொருளே, இன்பம்,
அன்பொடு, புகழ், மதிப்பு,
மறுமை (என்று), ஏழும் செங்கோல்
மன்னவர் பேறே (ஆகும்);
(அறிவுள) தேவர், மக்கள்,
(அறிவு இல்) மீன், விலங்கு, செந்து,
பறவை, தாவரங்கள் (என்ப),
(பகரும்) ஏழ்பிறப்பின் பேரே.
(7, 7 பெயர்கள்) 69

**எழுவகைப் பிறப்பில் எண்பத்து நான்கு**
**நூறுயிர யோனிபேதம்**

ஊர்வன, பதினொன்றாகும்;
ஒன்பான், மானுடர்தம் பேதம்;
நீரினில், விலங்கு, புள்ளு,
பப்பத்தாம்; (நெடிய) தேவர்
(சாரும்) ஈரேழ்; நாலைந்தே
தாவர யோனி பேதம்;
(ஆரும்) எண்பானான்கோடே
அமைத்த நூறுயிரங்கள். 70

**ஏழு தீவு, ஏழு கடல்**

(இவர்தரு) நாவலோடே,
இறலியே, குசை, கிரவுஞ்சம்,
(புவி புகழ்) இலவு, தெங்கு,
புட்கரம், தீவு ஏழின் பேர்;
உவர், கரும்பின் சாறோடே,
(ஒண்) மது, நெய், (சிறந்த
நவமதாம்) தயிர், பால், அப்பு,
(நாட்டிய) கடல் ஏழின் பேர்.
(7, 7 பெயர்கள்) 71

**ஏழு மேல் உலகம்**

(நவம் ஆம்) பூலோகம், (மற்றும்)
(நாட்டிய) புவலோகம் (தான்),
சுவலோகம், மகலோகம்மே,
(சொற்றிடும்) சனலோகம்மே,
தவலோகம், (அதனினோடு)
சத்தியலோகம், (இன்ன)
(உவமானம் இல்லா) மேல் ஏழ்
உலகு எனும் (அறிவன் நூலே).
(7 பெயர்கள்) 72

**ஏழு கீழ் உலகம்**
**(கீழ் மேல் பதினான்கு உலகங்கள்)**

அதலமே, விதலம், (மற்றும்)
(அடைவான) சுதலத்தோடும்,
(இதமுறு) தராதலம்மே,
ரசாதலம், மகாதலம் (தான்),
(புதிய) பாதலத்தினோடு,
(போற்றும்) கீழ் ஏழு லோகம்;
(உதவிய உலக நூல்) ஈர்-
ஏழு எனும் உலகு (தாமே).
(7 பெயர்கள்) 73

**எழு வகை நிரய வட்டம்**

(பெருகிய) களிற்றின் வட்டம்,
(பெரு) மணல் வட்டம், (பொங்கும்)
எரி பரல் வட்டம், (மற்றும்)
(எறி) அரிபடையின் வட்டம்,
(பொரு அற இரண்டும் மாழ்கப்
போர்த்திடும்) புகையின் வட்டம்,
இருள் வட்டம், பெருங் கீழ் வட்டம்,
(என்ப) ஏழ் நிரய வட்டம்.
(7 பெயர்கள்) 74

**ஏழு நரகம், ஏழு நதி**

(குழைவுறு) கூடசாலம்,
இரௌரவம், கும்பி பாகம்,
(விழு) பூதி, அள்ளல், செந்து
(விதித்த) மாபூதி (ஆமே);
(வழி) கங்கை, யமுனையே, நன்-
மதை, சரஸ்வதி, காவேரி,
(விழுமிய) குமரி, கோதா-
வரி எழு நதியின் பேரே.
(7, 7 பெயர்கள்) 75

**ஏழு முனிவர், நாட்டில் வரும் ஏழு குற்றம்**

(புவி புகழ்) கும்ப யோனி,
புலத்தியன், அங்கிராவே,
கவுதமன், வசிட்டன், (மற்றைக்)
காசிபனொடு, மார்க்கண்டன்,
(இவர்) எழு முனிவர்; விட்டில்,
தொட்டியர், ஏனம், கள்வர்,

அவமழை, நால்வாய், கிள்ளை,
(ஆம் இவை) நாட்டு ஏழ் குற்றம்.
(7, 7 பெயர்கள்) 76

**ஏழு முகில்**

(பொழியும்) ஆவர்த்தம், (எங்கும்
போர்த்த) புட்கலம், சங்காரம்,
(கழியும்) ஆசவனமே, நீர்க்-
காரி, (ஏர் உதி) சொற்காரி,
(மொழி) சிலாவருடம் (என்ப),
முகில்கள் ஓர் ஏழின் நாமம்;
(அழிவு காலத்தில் தோன்றி
அடர்வன படர்வ வானே).
(7 பெயர்கள்) 77

**எட்டுத் திசை யானை**

(களிற்று) அயிராவதம், (சீர்
காட்டு) புண்டரீகம், (தானம்
குளித்த) வாமனம், (பொன்னோடைக்)
குமுதம், அஞ்சனம், (வெம்போரை
விளைத்திடும்) புட்பதந்தம்,
(மேவிய) சார்வ பௌமம்,
(பிளிற்று) சுப்பிரதீகம் (தான்)
(பெருத்த) எண் திசை யானைப் பேர்.
(8 பெயர்கள்) 78

**எட்டு மலை**

(மன்னிய) இமயத்தோடு,
மந்தரம், கைலை, விந்தம்,
(கொன் வளர்) நிடதம், ஏம-
கூடமே, நீல வெற்பு,
(துன்னிய) கந்தமாதனத்தொடு,
(சூழ்) வெற்பு எட்டு (ஆம்);
(இன்னவை உலக நூலின்
இயற்கையே என்று காண்மின்).
(8 பெயர்கள்) 79

**எட்டு வகைப் பாம்பு**

(மன்னு) வாசுகி, அனந்தன்,
(மருவிய) தக்கன், சங்கன்,
(பன்னிய) குளிகனோடு,
பதுமன், மாபதுமன், (மற்றைக்)
(கொன் எயிற்று அழல் விழிக்)
கார்க்கோடகன், (என்ற) எட்டும்
(முன்னிய) கடவுட் பாம்பின்
மொழி அபிதானம் (ஆமே).
(8 பெயர்கள்) 80

**எட்டுத் திக்குப் பாலகர், அவர்க்குரிய திசை, சூரிய சந்திரர் சார் திசைகள்**

(திண் திறல்) மகவான், அங்கி,
(செறி) யமன், நிருதியோடு,
(கொண்டிடும்) வருணன், வாயு
குபேரன், ஈசானன் (என்ப),
எண் திசை உலோக பாலர்
இவர், கீட்டிசை தொட்டு எண்ணும்;
(கண்ட) கீழ்பால் வடக்கு
கதிரொடு திங்கட்கு ஆமே.
81

**எட்டுத் திக்குக் குறி, அட்ட மூர்த்தம்**

கொடி, புகை, சீயம், (சீறிக்
குரைத்து வள் என்னும்) ஞாளி,
இடபமே, கழுதை, யானை,
(ஏகு) காகம், திக்கு அங்கம்;
படி, நீர், தீ, வளி, ஆகாயம்,
பரிதியே, (விரவு) திங்கள்,
(அடல் புனை) இயமானன், (மற்று)
அட்ட மூர்த்தங்கள் (ஆமே).
(8, 8 பெயர்கள்) 82

**எட்டு வகைச் சித்தி**

(மன்னிய) அணிமா, (மற்றை)
மகிமாவே, கரிமாவோடு,
(பின்னுறு) லகிமா, பிராத்தி,
(பெறும்) பிராகாமியங்கள்,
(முன்னுறும்) ஈசத்துவம், (பின்
முற்றிய) வசித்துவம் (தான்),
(உன்னிய நூல்கள் ஓதும்
ஓதும் ஓர்) இருநான்கு சித்தி.
(8 பெயர்கள்) 83

**எட்டு யோகாங்கம்**

இயமமே, நியமம், (முந்தி
ஏற்ற) ஆசனத்தினோடு,
(நயனுறு) பிராணாயாமம்,
(நாட்டிய) பிரத்தியாகாரம்,
(சயமுறு) தியானத்தோடு,
தாரணை, சமாதி எட்டும்,
(வியனுறும்) யோகம் (என்று)
(விதித்தனர் மதித்த நூலோர்).
(8 பெயர்கள்) 84

**எட்டுத் தருமாங்கம்**

அறம் ஐயப்படாமை, (மற்றை)
அவாவின்மை, உவர்ப்பு ஒன்று இன்மை,
(நெறிகெழு) மயக்கம் இன்மை,
(நின்ற அப்)பழியை நீக்கல்,
(உறுதியின்) நிறுத்தல், பேரன்-
புடைமையே, அறம் விளக்கல்,
(இறைவனது) அறத்துட் கூறும்
எட்டு உறுப்பு (இவைகள் ஆமே).
(8 பெயர்கள்) 85

**அருகனது எண்குணம்**

கடையிலா ஞானத்தோடு,
காட்சி, வீரியமே, இன்பம்,
(மிடையுறு) நாமம் இன்மை,
(விதித்த) கோத்திரங்கள் இன்மை,

(அடைவு இலா) ஆயுவின்மை,
அந்தராயங்கள் இன்மை,
(உடையவன்) இறைவன் (என்ன)
(உரைக்கும் ஆருகத நூலே).
(8 பெயர்கள்) 86

**சிவனுக்குரிய எண் குணம்**

(இன்னவை அருக நூலின்
இசைக்கும் எண்குணங்கள் மற்றும்)
தன் வயம், தூய தேகம்,
(தகும்) இயல்புணர்வு, (மேலாப்)
(பன்னும்) முற்றுணர்விஞேடு,
பாசங்கள் இயல்பின் நீங்கல்,
(முன்னே) பேரருளே, (மற்றை)
முடிவிலா ஆற்றல் (பின்னும்).
(8 பெயர்கள்) 87

**கடவுளின் இலக்கணம்**

வரம்பு இலா இன்பம், (என்றே
வாய்த்திடும்) குணங்கள் எட்டும்
(தரம்பெறு) சைவ நூலின்
சாற்றிய தொகையாம் (என்ப);
திருந்தும் இக்குணங்கள் தானே
சேர்ந்தவன் (யாவன் என்னில்)
பொருந்திய உலகம் எல்லாம்
புரந்திடும் கடவுள் ஆமே. 88

**அருகனுக்கு ஆகா என விலக்கப்பட்ட எட்டுக் குற்றம்**

(மன்னிய) அறிவு, காட்சி
மறைத்தல், வேத நீயத்தோடு,
(துன்னு) மோக நீயம், ஆயு,
(தொடர்) நாம, கோத்திரங்கள்,
(முன்னுறும்) அந்தராயம்,
(மொழிந்த) எண் குற்றம் (ஆகும்);
இன்னவை தீர்ந்தோன் யாவன்
யாவர்க்கும் இறைவன் (ஆமே).
(8 பெயர்கள்) 89

**வைசியர்க்குரிய எண் வகைக் குணம்**

பெறுவது தெரிதல், ஈட்டல்,
(பேணி மற்று அவை) பகுத்தல்,
இறுவது அஞ்சாமை, (என்றும்)
இடன் அறிந்து ஒழுகல், (வந்தே)
(உறு பெருந்) தனிமையாற்றல்,
(உடன்) முனிவிலனே ஆதல்,
(மறு அறு) பொழுதிற் கூடல்,
வசியர்தம் குணங்கள் எட்டே.
(8 பெயர்கள்) 90

**அட்ட கணிதம், அட்ட மங்கலம்**

குணகாரம், பரியச்சம் (தான்)
(குறித்த) பாற்கரமே, மூலம்,
(தணவா) மானதமே, கன்மம்,
சலிதியே, தருதம் எட்டும்
(கணியார்தம்) கணிதம்; தீபம்,
கவரி, கண்ணுடி, தோட்டி,
புணர் மீனே, முரசு, கும்பம்,
(பொலி) கொடி, சுபம் ஓர் எட்டே.
(8, 8 பெயர்கள்) 91

**எண் வகை மெய்ப்பரிசம், நாட்டில் வரும் எண் வகைக் கேடு**

தட்டலே, பற்றலோடு,
தடவலே, தீண்டல், குத்தல்
வெட்டலே, கட்டல், ஊன்றல்,
மெய்ப் பரிசங்கள் எட்டு (ஆம்);
விட்டில், தன் அரசு, நால்வாய்,
மிகு மழை, மிகு காற்றேடே,
நட்டம், வேற்று அரசு, கிள்ளை
நாடு உறும் கேடு எட்டு (என்ப).
(8, 8 பெயர்கள்) 92

**எண் வகை மணம்**

பிரமமே, பிரசாபத்தியம்,
(பெருகும்) ஆரிடமே, தெய்வம்,
(கருது) காந்தருவத்தோடே,
(காட்டிய) அசுரம், (மற்றும்)
(பரவிய) இராக்கதங்கள்,
பைசாசம், இரு நான்கு (என்ப)
(மருவிய உலகு இயற்கை)
(வகுத்திடு) மணங்களின் பேர்.
(8 பெயர்கள்) 93

**எண் வகை மாலை**

நிரை கவர்ந்திடுதல், வெட்சி;
நிரை மீட்டல், கரந்தை (என்ப);
வெருவார் மேல் சேறல், வஞ்சி;
மீட்டு எதிர் ஊன்றல், காஞ்சி;
(வரும்) நொச்சி, புரிசை காத்தல்;
வளைத்திடல், உழிஞை (ஆகும்);
பொருவது, தும்பை (என்ப);
போர் வெல்லல், வாகை (ஆமே).
(8 பெயர்கள்) 94

**அரசர்க்குரிய எண் பேராயம்**

கரணத்தின் திரள்கள், (வாய்ந்த)
கடைகாப்போர், நகரிமாக்கள்,
(தரு) படைத்தலைவர், (மற்றும்)
(தன்) கிளைச் சுற்றம், யானை,
புரவி ஊர்வோரே, (என்றும்)
(போற்று) காவிதியர் (என்றும்)
(விரவிய) எண் பேராயம்
வேந்தருக்கு அமைத்ததாமே.
(8 பெயர்கள்) 95

**எண் வகை உடற்குறை, செய்யுளுக்குரிய எண் வகைக் கணம்**

குறளொடு, செவிடு, மூங்கை,
    கூன், மருள், குருடு, மாவே,
(உறும்) உறுப்பு இல்லாப் பிண்டம்,
    (ஓதிய) எண் மெய் எச்சம்;
(நிறையும்) நீர், நிலனே, தேயு,
    (நிகழ்) சுடர், மதியே, வானம்,
(பெறும்) இயமானன், வாயு,
    (பேசிய) கணங்கள் எட்டே.

(8, 8 பெயர்கள்) 96

**நல்ல கணம், தீய கணம்**

நிலனொடு, நீர், (வெண்) திங்கள்,
    (நேர்) இயமானன், வெய்யோன்,
(உலவு) தீ, வாயு, விண், (என்று
    ஓதிய கணங்கள் எட்டில்
நலம் உறு கவிதை முன்னர்
    நாட்டிய நான்கும் நன்று ஆம்;
கலகம் ஆம், பின்னர் நான்கு
    கணங்களும் காணுங்காலே.

(8, 8 பெயர்கள்) 97

**எண் வகைக் கணத்துக்கு உரிய சீர்**

நிரையது மூன்றுதானே
    நிலக்கணம்; நேர் முன் ஆகி
நிரையிணை பின்னர் ஆயின்
    நீரே; நேரிணை பின்னுகி
நிரையது முன்னர் ஆயின்
    நெடிய வெண் திங்கள் (என்ப);
(புரையற) நேர்மூன்று ஆகில்
    (பொருந்திய) இயமானன் (தான்). 98

**எண் வகைக் கணத்துக்கு உரிய சீர் (தொடர்ச்சி)**

நிரை நடுவாக (மற்றை)
    நேர் இரு பாலும், வெய்யோன்;
நிரை இருபாலும் நிற்க
    நேர் நடு, தீ (என்று ஆகும்);
நிரை இறுவாக (மற்று)
    நேரிணை முன்னே, வாயு;
நிரையிணை முன்னர் ஆகி
    நேர்இறின், (நீள்) ஆகாயம். 99

**பெரியோர்க்குச் செய்யும் நவ புண்ணியம்**

எதிர் கொளல், பணிதலோடும்,
    இருக்கை, கால் கழுவல், (நாறும்)
(புது விரை) நறும் பூ, தூபம்,
    (புனே) விளக்கு, (அடைவே) ஏத்தல்,
(விதியின் வாள் அரவு தோலும்
    விடமும் நீத்தென்ன நீத்த)
(அதிகருக்கு) அமுதம் ஏந்தல்,
    (அவை) நவ புண்ணியம் (தான்).

(9 பெயர்கள்) 100

**நவ கண்டம்**

வடபாலே, தென்பால், கீழ்பால்,
    (வகுத்த) மேல்பால், விதேகம்;
வடபாலே, தென்பால் (மீது),
    (வைத்திடும்) இரே பதங்கள்;
வடபாலே, தென்பால் (மீது),
    (வைத்திடு) பரதத்தோடு;
(வடிவாம்) மத்திம கண்டங்கள்,
    (வரு) நவகண்டம் (ஆமே).

(9 பெயர்கள்) 101

**நவ தாரணை**

(வைத்த) நாமங்கள், மாயை,
    வச்சிரம், சித்திரங்கள்,
சத்தமே, வத்துவோடு,
    சதுரங்கம், செய்யுள் (எட்டும்),
(புத்தரே காணப்பட்ட)
    பொருட் குறை நிறைவே (என்றும்)
(ஒத்த) தாரணைகள் (என்ப),
    (ஓதும்) ஒன்பானும் (ஈதே).

(9 பெயர்கள்) 102

**செய்யுளுக்குரிய நட்சத்திரம் ஒன்பதாகப் பிரித்தறிதல்**

தனது நாளின் பின் நாளும்,
    (சார்ந்திடு) நாலும், ஆறும்,
(வினவிய) எட்டு, ஒன்பானும்,
    விருத்தம் ஒன்றில்லை; தன் நாள்
(இனைய) மூன்றுடன், ஐந்தாம் நாள்,
    ஏழாம் நாள் (இவை) பொருந்தா;
(நினையும்) இம் மூன்று ஒன்பான் நாள்
    நேர்படும், மூன்று வட்டம். 103

**நவ தாளம்**

(அடியினில்) சமதாளத்தோடு,
    அருமமே, அரிதாளம், (மேற்)
படிமமே, துருவதாளம்,
    (பற்றிய) சித்திரம், (தான்)
விட தாளம், சயமே, (மற்றும்)
    (மேவிய) நிவிர்த்த தாளம்,
(நடை உறு புலவர் ஓதும்)
    நவதாளம் (இவைகள் ஆமே).

(9 பெயர்கள்) 104

**நவமணிகள்**

மரகதம், பவளம், நீலம்,
    வச்சிரம், பதுமராகம்,

(விரவிய) தரளமே, கோ-
மேதகம், புருடராகம்,
(உரவிய காந்தி விட்டே)
(உமிழ்) வயிடூரியம் (தான்),
(பெருகிய) நவமணி(க்குப்)
(பெயர் இவை ஆகும் என்ப).
*(9 பெயர்கள்) 105*

**நவரசம், பத்து வகைச் சிற்பத் தொழில் உறுப்பு**

(நல்ல) சிங்காரம், வீரம்,
நகை, சாந்தம், கருணை, குற்சை,
(ஒல்லும்) அற்புதம், பயத்தோடு,
(உறு) கோபம், இரதம் ஒன்பான்;
கல், உலோகம், மண், செங்கல்,
கண்ட சர்க்கரை, மெழுக்கு,
(சொல்லிய) மரமே, தந்தம்,
சுதை, வண்ணம், தொழில் சிற்பர்க்கு ஆம்.
*(9, 10 பெயர்கள்) 106*

**தசாங்கம், பத்து வகைத் துவர்**

(நெடு) மலை, யாறு, நாடு, ஊர்,
(நீண்ட) தார், புரவி, யானை,
கொடி, முரசுடனே, தானை,
(கூறிய) தசாங்கம் (என்ப);
(படி புனை) நாவலே, முப் பழம்,
நாற்பால் மரம், முத்தக் கா-
சொடு, மாவின் தளிர் பத்து (என்ப)
(ஓதிய) துவரின் பேரே.
*(10, 10 பெயர்கள்) 107*

**அரி (திருமால்) அவதாரம் பத்து**

(நாமம்) மீன், ஆமை, பன்றி,
நாரசிங்கத்தினோடு,
வாமனன், பரசுராமன்,
(வானரர் தொழும்) இராமன்,
(பாமலி) வாசுதேவன்,
பலதேவனுடனே, கற்கி
(ஆம் இவை) பத்தும் (தானே),
அரி அவதாரம் (என்ப).
*(10 பெயர்கள்) 108*

**வேளாளருடைய பத்து வகைச் செய்கை**

(வரு) விருந்து ஓம்பல், ஆணை
வழி நிற்றல், ஒழுக்கம், ஊக்கம்,
கரில் அகத்து இன்மை, (என்றும்)
கைக்கடன் ஆற்றல், (அன்றே
உரியதாம்) இறை இறுத்தல்,
ஒற்றுமை கோடல், போற்றல்,
(விரவு) மாண்வினை தொடங்கல்,
வேளாளர் செய்கை பத்தே.
*(10 பெயர்கள்) 109*

**பெண்களால் மலரும் பத்து வகை மரங்கள்**

(ஏடு அவிழ்) மகிழ், சுவைக்க;
(எழில்) பாலை, நண்பு கூட;
பாடலம், நிந்திக்க; (தேன்)
(படி) முல்லை, நகைக்க; புன்னை,
ஆட; (நீள்) குரா, அணைக்க;
அசோகு, உதைத்திட; வாசந்தி,
பாட; மா, பார்க்க; (வார்) சண்-
பகம், நிழல்படத் தளிர்க்கும்.
*(10 பெயர்கள்) 110*

**கரந்து உறை கோள்கள் பத்து**

பரிதி, இந்து (இரண்டு, சீறும்)
(பை) நாகக் கோள் இரண்டோடு,
இருசுடர் வளைந்து சூழும்
பரிவேடம், (நெடுக ஈண்டுப்)
(பெருகிய) வான் மீன், வானிற்
பெருந் தூமம், எதிர்ந்த வில்லுக்
(கருதும் இவ்வெல்லாம் பேசில்)
கரந்துறை கோள்கள் (ஆமே).
*(10 பெயர்கள்) 111*

**ஆண்பிள்ளைக் கவி உறுப்புப் பத்து**

(சாற்று) காப்பு, செங்கீரை,
தாலே, சப்பாணி, முத்தம்,
(போற்று) வாரானையே, அம்புலி,
சிற்றில், சிறுபறை, (பின்)
(ஏற்றிடும்) சிறு தேர் (ஆம்)
(இப் பருவம்) பத்தையும் இசைக்கும்.
(தேற்றும்) ஆண் பிள்ளைப் பாட்டு;
ஆசிரியம் சேர் விருத்தப் பாவே.
*(10 பெயர்கள்) 112*

**பெண்பிள்ளைக் கவி உறுப்புப் பத்து, இக் கவிகள் கேட்கப்படும் மாதங்கள்**

அரிவையர்க்கு ஆகில் ஈற்றில்
அறை மூன்று பருவம் ஆகா;
(உரியதாம்) கழங்கு, அம்மானை,
ஊசல் முன் ஏழினோடு,
(வரும்) மூன்றே, ஆதி மூவேழ்
மதிகாறு ஒற்றித்த மாதத்து
இருபாலாரையும் கேட்பித்தல்
இனிது; ஐந்து, ஏழாண்டு (தானே).
*(10 பெயர்கள்) 113*

**உயிர்க்குரிய பன்னிரு வகை வேதனை**

அனலுடன், அசனி, சீதம்,
ஆயுதம், விடம், மருந்து,
புனல், வளி, (விடத்தையும் தான்
புசிப்பிக்கும்) பசியே, தாகம்,
(நனிமிகும்) முனிவு அருமை,
(நாட்டிய) பிணியினோடே,

(இனையும்) வேதனை ஈராறும்
(எய்திடும் துன்பம் என்ப).
(12 பெயர்கள்) 114

**பன்னிரு வகைத் தானை**
**பத்தி, சேனமுகம், குல்மம்**

தந்தி ஒன்றே, தேர் ஒன்று,
(சாதியாம்) புரவி மூன்று,
(வந்து அடும்) பதாதி ஐந்து,
(வகுத்திடும்) பத்தி (என்ப);
(உந்தும் அப்) பத்தி மூன்றே
உறின், சேனமுகம் (என்று ஆகும்)
(முந்து) சேனமுகம் (தான்)
மும்மடி, குல்மம் (ஆமே). 115

**கணம், வாகினி, பிருதனை, சமூ**

(மருவிய) குல்மம் மூன்று
மடி (தானே), கணமதாகும்;
(கருதிய) கணமே மூன்று,
(காட்டிய) வாகினிப் பேர்;
(பெருகு) வாகினி (தான்) மூன்று,
பிருதனை (ஆகும் என்ப);
(வரு) பிருதனை (தான்) மூன்று,
(வகுத்திடும்) சமூ (ஆகும்மே). 116

**பிரளயம், சமுத்திரம், சங்கு, அநீகம்,**
**அக்குரோணி**

(பேரியல்) சமூவே மூன்று,
பிரளயம்; பிரளயம் (தான்)
(ஓர்) மூன்றே, சமுத்திரம் (ஆகும்);
(உயர்) சமுத்திரம் (ஓர்) மூன்று,
(தேர்தரு) சங்கு; சங்கு
மூன்றதே, அநீகம் (என்ப);
(சோர்வு இலா) அநீகம் மூன்றே,
(சொல்லும்) அக்குரோணி (ஆமே). 117

**பதினெண் தேவகணங்கள்**

(விரவு) சாரணரே, சித்தர்,
விஞ்சையர், பசாசர், பூதர்,
கருட, கின்னரர், இயக்கர்,
காந்தருவர், சுரர், தைத்யர்,
உரகர், ஆகாசவாசர்,
உத்தர குருவோர், போகர்,
நிருதர், கிம்புருடர், விண்மீன்,
(நிறை) கணம் மூவாறு (ஆமே).
(18 பெயர்கள்) 118

**பதினெண் வகை மங்கலச் சொல்**

சீர், மணி, பரிதி, யானை,
திரு, நிலம், உலகு, திங்கள்,
கார், மலை, சொல், எழுத்து,
கங்கை, நீர், கடல், பூ, தேர், பொன்,
(ஏர் உறும் இவை) மூவாறும்
இதில் பரியாயப் பேரும்
(ஆரும்) மங்கலச் சொல் (செய்யுள்
ஆய்ந்து முன் வைக்க நன்று ஆம்).
(18 பெயர்கள்) 119

**உடம்புக்குரிய பதினெண் வகைக் குற்றம்**

பசி, அதிசயமே, உள்ளல்,
பயமே, கையறவு, மூப்பு,
கசிவு, நீர் வேட்டல், வேண்டல்,
கதம், மதம், கேதத்தோடே,
(ஒசியும்) நோய், பிறப்பு, இறப்போடு,
உவகையே, உறக்கம், இன்பம்,
(இசையும்) ஈரொன்பான் குற்றம்;
(இவை தீர்ந்தோன் இறைவன் ஆமே).
(18 பெயர்கள்) 120

**பதினெட்டுப் புராணம்**

மச்சமே, கூர்மம், சைவம்,
வைணவம், வராகம், லிங்கம்,
பத்மம், வாமனமே, காந்தம்,
பவிடியம், ஆக்கினேயம்,
(கற்புள) பிரமம், கைவர்த்தம்மே,
நாரதம், மார்க்கண்டம்,
(உற்ற) பாகவதமே, காருடம்,
பிரமாண்டம், தொன்னூல்.
(18 பெயர்கள்) 121

**அரசர்க்குரிய 21 வகைச் சின்னம்**

முடி, குடை, கவரி, தோட்டி,
முரசு, சக்கரமே, நால்வாய்,
கொடி, மதில், தோரணம், நீர்க்-
குடம், (மலர்) மாலை, சங்கு,
கடலொடு, மகரம், ஆமை,
கயல் இணை, அரிமா, தீபம்,
இடபம், ஆசனம், மூவேழும்
இறை திருப்பொறிகள் (ஆமே).
(21 பெயர்கள்) 122

**பேடிக்குரிய 25 வகை இலக்கணம்**

(இச்சையாற்) பேடி செய்யும்
இலக்கணம் இப்பால் கேண்மின்
நச்சவே பேசலோடு,
நல்லிசை ஓர்ந்து நிற்றல்,
(அச்சம் ஒன்றில்லாதாகி)
ஆண் பெண் ஆம் அடைவு இயற்றல்,
உச்சியிற் கையை வைத்தல்,
ஒரு கரம் தானே வீசல். 123

விழிகளை வேருச்செய்தல்,
(வெம்)முலை நலித்து நிற்றல்,
சுழலவே நோக்கல், நக்கு
நாணல், தொந்தோம் என்று ஒத்தல்,

(கழி) நடம் பயிற்றல், வேறு
காரணம் இல்லாக் கோபம்,
அழுதிடல் (நடு நடுங்கி)
(ஆங்கு) ஒரு பக்கம் பார்த்தல். 124

இரங்குதல், வருந்துதல், யாரும்
இரங்கவே பேசிக் காட்டல்,
குரங்கல், கோதாடல், கூடல்,
கூவிளி கொண்டு நிற்றல்,
மருங்கினில் கையை வைத்தல்,
வாங்குதல், பாங்கி தன்னை(த்)
(திருந்தவே) நோக்கல், ஏலேல்
என்றலும் செய்கை (ஆமே).
(25 பெயர்கள்) 125

### 28 செய்யுள் அலங்காரம்

உருவகம், உவமையோடே,
(ஊன்றிய) அடி மடக்கே,
(விரி) சுடர், நிலை மடக்கே,
வேற்றுமை, வெளிப்படுத்தல்,
(மருவிய) நோக்கே, உட்கோள்,
(வரும்) தொகை மொழியே, (மற்றைத்)
(தரும்) மிகை மொழியே, வார்த்தை,
தன்மை, வேறு அருத்தம் வைப்பே. 126

### 28 செய்யுள் அலங்காரம் (தொடர்ச்சி)

சிறப்பதாம் நிலை, சிலேடை,
மறுத்திடு நிலையின் வார்த்தை,
(நிறுத்து) உடனிலையிற் கூட்டம்,
உவமாரூபகத்திேைடு,
(வெறுப்பிலா) மகிழ்ச்சி, (செய்து)
(மிகும்) நுவலா நுவற்சி,
(உறுத்தியே இடும்) தலைக்கூட்டு,
(உயர் அணி) தெரிசனங்கள். 127

### (ஷை தொடர்ச்சி), நல்லாசிரியன் இலக்கணம்

உரைகெழு பாராட்டோடே
ஒருங்கியல் நிலையே, ஐயம்,
விரவிய நிலை, வாழ்த்து, (என்ன)
(விதித்திடும்) இருபத்தெட்டாம்;
(மருவிய) அலங்காரத்தை
வரிசையிற் பாடவல்லோன்
பரிவுறும் எழுத்தும் சொல்லும்
பொருள் யாப்போடு இவை அறிந்தோன்.
(28 பெயர்கள்) 128

### நல்லாசிரியன் இலக்கணம் (தொடர்ச்சி)

இந்த நல்லிலக்கணத்தில்
இசைந்திடு துறையும் வல்லோன்,
நந்தம் முத்தமிழினேடு
நாற்கவி பாட வல்லோன்,
வந்து நற்குலத்து உதித்தோன்,
வடிவமோடு ஒழுக்கம் உள்ளோன்,
அந்த ஆறையாண்டு ஏகி
ஆண்டு எழுபான் நீங்காதோன். 129

### புலவர் கவிதையை அரசர் ஏற்கும் முறை

வழுக்கள் தீர் கவிதை தன்னை
வசையிலார் கொள்ளுங்காலை
கொழிப்பில் தோரணங்கள் நாட்டி,
கொடி மாடம், எடுத்து உயர்த்தி,
விழுத்தகு கோலம் செய்து,
மென்துகில் விரித்த பின்றை,
(தெழித்திடும்) பல்லியம்தான்
(முகில் எனத்) திமிதிம் என்ன. 130

அட்ட மங்கலங்கள் ஏந்த,
அரிவையர் பலரும் வாழ்த்த,
(மட்டு அவிழ்) பாலை வேய்ந்த
மணிக்குடம், தீபம், மல்க;
(பட்ட) பல் உறு முளைத்த
பாலிகை, விதானப்பந்தர்
இட்ட மாமனையில், சான்றோர்
இயல்புளி இரீஇய பின்னை. 131

(மன்னும்) ஆசனத்து இருத்தி,
(வளம் மலி) கவிதை கேட்டுப்
பொன்னெடு துகிரும் தூசும்
பூண்முடி கடகத்தோடும்
இன்னவை பலவும் ஈந்திட்டு,
ஏழடி புலவன் பின்போய்,
நின்ம் என நிற்றல், மன்னர்
நிலமிசை வழக்கது ஆமே. 132

### பரிசு கொடாத உலோபியர்க்குச் செய்யுள் செய்வகை

பாட்டுடைத் தலைவன் தானே
பரிசில் ஈயாத காலை,
மீட்டு ஒரு பெரியன் ஊர் பேர்
வேறு சொல் இயற்றிச் சேர்க்கின்,
(ஈட்டு) செல்வங்கள் பொன்றி,
ஈங்கு இவன் திருவும் மாய்ந்து,
நாட்டிய அவனுக்கு ஆகும்;
(நவின்ற) நூல் வழக்கு இது ஆமே. 133

### பரிசில் கொடாதவன் அடையும் கதி

பரிசில் ஈயாத பாவி
பாமாலை செம்பூச்சூட்டி,
(வரி) அரவு உறை வன்மீகம்,
மாகாளி முன்றில் தன்னில்,
(உரிய நீள்) மனைப் புறத்தில்,
ஒள் எரி கொளுத்தில் வீயும்;
தெரியும் ஓராண்டில் என்றே
செப்பினன் முனிவன்தானே. 134

### முப்பத்திரண்டு அறம்

ஆதுலர் சாலை, ஐயம்,
அறுசமயத்தோர்க்கு உண்டி,
ஓதுவார்க்கு உணவு, சேலை,
(உறும்) ஏறு விடல், காதோலை,
மாது போகம், மகப் பால்,
மகப் பேறு, மக வளர்த்தல்,
(வேதை நோய்) மருந்து, கொல்லா
விலை கொடுத்து உயிர் நோய் தீர்த்தல். 135

கண்ணுடி, பிறர் இல் காத்தல்,
கன்னிகாதானம், காவே,
வண்ணர், நாவிதரே, சுண்ணம்,
மடம், தடம், கண் மருந்து,
தண்ணீர் பெய் பந்தல், கோலத்
தலைக்கு எண்ணெய், சிறைச் சோறோடு,
பண்ணுன விலங்கு ஊண் நல்கல்,
பசுவின் வாயுறை கொடுத்தல். 136

### முப்பத்திரண்டு அறம் (தொடர்ச்சி)

அறவையாம் பிணம் அடக்கல்,
அறவைத் தூரியம், (வருந்தா
நிறுவியே இடம் விடாமல்)
நிறையத் தின்பண்டம் நல்கல்,
(உறுதி) ஆ உரிஞ்சுகின்ற தறி,
(இவை ஓதும்) எண்ணுன்கு
அறநிலை (அபிதானங்கள்
அம்பிகை செய்யுமாறே). 137

### ஓரறிவுயிர், ஈரறிவுயிர், மூவறிவுயிர், நாலறிவுயிர்

உற்று அறி புலன் ஒன்றால்,
புல், மரமே, ஓரறிவின் சீவன்;
(முற்றும்) ஈரறிவின் சீவன்
முரள், நந்தே, ஆதி, நாவால்;
(செற்ற) மூவறிவின் சீவன்,
சிதல், எறும்பு, ஆதி, மூக்கால்;
(சொற்ற) நாலறிவின் சீவன்,
தும்பி, வண்டு, ஆதி, கண்ணால். 138

### ஐயறிவுயிர், மன அறிவு

வானவர், மனிதர், (கீழ் போய்)
(மாழ்கிய) நரகரோடு,
(கான் உறை) விலங்கு, புள்ளு,
(காட்டும்) நாலறிவினோடே
(ஊனம் இல்) செவியும் (ஆங்கே)
உறுவினை அறிவின் சீவன்;
(மான் அமர் நோக்கின் நல்லாய்)
மனமும் ஒன்று அதிகம் ஆமே. 139

### காப்புக்கு முன் எடுக்கும் கடவுள்

காப்புக்கு முன் எடுக்கும்
கடவுள்(தான்) மாலே ஆகும்,
(பூப் புனை) மலரின் செல்வி
புனைபவன் ஆதலானும்,
காப்பவன் ஆதலானும்,
கதிர்முடி கடகத்தோடு,
வாய்ப்பதாம் மதாணி, பூணூல்,
வரிசையின் புனைதலானும். 140

### அருகன் ஊர்தி, படை, கொடி, சிவன் வாகனம், படை

அருகனது ஊர்தி (தானே)
அம்புயம்; படை (நற்) காட்சி,
(பெருகிய) ஞான, சீலம்;
(பெருங்) கொடி, அருளே (என்ப);
(மரு மலர்க்) கொன்றையார்க்கு
வாகனம், இடபம் (ஆகும்);
பரசொடு, (கடிய) சூலம்,
பினுக வில், படைகள் (ஆமே). 141

### திருமால் வாகனம், கொடி, படை, பிரமன் வாகனம், படை, கொடி

(கரிய) மால் துவசம், ஊர்தி,
கலுழன் (என்று உரைக்கற் பாற்றே);
(வரி) சிலை, ஆழி, சங்கு,
வாள், கதை, படை ஐந்து (ஆகும்);
பிரமனது ஊர்தி, அன்னம்;
பெரும்படை, பாசம் (ஆகும்);
அருமறை, கொடியே (ஆகும்);
அந்தணர் தமக்கும் ஆமே. 142

### பலதேவன் படை, கொடி; யமன் வாகனம், படை, காலன் படை, குபேரன் வாகனம்

(பரிவுள) பலதேவற்குப்
படை நாஞ்சில்; கொடியே பெண்ணை;
எருமையே, யமன் (தன்) ஊர்தி;
(எறி)படை, பாசம், தண்டு (ஆம்);
(கரியதோர்) கூற்றினுக்குக்
கடும்படை, கணிச்சி (ஆகும்);
(புரி) நரவாகனம், (பூம்)
புட்பகம் குபேரன் ஊர்தி. 143

### சூரியன், சந்திரன் ஊர்திகள், முருகன் ஊர்தி, படை, கொடி

(குறைவு இலாத்) தனிக்கால் பொற்றேர்,
(கூறிய) அருக்கன் ஊர்தி;
(நிறைதரு) மதியின் ஊர்தி,
(நீள்) முத்து விமானம் (என்ப);
அறுமுகன் ஊர்தி(தானே),
யானையும், மயிலும் (என்ப);
(உறு) படை, வேல் (ஆம் மற்றை)
(ஒண்) கொடி, கோழி (ஆமே). 144

**இந்திரன் ஊர்தி, சோலே, குதிரை, மண்டபம், மாளிகை, கொடி**

கரி, அயிராவதம்; (பூங்)
கற்பகக் காவே, சோலே;
(உரிய வெம்) பரி(யின் பேரே),
உச்சயிச்சிரவம் (ஆகும்);
(மருவு) மண்டபம், சுதன்மை;
மாளிகை, வசந்தம் (என்ப);
(பெருகிய) உருமு, (மற்றைப்)
பெருங்கொடி, புரந்தரற்கு (ஆம்). 145

**காளி ஊர்தி, கொடி; துர்க்கை படை, ஊர்தி; மூதேவி, வாகனம் படை, கொடி**

(அழகிய) காளியூர்தி,
யாளியே; துவசம், பேய் (ஆம்);
(பழுது அறு) துர்க்கை (பற்றும்)
படை, வாள் (ஆம்); கலேயே, ஊர்தி;
(கெழுமு) மூதேவி (ஊரும்)
(கிளர்ந்த) வாகனத்தின் நாமம்,
கழுதை(யாம்); படை, துடைப்பம்;
காக்கை, (அம்) பதாகை (தானே). 146

**சத்தமாதர் வாகனமும் (ஊர்தியும்), படையும்**

அன்னமே, இடபம், (தோகை
அணி) மயில், கலுழன், சீயம்,
(பின்னியல்) யானே(யோடு),
பேய் எழு பெண்கள் ஊர்தி;
(மன்னும்) நூல் மறை, பினுக
வார் சிலே, சத்தி, ஆழி,
(துன்னிய) கலப்பை, வச்ரம்,
சூலம், வெம்படைகள் (ஆமே). 147

**சேரன், சோழன், பாண்டியன் கொடி - மாலே, புலவர் கொடி**

(மன்னிய) சேரனுக்கு
(வரி) சிலேக் கொடி, பனந் தார்;
(பொன்னியந் துறைச்) சோழற்கே
புலிக் கொடி, ஆத்தி மாலே;
தென்னவன் (தனக்குத் தானே)
சேல் கொடி, வேப்பந்தார் (ஆம்);
(பன்னிய) கேழல், வேழப்
பதாகையும் புலவருக்கே. 148

**அரசு உவாவின் இலக்கணம்**

கால் ஒரு நாலும், கோசம்,
கை, வால்; ஏழ் நிலத்தின் தோய்ந்து,
பாலொடு, சங்கு போலும்
பதத்து உகிர் விதத்தின் சூழ்ந்து
வாலொடு, கால், மெய், கை, (வெண்)
மருப்பினுல் உயிரைக் கொன்றே,
(ஏல) ஏழு உயர்ந்து, ஒன்பான் நீண்டு,
ஈரைந்து முழத்தது ஆகி. 149

(பெறுமுறை) முன்பு உயர்ந்து,
பின் பணிந்து, அழகிதாய
தறுகண்ணது ஆகி, சூழி
சார்ந்த மத்தகத்தது ஆகி,
முறம் நிகர் கன்ன தானம்,
(மூரி மால்) யானே (தானே)
(அற நெறி செலுத்தும் செங்கோல்)
அரசு உவா (ஆகும் என்ப). 150

**அரசர்க்குரிய குதிரையின் இலக்கணம்**

மாதர்தம் மனத்தை ஒத்த
மனத்ததாய், வாழை உற்ற
(கோது இலா) மடலே போலக்
கொழுந்துள செவியது ஆகிப்
பாதம், முன், வெந், எருத்து,
(பகர்) முகம் பால்மைத்தாகி,
(ஓதும்) எண்பத்திரண்டு அங்குலி
(உயர்) பரி மன்னர்க்கு (ஆம்). 151

**பேரெண்களின் வகை**

(ஒரு) பதினுயிரம் பத்து,
(உரை) அதியுகம் (என்று ஆகும்);
(வரும்) அதியுகம் (தான் மீள)
(மதித்த) நூருயிரங்கள்,
பிரமம் (ஆம்); பிரமம்
நூருயிரம் (அது), கோடி (தானே);
(அரியதோர்) கோடி பத்தாம்,
அர்ப்புதம் (என்று சொல்லும்). 152

**பேரெண்களின் வகை (தொடர்ச்சி)**

(கரு தரு) கோடி நூறு,
கணகம் (ஆம்); கணகம் பத்து,
(பெருகிய) கற்பம் (ஆகும்);
(பேணும் அக்)கற்பம் பத்து,
(திரு மிகு) நிகற்பம் (ஆகும்);
நிகற்பம் ஈரைந்து, சங்கம்;
(தரம் உள) சங்கம் பத்து,
சமுத்திரம் (என்றே சாற்றும்). 153

(உரைத்த இப் பல் பேர்க் கூட்டத்து
ஒரு பெயர்த் தொகுதி தன்னில்
விருத்தம் மூவைம்பதின் மேல்
மிகுதி ஓரிரண்டு செய்தான்
திருக்கிளர் குணபத்திரன் தாள்
சென்னியில் சூடிக் கொண்டோன்
மருக் கிளர் பொழில் சூழ் வீரை
மன்னன் மண்டலவன் தானே). 154

**பன்னிரண்டாவது**
**பல் பெயர்க் கூட்டத்து**
**ஒருபெயர்த் தொகுதி முற்றிற்று**

# சூடாமணி

## நூற்பா தலைப்பு – அகராதி அட்டவணை

| | தொகுதி / நூற்பா எண் |
|---|---|
| எருக்கு | 4 : 31 |
| எருத்தின் முரிப்பு | 3 : 14 |
| எருத்து | 3 : 14 |
| எருந்து | 11 : 203 |
| எருமை | 3 : 15 |
| எருமை ஆண் | 3 : 15 |
| எருவை | 11 : 193 |
| எல் | 11 : 221 |
| எல்லாம் விளையும் நிலம் | 5 : 32 |
| எல்லை | 8 : 19 ; 11 : 254 |
| எலி | 3 : 28 ; 11 : 227 |
| எலும்பு | 2 : 104 |
| எலுமிச்சை | 4 : 17 |
| எவ்விடம் | 5 : 67 |
| எழில் | 11 : 293 |
| எழு | 7 : 8 |
| எழுச்சி | 9 : 38 |
| எழுத்தாணி | 7 : 14 |
| எழுத்தின் சாரியை | 11 : 18 |
| எழுத்து | 9 : 12 ; 10 : 31 |
| எழுது கோல் | 7 : 14 |
| எழுதுதல் | 7 : 75 ; 9 : 12 |
| எழுப்பல் | 9 : 7 |
| எழு பிறப்பு | 8 : 52 |
| எழுமையும் தொடர்ந்த அன்பு | 8 : 33 |
| எழு வகை நிரய வட்டம் | 12 : 74 |
| எழுவகைப் பிறப்பில் எண்பத்து நான்கு நூறுயிர யோனி பேதம் | 12 : 70 |
| எழுவகைப் பிறப்பு | 12 : 69 |
| எழுவகை மாதராடல் | 9 : 51 |
| எள் | 4 : 42 |
| எள்ளல் | 11 : 264 |
| எள்ளிளங்காய் | 4 : 42 |
| எளிமை | 8 : 57 |
| எற்று | 11 : 281 |
| எற்றுதல் | 11 : 290 |
| எறிமணி | 7 : 35 |
| எறும்பு | 3 : 76 |
| எறுழ் | 11 : 41 |
| என்றூழ் | 11 : 266 |
| ஏகாந்தம் | 5 : 60 |
| ஏங்கல் | 11 : 35 |
| ஏணி | 7 : 54 ; 11 : 77 |
| ஏதம் | 11 : 97 |
| ஏதி | 11 : 101 |
| ஏந்தல் | 11 : 128 |
| ஏமம் | 11 : 137 |
| ஏமாப்பு | 8 : 36 |
| ஏர் | 11 : 188 |
| ஏல்வை | 11 : 160 |
| ஏலம் | 4 : 34 ; 11 : 229 |

| | தொகுதி / நூற்பா எண் |
|---|---|
| ஏவல் | 8 : 43 ; 9 : 65 ; 11 : 246 |
| ஏவுவான் | 2 : 40 |
| ஏழ் உலோகம் | 6 : 4 |
| ஏழிசை | 10 : 35 |
| ஏழிசை அக்கரங்கள் | 10 : 37 |
| ஏழிசைக்குப் பிறப்பிடங்கள் | 10 : 36 |
| ஏழிசைக்கும் உரிய சுவைகள் | 10 : 38 |
| ஏழிசைக்கும் உரிய மணங்கள் | 10 : 38 |
| ஏழிசைக்கு மாத்திரைகள் | 10 : 37 |
| ஏழிசையீசர் | 10 : 39 |
| ஏழிசையோசை | 10 : 39 |
| ஏழு கடல் | 12 : 71 |
| ஏழு கீழ் உலகம் | 12 : 73 |
| ஏழு கோவை மணி | 7 : 27 |
| ஏழு தீவு | 12 : 71 |
| ஏழு நதி | 12 : 75 |
| ஏழு நரகம் | 12 : 75 |
| ஏழு முகில் | 12 : 77 |
| ஏழு முனிவர் | 12 : 76 |
| ஏழு மேல் உலகம் | 12 : 72 |
| ஏழு வகைத் தாது | 12 : 68 |
| ஏழு வகை மாதர்கள் | 12 : 68 |
| ஏற்கும் மட்கலம் | 7 : 66 |
| ஏற்போன் | 2 : 48 |
| ஏற்றம் | 10 : 15 |
| ஏற்றல் | 11 : 280 |
| ஏறு | 3 : 33 ; 11 : 278 |
| ஏறுதல் | 9 : 55 |
| ஏனம் | 11 : 307 |
| ஏனல் | 11 : 304 |
| ஏனுதி | 11 : 306 |
| ஏனை | 11 : 296 |
| ஐ | 11 : 162 |
| ஐங்கணை அவத்தை | 12 : 51 |
| ஐது | 11 : 201 |
| ஐந்தருக்கள் | 4 : 2 |
| ஐந்திணை | 12 : 36 |
| ஐந்நூறு கிராமத்திற்குத் தலைமை கிராமம் | 5 : 37 |
| ஐம்பால் | 12 : 39 |
| ஐம்புலம் | 12 : 49 |
| ஐம்புலன்களால் உயிர் இழப்பன | 12 : 35 |
| ஐம்பூதம் | 12 : 43 |
| ஐம்பெருஞ் சுற்றம் | 12 : 38 |
| ஐம்பொறி நுகர்வு | 9 : 27 |
| ஐயச் சொல் | 11 : 19 |
| ஐயம் | 11 : 156 |
| ஐயறிவுயிர் | 12 : 139 |
| ஐயன் | 1 : 36 ; 11 : 156 |
| ஐயை | 11 : 161 |
| ஐவகை அகிற் கூட்டு | 12 : 37 |
| ஐவகை இசைக்கருவி | 12 : 44 |

தொகுதி / நூற்பா எண்

தொகுதி / நூற்பா எண்

தொகுதி / நூற்பா எண்

தொகுதி / நூற்பா எண்

தொகுதி / நூற்பா எண்

| | தொகுதி / நூற்பா எண் |
|---|---|
| பொதி சோறு | 6 : 23 |
| பொதிதல் | 9 : 34 |
| பொதிய மலே | 5 : 13 |
| பொதியெருது | 3 : 15 |
| பொம்மல் | 11 : 101 |
| பொய் | 10 : 6 ; 11 : 218 |
| பொய்யாப் புள் | 3 : 60 |
| பொர அழைத்தல் | 10 : 11 |
| பொரியல் | 6 : 24 |
| பொரு களம் | 5 : 60 |
| பொருத்கல் | 8 : 49 |
| பொருநர் | 11 : 192 |
| பொருநை | 5 : 22 |
| பொருள் | 11 : 175 |
| பொருளின்மை | 10 : 13 |
| பொருளினே உருக்கும் தட்டார் | 2 : 30 |
| பொலிவு | 8 : 46 |
| பொழிப்பு | 11 : 27 |
| பொழில் | 11 : 74 |
| பொழுது போக்கல் | 9 : 3 |
| பொற் காசு | 6 : 4 |
| பொற்பு | 11 : 289 |
| பொறி | 11 : 284 |
| பொறுத்தல் | 11 : 283 |
| பொறை | 8 : 38 ; 11 : 286 |
| பொன் | 6 : 2, 3 ; 11 : 298 |
| பொன் மலே | 5 : 13 |
| பொன்மை | 8 : 21 |
| போக பூமி | 12 : 66 |
| போகம் | 11 : 19 |
| போகி | 11 : 7 |
| போகில் | 11 : 7 |
| போகுதல் | 11 : 19 |
| போத்து | 3 : 31 |
| போதகம் | 3 : 39 ; 11 : 97 |
| போதம் | 11 : 102 |
| போது | 11 : 124 |
| போர் | 9 : 46 ; 11 : 188 |
| போர்வை | 7 : 71 ; 11 : 124 |
| போற்றல் | 11 : 280 |
| மக்கட் பரப்பு | 2 : 84 |
| மக்கள் | 11 : 18 |
| மகம் | 1 : 79 ; 11 : 3 |
| மகரந்தம் | 11 : 11 |
| மகரம் | 1 : 74 ; 11 : 2 |
| மகர மீன் | 3 : 71 |
| மகர வாழை | 4 : 5 |
| மகளிர் ஆடும் களம் | 7 : 61 |
| மகளிர் நாற் குணம் | 12 : 18 |
| மகளிர் விளேயாட்டு | 9 : 3 |
| மகன் | 2 : 80 ; 11 : 180 |

| | தொகுதி / நூற்பா எண் |
|---|---|
| மகன் மகள் என்னும் இருபாற்கும் பொது | 2 : 81 |
| மகிழ மரம் | 4 : 3 |
| மங்குல் | 11 : 24 |
| மஞ்சரி | 11 : 41 |
| மஞ்சள் | 4 : 43 |
| மஞ்சனம் | 9 : 15 |
| மஞ்சாடி | 4 : 5 |
| மஞ்சு | 11 : 40 |
| மட்கலம் சுடு சூளே | 5 : 57 |
| மட்டத் துருத்தி | 7 : 61 |
| மட்டு | 11 : 65 |
| மடங்கல் | 11 : 61 |
| மடம் | 11 : 53 |
| மடல் | 11 : 44 |
| மடி | 11 : 47 |
| மடை | 11 : 53 |
| மடைப்பள்ளி | 5 : 55 |
| மடையர் | 2 : 37 |
| மண் | 11 : 84 |
| மண்டலம் | 11 : 88 |
| மண்டலமாக ஓடல் | 9 : 42 |
| மண்டலி | 4 : 48 ; 11 : 88 |
| மண்டலித்தல் | 12 : 31 |
| மண்ணே | 11 : 309 |
| மணம் | 8 : 53 ; 11 : 94 |
| மணற் குன்று | 5 : 21 |
| மணி | 11 : 76 |
| மணிக் கட்டு | 2 : 91 |
| மணிப் பொது | 6 : 5 |
| மணி வடம் | 7 : 29 |
| மத்தகம் | 11 : 55 |
| மத்திகை | 11 : 120 |
| மத்திம தானம் | 12 : 13 |
| மத்தியானம் | 1 : 89 |
| மத்து | 7 : 57 ; 11 : 120 |
| மத கயம் | 3 : 6 |
| மதம் | 11 : 122 |
| மதர்வு | 11 : 121 |
| மதலே | 11 : 95 |
| மதன் | 11 : 99 |
| மதி | 11 : 112 |
| மதி தெரி கலே இரா | 1 : 93 |
| மதி மறை கலே இரா | 1 : 93 |
| மதில் | 5 : 43 |
| மதிலுள் உயர்ந்த மேடை | 5 : 44 |
| மதிலுறுப்பு | 5 : 44 |
| மது | 11 : 103 |
| மதுகம் | 11 : 96 |
| மதுர கவி | 12 : 25 |
| மதுரை | 5 : 41 |
| மந்தம் | 9 : 40 |

# திவாகரம்

## சொல் – அகராதி அட்டவணை

# பிங்கலம்

## சொல் – அகராதி அட்டவணை

# சூடாமணி

## சொல் – அகராதி அட்டவணை



Late S. Rajam was born on 22-11-1904. After a fairly good academic career he became a Chartered Accountant. But somehow his interest in being associated with his elder brother made him leave the profession of Auditor. He joined his brother and became an Auctioneer. He was popularly known as "Murray Rajam". It was no exaggeration that right from his school days his interest in Tamil and the beauty of the language fascinated him. Finding that Tamil language is languishing and the times were such that importance to that language has not been given as it should be, he took keen interest in the study of tamil literature. Dr. U.V. Swaminatha Iyer has been his model and the reverence with which he spoke of him was bordering on hero worship. He decided to bring out the Tamil books and print the same and sell it at a price affordable to everyone however poor he may be. In this vision he was encouraged by famous Tamil Scholars like Sri Meenakshi Sundaram Pillai, Sri Kandasami Pillai, Sri Vaiyapuri Pillai, P.N. Appuswami, P. Sri Acharya, Saw Ganesan, A.S.Gnanasambandam, Venugopal Pillai, K.V. Jaganathan, V.M. Subramaniam Iyer and several other scholars in Tamil.

In 1955 he began publication of ancient Tamil Classics in the series "Tamil Illakia Selvam". Thereafter at regular intervals "Mudalayiram, Thiruvaimozhi, Iyarpa, Peria Thirumozhi, Thiruvachakam, Silappadikaram, Manimekalai, Kalladam, Ashta prabhandam, Pathupattu and Ettuthogai, Pattum Thogaiyum, Kamba Ramayanam, Villi Bharatham" were all printed with unstinted co-operation of the above scholars and priced at Rs.1/- each copy though the cost was enormous. To say he was a pioneer in popularising Tamil with such affordable cost would be an understatement.

It was on the suggestion and encouragement of the stalwart scholars that Late S. Rajam decided to bring out a Dictionary/Glossary on Historical principles which has not been attempted before. All Tamil works, Epigraphical materials up to 1400-1600 AD were collected. Word indexing was done of the Tamil literature available till then. About 8000 inscriptions were copied, chornologically arranged, texts of tamil printed other than in tamil, were transliterated. The hybrid-tamil literature consisting of commentaries and didactic works of Vaishnava Prose were indexed in 132 volumes in hand written manuscript form. Master Index of all the literature up to 1600 AD were prepared in 246 Volumes in hand written manuscript form.

The Santi Sadhana Trust hopes to publish all other works which form the Project of "Tamil Dictionary/Glossary on Historical Principles" shortly which will be immense help to scholars and lovers of Tamil.